அர்புத சிகித்ஸை :— (1) அர்புதம் பருத்து வளராது ஆரம்ப நிலைமையில் இருக்கும்போது அதை அறுத்து, ஸர்ஜ க்ஷாரம், சுக்கு இவற்றின் கஷாயத்தில் தேன் சேர்த்துப் பிரதி ஸாரணம் செய்யவேண்டும். (2) சீந்தில், வேம்பு, இவற்றைத் திரவகல்கமாக அரைத்து, தேனும் தைலமும் கூட்டி கண்டூஷம் செய்யலாம். (3) யவதானியத்தாலான உணவைப் புஜிக்க வேண்டும். (4) தீக்ஷ்ணமான தைலத்தினால் நஸ்யம் அப்யங்கம் முதலியவைகளைச் செய்யலாம்.—77, 78½.

பூதிவக்த்ரசிகித்ஸை :— பூதிவக்த்ரம் என்னும் நோயில் (1) முதலில் வமநம் செய்வித்து, (2) பிறகு தீக்ஷ்ணமான தூம பாநமும், (3) தீக்ஷ்ணமான நஸ்யமும் பிரயோகிக்க வேண்டும். (4) மஞ்ஜிஷ்டி, காட்டாத்தி, வெள்ளிலோத்தி, ஞாழல், பத்மகம் இவற்றால் காய்ச்சிய கஷாயத்தை முகதாவநமாக உபயோகிக் கலாம். (5) அதே சரக்குகளை நன்றாகச் சூர்ணம் செய்து, முகத் தினுள் அச் சூர்ணத்தைத் தூவலாம். (6) மேலும் சீதாதம், உபகுசம் இவற்றிற்குக் கூறியுள்ள நஸ்யம் முதலியதையும் உப யோகிக்கலாம்.—79, 80.

## முகத்தைப்பற்றிய போது வியாதிகளின் சிகித்ஸை.

விதேஹ குளிகை :— த்ரிபலை, கண்டங்கத்தரி, நிலவேம்பு, அதிமதுரம், வெண்கடுகு, த்ரிகடு, கோரைக்கிழங்கு, மஞ்சள், மரமஞ்சள், யவதானியச்சுணை, புளி, புளிவஞ்சி, எலுமிச்சை, அரசம்பட்டை, நாவற்பட்டை, மாம்பட்டை, மருதம்பட்டை, அலரிமரப்பட்டை, இலவம்பிசின் இவற்றை இடித்துக் கஷாயம் காய்ச்சவும்; அக்கஷாயம் குழம்பாகப் பக்குவமாய் வருகையில் முற்கூறிய த்ரிபலை முதலியவற்றின் மிருதுவான சூர்ணத்தையே அக்குழம்பிற் சேர்த்து குளிகைகள் செய்யவும். இக்குளிகைகளை வாயில் எப்பொழுதும் அடக்கிக்கொண்டால், கஷ்டஸாத்தியமான தொண்டை வியாதிகளையும், உதட்டைப்பற்றிய வியாதிகளையும், உள்தவடையைப்பற்றிய வியாதிகளையும் அவை நிவ்ருத்திசெய் யும்; மேலும் ரோஹிணி, வக்த்ர சோஷம், பூதிவக்த்ரம் இவற் றைப் போக்குவதில் இது மிகச் சிறந்தது. இக்குளிகை விதேஹ ராஜன் கூறியது. 81—83.

கதிராதிதைலம் :— (1) நூறு பலம் கருங்காலிப்பட்டை யைப் பதினாறு படி ஜலத்திற் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; அதில் சந்தனம், அகில், குங்குமப்பூ, நெட்டிக்கோரைக்கிழங்கு, விளாமிச்சைவேர், வெட்டிவேர், தேவதாரு, வெள்ளிலோத்தி, திராக்ஷை, மஞ்ஜிஷ்டி, கச்சோரம், பத்மகம், வாய்விடங்கம், நாகப்பூ, நதம் என்னும் வாஸனைச்சரக்கு, புலியுகிர், சிறுதேக்கு, சிற்றேலம், தமனம், வர்த்தங்கம் இவற்றை வகைக்குக் கால்பலம் கல்கமாகக் கூட்டி, ஒரு பிரஸ்த்தம் தைலம் சேர்த்துக் காய்ச்சவும்

இதைப் பானம் செய்யவும், நஸ்யமிடவும், கண்டூஷம் பண்ணவும் உபயோகிக்க, வாயிலுண்டாகும் ஸகல வியாதிகளும் தீரும்; மேலும் கழுகின் பார்வையைப்போல் ஸூக்ஷ்மதர்சந சக்தியும், பன்றிக்கு இருப்பது போன்ற கேட்கும் சக்தியும் இதனால் விருத்தியாகும். (2) இதே தைலத்தினால் முகத்தைத் தேய்த்து, தகரவிதை - வெள்ளிலோத்தி - மாமஞ்சள் இவற்றை அதன் பிறகு மேலே தேய்த்துச் சுத்தம் செய்தால், வியங்கம், நீலிகா, முகதூஷிகை முதலிய முகத்திலுண்டாகும் கோளாறுகள் நீங்கி, முகமும் சந்திரபிம்பம்போன்ற பொலிவையும்பெறும். 84—87.

ஸஹசராதி தைலம் :—நூறு பலம் நீல மருதோன்றியை யும், கருங்காலி - நாவல் - அதிமதுரம் - மா - அலரி இவற்றின் பட்டைகள், அறுகு, கருநெய்தல் இவை வகைக்கு அரைப்பலம்; ஆக இவற்றைப் பதினாறு படி ஜலத்திற் கஷாயம் காய்ச்சவும். அதில் ஒரு பிரஸ்த்தம் எண்ணெயைக் கூட்டி, அதே வஸ்துக் களை மிருது சூர்ணமாகக் கல்கமாகச் சேர்த்துப் பக்குவம் செய் யவும். இதை முகத்தினுள் கவளக்கிரஹமாக உபயோகிக்க எல்லா முக வியாதிகளும் தீரும்; முக்கியமாக ஆடியசையும் பல்வரிசையைத் திடப்படுத்தும்.—88, 89.

ஸர்வமுகரோகஹர குளிகை :— முள்வேலம் பிசின் இரு நூறு பலம், பீக்கருவேலம்பட்டை நூறு பலம், இவற்றை நான்கு திரோணம் ஜலத்திற் சேர்த்துக் காய்ச்சி, நாலிலொரு பங்கு நீர் மிச்சமிருக்கையில் வடிகட்டி, மீண்டும் குழம்புபோல் அதைக் காய்ச்சவேண்டும். அதில் வெட்டிவேர், கோரைக்கிழங்கு, வர்த் தங்கம், காவி, வெண்சந்தனம், செஞ்சந்தனம், வெள்ளிலோத்தி, நாமக்கரும்பு, அதிமதுரம், கொம்பாக்கு, இரஸாஞ்ஜநம், ஸௌ வீராஞ்ஜநம், காட்டாத்திப்பூ, சிறுதேக்கு, மஞ்சள், மரமஞ்சள், த்ரிபலை, சதுர்ஜாதம், அகில், கோரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, ஆலம்விழுது, ஜடாமாம்ஸி, காஞ்சொறி, பத்மகம், ஏலரிசி, சிற்று முட்டி இவற்றை வகைக்குக் கால் பலம் வீதம் மிகவும் மிருதுவாகச் சூர்ணம் செய்து சேர்த்து, அது நன்கு ஆறியபிறகு ஜாதிபத்திரி, ஜாதிக்காய், லவங்கம், வால்மிளகு இவற்றை வகைக்கு ஒரு பலம் அதில் கூட்டி, அப்பால் படிகம்போல் வெண்மையான மிகப் பரிமளம் வீசும் கற்பூரத்தையும் ஒரு குடவப்பிரமாணம் சேர்த்து, மாத்திரைகள் செய்து, எப்பொழுதும் வாயில் அடக் கிக்கொண்டிருந்தால் வாயினுள் உண்டாகும் ஸகல வியாதிகளும் தீரும். 90—94.

ஸர்வமுகரோகஹரதைலம் :— முள்வேலம்பிசின் நூறு பலமும், பீக்கருவேலம் பட்டை இருநூறு பலமும் சேர்த்துக் கஷாயம் செய்து, ஒரு பிரஸ்த்தம் தைலத்தை முன் குளிகைக் குக் கூறிய மற்றச் சரக்குகளையே கல்கமாகக் கூட்டிப் பக்குவம்

செய்து, முகத்தினுள் கவளக்கிரஹாதிகளாக உபயோகித்தால், ஸகல முகரோகங்களும் தீரும் ; பற்களைத் திடப்படுத்தவும் இத் தைலம் சிறந்ததாகும். சுகநிலைமையிலிருப்பவன்கூட முற் கூறிய குளிகைகளையும் தைலங்களையும் தினந்தோறும் உபயோ கிப்பதால் அவனது பற்கள் திடமாகும்.—95, 96.

க்ஷௌத்ராதி கஷாயம் :—கண்டங்கத்தரி, சீந்தில், சிறுமல் லிகை தளிர், மாயஞ்சள், காஞ்சொறி, த்ரிபலை இவற்றின் கஷா யத்தைத் தேன் கலந்து கவளக்கிரஹமாக உபயோகிக்க முக ரோகங்கள் அனைத்தும் தீரும்.—97.

தந்ததாவந சூர்ணங்கள் :—(1) வட்டத்திருப்பி, இலவங் கப்பட்டை, கோஷ்டம், கோரைக் கிழங்கு, மஞ்ஜிஷ்டி, கடுக ரோகிணி, பெருவாகை, வெள்ளிலோத்தி, வாலுழுவை இவற் றைச் சூர்ணம் செய்யவும் ; **பாடாதி சூர்ணம்** என்கிற இதைத் தேன் விட்டுக் குழைத்துத் தேய்ப்பதால் பல்லீறுகளினுண்டா கும் வலி, கரகரப்பு, அழற்சி, இரத்தப் பெருக்கு ஆகியவை தீரும். (2) ஒட்டடைக்கரி, இரஸாஞ்ஜநம், வட்டத்திருப்பி, த்ரி கடு, யவக்ஷாரம், சித்திரமூலம், அயப்பொடி, த்ரிபலை, வாலு ழுவை இவற்றைச் சூர்ணம் செய்யவும் ; **காலக சூர்ணம்** என்கிற இதைத் தேனிற் கலந்து உபயோகிக்க முகரோகங்கள், பல்நோய் கள், தொண்டை வியாதிகள் ஆகியவை நிவ்ருத்தியாம். (3) மர மஞ்சள், இலவங்கப்பட்டை, இந்துப்பு, மநச்சிலை, யவதானியச் சுணே, அரிதாளம் இவற்றாலான **பீதக சூர்ணம்** என்பதைத் தேனி லும் நெய்யிலும் குழைத்து உபயோகிப்பதால் பல் நோய்கள், முகநோய்கள், தொண்டைநோய்கள் ஆகியவை நிவாரண மாம். 98—100.

க்ஷாராதி ரஸக்ரியை :—யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், ஒட்ட டைக்கரி, த்ரிபலை, பஞ்சலவணம், த்ரிகடு, வாய்விடங்கம், காவி, இரஸாஞ்ஜநம் இவற்றைப் பசுமூத்திரத்திற் கூட்டிப் பக்குவம் செய்யவும். இக்குழம்பு தொண்டைநோய்களைப் போக்க வல்லது.—101.

பாவித ஹரீதகீ :—பசுமூத்திரத்தில் கடுக்காய்களைச் சேர்த் துக் கொதிகக வைத்து, அக்கஷாயம் அனைத்தும் ஊறி உறிஞ் சப்படும் வரையில் அப்படியே வைத்திருந்து, பிறகு கோரைக் கிழங்கு-ஜடாமாம்ஸி - கோஷ்டம் இவற்றின் கஷாயத்தில் மீண் டும் ஊறவைத்து எடுக்கவும். இவ்விதம் பாவனை செய்த கடுக் காயை உண்பவனுக்கு, நல்லுபதேசங்களைக் கேட்டு நடக்கும் அரசனிடம் தீமைகள் அணுகாததுபோல் முகரோகங்கள் சிறி தும் ஏற்படமாட்டா.—102.

ஸப்தச்சதாதிக்வாதம் :—ஏழிலம்பாலை, வெட்டிவேர், பேய்ப் புடல், கோரைக் கிழங்கு, கடுக்காய், கடுகரோகிணி, அதிமதுரம்,

கொன்றை, சந்தனம் இவற்றைக் கஷாயமிட்டு உட்கொள்ள முகரோகம் தீரும்.—103.

படோலாதிக்வாதம் :—பேய்ப்புடல், சுக்கு, த்ரிபலை, துமட்டிக்காய், கழற்சிக்காய், கடுகரோஹிணி, மஞ்சள், மரமஞ்சள், சீந்தில் இவற்றின் கஷாயத்தைத் தேனிற் கலந்து உட்கொண்டாலும், கவளக் கிரஹமாக உபயோகித்தாலும் ஸகல முகரோகங்களும் குணமாகும்.—104.

தார்வீரஸக்ரியை முதலியன :—(1) பசுமையான மரமஞ்சளை இடித்துச் சாறு பிழியவும்; அதைக் குழம்பாகச் சுண்டக் காய்ச்சி, காவியையும் பொடித்துச் சேர்த்துத் தேனும் கூட்டி கவளக்கிரஹம் செய்யவும். இது வாய்ப்புண், நாடீ விரணம் ஆகியவற்றைப் போக்கவல்லது. (2) அவ்விதமே பேய்ப்புடல், வேம்பு, அதிமதுரம், ஆடாதோடை, ஜாதிக்காய், பீக்கருவேலன், கருங்காலி, த்ரிபலை இவற்றையும் தனித் தனியே இரஸக்ரியையாகச் செய்து உபயோகிக்கலாம்.—105, 106.

கதிராதி கண்டூஷம் :—கருங்காலி, இரும்புத் தூள், த்ரிபலை, மருதம்பட்டை, பெருமல்லிகை, அலரி இவற்றைக் கஷாயம் காய்ச்சி, கண்டூஷதாரணம் செய்தால் துர்ப்பலமான பற்களுக்குப் பலம் உண்டாம் —107

முகரோகங்களில் இரக்தமோக்ஷணம் முதலியவை :—(1) வாயிலும், பல்லீறுகளிலும், பற்களிலும், தொண்டையிலும் உண்டாகும் ரோகங்கள் பெரும்பாலும் கபதோஷம் இரக்த தோஷம் இவற்றால் உண்டாகின்றன; ஆகையால் அவைகளில் கெட்டுப் போயுள்ள இரத்தத்தை அடிக்கடியும் இரக்தமோக்ஷண முறைப்படி எடுத்து விடவேண்டும். (2) காயவிரேசநம்,[1] சிரோ விரேசநம்,[2] வமநம், காரமும் கைப்புமுள்ள ஔஷதாதிகளால் கவளக்கிரஹம் இவையும், சிலேஷ்மத்தையும் இரத்த தோஷத்தையும் வெளிப்படுத்தும் மற்றச் சிகித்ஸைகளும் இவ்வியாதிகளில் உபயோகமானவை.—108, 109.

முகரோகங்களில் பத்தியாஹாரங்கள் :—வாற்கோதுமை முதலிய திருண தானியத்தாலான அன்னத்தை க்ஷாரங்களில் ஊறவைத்த விதளாஹாரங்களோடு[3] புஜிக்கலாம். கபதோஷத்தை

---

1. காயவிரேசநம்—குடலிலிருந்து மலங்களை வெளிப்படுத்தும் மலசோதந முறை.

2. சிரோ விரேசநம்—நஸ்யம், அஞ்ஜநம் முதலியதால் சிரஸ்ஸிலுள்ள தோஷங்களை வெளிப்படுத்தல்.

3. விதளாஹாரங்கள்—வாற்கோதுமை, கோதுமை, கடலை, உளுந்து, பயறு, துவரை, காட்டுப்பயறு, கொள், பட்டாணிக்கடலை, வேற்கடலை, கேழ்வரகு, காராமணி இவற்றாலான உணவுகள்.

யும், இரக்த தோஷத்தையும் ஹரிப்பதற்காக வேறு யூஷங்கள் என்கிற கஞ்சிகளும் பணியாரங்களும் உபயோகிக்கத் தகுந்தவையாம்.—110.

தொண்டைவியாதிகளைத் துரிதமாகச் சிகித்ஸிக்க வேண்டும்:—தொண்டையிலுண்டாகும் வியாதிகள் பிராணுதாரமான வாயு செல்லும் வழியில் ஏற்படுவதால், இது அஜாக்கிரதையாயிருப்பதால் ச்வாஸத்தையும் அடைத்துப் போடும்; ஆகவே துரிதமாக அவற்றிற்குச் சிகித்ஸை செய்யவேண்டும்.—111.

---

## இருபத்து மூன்றும் அத்தியாயம்.

### சிரோரோக விஞ்ஞானம்

இனி சிரோரோக விஞ்ஞானம் என்னும்[1] அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—

சிரோரோகங்களுக்குப் பொது நிதானம்:—புகை-வெயில்-பனி இவை சிரஸ்ஸைத் தாக்குதல், நீர்விளையாடல், அமிதமாகத் தூங்குதல், அதிகமாகக் கண்விழித்தல், தேஹத்தின் மேற்பாகத்திற்கு அதிகமாக ஸ்வேதசிகித்ஸை பிரயோகித்தல், எதிர்காற்றில் செல்லுதல், கண்ணீரை அடக்குதல், அதிகமாய் அழுதல், அமிதமாக நீரருந்தல், அதிகமாய் மதுபானம் செய்தல், கிருமிகள், வேகங்களை அடக்குதல், தலையணை-தேஹத்தைத் தேய்த்தல்-அப்யங்கம் இவற்றை விரும்பாது விலக்கல், தொடர்ந்தாற்போல் நீடித்துக் கீழே பார்த்தல், அஸாத்மியமான வாஸனைகளை உறிஞ்சுதல், பதன் கெட்ட உணவுகளையும் ஆமமான உணவுகளையும் உண்ணல், அதிகமாகப் பேசுதல் இவை முதலியவற்றால் சிரஸ்ஸைப் பற்றிய வாதாதி தோஷங்கள் கோளாறடைந்து சிரோரோகங்களை உண்டுபண்ணுகின்றன. 1—$2\frac{3}{4}$.

வாதஜ சிரஸ்தாபம்:—அவற்றுள் வாததோஷம் பிரகோபமடைந்துண்டான சிரோரோகத்தில் கன்னங்களில் மிகவும் குடைத்தல் உண்டாம்; புருவத்திற்கு அருகிலுள்ள நரம்பு பலமாகப் பிளக்கப்படுவதுபோ லிருக்கும்; புருவங்களுக்கு மத்தியபாகமும் நெற்றியும் அதிக வேதனையினால் விண்டு வீழ்வது போலிருக்கும்; செவிகள் பாதையடைந்து சப்திக்கும்; கண்கள் வலித்திழுக்கப்படுவது போலவும், சிரஸ் முற்றிலும் சுழலுவது போலவும், ஸந்திகளிலிருந்து விலக்கப்படுவது போலவும் தோன்றும்; நெற்றிப்பக்கமாயுள்ள ஸிரைகளின் தொகுதிகள்

---

1. சிரோரோகங்கள்—சிரஸ்ஸின் உட்புறத்தையும் மேலே கபாலத்தையும் பற்றியவை; இவற்றையும் தலையில் வீக்கம் நரைத்தல் முதலியவற்றின் நிதான-லக்ஷணாதிகளையும் விளக்கும் அத்தியாயம்.

டிகத் துடிக்கும்; மோவாய்க்கட்டையும் கழுத்தும் ஒருமிக்க அசையாது கட்டப்பட்டதுபோல் தோன்றும்; வெளிச்சத்தைப் பார்க்கக் கூச்சமுண்டாம். நாசியிலிருந்து நீரொழுகும்; திடீரென்று வலி ஏற்பட்டுத் தணியும்; மர்த்தநம் செய்வது, ஸ்நேஹ பிரயோகம், ஸ்வேதப்பிரயோகம், அழுத்திக்கட்டுவது இவற்றால் வேதனை குறையும்; இது "வாத தோஷத்தாலான சிரஸ்தாபம்" எனப்படும். 3—6¾.

அர்த்தாவபேதம்:—சிரஸ்ஸின் ஒரு பக்கத்தில் அவ்விதம் கடும் வலி யுண்டானால் அது "அர்த்தாவபேதகம்" என்று வழங்கப்படும். இது ஒரு பக்ஷத்திற்கு ஒரு முறையாவது, மாஸத்திற்கு ஒரு முறையாவது தொந்தர வளிப்பதும், பிறகு தானே தணிவதும் வழக்கம். இது மிகவும் விருத்தியடைந்தால் கண்ணையாவது செவியையாவது அழித்து விடும்.—7, 8.

பித்தஜ சிரஸ்தாபம்:—பித்த தோஷத்தினாலான சிரோரோகத்தில் சிரஸ்ஸுக்குள் புகைவது போன்ற தாபமும், ஜ்வரமும், வியர்வையும், நேத்திரங்களில் அழற்சியும், மூர்ச்சையும், உண்டாம்; இராக்காலத்திலும், சீதோபசாரங்களாலும் தணியும்.—9.

கபஜ சிரஸ்தாபம்:—கபதோஷத்தினாலான சிரஸ்தாபத்தில் தலையில் பாரமும், அரோசகமும், சிரஸ் திமிர்த்துக் குளிர்ந்ததாகவும், நாடிநரம்புகளின் சலனமின்மையும், சோம்பலும் காணும்; இவ்வேதனை பகலிற் குறைவாகவும், இரவில் அதிகமாகவும் இருக்கும்; உடலில் திமிர்ப்பும், கண்ணைச் சுற்றிலும் வீக்கமும், காதில் தினவும், வாந்தியும் ஏற்படும்.—10, 10½.

இரக்தஜ ஸந்நிபாதஜ சிரஸ்தாபங்கள்:—(1)இரத்ததோஷத்தினாலான சிரோரோகத்தில் பித்தஜசிரோரோகத்தினும் கடுமையான வலி முதலியவைகளும், (2) ஸந்நிபாதஜ சிரோரோகத்தில் மூன்று தோஷங்களாலும் உண்டாகும் தனித்தனி சிரோரோகத்தின் ஸகல குறிகளும் தோன்றும்.—11.

கிருமிஜசிரோரோகம்:—ஹிதமும் அஹிதமுமான பலவித கலப்புள்ள ஆஹாரங்களால் சிரஸ்ஸினுள் இரத்தமும் மாம்ஸபேசிகளும் சவர் நீர்மயமான தோஷமாகமாறி அத் தோஷமும் ஸந்நிபாதோஷமும் விருத்தியடைந்து, சிரஸ்ஸினுள் கிருமிகள் உண்டாகும். தீங்கிழைப்பவையான அக்கிருமிகள் சிரஸ்ஸினுள்ள இரத்தத்தைக் குடித்துக்கொண்டு, கடுமையான வேதனையளிக்கும்; அவ்வேதனையால் சித்தப்பிரமையும் காணும்; ஜ்வரம், காஸம், பலக்ஷயம், ரூக்ஷத்தன்மை, வீக்கம், வலி, அறுக்கப்படுவது போன்ற வேதனை, தாபம், கபாலத்தில் வெடிப்புகள், துர்நாற்றம், தவடையிலும் சிரஸ்ஸிலும் தினவு, க்ஷயம், திமிர்ப்பு, காதில் சப்தம் இவைகளும், சிவந்து தெளிவான மூக்குச்சளியின் ஒழுக்கும் உண்டாகும். 12—14½.

சிரக்கம்பம்:—எல்லாத்தோஷங்களும், முக்கியமாக வாதம் ஆதிக்யம் பெற்று சிரஸ்ஸை நடுங்கச் செய்யும். அதற்கு "சிரக்கம்பம்" என்று பெயர்.—15.

சங்ககம்:—வாதாதி மூன்று தோஷங்களும் பித்தத்தைத் தலைமையாகக் கொண்டு இரத்ததோஷத்தோடும் சேர்ந்து கன்னத்தில் வீக்கத்தை உண்டுபண்ணும்; கடுமையான தாபமும், வலியும், சிவப்பும் அவ்விடத்தில் உண்டாகும்; வாய்பிதற்றலும், ஜ்வரமும், தலைச்சுற்றலும் காணும்; வாயில் கசப்பும், முகத்தில் பசுமை நிறமும் தோன்றும்; சீக்கிரத்தில் அபாயம் விளைவிக்கும் இந் நோய் "சங்ககம்" எனப்படும். இது மூன்று நாட்களில் உயிரைப் போக்கிவிடும்; தகுந்த சிகித்ஸை செய்தால் இதை நிவ்ருத்திக்கலாம்.—16, 17.

ஸூர்யாவர்த்தம்:—வாயுவானது பித்ததோஷத்தின் அனுபந்தத்தைப் பெற்று, கன்னம் - கண் - புருவம் - நெற்றிக்கட்டு இவைகளில் துடிப்பையும் வலியையும் ஸூர்யோதய காலத்தில் ஆரம்பிக்கச் செய்யும்; இது நடுப்பகல் வரையில் விருத்தியடைந்து, பிறகு தானே கிரமமாகத் தணியும்; பசித்திருப்பவனை இந்நோய் அதிகமாக வருத்தும்; சீதோபசாரத்தினாலாவது, உஷ்ணோபசாரத்தினாலாவது எவ்வகையிலும் சுகமடைவதில்லை. இவ்வியாதி "ஸூர்யாவர்த்தம்" எனப்படுகிறது.—18, 19½.

சிரஸ் கபாலங்களின் ரோகங்கள்:—(1) இவ்விதம் சிரஸ்ஸைப்பற்றி பத்து வியாதிகளும், (2) சிரஸ்ஸின் மேற்பாகமாகிய கபாலத்தில் இனி கூறப்போகிற வகையில் ஒன்பது ரோகங்களும் உண்டாகின்றன.—20.

உபசீர்ஷகம்:—கபாலத்தில் வாயு விகாரமடைந்தால் கர்ப்பத்திலுள்ள சிசுவுக்குக் கூட சிரஸ்ஸில் ஒரு வீக்கம் உண்டாகும்; அது கபாலத்திற்குச் சமான நிறமாகவும், வலியற்றதாகவும் இருக்கும்; அதற்கு "உபசீர்ஷகம்" என்று பெயர்.—21.

கபாலபிடகாதிகள்:— பிடகை என்னும் இரத்தக்கட்டி, அர்புதம், வித்ரதி இவைகள் மற்ற அவயவங்களில் எந்தெந்த தோஷங்களால் எவ்வெவ்வகைகளில் தோன்றுகின்றனவோ அவ்வாறே சிரஸ்ஸின் கபாலத்திலும் உண்டாகின்றன.—21½.

அரும்ஷிகா:—கபாலத்தில் பித்ததோஷம், இரத்ததோஷம், சிலேஷ்மதோஷம், கிருமிகள் இவை நிரம்பிய துர்நீர்களுள்ள கொப்புளங்கள் சோளதானியம் - கடுகு இவற்றைப்போல் கிளம்பும்; அவை "அரும்ஷிகா" எனப்படும்.—22½.

தாருணகம்:—கபாலத்தில் சர்மம் மிக மெல்லிதாகப் பிளவுண்டு, அரிப்பு - உணர்ச்சியின்மை - ரூக்ஷத்தன்மை இவற்றையுண்டுபண்ணிக்கொண்டு வெடிப்பு ஏற்படும்; இதில் தலைமயிரும் உதிரும்; இதற்கு "தாருணம்" என்று பெயர்.—23½.

இந்திரலுப்தம் :—ரோமகூபங்கள் என்கிற மயிர்க்கால்களைப் பற்றிய பித்தமானது வாததோஷத்துடன் சேர்ந்து விருத்தியடைந்து உரோமங்களை உதிரச் செய்யும்; பிறகு கபதோஷமும் இரத்ததோஷமும் சேர்ந்து ரோமகூபங்களை அடைத்துப் போடும்; அதனால் வேறு உரோமங்கள் அங்கு முளைப்பதில்லை; இவ்வியாதி "இந்திரலுப்தம்" என்றும், வேறும் இரேருப் பெயராக சாசா என்றும் வழங்கப்படும்.—24, 25½.

கலதி :—இந்திரலுப்தத்தைப் போலவேதான் "கலதியும்" உண்டாகின்றது; ஆனால் இதில் மயிர்கள் திடீரென ஒருமிக்க உதிராமல் கிரமக் கிரமமாக உதிரும். இந்த கலதி (1) வாததோஷத்தினாலுண்டானால் சர்மம் அக்னியினால் எரிக்கப்பட்டது போலவும், (2) பித்ததோஷத்தினால் உண்டானால் வியர்த்துத் தடித்த விரைகள் அடர்ந்ததாகவும், (3) சிலேஷ்மதோஷத்தினால் உண்டானால் தடித்ததாகவும் ஆய்விடும்; ஆகவே இவ்வியாதியில் வாதாதிதோஷங்களின் ஸம்பந்தத்தாலான வெவ்வேறு குறிகள் சர்மத்தைப்பற்றி யிருக்குமென்றறிக. (4) எல்லாத் தோஷங்களாலும் உண்டாகும் கலதியில் மூன்று தோஷங்களுடைய குறிகளும் சேர்ந்து தோன்றும். இதில் மயிர்க்கால்கள் நகத்தின் தோற்றமுள்ளதா யிருந்தாலும், அக்கினியினால் சுடப்பட்டாற்போல் முற்றிலும் உரோமம் அற்றிருந்தாலும், சர்மம் அழற்சியுள்ளதாயிருந்தாலும், அவ்வித கலதிநோய் அஸாத்யமாம். 26—28½.

பலிதம் :—மனத்துயரம், களைப்பு, சினம் இவற்றால் அதிகரிக்கும் உடற் சூடானது சிரஸ்ஸைச் சேர்ந்து, அவ்விடத்துத் தோஷங்களுடன் சேர்ந்து தலைமயிரைப் பழுக்கச் செய்கிறது; அதனால் ஏற்படும் வெளிறிய விகாரம் "பலிதம்" எனப்படும்.[1] அது (1) வாததோஷத்தினால் உண்டானால் வெடித்தும், வெண் கருமையாகவும், கடினமாகவும், ரூக்ஷமாகவும், நிறுருவமாகவும் சர்மமும் உரோமமும் மாறித்தோன்றும். (2) பித்ததோஷத்தினால் உண்டானால் அழற்சியும், மஞ்சள் நிறமும் ஏற்படும். (3) சிலேஷ்மதோஷத்தினால் உண்டானால் ஸ்நிக்த்தமாகவும், வெண்மையுடன் அதிகச் செழிப்பாகவும், பருமனாகவும் காணப்படும். (4) எல்லாத் தோஷங்களாலும் உண்டாகும் பலிதத்தில் எல்லாத் தோஷங்களுடையவும் லக்ஷணங்கள் கலந்து காணும். (5) தலைவலியால் உண்டாகும் மற்றொரு வகை பலிதத்தில் அவ்விடம் பரிசிப்பதையும் தாங்கவியலாததாகும். 29—31.

பலிதாதிகளில் ஸாத்யாஸாத்யங்கள் :—(1) ஸந்நிபாத தோஷத்தினால் உண்டாகும் கலதியும், பலிதமும் அஸாத்யங்களாம்.

1. பலிதம்—மயிர் நரைத்தல்.

பலிதமும், கலதி முதலியவையும் தேஹத்தின் வளர்ச்சி முதிர்ச்சி முதலிய பரிணாமங்களால் ஏற்படுவதால், அவற்றிற்கு இரஸாயந சிகித்ஸை ஏற்றதாகும்.—32.

---

# இருபத்து நான்காம் அத்தியாயம்.

## சிரோரோகப் பிரதிஷேதம்.

இனி சிரோரோகப்பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துக் கூறப்படும் :—

வாதஜசிரஸ்தாப சிகித்ஸை :— வாயுவினால் உண்டான சிரோரோகத்தில் (1) வாதரோகங்களுக்கு ஏற்ற பரிஹாரமுறையைச் செய்யவேண்டும். (2) இரவில் தலையில் க்ருதத்தைத் தேய்த்துக்கொண்டு, க்ருதத்தைப் பருகி, உடனே உஷ்ணமான பாலையும் பருகலாம். (3) அவ்விதமே உளுந்தையாவது, பயறையாவது, கொள்ளையாவது நெய்யுடன் கலந்து புஜிக்கலாம். (4) தைலத்தையாவது, எள்ளுப்பிண்ணாக்கையாவது பாலுடன் உட்கொள்ளலாம். (5)பிண்ட ஸ்வேதம், உபநாஹஸ்வேதம் இவற்றை மாம்ஸங்களைக்கொண்டாவது, தான்யங்களைக்கொண்டாவது நிறைவேற்றுவதும் அனுகூலமாம். (6) வாதஹரமான தசமூலம் முதலியவற்றால் பக்குவம் செய்த பாலைச் சிரஸ்ஸில் ஊற்றுவதும் நலம். (7) ஸ்நிக்தமான தூமபானமும், (8)அவ்விதமான நஸ்யப் பிரயோகமும், (9) சிரஸ்ஸிலும், செவிகளிலும் தர்ப்பணசிகித்ஸையையும் செய்யலாம். 1—3½.

வாதஜ சிரோரோகஹரமான முறைகள்:—(1) வாணுதிகணச் சரக்குகளை[2] இடித்து, ஒன்றுக்குப் பாதி ஜலம் கலந்து, பாலைச் சேர்த்துப் பால் மிகும்படியாகக் காய்ச்சவும்; அது ஆறிய பிறகு அதைக் குழப்பி வெண்ணெயெடுத்து, அதில் மதுரமான சரக்குகளைச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவும். வரணுதிக்ருதம் என்கிற இந்த ஔஷதம் நஸ்யமிடுவதற்குச் சிறந்த ஔஷதம். (2) இந்த வாணுதிகணச்சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் பக்குவம் செய்த க்ருதமும் சர்க்கரை கூட்டி, பருக உபயோகமானது. (3) பருத்திக்கொட்டை, இலவங்கப்பட்டை, கோரைக்கிழங்கு, ஜாதிமல்லிகைமொட்டுகள் இவற்றை உஷ்ணஜலம் விட்டு அரைத்து, இரஸம் பிழிந்து நஸ்யமிட இது எல்லாத்தலை நோய்களையும் தீர்க்கும். (4) வாதஜ சிரோரோகத்தில் பித்த-ரக்த தோஷங்களும் ஸம்பந்தப்பட்டால், சர்க்கரையும் குங்குமப்பூவும்

---

1. முன் அத்தியாயத்திற் கூறிய சிரோரோகங்களுக்குப் பரிஹாரங்களை விளக்கும் அத்தியாயம்.

2. வாணுதிகணம்—முதற்பாகம் பார்க்க.

சேர்த்துக் காய்ச்சிய க்ருதம் அதில் ஹிதமானது. (5) கோஷ்டம், கிரந்திதகரம், நைதல், சந்தனம் இவற்றை நுண்ணிய சூர்ணமாக்கி, நெய் விட்டு ஆட்டி, சிரஸ்ஸில் லேபநம் செய்யலாம். (6) இந்நோயில் இரத்தமோக்ஷணம் செய்வதால் வாயு பிரகோபித்துக் கேடு விளைவிக்குமாகையால் அச்சிகித்ஸை செய்யலாகாது. (7) முற்கூறிய சிகித்ஸை முறைகளால் நோய் தீராவிட்டால், வாத சிரோரோகத்திலும், சிலேஷ்மசிரோரோகத்திலும் உசிதப்படி உஷ்ணஜலத்தினால் அல்லது வேறு வகையான முறையை அநுஸரித்தாவது தாஹசிகித்ஸை செய்யலாம். 4—8½.

அர்த்தாவபேத சிகித்ஸை:—(1) அர்த்தாவபேதம் என்கிற சிரோரோகத்திலும் வாதஜசிரோரோகத்திற்குக் கூறிய சிகித்ஸைகளே தோஷத்தன்மைக் கேற்றவாறு செய்யத்தகுந்தனவாம். (2) காட்டுவாகைவிதை, நாயுருவிவேர், கறுப்புப்பு இவற்றின் சூர்ணத்தை நஸ்யமிடலாம். (3) முல்லைப் பூவின் ஸ்வரஸத்தை யாவது நஸ்யமாக உபயோகிக்கலாம். (4) நாயுருவியைக் காடி விட்டு அரைத்து, சிரஸ்ஸில் லேபநம் செய்யலாம்.—9, 10.

ஸூர்யாவர்த்த சிகித்ஸை:—ஸூர்யாவர்த்தத்திலும் அதே சிகித்ஸாமுறையைச் செய்வதுடன், ஸிராமோக்ஷணம் செய்து இரத்தத்தையும் வெளிப்படுத்தலாம். —10½.

பித்தஜசிரஸ்தாப சிகித்ஸை:—பித்தத்தினலான சிரோரோகத்தில் (1) முதலில் ஸ்நேஹசிகித்ஸை செய்து, (2) பிறகு ஸிராமோக்ஷம் செய்யவேண்டும். (3) வீர்யத்திலும் பரிசத்திலும் சீதளமாயுள்ள லேபநங்களைச் சிரஸ்ஸிலும் முகத்திலும் பிரயோகிப்பதும், (4) அவ்விதமான பரிஷேகங்களைச் செய்வதும், (5) அவ்விதமான வமந-விரேசந-வஸ்திகளைப் பிரயோகிப்பதும் நலம். (6) ஜீவநீயகணச் சரக்குகளிற் காய்ச்சிய பாலையும், அவற்றிற் காய்ச்சிய க்ருதத்தையும் முறையே பானம் செய்வதற்கும் நஸ்யமிடுவதற்கும் உபயோகிக்கலாம்.—11, 12.

இரக்தஜ சிரஸ்தாப சிகித்ஸை:—சங்கக வியாதியில் அடங்கிய இரத்தஜசிரோரோகத்தை விலக்கிவிட்டு மற்ற இரக்ததோஷஸம்பந்தமான சிரோரோகத்திற்கும் பித்தஜசிரோரோகத்திற்கேற்ற சிகித்ஸையையே செய்யவேண்டும். —12½.

கபஜ சிரஸ்தாப சிகித்ஸை:—சிலேஷ்ம தோஷத்தினலான சிரோ வேதனையில் (1) புராண க்ருதத்தினல் ஸ்நேஹநம் செய்து, (2) காரமான சரக்குகளை உபயோகித்து வமநம் செய்விக்க வேண்டும். (3) ரூக்ஷமாகவும்-தீக்ஷ்ணமாகவும்-உஷ்ணமாகவும் உள்ள ஔஷதங்களால் ஸ்வேதம், லேபநம், நஸ்யம் முதலிய சிகித்ஸைகளைச் செய்யலாம். (4) இதில் விசேஷமாக உபவாஸம் செய்வதும், (5) ஸந்நிபாதாதிரோகங்களில் முற்கூறிய சிகித்ஸைகளையே யுக்தப்படி தோஷாநுஸாரமாக உபயோகிப்பதும் நலம்.—13, 14.

**கிருமிஜ சிரோரோக சிகித்ஸை :**—கிருமிகளாலான சிரோ ரோகத்தில் (1) இரத்தத்தை நஸ்யமாகப் பிரயோகிக்கலாம்; அதனுல் கிருமிகள் மயக்கங் கொள்ளும்; இரத்தநாற்றத்தினுல் அவை மதித்து மயக்கங்கொண்டு நாசியிலும் வாயிலும் வந்து சேரும்; பிறகு மிகத் தீக்ஷ்ணமான நஸ்ய-தூமங்களைப் பிரயோகித்து அவற்றை வெளிப்படுத்திவிடவேண்டும். (2) வாய்விடங்கம், ஸர்ஜக்ஷாரம், நேபாளம், காயம் இவற்றைப் பசுமூத்திரத்திற் சேர்த்துக் காய்ச்சி, அக் கஷாயத்திற் கடுகெண்ணெயையாவது, வேப்பெண்ணெயையாவது, இங்குணமரத்தெண்ணெயையாவது, வாதுமை யெண்ணெயையாவது வெவ்வேருகக் கூட்டிக் காய்ச்சி யெடுத்து நஸ்யமிடலாம். (3) வாய்விடங்கத்தை வெள்ளாட்டு மூத்திரத்தில் நன்ருகக் காய்ச்சி, அதை நஸ்யமாகப் பிரயோகிக்கக் கிருமிகள் ஒழியும். (4) பதனழிந்த மத்ஸியங்களை நஸ்யோபயோகமான மற்றச் சரக்குகளுடன் சேர்த்துப் பக்குவம் செய்து, அவ்வௌஷதங்களால் தூமப் பிரயோகம் செய்யலாம். (5) கிருமிசிரோரோகத்தில் கிருமிகள் இரத்தத்தை உறிஞ்சிவிடுவதால், இதில் இரத்தமோக்ஷணம் செய்யலாகாது. 15—18.

**சிரக்கம்ப சிகித்ஸை :**— தலைநடுக்கக்கோளாறில் வாதஜ சிரஸ்தாப சிகித்ஸைகளைச் செய்வது முறை; ஆனுல் தாஹ சிகித்ஸை மாத்திரம் கூடாது.—18½.

**உபசீர்ஷக சிகித்ஸை :**—சொற்ப காலத்தில் உண்டான உபசீர்ஷகத்திற்கும், பிறந்தபிறகு ஏற்பட்ட உபசீர்ஷகத்திற்கும் (1) வாத வியாதிக்குக் கூறியுள்ள சிகித்ஸைகளைச் செய்யலாம். (2) அது பக்குவமானதும் வித்ரதிக்கு விதிக்கப்பட்டுள்ள சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—19½.

**வித்ரதி முதலியவற்றிற்குச் சிகித்ஸை :**— சிரஸிலுண்டாகும் வித்ரதியிலும், பிடகையிலும், அர்புதத்திலும் அவற்றின் ஆம நிலைமையையும் பக்குவ நிலைமையையும் பரிசீலனை செய்து, மற்ற அவயவங்களிற் காணும் வித்ரதி முதலியவற்றிற்குச் செய்வது போன்ற சிகித்ஸைகளை அததற்கு ஏற்றபடி நிறைவேற்ற வேண்டும்.—20.

**அரும்ஷிகா சிகித்ஸை :**—சிரஸிற் கிளம்பும் அரும்ஷிகை யென்னும் புண்களில் (1) இரத்தமோக்ஷணம் செய்து, (2) வேப்பம்பட்டைக் கஷாயத்தினுல் பிறகு அதைக் கழுவலாம். (3) குதிரைமலத்திலிருந்து சாறு பிழிந்து, அச் சாற்றில் நிரம்பவும் உப்பைக் கூட்டி, அந்த நீரை அதன்மேல் பூசலாம். (4) பேய்ப்புடல், வேப்பிலை, மஞ்சள் இவற்றையாவது நன்ருக அரைத்து மேலே பூசலாம். (5) பசுமூத்திரம், பழைய பிண்ணுக்கு, கோழியின் மலம் இவற்றையாவது நன்ருகக் குழையக் கலக்கிப் பூசலாம். (6) கோஷ்டத்தை வறையோட்டில் போட்டு வறுத்து,

சூர்ணம் செய்து, தைலத்திற் குழைத்து அரும்ஷிகைகளில் லேபநம் செய்ய அரிப்பு, துர்நீர்க்கசிவு, அழற்சி, வலி இவை தீரும். (7) மல்லிகை, சித்திரமூலம், அலரி, பச்சிலை இவற்றைக் கொண்டு பக்குவம் செய்யப்பட்ட தைலத்தைக் கத்தியினால் சுரண்டிய அரும்ஷிகையிலும், சாசா என்கிற[1] இந்திரலுப்தத்தி லும் அப்யங்கம் செய்ய உபயோகிப்பது நலம். (8) இச்சிகித்ஸை களால் குணமாகாவிட்டால் சிரஸ் சுத்தியாவதற்காக வமநம் முத லிய சிகித்ஸைகளைச் செய்ய முயலவேண்டும். 21—24½.

தாருணக சிகித்ஸை :—(1) தாருணகம் என்னும் நோயில் லாலாட்யா என்கிற ஸிரையைக்[2] கீறி இரத்தத்தை வெளிப் படுத்த வேண்டும். (2) அப்யங்கம் முதலியதையும், ஸ்நாநாதிகளை யும் செய்யலாம். (3) நஸ்யசிகித்ஸையையும், (4) சிரோவஸ்தி யையும் பிரயோகிக்கலாம். (5) சாரப்பருப்பு, அதிமதுரம், கோஷ் டம், உளுந்து, கடுகு இவற்றின் கல்கத்தைத் தேன் கூட்டிக் குழைத்து லேபநம் செய்யலாம். (6) அவ்விதமே கொம்பரக்கு, பெருவாகை, லவங்கப்பத்திரி, தகரவிதை, நெல்லிக்கனி இவற் றையாவது லேபநமாக இடலாம். (7) வாகுத் தாள்களை எரித்து, அதிலிருந்து எடுக்கப்படும் க்ஷாரத்தைத் தண்ணீரிற் கரைத்து, அதனால் அதை அலம்புவதும் நலம். 25—27.

இந்திரலுப்த சிகித்ஸை :— இந்திரலுப்தத்தில் (1) அக் கோளாறு உண்டாயிருக்குமிடத்திற்கு அருகில் ஸிராமோக்ஷ ணம் செய்து, இரத்தத்தை அழுத்தி நன்கு வடியச் செய்த பிறகு, (2) அன்னபேதி, மநச்சிலை, துத்தம், மிளகு இவற்றை ஜலம் விட்டு அரைத்து மேலே லேபநம் செய்யலாம். (3) சரக் கொன்றைப்பட்டை, தேவதாருப் பட்டை இவற்றையாவது லேபநமாகப் பிரயோகிக்கலாம். (4) குன்றிமணி வேர், த்ரிபலை இவற்றையாவது, (5) கலப்பைக் கிழங்கையாவது, (6) அலரிச் சாற்றையாவது, (7) சிறு கண்டங்கத்தரி ஸ்வரஸத்தைத் தேனு டன் கலந்தாவது, (8) ஊமத்தையிலைச் சாற்றையாவது, (9) சேராங்கொட்டையின் இரஸத்தையாவது, (10) தேன், நெய், எள்ளுப்பூ, த்ரிகண்டகம்[3] இவற்றையாவது மேலே தடவலாம்.

---

1. நிர்ணய ஸாகர முத்ராக்ஷரசாலையில் வெளியிட்டுள்ள அஷ் டாங்க ஹ்ருதயத்தில் "வசாரும்ஷிகயோஸ் தைலம்" என்று பிழைபட அச்சிடப்பட்டிருக்கிறது ஆனால் "சாசாரும்ஷிகயோஸ் தைலம்" என்று இருக்கவேணும். சாசா-இந்திரலுப்தம், அரும்ஷிகா ஆகிய இவ் விரண்டிலும் இத்தைலம் உபயோகமானது என்று நாம் சரியாகத் திருத்தி மொழிபெயர்த்திருக்கிறோம்.

2. லாலாட்யா—நெற்றிக் கட்டில் இரு புறமும் ஓடும் ஸிரை.

3. த்ரிகண்டகம்—கண்டங்கத்தரி, காஞ்சொறி, நெரிஞ்சில் இம் மூன்றின் கூட்டு.

(11) யானைத்தந்தத்தை எரித்தெடுத்த மையைத் தைலத்திற் குழைத்துப் பேர்டுவதும் இதில் மிகவும் சிறந்ததாம். (12) வெண்மையான மயிர்கள் முளைத்தால் அதில் ஆட்டின் கொம்பை எரித்தெடுத்த மையை அவ்விதமே உபயோகிக்கலாம். (13) மயிர் முளைக்க ஆரம்பிக்கும் வரையில் தலையைத் தண்ணீரால் நனைக்கக் கூடாது. 28—32.

கலதி முதலியவற்றின் சிகித்ஸைகள் :—கலதி, பலிதம், சர்மம் மடிதல், செம்பட்டை மயிர் இவைகளில் பிணியாளிக்குச் சோதநசிகித்ஸை செய்து, நஸ்யம்-முகசோதநம்-சிரஸ்ஸில் அப்யங்கமிடுதல் ஆகிய முறைகளால் சிகித்ஸை செய்யவேண்டும். (1) சிறு கண்டங்கத்தரி, பாப்பாரமுள்ளி, ஜீவநீய கணச் சரக்குகள் இவற்றால் பக்குவம் செய்த தைலத்தை நஸ்யமாக உபயோகிக்கலாம். (2) ஒரு மாஸம் பிரஹ்மசர்ய விரதத்துடன், பாலையே அருந்திகொண்டு வேப்பெண்ணெயையாவது நஸ்யமிட்டுக் கொள்ளலாம். (3) அவுரி, காட்டுவாகை, மருதோன்றி, கரிசலாங்கண்ணி இவற்றின் ஸ்வரஸத்தில் காட்டுவெந்தியம், தான்றிக்காய், அசோகங்கொட்டை, வாலுழுவை இவற்றைச் சமபாகமாக ஊறப்போட்டு பாவனை செய்து, அப்பால் ஆட்டுப் பால் விட்டு அவற்றை அரைத்தெடுத்து, இரும்புப் பாத்திரத்தினுள் கல்கத்தைப் பூசி, அதில் தைலம் சேர்த்துக் காய்ச்சவும். பாலையே உணவாகக் கொண்டு, நீலிங்யாதி தைலம் என்கிற இத்தைலத்தை நஸ்யமாக உபயோகித்துவர மயிர்களின் நரைத்தல் மாறிப்போம். (4) பால், மருதோன்றிச் சாறு, கரிசலாங்கண்ணிச் சாறு, துளஸிச் சாறு இவை வகைக்கு ஒரு பிரஸ்தம், தைலம் ஒரு குடவப் பிரமாணம், ஒரு பலம் அதிமதுரம் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்து, பிறகு இத்தைலத்தை ஒரு கற்பானையிலாவது, ஆட்டுக்கொம்பிலாவது வைத்திருந்து நஸ்யமிடலாம். (5) பாலைக் கீரையையாவது, (6) அலரிப் பட்டையையாவது பாலைச் சேர்த்து மிகவும் மிருதுவாக அரைத்து, நரைத்துப் போன மயிர்களைப் பிடுங்கிவிட்டு, அவற்றின் அடித்தலங்களில் இவற்றை அழுத்தி வைக்க நரைத்தல் நீங்கும். (7) அதிமதுரம், சாரப்பருப்பு, ஜீவநீயகணம், எள், திப்பிலி இவற்றைப் பால்விட்டு அரைத்து முகத்தில் லேபநம் செய்யலாம்; இது செம்பட்டை மயிர், இந்திரலுப்தம், சர்மம் சுருங்கல் ஆகியவற்றில் அனுகூலம் செய்யும். (8) எள், நெல்லிக் கனி, தாமரையின் பூந்தாது, அதிமதுரம் இவற்றைத் தேன் சேர்த்து அரைத்துத் தலையில் லேபநம் செய்ய மயிர்கள் கருநிறத்துடன் செழித்து வளரும். (9) கேசவர்த்தந கல்கம் : ஜடாமாம்ஸி, கோஷ்டம், எள், திப்பிலி, நன்னாரி, கருநைதல், தேன் இவற்றைச் சேர்த்துப் பால் விட்டு அரைத்து லேபநம் செய்தால் தலைமயிர் நன்கு வளரும்.

(10) கேசரஞ்ஜக யோகங்கள் : அயப்பொடி, சரிசலாங்கண்ணிச் சாறு, த்ரிபலா சூர்ணம், சறுப்பு மண் இவற்றை ஒரு மாஸம் கருப்பஞ் சாற்றில் ஊறவைத்துத் தடவினால் நரைத்த மயிர்களும் கருநிறங் கொள்ளும். (11) உளுந்து, வரகு, சடலைப்புளிப்பு இவற்றாலாகிய யவாகூ என்னும் கஞ்சி மூன்று நாள் பழகிய பிறகு, அதில் அயப்பொடி, வெங்காரம், யானைத்திப்பிலி இவற்றைக் கூட்டி அரைத்துத் தலையில் தேய்க்கவும்; இது கோக்கைக்கூட கறுக்கச் செய்ய வல்லது. 33—43½.

ஊர்த்வ ஜத்ரு ரோகங்களுக்குப்[1] பொது சிகித்ஸைகள் :— (1) வறள்தாமரை, அதிமதுரம், திப்பிலி, சந்தனம், நைதல் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, நெல்லிக்கனி ரஸத்தில் தைலம் பக்குவம் செய்யவும். பிரபௌண்டரீகாதி தைலம் என்கிற இதை நஸ்யமாகவும், அப்யங்கமாகவும் உபயோகிக்கப் பலிதம் என்கிற நரைத்தலையும், ஸகல சிரோரோகங்களையும் தீர்க்கும். (2) தண்ணீர் விட்டாங் கிழங்கு, ஜீவந்தி இவற்றின் கஷாயத்தில் யமகஸ்நேஹம் சேர்த்து, பாலும் கூட்டிப் பக்குவம் செய்தாவது, (3) அவ் விதமே ஜீவநீயகணக் கஷாயத்திற் பக்குவம் செய்தாவது உப யோகிக்க ஜத்ரூர்த்வரோகங்கள் எல்லாம் தீரும். 44—46.

மாயூராதி க்ருதம் :—மயிலின் இறகு-பித்தம்-குடல்-பாதங் கள்-மலம்-அலகு இவற்றை விலக்கி மற்றப் பாகத்தையும், தச மூலம்-சிற்றாமுட்டி-அரத்தை-அதிமதுரம் இவற்றை வகைக்கு மூன்று பலமும் போதுமான ஜலத்திற் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யை அதற்குச் சம அளவு பால் கூட்டி, மதுரத் திரவ்யவர்க்கச் சரக்குகளைக் கல்கமாகவும் சேர்த்துப் பக்குவம் செய்யவும். இதை உட்கொள்ளவும், வஸ்தி செய்யவும், அப்யஞ்ஜநம் பண்ணவும், நஸ்யம் பிரயோகிக்கவும் உபயோகிக்கலாம்; ஊர்த்வஜத்ரு ரோகங்கள் அனைத்தும் இதனால் தீரும்.—47, 48½.

மஹாமாயூர க்ருதம் :—முற்கூறிய கஷாயத்திலேயே ஒரு பிரஸ்த்தம் நெய் பக்குவம் செய்யவும்; அதில் நெய்க்கு நான்கு மடங்கு பாலும் கூட்டவும்; பிறகு ஜீவந்தி, த்ரிபலை, மேதா, திராக்ஷை, பருஷகாதிகணம், மஞ்ஜிஷ்டி, சவ்யம், கண்டுபாரங்கி, குமிழன், கர்க்காடக ச்ருங்கி, காஞ்சொறி, மஹாமேதா, பனம் பழம், பேரீச்சு, கோரைக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, தாமரைக் கொடி, அதிமதுரம், ஜீவகம், தண்ணீர்விட்டாங்கிழங்கு, நிலப் பனங்கிழங்கு, கரும்பு, கண்டங்கத்தரி, நன்னாரி, சிமைநன்னாரி, அறுகு, நெரிஞ்சில், ருஷபகம், அல்லிக்கிழங்கு, பெருங்கோரைக்

1. ஊர்த்வ ஜத்ரு—கழுத்துக்கு மேற்பட்ட அவயவங்களைக் குறிப் பிடும் சொல். [வாய், தொண்டை, நாக்கு, நாசி, நேத்திரம், செவி, சிரஸ், மூளை முதலிய அவயவங்களைப் பற்றிய ரோகங்களுக்குப் பொது வாக "ஊர்த்வஜத்ருரோகங்கள்" எனப் பெயர்.]

(2) கிழங்கு, அரத்தை, சிறுமல்லிகை, கீழாநெல்லி, சிற்றேலம், கிச்சிலிக்கிழங்கு, நிலத்தாமரைக்கிழங்கு, வெள்ளைச்சாறணை, மூங்கிலுப்பு, காகொலி, சிறுகாஞ்சொறி, இலுப்பை, அக்ரூட் பழம், வாதுமை, பனைநுங்கு, முந்திரிகை ஆகிய இவை வகைக்குக் கால் பலம் கல்கமாகக் கூட்டிப் பக்குவம் செய்யவும்; "மஹா மாயூரம்" என்னும் இது மாயூரக்ருதத்தினும் குணங்களிற் சிறந்தது; தாதுக்ஷயம், இந்த்ரியக்ஷயம், ஸ்வரபங்கம், ச்வாஸம், காஸம், அர்திதம் இவற்றைப் பரிஹரிக்கும்; யோநிதோஷம், இரத்ததோஷம், சுக்ரதோஷம் இவற்றில் மிகப் பிரயோஜனமுள்ளது; மலடிக்கும் இதன் உபயோகத்தால் புத்திரப்பேறுண்டாகும். இவ்விதமாகவே பெருச்சாளி, நண்டு, அன்னம், முயல் இவற்றின் மாம்ஸங்களாலும் க்ருதம் பக்குவம் செய்துபயோகிக்கலாம். 49—56.

ஊர்த்வஜத்ரு ரோகங்களைப்பற்றிய முடிவுரை:—(1) இங்ஙனம் ஜத்ரூர்த்வம் என்கிற கழுத்துக்கு மேற்பட்ட அவயவங்களைப்பற்றி யுண்டாகும் இருநூற்று முப்பத்தொரு விதமான வியாதிகளைப்பற்றிய நிதாந-சிகித்ஸா விஷயங்கள் சிக்கற விவரமாக விளக்கப்பட்டன. (2) புருடன் மேலே மூல பாகத்தையும் கீழே கிளைகளையும் உடையவன் என்று முனிவர் மொழிந்திடுவர்[1]; ஆகையால் மேலே மூலபாகத்தைத் தாக்கும் ரோகங்களைத் துரிதமாகப் பரிஹரிக்கவேண்டும். (3) ஸகல இந்த்ரியங்களும் ஊர்த்வ ஜத்ரு என்கிற சிரஸ்ஸிலேயே அமைந்திருப்பதாலும், பிராணனும் இதையே பற்றி யிருப்பதாலும் இது உத்தமாங்கம் எனப்படுகின்றது; ஆகவே இதைக் காப்பதிலே கருத்தா யிருப்பது அவசியம். 57—59.

---

1 "ஊர்த்வமூலம் அதச்சாகம் ருஷய: புருஷம் விது:" என்கிற தத்துவம் இங்கு வாக்படரால் எடுத்துக் கூறப்படுகிறது. [ஞானேந்த்ரிய-கர்மேந்த்ரியங்கள் அனைத்துக்கும் அதிபதியாயுள்ள மஸ்திஷ்கம் என்கிற மூளைக்கு ஆதாரமானது உத்தமாங்கம் என்னும் உத்தமாவயவமான சிரஸ். அதிலிருந்து கிளம்பி தேஹமெங்கும் ஞாந-கர்மங்களுக்கு அவசியமான அம்சங்களை நடத்தும் நாடிகள் அல்லது நரம்புகள் கீழ்நோக்கி உள்ளும் புறமும் கிளைகளைப்போல் பரவி யிருக்கின்றன. இவ்விரண்டும் முறையே மூலம் அல்லது வேர் என்றும், சாகைகள் அல்லது கிளைகள் என்றும் இங்கு வழங்கப்படுகின்றன.]

## இருபத்தைந்தாம் அத்தியாயம்.

## விரண விஞ்ஞானீயப் பிரதிஷேதம்.

இனி விரண விஞ்ஞானீயப் பிரதிஷேதம் என்னும் [1]அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

### விரண விஞ்ஞானம்.

**விரணங்கள் இரண்டு விதம் :**—(1) நிஜவிரணங்கள் என்றும், ஆகந்துவிரணங்கள் என்றும் விரணம் இருவகைப்படும். (2) மேலும் அவ்விரணங்கள் துஷ்ட விரணங்கள் என்றும், சுத்தவிரணங்கள் என்றும் இரண்டு விதமாம். அவற்றுள் சரீரத்திலேயே ஏற்படும் வாதாதிதோஷ விகாரங்களால் உண்டாவது நிஜவிரணம். அடி முதலியது தாக்குவதாலான வெளிக் காரணங்களால் திடீரென உண்டாவது ஆகந்துவிரணம். சீழ்-வலி முதலிய தோஷங்கள் சேர்ந்திருப்பது துஷ்ட விரணம் என்றும், அவ்வித தோஷங்கள் நீங்கியுள்ளது சுத்த விரணம் என்றும் கூறப்படும்.—1, 1½.

**துஷ்ட விரணம் :**— விரணத்தின் வாய் முற்றிலும் மூடி மறைந்திருத்தல், அல்லது அதிகமாக விரிந்திருத்தல், அதிக கடினமா யிருத்தல், அல்லது அதிக மிருதுவா யிருத்தல், மிகவும் மேலெழுந்திருத்தல் அல்லது மிகவும் ஆழ்ந்திருத்தல், அதிக உஷ்ணமா யிருத்தல் அல்லது அதிக சீதளமா யிருத்தல், மிகச் சிவப்பு அல்லது மிக்க வெண்மை, அதிக கருநிறம், துர்நாற்றம், சீழ்வடிதல், சீழ்கொண்ட அல்லது துர்நாற்ற முள்ள மாம்ஸம்-ஸிரைகள்-ஸ்நாயு என்கிற தசைநார்கள் இவற்றால் மூடப்பட்டிருத்தல், அதிக வேதனை யுண்டுபண்ணுதல், நோவின் வேகம்-அழற்சி-வீக்கம்-தினவு முதலியவற்றின் உபத்திரவங்களை யுண்டு பண்ணுதல், நீடித்த காலம் தொடர்ந்து வருத்துதல் ஆகிய இவை துஷ்ட விரணம் என்கிற கெட்ட ரணத்தின் குறிகளாம். இத் துஷ்ட விரணம் தோஷங்களாலும், இரத்தத்துடன் கூடிய தோஷங்களாலும், கேவல ரக்தத்தினாலும் பலவாறு ஏற்படுவதைக்கொண்டு பதினைந்து விதம்[2] எனப்படும். 2—4¾.

---

1. விரணங்கள் என்கிற ரணங்களின் காரண - லக்ஷணாதிகளையும், அவற்றின் பரிஹார முறைகளையும் விவரிக்கும் அத்தியாயம்.

2. **பதினைந்துவித துஷ்ட விரணங்கள் :**—வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்று, த்வந்த்வ தோஷங்களால் மூன்று, ஸந்நிபாதத்தினால் ஒன்று, ஆக இவை ஏழு; ஒவ்வொரு தோஷமும் தனித்தனியே இரத்தத்துடன் சேர்ந்து விகாரமடைவதால் மூன்று, அவ்விதமே ஒவ்வொரு த்வந்த்வ தோஷமும் இரத்தத்துடன் சேர்ந்து விகாரமடைவதால் மூன்று, ஸந்நிபாத தோஷமும் இரத்தத்துடன் சேர்ந்து விகாரமடைவதால் ஒன்று; ஆக இவ்விதம் தோஷங்களும் இரத்தமும் சேர்ந்து விகாரப்படுவதால் ஏழு; இவ்விதம் 14 வித துஷ்ட விரணங்களும், இரத்தம் மாத்திரம் தோஷமடைவதால் ஒன்றும், ஆக 15 வித துஷ்ட விரணங்களாம்.

வாததுஷ்ட விரணம் :—அவற்றுள் வாததோஷத்தினு லுண்டான விரணம் வெண்-கரு நிறமாகவோ, கருநிறமாகவோ, சிவப்பாகவோ, சாம்பல் நிறமாகவோ, புறாவின் எலும்பு நிற மாகவோ இருக்கும்; அதிலிருந்து வெளியாகும் திரவம் பத னழிந்த மாப்பிண்டம், மாம்ஸம், அரிசிச் சோறு இவற்றிலிருந்து கசியும் நீரைப் போன்றதாய், தடிப்பில்லாததாய், சொற்ப அள வாய் இருக்கும்; உள்ளே மாம்ஸம் இல்லாமல், குத்தலும் வலி யும் ஏற்பட்டு, ரூக்ஷமாகவும், பரிசிப்பதற்குச் சடசடாவென்றும் உணரப்படும்.—5, $6\frac{1}{2}$.

பித்ததுஷ்ட விரணம் :—பித்த தோஷத்தினுலான விரணம் வெகு துரிதமாய் உண்டாகும்; நிறத்திற் பசுமையாகவோ, கபில மாகவோ, பொன்னிறமாகவோ, கருநிறமற்ற மற்ற நிறமுள்ள தாகவோ இருக்கும்; சிறுநீர் போன்றதாகவோ, பலாசக்ஷாரம் கரைத்த நீர் போன்றதாகவோ, தைலம் போன்றதாகவோ இருப் பதுடன், உஷ்ணமாகவும் அளவில் அதிகமாகவும் இருக்கும்; உப்புநீர் தடவிய புண்ணைப்போல் கடும் வலியை இவ்விரணம் உண்டுபண்ணும்; சிவப்பும், சூடும், சமைக்கப்படுவது போன்ற வேதனையும் இதிலிருக்கும்.—7, 8.

கபதுஷ்ட விரணம் :— சிலேஷ்மதோஷத்தினுலான விர ணம் வெண்மையாகவும், தினவுள்ளதாகவும் இருக்கும்; அதி லிருந்து வெளுப்பாய் கெட்டியான சீழ் முதலிய தோஷம் மிகவும் வெளியாகும்; விரணத்தின் ஓரங்கள் பருத்திருக்கும்; விரணம் கடினமா யிருக்கும்; ஸ்நாயுக்களும், ஸிரைகளும் விரணத்தில் பருத்துப் பரவி யிருக்கும்; வேதனை சொற்பமா யிருக்கும்.—9.

இரக்ததுஷ்ட விரணம் :—இரக்த தோஷத்தாலே ஏற்படும் விரணம் பவளம்போன்று சிவந்திருக்கும்; அதிலிருந்து இரத்தங் கலந்த சீழ் வெளியாகும்; குதிரை லாயத்திற் கிளம்புவது போன்ற நாற்ற முடையதாகவும், மற்றும் பித்ததோஷக் குறிக ளுடன் கூடியதாகவும் இருக்கும்.—10.

ஸம்ஸர்க்க தோஷாதி துஷ்ட விரணங்கள் :—இரண்டிரண்டு தோஷங்களாலும், ஸந்நிபாதத்தினுலும், இரத்தத்துடன் கூடிய மற்ற த்வந்த்வ - ஸந்நிபாத தோஷங்களாலும் உண்டாகிற அந் தந்த விரணங்களில் மிச்ரதோஷங்களுடைய அந்தந்த லக்ஷணங் களைக் கண்டறியலாம்.—$10\frac{1}{2}$.

சுத்த விரண லக்ஷணங்கள் :—விரணம் நாக்கின் நிறமுடை யதாய், மிருதுவாய், வழுவழுப்புண்டதாய், மேடு பள்ளமற்ற உட்புற முடையதாய், ஆனுல் சிறிது மேலெழுந்த மத்தியப் பிரதேச முடையதா யிருக்கும்; அதன் உதடுகள் ஒருவாறு கருநிறமாகக் காணப்படும்; உபத்திரவங்க ளற்றதாகவும் இருக்கும்.—$11\frac{1}{2}$.

**விரணாசயங்கள் எட்டு :**—சர்மம், மாம்ஸம், ஸிரைகள், ஸ்நாயு, ஸந்திகள், எலும்பு, குடல், மர்மஸ்த்தானங்கள் ஆக இவ்வெட்டும் விரணங்கள் உண்டாவதற்கு ஆதாரமான இடங்களாம். இவற்றில் முந்தியதினும் பிந்தியதி லுண்டாகும் விரணம் மேன்மேலும் முறையே கஷ்ட ஸாத்யமா யிருக்கும்.—12½.

**விரணங்களில் ஸாத்யாஸாத்யாதிகள் :**—(1) மனோதிடமும், வலிவான மாம்ஸமும், ஜாடராக்னி பலமும், வாலிப வயதும், சரீர பலமும் உள்ளவனுக்குக் காணும் விரணம் எளிதில் நிவ்ருத்தியாகக் கூடியது; உருவத்தில் வட்டமாகவும், நீண்டதாகவும், மூன்று புடங்களுள்ளதாகவும்,[1] நான்கு கோணங்களாகவும் உள்ள விரணங்களும் ஸுக ஸாத்யங்கள்; பிருஷ்டபாகம், குதம், ஆண் குறி அல்லது பெண் குறி, உதடு, முதுகு, உள்வாய், கன்னங்கள் இவற்றிலுண்டாகும் விரணங்களும் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியன. (2) நேத்திரம், பற்கள், நாசி, கடைக்கண், நாபி, ஸேவநீ, வயிறு, செவி, விலாப்பக்கங்கள், அக்குள், ஸ்தனங்கள் இவற்றில் ஏற்படும் விரணங்கள் கஷ்ட ஸாத்யங்களாம்; நுரை, சீழ், வாயு இவற்றை வெளியிடுவதும், உள்ளே சல்யம் அடங்கியதும், மேல் நோக்கிச் சீழ் முதலியதைக் கக்குவதும், இடுப்பையும் எலும்பையும் பற்றியதுமான விரணமும், உட்புறமாய் முகமுடைய பகந்தர விரணமும் சிகித்ஸைக்கு எளிதில் வசப்படாததாம்; குஷ்டரோகிகளுக்கும், விஷப்பற்றுள்ளவருக்கும், க்ஷய ரோகிகளுக்கும், மதுமேஹ முள்ளவருக்கும் தோன்றுகிற விரணங்களும், விரணங்களைப் பற்றி அவற்றின்மேல் புறப்படும் விரணங்களும் கஷ்டஸாத்யங்களாகும். (3) விஸர்ப்பம்-ஜ்வரம்-அதிஸாரம்-காஸம்-நாவறட்சி-நித்திரையின்மை-ச்வாஸரோகம்-அஜீர்ணம் இவற்றால் வருந்துபவர்களுக்குக் காணும் விரணங்கள் அஸாத்யங்களாம்; தலையிலுள்ள கபால எலும்பிலுண்டாய் உடைந்த விரணமும், மஸ்துலுங்கம் என்கிற மூளைச் சத்து வெளியிற் கிளம்பியுள்ள விரணமும் சிகித்ஸைக்கு எவ்விதத்திலும் வசப்பட மாட்டா. 13—18½.

**விரணம் ஆறுததற்குக் காரணங்கள் :**— ஸ்நாயு என்னும் தசை நாரில் சீழ்ப்பிடித்துத் துர்நீர் கசிவதாலும், ஸிரை அறுபடுவதாலும், விரணம் மிகவும் ஆழ்ந்த தாதுக்களைப்பற்றி யிருப்பதாலும், கிருமிகள் சேர்ந்து அவயவத்தைத் தின்றழிப்பதாலும், எலும்பு முறிவதாலும், சல்யம் உள்ளே தங்கி யிருப்பதாலும், விஷம் பற்றி யிருப்பதாலும், பரிஹார விஷயத்தில் ஏற்ற

---

1. சுற்றிலும் உள்ள உதடு என்கிற விளிம்பு, முகம் அல்லது மூளை, இவ்விரண்டுக்கும் மத்தியிலுள்ள பாகம் ஆகிய இம் மூன்றும் விரணத்தின் மூன்று பாகங்கள்; இம் மூன்றுக்கும் மூன்று புடங்கள் (த்ரிபுடங்கள்) எனப் பெயர்.

கவனம் செலுத்தாமையாலும், முறை தவருக பந்தநமிடுவதாலும், அமிதமான ஸ்நேஹப்பிரயோகத்திஞலும், அதிக ருக்ஷமாக வைப்பதாலும், உரோமம் முதலியவை பட்டுத் தேய்வுறுவதாலும், அதிர்ச்சியாலும், குடல் சுத்தம் செய்யப் படாமையாலும், அமிதமாக உண்பதாலும், அதிகமாக கர்சநம் என்கிற லங்கநாதி சிகித்ஸைகள் செய்வதாலும், மதுபானத்திஞலும், பகலில் நித்திரை புறுவதாலும், புணர்ச்சியிஞலும், இராவிற் கண் விழிப்பதாலும், மித்யா சாரங்கள் என்கிற முறை தவருன சிகித்ஸையிஞலும் எளிதில் சிகித்ஸிக்கக் கூடிய விரணங்கூட சிறிதும் எளிதில் ஆறுவதில்லே. 19—21½.

**விரணம் ஆறுவதன் குறிகள் :**—விரணத்தின் ஓரங்கள் புருவின் நிறத்திற்குச் சமமாகவும், துர்நீர்ப் பெருக்கு இல்லாதனவாகவும், உள்ளே சீழ் முதலியதில்லாமையால் அசைவற்றவையாகவும், வாடி மடிப்புகளைப் பெறும் நிலைமை புள்ளவையாகவும் இருந்தால் அந்த விரணம் ஆறி வருவதாய் அறியலாம்.—22½.

## விரணப் பிரதிஷேதம்.

**விரணங்களில் சோதநம் :**—விரணத்திற்கு முன் வீக்கம் ஏற்பட்டிருக்கையிலேயே, எவ்வழியால் சோதநம் செய்வது அது உண்டாகும் இடத்திற்குச் சமீப மார்க்கத்தை அனுஸரித்து அனுகூலமா யிருக்குமோ அவ்வழியினுல் சுத்திசெய்வது அவசியம் ; அவ்விதம் வமந - விரேசநாதிகளால் சுத்தியடைந்தவனுடைய வீக்கமும், பிறகு விரணமும் சீக்கிரம் தணிவடையும்.—23½.

**விரணசோபையில் சீதோபசாரம் :**—விரண ஸம்பந்தமான வீக்கம் ஏற்பட்டிருக்கையில் அப்பிணியாளிக்கு அடிக்கடியும் சீதோபசாரம் செய்ய வேண்டும் ; குளிர்ச்சியினுல் அக்னி தணிவதுபோல் அச் சீதோபசாரத்தினுல் தோஷ ஸம்பந்தமான சூடு சீக்கிரம் தணிவடையும்.—24½.

**விரணசோதையில் இரக்த மோக்ஷணம் :**—(1) வீக்கமும், விரணமும் கடிநமாகவும், கன்றியும், வேதனை புள்ளதாகவும் இருந்தால், அதிலும் முக்கியமாய் விஷப் பற்றுள்ளதா யிருந்தால் அட்டை முதலியவற்ருல் இரத்தத்தை வெளிப்படுத்தலாம்; அவ்விதம் கெட்ட இரத்தம் வெளியாய்விட்டால், வீக்கமும், சிவப்பும், வலியும் உடனே தணிந்து விடும். (2) இரக்த மோக்ஷணம் செய்யச் செய்ய பரிசிப்பதற்குக் குளிர்ச்சியாகவும், வீர்யத்தில் சீதமாகவும், மிகவும் மிருதுவாக ஆட்டி அரைக்கப்பட்டுமுள்ள பால், கருப்பஞ்சாறு முதலிய திரவங்களாலும், சததௌத க்ருதத்துடன் கூடிய வேறு ஈரமான வஸ்துக்களாலும் கீழிருந்து மேல் நோக்கிப் பிரதிலோமமாக லேபநம் செய்யலாம் ; அவ்விதத் திரவங்களை மேலே ஊற்றுவதும், அப்யங்கம் செய்வதும் நலம். 25—28.

**விரணங்களில் லேபநாதிகள் :—**(1) ஆல்-அத்தி-அரசு-பூவரசு-நீர்வஞ்சி இவற்றின் பட்டைகளைத் தாராளமாக நெய் சேர்த்து அரைத்து வீக்கத்தின்மேல் பூசினால், இது வீக்கத்தை நன்கு கரைத்துப்போடும். (2) வாதம் மேலிட்டும், கடினமாகவும், அசைவற்றும், அதிக நோவுள்ளனவுமான அவ்வித வீக்கங்களிலும், விரணங்களிலும் இரக்தமோக்ஷணம் செய்த பிறகு ஆநூபமாம்ஸத்தினால் செய்த வேஸவாரம் முதலியவற்றால் ஸ்வேதநம் செய்வது நலம். (3) மீண்டும் ஆழிவிதை, எள் இவற்றை வறுத்துப் பாலில் சேர்த்து, அவற்றை நன்கு அரைத்து மேலே பிரயோகித்தால் அழற்சி, வலி இவை தீரும். 29—31.

**விரணசோபையில் வலி மந்தமாயிருக்கையில் ஏற்ற சிகித்ஸை :—**(1) வீக்கங்கள் அசைவற்றிருந்தால், வலியும் சொற்பமா யிருந்தால் வாத-சிலேஷ்மஹரமான ஸ்நேஹங்களை மேலே தேய்த்து, ஸ்வேதநம் செய்து, வீக்கம் கரைவதற்காக மெல்லிய மூங்கிற் கழியினால் மெள்ள மெள்ள அழுத்தி உருக்கிவிடலாம்; அல்லது உள்ளங்கையினாலாவது, பெரு விரலாலாவது அவ்விதம் செய்யலாம்; நன்றாக அரைத்துப் பக்குவம் செய்த வாற்கோதுமை, கோதுமை, பயறு இவற்றின் மாவையும் மேலே கனமாக லேபநம் செய்யலாம். (2) இவ்விதம் செய்தும் வீக்கம் கரையாவிடில் அதற்கு மேலே சூடாக ஒற்றடமிடலாம்; இதனால் வீக்கம் அழன்று விதக்த்தாவஸ்த்தை யடையாமலிருந்தால் தானே தணிந்து போகும்; அழன்று விதக்த்த நிலைமையைப் பெற்றால் பழுத்துப் பக்குவமாகும். (3) இலந்தம் பழம், எள், சணல், ஆழிவிதை இவற்றைத் தயிரிற் போட்டுப் புளிக்க வைத்து அரைத்து, கிண்வம் என்கிற மதுவின் திப்பி-கோஷ்டம்-உப்பு இவற்றையும் கூட்டிச் சமைத்து, இளஞ்சூடாக அதனால் உபநாஹஸ்வேதம் செய்யலாம். 32—35.

**பக்வ விரண சோதையை உடைத்தல் :—**வீக்கம் நன்றாகப் பழுத்திருந்தால் அதை அழுத்தி உடைக்கத் தகுந்த குணமுள்ள வஸ்துக்களால் நசுங்கச் செய்து, அதை உடைக்க உபாயம் தேட வேண்டும்; இவ்வித தாரணமென்னும் உடைக்கும் சிகித்ஸை அதற்கு ஏற்ற ஸுகுமார தேஹிக்குத்தான் முக்கியமானது.-36.

**பக்வ விரண சோதைகளை உடைக்கத் தகுந்த சரக்குகள் :—**குங்கிலியம், ஆழிவிதை, பசுமாட்டின் பல், பிரம்மதண்டு, புறுவின் மலம், ஸர்ஜக்ஷாராதி க்ஷாரங்கள், க்ஷாரங்கள் எடுப்பதற்கேற்ற ஓஷதிகள் ஆகியவை பழுத்த விரண சோதையை உடையச் செய்யும் திரவியங்களாம்.—37.

**விரணங்களில் தோஷங்களை அழுத்தி வெளிப்படுத்துவதற்கேற்றவை :—**(1) உட்புறத்திற் சீழ் தங்கியவை, நுண்ணிய முகமுடையவை, விம்மிப் பருத்திருப்பவை, மர்மஸ்த்தாநங்களில்

உண்டானவை ஆகியவற்றை எண்ணெய்ப் பசையற்றுப் பழுத்து உடைக்கச் செய்யும் வஸ்துக்களால் சுற்றிலும் தகடாகப் படுமாறு மேலே லேபநாதிகள் செய்யலாம். (2) சோபத்தின்மேல் அதை அழுத்தி உடைப்பதற்காகப் பிரயோகிக்கப்பட்ட லேபநம் உலர்ந்து வருகையில், அதை அப்படியே விட்டுவிட வேண்டும். (3) லேபநத்தை விரணசோதையின் வாயில் இடக் கூடாது; வாய் மூடப்படாம லிருந்தால்தான் உள்ளடங்கிய சீழ் முதலிய தோஷம் நன்கு வெளிப்படும். (4) காராமணி, வாற்கோதுமை, கோதுமை, உளுந்து, பயறு, அபிஷுகம், மற்றும் பிசுபிசுப்புள்ள வஸ்துக்களின் பட்டை வேர் முதலியவை விரண சோதையை அழுத்தி உடைக்க ஏற்ற சரக்குகளாம். 38—40.

துஷ்டவிரண சிகித்ஸை:—(1) மிகவும் கெட்டுப்போன விரணத்தில் ஸுரஸாதிகணத்தையும், ஆரக்வதாதிகணத்தையும்[1] க்ஷாளநம் முதலிய ஏழுவிதமான ஔஷத முறைகளிலும்[2] உபயோகிக்கலாம்; அவற்றையே மேஹவிரணங்களிலும், குஷ்ட ஸம்பந்தமான விரணங்களிலும் உபயோகிக்கலாம். (2) அல்லது தோஷம் நிரம்பிய அசுத்தவிரணங்களை க்ஷாளநம் செய்ய பேய்ப் புடல்-வேப்பிலை இவற்றின் கஷாயமும், (3) சுத்தமான விரணங்களை அலம்புவதற்கு நியக்ரோதாதிகளைச் சரக்குகளின் பட்டைகளால் செய்த கஷாயமும் உபயோகிக்கத் தகுந்தவையாம்.—41, 42.

விரணசோதந லேபம்:—பேய்ப்புடல், எள், அதிமதுரம், சிவதை, நேபாளம், மஞ்சள், மரமஞ்சள், வேப்பிலை இவற்றை உப்பையுங்கூட்டி லேபநம் செய்யலாம்; இது விரணங்களைச் சுத்தம் செய்யும் லேபநமாம்.—43.

விரணசோதந வர்த்தி:—சிவதை வேர், நேபாளம், கலப்பைக் கிழங்கு, தேன், இந்துப்பு இவற்றால் செய்த வர்த்தியானது ஸந்திகளிலும், மர்மஸ்தானங்களிலும் உண்டான ஆழ்ந்துள்ள முகமுடைய விரணங்களைச் சுத்தி செய்யக்கூடியது.—44.

விரணதூபநம்:—வாதப் பிரகோபத்தினால் வேதனை அளிப்பவையும், நீர்க்கசிவுள்ளவையும், கடும் வலியுள்ளவையுமான விரணங்களுக்கு வாற்கோதுமை, நெய், பூர்ஜபத்ரம், மருக்காரை, தேவதாரு, குங்கிலியம் இவற்றை எரித்து, அதனால் விரணத்திற்குத் தூபமிடலாம்.—45.

---

1. ஸுரஸாதி — ஆரக்வதாதிகணங்களைப்பற்றி முதற்பாகம் பார்க்க.

2. க்ஷாளநம் — அலம்புவது. (1) க்ஷாளநம், லேபநம், கிருதம், தைலம், இரஸக்ரியை, சூர்ணம், வர்த்தி என்பவை விரணங்களில் அல்லது வீக்கங்களில் உபயோகிக்கக்கூடிய ஏழுவித ஔஷத முறைகள். (2) அல்லது க்ஷாளநம், லேபநம், தாபநம், உத்ஸாதநம், அவஸாதநம், சேதநம், ரோபணம் என்கிற இவ்வேழு முறைகளையும் ஸப்தவிரண சிகித்ஸைகள் என்றும் கூறுவர்.

**விரண நிர்வாபணம்**[1] :—பித்தாதிக்யத்தினாலாவது, இரத்த தோஷத்தினாலாவது, விஷஸம்பந்தத்தாலாவது வருத்தும் விரணங்களில் மிகவும் குளிர்ச்சியான சீதோபசாரங்களால் அவ் வேதனைகளுக்குத் தணிவுண்டுபண்ணவேண்டும்.—$45\frac{1}{2}$.

**விரணங்களுக்கு உத்ஸாதநம் செய்தல்** :—சுஷ்கமான சொற்ப மாம்ஸமுள்ளதும் வெகு ஆழமாயிருப்பதுமான விரணத்தில் உத்ஸாதநம்[2] செய்வது நலம். அதற்கு நியக்ரோதாதிகணம், பத்மகாதிகணம், அமுக்கிருங்கிழங்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி இவற்றுடன் முறைப்படி பக்குவம்செய்த இறைச்சியுண்ணும் பிராணிகளுடைய மாம்ஸங்களையும் உண்பது நலம். மனம் தெளிந்த மனிதனுடைய தேஹச்சதை மாம்ஸமுண்ணும் மிருகங்களுடைய மாம்ஸத்தினால் நன்கு செழிக்கும்.—46, $47\frac{1}{2}$.

**விரணங்களுக்கு அவஸாதநம் செய்தல்** :—மிருதுவாகவும் உயரமாகவும் மாம்ஸவளர்ச்சியைப் பெற்ற விரணங்களுக்கு அவஸாதநம் செய்வது[3] உசிதம்; இதற்கு ஜாதிமல்லிகை மொக்கு, அன்னபேதி, மநச்சிலை, தாளகம், குங்கிலியம், சித்திரமூலம் இவற்றால் மாம்ஸவளர்ச்சியைக் குறைக்க வேண்டும்.—$48\frac{1}{2}$.

**விரணங்களை க்ஷாரங்களால் சுத்தம் செய்தல்** :—மேலெழுந்த மாம்ஸவளர்ச்சியைப் பெற்று, கடினமான, அரிப்புள்ள நாட்பட்ட விரணங்களையும், மிகக் கஷ்டப்பட்டுச் சுத்தம் செய்ய வேண்டிய விரணங்களையும் க்ஷாரப் பிரயோகத்தினால் சுத்தம் செய்யவேண்டும்.—$49\frac{1}{2}$.

**விரணங்களை தாஹகர்மத்தினால் சுத்தம் செய்தல்** :—அச்மரியினால் மூத்திரத்தை ஒழுகச் செய்பவையும், இரத்தத்தை வெளிப்படுத்துபவையும், அறுந்துபோன ஸந்திபாகங்களும் குறிக்கப்பட்ட முறைகளின்படிச் செய்யப்படும் சோதந சிகித்ஸைகளால் சுத்திசெய்யப்பட்டும் நன்கு சுத்தமாகாவிட்டால் அக்னி தாஹமுறையிற் கூறப்பட்டபடி அவற்றைச் சுடுவதால் சுத்தமாகும்; அவ்விதம் சுத்தமான விரணங்களை உத்ஸாதந முறைக்குக் கூறிய வகையில் சிகித்ஸித்து ஆற்றவேண்டும்.—50, $51\frac{1}{2}$.

**விரணரோபண ஔஷதங்கள்** :—(1) அமுக்கிருங் கிழங்கு, அறுகு, வெள்ளிலோத்தி, சிறுதேக்கு, அதிமதுரம், மஞ்ஜிஷ்டி, காட்டாத்திப்பூ இவை விரணங்களை ஆற்றுவதிற் சிறந்தவை.

---

1. நிர்வாபணம் — அழற்சி யுண்டுபண்ணும் விரணாதிகளில் சீதளமான ஔஷதப் பிரயோகாதிகளால் அழற்சி முதலியதைத் தணியச் செய்தல்.

2. உத்ஸாதநம் — சதைப்பற்றில்லாமல் மிகப் பள்ளமாயுள்ள விரணத்தில் மாம்ஸத்தை வளர்த்து விரணம் ஆறும்விதம் செய்யும் சிகித்ஸை.

3. அவஸாதநம் — மாம்ஸவளர்ச்சியை அழித்தல் அல்லது குறைத்தல்.

(2) தசைநார்களைப் பற்றிய விரணங்கள் பதனழிந்த மாம்ஸம் விலகியபின் ஆருமலிருந்தால், அவற்றை அதிமதுரம் கலந்த எள்ளின் கல்கத்தினுல் ஆற்றவேண்டும். இக்கல்கம் ஸ்நிக்த்தமாகவும், உஷ்ணமாகவும், திக்தரஸ-கஷாயரஸங்களுள்ளதாகவும் இருப்பதால் ஸகல விரணங்களையும் தீர்க்கவல்லது. (3) அந்த எள்ளின் கல்கத்தையே தேனும் வேப்பிலையுங் கூட்டி உபயோகித்தால் அது விரணங்களை நன்ருகச் சுத்தம் செய்யும். (4) அந்த எள்ளின் கல்கத்தையும், தேனையும், வேப்பிலையையும் ஒன்ருகக் கூட்டி, அனைத்தையும் நெய் கூட்டிக் கலக்கி விரணங்களின்மேல் பிரயோகிக்க அது வெகு சீக்கிரம் விரணரோபணமாக[1] வேலை செய்யும். (5) இவ்விஷயமறிந்த வைத்தியர்கள் முந்திய கல்கத்தைப் போலவே வாற்கோதுமையின் கல்கத்தையும் உபயோகிக்கலாம் என்று அபிப்பிராயப்படுகின்றனர். (6) இரக்த-பித்தஸம்பந்தமான விரணங்கள், விஷஸம்பந்தமான விரணங்கள், ஆகந்து விரணங்கள், ஆழமான விரணங்கள், உஷ்ணக் கொதிப்புள்ள விரணங்கள் ஆகியவற்றைப் பாலையும் ரோபணகுணமுள்ள சரக்குகளையும் சேர்த்துப் பக்குவம்செய்த க்ருதத்தினுல் ஆற்றவேண்டும். (7) கபதோஷத்தினுலும் வாததோஷத்தினுலும் உண்டான விரணங்களை ரோபணகுணமுள்ள ஔஷதங்களால் பக்குவம் செய்த தைலத்தைக் கொண்டு ஆற்றவேண்டும். (8) கோபிசந்தனம், வெள்ளிலோத்தி, கடுக்காய், ஸர்ஜரஸம், ஸிந்தூரம், ஸௌவீராஞ்ஜநம், மயில் துத்தம், மருக்காரை இவற்றின் சூர்ணத்துடன் தைலம் கலந்து உபயோகிக்க இது சிறந்த ரோபணமாக வேலைசெய்யும். 52—58.

சர்மவெடிப்பைச் சமமாக்கும் ஔஷதங்கள் :—(1) மாம்ஸபாகம் ஒழுங்காக ஸ்திரப்பட்டுப்போன விரணங்கள் சர்மத்தை மாத்திரம் பற்றிச் சம நிலைமையிலிருக்கையில் சர்மத்திலுள்ள வெடிப்பு முதலியதைச் சரிப்படுத்த சூர்ணௌஷதம் ஏற்றதாகும். (2) மருதம்பட்டை, அத்திப்பட்டை, அரசம்பட்டை, நாவற்பட்டை, சிறு தேக்கம்பட்டை, வெள்ளிலோத்திப்பட்டை இவற்றைச் சூர்ணம் செய்து, விரணங்களின்மேல் தூவினுல் சர்மத்திலுள்ள வெடிப்புகள் மறைந்து சர்மம் ஒன்றுசேரும். (3) கொம்பரக்கு, மனச்சிலை, மஞ்ஜிஷ்டி, அரிதாளம், மஞ்சள், மரமஞ்சள் இவற்றைச் சூர்ணம் செய்து, தேனும் நெய்யுங்கூட்டி லேபநம் செய்ய, சர்மம் வெடிப்பு முதலியவை நீங்கி நன்ருகச் சுத்தமாகும்.—59, $60\frac{1}{2}$.

ஸவர்ணகரலேபம்[2] :—மரமஞ்சள், அறுகு, மாங்கொட்டை, நாககேஸரம், தகரை, பாதரஸம் இவற்றைப் பசுஞ்சாணச்சாறு

---

1. விரணரோபணம்—புண்களைச் சுத்தமாக்கி ஆற்றுங் குணம்.

2. ஸவர்ணகரம்—விரணத்தினுலான நிறமாறுபாட்டை மாற்றி இயற்கை நிற முண்டுபண்ணல்.

அல்லது கோமயம் விட்டு அரைத்து, விரணம் ஆறியவிடத்தில் லேபநம் செய்ய, இது சர்மத்திற்கு இயற்கை நிறத்தை யுண்டு பண்ணும்.—61½.

ரோமஸஞ்ஜநந லேபம்[1] :—(1) யானைத்தந்தத்தை ஒரு பாத்திரத்தில் உடைத்துப் போட்டு, வாயை மூடி புகை வெளிப் படாதபடி எரிக்கவும். அத்துடன் இரஸாஞ்ஜநமும், தைலமுங் கூட்டி விரணமுண்டான விடத்தில் லேபமாகப் பிரயோகிக்க உரோமம் நன்கு முளைக்கும். (2) அதேவிதமாக நாற்கால் பிராணிகளின் நகங்கள், உரோமம், எலும்பு, சர்மம், கொம்பு, குளம்பு இவற்றை எரித்தெடுத்த மையைத் தைலத்திற் குழைத்து லேபநம் செய்தாலும் அதே குணமுண்டாம்.—62, 63.

விரணங்களில் பத்யாபத்யங்கள் :— (1) விரணங்களால் பீடிக்கப்படுபவர்களுக்குச் சஸ்திரகர்மம் செய்யும்போது அவர்களுக்குக் கூறியுள்ளபடி பத்யங்களையும் அபத்யங்களையும் உணவு விஷயத்திற் கவனிக்கவேண்டும். (2) இரு பஞ்ச மூலங்கள், வாதஹரவர்க்கம் இவற்றை வாத ஸம்பந்தமான விரணத்திலும், (3) அவ்விதமே பித்தஹரமான சரக்குகளும், நியகரோதாதிகணச் சரக்குகளும், பத்மகாதிகணச்சரக்குகளும் பித்த ஸம்பந்த விரணத்திலும், (4) கபஹரமான பதார்த்தமும், ஆரக்வாதாதி கணமும் சிலேஷ்ம ஸம்பந்தமான விரணத்திலும், (5) அவற்றை மிச்ரமாகச் செய்து மிச்ரதோஷங்களாலான விரணங்களிலும் பத்யமாக உபயோகிக்கலாம். (6) இதே சரக்குகளால் க்ஷாளநம், லேபநம், க்ருதம், தைலம், இரஸக்ரியை, சூர்ணம், வர்த்தி என்கிற ஏழு முறைகளையும் அததற்கு ஏற்றவாறு விரண நிலைமைகளைப் பரிசீலனை செய்து பிரயோகிக்கலாம். 64—66.

ஜாத்யாதி க்ருதம் :— ஜாதிக்காய், வேம்பு, பேய்ப்புடல், இலவங்கப்பத்திரி, கடுகரோகிணி, மரமஞ்சள், மஞ்சள், நன்னாரி, மஞ்ஜிஷ்டி, வெட்டிவேர், கருநொச்சி, துத்தம், அதிமதுரம், புங்கம்விதை இவற்றின் கஷாயத்தில் க்ருதம் பக்குவம் செய்யவும். இதனால் நுண்ணிய முகமுள்ளவையும், மர்மங்களைப் பற்றியவையும், துர்நீர்க் கசிவுள்ளவையும், மிக ஆழமானவையும், வலியுள்ளவையும், புரையோடுபவையுமான எல்லா விரணங்களும் சுத்தமாவதுடன் நன்கு ஆறியும் விடும்.—67.

---

1. ரோமஸஞ்ஜநநம் — உரோமங்களைப் புதிதாக முளைக்கச் செய்யும் குணம்.

# இருபத்தாறும் அத்தியாயம்.

## ஸத்யோவிரணப் பிரதிஷேதம்.

இனி ஸத்யோவிரணப்பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துரைக்கப்படும் :—

**ஸத்யோவிரணமும் அதன் பேதங்களும் :—** (1) அடி தாக்குவதால் அகஸ்மாத்தாய் ஏற்படுகிற விரணங்கள் 'ஸத்யோவிரணங்கள்' எனப்படும். (2) அவை எண்ணிறந்த வகையில் உண்டாகக் கூடியவையாயினும் தேஹத்தில் க்ருஷ்டம், க்ருத்தம், விச்சிந்நம், பிரவிலம்பி, பாதிதம், வித்தம், பிந்நம், விதளிதம் என்று உருவத்தில் எண் வகைப்படும்.—1, 1½.

**ஸத்யோவிரணங்கள் எட்டுவிதம் :—**அவற்றுள் (1) அடி தாக்கிச் சிறுய்வதால் சிறிது தோல் சிதைந்து, சொற்பம் நிணநீராவது சிறிது இரத்தக் கசிவாவது அவ்விடத்தில் தோன்றும், அவ்வித காயம் **க்ருஷ்டம்** எனப்படும். (2) அதைவிட ஆழமாகச் சிதைவு ஏற்பட்டு, இரத்தம் ஸ்ரவித்தால் அது **க்ருத்தம்** ஆம். (3) அதினும் அதிக பலமாகச் சதை அறுபட்டுப்போனால் அதற்கு **விச்சிந்நம்** எனப் பெயர். (4) அடி பலமாகத் தாக்கி உள்ளே எலும்பைத் தவிர மற்றச் சதை அறுந்துச் சதையும் தொங்கிக் கொண்டிருந்தால் அது **பிரவிலம்பி** எனப்படும். (5) அடி தாக்கியதால் தசைநார் உடலிலிருந்து அறுபட்டு வீழ்ந்துவிட்டால் அதை **பாதிதம்** என்பர். (6) கூர்மையான ஆயுதத்தினுல் கோஷ்டத்தைத்[2] தவிர மற்றவிடம் குத்தப்பட்டால் அதற்கு **வித்தம்** எனப் பெயர். (7) சர்மமும் மாம்ஸமும் கிழிக்கப்பட்டிருந்தால் அது **பிந்நம்** என்றும், (8) அடி தாக்குவது, பலமான கனத்தால் அழுத்தப்படுவது, அழுத்தி நசுக்கப்படுவது முதலிய காரணங்களால் எலும்புடன் தசை முதலியது தட்டையாக நசுக்கப்பட்டு, இரத்தமும் மஜ்ஜை யென்கிற எலும்புச் சோறும் வெளியில் ததும்பியிருந்தால் அது **விதளிதம்** என்றும் வழங்கப்படும். 2—5.

**ஸத்யோ விரணங்களில் ஸாப்தாஹிக விதி[3] :—**(1) ஸத்யோவிரணம் கடும் வலியுள்ளதாயிருந்தால், அதில் அதிமதுரம் சேர்த்துக் காய்ச்சிய இளஞ் சூடான க்ருதத்தையாவது, பலாதைலத்

1. பலவித காரணங்களால் திடீரென்று தேஹத்தில் ஏற்படும் சிதைவு ரூபமான விரணம் "ஸத்யோ விரணம்". அதையும், அதற்கு அவசியமான சிகித்ஸைகளையும் விவரிக்கும் அத்தியாயம்.

2. கோஷ்டம்—குடல்கள், ச்வாஸாசயம், இருதயம், மூத்திராசயம் முதலிய ஆசயங்கள் என்கிற உட்புற அவயவங்கள்.

3. ஸாப்தாஹிகவிதி—ஸத்யோ விரணங்களில் ஏழு நாட்கள் வரையில் செய்யப்படும் பரிஹார முறை.

தையாவது உடனே ஊற்றலாம். (2) காயம் பட்டதனால் எழும் உஷ்ணத்தைத் தடுப்பதற்காகவும், அப்பொழுது காணும் இரத்தப் பெருக்கைத் தடுப்பதற்காகவும் துவர்ப்பாகவும், குளிர்ச்சியாகவும், மதுரமாகவும், ஸ்நிக்த்தமாகவும் உள்ள லேபநாதிகள் அநுகூலமானவை. (3) மிகவும் அகன்றுள்ள ஸத்யோவிரணங்களின் விரிந்த முகங்களை ஒன்று சேர்ப்பதற்காக நெய்யும் தேனும் கலந்து அதன்மேல் பிரயோகிப்பதும், விசேஷமாகப் பித்தஹரமான சீதளோபசாரங்களும் உபயோகமாகும். (4) விரணம் அதிக வேதனையும் படபடத்தத் தொந்தரவும் அளிக்கும்போது மேலே வமநாதிரூபமாகவும், கீழே விரேசநாதிரூபமாகவும் சோதநம் செய்வதும், உபவாஸமிருப்பதும், முற்கூறிய வகையில் பத்யபோஜனமும், அடிக்கடி இரக்தமோக்ஷணம் பண்ணுவதும் நலம். (5) இவ்வித சிகித்ஸை க்ருஷ்டம், விதளிதம் என்கிற இரண்டு ஸத்யோவிரணங்களிலும் விசேஷமாய்ப் பிரயோகிக்கத் தகுந்தது; ஏனெனில் இவ்விரண்டிலும் இரத்தம் சொற்பமாக வெளிப்பட்டு, சீக்கிரம் அதனால் விரணம் பக்குவமடையும். (6) வேறு விதமான அடி தாக்கியதாலான பிந்நம் முதலிய விரணத்திற் பெரும்பாலும் இரத்தம் அதிகமாகப் பெருகும்; அவ்விதம் இரத்தப்பெருக்கினால் வாயு பிரகோபமடைந்து மிகவும் வலி யுண்டுபண்ணும்; அப்பொழுது வாதஹரச் சரக்குகளால் பக்குவம் செய்த ஸ்நேஹத்தைப் பானம் செய்வதும், லேபம் செய்வதும், அதனால் ஸ்வேதம் செய்வதும், ஒற்றடமிடுவதும், அநுவாஸநவஸ்தி பிரயோகிப்பதும் நலம். இவ்விதமாக ஸத்யோவிரணங்களுக்கு அநுகூலமான ஸாப்தாஹிக விதிகள் என்கிற பரிஹார முறைகள் மொழியப்பட்டன. இவ்வேழு நாட்களில் விரணவேகம் தணிந்ததும், முன்பு விரணப் பிரதிஷேதாத்தியாயத்திற் கூறிய முறைகளை நிறைவேற்ற வேண்டும். ஸத்யோவிரணங்களனைத்துக்கும் இவை பெரும்பாலும் பொதுவான சிகித்ஸைகள்; இனி ஒவ்வொன்றுக்கும் தனித் தனியே சிகித்ஸை மொழியப்படும். 6—13½.

க்ருஷ்டாதி ஸத்யோவிரணங்களுக்குப் பிரத்யேக சிகித்ஸைகள்:—(1) க்ருஷ்டம் என்னும் விரணத்தில் முதலில் நோவைத் தணிப்பதற்கு அவசியமான பரிஹாரத்தைச் செய்துவிட்டு, ஏற்ற சூர்ணங்களை அவற்றின்மேல் தூவவேண்டும். (2) க்ருத்தம் என்கிற அவக்ருத்தத்தில் கல்கம் முதலியவற்றைப் பிரயோகிக்கவேண்டும். (3) விச்சிந்நவிரணத்திலும், (4) பிரவிலம்பி விரணத்திலும் முற் கூறியுள்ள முறைகளை யனுஸரித்து[1] ஸீவநம் என்கிற தைத்தல், பந்தநம், பீடநம் என்கிற அழுத்துதல் ஆகியவற்றை கிரமப்படிச் செய்யவேண்டும்.—14, 15.

1. ஸூத்திரஸ்த்தாநம் 29-ம் அத்தியாயத்திற் கூறிய முறைகள்.

**க்ஷதநேத்திரசிகித்ஸை** :—(1) இடம் விட்டுத் தறித்து வீழ்ந்த நேத்திரத்திற்குச் சிகித்ஸை செய்வது அஸாத்யம். எனினும் அறுந்த பிறகு தொங்கிக்கொண்டுள்ள நேத்திரபாகத்தைத் தகுந்தவாறு ஸ்த்தானத்தில் அமைத்து, ஸிரை முதலியவை அறுபட்டுப் போகாதபடி மேலே தாமரைமலரின் இதழ்களை வைத்து மூடி, வைத்தியன் மெதுவாக கரத்தினால் அழுத்தி அமர்த்தவேண்டும். (2) பிறகு அதிமதுரம், ஜீவகம், ருஷபகம், நைதல் ஆகிய சரக்குகளையும் பாலையும் கூட்டிப் பக்குவம் செய்த ஆட்டு நெய் அப்பிணியாளிக்குக் கண்ணில் ஊற்றவும், நஸ்யமிடவும், தர்ப்பணம் பண்ணவும் மிகவும் அனுகூலமானது ; இது நேத்திரத்தில் ஏற்படும் ஸகல அபிகாதங்கள் என்கிற காயங்களையும் பரிஹரிப்பதிற் சிறந்தது. (3) தொண்டையில் ஏற்படும் அடைப்பினால் நேத்திரம் ஆழ்ந்திருந்தால், வமநம் செய்வதாலும், குமட்டலுண்டாக்குவதாலும், தும்மலுண்டாக்குவதாலும் அவ்வித நேத்திரத்தை இயற்கை நிலைமைக்கு மேலெழச் செய்யலாம் ; அல்லது பிராணாயாமமாவது செய்யலாம் ; பிறகு க்ஷதநேத்திரத்திற்குச் செய்தது போன்ற சிகித்ஸை செய்யலாம். 16—19.

**அறுந்த காதுக்குச் சிகித்ஸை** :— காது அறுபட்டுத் தன் இடம்விட்டு நழுவிப்போனால், அதை ஒழுங்காகத் தைத்து, செவிக் குழியைத் தைலத்தினால் நிரப்ப வேண்டும்.—$19\frac{1}{2}$.

**அறுபட்ட க்ருகாடிகைக்குச் சிகித்ஸை** :—க்ருகாடிகா என்னும் மர்மம்[1] அறுபட்டுப்போய், அதிலிருந்து வாயு வெளிப்பட்டால், (1) அறுபட்ட விடத்தைச் சமமாக வைத்துத் தைத்து, அதன்மேல் துரிதமாக இடைவெளி யின்றியே நன்றாகப் பந்தநமிடவேண்டும். (2) அதன்மேல் வெள்ளாட்டு நெய்யை ஊற்றுவது நலம். (3) நிமிர்ந்துட்கார்ந்து போஜனம் செய்யவேண்டும். (4) நன்கு பந்தநமிட்டுக்கொண்டு படுக்கவேண்டும்.—20, $21\frac{1}{2}$.

**சாகைகளில் அடி தாக்குவதற்குச் சிகித்ஸை** :—சாகைகள் என்கிற கைகால்களில் பலமான அடி விழுந்து நெடுகவும் பிளவு ஏற்பட்டால், பிளவுண்ட பாகங்களை ஒழுங்காக அமைத்துத் தைத்து, கனமான பந்தநவஸ்திரத்தினால் வேல்லிதபந்தந முறையில்[2] கட்டவும் ; விரணம் நன்கு கூடாமலிருந்தால், சர்மத்தைக் கொண்டு கோபணாபந்தநம்[3] இடவேண்டும்.—22, 23.

**தொங்கும் பீஜங்களைச் சரிப்படுத்தல்** :—(1) பீஜங்கள் அடிபட்டுத் தொங்கிப் போனால், உடனே தண்ணீரால் பாதங்களையும்,

---

1. க்ருகாடிகா — முதற் பாகம் பார்க்க.

2. வேல்லித பந்தநம் — இதுவே அநுவேல்லிதம் எனப்படும். (முதற் பாகம் பார்க்க.)

3. கோபணா பந்தநம் — முதற் பாகம் பார்க்க. (இதுவே "கோஷ்பணம்" என்றும் கூறப்படும்.)

கண்களையும் நனைத்து, அவ்விதைகளை உள்ளே தள்ளி வைத்து, துந்நஸேவநி[1] என்கிற பாகத்தினூடே தைத்துவிட வேண்டும். (2) பிறகு இடுப்பில் வஸ்திரப்பட்டம் சுற்றி, அதற்கும் பீஜ கோசங்களுக்குமாகச் சேர்த்து கோஷ்பணு பந்தநம் இடவும்; இதில் ஸ்நேஹங்களை ஊற்றக் கூடாது; அப்படிச் செய்தால் விர ணத்திலிருந்து நீர் கசியும். (3) தகரவிதை, அகில், ஏலம், ஜாதிக்காய், சந்தனம், பர்ப்பாடகம், மநச்சிலை, மரமஞ்சள், சிந் தில், துத்தம் இவற்றால் பக்குவம் செய்த தைலம் ரோபணமாக உபயோகப்படும். 24—26.

முற்றிலும் அறுபட்ட சாகைகளுக்குச் சிகித்ஸை :—கையா வது காலாவது பற்றற வெட்டப்பட்டுப் போனால், அவ்விதம் வெட்டுண்ட முனையை நன்றாகக் காய்ச்சிய எண்ணெயினால் சுட்டு விட்டு, முறைப்படி கோசபந்தநமிட்டுக் கட்ட வேண்டும்; அதன் பிறகு விரணங்களுக்குக் கூறிய வகையில் மற்ற உபசாரங் களையும் செய்யலாம்.—27.

சல்யம் வெளிப்பட்ட விரணங்களிற் செய்யும் சிகித்ஸை :— (1) வித்தம் என்கிற விரணத்தில் சல்யம் வெளிவந்த பிறகு பங்க விரணத்திற்கும் விதளிதம் என்கிற விரணத்திற்கும் ஏற்ற சிகித் ஸையைச் செய்யவேண்டும். (2) சிரஸ்ஸிற் பிரவேசித்த சல்யம் எடுக்கப்பட்ட பிறகு, அந்த விரணத்தினுள் "வாலவர்த்தி" என் கிற[2] திரியை உட்செலுத்த வேண்டும்; இல்லையேல் மூளை ஸம் பந்தமான தாது வெளிப்பட்டுப் போய், வாயு பிரகோபமடைந்து பிணியாளியைக் கொன்று விடும். விரணம் ஆறிவரும்போது, வாலவர்த்தியி லிருந்து உரோமங்களை ஒவ்வொன்றாகக் கிரமமாய் மெதுவாக எடுத்துவர வேண்டும். (3) மஸ்துலுங்கம் என்கிற மூளைச் சத்து வெளிப்பட்டால், வேறு பிராணிகளுடைய மூளை களை அவன் உண்ணலாம். (4) வேறு அவயவங்களிற் பொத்திய சல்யத்தை வெளியில் எடுத்தபின்பு, அவ்விரணத்தினுள் ஸ்நேஹ வர்த்தியைச் செலுத்தலாம். 28—30.

ஆழமான ஸூக்ஷ்மமுகவிரணங்களுக்குச் சிகித்ஸை :— வெகு ஆழமாக உட்சென்றும், நுண்ணிய முகமும், இரத்தம் மிக்க வெளிப்பட்டுமுள்ள விரணங்களில் மெல்லிய நேத்திரம் என்கிற குழாயுள்ள பாத்திரத்தில் சக்ரதைலத்தை[3] எடுத்து ஊற்றலாம்.—31.

---

1. துந்நஸேவநி — பீஜகோசத்தின் மத்தியில் நெடுகவும் தைக்கப் பட்டது போலத் தோன்றும் ரேகை. (சிரக் கபாலங்களுக் கிடையிலும் இவ்விதம் சில தந்நஸேவநிகள் உண்டு.)

2. வாலவர்த்தி — உரோமங்களை ரோபண-சோதநௌஷதங்களில் நனைத்து வர்த்தியாகச் செய்துபயோகித்தல்.

3. சக்ரதைலம்—புதிதாக அப்பொழுதே ஆட்டி எடுத்த எண்ணெய்.

பிந்நகோஷ்ட லக்ஷணங்கள்[1]:—(1) குடல் தாக்கப்பட்டு அதில் சேதம் உண்டா யிருந்தால், அது இரத்தம் நிரம்பியதாய் விடும்; அப்பொழுது மயக்கம், இருதய வேதனை, விலாப் பக்க வலி, ஜ்வரம், தாபம், நாவறட்சி, பொருமல், உணவில் விருப்ப மின்மை, மலம்-மூத்திரம்-அபாநவாயு ஆகியவை அடைபட்டுப் போதல், பெருமூச்சு, விசேஷ வியர்வை, கண் சிவப்பு, வாயில் இரும்பு நாற்றம், உடலில் துர்நாற்றம் ஆகிய குறிகள் பொதுவாகத் தோன்றும். (2) அவ்வித விரணத்திலிருந்து வரும் உதிரம் ஆமாசயத்தில் தங்கி யிருந்தால், பிணியாளி இரத்தம் கக்குவான்; அபரிமிதமான வயிற்றுப் பொருமலாலும், வலியினாலும் வருந்தி உயிரிழக்க நேரிடும். (3) உதிரம் பக்வாசயத்தில் தங்கி யிருந்தால் வலியும், வயிற்றில் பாரமும் ஏற்படும்; நாபிக்குக் கீழே சைத்திய முண்டாம்; குதம் முதலிய த்வாரங்களிலிருந்து இரத்தமும் வெளிப்படும். (4) அடி தாக்கிக் குடல் முதலிய ஆசயத்தில் த்வாரம் விழாமலிருந்தாலும், ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் இரத்தக் குழாய்களிலிருந்து இரத்தம் வெளிப்பட்டு, இரு பாரிசங்களாலும் ஸ்ரவிக்கும் மூத்திரத்தினால் வஸ்திபோலே, குடல் அந்த இரத்தத்தினால் நிரப்பப் படலாம். (5) இவ்விதம் இரத்தம் உட்புறமாகத் தங்குவதால் அப் பிணியாளியின் பாதங்களும், கைகளும், முகமும், மூச்சுக் காற்றும் குளிர்ந்து விடும்; கண்கள் மிகச் சிவந்திருக்கும்; முகம் மிக்க வெளுத்துப் போம்; மலமும் கட்டிப் போம்; இது சிகித்ஸைக்கு வசப்படாத அஸாத்ய நிலைமையாம். 32—37.

பிந்நகோஷ்ட சிகித்ஸைகள் :—(1) உதிரம் ஆமாசயத்தில் தங்கினால் வமநசிகித்ஸையும், (2) பக்வாசயத்தில் தங்கினால் எண்ணெய்ப் பசை ஸம்பந்தமில்லாத சோதந குணமுள்ள ஔஷதங்களால் விரேசநமும், நிரூஹவஸ்திப் பிரயோகமும் அனுகூலமாம். (3) வாற்கோதுமை, கொள், இலந்தை இவற்றைக் கொதிக்க வைத்தெடுத்த இரஸத்துடன் எண்ணெய்ப் பொருளின் கலப்பின்றி அன்னம் சேர்த்துப் புஜிக்கலாம். (4) அல்லது இந்துப்பு கூட்டிய யவாகூ என்கிற கஞ்சியையாவது பருகலாம். (5) குடலிற் சிதைவு ஏற்பட்டு, இரத்தமும் அமிதமாக வெளிப்பட்டால், பிணியாளி இரத்தத்தைப் பருகலாம். 37—39½.

கோஷ்டபேதம் இரண்டு விதம் :—(1) கோஷ்டபேதம் என்பது க்லிந்நாந்த்ரம் என்றும், பிந்நாந்த்ரம் என்றும்[2] இருவகைப்

1. பிந்நகோஷ்டம் — குடல் தாக்கப்பட்டு அதில் த்வாரம் விழுதல்.

2. கோஷ்ட பேதம் — பிந்ந கோஷ்டம். அதாவது சிதைவடைந்த குடல். க்லிந்நாந்த்ரம் — நீர்க்கசிவு அல்லது இரத்தக்கசிவுள்ள குடல். பிந்நாந்தரம் — சிதைந்த அல்லது த்வாரம் விழுந்த குடல். [கோஷ்டம் என்றாலும், அந்த்ரம் அல்லது ஆந்த்ரம் என்றாலும் குடல்தான்.]

படும். இவற்றுள் முந்தியதில் மூர்ச்சை முதலியவை சொற்ப மாகவும், பிந்தியதில் அக்குறிகள் வெகு அதிகமாகத் தோன்றி ஆபத்தை விளைவிப்பவையாகவும் இருக்கும். (2) ச்லிந்நாந்த்ரம் என்கிற நிலைமையில் பிணியாளி பிழைப்பது ஸந்தேஹாஸ்பதம்; பிந்நாந்த்ரத்திலோ பிழைக்கவே மாட்டான். (3) ஒருவனுக்கு மலம்-மூத்திரம் வாயு இவை சரியானபடி அதனதன் இயற்கை முறையில் வெளிவருமானால், உபத்திரவங்கள் ஏற்படாமலிருந் தால் அவனுக்குக் கோஷ்டம் பிந்நமாயிருந்தாலும் நிச்சயமாய் அவன் பிழைத்திடுவான். 40—42.

வெளிவந்த குடலை உட்செலுத்தல் முதலியன:—(1) வயிற் றிற் சிதைவு ஏற்பட்டுக் குடல் பிந்நமாகாமல் வெளிப்பட்டிருந் தால், அதை வயிற்றினுள் மீண்டும் தள்ளிச் சரியானபடி அமர்த் தலாம்; ஆனால் சிதைவடைந்த குடலை உட்செலுத்துவதிற் பலனில்லை. (2) ஆனால் அவ்விதம் சிதைவுற்ற குடலிலும் கட் டெறும்பைக் கடிக்க வைத்து, அதையும் உட்செலுத்தி விடலாம் என்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். (3) வயிற்றிலிருந்து வெளிவந்துள்ள குடலில் புல், இரத்தம், மண் முதலியவை ஒட்டி யிருந்தால் அவற்றைப் பால்விட்டுக் கழுவி, வைத்தியன் தன் கைநகங்களை நன்கு அறுத்துச் செம்மைப்படுத்திக் கொண்டு, அக்குடலின்மேல் நெய்யைத் தடவி, மெள்ள மெள்ள உள்ளே செலுத்தவேண்டும். (4) வெளிவந்துள்ள குடல் வறண்டுபோ யிருந்தால், அதைப் பால்விட்டு மீண்டும் ஈரமாகச் செய்து, தாராளமாக நெய்விட்டு ஸ்நிக்த்தமாக்கி உட்செலுத்த வேண்டும். (5) அல்லது அம்மனிதன் தொண்டையை விரலால் துளாவி னாலும், தண்ணீரை முகத்தில் அறைந்து திடுக்கிடச்செய்தாலும் குடல் உள்ளே தானே இழுக்கப்பட்டு உட்செல்லும்; பிறகு மெதுவாக அவ்விடத்தைப் பிசைந்து, குடலைச் சரியானபடி உள்ளே அமையச் செய்வது நலம். (6) வயிற்றில் அடி தாக்கிய தாலான த்வாரம் மிகச் சிறியதா யிருப்பதாலோ, வெளிவந்த குடல்பாகம் மிகப் பெரியதாயிருப்பதாலோ உள்ளே அக்குடலைச் செலுத்த முடியாமற் போனால், அப்பொழுது அவசியமான அள வுக்கு வயிற்றைச் சஸ்திரத்தினால் கீண்டு பெரிதாக்கிக் குடலை உட்செலுத்த வேண்டும்; குடல் உள்ளே அதன் ஸ்த்தாநத்தில் அமைந்துவிட்ட பிறகு, வயிற்று விரணத்தை முறைப்படித் தைத்துவிட வேண்டும்; குடல் உற்றவிடத்தில் அமையாது இடம் புரண்டுவிட்டால், அதனால் பிராணாபாயம் ஏற்படும். பிறகு வஸ்திரப் பட்டத்தினால் வயிற்றைக் கட்டி, அதன்மேல் நெய்யை ஊற்றவேண்டும். அதன்பிறகு குடலிற் சேரும் மலத்தை மிருது வாகச் செய்யவும், அபாநவாயுவை வெளிப்படுத்தவும் தும்மட்டிக் காய் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் கலந்த பாலை இளஞ்சூடா

கப் பருகச் செய்யலாம். பிறகு ஒரு வருஷ காலம் விரணசிகித்ஸைக்கான உபசாரங்களையும் பத்தியங்களையும் தொடர்ந்துபயோகிக்க வேண்டும். (7) சிதைவுற்ற வயிற்றிலிருந்து மேதோவர்த்தி என்கிற மூளை வெளிப்பட்டால், திறமையுள்ள வைத்தியன் அதன்மேல் மிருதுவான சாம்பலையாவது, மண்ணையாவது, மூலிகைச் சூர்ணங்களையாவது தூவி, அல்லது கஷாயங்களாலாவது கழுவி, நூலால் அதைச் சமமாகவும் திடமாகவும் கட்டி, நெருப்பிற் காய்ச்சிய கூர்மையான சஸ்திரத்தினால் ஒரே அறுப்பாக அறுத்துப் போடவேண்டும்; வேறுவிதமாக அறுத்தால் வலியும், வயிற்றில் விசேஷ ஆரவாரமும் உண்டாம் அல்லது மரணமாவது ஸம்பவிக்கும். பிறகு அந்த விரணத்தின்மேல் தேன் தடவி, பந்தநம் செய்தபிறகு, உணவு உட்கொண்டு அதுவும் நன்கு ஜீர்ணமான பிறகு சர்க்கரை, தும்மட்டிக்காய், அரக்கு, நெரிஞ்சில், அதிமதூரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தையாவது, பாலையாவது பருகினால் வலியும் அழற்சியும் தீரும். பிறகு முன்பு விரணத்திற்குக் கூறிய பொது சிகித்ஸையைச் செய்யவேண்டும். மேதோக்கிரந்திக்குக் கூறப்படும் தைலம் அப்யஞ்ஜநம் செய்ய அனுகூலமானது. 43—54.

ஸத்யோவிரணரோபணதைலம் :—தாளிசபத்திரி, கொட்டிச்சாந்து, ஜடாமாம்ஸி, அரேணுகம், அகில், சந்தனம், மஞ்சள், மரமஞ்சள், தாமரைமணி, வெட்டிவேர், அதிமதூரம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த தைலம் அடிதாக்குவதாலாகும் ஸகல ஸத்யோவிரணங்களையும் ஆற்றுவதற்குச் சிறந்த மருந்து.—55, 55½.

உள்காயங்களுக்குச் சிகித்ஸை :—(1) அடிதாக்கி, மேலே விரணமில்லாமல் உட்புறமாய் அடியேற்பட்டிருந்தாலும், மேடு பள்ளங்களிலிருந்து விழுந்து அவ்விதம் ஏற்பட்டிருந்தாலும் வாதஹரமாகவும், இரத்ததோஷஹரமாகவும் உள்ள உபசாரமும், தர்ப்பண சிகித்ஸையும், பிடித்தல் தேய்த்தல் அல்லது அப்யங்கம் செய்தல் ஆகிய முறைகளும் ஹிதமாம். (2) அவயவங்கள் பிறழ்தல், அவயவம் உளைவுறுதல், நசுங்கி க்ஷீணித்தல், மர்மங்கள் தாக்கப்படுதல் ஆகியவற்றால் வருந்துபவனுக்கு மாம்ஸரஸத்தைப் பருகக் கொடுத்துக்கொண்டு, தைலக்கொப்பரையில் அவனை அமர்ந்திருக்கச் செய்யவேண்டும்.—56, 57.

---

# இருபத்தேழாம் அத்தியாயம்.

## பங்கப் பிரதிஷேதம்.

இனி பங்கப் பிரதிஷேதம் என்னும்[1] அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

**பங்கம் இரண்டு விதம்** :—வீழ்தல் தாக்குதல் முதலிய காரணங்களால் எலும்புகள் ஸந்திபக்நம் என்றும்,[2] அஸந்திபக்நம் என்றும்[3] இரண்டு வகையில் சிதைவுறுவதுண்டு. அவற்றுள் (1) 'ஸந்திபக்நம்' என்கிற 'ஸந்திமோக்ஷம்' ஏற்பட்டால் அவ்வவயவத்தை நீட்டுவதிலும் முடக்குவதிலும் சக்தியிழக்கப்படும். (2) 'அஸந்திபக்நம்' என்கிற மற்றொரு வகையான சிதைவு ஏற்பட்டால் அவ்விடத்தில் பலமான வீக்கமும், எல்லா நிலைமைகளிலும் அதிக நோவும், சிறிது அசைப்பதற்கும் இயலாமற்போதலும், அழுத்தினால் நரநரவென்னும் சப்தமும் உண்டாம். எலும்பு நெகிழ்தல் அல்லது முறிதல் என்பதற்கு இது சுருக்கமான இலக்ஷணம். ஆனால் எலும்புக்கு ஏற்படும் சிதைவுகளின் வேறுபாடுகளை அனுஸரித்து, அவற்றின் இலக்ஷணங்களும் பல வகைப்படும். அவ்வனைத்துக்கும் உபயோகமுள்ள வகையில் பரிஹாரமுறை இனி விளக்கப்படும். 1—3.

**கஷ்டஸாத்யமான அஸ்த்தி பங்கங்கள்** :—எலும்பு அநேகம் சிறு சிறு துண்டுகளாக உடைந்தாலும், பரிசிக்கையில் நரநரவென்று சப்தம் பண்ணினாலும், உடைந்த சிறியதோர் அஸ்த்தி மற்றோர் அஸ்த்தியின் இடையிற் பிரவேசித்துவிட்டாலும், பலமான அடி தாக்கியதால் சற்றுக் குறைவாக முற்றிலும் உடைந்திருந்தாலும், அவயவத்தை எடுக்கும் போது விரணத்தைப்போல் கடும் வேதனை யுண்டுபண்ணினாலும், உடைந்த எலும்பு மஜ்ஜா என்கிற எலும்பின் நிணத்தில் அமிழ்ந்து போனாலும், மெலிந்தவன் - பலஹீனன் - வாததோஷம் அதிகரித்தவன் - மிகச் சொற்பமாகப் புஜிப்பவன் ஆகியவர்களுக்கு எலும்பு முறிந்தாலும் அவை கஷ்டஸாத்யமான அஸ்த்தி பங்கங்களாகும். 4—6.

**அஸாத்யமான அஸ்த்தி பங்கங்கள்** :—கமகபாலம் என்கிற இடுப்பெலும்பு உடைந்தாலும், பூட்டு விடுபட்டு எலும்புகள்

---

1. பங்கம் — அஸ்த்திபங்கம் — எலும்புகள் முறிவு அல்லது சிதைவு அடைதல்; அவ்வித எலும்பு முறிதல் நெகிழ்தல் முதலியவற்றிற்குப் பரிஹார முறைகளைக் கூறும் அத்தியாயம்.

2. ஸந்திபக்நம்—எலும்புப் பூட்டுகளில் ஏற்படும் சிதைவு அல்லது நெகிழ்ச்சி : இதுவே ஸந்திமோக்ஷம் எனப்படும்.

3. அஸந்திபக்நம்—பூட்டுகளில்லாத இடங்களில் எலும்பு மத்தியில் ஏற்படும் முறிவு.

தூர விலகிப்போனாலும், ப்ருஷ்டபாகத்து எலும்பு உடைந்து மிகவும் நொருங்கி யிருந்தாலும், சிரக்கபாலம் என்கிற மண்டையோடுகள் உடைந்து விலகிப்போனாலும், லலாடாஸ்த்தி யென்கிற நெற்றியெலும்பு பொடியாக உடைந்திருந்தாலும், சங்காஸ்த்தி யென்கிற கன்னத்தெலும்பு - மண்டையோடு - ப்ருஷ்டாஸ்த்தி யென்கிற முதுகெலும்பு - மார்பெலும்பு இவை உடைந்தாலும் சிகித்ஸைக்கு அவை வசப்படமாட்டா. மேலும் இட வேண்டிய கட்டு நன்றாக இடப்பட்டிருந்தகூட ஒடிந்த எலும்புகளை ஒன்றோடொன்று ஒழுங்கீனமாக இணைப்பதாலும், பந்தந வஸ்துக்களைத் தாறுமாறாக வைத்துக் கட்டுவதாலும், அசைந்து குலுங்குவதாலும் எலும்புகள் தாறுமாறாகச் சேர்ந்து விகாரமடைந்துவிட்டால் அதுவும் சரிப்படுத்த முடியாத அஸாத்ய பங்கமாகும். அல்லாமலும் அஸ்த்தியாவது அஸ்த்திஸந்தியாவது பிறவியிலேயே ஏதேனும் ஒழுங்கீனமாக ஏற்பட்டிருந்தால் அதுவும் அஸாத்யமாம். 7—9½.

**அஸ்த்திபேதங்களும் அவற்றின் சிதைவு வகைகளும்:—** "தருணாஸ்த்திகள்" என்கிற முருந்தெலும்புகள் வளையும்; "நளகாஸ்த்திகள்" என்கிற நீண்ட எலும்புகள் முறியும் அல்லது ஒடியும்; "கபாலாஸ்த்திகள்" என்கிற ஓடுகளுருவமான அகன்ற எலும்புகள் பிளவுறும்; மற்ற அஸ்த்திகள் எல்லாம்[1] பெரும்பாலும் நொறுங்கும் அல்லது உடையும்.—10½.

**சிதைவடைந்த எலும்புகளை ஒழுங்காய் அமைக்கும் முறைகள்:—** அஸ்த்தியானது அதன ஸ்த்தானத்திலிருந்து வளைந்து தாழ்ந்துவிட்டால் அதை உயர்த்தி அமர்த்த வேண்டும்; அதற்கு மாறாக அதன் ஸ்த்தானத்திலிருந்து மேலெழுந்து உயர்ந்து விட்டால் அதை அழுத்தித் தாழ்த்தி யமைக்க வேண்டும். அதன் ஸ்த்தானத்தை விட்டு மிகவும் இழுக்கப்பட்டுத் தூக்கிக் கொண்டிருந்தால் அதைப் பின்னுக்குத் தள்ளி அமைக்கவேண்டும். மிகவும் கீழே தொங்கிக் கொண்டிருந்தால் அதை மேலே தள்ளி அமைக்கவேண்டும். இவ்வாறாக முன்னுக்குப் பிறழ்ந்து வந்திருப்பதை உள்ளே தள்ளுவதாலும், விலகியிருப்பதை மெதுவாக அழுத்தி அமைப்பதாலும், தாழ்ந்து தொங்குவதை உயர்த்துவதாலும், சர்மத்தைப் போட்டு பந்தநமிடுவதாலும் ஆக இவ்வித உபாயங்களால் சரீரத்திலுள்ள அசையும் அல்லது அசையாத ஸகல எலும்புகளையும், ஸந்திகளையும் சரியாக அசையாதபடிச் சேர்த்து வைத்து, விசேஷமாக நெய் தடவிய வஸ்திரப் பட்டங்களால் ஸுகமாகச் சேர்த்துக்

1. மற்றவை எல்லாம் என்பதற்குப் பதிலாய் ருசகாஸ்த்திகள் என்று வேறு கிரந்தங்களிற் பாடம். (ருசகாஸ்த்திகள் — உருண்டையாய் அல்லது ஒழுங்கீனமான உருவமுள்ள சிறிய எலும்புகள்.)

கட்டி, பிறகு கடம்பு - அத்தி - அரசு - குக்கிலிய மரம் - மருத மரம் - பலாசு - மூங்கில் இவற்றிலிருந்து ஒழுங்கான பட்டைகளை மெல்லியவையாகவும் பெரியவையாகவும் எடுத்து, மிருதுவாகவும் வேண்டிய வகைகளில் மடிக்கக்கூடியவாறும் பதஞ் செய்து, அவற்றையும் வேறு மிருதுவான நார்களையும், தர்ப்பை முதலியவைகளையும் அந்த வஸ்திரப்பட்டங்களின் மேல் வைத்துச் சுற்றி, மேலே முறைப்படி ஸமபந்தநம் என்னும் முடிகள் இடவேண்டும். 11—15.

பந்தந முறைகள் :—(1) எல்லா பந்தந முறைகளிலும் ஸமபந்தநம் இடுவதுதான் முறை. (2) சிதிலபந்தநத்திலுல் எலும்புகளின் பூட்டுகளுக்குத் திடமான பிடிப்பு உண்டாவதில்லை. (3) காடபந்தநம் இடுவதினலோ அதிக வலியும், அதிக அழற்சியும், வேக்காடும், வீக்கமும் உண்டாய்விடும்.[1]—16½.

கட்டுகளை அவிழ்ப்பதில் காலநியமங்கள் :—(1) கிரீஷ்மம் என்கிற கோடை காலத்தில் பந்தநங்களை மூன்று நாட்களுக்கு ஒரு முறையும், (2) ஹேமந்தம் என்கிற குளிர்காலத்தில் ஏழு நாட்களுக்கு ஒரு முறையும், (3) ஸாதாரணகாலம் என்கிற சரத் ருது முதலியதில் ஐந்து நாட்களுக்கு ஒரு முறையும் பந்தநங்களை அவிழ்த்துக் கட்டலாம். (4) அல்லது எலும்புகளின் சிதைவுகளுடையவும் தோஷங்களுடையவும் நிலைமைகளை அனுஸரித்தாவது கட்டுகளை அவிழ்த்துக் கட்டும் காலநியமங்களை ஏற்படுத்திக் கொள்ளலாம்.—17¼.

அஸ்த்திபங்காதிகளில் ஔஷதாதிப் பிரயோகங்கள் :—(1) பிறகு நியக்ரோதாதிகணகஷாயத்தைக் குளிர்ச்சியாக பங்கமுண்டான இடத்தில் ஊற்றலாம். (2) அவ்விதம் ஒடிந்த இடம் வேதனையுண்டுபண்ணினால் அதன்மேல் பஞ்சமூலங்கள் சேர்த்துக் காய்ச்சிய பாலை ஊற்றலாம். (3) விஷயமறிந்த வைத்தியன் தேச காலங்களைப் பகுத்தறிந்து வாதஹரச் சரக்குகள் சேர்த்துப் பக்குவம் செய்த சக்ரதைலத்தையாவது இளஞ் சூடாக மேலே பூசலாம். (4) எப்பொழுதுமே ஸேசநௌஷதங்கள் என்கிற ஊற்றும் திரவௌஷதங்களையும், லேபங்களையும் மிகக் குளிர்ச்சியாகப் பிரயோகிக்கவேண்டும். (5) எலும்புமுறிவடைந்தவன் மதுரமான சரக்குகள் கூட்டிக் காய்ச்சிய க்ருஷ்டி க்ஷீரத்தை[2] நெய்யும் கொம்பரக்கும் கலந்து குளிரவைத்து நாள்தோறும் பெரும்பாலும் காலையிற் பருகிவரலாம். (6) எலும்பு முறிந்த இடத்தில் மேலே விரணம் ஏற்பட்டிருந்தால், தேன் நெய் இவற்றை அதிகமாகக் கூட்டிய கஷாயங்களை அதன்மேல் விடலாம். பிறகு

1. மூன்று விதமான காட-சிதில-ஸமபந்தநங்களைப் பற்றி முதற் பாகம் 274-ம் பக்கம் பார்க்க. (சிதிலம் என்பதே ச்லதபந்தநம்.)

2. க்ருக்ஷ்டி க்ஷீரம்—ஒரு முறை கன்று யீன்ற பசுவின் பால்.

ஸாதாரண அஸ்த்திபங்கத்திற்கு ஏற்ற முறையே அனுகூலமானது. (7) எலும்பொடிந்த இடங்களில் விரணங்களிலிருந்து தொங்கிக்கொண்டிருக்கும் சதைகளை வைத்தியன் தேனும் நெய்யும் தடவி மேலே எடுத்து ஒழுங்காய் அமைத்து, பந்தநங்களால் முறைப்படி அந்த விரணங்களைக் கட்ட வேண்டும். (8) அவ்விரணங்கள் ஸமமாகவும் ஒழுங்காகவும் அமைந்துவிட்டதாகத் தெரிந்துகொண்டு, ஞாழல், வெள்ளிலோத்தி, சிறுதேக்கு, மஞ்ஜிஷ்டி, காட்டாத்திப்பூ இவற்றைச் சூர்ணம் செய்து, அதன்மேல் தூவலாம்; அல்லது வெள்ளிலோத்தி, காட்டாத்திப்பூ இவ்விரண்டின் சூர்ணத்தையாவது மேலே தூவலாம்; அவ்விதம் செய்வதால் விரணங்கள் சீக்கிரம் ஆறிவிடும். இவ்விதமாக 'பங்கம்' என்கிற எலும்பு முறிவுக்குச் சிகித்ஸை செய்ய வேண்டும். 18—24¾

**அஸ்த்திபங்கங்களில் ஸாத்யாஸாத்யாதிகள்:**—(1) அஸ்த்திபங்கத்திற்காளானவன் திடமான தாதுக்களைப் பெற்றிருந்தாலும், அது ஹேமந்தருதுவாயிருந்தாலும், தேஹபுஷ்டியுடையவனானாலும், தோஷங்களிற் சேளாறு சொற்பமா யிருந்தாலும் அவ்வித அஸ்த்திபங்கம் எளிதில் சிகித்ஸிக்கக் கூடியதாம். (2) நிலைமைகள் அவற்றிற்கு மாறாக இருந்தால் கஷ்டஸாத்யமாக வேனும் அஸாத்யமாகவேனும் ஆகும்.—25½.

**ஸந்திபக்நத்தில் அஸ்த்திகள் ஒன்று சேருங் காலம்:**—இளம் வயதினருக்கும், நடுப் பிராயத்தினருக்கும், வயதில் முதிர்ந்தவர்களுக்கும், எலும்புப் பூட்டுகள் கழன்றிருந்தால், அவர்கள் முறை தவறாத சிகித்ஸையைப் பெற்றுவந்தால், முறையே ஒரு மாஸத்திலும், இரண்டு மாஸங்களிலும், மூன்று மாஸங்களிலும் அவை ஒன்று சேர்ந்து பலப்படும்.—26½.

**கபாடசயநம்:**—இடுப்பிலும், முழங்காலுக்குக் கீழேயும், துடையிலும் உள்ள எலும்பு ஏதாவது முறிந்தால், அதில் 'கபாடசயநம்' என்கிற பந்தநமுறை ஏற்றதாம். இதில் படுத்த நிலைமையில் உள்ள பிணியாளிக்குப் பந்தநமிடுவதற்குப் படுக்கும் பலகையில் நெடுகவும் ஐந்து கீலங்கள் நடவேண்டும்; இதில் முழங்காலுக்குக் கீழே காலைச்சேர்த்துக் கட்டுவதற்கு ஒன்றும், துடையண்டை ஒன்றும், விலாப்பக்கங்களில் ஒவ்வொன்றுக்கு ஒன்றாக இரண்டும், பாதத்தில் ஒன்றுமாக ஐந்து முளைகள். மேலும் இடுப்பில் எலும்பு ஒடிந்திருந்தால் அதன் பக்கத்திலாவது ஒரு கீலம் என்னும் முளையை அமைத்துக் கட்டலாம். அவ்விதமே ப்ருஷ்ட வம்சம் என்கிற முதுகெலும்பு பிசகி யிருந்தால், அவ்விடத்திலாவது ஒன்று அமைக்கலாம்; அல்லது முகத்தெலும்பாவது, அக்ஷகாஸ்த்திகள் என்கிற தோளுக்கு அருகிலுள்ள எலும்புகளாவது முறிந்தால் அவற்றின் பக்கங்களிலாவது அவ்விதம் கீலங்கள்

அமைத்து பந்தநமிடலாம். சழன்று போன ஸந்திபாகங்களில் இட்ட கட்டுகளை அவிழ்க்கும்போதும் இவ்வித கபாடசயநம்[1] என்னும் முறையை உபயோகிக்கலாம். 27—29.

**நெடுநாட்களான ஸந்திமோக்ஷத்திற்குச் சிகித்ஸை :—** நெடு நாட்களுக்கு முன் விலகிப் போன ஸந்திகள் என்கிற எலும்புப் பூட்டுகளை வைத்தியர் ஸ்நேஹங்களையும் ஸ்வேதங்களையும் பிரயோகித்து மிருதுவாகச் செய்து, கூறியுள்ள முறைகளை அநுஸரித்தும் சமத புத்தியை யுபயோகித்தும் அததற்குற்ற ஸ்த்தாநங்களைக் கவனித்துக்கொண்டு அமைத்துவிட வேண்டும்.—30.

**அஸந்திபக்நமான எலும்பு சேர்ந்துவிட்டால் செய்யவேண்டிய பரிஹாரம் :—** பூட்டுகளில்லாத விடங்களில் எலும்பு ஒடிந்து, அப்பாகங்கள் ஒழுங்கீனமாக ஒன்றுகூடிவிட்டால் அப்பாகத்தை மீண்டும் உடைத்து, அப்பால் ஒழுங்காக இரு முனைகளையும் ஒன்று கூட்டி, பிறகு அஸ்த்திபங்கத்திற் கேற்ற சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—31

**அஸ்த்திபங்கத்திற்குப் பொது சிகித்ஸை :—** (1) முறிந்த எலும்பு அழன்று விரணங்களைப் போல் பக்குவமாகாமலிருக்குமாறு வைத்தியன் சிகித்ஸை விஷயத்திற் பெரிதும் முயலவேண்டும்; ஏனெனில் ஒடிந்த பாகத்தில் மாம்ஸமும், ஸிரைகளும், ஸ்நாயுக்களும், ஸந்திபாகங்களும் அழன்று கொதித்துப் போனால் முறிந்த எலும்புகள் ஒன்று கூடமாட்டா. (2) மேலும் வாதவியாதிகளுக்குக் கூறியுள்ள ஸ்நேஹ சிகித்ஸையையும் அஸ்த்திபங்கத்தில் நான்கு வகைகளிலும் உபயோகிக்கலாம்[2]. பலத்தை விருத்திபண்ணக் கூடிய நான்கு காயசிகித்ஸா முறைகளையும், நிரூஹவஸ்தியையும் பிரயோகிக்கலாம்.—32, 33.

**அஸ்த்திபங்கங்களிற் பத்யங்கள் :—** (1) எலும்புகள் முறிந்தும் ஸந்திகள் கழன்றுமுள்ள பிணியாளிக்குத் தேஹவாட்டம் அல்லது களைப்பு ஏற்படுவது நல்லதல்ல; ஆகவே சம்பா அரிசியினாலான அன்னம், நெய், மாம்ஸரஸம், பால் முதலிய தேகபுஷ்டிக்கு அநுகூலமான வயிற்றிற் காந்தலுண்டாக்காத உணவுகளை எலும்புப்பூட்டுகள் ஒன்று கூடுவதற்கு உபயோகமானவைகளாய் அளவறிந்து கொடுக்கவேண்டும்: (2) உப்பு, காரம், க்ஷாரம், புளிப்பு, புணர்ச்சி, வெயில், வியாயாமம் என்கிற தேஹவுழைப்பு,

---

1. கபாட சயநம்—சுமார் ஆறு அடி நீளமுள்ள கபாடம் போன்ற பலகையைக் கீழே அமர்த்தி, அதில் எலும்பொடிந்தவனை நிமிர்ந்து படுக்கச் செய்து, பாதத்தண்டை ஒன்றும், முழங்காலுக்குக் கீழே ஒன்றும், தொடையின் பக்கத்தில் ஒன்றும், இரண்டு விலாப் பக்கங்களில் இரண்டுமாக ஐந்து முளைகளைக் கபாடத்தில் அமைத்து, அம் முளைகளில் பிணியாளியைச் சேர்த்து அசையாது பந்தநமிடும் முறை.

2. இவ்விஷயமாய் 231-ம் பக்கம் பார்க்க.

கீ

இரண்டாம் பாகம்.

# அஷ்டாங்க ஹ்ருதயம்

காய சிகித்ஸை - சஸ்திர சிகித்ஸைகளைத்

தொகுத்து விளக்கும்

பிராசீன ஆயுர்வேத பிரமாண நூல்.

இரண்டாம் பாகம்.

# அஷ்டாங்க ஹ்ருதயம்

காய சிகித்ஸை - சஸ்திர சிகித்ஸைகளைத்

தொகுத்து விளக்கும்

பிராசீன ஆயுர்வேத பிரமாண நூல்.

# ASHTANGA HRIDAYA

**A Compendium of Ayurvedic System of Medicine based on the works belonging to both Atreya and Dhanvantari Schools**

OF

ACHARYA VAGBHATA

**Translated from Sanskrit Original into Tamil with Notes, Introduction, Index, etc**

BY


AYURVEDA BHUSHAN

Pandit M. DURAISWAMI AIYANGAR, A. V. S.

Ayurvedacharya

Diplomaed Ayurvedic Medical Practitioner, Ex-Senior Physician S. K. P. D. Ayurvedic Hospital, Ex-Lecturer, Madras Ayurvedic College, Vice-President, The All-India Ayurveda Maha Mandal and Vidyapitha, Examiner, The All-India Ayurveda Vidya-Pitha and Madras Government School of Indian Medicine, Examiner, Oriental Title Examinations, Madras University, Translator of Sarngadhara Samhita, Madhava Nidanam, Rasaratna Samuchchaya etc. into Tamil, etc., etc.


**Chikitsa-Kalpa-Uttara Sthanams**

VOL. II

**Revised 2nd Edition**


MADRAS :

THE VAIDYA KALANIDHI OFFICE

1935

# அஷ்டாங்க ஹ்ருதயம்

ஆசார்ய வாக்படருடைய
பிராசீன ஸம்ஸ்க்ருத வைத்தியக் கிரந்தத்தின்
தமிழ் மொழிபெயர்ப்பு.

டிப்ளோமா என்னும் அதிகாரப்பத்திரம் பெற்ற ஆயுர்வேத சிகித்ஸகரும்,
எஸ். கே. பி. டி. ஆஸ்பத்திரியில் தலைமை வைத்தியராயிருந்தவரும்,
சென்னை ஆயுர்வேத கலாசாலையில் போதகாசிரியரா யிருந்தவரும்,
சென்னை கவர்ன்மெண்டு இந்திய வைத்தியக் கல்லூரி பரீக்ஷகரும்,
சென்னை யூனிவர்ஸிடி ஆயுர்வேத சிரோமணி பரீக்ஷகரும்,
எல்லா இந்திய ஆயுர்வேத மஹாமண்டல-வித்யாபீடங்களின்
உபாக்ராஸனாதிபதியும், "சார்ங்கதர ஸம்ஹிதை", "மாதவ நிதானம்",
"இரஸரத்தின ஸமுச்சயம்" முதலிய பிரபல ஸம்ஸ்க்ருத
வைத்தியக்கிரந்தங்களை மொழிபெயர்த்தவரும், காதம்பரி-மேகஸந்தேசம்,
சாகுந்தளம் முதலிய ஸம்ஸ்க்ருத காவ்யங்களை மொழிபெயர்த்தவருமான
வைத்திய ரத்ன
ஆயுர்வேத பூஷணம்

**பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார்,** எ. வி. எஸ்.

ஆயுர்வேதாசார்ய
அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டது.

மேற்படியார் இயற்றிய
டிப்பணி, முகவுரை, ஸம்பூர்ணமான விஷய அகராதி
முதலியவை அடங்கியது.

சிகித்ஸா - கல்ப - உத்தர ஸ்த்தாநங்கள்.

## இரண்டாம் பாகம்.

சீர்திருத்திய இரண்டாம் பதிப்பு.

---

சென்னை:
வைத்திய கலாநிதி ஆபீஸ்,
வேப்பேரி.
1935

# FOREWORD

[By Māhāmahopādhyāya, Vidyāvācaspati, Darsanakalānidhi, Kulapati, Professor S. Kuppuswami Sastri, M.A., I.E.S. Presidency College, Madras.]

In compliance with the desire of my learned friend Āyurvedabhūṣaṇa Āyurvedācārya Pandit M Duraiswami Aiyangar A. V. S., I have much pleasure in writing this short foreword to his Tamil rendering of the famous Āyurvedic treatise called the Aṣṭāngahṛdaya by Acārya Vāgbhaṭa.

The Hindu scheme of life attaches as much importance to the welfare of body as to the due performance of dharma. "शरीरमाद्यं खलु धर्मसाधनम्"—so says Kālidāsa. This explains why the ancient medical science of India is raised to the rank of a Veda and is called the Āyur-veda. The ancient Āyurvedic literature is medico-chirurgical in its character. This two-fold character of the ancient Āyurveda is reflected in the two Ayur-vedic traditions associated with the names of the two Ayur-vedic seers—Ātreya and Dhanvantari. The distinctive feature of the Ātreya tradition is its therapeutic stress and that of the Dhanvantari tradition is its chirurgical stress. All the essential elements of the Atreya therapeutics have been clearly and fully expounded in an authoritative manner by Ācārya Vāgbhaṭa in his Aṣṭāṅgahṛdaya. This great classic of Āyurveda has been rendered into Tamil prose for the first time by Pandit M. Duraiswami Aiyangar. The first part of this Tamil rendering, comprising the Sūtra, Śārīra and Nidāna sthānas, was published in 1918, as the first volume; and the second volume of this Tamil rendering, containing the Cikitsa, Kalpa and Uttara sthānas, is now published

Pandit M. Duraiswami Aiyangar is known well for his proficiency in Sanskrit Sāhitya and he is an able Ayurvedic scholar and practitioner of high standing in the Ayurvedic profession. He has built up a well-deserved reputation as an able Tamil translator of literary and

# FOREWORD

[By Mahāmahopādhyāya, Vidyāvācaspati, Darsanakalānidhi, Kulapati, Professor S. Kuppuswami Sastri, M.A., I.E.S. Presidency College, Madras.]

In compliance with the desire of my learned friend Āyurveda bhūṣaṇa Āyurvedācārya Pandit M Duraiswami Aiyangar A. V. S., I have much pleasure in writing this short foreword to his Tamil rendering of the famous Āyurvedic treatise called the Aṣṭāngahṛdaya by Acārya Vāgbhaṭa.

The Hindu scheme of life attaches as much importance to the welfare of body as to the due performance of dharma. "शरीरमाद्यं खलु धर्मसाधनम्"—so says Kālidāsa. This explains why the ancient medical science of India is raised to the rank of a Veda and is called the Āyur-veda. The ancient Āyurvedic literature is medico-chirurgical in its character. This two-fold character of the ancient Āyurveda is reflected in the two Ayur-vedic traditions associated with the names of the two Ayur-vedic seers—Ātreya and Dhanvantari. The distinctive feature of the Ātreya tradition is its therapeutic stress and that of the Dhanvantari tradition is its chirurgical stress. All the essential elements of the Atreya therapeutics have been clearly and fully expounded in an authoritative manner by Ācārya Vāgbhaṭa in his Aṣṭāṅgahṛdaya. This great classic of Āyurveda has been rendered into Tamil prose for the first time by Pandit M. Duraiswami Aiyangar. The first part of this Tamil rendering, comprising the Sūtra, Śārīra and Nidāna sthānas, was published in 1918, as the first volume; and the second volume of this Tamil rendering, containing the Cikitsa, Kalpa and Uttara sthānas, is now published

Pandit M. Duraiswami Aiyangar is known well for his proficiency in Sanskrit Sāhitya and he is an able Ayurvedic scholar and practitioner of high standing in the Ayurvedic profession. He has built up a well-deserved reputation as an able Tamil translator of literary and

scientific Sanskrit works, such as the Kādambarīsaṁgrah Śārṅgadhara saṁhitā and Aṣṭāṅgahṛdaya. His Tam contributions in the periodical called the Vaidyakalānidh bear ample testimony to his great capacity for expoundin lucidly, in Tamil, several technical topics of the Āyurvedi system. His Tamil translation of the Aṣṭāṅgahṛdaya i eminently readable and very faithful to the origina Sanskrit text. In publishing his able and accurat renderings in Tamil of great Āyurvedic classics, he ha done an invaluable service to the cause of Āyurveda i South India and has made also a contribution of grea merit to the scientific literature in Tamil prose. Th copious notes which he has added to his works are sure t enhance their value in a large measure.

In his critical introduction to the first volume of hi Tamil translation of the Aṣṭāṅgahṛdaya, Mr M. Durai swami Aiyangar maintains by an able course of reasoning that Vāgbhaṭa himself is the author of the three Āyurvedic works—Aṣṭāṅgasaṅgraha, Aṣṭāṅgahṛdaya and Rasaratna-samuccaya, that he is a Buddhist writer on Āyurveda, who flourished long before the eleventh century A.D., that he is different from the Ālaṁkarika known by the name of Vāgbhaṭa; and that the Aṣṭāṅgahṛdaya should be recog-nised as one of the best works dealing mainly with the therapeutics of the Ātreya tradition, though a few of the chirurgical features of the Dhanvantari tradition are also noticed briefly in that work.

Pandit M. Duraiswami Aiyangar's literary activities, with special reference to the propagation of the know-ledge of Āyurveda through the medium of Tamil, deserve a very liberal encouragement at the hands of the Univer-sities in the *Tamil Nadu* and of all the patrons and lovers of *Ayurveda*.

5, North Mada St.,
Mylapore,
*27th March, 1935.*

S. KUPPUSWAMI SASTRI.

# பொருளடக்கம்



## சிகித்ஸா ஸ்த்தாநம்.

(பக்கங்கள் 1—235.)



## கல்ப ஸ்த்தாநம்.

(பக்கங்கள் 236—273.)

## உத்தர ஸ்த்தானம்.

(பக்கங்கள் 274—542.)

# இரண்டாம் பாக முன்னுரை.

அஷ்டாங்க ஹ்ருதயத்தின் ஸூத்திர-சாரீர-நிதாந ஸ்த்தா
நங்கள் மொழி பெயர்க்கப்பட்டு, அப் பகுதி இக் கிரந்தத்தின்
முதற் பாகமாக 1918-ல் முதலில் வெளியிடப் பட்டதும், பிறகு
மற்ற மூன்று ஸ்த்தாநங்களின் மொழி பெயர்ப்பையும் முற்றி
லும் வெளியிட வெகு முயற்சி செய்தும், திரவியச் செலவு
தாங்க வியலாததாய் விடவே, அவ்வெண்ணம் கை கூடாமற்
போக, சிகித்ஸா-கல்பங்கள் ஆகிய இரண்டு ஸ்த்தாநங்களின்
மொழி பெயர்ப்பு மாத்திரம் முற்று பெறுத இரண்டாம் பாக
மாக 1920-இல் அச்சிட்டுப் பிரசுரிக்கப் பட்டதும் தமிழ் மக்க
ளுக்குத் தெரிந்த விஷயமே. அந்திமத்திலுள்ள அருமையான
உத்தர ஸ்த்தாநம் உருவத்திலும் உபயோகத்திலும் உண்மையிற்
பெரிது; அதை முன்னமே மொழி பெயர்த்து வெளியிட யான்
பட்ட அரும்பாடு, பொருட் செலவின் பாரம் தாங்க வியலாம
லிருந்தது பற்றி இதுகாறும் ஈடேறும விருந்து வந்தது. ஆகி
லும் ஆதி வைத்திய நூல்களுள் சிறப்புற்ற இவ்வரிய கிரந்தத்தை
முற்றிலும் மொழி பெயர்த்து வெளியிட எனக்கிருந்த ஊக்கம்
அநேக இடையூறுகளுக் கிடையில் சிறிதும் சிதறவில்லை யாகை
யால், இவ்வளவு நீண்ட காலங் கடந்தேனும் இதைப் பூர்த்தி
செய்யும் ஆற்றல் என்றனுக் குண்டாயிற்று.

உத்தர ஸ்த்தாநத்தை மொழி பெயர்த்து வெளியிட யான்
ஊக்கங் கொண்டிருந்தும், அதற்கிடையில் ஆதியிற் பதிப்பித்த
அம்மொழி பெயர்ப்பின் சொற்ப பிரதிகளும் முற்று பெறுத
இரண்டாம் பாகமுட்பட முற்றிலும் செலவாய் விடவே, உத்தர
ஸ்த்தாநத்தைத் தனிப்பட பிரசுரிக்கும் நோக்கத்தை நிறுத்திக்
கொண்டு, அஷ்டாங்க ஹ்ருதயத்தை ஆரம்ப முதலே அவசிய
மான சீர்திருத்தங்களுடன் இரண்டா முறை அச்சிட வேண்டிய
அவசிய மேற்பட்டு விட்டது. எங்ஙனமோ பணச் செலவுக்கும்
பிறருதவி யின்றியே ஸூத்திர-சாரீர-நிதாந ஸ்த்தாநங்கள் ஆகிய
மூன்று ஸ்த்தாநங்களையும் முன்போலவே முதற் பாகமாகச்
செய்து, அவசியமான சீர்திருத்தங்களுடன் 1931 - டிசம்பரில்
வெளியிட்டதோடு பொருட் செலவு விஷயத்திற் பெரிதும்
சோர்வுற்றேன். முதலிற் பதிப்பித்த சிகித்ஸா-கல்ப ஸ்த்தாநங்
களைச் சீர்திருத்தவும், நீண்ட நாற்பது அத்தியாயங்க ளடங்கிய
உத்தர ஸ்த்தாநத்தை வழக்கப்படி அநேகம் வியாக்யாநாதிக
ளுடையவும் நிகண்டு முதலியவற்றினுடையவும் உதவிகளைக்
கொண்டு மொழி பெயர்த்து முடிக்கவும் எடுத்துக்கொண்ட சிர

மத்தைப் பெரிதாக யான் கருதவில்லை யென்றாலும், இம் மூன்று ஸ்த்தானங்களையும் சேர்த்து இரண்டாம் பாகமாக அச்சிட்டுப் பிரசுரிப்பதற்கான பொருட் செலவு என்றனை மிகத் திணறச் செய்தும், இம் முறை எங்ஙனமேனும் இவ்வரிய நூலை வெளியிட்டே ஆகவேண்டு மென்று வீம்புடன் முயல, என் சக்தியை மீறி ஆவேசம்போல் எனதுள்ளத்தில் உதித்த உத்ஸாஹமே உண்மையில் எவ்வகையிலும் உயர்வு பெற்ற இந்நூலை இவ்விதம் அச்சிட்டு முடிக்க முகாந்தரமாயிற்று.

ஸம்ஸ்க்ருதத்தில் இந்நூலை இயற்றிய ஆசார்ய வாக்படர், தம் பெயருக்கேற்ப வடமொழியில் வாக்கியங்களையும் பத்தியங்களையும் இயற்றுவதில் இணையற்றவரென்று இவரது அஷ்டாங்கஸங்கிரஹத்தையும், அஷ்டாங்கஹ்ருதயத்தையும்* படிக்கும் பண்டிதர் அனைவரும் பாராட்டுவார்கள். வைத்திய சாஸ்திர விஷயத்திலோ அவரது வல்லமை இன்னும் இணையற்றது. ஆகவே அவர் அக்னிவேசர் முதலியவர்களுடைய காய சிகித்ஸாப் பிரதானமான சரகாதி ஸம்ஹிதைகளையும், தன்வந்தரி முதலானோருடைய சஸ்திர சிகித்ஸாப் பிரதானமான ஸுச்ருதாதி ஸம்ஹிதைகளையும் ஸம்ஸ்கார முறையிற் கசடறக் கடைந்தெடுத்து ஆதியில் அஷ்டாங்க ஸங்கிரஹம் இயற்றி, அதுவும் பெரிதும் விரிந்துவிட்டதாகக் கருதி வைத்தியத் துறையில் வெகு எளிதில் இறங்க அனைவருக்கும் அனுகூலம் செய்ய விரும்பி அருள்புரிந்து அஷ்டாங்கஹ்ருதயம் இயற்றினார்.† மேலும் ஆத்ரேயாதி முனிவர்களுடைய அபிப்பிராயங்கள் அபௌருஷேயமான பிரமாணங்களை ஆதாரமாகக் கொண்டவையென்று நன்குணர்ந்து, அம் முனிவர்களது கொள்கைகளையே அவலம்பித்து நூல் இயற்றுவதாகப் பிரமாணம் செய்து கொண்டு, ஒவ்வொரு ஸ்த்தானத்தின் ஆரம்பத்திலும் அவர் அதை வற்புறுத்தி வருவதை நோக்குங்கால்,‡ ஆயுர்வேதத்தை அரை குறையாகக்கூட அறிய வகையில்லாத இக் காலத்திய நவ்ய நாகரிகர் என்கிற சிலர் அச்சாஸ்திரத்திற் குறை கூறவும், பிரமாண சாஸ்திரமாக அதை மதிக்காமல் மனம் போனபடி ஏதோ ஒருவாறு வைத்திய முறையை நிகழ்த்தவும் துணிந்திருப்பதைக்

---

* வாக்படர் அஷ்டாங்காவதாரம் என்கிற மற்றொரு கிரந்தமும் இயற்றி யிருப்பதாகத் தெரிகிறது. (அஷ்டாங்க ஹ்ருதயம் சிகித்ஸா ஸ்த்தானம், ச்வயது சிகித்ஸையில் "ததா ஜாங்கலஜை: கூர்ம" என்கிற 18-ம் ச்லோகத்திற்கு அருணதத்த வியாக்யானம் பார்க்க.)

† உத்தரஸ்த்தானம் 40-ம் அத்தியாயம் 83-ம் ச்லோக மொழிபெயர்ப்பைப் பார்க்க.

‡ "ஆத்திரேயர் முதலிய மஹருஷிகள் இங்ஙனம் மொழிந்தருளினர்" என்று ஒவ்வொரு ஸ்த்தானத்தின் ஆரம்பத்திலும் தவறாமல் குறிப்பிடப்பட்டிருப்பது கவனிக்கத் தகுந்தது.

கண்டு விஷயமுணர்ந்த வைத்திய வித்வான் எவரும் வருந்தாமலிருக்கமுடியாது. வாக்படர் முனிவர்களுடைய மொழிகளையே தன்னூலுக்குப் பிரமாணங்களாகக் கொண்டு முற்றிலும் அவற்றைப் பின்பற்றினாரெனினும், அவ் விஷயங்களைச் சுகுமார மதிகளான இக் காலத்திய மனிதருடைய அனுகூலத்தைக் கருதி அஷ்டாங்கங்கள் என்கிற எட்டுப் பிரிவுகளாகப் பகுத்து, அப் பகுதிகள் அனைத்தையும் ஒழுங்காய் ஒருங்கே அமைத்து, அஷ்டாங்க ஹ்ருதயத்தை இயற்றி உலகத்திற்குதவவேண்டு மென்பது இவ்வாசிரியரின் கொள்கை. * அவ்விதம் வாக்படர் இந் நூலின் ஆரம்பத்திற் குறிப்பிட்டுள்ளபடியே இக் கிரந்தத்தில் அவ்வெட்டு அங்கங்களையும் அடியிற் குறிப்பிட்டிருக்கிற பிரகரணங்களில் விவரித்திருப்பதைப் படித்துப் பார்க்கலாம்.

## அஷ்டாங்கங்கள் அடங்கிய அத்தியாயங்கள்

1. காய சிகித்ஸை :— ஸூத்திர ஸ்தாநத்திலுள்ள ஸ்நேஹ விதி, ஸ்வேத விதி, வமந-விரேசந விதி, வஸ்தி விதி, நஸ்ய விதி, தூமபாந விதி, கண்டூஷாதி விதி, ஆச்சியோதாஞ்ஜந விதி, தர்ப்பண புடபாக விதி ஆகிய ஒன்பது அத்தியாயங்களும் காய சிகித்ஸைக்கு அவசியமான பல வேறு உபாயங்களையும், சிகித்ஸா-கல்ப ஸ்தாநங்களிலுள்ள எல்லா அத்தியாயங்களும் அவ் வுபாயங்களைக் கொண்டு பிரயோகிக்க வேண்டிய அநேக வகை ஔஷத முறைகளையும் விவரிக்கின்றன. ஸூத்திர ஸ்தாநத்தில் திரவ்யாதி விஞ்ஞாநீயம்-தோஷாதி விஞ்ஞாநீயம்-த்விவிதோபக்ரமணீயம்-சோதநாதிகணஸங்கிரஹம் - தோஷோபக்ரமணீயம் உட்பட 14 அத்தியாயங்களும், சிகித்ஸா ஸ்தாநத்தின் 22 அத்தியாயங்களும், கல்ப ஸ்தாநத்தின் 5 அத்தியாயங்களும் ஆக 41 அத்தியாயங்கள் காய சிகித்ஸையை விளக்கும் பாகமாம்.

2. பால சிகித்ஸை :—பாலோபசரணீயம் அல்லது கௌமாரப்ருத்யம் என்னும் விஷயமும் இதில் அடங்கியது. உத்தர ஸ்தாநத்தில் உள்ள பாலோபசரணீயம், பாலாமயப் பிரதிஷேதம், பாலக் கிரஹப் பிரதிஷேதம் என்கிற மூன்று அத்தியாயங்களில் இவ்விஷயம் விவரிக்கப் படுகிறது.

3. கிரஹ சிகித்ஸை :—இதுவே பூத தந்திரம் எனப்படும். உந்மாதமும் இதில் ஒருவாறு அடங்கி யுள்ளது. உத்தர ஸ்தாநத்திலுள்ள பாலக் கிரஹப் பிரதிஷேதம், பூத விஞ்ஞாநீயம், பூதப் பிரதிஷேதம், உந்மாதப் பிரதிஷேதம் ஆகிய அத்தியாயங்களில் விவரிக்கப் படும் விஷயங்கள் இதற்குச் சம்பந்தப்பட்டவை.

---

* அஷ்டாங்கஹ்ருதயம்-முதற்பாகம் 2-ம் பக்கம் பார்க்க.

இங்கு உந்மாதப் பிரதிஷேதம், அபஸ்மாரப் பிரதிஷேதம் என்கிற விஷயங்கள் ஊர்த்வாங்க வியாதிகளையும், அவற்றின் சிகித்ஸைகளையும் கூறும் பிரகரணமாகவும் கருதப் படுகின்றன. (ஊர்த்வாங்கத்தில் ஏற்படும் வியாதிகளுக்குக் காய சிகித்ஸா முறையிற் செய்யப்படும் பரிஹாரம் மாத்திரம் இதற்குச் சம்பந்தப்பட்டதாகும். அவற்றிற்குச் சம்பந்தமான சஸ்திர சிகித்ஸா முறை சாலாக்யம் எனப்படும்.)

4. **ஊர்த்வாங்க சிகித்ஸை :—** நாசி - நேத்திரம் - செவி - தொண்டை முதலியவற்றில் உள்ள சல்யங்கள் அல்லது ரோகங்கள் முதலியவற்றிற்குச் சலாகைகளைப் பிரயோகித்து சிகித்ஸிக்க வேண்டி யிருப்பதால் இம் முறைக்குப் பொதுவாக சாலாக்ய சிகித்ஸை யென்றும், தோளுக்கு மேற்பட்ட அவயவங்களைப் பற்றிய சிகித்ஸையாகையால் ஐத்ரூர்த்வ சிகித்ஸை யென்றும் பெயருண்டு. இதில் நேத்திர ரோகங்கள், நாஸா ரோகங்கள், கர்ண ரோகங்கள், ஆஸ்ய-கள ரோகங்கள் முதலியவற்றிற்கு அவசியமான சிகித்ஸைகள் அடங்கும். இவ் விஷயங்களைப் பற்றிய அத்தியாயங்களாவன :—வர்த்மரோக விஞ்ஞாநம், வர்த்மரோகப் பிரதிஷேதம், ஸந்தி-ஸிதாஸிதரோக விஞ்ஞாநம், ஸந்தி-ஸிதாஸிதப் பிரதிஷேதம், திருஷ்டி ரோக விஞ்ஞாநம், திமிரப் பிரதிஷேதம், லிங்கநாசப் பிரதிஷேதம், ஸர்வாக்ஷி ரோக விஞ்ஞாநம், ஸர்வாக்ஷி ரோகப் பிரதிஷேதம் ஆகிய ஒன்பது அத்தியாயங்கள் **நேத்திரசிகித்ஸையையும்,** கர்ண ரோக விஞ்ஞாநம், கர்ண ரோகப் பிரதிஷேதம் ஆகிய இரண்டும் **கர்ண ரோகங்களின் சிகித்ஸையையும்,** நாஸா ரோக விஞ்ஞாநம், நாஸா ரோகப் பிரதிஷேதம் இவ்விரண்டும் **நாஸா ரோக சிகித்ஸையையும்,** முகரோக விஞ்ஞாநம், முக ரோகப் பிரதிஷேதம் இவ்விரண்டும் **வாயிலுண்டாகும் வியாதிகளின்** சிகித்ஸையையும், சிரோரோக விஞ்ஞாநம், சிரோ ரோகப் பிரதிஷேதம் இவை **சிரோரோக** சிகித்ஸையையும் பற்றி இயற்றப் பட்டவை. ஆக இப் பதினேழு அத்தியாயங்கள் ஊர்த்வாங்க சிகித்ஸைக்கு ஸம்பந்தப்பட்ட பாகம்.

5. **சல்ய சிகித்ஸை :—** சஸ்திர சிகித்ஸை யென்றும் விரண சிகித்ஸை யென்றும் இது வழங்கப்படும். சாரீரஸ்த்தாநம் பொதுவாகவும், அதிலடங்கிய மர்ம விபாக சாரீரம் விசேஷமாகவும் சஸ்திர சிகித்ஸைக்கு அங்கமாக அவசியம் அறிய வேண்டிய சரீர தத்துவ விஷயங்களை விளக்குவதால், அதிலுள்ள முதல் நான்கு அத்தியாயங்களும் சஸ்திர சிகித்ஸைக்குச் சம்பந்தமான பாகமாகவே கருதப்படுகின்றன. ஸூத்திர ஸ்த்தாநத்தில் உள்ள யந்திரவிதி, சஸ்திரவிதி, ஸிராவ்யதவிதி, சல்யாஹரணவிதி, சஸ்திர கர்மவிதி, க்ஷாராக்னி கர்மவிதி என்கிற ஆறு அத்தியாயங்களும், பிறகு உத்தர ஸ்த்தாநத்தில் விரண விஞ்ஞாநப் பிரதிஷே

தம், ஸத்யோ விரணப் பிரதிஷேதம், பங்கப் பிரதிஷேதம், பகந்தரப் பிரதிஷேதம் முதலிய அத்தியாயங்களும் சல்ய சிகித்ஸை யென்கிற விரண சிகித்ஸைக்காக இயற்றப்பட்ட பாகமாகும்.

6. **விஷ சிகித்ஸை :—** இதுவே அகத சிகித்ஸை அல்லது அகத தந்திரம் எனப்படும். இவ் விஷயமாக விஷப் பிரதிஷேதம், ஸர்ப்ப விஷப் பிரதிஷேதம், கீட-லூதாதி விஷப் பிரதிஷேதம், மூஷிகாளர்க்க விஷப் பிரதிஷேதம் என்கிற உத்தர ஸ்த்தாநத்து நான்கு அத்தியாயங்களும் விஷசிகித்ஸை அல்லது தம்ஷ்ட்ரா சிகித்ஸையை விளக்கும் பாகமாம்.

7. **ஜரா சிகித்ஸை :—** கிழத்தனத்திலும் வாலிபனுக்கு ஏற்ற சரீர மனோபலங்களைப் பெற்று திடசரீரியாய் வாழக்கூடிய சிகித்ஸோபாயங்களை விளக்கும் இப்பிரகரணம் **இரஸாயந சிகித்ஸை** என்று வழங்கப்படுகிறது. இவ் விஷயத்திற்காக இரஸாயநவிதி என்கிற உத்தரஸ்த்தாநத்தின் முப்பத்தொன்பதாம் அத்தியாயம் ஏற்பட்டது.

8. **வாஜீகரண சிகித்ஸை :—** இதுவே விருஷ்யம் எனப்படுகிறது. இவ் விஷயம் உத்தரஸ்தாநத்தின் இறுதியில் வாஜீகரணாத்தியாயத்தில் விஸ்தாரமாக விவரிக்கப்படுகிறது.

ஆசார்ய வாக்படர் இவ்விதம் ஆயுர்வேதத்தின் அஷ்டாங்கங்கள் என்கிற அகில அம்சங்களையும் அக்னிவேச-ஸுச்ருதாதி முனிவர்களுடைய அரும் பெரும் பிரமாண நூல்களிலிருந்து ஒழுங்காகத் தொகுத்து ஒருங்கே உலகத்தினரின் நன்மையைக் கருதி இயற்றிருக்கும் வகையைக் கருத்துடன் நோக்கும் விவேகிகள் இக் கிரந்தத்தின் பெருமையையும், ஆதிகாலத்திய அவ்வாசிரியருடைய திறமையையும் மனமாறப் புகழ்வரென்பது திண்ணம். இவற்றுள் ஆயுர்வேத சாஸ்திரத்திற்கு இன்றியமையாத அடிப்படையெனக் கூடிய ஆரோக்கியமார்க்கோபதேசகமான விஷயங்களும், மற்றும் பலவேறு சிகித்ஸா முறைகளுக்கு அவசியமான அம்சங்களும் அடங்கிய ஸூத்திரஸ்த்தாநத்தை ஆதி பாகமாகவும், மிகப் பிரபலமான வியாதிகள் - அவற்றிற்கான மிகச் சிறந்த சிகித்ஸைகள் ஆகியவற்றின் விவரணங்களடங்கிய உத்தமமான உத்தர ஸ்த்தாநத்தை அந்திமபாகமாகவும் அமைத்து, இக் கிரந்தத்தை மற்ற வைத்தியக் கிரந்தங்களினும் உயர்ந்ததாக இவ்வாசிரியர் செய்துள்ளார்.

## ஸூத்ரஸ்த்தாநத்தில்

எட்டு அங்கங்களுக்கும் உபாங்கங்கள் எனத்தகும் வேறு அநேக விஷயங்கள் அடியில் பகுத்துக் கூறியுள்ளவாறு முப்பது அத்தியாயங்களில் விளக்கப்பட்டிருக்கின்றன.

**1. ஸ்வஸ்த்தவ்ருத்தம் :** அல்லது ஆரோக்கிய பரிபாலன முறையை விளக்கும் அத்தியாயங்களுள் ஆயுஷ்காமீயம், தின சர்யை, ருதுசர்யை, ரோகாநுத்பாதநீயம், அங்கஸ்வரூப விஞ்ஞா நீயம், அங்கரக்ஷை, மாத்திராசிதீயம் என்கிற ஆறு அத்தியா யங்கள் முக்கியமானவை.

**2. திரவ்யகுணம்:** அல்லது பதார்த்த விஞ்ஞாநம் என்னும் விஷயத்தை திரவத்திரவ்ய விஞ்ஞாநீயம், அங்கஸ்வரூப விஞ்ஞா நீயம், திரவ்யாதி விஞ்ஞாநீயம், இரஸபேதீயம், சோதநாதி கண ஸங்கிரஹம் என்கிற ஐந்து அத்தியாயங்கள் விளக்குகின்றன.

**3. த்ரிதோஷங்களும் அவற்றின் ஏற்றத்தாழ்வாலாகும் பலன் களும் பரிஹாரங்களும :** ஆயுர்வேதத்திலேயே மிகப் பிரதான மாயுள்ள இவ்விஷயமாய் தோஷாதி விஞ்ஞாநீயம், தோஷபேதீ யம், தோஷோபக்ரமணீயம், த்வி-விதோபக்ரமணீயம் என்னும் நான்கு அத்தியாயங்கள் இயற்றப்பட்டுள்ளன.

**4. சிகித்ஸா முறைகள் :** தோஷங்களுடைய சய-ப் பிர கோப-க்ஷயங்களால் உண்டாகும் கோளாறுகளுக்குச் செய்ய வேண்டிய பல வேறு பரிஹாரமுறைகளை விளக்கும் முக்கியமான 'காய சிகித்ஸை' எனப்படும் இவ் விஷயமாய் தோஷோபக்ரமணீ யம், த்வி-விதோபக்ரமணீயம், ஸ்நேஹவிதி, ஸ்வேதவிதி, வமந-விரேசநவிதி, வஸ்திவிதி, நஸ்யவிதி, தூமபாநவிதி, கண்டூஷாதிவிதி, ஆச்சியோதாஞ்ஜநவிதி, தர்ப்பண-புடபாகவிதி என்னும் பதினோர் அத்தியாயங்கள் இந்த ஸ்த்தாநத்தில் ஏற் பட்டிருக்கின்றன.

**5. சல்ய சிகித்ஸை:** என்கிற சஸ்திர சிகித்ஸையைப்பற்றிய அத்தியாயங்கள் யந்திரவிதி, சஸ்திரவிதி, ஸிராவ்யதவிதி, சல்யா ஹரணவிதி, சஸ்திரகர்மவிதி, க்ஷாராக்னிகர்மவிதி என்பனவாம். இந்த காயசிகித்ஸை - சஸ்திர சிகித்ஸைகளில் - ஔஷதமுறை முதலியவை யல்லாமல், வெவ்வேறு காரணங்களால் ஏற்படும் கோளாறுகளைப் பரிஹரிப்பதற்கான பலவித உபாயங்கள் மாத் திரம் விளக்கப்படுகின்றன.

## உத்தரஸ்தாநத்தில்

முற்கூறிய அஷ்டாங்கங்களில் அடங்கிய விஷயங்களே வேறு வகையில் வகுக்கப்பட்டு அடியில் வரும் **விசேஷ சிகித்ஸைகள்** என்னும் முறையில் விவரித்துரைக்கப்பட்டுள்ளன :—

**1. கௌமாரப்ருத்யம்** :— பாலோபசரணீயம், பாலாமயப் பிரதிஷேதம், பாலக்கிரஹப்ரதிஷேதம் என்னும் அத்தியாயங்கள்.

2. **பூததந்திரம்** :—பூதவிஞ்ஞாநம், பூதப்பிரதிஷேதம் என்கிற அத்தியாயங்கள்.

3. **மாநஸரோகம்** :—உந்மாதப் பிரதிஷேதம், அபஸ்மாரப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயங்கள்.

4. **சாலக்யம்** அல்லது ஊர்த்வஜத்ருரோக பரிஹார முறை : இதில் **நேத்திரரோக விஷயம்** வர்த்மரோக விஞ்ஞாநீயம், வர்த்மரோகப் பிரதிஷேதம், ஸந்தி - ஸிதாஸிதரோக விஞ்ஞாநீயம், ஸந்தி - ஸிதாஸிதப் பிரதிஷேதம், திருஷ்டி ரோக விஞ்ஞாநம், திமிரப்பிரதிஷேதம், லிங்கநாசப்பிரதிஷேதம், ஸர்வாக்ஷிரோகவிஞ்ஞாநீயம், ஸர்வாக்ஷிரோகப் பிரதிஷேதம் என்கிற ஒன்பது அத்தியாயங்களிலும், **கர்ண ரோக விஷயம்** கர்ண ரோக விஞ்ஞாநீயம், கர்ண ரோகப் பிரதிஷேதம் என்னும் இரண்டு அத்தியாயங்களிலும், **நாஸா ரோக விஷயம்** நாஸா ரோக விஞ்ஞாநீயம், நாஸா ரோகப் பிரதிஷேதம் என்கிற இரண்டு அத்தியாயங்களிலும், வாயைப் பற்றிய **முக ரோக விஷயம்** முகரோக விஞ்ஞாநீயம், முக ரோகப் பிரதிஷேதம் என்னும் இரண்டு அத்தியாயங்களிலும், **சிரோ ரோக விஷயம்** சிரோ ரோக விஞ்ஞாநீயம், சிரோரோகப் பிரதிஷேதம் என்னும் இரண்டு அத்தியாயங்களிலும் ஆகப் பதினேழு அத்தியாயங்களில் ஜத்ரூர்த்வ ரோகங்களையும் அவற்றிற்கான சாலாக்ய சிகித்ஸா முறைகளையும் படித்தறியலாம்.

5. **விரண சிகித்ஸை** விஷயமாக விரண விஞ்ஞாநீயப் பிரதிஷேதம், ஸத்யோ விரணப் பிரதிஷேதம், பங்கப் பிரதிஷேதம், பகந்தரப் பிரதிஷேதம், கிரந்த்யர்புத-ச்லீபதாதி விஞ்ஞாநீயம், கிரந்த்யர்புதாதிப் பிரதிஷேதம் என்கிற ஆறு அத்தியாயங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன.

6. **க்ஷுத்ர ரோகங்கள்** விஷயமாய் க்ஷுத்ர ரோக விஞ்ஞாநீயம், க்ஷுத்ர ரோகப் பிரதிஷேதம், குஹ்யரோகவிஞ்ஞாநீயம், குஹ்ய ரோகப் பிரதிஷேதம் என்னும் நான்கு அத்தியாயங்கள் அமைந்திருக்கின்றன.

7. **அகத தந்திரம்** :—விஷப் பிரதிஷேதம், ஸர்ப்ப விஷப் பிரதிஷேதம், கீட-லூதாதி விஷப் பிரதிஷேதம், மூஷிகாளார்க்க விஷப் பிரதிஷேதம் என்கிற நான்கு அத்தியாயங்கள் விஷப் பற்றுலான கோளாறு முதலிய விஷயத்தை விளக்குகின்றன.

8. **இரஸாயந தந்திரம்** என்னும் விஷயமாய் இரஸாயநாத்தியாயம் என்று பிரத்தியேகமாய் ஓர் அத்தியாயம் இயற்றப்பட்டுள்ளது.

9. **வாஜீகரண தந்திரம் :—** இவ் விஷயமாகக் கடைசியி லுள்ள வாஜீகரணுத்தியாயம் ஏற்பட் டிருக்கிறது.

ஆகவே உத்தர ஸ்த்தாநம் மற்ற ஐந்து ஸ்த்தாநங்களிலும் மொழியப் படாது விடப்பட்டுள்ள ஸகல விசேஷ வைத்திய விஷயங்களைப் பற்றிய சாஸ்த்ரீய அம்சங்களை இவ்வாறு விவரிப் பதற்காக இயற்றப்பட்ட முக்கியமான பாகமாகும். இடையி லுள்ள மற்ற நான்கு ஸ்த்தாநங்களில் ஒவ்வொன்றும் — சாரீர ஸ்த்தாநம் சரீர தத்துவத்தையும், நிதாநஸ்த்தாநம் ரோகநிதாநங் களையும், சிகித்ஸாஸ்த்தாநம் வியாதிகளின் பரிஹார முறைகளை யும், கல்பஸ்த்தாநம் முக்கியமான ஔஷத கல்பங்களையும் குறிப் பாக விவரிப்பதால், அவை அந்தந்த விஷயத்திற்குத் தனித் தனியே ஏற்பட்ட பிரத்தியேக பாகமென்பதாக விளங்கத் தெரிய வரும். ஆகவே ஆயுர்வேத சாஸ்த்திரத்திற்கு அடிப்படையான அகில விஷயங்களையும் தொகுத்துக் கூறும் சிகித்ஸா சாஸ்திரத் தின் பொதுவான தத்துவங்களை ஸூத்திரஸ்த்தாநம் என்று ஆதியிலும், மற்ற நான்கு ஸ்த்தாநங்களிலும் கூருத மிகுந்த விசேஷ விஷயங்களை உத்தரஸ்த்தாநம் என்று முடிவிலும் விளக்கி, அஷ்டாங்க வைத்தியத்தை அங்கோபாங்கங்களோடு அமைத்து, இவ்வாசிரியர் இந்நூலுக்குத் தான் இட்ட பெயரை முற்றிலும் பொருளுள்ளதாகச் செய்திருக்கிருர். ஆகவே இக் கிரந்தம் ஆயுர்வேதம் கற்பவருக்கும், அதில் விசேஷப் பிரவ்ருத்தி யுள்ளவருக்கும் அதிக உபயோகமான நூலா யிருக்குமென்று, இம்மொழி பெயர்ப்பைப் படிக்கும் விவேகிகளுக்குப் புலப்படா மற் போகாது.

**வைத்திய கலாநிதி ஆபீஸ்,**
சென்னை,
1934ஆ டிசம்பர்மீ 5உ.

**மேல்பாக்கம்**
**துரைஸ்வாமி ஐயங்கார்.**

ஸ்ரீ

# அஷ்டாங்க ஹ்ருதயம்.

## சிகித்ஸா ஸ்த்தாநம்.

---

### முதல் அத்தியாயம்.

### ஜ்வர சிகித்ஸை.

இனி ஜ்வர சிகித்ஸை[1] என்னும் அத்தியாயம் இதனடியில் விவரிக்கப் படுகின்றது. ஆத்ரேயர் முதலிய மஹருஷிகள் இங்ஙனம் கூறுகின்றனர்:—

**ஜ்வரத்தில் லங்கநம் செய்விக்கும் நிலைமை**:—தோஷமானது[2] ஆமவிகாரங்களுடன் கூடி, ஆமாசயமென்னும் இரைப்பையில் தங்கியிருந்து, ஜாடராக்னியை அழித்து, ஸ்ரோதோ மார்க்கங்களையும்[3] அடைந்து, ஜ்வரத்தை உண்டுபண்ணுவதாலே, ஜ்வரத்தின் பூர்வரூபங்கள்[4] தோன்றுகையிலேயே அல்லது ஜ்வரம் ஆரம்பிக்கும்போதே பெருமுயற்சியோடு உடல் வன்மைக்குக் கெடுதி நேரிடாவண்ணம் லங்கநம்[5] செய்விக்க வேண்டும்; ஏனெனில் ஆரோக்கியமானது தேஹவன்மையை ஆதாரமாயுடையது; சிகித்ஸையோ ஆரோக்கியத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்றது. லங்கநங்களால் முற்கூறிய தோஷம் போக்கடிக்கப்பட்டு, ஜாடராக்னியும் உத்தீபநம் செய்யப்பட்டு, தேஹம் இலகுவாக ஆய்விடுமானால் அப்பொழுது வியாதி நிவாரணமாகும். பசியும், நாவறட்சியும், நாக்கில் நற்சுவையும், ஜீர்ணசக்தியும், தேஹவன்மையும், ஓஜோ[6] விருத்தியும் ஏற்படும். 1—3.

---

1. அநேக வகையான ஜ்வரங்களில் செய்யவேண்டிய பலவிதமான சிகித்ஸாமுறைகளை விவரிக்கும் அத்தியாயம்.

2. ஜ்வரத்தை உண்டுபண்ணுவதற்கு ஆதாரமான வாதம் முதலிய தோஷம்; அல்லது ஜ்வரத்திற்கு மூலகாரணமான விஷப்பொருள்.

3. ஸ்ரோதோ மார்க்கங்கள்—குதம், மூத்திரமார்க்கம், வியர்வை வெளிவரும் மயிர்க்கால்கள் முதலியவை.

4. பூர்வரூபங்கள்—நிதாநஸ்த்தாநம் பார்க்க.

5. லங்கநம்—உபவாஸம்; அல்லது பட்டினி இருத்தல்.

6. ஓஜஸ்—அஷ்டாங்க ஹ்ருதயம் முதற் புஸ்தகம் பார்க்க.

ஸ்ரீ

# அஷ்டாங்க ஹ்ருதயம்.

## சிகித்ஸா ஸ்த்தாநம்.

---

### முதல் அத்தியாயம்.

### ஜ்வர சிகித்ஸை.

இனி ஜ்வர சிகித்ஸை[1] என்னும் அத்தியாயம் இதனடியில் விவரிக்கப் படுகின்றது. ஆத்ரேயர் முதலிய மஹருஷிகள் இங்ஙனம் கூறுகின்றனர்:—

ஜ்வரத்தில் லங்கநம் செய்விக்கும் நிலைமை :—தோஷமானது[2] ஆமவிகாரங்களுடன் கூடி, ஆமாசயமென்னும் இரைப்பையில் தங்கியிருந்து, ஜாடராக்னியை அழித்து, ஸ்ரோதோமார்க்கங்களையும்[3] அடைந்து, ஜ்வரத்தை உண்டுபண்ணுவதாலே, ஜ்வரத்தின் பூர்வரூபங்கள்[4] தோன்றுகையிலேயே அல்லது ஜ்வரம் ஆரம்பிக்கும்போதே பெருமுயற்சியோடு உடல் வன்மைக்குக் கெடுதி நேரிடாவண்ணம் லங்கநம்[5] செய்விக்க வேண்டும்; ஏனெனில் ஆரோக்கியமானது தேஹவன்மையை ஆதாரமாயுடையது ; சிகித்ஸையோ ஆரோக்கியத்தின் பொருட்டுச் செய்யப்படுகின்றது. லங்கநங்களால் முற்கூறிய தோஷம் போக்கடிக்கப்பட்டு, ஜாடராக்னியும் உத்தீபநம் செய்யப்பட்டு, தேஹம் இலகுவாக ஆய்விடுமானால் அப்பொழுது வியாதி நிவாரணமாகும். பசியும், நாவறட்சியும், நாக்கில் நற்சுவையும், ஜீர்ணசக்தியும், தேஹவன்மையும், ஓஜோ[6] விருத்தியும் ஏற்படும். 1—3.

---

1. அநேக வகையான ஜ்வரங்களில் செய்யவேண்டிய பலவிதமான சிகித்ஸாமுறைகளை விவரிக்கும் அத்தியாயம்.

2. ஜ்வரத்தை உண்டுபண்ணுவதற்கு ஆதாரமான வாதம் முதலிய தோஷம் ; அல்லது ஜ்வரத்திற்கு மூலகாரணமான விஷப்பொருள்.

3. ஸ்ரோதோ மார்க்கங்கள்—குதம், மூத்திரமார்க்கம், வியர்வை வெளிவரும் மயிர்க்கால்கள் முதலியவை.

4. பூர்வரூபங்கள்—நிதாநஸ்த்தாநம் பார்க்க.

5. லங்கநம்—உபவாஸம் ; அல்லது பட்டினி இருத்தல்.

6. ஓஜஸ்—அஷ்டாங்க ஹ்ருதயம் முதற் புஸ்தகம் பார்க்க.

ஜ்வரத்தில் வமநம் செய்விக்கும் நிலைமைகள் :—ஜ்வரத்திற்குக் காரணமான அத்தோஷம் மிக்க அதிகரித்திருக்கையிலும், விசேஷமாய் கபத்துடன் கூடிய தோஷம்[1] தன் ஸ்த்தாநத்திலிருந்து குத்தித் தூண்டப்பட்டு இடம் விட்டுப் பெயர்ந்திருக்கையிலும் இருதயத்துடிப்பு, வாயில் உமிழ்நீர்க் கசிதல், அன்னத்வேஷம், இருமல், விஷூசியென்னும் வாந்திபேதி இவ் விகாரங்கள் தோன்றியிருக்கையிலும், உணவை யுட்கொண்டதும் ஜ்வரம் ஸம்பவித்திருக்கையிலும், விசேஷமாய் ஜ்வரம் ஆமதோஷத்துடன் கூடியிருக்கையிலும் வமநம் செய்விக்கத் தகுந்தவனுக்கு[2] அதைச் செய்விப்பது நலம். அவ்விதமின்றி நியமம் தவறி வமநம் செய்வித்தால், ச்வாஸம் அதிகரித்தல், அதிஸாரம், மூர்ச்சை, இருதயத்தைப்பற்றிய வியாதிகள், விஷமஜ்வரங்கள் இவை உண்டாகும்.—4, 5½.

ஜ்வரத்தில் வமநம் செய்வதற்கான சரக்குகள் :—மருக்காரை யென்னும் மதநபலத்தைத் திப்பிலியோடாவது, வெட்பாலரிசியோடாவது, அதிமதுரத்துடனாவது கலந்து உட்கொண்டு வாந்தி செய்யலாம்; அல்லது தேன் கலந்த வெந்நீரையாவது, உப்புக்கரைத்த வெந்நீரையாவது மருக்காரைக்கு அநுபானமாய் உட்கொண்டு வாந்தி செய்யலாம்; பேய்ப்புடல், வேப்பிலை, பேய்ச்சுரை, பிரம்பு, இலவங்கப்பத்திரி இவற்றைக் கஷாயமிட்டு, அத்துடனாவது மருக்காரையைக் கலந்து உட்கொண்டு வமநம் செய்யலாம்; திருப்தியுண்டாகுமாறு கருப்பஞ்சாற்றை உட்கொண்டும், மதுவகைகளோடும் மதநபலத்தைப் புஜித்தாவது வமநம் செய்யலாம்; கல்பஸ்த்தாநத்திற் கூறப்படுகிற வமநமுறைகளையாவது பிரயோகிக்கலாம். பிணியாளியினுடைய சரீரபலம் முதலியவற்றையும், கால விசேஷங்களின் தன்மைகளையும் பகுத்தறிந்து வமநசிகித்ஸையைச் செய்யவேண்டும். 6—8.

ஜ்வரத்தில் லங்கநம் அவசியம் :—வமநம் செய்வித்தாலும் செய்விக்காவிடினும் மேற்கிளம்பி விருத்தியாயுள்ள தோஷங்களைப் பக்குவம் செய்து ஆம விகாரமில்லாமற் செய்வதற்காகவும், சமநம் செய்வதற்காகவும் ஜ்வரமுள்ளவன் லங்கநம் கிடக்க வேண்டுவது அவசியம். மேலே சாம்பர் கவிந்து மறைந்துள்ள நெருப்பினால் அன்னம் சமைக்கப்படமாட்டாது போலவே, ஆமதோஷத்தினால் மறைக்கப்பெற்ற ஜாடராக்னியினால் உணவானது நன்கு பக்குவம் செய்யப்படமாட்டாது. ஆகையால் ஜ்வரத்

1. கபத்துடன் கூடிய தோஷம் என்பதால் வாதம் அல்லது பித்தம் குறிக்கப்படுகின்றது.

2. வமநத்திற்கு ஏற்றவர்களைப் பற்றி ஸூத்திர ஸ்த்தாநத்தில் வமந-விரேசநவிதி அத்தியாயத்தில் விவரங்கள் காண்க.

திற்குக் காரணமான தோஷங்கள் நன்கு பக்குவமாய் சமநமடையும் வரையில் ஜ்வரமுள்ளவர்களுக்கு லங்கநம் செய்விக்க வேண்டும்.—9, 10.

**வாத-கபஜ்வரத்தில் உஷ்ணஜலபாநம் :**—வாத-கபங்களால் உண்டான ஜ்வரத்தில் நாவறட்சி யுண்டாயிருந்தால் வெந்நீரைச் சொற்பமாயும் அடிக்கடியும் பருகிவரலாம். அவ்வுஷ்ண நீரானது உறைந்துள்ள கபத்தைக் கரைத்து நாவறட்சியையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்கின்றது; ஜாடராக்னியை உத்தீபநம் செய்யும்; ஸ்ரோதஸ்ஸுகளை ம்ருதுவாக்கி சுத்தம் செய்யும்; ஆங்காங்கு அடைந்துள்ள பித்தம், வாயு, வியர்வைநீர், மலம், மூத்திரம் இவற்றை ஒழுங்காக வெளிப்படுத்தும்; அதிக நித்திரையையும் திமிர்ப்பையும் அரோசகத்தையும் அகற்றும்; உயிருக்கும் ஆதாரமாகும். [1]இந்த நிலைமையில் குளிர்ந்த நீரைப் பருகுவது நேர் விபரீதமான துர்க்குணங்களை யுண்டுபண்ணுவதோடு, ஸந்நிபாத தோஷங்களையும் விருத்தி செய்யும். 11—13.

**ஜ்வரத்தில் உஷ்ணஜலம் உபயோகிக்கத் தகாத நிலைமைகள் :**—முற்கூறிய குணங்கள் உஷ்ணஜலத்திற்கு இருந்தும் பித்தத்தினாலேயே ஸம்பவிக்கும் ஜ்வரத்திலும், பித்ததோஷம் அதிகரித்துண்டான ஜ்வரத்திலும் உபயோகிக்கக் கூடாது; ஜ்வரத்துடன் கண் முதலிய குறிப்பிட்ட சில அவயவங்களைப்பற்றி அழற்சி யுண்டாகும் போதும், உஷ்ணம் சரீரம் அனைத்தையும் பற்றி யுண்டாகும் போதும், மூர்ச்சையிலும், அதிஸாரத்திலும், விஷத்தால் அல்லது மதுபானத்தினால் ஜ்வரம் உண்டாகும் போதும், க்ரீஷ்மருதுவிலும், உரக்ஷதத்திலும், க்ஷயத்திலும், இரத்த பித்தத்திலும் உஷ்ணஜலம் உட்கொள்ளக்கூடாது.—14, 14½.

**பித்தஜ்வரம் முதலியவற்றில் உட்கோள்ளத் தகுந்த குடிநீர் :**—அவ்வாறு பித்தம் அதிகரித்துண்டான ஜ்வரத்தினால் வருந்துபவர்களுக்கும், மற்றும் முற்கூறிய நிலைமைகளைப் பெற்றவர்களுக்கும் அடியிற் கூறப்படும் குடிநீர்[2] ஹிதமானது :—

1. உஷ்ண ஜலத்தின் குணங்களைச் சொல்லி வாத-கபஜ்வரத்தின் நாவறட்சி முதலிய குறிகளும் இங்கு விவரிக்கப்பட்டுள்ளன.

2 **குடிநீரைப் பக்குவம் செய்வதற்கான விதி** :—ஜலத்திற் சேர்க்கவேண்டிய வஸ்துக்கள் கால் பலமானால், பதினாறுபலம் (அல்லது 64-பங்கு) சுத்த ஜலம் சேர்த்து, அதை அரைப் பங்கு வற்றிப் போகுமாறு காய்ச்சி யெடுத்துக்கொள்ளவும். இங்கே கோரைக்கிழங்கு முதலிய ஒவ்வொரு வஸ்துவும் ¼ பலம் சேர்த்தால், ஜலம் மொத்தத்தில் 16-பலம் அல்லது 64-பங்கு சேர்த்து, 8-பலமாகக் காய்ச்சி யெடுக்கவேண்டும். பரிபாஷைப்படி இதற்குப் **பாநீயம்** எனப் பெயர்.

கோரைக்கிழங்கு, இரத்தசந்தனம், சுக்கு, விளாமிச்சைவேர், பர்ப்பாடகம், வெட்டிவேர் இவற்றைச் சேர்த்துக் குடிநீர் பக்குவம் செய்து, ஆற்றிக் குளிரச்செய்து உட்கொள்ள ஆமதோஷம் பக்குவமாய், நாவறட்சியும் ஜ்வரமும் தீரும்.—15½.

ஜ்வரத்தில் பரிஹரிக்க வேண்டியவை :—பித்த ஸம்பந்தமில்லாமல் உஷ்ணம் உண்டாவதில்லை; உஷ்ணமில்லாமல் ஜ்வரமும் கிடையாது. ஆகையால் பித்தத்திற்கு விரோதமானவற்றை ஜ்வரத்தில் விலக்கவேண்டும்; பித்தம் உபரியாயுள்ள ஜ்வரத்தில் அவற்றை விசேஷமாய் விலக்கவேண்டும். ஸ்நாநம், அப்யஞ்ஜநம், சந்தனப்பூச்சு, லங்கநத்தைத் தவிர்த்த சோதநசிகித்ஸைகள் ஆகியவற்றையும் ஜ்வரத்தில் விலக்கவேண்டும்.[2]—16, 17.

ஆமஜ்வரத்தில் ஔஷதமுபயோகிக்கக் கூடாது :—அதிக வேதனையுண்டுபண்ணும் ஆமாஜீர்ணத்தில் சூலஹரமான ஔஷதம் உட்கொள்வது போல், விசேஷ வேதனையுண்டுபண்ணுவதான ஆமதோஷத்துடன் கூடிய ஜ்வரத்தில் அத்தகைய ஔஷதம் உபயோகிக்கக் கூடாது; ஏனெனில் ஆமதோஷத்தினால் வருந்தும் குடலில் அவ்வௌஷதமானது இன்னும் அதிகமாய் ஆமதோஷத்தையே விருத்தி செய்யும்; அது ஸர்ப்பத்திற்கு இட்ட பாலைப்போல் விஷத்தன்மையடையும்—18, 18½

ஜ்வரத்தில் ஸ்வேதசிகித்ஸை செய்யக்கூடிய நிலைமைகள் :—உதர்தம்,[3] பீநஸம், ச்வாஸம் இவைகளோடு கூடியதும், கால், விலாப்பக்கங்கள், அஸ்திகள் இவற்றில் வலி யுண்டுபண்ணுவதும், வாத கபங்களால் ஸம்பவிப்பதுமான ஜ்வரத்தில் ஸ்வேதசிகித்ஸை[4] செய்வது உத்தமம்; அச்சிகித்ஸை வியர்

---

1. எல்லா ஜ்வரத்திலும் பொதுவாகவே பித்தத்தின் ஸம்பந்தமுண்டு; ஏனெனில் பித்தமின்றி உஷ்ணம் அதிகரிக்காது. ஆகவே அதின்றி ஜ்வரமும் உண்டாகாது. பித்த ஜ்வரத்திலோ பித்த தோஷம் மிகுதியாயிருக்கும். பித்தத்திற்கு விரோதமாக அதைத் தணிக்கக்கூடிய சிகித்ஸை ஜ்வரத்தில் அவசியமாயிருக்க, பித்தத்திற்கு விரோதமானவற்றை விலக்கவேண்டுமென்பதற்குக் காரணம் "ஜ்வரே துல்யர்துதோஷத்வம் ஸாகஸாத்யம்" என்பதை யோசித்து இங்ஙனம் கூறப்பட்டதென்க, "ஜ்வரே பித்தாவிருத்தாநி **" என்கிற பாடத்தைக் கைக்கொண்டு—பித்தத்திற்கு விரோதமில்லாதவற்றை—என்றால் பித்தத்திற்கு அனுகூலமானவற்றை—விலக்கவும் என்று சிலர் கூறுகின்றனர்.

2. ஜ்வரத்தில் சோதநசிகித்ஸை கூடாதென்பது ஸாமாந்ய விதி; ஆம ஜ்வராதிகளில் வமநம் முதலிய சோதநசிகித்ஸை செய்யவேண்டுமென்பது விசேஷ விதியாம்.

3. உதர்தம்—முதற் புஸ்தகம் பார்க்க.

4. ஸ்வேத சிகித்ஸை—ஸூத்திர ஸ்த்தாநத்தில் ஸ்வேதவிதி அத்தியாயத்தைப் பார்க்க.

வையையும் மூத்திரத்தையும் மலத்தையும் அபாநவாயுவையும் தாராளமாக வெளிப்படுத்துவதோடு ஜாடராக்னியையும் தூண்டி விருத்தி செய்யும்.—19, 20.

ஜ்வரத்தில் பத்தியமுறை :—ஸ்நேஹவிதி அத்தியாயத்திற் கூறப்பட்டுள்ள பத்தியம் முதலிய உபசார முறையையும் முற்றிலும் இச்சிகித்ஸையில் பின்பற்றலாம்.[1]—20½

ஜ்வரத்தில் லங்கநாதி பாசந சிகித்ஸைகள் :—ஸ்வேத சிகித்ஸை, காலம்,[2] யவாகூ முதலிய கஞ்சியினங்களை யுபயோகித்தல், கசப்பான கஷாயஸேவனை என்னும் இவை ஆம ஜ்வரத்தில் மலங்களைப் பக்குவம் செய்யு மியல்புடையவை; இவற்றை ஜ்வரத்தின் அந்தந்த நிலைமைகளுக்கு ஏற்றவாறாகிலும் அல்லது முறையே ஒன்றன்பின் ஒன்றாகவாகிலும் பிரயோகிக்கலாம்.—21½.

லங்கநத்திற்குத் தகாத ஜ்வரங்களில் செய்யத்தகும் சிகித்ஸை :—வாததோஷத்தினால் மாத்திரம் ஸம்பவித்த ஜ்வரத்திலும், க்ஷய ஸம்பந்தமான ஜ்வரத்திலும், ஆகந்துஜ்வரத்திலும்,[3] நீடித்த நாட்களாகத் தொடர்ந்துவரும் ஜ்வரத்திலும் லங்கநம் செய்யக்கூடாது. வாதஜ்வரம் முதலிய ஜ்வரங்களில் கர்ஷணத்தை யுண்டுபண்ணாத[4] சமந சிகித்ஸையே அநுகூலமானது.—22½.

ஜ்வரத்தில் லங்கநம் நிறைவேறியதற்கும் நிறைவேறாததற்கும் குறிகள் :—அவற்றுள் ஆமதோஷத்துடன் கூடிய ஜ்வரத்திற்குள்ள[5] குறிகள் இருக்கும்வரையில் லங்கநம் நன்கு நிறைவேறவில்லை யென்று அறியவும். லங்கநம் நன்கு நிறைவேறியிருக்குமானால் த்விவிதோபக்ரமணீயாத்தியாயத்திற் கூறியுள்ள குறிகளைக் காணலாம்.—23½.

ஜ்வரத்தில் பேயாக்களை உபயோகிக்கும் காலம் :—லங்கநம் செய்ததற்கான குறிகளோடு கூடியவனை பேயா என்கிற கஞ்சியினங்களால் உபசரிக்க வேண்டும்; அந்தந்த ஜ்வரத்தின் தன்மைக்கேற்ற ஔஷதங்களைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட மண்டம்[6] என்கிற பேயாவை முதலிற் கொடுக்க ஆரம்பித்து, பிறகு வேறுவிதமான பேயாக்களைக் கொடுக்கவேண்டும். இவ்

---

1. ஸ்நேஹவிதி—ஸூத்திரஸ்த்தாநம் பார்க்க.

2. காலம்—ஆமஜ்வரத்தில் தோஷங்கள் பக்குவமாவதற்கு ஆறு அல்லது ஏழு நாட்கள் செல்லும்.

3. ஆகந்து ஜ்வரம்—முதற் புஸ்தகம் பார்க்க.

4. கர்ஷணம்—கர்சநம். முதற் புஸ்தகம் பார்க்க.

5. ஆமதோஷத்துடன் கூடிய ஜ்வரம்; இதுவே ஸாம ஜ்வரம் எனப்படும்; முதற் புஸ்தகம் பார்க்க.

6. மண்டம் — முதற் புஸ்தகம் பார்க்க.

விதம் பேயாக்களை யுட்கொண்டு வருபவனுக்கு, விறகுகளால் அக்னி மிக்க மேலெழுந்து எரிவதுபோல, ஜாடராக்னி உத்தீபநமாய் விருத்தி யடைகின்றது. ஆறு நாட்கள் வரையிலுமாவது அல்லது ஜ்வரம் குறைந்து பிணியாளிக்கு லாகவம் உண்டாகும் வரையிலுமாவது பேயாக்களை யுபயோகித்து வரவேண்டும்.—24, 25½.

ஜ்வரத்தில் அந்தந்த நிலைமைகளுக்கேற்ற பலவித பேயாக்கள் :—(1) சுக்கு, கொத்துமல்லிவிதை, திப்பிலி, இந்துப்பு, இவை கலந்ததும் எளிதில் ஜீர்ணமாகக் கூடியதுமான நெற்பொரியினுலான பேயாவை முதலில் இப்பிணியாளி உட்கொள்ள வேண்டும்; புளிப்பை அபேக்ஷிக்கும் ஜ்வரரோகி மாதுளம்பழச் சாற்றையும் பேயாவிற் கலந்து உட்கொள்வது நலம். (2) தாராளமாய் மலவிஸர்க்கம் செய்யும் ஜ்வரரோகியும், அதிக பித்தத்தினுல் வருந்தும் ஜ்வர ரோகியும் சுக்கு, தேன் இவற்றைச் சேர்த்து பேயாவைப் பக்குவம் செய்து குளிரச் செய்து உட்கொள்ளலாம். (3) மூத்திர வஸ்தியிலும், விலாப்பக்கங்களிலும், சிரஸ்ஸிலும் வலியுள்ள ஜ்வரரோகி கண்டங்கத்திரி வேர் நெரிஞ்சில் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவைப் பருக வேண்டும். (4) சிறுமல்லிகை வேர், சிற்றுமுட்டி, பில்வவேர், சுக்கு, நைதல்வேர், கொத்துமல்லி விதை இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட பேயாவில் அம்லத்தையும்[1] கலந்து ஜ்வரத்துடன் அதிஸாரமுமுள்ளவன் உட்கொள்ளலாம்; இப்பேயா தீபநம் பாசநம் என்கிற இரண்டு சக்தியையும்[2] உடையது. (5) விக்கல், வலி, ச்வாஸம், காஸம் இவற்றுடன் கூடிய ஜ்வரத்தினுல் வருந்துபவன் இலகு பஞ்சமூலத்தினுல்[3] பக்குவம்செய்து பேயாவைப் பருகலாம்.[4] (6) கபதோஷத்தினுல் பீடிக்கப்படும் ஜ்வரரோகி மஹாபஞ்சமூலம்[5] சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட வாற்கோதுமையினுலான பேயாவை உபயோகிக்கலாம். (7) மலபந்தத்தோடு கூடிய ஜ்வரரோகி திப்பிலியையும் நெல்லிக்கனியையும் சேர்த்து வாற்கோதுமை மாவால் ஆகிய பேயாவை உட்கொள்ளலாம். (8) நெய் சேர்த்துத் தாளித்த யவாகூவை மலங்களும் மற்றுமுள்ள தோஷங்களும் நன்கு வெளியாவதற்

1. அம்லம்—தாடிமாம்லம் (மாதுளைச்சாறு).
2. தீபா-பாசநசக்திகள்—முதற்பாகம் பார்க்க.
3. இலகுபஞ்ச மூலம்—முதற்பாகம் பார்க்க.
4. இதுவரையில் கூறப்பட்டவை முதலிற் குறிப்பிட்ட லாஜ பேயா யென்கிற நெற்பொரிக்கஞ்சி; இதன் பிறகு கூறப்படுபவை வேறுவிதமான கஞ்சியினங்களாகும்.
5. மஹாபஞ்ச மூலம்—முதற்பாகம் பார்க்க.

காக உபயோகிக்கலாம். (9) குடலில் மலம் சிக்குண்டு விம்மிப் போவதனாலும் உடலெங்கும் வலியுண்டாவதனாலும் வருந்தும் ஜ்வரரோகி, சவ்யம், மோடி, திராக்ஷை, நெல்லிக்கனி, சுக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட பேயாவை உட்கொள்ளலாம். (10) குடலில் முக்கியமாய் குதத்தில் கத்தரிக்கப்படுவதுபோன்ற கடுப்பு வலியுண்டாயிருக்கையில், இலந்தம் புளி, புளி, சிறுமல்லிகைவேர், கண்டங்கத்திரி வேர், பில்வ வேர் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவை உபயோகிக்கலாம். (11) வியர்வையின்மையினாலும், தூக்கம் வராமையினாலும், நாவறட்சியினாலும் பீடிக்கப்படுபவர் சர்க்கரை, நெல்லிக்கனி, சுக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவைப் பருகலாம். (12) நாவறட்சியோடு வாந்தி அதிகரித்த ஜ்வரத்தில் சர்க்கரை, இலந்தம்பழம், திராக்ஷை, நன்னாரி வேர், கோரைக்கிழங்கு, சந்தனம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவில் தேனும் சேர்த்து உட்கொண்டால் வாந்தியும் தாபஜ்வரமும் தணியும். (13) முன்னால் பேயாவுக்குச் சேர்த்த ஔஷதச் சரக்குகளை யுபயோகித்தே மாம்ஸரஸம், யூஷம்[1] முதலியவற்றையும் பக்குவம் செய்யலாம். 26—34.

**ஜ்வராதிகளில் பேயாவை உபயோகிக்கத் தகாத நிலைமைகளும் பத்தியமான வேறு உணவுகளும் :—**(1) மதுபானத்தினால் உண்டான ஜ்வரத்திலும், மதுவை வழக்கமாய் பானம் செய்பவனுக்குண்டாகும் ஜ்வரத்திலும், கபம் பித்தஸ்த்தாநத்தை அடைந்திருக்கையிலும், க்ரீஷ்ம ருதுவிலும், பித்த கபங்கள் அதிகரித்திருக்கையிலும், நாவறட்சி, வாந்தி, அழற்சி இவற்றால் பீடிக்கப்படுகையிலும், உட்புற அவயவங்களிலிருந்து இரத்தம் மேல்நோக்கி வருகையிலும் பேயாவை உபயோகிக்கக்கூடாது. (2) பேயாவை யுபயோகிக்கத் தகாத அவ்வித நிலைமைகளில் ஜ்வரஹரகுணமுள்ள பழங்களின் சாறுகளோடாவது ஜலத்துடனாவது சர்க்கரை அல்லது தேன் கலந்த லாஜதர்ப்பணத்தை[2] உபயோகிக்கலாம்.—35, 36¼.

**ஜ்வரத்தில் அன்னம் உபயோகிக்க ஏற்ற நிலைமை :—**முற்கூறிய லாஜதர்ப்பணமாவது யவாகூவென்னும்[3] கஞ்சியாவது நன்கு ஜீர்ணமான பிறகு பிணியாளிக்குப் பசியுண்டாயிருந்தால், வறுத்த அரிசியினால் ஆக்கிய அன்னத்தை இறைச்சி, உப்பு, ஸ்நேஹங்கள் இவற்றைச் சொற்பமாகச் சேர்த்து பக்குவம்

---

1. யூஷம்—முதற்பாகம் பார்க்க.
2. நெற்பொரி மாவை (லாஜஸக்து) லாஜதர்ப்பணம் என்பர்.
3. யவாகூ—முதற்பாகம் பார்க்க.

செய்த யூஷங்களோடாவது,[1] பயறு, கொள் இவற்ருல் காய்ச்சிய கஞ்சிகளோடாவது புஜிக்கலாம்.—37, 37½.

ஜ்வரத்தில் கஷாயம் உபயோகிக்கும் நிலைமை :—தேஹ பலம் கெடாமலும் தோஷங்கள் கோளாறடையாமலும் அவற்றைக் காக்கவேண்டி, முற்கூறிய விதம் பேயா முதலியதையே முதலில் உபயோகித்து ஆறுநாட்களைக் கழிக்கவேண்டும் ; லங்கநம் முதலியவற்ருல் தோஷங்கள் பக்குவமாய் விட்டபிறகு,[2] மிகுந்துள்ள தோஷத்தையும் பக்குவம் செய்வதற்காக அல்லது சமநம் செய்வதற்காகப் பாசந கஷாயங்களையும்,[3] சமந கஷாயங்களையும்[4] உபயோகிப்பது நலம்.—38, 39.

பித்த-கபஜ்வரங்களில் கஷாய விசேஷங்கள் :—பித்த ஸம்பந்தமான ஜ்வரத்தில் கைப்புள்ள வஸ்துக்களாகிய கஷாயமும், கபஸம்பந்தமான ஜ்வரத்தில் கார்ப்பான சுவையுள்ள சரக்குகளாலான கஷாயமும் விசேஷமாகப் பிரயோகிக்கத் தகுந்தவை.—39½.

நவஜ்வரத்தில் கஷாய ரஸமுள்ள கஷாயம் உபயோகிக்கத் தகாதது :—கஷாயரஸம் என்கிற துவர்ப்பான சுவையுள்ள கஷாயம் பித்த-கபங்களாலான கோளாறுகளை நிவ்ருத்தி செய்யக் கூடியதாயினும் நவஜ்வரத்தில்[5] உபயோகமானதல்ல ; ஏனெனில் அது மலங்களைக் கட்டி விஷமஜ்வரத்தையும், அரோசகம், பலமான இருதயத்துடிப்பு, விக்கல், வயிற்றுப்பொருமல் முதலியவற்றையும் உண்டுபண்ணும்.—40, 41.

ஜ்வரத்தில் ஔஷதம் கொடுக்க ஆரம்பிக்கும் காலம்:—ஜ்வரம் உண்டான ஏழு நாட்களுக்குப் பிறகு ஔஷதம் உபயோகிக்கலாம் என்று சிலர் கூறுகின்றனர் ; பத்து நாட்களுக்குப் பிறகு உபயோகிக்கலாம் என்று வேறு சிலர் ; இன்னும் சிலர் இலகுவான உணவுகளை யுட்கொள்பவனுக்கு ஔஷதம் கொடுக்கலாம் என்கிருர்கள். ஆனுல் ஆமதோஷம் அதிகரித்திருக்கையில் ஔஷதம் உபயோகிக்கக் கூடாது. ஏனெனில் கடுமையான ஜ்வரத்துடன் கூடியவனுக்கு சோம்பலையும் திமிர்ப்பையும் உண்டுபண்ணக் கூடியவாறு ஆமதோஷவேகம் மேலோங்கி யிருக்கையில், அல்லது

1. இவ்வித யூஷத்திற்கு தகலாவணிக யூஷம் என்று பெயர்.

2. சொற்பம் குறைய பக்குவமான பிறகு என்றும் பொருள் ; அப்பொழுதுதான் "மிகுந்துள்ள தோஷங்களைப் பக்குவம் செய்ய கஷாயங்கள் அவசியம்" என்பது பொருந்தும்.

3. இனி, 45, 46-ம் ச்லோகங்களின் மொழிபெயர்ப்பிற் கூறப்படும் கஷாயங்கள்.

4 இனி 48 முதல் 50½-வது ச்லோகங்களின் மொழிபெயர்ப்பிற் கூறப்படும் 5 வித கஷாயங்கள்.

5. நவஜ்வரம்—முதற்பாகம் பார்க்க.

வாதாதி தோஷம் மிகவும் விருத்தி யடைந்திருக்கையில் அந்நிலைமையில் உட்கொள்ளப்பட்டு குடலில் பக்குவமாகாத ஔஷதமானது ஜ்வரத்தை மீண்டும் அதிகப்படுத்தும். எப்பொழுது ஜ்வரம் மெதுவான நிலைமைக்கு வந்து, தேஹமும் இலகுவாயிருப்பதாகத் தோன்றி, மல-மூத்திராதிகளும் வெளிப்படுகின்றனவோ அப்பொழுது ஜ்வரம் ஆரம்பித்து வெகு சொற்ப நாட்களேயானாலும் ஔஷதம் கொடுக்க ஆரம்பிக்கலாம். $42—44\frac{1}{2}$.

ஜ்வரத்தில் கொடுக்கக்கூடிய பாசநகஷாயங்கள் :—(1) கோரைக்கிழங்கு, பர்ப்பாடகம் இவ்விரண்டையும் சேர்த்தாவது, (2) சுக்கு, பர்ப்பாடகம் இவற்றைச் சேர்த்தாவது, (3) காஞ்சொறி, பர்ப்பாடகங்களைச் சேர்த்தாவது கஷாயம் காய்ச்சியோ, அல்லது அதையே சீதகஷாயமாகச்[1] செய்தோ உட்கொள்ளலாம். (4) வட்டத்திருப்பி, வெட்டிவேர், விளாமிச்சை இவற்றைச் சேர்த்து கஷாயம் பக்குவம் செய்தோ சீதகஷாயமாகச் செய்தோ பருகலாம். (5) நிலவேம்பு, சீந்திற்கொடி, கோரைக்கிழங்கு, சுக்கு இவற்றையாவது முன்போலவே கஷாயம் காய்ச்சியோ சீதகஷாயமாகச் செய்தோ உட்கொள்ளலாம். இக்கஷாயங்களுள் எதை எந்த ஜ்வரத்தில் உபயோகிக்கக் கூடுமோ அதனைக் கவனித்து அந்தந்த ஜ்வரத்தில் உபயோகிக்க வேண்டும்; இக்கஷாயங்கள் தோஷங்களின் ஆமாவஸ்த்தையைப் போக்கி அவற்றைப் பக்குவப்படுத்தும்; மேலும் ஜ்வரம், அரோசகம், நாவறட்சி, வாயில் அருவருப்பு, அஜீர்ணம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 45—47.

விஷமஜ்வரங்கள் ஐந்துக்கும் சமநகஷாயங்கள் :—(1) வெட்பாலை, பேய்ப்புடல், கடுகரோஹிணி; (2) பேய்ப்புடல், நன்னாரி, கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, கடுகரோஹிணி; (3) பேய்ப்புடல், வேம்பு, த்ரிபலை, திராக்ஷை, கோரைக்கிழங்கு, வெட்பாலை; (4) நிலவேம்பு, சீந்தில், செஞ்சந்தனம், சுக்கு; (5) நெல்லிக்கனி, கோரைக்கிழங்கு, சீந்தில், தேன்; இவ்வைந்து விதமான முறைகளையும் தனித்தனியே கஷாயமிட்டு ஸந்ததம் முதலிய ஐந்து விதமான விஷமஜ்வரங்களையும் முறையே சமநம் செய்ய உபயோகிக்கலாம். $48—50\frac{1}{2}$.

வாதஜ்வரத்தில் பாசநகஷாயம் :—(1) காஞ்சொறி, சீந்தில், கோரைக்கிழங்கு, சுக்கு இக்கூட்டு முறையின் கஷாயமாவது, (2) மோடி, சீந்தில், சுக்கு, இலகுபஞ்சமூலம் இச்சரக்குகளாலாகிய கஷாயமாவது வாத ஜ்வரத்தில் உபயோகிக்கக்கூடிய பாசநௌஷதங்களாம்.—51, $51\frac{3}{4}$.

1. சீதகஷாயம்—முதற்பாகம் பார்க்க.

பித்தஜ்வரத்தில் பாசநகஷாயம் :—(1) வெட்பாலரிசி, கோரைக்கிழங்கு, கடுகரோஹிணி இவற்றின் கஷாயத்தில் தேன் சேர்த்து உட்கொள்வதும், (2) கோரைக்கிழங்கு, பர்ப்பாடகம், காஞ்சொறி, நிலவேம்பு இவற்றின் கஷாயத்தில் தேன் சேர்த்துப் பருகுவதும் பித்த ஜ்வரத்தில் உபயோகமானது.—52¾.

கபஜ்வரத்தில் பாசநகஷாயம் :—கபஜ்வரத்தில் வத்ஸகாதி கணமாவது,[1] அல்லது ஆடாதோடை, முத்தக்காசு என்னும் சிறு கோரைக்கிழங்கு, சுக்கு, காஞ்சொறி இவற்றின் கஷாயமாவது தகுந்த பாசநௌஷதங்களாம்.—53¼.

வாத - கபஜ்வரத்தில் பாசந கஷாயம் :—கடுக்காய், மோடி, கொன்றை, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு இவற்றாலான கஷாயமானது தேஹமெங்கும் வலி, மலபந்தம் இவற்றுடன் கூடிய வாத-கப ஸம்பந்தமான ஜ்வரத்தில் தீபநமாகவும் பாசநமாகவும் உபயோகப்படுகின்றது.—54½.

வாத-பித்த ஜ்வரத்தில் திராக்ஷாதிபாண்டம் அல்லது ஹிமம் :—திராக்ஷை, இலுப்பைப்பூ, அதிமதுரம், வெள்ளிலோத்தி, பெருங்குமிழன், நன்னாரி, கோரைக்கிழங்கு, நெல்லிக்கனி, வெட்டிவேர், தாமரைத்தாது, தாமரைக்கிழங்கு, தாமரைத் தண்டு, சந்தனம், வெட்டிவேர், கருநெய்தல், ஈச்சங்கனி இவற்றின் கூட்டு திராக்ஷாதிகணம் எனப்படும்; இச்சரக்குகளைச் சேர்த்து பாண்டமாவது[2] ஹிமமாவது[3] பக்குவம் செய்து, ஜாதிமல்லிகைப் பூவால் அதற்கு வாஸனையேற்றி, தேனையும், சர்க்கரையையும், நெற்பொரியையும் சேர்த்து உபயோகிக்க வாத-பித்தங்களாலுண்டான ஜ்வரம், மதுபானத்தினாலான வெறி முதலிய விகாரம், வாந்தி, மூர்ச்சை, தேஹ அழற்சி, சிரமம், தலைச்சுற்றல், மேல் நோக்கிய ரக்தபித்தம், நாவறட்சி, காமாலை இவை நிவ்ருத்தியாகும். 55—58.

ஜ்வர-தாஹங்களில் கடுகாகஷாயம் :—பேய்ப்பீர்க்கன் விதையைப் பொடிசெய்து, ஜலம்விட்டுக் கலக்கி, புதிதாகவும் சுத்தமுமாயுள்ள மட்கலயத்தில் பக்குவம் செய்து, வடிக்கட்டியெடுத்து, சிறிது நெய் கலந்து உட்கொள்ள, இக்கஷாயம் ஜ்வரத்தையும் அதனால் உண்டான அழற்சியையும் போக்கும்.—59.

---

1. வத்ஸகாதிகணம்—முதற்பாகம் பார்க்க.

2. பாண்டம்—ஔஷதச் சரக்குகளைச் சூர்ணம் செய்து, எட்டு பங்கு உஷ்ணஜலம் சேர்த்து, சிறிதுநேரம் மூடிவைத்து வடிக்கட்டியெடுக்கப்படும் கஷாயம்.

3. ஹிமம்—குறிப்பிட்ட ஔஷதச் சரக்குகளை ஆறு பங்கு ஜலத்தில் சேர்த்து, இரவில் (பனியில்) ஊறவைத்து, மறுநாட் காலையில் வடிகட்டி யெடுக்கப்படும் கஷாயம். இதையே சீத கஷாயம் என்றும், நிசோஷித கஷாயம் என்றும் கூறுவர்.

கப-வாத ஜ்வரத்தில் வசாதிக்வாதம் அல்லது குடூசீக்வாதம்:—(1) வசம்பு, கடுகரோஹிணி, வட்டத்திருப்பி, கொன்றை, வெட்பாலரிசி இவற்றின் க்வாதத்தையாவது[1], (2) சீந்திற்கொடியின் க்வாதத்தில் திப்பிலிப் பொடியைச் சேர்த்தாவது கப-வாத ஜ்வரத்தில் உபயோகிக்கலாம்.—60.

வாத-கப ஜ்வராதிகளில் வியாக்ரியாதி க்வாதம்:—கண்டங்கத்திரி, சுக்கு, சீந்திற்கொடி இவற்றின் க்வாதத்தில் திப்பிலிப் பொடியும் சிறிது சேர்த்து உட்கொள்ள வாத-கபஜ்வரமும், ச்வாஸ-காஸங்களும், பீநஸமும், வயிற்றுவலியும் நிவ்ருத்தியாகும்.—61.

கப வாத ஜ்வராதிகளில் பத்தியாதிக்வாதம்:—கடுக்காய், கொத்துமல்லி விதை, கோரைக்கிழங்கு, சுக்கு, காவட்டம் புல், பர்ப்பாடகம், சிறுதேக்கு, வசம்பு, கண்டுபாரங்கி, தேவதாரு இவற்றை க்வாதம் செய்து, அதில் சிறிதளவு தேனும் காயமும் சேர்த்து உபயோகிக்க கப-வாதஜ்வரம் நீங்கும்; வயிற்றுவலி, இருதயத்தைப்பற்றிய நோய், பக்கசூலை, தொண்டைநோய், வாயிலுண்டாகும் புண், வீக்கம், காஸ-ச்வாஸங்கள் இவையும் தீரும்.—62, 63.

பித்த கபஜ்வரத்தில் ஆரக்வதாதி க்வாதமும் திக்தாதிக்வாதமும்:—(1) ஆரக்வதாதி கணத்திற்[2] கூறிய சரக்குகளை க்வாதம் செய்து, சிறிது தேன் சேர்த்து உட்கொள்ள பித்த-கப ஜ்வரம் நீங்கும். (2) அங்ஙனமே கடுகரோஹிணி, ஆடாதோடை, வெட்டிவேர், கழற்சிக்காய், த்ரிபலை, சீந்தில் இவற்றின் கஷாயத்தையும் அந்த ஜ்வரத்தில் உபயோகிக்கலாம்.—64.

ஸந்நிபாதஜ்வரத்தில் வியாக்ரியாதிபாசநகஷாயம்:—கண்டங்கத்திரி, தேவதாரு, மஞ்சள், கோரைக்கிழங்கு, பேய்ப்புடல், லவங்கப்பத்திரி, வேப்பம்பட்டை, த்ரிபலை, கடுகரோஹிணி இவற்றின் க்வாதம் ஸந்நிபாத ஜ்வரத்தில் பாசநமாக உபயோகிக்கக்கூடியது.—65.

வாத-கபங்கள் அதிகரித்த ஸந்நிபாத ஜ்வரத்தில் பாசந கஷாயம்:—சுக்கு, தாமரைக்கிழங்கு, சீந்தில், கண்டங்கத்திரி இவற்றின் க்வாதமானது காஸம்-ச்வாஸம்-பக்கசூலை இவற்றுடன் கூடிய வாத-கபங்கள் அதிகரித்துள்ள ஸந்நிபாத ஜ்வரத்தில் பாசநமாய் பிரயோகிக்கத் தகுந்தது.—66.

ஜ்வரங்களனைத்துக்கும் பொதுவான மதூகபுஷ்பாதி ஹிமம்:—இலுப்பைப்பூ, திராக்ஷை, கழற்சிக்காய், ஈச்சம்பழம்,

---

1. க்வாதம் — ஔஷதச் சரக்குகளை 8 அல்லது 16 பங்கு ஜலத்தில் சேர்த்து $\frac{1}{4}$-பங்காகக் காய்ச்சி யெடுக்கப்படும் கஷாயம்.

2. ஆரக்வதாதிகணம்—முதற் புஸ்தகம் பார்க்க.

வெட்டிவேர், கடுகரோஹிணி, த்ரிபலை, பெருங்குமிழன் இவற்றைச் சேர்த்து ஹிமகஷாயம் பக்குவம் செய்து காலமறிந்து உட்கொள்ள எல்லா ஜ்வரங்களும் நிவ்ருத்தியாகும்.—67, 67½.

**எல்லா ஜ்வரங்களுக்கும் போதுவான ஜாத்யாதிஹிமம் :—** ஜாதிமல்லிகைத் தளிர், நெல்லிக் கனி, கோரைக் கிழங்கு, காஞ்சொறி இவற்றைச் சேர்த்து முன்போலவே ஹிமகஷாயம் பக்குவம் செய்து எல்லா ஜ்வரங்களிலும் உட்கொள்ளலாம்.—68.

**மலபந்தமுள்ள ஜ்வரத்தில் கடுகாதி க்வாதம் :—** ஜ்வரத்தில் மலபந்தமும் உண்டாயிருந்தால் கடுகரோஹிணி, திராக்ஷை, கழற்சிக்காய், த்ரிபலை, வெல்லம் இவற்றைச் சேர்த்து க்வாதம் செய்து உபயோகிக்கலாம்.[1]—68½.

**ஜ்வரத்தில் ஔஷதோபயோகத்திற்குப் பிறகு பேயா உபயோகித்தல் :—** உட்கொண்ட ஔஷதத்தை ஜீர்ணம் செய்து கொள்பவனே பேயா முதலிய பத்திய போஜனத்தை உபயோகிக்கலாம்; ஆனால் எவனுக்கு கபம் அதிகரித்திருக்கின்றதோ அவன் பேயா முதலியதை உபயோகிக்கக் கூடாது; ஏனெனில் புழுதியிற் பொழிந்த மழையானது சேற்றை விருத்தி செய்வது போல, பேயா கபத்தை விருத்தி செய்கின்றது.[2]—69½.

**ஜ்வரத்தில் உபயோகிக்ககூடிய யூஷங்களும் அவற்றிற்கேற்ற காலமும் :—** கபத்தினால் தேஹத்தில் கசிவுளளவர்களை அடியிற் குறிப்பிடும் தன்மையுள்ள யூஷங்களை ஸாதாரண பத்திய போஜனத்திற்கு முன்பே உபயோகிக்கச் செய்யலாம் :—கொள், கடலை, மாதுளம்பழம் இவற்றால் அந்த யூஷங்கள் தயார் செய்யப்பட்டவைகளாயிருக்க வேண்டும்; அவை இலகுவாகவும், ரூக்ஷங்களாகவும், சிறிது கைப்புள்ளவையாகவும், இலவணரஸத்துடன் கூடியவையாகவும், நாக்கில் நற்சுவையை யுண்டுபண்ணக் கூடியவையாகவும், இருதயத்திற்குப் பலமுண்டுபண்ணக்கூடியவையாகவும் இருக்கவேண்டும்.—70, 71.

**ஜ்வரத்தில் உபயோகிக்கத்தக்க சாலி-ஷஷ்டிக-யவதானியங்கள் :—** ரக்த சாலி முதலிய சாலிதானியங்களும், ஷஷ்டிகம் என்கிற கார் நெல் வகைகளும்[3] பழகியவைகளானால் ஜ்வரத்தில் உபயோகிப்பதற்கு ஹிதமானவை. அங்ஙனமே கபம் மேலோங்

---

1. சீதகஷாயம் மலபந்தத்தை விருத்தி செய்யும் இயல்புடையதாகையால், இக்கடுகாதி கஷாயம் க்வாதமாகவே (கொதிக்கவைத்த கஷாயமாய்) இருக்க வேண்டுமென்று அருணதத்தன் கூறுகிறார்.

2. சிதறுண்ட புழுதியை மழை ஜலம் ஒருமிக்கத் திரட்டி சேறாகச் செய்வதுபோல், கபத்தையும் பேயா கனமாகத் திரட்டி அதிகப்படுத்தும் எனக் கருத்து.

3. ரக்தசாலி முதலிய தானியங்கள்—முதற் புஸ்தகம் பார்க்க.

கிய ஜ்வரத்தில் உமிகள் நன்கு நீங்கியவையும், வாட்யமாகச்[1] செய்யப்பட்டவையுமான யவதானியங்கள் உபயோகமானவை. அந்த தானியங்களை ஜ்வரக்னமான க்வாதங்களில்[2] சேர்த்து இரண்டு அல்லது மூன்று தடவை பக்குவம் செய்து வடித்து, அந்த அன்னத்தைத் தோஷ-தூஷ்யங்கள் முதலியவற்றின் பலா பலங்களைக் கவனித்து அந்தந்த நிலைமைகளுக்குத் தகுந்தவாறு உபயோகிக்கச் செய்யலாம் —72, 73.

ஜ்வரத்தில் சிம்பீ தானிய யூஷங்கள் :— பயறு, கொள் முதலிய இலகு குணமுள்ள சிம்பீ தானியங்களால்[3] பக்குவம் செய்யப்பட்ட யூஷங்கள் ஜ்வரஹாரங்களாகும்.—73½.

ஜ்வரத்தில் ஹிதமான சாகவர்க்கங்கள் :—பாகல், பறங்கிக் காய், இளசான முள்ளங்கி, பர்ப்பாடகம், கத்திரி, வேப்பம் பூ, புடலங்காய், புடலந்தளிர் இவற்றுலாகிய இரஸத்தையும், மிகவும் இலகு குணமுள்ள ஜாங்கல மாம்ஸங்களிலிருந்து எடுத்த இரஸத்தையும், கண்டங்கத்திரி, ஈச்சம்பழம், சேம்பு, திராக்ஷை, நெல்லிக்கனி, மாதுளை இவற்றின் இரஸத்துடன் கூட்டி, திப்பிலி, சுக்கு, கொத்துமல்லி விதை, ஜீரகம், இந்துப்பு இவற்றைக் கூட்டித் தாளித்து ஜ்வரத்தில் உபயோகிக்கலாம். முற்கூறிய திப்பிலி முதலிய சரக்குகளால் அந்த இரஸங்கள் தாளிக்கப்பட்டவையானாலும் தாளிக்கப்படாதவையா யிருப்பினும் பெரும்பாலும் அந்த இரஸங்களில் தேன், சர்க்கரைகளைக் கலந்தே உபயோகிப்பது முறை. 74—76½.

ஜ்வரத்தில் ஹிதமான வியஞ்ஜனங்களும் அனுபானங்களும் :—நற்சுவை தரும் வியஞ்ஜனங்களைப் புளிப்பில்லாத மோரில் ச்சேர்த்து அக்னியிற் பசநம்செய்து ஜ்வரத்தில் உபயோகிக்கலாம் ; அவை குழம்பு போலில்லாமல் தெளிவுள்ளவைகளாய் இருக்க வேண்டும். ஔஷதாதிகளுக்கு அனுபானமாகவும் அவற்றை உபயோகிக்கலாம் ; கொதிக்கவைத்து ஆறிய ஜலத்தையும் மதுவையும் ஸாத்மியம் அறிந்து அனுபானமாகக் கொடுக்கலாம்.—77, 78.

ஜ்வரத்தில் அல்லது ஜ்வர நிவ்ருத்தியானபின் ஆஹார முபயோகிக்கும் முறை :—ஜ்வரத்துடன் கூடியவனானாலும், ஜ்வரத்திலிருந்து விடுபட்டவனானாலும் அப் பிணியாளிக்கு மாலை நேரத்தில் இலகுவான ஆஹாரத்தைக்[4] கொடுக்கவேண்டும் ; ஏனெ

1. வாட்யம்—வறுத்து நொய்யாக உடைத்த தானியம். (இந்த நொய்யால் செய்யப்படுவது வாட்ய மண்டம் எனப்படும்.)

2. ஜ்வரத்தைப் போக்குங் குணமுடைய கஷாயம் ஜ்வரக்ன க்வாதம் எனப்படும்.

3. சிம்பீ தானியங்கள்—முதற் புஸ்தகம் பார்க்க.

4. குணத்தினாலும் அளவாலும் இலகுவான ஆஹாரம்.

னில், அப்பொழுது கபம் க்ஷீணித்து விடுவதால் உஷ்ணம் அதிகரித்து ஜாடராக்னி பலப்பட்டிருக்கும். அல்லது ஜாடராக்னி மந்தமாயிருப்பவன் வாஸபூமியின் நிலைமையையும் அவரவருடைய ஸாத்மிய நிலைமையையும் அனுஸரித்து யதோசிதமான காலத்தில் முற்பகலில் இலகுவான ஆஹாரத்தைப் புஜித்தால் அஜீர்ணத்தினால் பீடிக்கப்படமாட்டான்.—79, 80.

ஜ்வரத்தில் க்ருதபானத்திற்குத் தகுந்ததும் தகாததுமான நிலைமை :—கஷாய பானங்களாலும்,[1] பத்தியமான உணவுகளாலும்[2] இங்ஙனம் பத்து நாட்கள் லங்கநம் செய்த பிறகு கபம் குறைந்து போனதும், வாத-பித்தங்கள் மேலோங்கிய ஜ்வரத்தில் க்ருதபானம் செய்விக்கலாம்; தோஷங்கள் ஆமாவஸ்தை நீங்கி பக்குவ நிலைமையடைந்திருந்தாலே க்ருதம் அமுதத்திற்கொப்பானது; இல்லையேல் அது பத்து நாட்கள் கழிந்த பிறகும் ஜ்வரத்தையும் அதன் ஸம்பந்தமான உபத்திரவங்களையும்[3] உண்டுபண்ணக்கூடிய விஷத்திற்குச் சமானமாய் விடும். கபம் அதிகமாயுள்ள அந்த ஜ்வரத்தில் அக்கபம் க்ஷயமடையும் வரையில் லங்கநம் முதலிய கிரமத்தைச்[4] செய்ய வேண்டும்.—81, 82½.

ஜ்வரத்தில் க்ருதபானத்தின் உபயோகம் :—தேஹதாதுக்கள் துர்ப்பலமாயிருந்தால் ஜ்வரம் நீடித்துத் தொடரும். அவர்களுக்கு ஜாடராக்னி என்னும் தேஜஸ் ரூக்ஷமாயிருக்கும். அத்தேஜஸ்ஸினால் ரூக்ஷமாயிருப்பவனுக்கு வமநம், ஸ்வேதநம், காலம், தண்ணீர், கஷாயவகை, இலகு போஜனம் இவற்றால் வாயுவானது மிகவும் ஜாடராக்னிக்கு அல்லது உடற் சூட்டுக்கு உதவி செய்து அதை அதிகப்படுத்துமாகையால், எரியும் வீட்டுக்குத் தண்ணீரைப்போல அவ்விகாரத்தை க்ருதம் தணிக்கும். க்ருதமானது வாத-பித்தங்களைப் பரிஹரிப்பதில் முதன்மையான வஸ்து; வேறு சரக்குகளோடு சேர்த்து பக்குவம் செய்யப்படினும் அதிலெல்லாம் க்ருதம் தன் இயற்கைக் குணத்தை மிகவும் பின் பற்றும்; ஆகையால் அந்தந்த வியாதி நிலைமைக்குத் தகுந்த ஔஷதச் சரக்குகளோடு சேர்த்து பக்குவம் செய்து க்ருதத்தை உட்கொள்ளக் கொடுக்கலாம். க்ருதம் சீதவீர்யமுடையதானதால் அதற்கு எதிரிடையான ஜ்வரத்தினாலான சூட்டையும்,

1. முஸ்தா-பர்ப்படகாதி (கோரைக்கிழங்கு - பர்ப்பாடகம் முதலியவற்றாலான) கஷாயம் முதலானவை.

2. பத்தியமான உணவுகள்—பேயா யூஷம் முதலியவை.

3. உபத்திரவம்—முதற் புஸ்தகம் பார்க்க.

4. லங்கநம் முதலிய கிரமம்—இதே அத்தியாயத்தில் 21, 21½ ச்லோகங்களின் மொழி பெயர்ப்பைக் காண்க.

பித்தத்தையும் பரிஹரிக்கும்; ஸ்நிக்த்தத் தன்மையினால் வாதத்தையும் போக்கும்; கபஹாரமான குணமுள்ள வேறு சரக்குகளோடு சேர்த்து பக்குவம் செய்து விடுவதால் கபத்தையும் போக்கக் கூடியதாகும். முற்கூறிய எல்லாக் கஷாயங்களோடும்[1] க்ருதத்தையும் சேர்த்து பக்குவம்செய்து அந்தந்த தோஷங்களுக்குத் தகுந்தவாறு உபயோகிக்கலாம். 83—87½.

ஜ்வரத்தில் பிரயோகிக்கக்கூடிய சில க்ருத முறைகள்:— (1) த்ரிபலை, வேப்பம்பட்டை, அதிமதூரம், கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிறுகடலைப்பிலை இவற்றின் க்வாதத்தோடு க்ருதத்தைப் பானம் செய்ய ஜ்வரம், காஸம் இவை நீங்கும். (2) திப்பிலி, வெட்பாலை, கண்டங்கத்திரி, கடுகரோஹிணி, நன்னாரி, நெல்லிக்கனி, கீழாநெல்லி, பில்வவேர், கோரைக்கிழங்கு, வெட்டிவேர், கழற்சிக்காய், விளாமிச்சை, திராக்ஷை, அதிவிடயம், மேர் மல்லிகை இவற்றினால் க்ருதம் பக்குவம் செய்யவும்; இந்த க்ருதம் ஜ்வரத்தைத் துரிதமாய் நிவ்ருத்தி செய்யும்; மேலும் விஷமாக்னி, ஹலீமகம், அரோசகம், தோள்களிலுண்டாகும் அதிக அழற்சி, நடுக்கம், பக்கச்சூலை, தலைவலி, க்ஷயரோகம் இவற்றையும் போக்கும். (3) வாத ஜ்வரத்தில் தில்வக க்ருதத்தை[2] உபயோகிக்கலாம்; ஆனால் அதில் சிவதை வேரைச் சேர்க்கக்கூடாது. (4) பித்த ஜ்வரத்தில் திக்தக க்ருதத்தையும்,[3] வ்ருஷக்ருதத்தையும்,[4] கழற்சிக்காயினால் பக்குவம் செய்யப்படுகிற க்ருதத்தையும் கொடுக்கலாம். (5) வாய்விடங்கம், அட்டுப்பு, சவ்யம், வட்டத்திருப்பி, த்ரிகடுகம், சித்திரமூலம், இந்துப்பு, யவதானியத்தின் சுணை இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் சேர்த்து கஷாயம் காய்ச்சி யெடுத்து, ஒரு பிரஸ்தம் நெய்யும் அதற்குச் சமானமாய் பாலும் சேர்த்து பக்குவம் செய்தெடுக்கவும்; இது நாட்பட்ட ஜ்வரத்தையும், கபஜ்வரத்தையும் போக்கும். 88—92.

ஜ்வரத்தில் ஐந்துவித ஸ்நேஹங்கள்:—சீந்தில், த்ரிபலை, ஆடாதோடை, திராக்ஷை, சிற்றாமுட்டி இவற்றில் ஒவ்வொன்றினுடையவும் ஸ்வரஸ-கல்கங்களால் தனித்தனியே ஸ்நேஹங்

1. முற்கூறிய கஷாயங்கள் — 9-வது பக்கத்திற் குறிப்பிட்டுள்ள பாசக கஷாயங்கள்.

2. தில்வக க்ருதம் — வாத வியாதி சிகித்ஸையில் பிறகு விவரிக்கப்படும் க்ருதம்.

3. திக்தக க்ருதம் — பிறகு குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படும் க்ருதம்.

4. வ்ருஷக்ருதம் — இனி இரத்த-பித்த சிகித்ஸையில் கூறப்படும் க்ருதம்.

களைப் பக்குவம் செய்து[1] உபயோகித்தால் அவை ஜ்வராஹாரங்களாம்.—93.

ஜ்வரத்தில் க்ருதபானத்திற்குப் பிறகு மாம்ஸரஸோபயோகம் :—க்ருதம் ஜீர்ணமாய்விட்டால், பிறகு காரமில்லாத மாம்ஸரஸம் கலந்த அன்னத்தைப் புஜிக்கச் செய்யலாம்; அவ்வுணவு மிகவும் தேஹபலத்தை உண்டுபண்ணும்; நல்ல வன்மையுண்டானால் அது தோஷங்களை ஹரிக்கும். ஆகையினாலே கபபித்தஹாரங்களான பயறு-பாகல் முதலியவற்றின் ஸ்வரஸங்கள் நீடித்தகாலமாயுள்ள வாதம் மேலோங்கிய ஜ்வரத்தில் பெரும்பாலும் அநுகூலமானவையல்ல; அவை வயிற்றுவலி, உதாவர்த்தம், வயிறு ஸ்தம்பித்துப் போதல் இத் துர்க்குணங்களை யுண்டுபண்ணும்; ஜ்வரத்தையும் விருத்தி செய்யும்.—94, 95½.

ஜ்வரத்தில் சோதந சிகித்ஸை :—இவ்விதம் செய்தும் ஜ்வரம் சமநமாகாவிட்டால், பிணியாளி சோதந சிகித்ஸைக்கு ஏற்றவனாயிருந்தால் அவனுக்கு அதைச்செய்யவேண்டும்; அதில், தேஹவன்மையுள்ள மனிதனுக்கு தோஷம் ஆமாசயத்தைப் பற்றியதானால், அவனது தேஹபலத்திற்குத் தீங்கு நேரிடாவண்ணம் முற்கூறிய வமநமுறையைப் பிரயோகிக்கவேண்டும். 96, 97.

ஜ்வரத்தில் விரேசநௌஷதம் கொடுக்கும் நிலைமை :—தோஷம் ஆமாவஸ்தையிலிருந்து பக்குவ நிலைமையை அடைந்து, ஸ்தம்பித்துக் கொள்ளாமல் தளர்ச்சி யடையும்போது, அல்லது விஷத்தினாலாவது மதுபானத்தினாலாவது ஸம்பவித்த ஜ்வரத்திலாவது அடியிற் கூறப்படும் ஔஷதங்களை விரேசநத்திற்காகக் கொடுக்கலாம்.—97½

ஜ்வரத்தில் விரேச நௌஷதங்கள் :—(1) த்ரிபலை, சாமை, சிவதை, திப்பிலி, நாக கேஸரம் இவற்றைச் சூர்ணம் செய்து, சர்க்கரையும் தேனும் கலந்து குளிகை செய்து விரேசநமாவதற்கு உபயோகிக்கலாம். (2) அல்லது வ்யோஷாதி குளிகையையாவது,[2] கொன்றைப்புளியை திராக்ஷையின் இரஸத்துடனாகிலும் பாலுடனாகிலும் கலந்தாவது விரேசநத்திற்காகக் கொடுக்கலாம். (4) த்ரிபலா சூர்ணத்தையாவது, (5) கழற்சியின் வேரையாவது பாலிற் கலந்து ஜ்வரமுள்ளவன் உட்கொள்ளலாம்.98, 99½.

---

1. ஸ்நேஹம் என்று கூறியிருந்தாலும் இவ்விடத்தில் முக்கியமாய் க்ருதமே குறிப்பிடப்படுவதாய் அறிக.

2. த்ரிகடு, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, கோரைக்கிழங்கு, வாய்விடங்கம், நெல்லிக்கனி, சிவதை இவற்றைச் சமயெடையாகச் சேர்த்து, அனைத்துக்கும் ஸமமாகச் சர்க்கரை கலந்து, தேன்விட்டு ஆட்டிச் செய்யப்படும் குளிகை வ்யோஷாதி குளிகை எனப்படும்.

ஜ்வரத்தில் விரேசநத்திற்குப் பின்பு ஸம்ஸர்கீ கிரமம் :—நன்கு விரேசநம் ஆனவர்களுக்கு மண்டம்[1] என்கிற திரவான்னம் முதற்கொண்டு வரிசைக் கிரமமாக[2] ஸம்ஸர்கீ யென்னும்[3] பத்திய முறையில் உணவு கொடுக்கவேண்டும்.—100.

ஜ்வரத்தில் மலத்தைக் கழியச் செய்வதும் கட்டுவதும் :—ஜ்வரத்தினால் சிதைவுற்ற மலம் கழிந்துகொண் டிருக்குமானால், அதை எப்பொழுதும் அங்ஙனமே கழியும்படி விட்டுவிட வேண்டும்; அந்த மலம் ஆமதோஷம் நீங்கி பக்குவமான நிலைமையில் கோஷ்டத்தில் தங்கியிருந்தாலும் தீங்குண்டுபண்ணும். மலம் மிதமிஞ்சி வெளிப்படுமானால் பாசநசிகித்ஸையினால் அதன் ஆமதோஷத்தைப் போக்கியாவது கட்டலாம். ஆமமான மலத்தைக் கட்டுவதால் நேரிடும் தீங்குகள் தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில்[4] கூறப்பட்டிருக்கின்றன.—101, 102.

ஆமஜ்வரத்தில் தோஷஹர ஔஷதமுபயோகிக்கக் கூடாது :—எவனொருவன் ஆம ஜ்வரத்தில் அறியாமையினால் அத்தோஷத்தை வெளிப்படுத்துவதற்காக ஔஷதத்தை உபயோகிக்கின்றானோ, அவன் நித்திரையுறும் கருநாகத்தைக் காத்தினால் பரிசிப்பதாகக் கருதவேண்டும்.—103.

ஜ்வரத்தினால் க்ஷீணித்திருப்பவனுக்கு ஏற்ற சோதந சிகித்ஸை :—ஜ்வரத்தினால் தேஹபலம் க்ஷீணித்திருப்பவனுக்கு வமநமும் விரேசநமும் உசிதமல்ல; அத்தகைய க்ஷீண நிலைமையிலிருப்பவனுக்கு மலங்களைச் சாதாரணமாய் பாலினாலாவது நிரூஹ வஸ்திகளைப் பிரயோகித்தாவது வெளிப்படுத்தலாம்.—104.

பாலை ஸாத்மியமாகப் பெற்ற ஜ்வரரோகிக்கு அதை உபயோகிக்கும் நிலைமை :—பாலை ஸாத்மியமாகப் பெற்றவனும்,[5] கபம் முற்றிலும் க்ஷீணித்துப்போனவனும், தேஹதாபமும் நாவறட்சியுமுள்ளவனும், வாத-பித்தங்களால் பீடிக்கப்படுபவனுமான பிணியாளிக்கு அதிஸாரம் அதிகமாயிருந்தபோதிலும் பால் பத்தியமான உணவாகும். காட்டுத்தீயால் எரிக்கப்பட்டவனத்தின் தாபத்தைப் போக்கி அதை மழைநீர் மீண்டும் தளிர்க்கச்செய்வது போல், லங்கனத்தினால் மிகவும் தபிக்கப்பட்டுள்ள

1. மண்டம் — முதற் புத்தகம் பார்க்க.

2. மண்டம், பேயா, விலேபீ யென்று வமந-விரேசநீயாத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள கிரமம்.

3. ஸம்ஸர்கீ—வமந-விரேசநங்கள் செய்த பிறகு பேயா, விலேபீ முதலிய பத்தியமான உணவுகள் கொடுக்கப்படும் முறைக்கு "ஸம்ஸர்கீ" என்று பெயர்.

4. ஸூத்திரஸ்த்தாநத்தில் 13-ம் அத்தியாயம்.

5. ஸாத்மியம் — முதற் புத்தகம் பார்க்க.

தேஹத்தையும் பால் உயிர்ப்பிக்கச்செய்து ஜ்வரத்தையும் சீக்கிரம் நிவ்ருத்திசெய்யும். ஆனால் பாலானது சகுந்த ஔஷதச் சரக்குகள் சேர்த்து பக்குவம் செய்யப்பட்டதானாலும், குளிர்ச்சியா யிருந்தாலும், உஷ்ணமாயிருந்தாலும், தாரோஷ்ணமா யிருந்தாலும் அந்தந்தக் காலநிலைமைகளின் குணகுணங்களைப் பகுத்தறிந்து உபயோகிக்கப்பட வேண்டும்; இல்லையேல் ஜ்வர ரோகிக்கு ஆபத்தை விளைவிக்கலாம். 105—107.

☞ ஜ்வரஹரமான பலவித க்ஷீரபாகங்கள் :—(1) சுக்கு, பேரிச்சம்பழம், திராக்ஷை, சர்க்கரை, நெய் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை ஆறவைத்து, தேன் கலந்து உட்கொள்ள நாவறட்சி, அழற்சி, ஜ்வரம் இவை தீரும். (2) அங்ஙனமே திராக்ஷை, சிற்றாமுட்டி, அதிமதுரம், நன்னாரி, திப்பிலி, சந்தனம் இவற்றை நான்கு மடங்கு பாலில் காய்ச்சி யெடுத்தாவது உபயோகிக்க, முன் கஷாயம் போலவே குணமுண்டுபண்ணும். (3) அல்லது திப்பிலியையே பொடித்துச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது உட்கொள்ளலாம். (4) மஹா பஞ்சமூலம் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகினால் ஜ்வரமடித்தவனுக் குண்டான காஸம், ச்வாஸம், தலைவலி, பக்கச்சூலை இவை நீங்கும்; நீடித்த நாட்களாயுள்ள ஜ்வரமும் போகும். (5) ஆமணக்கு வேரைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகினாலும், (6) பில்வத்தளிரைச் சேர்த்து தாரோஷ்ணத்தை யுட்கொண்டாலும், மலம் அபானவாயு இவை கட்டிப்போனாலும், இரத்தங்கலந்த அதிஸாரத்திலும், நாவறட்சி-வயிற்றுவலிகளோடு கூடிய சிதபேதியிலும் ஜ்வர ரோகி அக்கோளாறுகளிலிருந்து நிவ்ருத்தியடைவான். (7) சுக்கு, சிற்றாமுட்டி, கண்டங்கத்திரி, மருதோன்றி, வெல்லம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பால் சோபை, மூத்திரக்கட்டு, மலபந்தம், அபானவாயு கட்டிப்போதல், காஸம், ஜ்வரம் இவற்றைப் போக்கும். (8) வெள்ளைச் சாறடை, பில்வவேர், சாறடை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பால் ஜ்வரத்தையும் சோபையையும் நிவாரணம் செய்யும். இலவம்பிசின் சேர்த்துப் பக்குவம் செய்த பாலும் சீக்கிரம் ஜ்வரத்தைப் போக்கும். 108—113½.

ஜ்வரத்தில் நிருஹவஸ்தியும் அநுவாஸநவஸ்தியும் :— தோஷம் ஆமாவஸ்த்தை நீங்கி பக்வநிலைமையை அடைந்திருக்கையிலும், பக்வாசயத்தை அடைந்திருக்கையிலும் நிரூஹவஸ்தியைப்[1] பிரயோகித்தால், தேஹவலிமையும், ஜாடராக்னியும், மனத்தெளிவும், நாக்கில் நற்சுவையும் சீக்கிரம் விருத்தியாய், ஜ்வரமும் நிவ்ருத்தியாய்விடும். ஸ்ரம்ஸநம்[2] என்னும் வேலை

1. நிரூஹவஸ்தி — முதற் புத்தகம் பார்க்க.
2. ஸ்ரம்ஸநம் — மலத்தை மெதுவாக நெகிழச் செய்யும் குணம்.

யைச் செய்யக்கூடிய ஔஷதத்தைப் பிரயோகித்தால், அது பக்வாசயத்தை அடைந்துள்ள பித்தத்தையாவது, பித்தம் கபம் இவ்விரண்டையுமாவது வெளிப்படுத்தும்; வஸ்தியோ வென்றால் மூன்று தோஷங்களையும் கழிக்கும். கப - பித்தங்கள் நன்கு க்ஷீணித்து, விருத்தியான ஜாடராக்னியை யுடையவனும், மல பந்தமுள்ளவனுமான பிணியாளிக்குக் கழுத்தின் பின்புறம் முதுகு இடுப்பு இவை வலித்திழுக்கப்படுவது போன்ற உணர்ச்சி யுண்டா யிருக்கையில் அநுவாஸநவஸ்தியைப்[1] பிரயோகிக்க வேண்டும். 114—116.

ஜ்வரத்தில் படோலாதி நிரூஹம் :—பேய்ப்புடல், வேப்பிலை, கடுகரோகிணி, ஆமணக்குவேர், மேர் மல்லி, சிற்றுமுட்டி, நெரிஞ்சில், மறுக்காரை, வெட்டிவேர், விளாமிச்சை இவற்றைச் சரிபாதி ஜலம்விட்டு விளாவிய பாலில் சேர்த்து, பால்மாத்திரம் மிகும்படிக் காய்ச்சி, கோரைக்கிழங்கு, மறுக்காரை, திப்பிலி, அதிமதுரம், வெட்பாலரிசி இவற்றைக் கல்கமாகக் கூட்டி, இதில் தேனையும், நெய்யையும் சேர்த்து வஸ்தியாகப் பீச்சிடலாம். இது ஜ்வரத்தைப் போக்கும். 117—119.

ஜ்வரத்தில் பர்ணிந்யாதி நிரூஹம் :—நரிப்பயறு, இடிகொள், மேர்மல்லி, சிறுமல்லி,[2] அதிமதுரம், மறுக்காரை, வெட்டிவேர், கொன்றை இவற்றை க்வாதமாகக் காய்ச்சி, அதிமதுரம், சதகுப்பை, குப்பைமேனி, மறுக்காரை, கோரைக்கிழங்கு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும்; அதில் வெல்லம், தேன், நெய் இவற்றையும் சேர்த்து வஸ்தியாகப் பிரயோகிக்கலாம்.—120, 120½.

ஜ்வரத்தில் ஜீவந்தியாதி அநுவாஸநங்கள் :—ஜீவந்தீ, மறுக்காரை, மேதா, திப்பிலி, அதிமதுரம், வசம்பு, ருத்தி, சிற்றரத்தை, சிற்றுமுட்டி, பில்வவேர், சதகுப்பி, தண்ணீர்விட்டான் இவற்றை ஜலம்விட்டு இடித்து, பால், ஜலம், நெய், தைலம் இவற்றில் ஏதேனும் ஒன்றைச் சேர்த்து பக்குவம் செய்து கொள்ளவும்; அவரவருடைய தேஹத்தில் ஏற்பட்டுள்ள தோஷங்களின் தன்மைக் கேற்றவாறும், எந்த ஸ்நேஹம் எவரெவருக்கு அநுகூலமா யிருக்குமோ அதை அநுஸரித்தும் ஜ்வரத்தில் இந்த ஸ்நேஹத்தில் எதையேனும் அநுவாஸநமாய் பிரயோகிக்கலாம். கல்பஸ்த்தாநத்தில் ஸித்தி என்கிற எந்த வஸ்தி முறைகள்

1. அநுவாஸநவஸ்தி — முதற் புத்தகம் பார்க்க.

2. நரிப்பயறு, இடிகொள், மேர்மல்லி, சிறுமல்லி இந்த நான்குக்கும் **பர்ணீ சதுஷ்டயம்** எனப் பெயர்.

கூறப்படப் போகின்றனவோ[1] அவையும் ஜ்வரத்தைப் போக்கக் கூடியன. 121--123.

**ஜ்வரத்தில் நஸ்யப் பிரயோகம்:**—நாட்பட்ட ஜ்வரத்தில் விரேசநநஸ்யத்தைப் பிரயோகிக்க வேண்டும்; அது தலைவலி, தலைபாரம், கபப்பிரகோபம் இவற்றைப் போக்கும்; இந்திரியங்களைத் தெளியச் செய்து சுறுசுறுப்பாக்கும்; நாக்கில் நற்சுவையைத் தரும். சிரஸ் சூன்யமா யிருப்பதுபோல் தோற்றினால் ஸ்நேஹந நஸ்யத்தைப்[2] பிரயோகிக்கவேண்டும். சிரஸில் தாபம் அதிகரித்திருந்தால் பித்த ஹரமான நஸ்யத்தைப் பிரயோகிக்க வேண்டும்.—124, 124½.

**ஜ்வரத்தில் தூம கண்டூஷ-கபளங்கள்:**—ஜ்வரத்தில் ப்ரதிச்யாயம், வாயில் அரோசகம், சிரோரோகம், தொண்டையைப் பற்றிய ரோகம் இவற்றைப் போக்கக்கூடிய குணமுடைய தூமபானங்களையும், கண்டூஷங்களையும், கபளங்களையும், அந்தந்த தோஷங்களின் நிலைமைகளுக்கேற்றவாறு உபயோகிக்கலாம். ஜ்வரத்தினால் அரோசகம் உண்டாயிருக்கையில், கொடிமாதுளையின் உட்சதையில் நெய்யும் இந்துப்பும் சேர்த்து வாயில் அடக்கி வைத்துக்கொள்ளலாம்; அல்லது நெல்லிக்கனி, திராக்ஷை, சர்க்கரை இவற்றின் கல்கத்தையாவது வாயில் அடக்கிக்கொண் டிருக்கலாம்.—125, 126.

**நாட்பட்ட ஜ்வரத்தில் அப்யங்க-லேப-ஸேகங்கள்:**—சர்மத்தைப்பற்றிய நாட்பட்ட ஜ்வரத்தில் அவரவரது அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு சீதவீர்யமான வஸ்துகளாலோ உஷ்ண வீர்யமான வஸ்துக்களாலோ தயார் செய்யப்பெற்ற அப்யங்க ஔஷதங்களையும், லேபங்களையும், ஸேகங்களையும், அஞ்ஜநங்களையும், தூமங்களையும் அப்பிணியாளிகளுக்குப் பிரயோகிக்கலாம். ஆகந்துக ஜ்வரங்களிலும் முற்கூறிய அப்யங்க-லேபாதிகளை அங்ஙனமே பிரயோகிக்கலாம்.—127, 128.

**தாப ஜ்வரத்தில் சீதளமான தைல-கஷாயாதிகளால் லேபநஸ்நாநாதிகள்:**—(1) ஜ்வரத்தில் தாபம் அதிகமாயிருக்கையில் ஆயிரந்தடவை கழுவியெடுத்த நெய்யினால்[3] அப்யங்கம் செய்யவேண்டும். (2) ஸூத்திரஸ்த்தாநத்திற்கூறிய மதுரத்திரவ்ய வர்க்கத்திலும், அம்லத்திரவ்ய வர்க்கத்திலும், கஷாயரஸ வர்க்கத்திலும்[4]

---

1. கல்பஸ்த்தாநத்தில் 4-ம் அத்தியாயம் பார்க்க.

2. விரேசந நஸ்யம் முதலியன—முதற் புத்தகம் பார்க்க.

3. இது ஸஹஸ்ரா தௌதக்ருதம் எனப்படும்; ஜலத்திலோ, அந்தந்த வியாதிகளுக்கேற்ற குணமுள்ள கஷாயாதிகளிலோ ஆயிரந்தடவை குழப்பிக் குழப்பி யெடுக்கப்பட்ட நெய்.

4. மதுரத்திரவ்யவர்க்கம் முதலியன—முதற் புத்தகம் பார்க்க.

மொழியப்பட்டுள்ள அந்தந்த வஸ்துக்களையாவது, சீதவீர்ய மாகவும்-பித்தஹரமானவையுமான சோதநாதிகணஸங்கிரஹாத்தி யாயத்திற் கூறியுள்ள தூர்வாதிகணங்கள் முதலியவற்றைச் சேர்ந்த வஸ்துக்களையாவது[1] க்வாதங்களாகச் செய்தும், கல்கங் களாகச் செய்தும், அவற்றில் பாலையும் சேர்த்துத் தைலம் காய்ச்சி யெடுத்து தேஹத்தில் அப்யங்கம் செய்தால் உடனே தாபம் நீங்கும். (3) அந்தக் கணங்களைச் சேர்ந்த வஸ்துக்களையே ஒருவாறு நன்கு மசியாமல் இடித்து அரைத்து, சிரஸ்ஸிலும் மற்ற அவயவங்களிலும் நன்றாகத் தேய்த்துப் பூசலாம். (4) அந்த கணங்களிற் கூறிய வஸ்துக்களாலான க்வாதத்தையே தேஹத் தில் ஊற்றிவரலாம்; அல்லது அக்கஷாயத்தில் அமிழ்ந்து ஸ்நாநம் செய்யலாம். 129—131½.

தாபஜ்வரத்தில் காடி முதலியவற்றால் ஸ்நாந - ஸேகாதி கள் :—(1) காடி, தண்ணீர், பால், சுக்தம்,[2] நெய் இவை முதலிய வற்றாலும் முற்கூறியவண்ணமே தாபஜ்வரத்தில் லேப-ஸ்நாநாதி களைச் செய்யலாம். (2) விளாம்பழம், கொம்மட்டி மாதளையின் சாறு, பெருங்குமிழன், வெள்ளிலோத்தி, மாதளை இவற்றைத் தேஹத்திற் பூசுவதாலும், இலந்தந்தளிரைக் கசக்கி யெடுப்ப தால் உண்டாகும் நுரையைப் பூசுவதாலும், ஏதேனும் அரிஷ் டத்திலுண்டாகும் நுரையைத் தேஹத்தில் தேய்ப்பதாலும் அழற்சி, வலி, மபக்கம், வாந்தி, நாவறட்சி இவை தணியும். (3) முன்பு தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில் விவரித்த பித்த ஹரமான முறை[3]யையும் உபயோகித்தால் மிகவும் அழற்சியோடு கூடிய ஜ்வரம் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். **132—134½.**

சீத ஜ்வரத்தில் தகராதி அப்யங்கம்:—கிரந்திதகரம், அகில், குங்குமப்பூ, கோஷ்டம், மாசிப்பத்திரி, கல்லுருவி, ஸரளதேவ தாரு, தேவதாரு, நகம் என்னும் கந்தத்திரவ்யம், சிற்றரத்தை, மாசிக்காய், கருங்கச்சோரம், ஏலம், சிற்றேலம், கச்சோரம், முருங்கை, துளஸி, ஜடாமாம்ஸி, சுக்குநாறிப் புல், கடுகு, தச மூலம்,[4] சீந்தில், ஆமணக்கு, சிற்றாமணக்கு, நீர்த்திப்பிலி, காவட் டம்புல், தமாலபத்திரம், நிலவேம்பு, குந்துருகம், கொத்தமல்லி விதை, ஓமம், சதகுப்பை, உளுந்து, கொள், சித்திரமூலம், புங்கு, தும்பராஷ்ட்ரம், ஈச்வரமூலி இவற்றாலும், இவற்றைப் போல

1. தூர்வாதிகணம், நியக்ரோதாதிகணம், பத்மகாதிகணம், சாரிபாதி கணம் இவை "தூர்வாதிகணம் முதலிய" என்பதால் குறிக்கப்படுகின் றன; இவற்றைப்பற்றிய விவரங்களுக்கு ஸூத்திரஸ்த்தாநம் பார்க்க.

2. சுக்தம் — முதற் புத்தகம் பார்க்க.

3. ஸூத்திரஸ்த்தாநம், பதின்மூன்றும் அத்தியாயம் பார்க்க.

4. தசமூலம்—முதற் புத்தகம் பார்க்க.

உஷ்ண வீர்யங்களாகவும் பரிசிப்பதற்குச் சூடாகவுமுள்ள சரக்குகளாலும் பக்குவமான கஷாயங்களிலும், ஸுரை ஸௌவீரம் முதலான மதுவகைகளிலும் முற்கூறியவற்றைப் போன்ற சரக்குகளைக் கல்கமாகவும் சேர்த்துத் தைலம் காய்ச்சவும். இளஞ்சூடாயிருக்கையில் இத்தைலத்தைக்கொண்டு சீத ஜ்வரத்தில் அப்பங்கம் செய்யலாம். 135—139¼.

சீதஜ்வரத்தில் நடுக்கத்தைத் தணியச் செய்யும் லேபந-ஸ்வேதநாதி முறைகள்:—(1) சீதஜ்வரத்தில் முற்கூறிய கிரந்திதகரம் முதலிய சரக்குகளை நன்றாக அரைத்து உடம்பிற் பூசலாம். (2) அச் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய இளஞ்சூடான கஷாயத்தினால் தேஹத்தை நனைக்கலாம். (3) அல்லது அக் கஷாயத்தில் அமர்ந்து ஸ்நாநம் செய்யலாம். (4) அங்ஙனமே சுக்தம், கோமூத்திரம், மஸ்து[1] இவற்றைக் காய்ச்சாமலே ஸேசநம் செய்யவும்[2] ஸ்நாநம் செய்யவும் உபயோகிக்கலாம். (5) ஆரக்வதாதி கணத்திற்[3] கூறிய சரக்குகளையும் குடிநீராகப் பக்குவம் செய்து பருகுவதற்கும், அப்யங்கம் செய்வதற்கும், லேபநம் செய்வதற்கும் உபயோகிக்கலாம். (6) விஷம ஜ்வரத்திற்காக இனி கூறப்போகிற அகரு முதலியவற்றாலான தூபங்களையும் சீதஜ்வரத்திற் பிரயோகிக்கலாம். (7) அக்னி ஸம்பந்தத்தினாலும், அக்னிஸம்பந்தமில்லாமலும் வியர்வையை யுண்டுபண்ணலாம். (8) ஸ்வேதியென்னும் வியர்வை யுண்டாக்கும் ஔஷதத்தை உட்கொள்ளலாம். (9) கர்ப்பக்ருஹம் என்னும் வீட்டு அறையின் கீழ் அமைந்துள்ள வெப்பமான பிரதேசத்தில் படுத்திருக்கலாம். (10) கனத்த நூற்கம்பளம், கம்பளம், துப்பட்டி இவற்றைப் போர்த்துக் கொள்ளலாம். (11) தூமமின்றி ஜ்வலித்துப் பிரகாசிக்கும் தணல்கள் அடங்கிய அக்னிகுண்டத்தை அருகில் வைத்துக்கொள்ளலாம். (12) மதுபானம் செய்யலாம். (13) த்ரிகடுவைப் பொடித்துச் சேர்த்து புளித்த மோரைப் பருகலாம். (14) கொள், நெல், கோத்ரவதானியம் இவற்றை வேகவைத்து அவற்றிலிருந்து கிளம்பும் ஆவியையும் தேஹத்திற் பாவச்செய்யலாம். (15) குளிரால் நடுக்கமுண்டவன் முற்கூறிய சிகித்ஸைகளைச் செய்துகொள்வதோடு, பித்தத்தை விருத்திசெய்யுங் குணமுடைய வேறு சிகித்ஸையையும் செய்துகொள்ளலாம். (16) கனத்த சரீரத்தையுடையவர்களாய், விலாஸமான நடையுடைகளை யுடையவர்களாய், யௌவனத்தினாலும் மதுபானத்தினாலும் மதங்கொண்டவர்களுமாயுள்ள மங்கையர்கள் அப்பிணியாளியை ஆலிங்கனம் செய்து,

1. மஸ்து—முதற் புத்தகம் பார்க்க.
2. ஸேசநம் — தேஹத்தை நனைத்தல்.
3. ஆரக்வதாதிகணம்—முதற் புத்தகம் பார்க்க.

குளிரும் நடுக்கமும் நீங்கியபின்பு அவர்கள் அவனை விட்டு விலகி விடவும் செய்யலாம். 140—145½.

ஸந்நிபாதஜ்வரத்தில் சிகித்ஸை ஆரம்பிக்கும் முறை:—ஸந்நிபாத ஜ்வரத்தில் தாழ்ந்திருக்கும் தோஷத்தை விருத்தி செய்தும், மேலோங்கியிருப்பதைக் குறையச் செய்தும் தோஷங்களின் கோளாறுகளைப் பரிஹரிக்கவேண்டும். மூன்று தோஷங்களும் ஒரே சீராக பலம்பெற்றுப் பிரகோபித்திருந்தால், கபஸ்த்தாநத்தில் முதலில் சிகித்ஸையை ஆரம்பித்து, முறையே மற்றத் தோஷங்களுக்கும் பரிஹாரம் செய்ய முயலவேண்டும்.—146½.

ஸந்நிபாதஜ்வரத்தின் இறுதியிலுண்டாகும் கர்ணமூல சோதைக்கு சிகித்ஸை:—ஸந்நிபாத ஜ்வரத்தில் கடைசி நிலைமையில் காதின் அடியில் மிகக் கடுமையான ஒரு வீக்கம் உண்டாவதுண்டு. அவ்வீக்கத்தினால் பீடிக்கப்படுபவருள் எவனோ ஒருவனே அதினின்றும் மீட்சிபெறுவான். இரத்தத்தை வெளிப்படுத்துவதாலும், க்ருதபானங்களைச் செய்வதாலும், கபஹாரமான பூச்சுகளிடுவதாலும், நஸ்யப்பிரயோகங்களாலும், கபளங்களாலும் அவ்வவஸ்த்தையைப் போக்கலாம்.—147, 148½.

ஜ்வரத்தில் ஸிராவ்யதை செய்யும் நிலைமை:—முற்கூறிய சீதசிகித்ஸை, உஷ்ண சிகித்ஸை, ரூக்ஷசிகித்ஸை இவை முதலியவற்றால் ஜ்வரம் தணியவில்லையானால் ஜ்வரம் சாகையைப் பற்றியதா யிருக்கக்கூடும்; அப்பொழுது ஐடிதியில் ஒவ்வொரு கையிலும் கிரமமாக ஸிராவ்யதை செய்யவேண்டும். விஷம ஜ்வரத்திலும் வாதாதி தோஷங்களின் நிலைமைகளை அறிந்து, அததற்குத் தகுந்தவாறு ஸிராவ்யதையைப் பிரயோகிக்கலாம்; இனி கூறப்படும் சிகித்ஸைகளையும் செய்யலாம்.—149, 150½.

விஷம ஜ்வரத்தில் படோலாதி க்வாதங்கள்:—பேய்ப்புடல், கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, கடுக்காய், அதிமதுரம் இவற்றில் மூன்று மூன்று சரக்குகளையோ, நான்கு நான்கு சரக்குகளையோ, அல்லது ஐந்து சரக்குகளையுமோ சேர்த்துக் கஷாயம் காய்ச்சி உபயோகிக்க, விஷம ஜ்வரம் போகும்.—151½.

விஷமஜ்வரத்தில் த்ரிபலை முதலியவற்றை யுபயோகித்தல்:—(1) த்ரிபலையையும், கடுக்காயையும், சீந்திற் கொடியையும், திப்பிலியையும் தனித்தனியாகவும் விஷம ஜ்வரத்திற் பிரயோகிக்கலாம். (2) சேராங்கொட்டையை அந்தந்த முறைப்படி வெல்லம் முதலிய வெவ்வேறு வஸ்துக்களோடு சேர்த்துப் பக்குவம் செய்தாவது விஷம ஜ்வரத்தில் உபயோகிக்கலாம்.—152½.

விஷமஜ்வரத்தில் லங்கந-ப்ருஹ்மணங்கள்:—ஜ்வரம் வரக்கூடிய தினத்தில் லங்கநசிகித்ஸையையும் ப்ருஹ்மண சிகித்ஸையையும் முறைப்படி பிரயோகிக்கலாம்.—153.

விஷமஜ்வரத்தில் வேள்ளுள்ளி, பால், தயிர், க்ருதம் முதலியவற்றின் பிரயோகம்:—(1) காலையில் வெள்ளுள்ளியை நல்லெண்ணெயிற் கலந்துப் புசித்து விடலாம். (2) போஜனத்திற்கு முன்பு புராணக்ருதத்தையாவது[1] பானம் செய்யலாம். (3) அங்ஙனமே தயிர், பால், மோர் இவற்றையும் பருகலாம். (4) ஷட்பலக்ருதத்தையாவது,[2] கல்யாணக க்ருதத்தையாவது,[3] பஞ்சகவ்யக்ருதத்தையாவது,[4] திக்தக க்ருதத்தையாவது,[5] வ்ருஷக்ருதத்தையாவது[6] போஜனத்திற்குமுன் பருகலாம்.—154, 154½.

விஷம ஜ்வரத்தில் த்ரிபலாதிக்ருதம்:—த்ரிபலை, இலந்தை, தழுதாழை இவற்றின் கஷாயத்தில் தயிர் சேர்த்து, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும்; அதில் வெள்ளிலோத்திப் பட்டையைக் கல்கமாகவும் சேர்க்கவேண்டும். அந்த க்ருதம் விஷமஜ்வரத்தைப் போக்குவதில் சிறந்த ஔஷதம்.—155½.

விஷம ஜ்வரத்தில் ஸுரை முதலியதைப் பருகி வாந்தி செய்தல்:—(1) ஸுரையையும்,[7] தீக்ஷ்ண வீர்யமுள்ள மதுவையும், மயில், தித்திரி யென்னும் பக்ஷி, கோழி இவற்றின் இறைச்சியையும், உஷ்ண வீர்யத்தில் நடுத்தரமான வேறுவித மாம்ஸத்தையும் அன்னத்தோடு ஜ்வரம் வருகிற தினத்தில் நன்குப் புஜித்து நித்திரையுறவும்; (2) அல்லது அவற்றை மறுபடி வமநம் செய்துவிடவும். (3) க்ருதத்தை உத்தம மாத்திரையாகப் பருகி மீண்டும் வாந்தி செய்துவிடலாம்.—156, 157½.

விஷம ஜ்வரம் வருகையில் க்வாதம்:—ஜ்வரம் வரும்போது ஸ்நேஹ-ஸ்வேத சிகித்ஸைகளைச் செய்துவிட்டு, கருஞ்சாறடை, இராமதுளஸி, சிவதைவேர், கடுகரோஹிணி இவற்றைத் தனித்தனியே க்வாதமாகச் செய்து உட்கொள்ளலாம்.—158½.

விஷம ஜ்வரத்தில் அஞ்ஜநம்:—மனச்சிலை, இந்துப்பு, திப்பிலி இவற்றைத் தைலம்விட்டுத் தேய்த்து, விஷம ஜ்வரம் வருகையில் கண்களுக்கு அஞ்ஜநமிடலாம்.—159.

---

1. புராண க்ருதம்—ஒரு வருஷம் முதல் பத்து வருஷம் வரையில் பழகிய நெய்.

2. ஷட்பலக்ருதம்—க்ஷய சிகித்ஸையில் கூறப்படும் முறை.

3. கல்யாணக க்ருதம் — உத்தரஸ்த்தாநத்தில் உந்மாதப்ரதிஷேதாத்தியாயத்திற் கூறப்படும் முறை.

4. பஞ்சகவ்ய க்ருதம் — உத்தரஸ்த்தாநத்தில் அபஸ்மாரப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.

5. திக்தக க்ருதம்—குஷ்ட சிகித்ஸையில் கூறப்படும் முறை.

6. வ்ருஷக்ருதம்—இரத்த-பித்த சிகித்ஸையில் கூறப்படும் முறை.

7. ஸுரை — முதற் புத்தகம் பார்க்க.

விஷமஜ்வரத்தில் நஸ்யமிடுதல்:—(1) பெண் புலியின் கொழுப்பும், காயமும் ஸமபாகமா யெடுத்து, இந்துப்பும் கலந்து இழைத்து விஷமஜ்வரத்தில் நஸ்யமிடலாம். (2) அவ்விதமே புராணக்ருதத்தையும் சிங்கத்தின் கொழுப்பையும் இந்துப்பையும் கலந்து நஸ்யமிடலாம்.—160.

ஜ்வரத்தில் அபராஜிதாதி தூபங்கள் முதலியன:—(1) சிறு நெரிஞ்சி, வேப்பிலை, வசம்பு, கோஷ்டம், கடுக்காய், வெண்கடுகு, வாற்கோதுமை இவற்றுடன் நெய் கலந்து, தணலிலிட்டு, அதி லிருந்தெழும் தூமத்தை உட்கொள்ளலாம். (2) பூனையின் மலத்தையும் தணலில் சேர்த்து, அதன் தூமத்தையும் உறிஞ்சலாம். (3) குங்கிலியம், வாஸனைப்புல், வசம்பு, ஸர்ஜரஸம்,[1] வேம்பு, எருக்கு, அகில், தேவதாரு இவற்றைக் கொண்டு பிரயோகிக்கப் படுவது அபராஜிததூபம் எனப்படும்; இத் தூபத்தை எல்லா ஜ்வரங்களிலும் பிரயோகிக்கலாம். (4) சித்த விகார சிகித்ஸாத்தியாயங்களில்[2] கூறப்படும் தூபந முறைகளும், நஸ்யமுறைகளும், அஞ்ஜநமுறைகளும், விரட்டுவதும் ஆக இவை கூட இவ்வியாதியில் ஏற்ற சிகித்ஸைகளாம்.—161, 162½.

விஷமஜ்வராதிகளில் தைவாச்ரயமான சிகித்ஸை:—தேவதாஸம்பந்தமான சிகித்ஸையும்[3] ஸகல ஜ்வரங்களையும் போக்க வல்லது; விஷமஜ்வரங்கள் பெரும்பாலும் ஆகந்துக காரணங்களால் உண்டாவதால், அந்த ஜ்வரங்களை விசேஷமாக இச் சிகித்ஸையினால் போக்கலாம்.—163½.

விஷம ஜ்வரத்தில் ஸிராமோக்ஷணம்:—விஷம ஜ்வரமானது முற்கூறிய சிகித்ஸைகளால் நிவாரணமாகாமற் போனால், அதில் அந்தந்த தோஷம் முதலியவற்றின் நிலைமைகளுக் கேற்றவாறு ஸிராவ்யதையைச் செய்யவேண்டும்.—164.

வாதஜ்வர-விஸர்ப்பஜ்வராதிகளின் சிகித்ஸை:—வாதத்தினால் மாத்திரம் உண்டான ஜ்வரத்திலும், விஸர்ப்பம்-கொப்புளங்கள்-அபிகாதம் இவற்றாலுண்டான ஜ்வரங்களிலும் க்ருதபானம் செய்வதும், பனிநீரைப் பூசுவதும், அவ்வித குளிர்ந்த வஸ்துக்களை மேலே ஊற்றுவதும், மாம்ஸரஸத்தைக் குடிப்பதும்

---

1. ஸர்ஜரஸம்.—மட்டிப்பால் எனப்படும் தூபநவஸ்து.

2. உத்தர ஸ்த்தாநத்தில் உன்மாதப்ரதிஷேதாத்தியாயத்திலும், அபஸ்மாரப்ரதிஷேதாத்தியாயத்திலும் விவரிக்கப்படும் தூபங்கள்.

3. ஹோமம் செய்தல், அர்ச்சித்தல், கோயில்களுக்குச் சென்று இஷ்டதேவதைகளை வழிபாடு செய்தல், மணி மந்திராதிகளைப் பிரயோகித்தல் முதலியவை தேவதாஸம்பந்தமான சிகித்ஸைகளாம்.

கலம். அந்தந்த நிலைமைக்கு ஏற்ப முற்கூறிய இரத்தமோக்ஷணம் முதலிய சிகித்ஸைகளையும் நிறைவேற்றலாம்.—165, 165½.

கிரஹாதிகளாலுண்டாகும் ஜ்வரத்திற்கு சிகித்ஸை :—பூதக் கிரஹங்களால் ஸம்பவிக்கும் ஜ்வரத்தில் பூத வித்யையில் விவரிக்கப்படும் விதமாய் தேவதார்ச்சனை செய்தல், மந்திரங்களைப் பிரயோகித்தல் முதலிய முறைகளை நிறைவேற்றவும்.—166.

ஓஷதிகந்த - விஷப்பற்றுகளாலான ஜ்வரங்களுக்கு சிகித்ஸை :—சில ஓஷதிகளுடைய வாஸனையை முகர்வதாலுண்டான ஜ்வரத்தில் பித்தஹரமான சிகித்ஸையைச்[1] செய்யவேண்டும். விஷஸம்பந்தமான ஜ்வரத்தில் விஷஹரமான சிகித்ஸையைப்[2] பிரயோகிக்கவேண்டும்.—166½.

மனோவிகாரம் முதலியவற்றாலான ஜ்வரங்களுக்கு சிகித்ஸை :—(1) இஷ்டமாகவும் இன்பமாகவுமுள்ள விஷயங்களைப் பூர்த்திசெய்து வைப்பதாலும், நன்மை தீமைகளைப் பகுத்துணரச் செய்தலாலும், அந்தந்த தோஷக் கோளாறுகளுக்கு ஏற்ற பரிஹாரங்களைப் பண்ணுவதாலும் சினம் முதலிய மனோவிகாரங்களால் உண்டாகும் ஜ்வரத்தைப் போக்கலாம். கோபத்தினு லுண்டான ஜ்வரம் சிற்றின்பப் பற்றுதலாலும், காமத்தினு லுண்டானது சினத்தினுலும், பயம் சினம் இவ்விரண்டாலும் ஸம்பவித்த ஜ்வரம் காமக்ரோதங்களாலும், காமக்ரோதங்களால் உண்டானது பய-கோபங்களாலும் தீரும். சாபத்தீடு, அதர்வணமந்திரப் பிரயோகம் இவற்றால் உண்டாகும் ஜ்வரத்தில் தேவதாப்ரீதிகரமான சாந்திகர்மங்களை நிறைவேற்றவேண்டும். (2) முற்கூறிய ஜ்வரங்கள் முதலில் தோஷ ஸம்பந்தமில்லாமல் வெறும் ஜ்வரங்களாயிருந்து, அப்பால் தோஷங்களோடு பற்றிப் பரவுகின்றன; ஆகவே பிறகு தோஷத்தன்மைகளை அனுஸரித்து அந்த ஜ்வரங்களில் ஆஹாரம் முதலியதை யேற்படுத்தவேண்டும். வேறு காரணங்களாலான ஜ்வரங்களிலும் வாதாதி தோஷங்களின் பற்றில்லாமல் ஜ்வரம் தொடர்வதில்லை. 167—170½.

ஜ்வரம் வரும் ஸமயத்தை மறப்பது முதலியது :—ஜ்வரம் உண்டாகும் ஸமயத்தையும், ஜ்வரம் வருமென்கிற நினைவையும் இப்பிணியாளிக்கு வேறுவிதமான இனிய விஷயங்களில் மனதைச் செலுத்திப் போக்கிவிட வேண்டும். மனது கருணைமே

1. பித்தஹரமான சிகித்ஸை — ஸூத்திரஸ்த்தானத்தில் தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

2. விஷஹர கிகித்ஸை — ஸூத்திரஸ்த்தானத்தில் 7-வது அத்தியாயத்திலும், உத்தரஸ்த்தானத்தில் 36, 37, 38 இவ்வத்தியாயங்களிலும் இவ்விஷயமான விவரங்களைக் காணலாம்.

விட்டு மிருதுவாகவும் பரிசுத்தமாகவும்மிருந்தால், அதுவே எல்லா ஜ்வரங்களையும் தீர்க்கவல்லது.—171½.

ஜ்வரம் நிவ்ருத்தியானதும் அனுஸரிக்கவேண்டிய நியமம் :—தேஹத்தில் இயற்கையான வலிமை யேற்படும் வரையில் வியாயாமம், ஸ்நாநம், புணர்ச்சி, குருவாகவும் அஸாத்மியமாகவும் காந்தலாகவுமுள்ள உணவு இவற்றையும், ஜ்வரத்திற்குக் காரணமான மற்றவைகளையும் பரிஹரித்துவிடவேண்டும். ஜ்வரம் விட்டிருந்த போதிலும் எல்லா உணவுகளையும் உடனே உபயோகித்துவிடக் கூடாது; அங்ஙனம் உபயோகித்தால், நிவ்ருத்தியான ஜ்வரம் பலஹீனமாயுள்ள அப்பிணியாளிக்கு மீண்டும் ஸம்பவித்து எளிதில் உயிர்ச்சேதம் உண்டாக்குமாகையால், அதற்கு அந்தந்த நிலைமையைக் கவனித்து ஏற்ற சிகித்ஸையை அடிக்கடியும் செய்துவரவேண்டும். 172—174.

உக்கிரமான ஜ்வரங்களில் மணி மந்திர ஓஷதிகளின் பிரயோகம் :—சிறந்த ஓஷதிகளை யுபயோகிப்பதும், இரத்தினங்களைத் தரிப்பதும், ஸுகந்தங்களை யுபயோகிப்பதும், மேன்மக்கள்-ஆசார்யர்கள்-அந்தணர்கள்-தைவம் இவர்களைப் பூஜிப்பதும், மனதுக்கு இன்பமான விஷயங்களை அனுபவிப்பதும் ஆக இவை யாவும் விஷ்ணுவினால் உண்டாக்கப்படும் உக்கிரமான ஜ்வரத்தையும் தீர்த்துவிடும்.[1]—175.

---

## இரண்டாம் அத்தியாயம்.

### இரத்த-பித்த சிகித்ஸை.

இனி இரத்த-பித்த சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

ஸுகஸாத்யமான இரத்த-பித்தம் :—மேல் நோக்கி முகமார்க்கத்தினால் வெளியாகும் இரத்த-பித்தமும், நல்ல தேஹவலிமையுள்ளவனுக்கு உண்டாகும் இரத்த-பித்தமும், அதிகவேகத்துடன் உண்டாகாததும், ஒரே தோஷத்தை ஆதாரமாகக் கொண்டு உண்டாவதும், புதிதாக உண்டானதும், எளிதில் நிவ்ருத்திக்கக்கூடிய காலத்தில் ஸம்பவித்ததும், உபத்திரவங்களோடு ஸம்பந்திக்காததும் ஆக இத்தகைய இரத்த-பித்தங்களும் கஷ்டமின்றி பரிஹரிக்கக் கூடியவையாம்.—1.

---

1. விஷ்ணுவினிடம் அபசாரப்படுவதால் உண்டாகும் ஜ்வரம் எனப் பொருள்; இது எல்லா ஜ்வரங்களினும் மிகக் கடுமையானது.

யாப்யமான இரத்த-பித்தம் :—கீழ் நோக்கி குதமார்க்கத்தினல் வெளியாகும் இரத்த-பித்தமும், இரண்டு தோஷங்களால் உண்டாகும் இரத்த-பித்தமும் யாப்யங்களாகும்.[1]—1½.

அஸாத்தியமான இரத்த-பித்தம் :—அடிக்கடியும் தணிவடைந்து மீண்டும் விருத்தியாய் விடுவதும், ஒரு மார்க்கத்தினல் வெளியாய்க் கொண்டிருந்து அவ்வழியிலிருந்து மற்ருெரு மார்க்கத்திற் கிளம்புவதும், அபரிமிதமாய் வெளியாய்க் கொண்டிருப்பதும், ஜாடராக்னி மந்தப்பட்டுள்ளவனுக்கு ஸம்பவிப்பதும், மூன்று தோஷங்களாலுண்டானதும், கீழ்-மேல் இரண்டு வழிகளாலும் வெளிப்படுவதுமான இரத்த-பித்தங்கள் யாவும் சிகித்ஸைக்குத் தகாதவையாம்.—2½.

பலவிதமான இரத்த-பித்தங்களில் போதுவான சிகித்ஸா விதிகள் :—தேஹவன்மையுள்ளவனும் மிக்க அதிகரித்த தோஷமுள்ளவனுமான மனிதனுக்கு ஸந்தர்ப்பணத்தினல்[2] ஏற்பட்டதும், மேல் நோக்கி முகம் முதலியதால் வெளிவருவதுமான இரத்த-பித்தத்தை விரேசந சிகித்ஸையினுல் நிவ்ருத்தி செய்ய வேண்டும். குதம் முதலியவற்றின் மூலமாய் கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தை வமநம் செய்வித்து நிவ்ருத்தி செய்ய வேண்டும். துர்ப்பலமா யிருப்பவனும் சொற்ப தோஷப் பிரகோபத்தைப் பெற்றவனுமான மனிதனுக்கு லங்கநாதிகளால் உண்டான மேல் நோக்கிய இரத்த-பித்தத்தைச் சமந சிகித்ஸையினுலும்,[3] அதே விதமான மனிதனுக்குக் கீழ் நோக்கியுண்டான இரத்த-பித்தத்தை ப்ருஹ்மண சிகித்ஸையினுலும்[4] நிவ்ருத்தி செய்யவேண்டும். மேலும் முற்கூறிய சிகித்ஸைகளை ஆரம்பிப்பதற்கு முன் அப்பிணியாளிகள் லங்கநத்திற்குத் தகுந்தவர்களா ப்ருஹ்மணத்திற்குத் தகுந்தவர்களா வென்று பரிசோதித்துப் பார்க்கவும் வேண்டும்.—3, 4.

மேல் நோக்கிய இரத்த பித்தத்தில் சமந சிகித்ஸை :—மேல் நோக்கிவரும் இரத்த-பித்தத்தில் திக்தரஸமும் கஷாய ரஸமுமுள்ள பதார்த்தங்கள் சமநம் செய்வதற்கு உபயோகமானவை; சுக்கு இல்லாமல் பக்குவம் செய்யப்பட்ட ஷடங்கபாநீயத்தைப்[5] பருகி லங்கநமிருப்பதும் சமநமாகும்.—5.

1. யாப்யம்—முதற் புத்தகம் பார்க்க.
2. ஸந்தர்ப்பணம்—முதற் புத்தகம் பார்க்க.
3. சமநம்—முதற் புத்தகம் பார்க்க.
4. ப்ருஹ்மணம்—த்விவிதோபக்ரமணீயாத்தியாயம் பார்க்க.
5. ஷடங்கபாநீயம்—பித்த-ஜ்வரத்தில் குடிநீர் என்பதைப் பார்க்க.

கீழ்நோக்கிய இத்த-பித்தத்தில் ப்ருஹ்மண சிகித்ஸை :—குதம் முதலியவற்றால் கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தில் மதுர ரஸமுள்ள பதார்த்தங்களின் ரஸத்தைக்கொண்டு ப்ருஹ்மண சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—5½.

இரத்த-பித்தத்தில் தர்ப்பணமும் பேயாவும் :—மேல் நோக்கிய இரத்த-பித்தத்தில் முதலில் தர்ப்பணமும், கீழ்நோக்கிய இரத்த-பித்தத்தில் முதலில் பேயாவும் யுக்தமாகும்.—6.

இரத்த-பித்தத்தில் இரத்தத்தை அடக்குவது முதலியது :—உணவுகளைப் போதுமாறு புஜித்துக்கொண்டு பலசாலியாயுள்ளவனுக்கு வெளியாகும் இரத்த-பித்தத்தை, அது அசுத்தமாயிருக்கையில் தடுக்கக் கூடாது; அவ்விதம் தடுத்தால் அவ்வசுத்த ரத்தம் ரோகங்களை யுண்டுபண்ணும்[1]; அங்ஙனமின்றி வேறுவிதமான மனிதனுக்கு[2] வெளிவரும் இரத்த-பித்தத்தைத் துரிதமாகத் தடுக்க முயலவேண்டும்; ஏனெனில் அக்னியைப்போல் அது சீக்கிரம் அபாயம் விளைவிக்கக்கூடியதாம்.—7.

இரத்த-பித்தத்தைத் தடுக்க த்ரிவ்ருத் அவலேஹம் :—வெண் சிவதை, கறுஞ் சிவதை இவற்றை இடித்துக் கஷாயமிடவும். அதில் சர்க்கரை சேர்த்து முறைப்படி லேஹ்யம் தயார் செய்யவும்.[3] அதைக் கால்பலமெடை இரத்த-பித்தத்தில் உபயோகிக்கலாம்.—8.

இரத்த-பித்தத்தில் த்ரிவ்ருதாதி மோதகம் :—(1) வெண் சிவதை, த்ரிபலை, கறுஞ்சிவதை, திப்பிலி, சர்க்கரை, தேன் இவற்றைச் சேர்த்து மாத்திரை செய்யவும்;[4] இது ஸந்நிபாதம், மேல் நோக்கிய ரத்த-பித்தம், சோகை, ஜ்வரம் இவற்றைப் போக்கும், (2) வெண் சிவதைக்குச் சம-அளவாய் சர்க்கரையும், அதற்குக் கால்பங்கு திப்பிலியும் சேர்த்து முன்போல் மாத்திரை செய்து, அதைப்போலவே உபயோகிக்கலாம்.—9, 9½.

---

1. ஸிராவ்யதவிதி அத்தியாயத்தில் (ஸூத்திர ஸ்த்தாநத்தில்) கூறியுள்ள விஸர்ப்பம், வித்ரதி, ப்லீஹரோகம் முதலியவை.

2. வேறுவித மனிதனுக்கு என்றால் — துர்ப்பலமா யிருப்பவன், போஜனம் செய்யாமல் பட்டினியிருப்பவன் முதலியவர்கள்.

3. “ஸிதா சதுர்குணா கார்யா சூர்ணாச் ச × × × ×” என்கிற விதிப்படி சிவதை முதலியவற்றின் இடித்த சூர்ணம் ஒரு பங்கானால் சர்க்கரை நான்கு மடங்கு சேர்த்து, பாகுபதத்தில் இறக்கிக்கொள்ளவும்.

4. சிவதை முதலியவற்றின் சூர்ணம் ஒரு பங்கானால், சர்க்கரை நான்கு மடங்கு சேர்த்து, சிறிதளவு தேன்சேர்த்து இடித்து மோதகங்கள் அல்லது மாத்திரைகளாகச் செய்யவும்.

கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தில் மதநாதி வமநம் :—மருக்காரைக் கனியோடு சர்க்கரையும் தேனும் கலந்து தர்ப்பண முறைப்படி வமநத்திற்குக் கொடுக்கலாம்; சர்க்கரை கரைந்த ஜலத்தையாவது மருக்காரையோடு பருகலாம்; அதிமதுரக் கஷாயத்திலாவது மருக்காரையும் தேனும் கலந்து கொடுக்கலாம்; மருக்காரையும் பாலுமாவது, மருக்காரையும் கருப்பஞ் சாற்றையுமாவது உட்கொள்ளலாம்.—10, $10\frac{3}{4}$.

இரத்த-பித்தங்களில் மந்த-பேயாதி பிரயோகங்கள் :—முற்கூறிய சோதந சிகித்ஸைகளால்[1] குடல் சுத்தி யடைந்தபிறகு, விரேசந-வமநாதி சுத்திகளுக்குத் தகுந்த சிகித்ஸா விதியானது, பிணியாளியின் தேஹபலத்தைக் காப்பதற்காக மந்தம் என்கிற கஷாயரூபமான உணவு, பேயாவென்கிற குடிநீர் இவை முதலியவற்றை உபயோகிப்பதேயாம்[2].—$11\frac{1}{2}$.

மேல் நோக்கிய இரத்த-பித்தத்தில் உபயோகிக்கத் தகுந்த மந்தங்கள் :—(1) ஜ்வர சிகித்ஸையிற் கூறிய திராக்ஷாதி மந்தத்தையாவது, (2) பித்தஹரமான கனிகளால் பக்குவம் செய்யப்பட்ட மந்தத்தையாவது,[3] உபயோகிக்கலாம். (3) தேன், பேரீச்சம்பழம், ஈச்சம்பழம், சர்க்கரை, திராக்ஷை இவற்றின் கூட்டு முறையினலான பஞ்சஸாரம் என்கிற மந்தத்தோடு நெற்பொரிமாவையும் நெய்யையும் சேர்த்து பக்குவம்செய்து, அந்த மந்தத்தையாவது உபயோகிக்கலாம். (4) ஜாடராக்னி மந்தப்பட்டிருப்பவருக்கும், அம்லரஸத்தை விரும்புபவருக்கும் புளித்த மாதுளையினுலும், நெல்லிக்கனியினுலும் ஆக்கிய மந்தத்தைக் கொடுக்கலாம்.—12, $13\frac{1}{2}$.

கீழ் நோக்கிய இரத்த - பித்தத்தில் உபயோகிக்கத் தகுந்த பேயாக்கள் :—கீழ் நோக்கிய இரத்த - பித்தத்திற்கு அடியிற் கூறப்படும் பேயாமுறைகள் உபயோகமானவை. (1) தாமரை-நைதல் இவற்றின் தாதுகள், சிற்றுமல்லி, ஞாழல். (2) வெட்டிவேர், உதியன், வெள்ளிலோத்தி, இஞ்சி, செஞ்சந்தனம். (3) மருகு, காட்டாத்திப்பூ, பில்வப்பழத்தின் உட்சதை, காஞ்சொறி. (4) நிலவேம்பு, வெட்டிவேர், கோரைக் கிழங்கு, (5) சிறுகடலை, சிற்றுமல்லி. (6) மோர்மல்லி, பேய்க்கரும்பு.

1. மேல் நோக்கிய இரக்த-பித்தத்திற்கான (த்ரிவ்ருத் அவலேஹம் முதலியதால்) விரேசந சிகித்ஸையும், கீழ் நோக்கிய இரத்த-பித்தத்திற்கான வமநசிகித்ஸையும் (மதநாதி வமநம்) இங்கு குறிக்கப்படுகின்றன.

2. மேல் நோக்கிய இரத்த-பித்தத்தில் மந்தங்களும், கீழ் நோக்கிய இரத்த பித்தத்தில் பேயாக்களும் உபயோகிக்கத் தகுந்தவை.

3. திராக்ஷை, நெல்லிக்கனி, குமிழன் முதலியவை.

(7) சிற்றுமுட்டி நெய், அரேணுகம்; என்கிற ஏழுவகையான முறைகளாம். 14—16½.

இரத்த-பித்தத்தில் உபயோகிக்கத் தகுந்த யவாகூ மாம்ஸ ரஸங்கள் :—சீதவீர்யமான ஜாங்கல மாம்ஸங்களை[1] முற்கூறிய ஒவ்வொரு பேயாவிலும் சேர்த்துத் தனித்தனியாகப் பக்குவம் செய்து வடித்து, அந்த மாம்ஸரஸத்தில் யவாகூ என்னும் கஞ்சி யினங்களைப் பக்குவம் செய்யவும்; அந்த யவாகூ முறைகள் பரி சத்திலும் வீர்யத்திலும் சீதளங்களாயிருக்கவேண்டும்; அவற்றில் சர்க்கரையும் தேனும் கலந்திடவும். அங்ஙனமே மாம்ஸ ரஸங் களைத் தனியாக நெய் சேர்த்துத் தாளித்துச் சொற்பம் புளிப்பு சேர்த்தோ அல்லது முற்றிலும் புளிப்பில்லாமலோ உபயோகிக்க லாம்; அவற்றில் சர்க்கரை கலந்தும் பருகலாம்.—17, 18½.

இரத்த பித்தத்திற்கேற்ற தானியமும் சாகமும் :—அன்னஸ்வ ரூப விஞ்ஞாநீய அத்தியாயத்தில்[2] குணத்தில் இலகுவாகவும் வீர்யத்தில் சீதமாகவும் கூறப்பட்டுள்ள சூகதானியங்களும், சிம்பீ தானியங்களும், சூக-சிம்பீ தானியக் கீரைகளும் இரத்த-பித்தத் தில் உபயோகிக்கச் சிறந்த வஸ்துக்களாம்.—19½.

இரத்த பித்தத்திற்கேற்ற பானவகைகள் :—இதற்கு முன் மொழியப்பட்ட ஷடங்கபாநீயத்தையாவது, இலகுபஞ்ச மூலங் களைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது, கொதித்து ஆறிய சுத்த ஜலத்தையாவது, தேன் சேர்த்த ஜலத்தையாவது, கனி வர்க்கங்களைச் சேர்த்து முற்கூறியவாறு காய்ச்சிய ஜலத்தையா வது இரத்த-பித்தத்தில் பருகலாம்.—20½.

இரத்த-பித்தத்தில் சில மாம்ஸங்களை யுபயோகிக்கும் நிலை மைகள் :—(1) இரத்த-பித்த ரோகிக்கு மலபந்தம் இருந்தால் சக்கரவர்த்திக் கீரையோடு முயல் மாம்ஸத்தைப் பக்குவம்செய்து கொடுப்பதும், (2) வாதம் அதிகரித்திருக்குமானால் அத்திப் பழக் கஷாயத்தில் பசநம் செய்த தித்திரி என்னும் பக்ஷியின் மாம்ஸம் உபயோகிப்பதும் நலம். (3) பூவரசின் கஷாயத்தில் சமைத்த மயிலிறைச்சியையும், (4) ஆலங்கனிக் கஷாயத்திற் பக்குவம் செய்த கோழி யிறைச்சியையும் அங்ஙனமே வாதம் அதிகரித்திருக்கையில் உபயோகிப்பது நலம்.—21, 22.

இரத்த-பித்தத்தில் நிதாந வர்ஜநம் :—எதை உபயோகித் தால் அல்லது எக்காரியத்தைச் செய்தால் இரத்த-பித்தம் உண் டாகின்றதோ அவ்வஸ்துவை அல்லது அக் காரியத்தை விலக்கி விட வேண்டும்.—22½.

---

1. ஜாங்கலம் — முதற் புத்தகம் பார்க்க.
2. ஸூத்திர ஸ்த்தாநத்தின் ஆறுவது அத்தியாயம் பார்க்க.

இரத்த-பித்தத்தில் ஆடாதோடையின்விசேஷஉபயோகம்:—(1) ஞாழல், கோபிசந்தனம், வெள்ளிலோத்தி, இரஸாஞ்ஜநம்,[1] தேன் இவற்றை ஆடாதோடையின் சாற்றிற்கலந்து உட்கொள்ள இரத்த-பித்தம் தீரும். (2) அல்லது ஆடாதோடையின் சாற்றில் சர்க்கரையும் தேனும் கலந்தும் பருகலாம். (3) அல்லது ஆடாதோடையின் ஸ்வரஸத்தை அப்படியே பருகலாம். (4) அதைக் காய்ச்சிக் குடிக்க, இரத்த-பித்தம் உடனே நீங்கும்; ஆடாதோடை இவ்வியாதிக்கு மிகமேலான ஔஷதமாகும். 23—25½.

இரத்த-பித்தத்தில் அநேக வகையான ஔஷதாதி முறைகள் :—(1) பேய்ப்புடல், ஜாதிமல்லிகை, வேம்பு, வெண் சந்தனம், செஞ்சந்தனம், தாமரைக் கிழங்கு. (2) வெள்ளிலோத்தி, ஆடாதோடை, அம்மான் பச்சரிசிக் கீரை, கிருஷ்ண ம்ருத்திகை யென்னும் ஒருவித கறுத்த மண், மல்லிகை. (3) தண்ணீர்விட்டான் கிழங்கு, வெளுத்த நன்னாரி, அதிமதுரம். இந்த மூன்று முறைகளில் எதையேனும் கஷாயமிட்டுச் சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொள்ள இரத்த-பித்தம் தீரும். (4) பலாசம் பட்டையைக் கஷாயமிட்டு, சூடு ஆறிய பின்பு சர்க்கரையும் சேர்த்து உட்கொள்ளலாம். (5) பசு, குதிரை இவற்றின் சாணத்தைப் பிழிந்தெடுத்து, அவற்றின் சாற்றைத் தேனும் நெய்யும் கலந்தாவது குடிக்கலாம். (6) இரத்தம் தோய்ந்துபோய் சட்டிக் கொண்டிருக்குமானல், மாடப்புருவின் மலத்தைத் தேனில் குழைத்து உட்கொள்ளலாம். (7) இரத்தம் அதிகமாய் வெளி வருமானல், ஜாங்கலதேசத்து ஜந்துவின் இரத்தத்தைத் தேனுடன் கலந்து உட்கொள்ளலாம். (8) அல்லது அந்த நிலைமையில் பித்தநீரடங்கிய ஆட்டின் கல்லீரலைப் பக்குவம் செய்யாமல் புஜிக்கலாம். (9) சந்தனம், வெட்டிவேர், கோரைக் கிழங்கு, நெற்பொரி, பயறு, திப்பிலி, வாற்கோதுமை இவற்றைச் சிற்றுமுட்டியின் கஷாயத்தில் ஊறவைத்து, அக்கஷாயத்தை வடிக்கட்டிப் பருகிவர இரத்த-பித்தம் தீரும். (10) சந்தனக் குழம்பு, தாமரைப்பூ, வெட்டிவேர் இவற்றைப் பழுக்கக் காய்ச்சிய மண்பாத்திரத்தில் தண்ணீரோடு சேர்த்து, அந்த நீர் குளிர்ச்சியான பின்பு, சர்க்கரையும் தேனும் கலந்து உடகொள்ள அதிகமாய் வெளியாகும் இரத்த-பித்தம் நிவ்ருத்தியாகும். (11) கருப்பங்கழிகளைத் துண்டு துண்டாக வெட்டி, நன்கு இடித்து, நூதனமான மட்பாத்திரத்தில் தண்ணீரூற்றி, அதில் ஊறவைக்கவும்; அப்பாத்திரத்தின் முகத்தை, மலர்ந்த தாமரைப் பூக்களால் மூடி, அதன்மேல் மூடியிட்டு, இரவெல்லாம் திறந்த வெளியில் அதை வைத்திருந்து, காலையில் அந்த ஜலத்தை வடித்தெடுத்துத்

1. இரஸாஞ்ஜநம்—முதற் புத்தகம் பார்க்க.

தேன்கூட்டி யுட்கொள்ள முற்கூறிய சந்தனக் குழம்பு முதலிய தாலான குடிநீரைப் போலவே இதுவும் குணம் செய்யும். (12) பித்த ஜ்வரத்தில் கூறப்பட்டிருக்கின்ற கஷாயங்களையும் இரத்த-பித்தத்தில் உபயோகிக்கலாம். 26—33.

இரத்த-பித்தத்தில் பலவிதமான க்ஷீரயோகங்கள்:—முற்கூறிய பலவகையான கஷாயங்களால் ஜாடராக்னி உத்தீபனமாய், கபமும் அடிக்கப்பட்டுப் போன பின்பும் இரத்த-பித்தம் தணியாவிட்டால், வாதம் உபரியாயுள்ள அத்தகைய இரத்த-பித்தத்தில் அடியிற் கூறப்படும் க்ஷீரயோகங்களை உபயோகிக்கலாம்: (1) ஆட்டுப்பாலை அதற்கு ஐந்து மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி உட்கொள்ளக் கொடுக்கலாம். (2) பசுவின் பாலையும் ஐந்து மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி யெடுத்து உபயோகித்தாலும் அவ்விதமே குணம் செய்யும். (3) அல்லது பசுவின் பாலை லகுபஞ்ச மூலங்களோடு சேர்த்துக் காய்ச்சி யெடுத்து, சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொள்வதும் நலம். (4) அல்லது ஜீவகம், ருஷபகம், திராக்ஷை, சிற்றுமுட்டி, நெரிஞ்சில், சுக்கு இவற்றில் தனித் தனியாகக் காய்ச்சி யெடுத்த பாலில் நெய்யும் சர்க்கரையும் கலந்து உட்கொள்ளலாம். (5) நெரிஞ்சில், தண்ணீர்விட்டாங் கிழங்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலும், (6) பர்ணிநீசதுஷ்டயத்தைச்[1] சேர்த்து பக்குவம் செய்த பாலும் வலியுடன் கூடிய இரத்த-பித்தத்தைச் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும்; முக்கியமாய் மூத்திர மார்க்கத்தினுல் வெளியாகும் இரத்த-பித்தத்தைப் போக்கும். (7) குதத்தின் வழியாக வெளியாகும் இரத்த-பித்தத்தில் இலவம்பிசின் சேர்த்துக் காய்ச்சிய பால் விசேஷமாய் ஹிதமானது. (8) ஆலம் விழுதைச் சேர்த்துக் காய்ச்சிய பாலாவது, (9) ஆலம் மொட்டுகளைச் சேர்த்துப் பக்குவம் செய்த பாலாவது, (10) சுக்கு, விளாமிச்சைவேர், கருநெய்தல் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலாவது குத மார்க்கத்தினுல் வெளியாகும் இரத்த-பித்தத்தில் அனுகூலமானவையாயிருக்கும். (11) இரத்தாதிஸாரத்திலும், இரத்தார்சஸ்ஸிலும் செய்யப்படுகிற சிகித்ஸைகளையும்[2] செய்யலாம். (12) முற்கூறிய கஷாயங்களைப்[3] பாலோடு பருகலாம்; (13) பாலைக் கலந்தே உணவுகளையும் புஜிக்கலாம். 34—38½.

---

1. பர்ணிநீசதுஷ்டயம்—19-வது பக்கம் பார்க்க.

2. இரத்தாதிஸார சிகித்ஸை இனி வரும் 9-ம் அத்தியாயத்திலும், இரத்தார்சஸ்ஸின் சிகித்ஸை 8-வது அத்தியாயத்திலும் விவரிக்கப்படுகின்றன.

3. இதற்கு முன் 26-வது முதல் 33-வது ச்லோகங்களின் மொழிபெயர்ப்பு வரையில் விவரிக்கப்பட்டுள்ள கஷாய வகைகள்.

இரத்த-பித்தத்திற்கேற்ற க்ருதபாகங்கள் :—(1) முற்கூறிய கஷாய முறைகளால் க்ருதத்தைப் பக்குவம் செய்தாவது இரத்த-பித்தத்திற் பருகலாம். (2) ஆடாதோடையை ஸமூலமாக இடித்து, எட்டுப் பங்கு ஜலத்தில் சேர்த்து, எட்டில் ஒருபங் காகச் சுண்டும்படி அதைக் கஷாயமாகக் காய்ச்சி, அதில் க்ருதத்தைப் பக்குவம் செய்யவும்; அந்த க்ருதத்தில் ஆடாதோடையின் புஷ்பத்தையே கல்கமாகச் சேர்க்கவும்; ஆறிய பிறகு க்ருதத்தில் தேன் சேர்த்து உபயோகிக்கவேண்டும். வாஸா க்ருதம் என்கிற இவ்வௌஷதம் இரத்த-பித்தத்தைப் போக்கும்; பித்த குல்மம், ஜ்வரம், ச்வாஸ-காஸம், இருதயத்தைப்பற்றிய ரோகம், காமாலை, திமிரம் என்கிற நேத்திரரோகம், தலைச்சுற்றல், விஸர்ப்பம், தொண்டைக்கம்மல் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். (3) பலாச மொட்டுக்களின் ஸ்வரஸத்தில், அதன் புஷ்பத்தையே கல்கமாகச் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்யவும்; அதில் தேன் கூட்டி யுட்கொள்ள இரத்த-பித்தம் தீரும். (4) கழற்சி இலையின் ஸ்வரஸத்தில் பக்குவம் செய்த க்ருதமும் தேன் கலந்து அங்ஙனமே உபயோகிக்கத் தகுந்தது. (5) இரத்தமானது பிசின் போன்றதாகவும், கபத்துடன் கூடியதாகவும், தோய்ந்துபோய் தொண்டையில் தங்கிக்கொள்ளுமானால், நெய்தலின் காம்புகளைச் சுட்டெடுத்த க்ஷாரத்தைத் தேனோடும் நெய்யோடும் கலந்து உட்கொள்ளலாம். (6) அங்ஙனமே தாமரைப் பூவிலுள்ள பொடிகளையும், சாமையின் க்ஷாரத்தையும், இலுப்பைப் பூவின் க்ஷாரத்தையும் தேன் நெய் கலந்து உபயோகிக்கலாம். 39—44.

இரத்த பித்தத்தில் வஸ்தி முறை :—இரத்த-பித்தம் குதத்தினால் அதிகமாய் வெளிவருமானால், அதற்கு விசேஷமாய் வஸ்திப்பிரயோகமே சிறந்ததென்று விதிக்கப்படுகிறது.—44½.

இரத்த-பித்தத்தில் நஸ்யமுறை :—(1) நாசியினால் வெளிவரும் இரத்த-பித்தத்தைச் சுத்தம் செய்த பிறகு முற்கூறிய கஷாய வகைகளைப் பால்-கருப்பஞ்சாறு முதலியவற்றோடு கலந்து நஸ்யமிடலாம். (2) முற்கூறியவாறு பக்குவம் செய்த பால் முதலானவைகளை நஸ்யமிடலாம். (3) ஜலத்தில் சர்க்கரையைக் கரைத்தாவது அல்லது சுத்த ஜலத்தையாவது நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். (4) மாதளம்புஷ்ப ஸ்வரஸத்தையாவது, (6) மாங்காயின் ஸ்வரஸத்தையாவது, (7) அறுகம்புல் ஸ்வரஸத்தையாவது நஸ்யமாகப் பிரயோகிக்கலாம்.—45, 46½.

இரத்த-பித்தத்தில் சில பொது சிகித்ஸைகள் :—சீதவீர்யமும் சீதஸ்பர்சமுமுள்ள பதார்த்தவர்க்கத்தை லேபநத்திற்கும், அப்யஞ்ஜநம் முதலியவற்றிற்கும் உபயோகிக்க வேண்டும். மேலும் பித்தஜ்வரத்தில் வெளியிலும் உள்ளும் எவ்வௌஷத

முறைகள் கூறப்பட்டுள்ளனவோ, க்ஷதக்ஷீணத்தில் ஹிதமானவை யென்று எம்முறைகள் கூறப்படுகின்றனவோ[1] அவையும் இரத்த-பித்தத்தில் ஹிதமானவையாம்.—47, 48.

---

## மூன்றும் அத்தியாயம்.

### காஸ சிகித்ஸை.

இதன்பிறகு காஸ சிகித்ஸையை விவரிக்கும் அத்தியாயம் வரையப்படுகின்றது :—

வாதகாஸத்திற்குப் போது சிகித்ஸை :—(1) வாதத்தினால் மாத்திரம் ஸம்பவிக்கும் காஸத்தில் முதலில் ஸ்நேஹங்களாலும்[2], வாதஹரமான சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்டு ஸ்நிக்த்தமாயுமுள்ள பேயாவினாலும், யூஷங்களாலும், மாம்ஸ ரஸம் முதலியவைகளாலும், அவ்விதமான லேஹ்யங்களாலும், அப்யஞ்ஜநங்களாலும், ஸ்வேதநமுறைகளாலும், ஸேகம் அல்லது பரிஷேகத்தினாலும்,[3] அவ்விதமான திரவங்களில் மூழ்கச் செய்தும் அப்பிணியாளியை உபசரிக்கவேண்டும். (2) மலமும் அபானவாதமும் சிக்குண்ட காஸரோகிக்கு வஸ்திகளைப் பிரயோகித்து சிகித்ஸை செய்யவும். (3) வாதகாஸத்தில் பித்தமும் ஸம்பந்தப்பட்டிருந்தால் முறைப்படி பக்குவம்செய்த க்ருதங்களையும் க்ஷீரங்களையும் போஜனத்திற்குப் பிறகு உபயோகித்து சிகித்ஸை செய்யவேண்டும். (4) வாதகாஸத்தில் கபமும் ஸம்பந்தித்து வியாதியை யுண்டுபண்ணியிருந்தால், ஸ்நேஹ வஸ்துக்களை விரேசநமாகக் கொடுத்து அவ்வியாதியைத் தீர்க்க வேண்டும்.—1, 1½.

வாதகாஸத்தில் குடேச்சியாதி க்ருதம் :—சீந்திற்கொடி, கண்டங்கத்திரி ஒவ்வொன்றையும் தனித்தனியே முப்பதுபலமெடை யெடுத்து அவற்றிலிருநது இரஸம் பிழியவும் ; அந்த ஸ்வரஸத்தில் ஒரு பிரஸ்த்தப்பிரமாணம்[4] நெய்யைச் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் வாதகாஸத்தைப் போக்கும் ; ஜாடராக்னியையும் உத்தீபநம் செய்யும்.—3½.

---

1. காஸசிகித்ஸாத்தியாயத்திலும், இராஜயக்ஷ்மசிகித்ஸாத்தியாயத்திலும் விவரிக்கபபடும் சிகித்ஸைகளைக் கவனிக்க.

2. இனி அடுத்தாற்போலக் கூறப்போகிற குடேச்சியாதி க்ருதம் முதலிய ஸ்நேஹ முறைகள் குறிக்கப்படுகின்றன.

3. ஸேகம் அல்லது பரிஷேகத்தைப்பற்றி முதற் புத்தகம் பார்க்க.

4. பிரஸ்த்தம்—பதினாறு பலங்கொண்ட அளவு.

காஸத்தில் தசமூல க்ருதம் :—யவக்ஷாரம், சிற்றரத்தை, வசம்பு, காயம், வட்டத்திருப்பி, அதிமதுரம், கொத்தமல்லி விதை, பஞ்சகோலங்கள்[1] இவற்றில் ஒவ்வொன்றையும் இரண்டு சாணமளவில்[2] கல்கமாகப் பிரயோகித்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யை தசமூலகஷாயத்தில் பக்குவம் செய்து, மண்டத்தின் அனுபானத்துடன் உபயோகிக்கலாம். இது காஸம், ச்வாஸம், இருதய ரோகங்கள், பார்ச்வசூலை, கிரஹணி, குல்மம் இவற்றைத் தீர்க்கும்.—4, 5½.

வாதகாஸத்தில் சாகலாதி க்ருதம் :—சிற்றரத்தை, தசமூலம், தண்ணீர்விட்டாங் கிழங்கு இவை வகைக்கு ஒரு பலம்; கொள், இலந்தங்கனி, வாற்கோதுமை இவை வகைக்கு இரண்டு குடவம்[3]. ஆட்டின் இறைச்சி அரைத்துலாம்;[4] இச்சரக்குகளை ஒரு திரோணப்பிரமாணம்[5] ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும். பிறகு அதில் ஆடகமளவு[6] நெய்யைச் சேர்த்து, அதற்குச் சமபாகம் பாலையும் கூட்டி, ஜீவநீயகணத்தைச் சேர்ந்த சரக்குகளை வகைக்கு ஒரு பலம் வீதம் சேர்த்துப் பக்குவம் செய்யவும். பிணியாளியின் நிலைமையையும் காலதேசங்களையும் கவனித்து இந்த க்ருதத்தை வாத ஸம்பந்தமான வியாதிகளில் பானம் செய்வதற்கோ, நஸ்யமிடுவதற்கோ, வஸ்தியில் பிரயோகிப்பதற்கோ தகுந்தவாறு உபயோகிக்கலாம். இது ஐந்துவிதமான காஸங்கள், தலைநடுக்கம், யோனியிலும் துடையிடுக்குகளிலு முண்டாகும் ரோகங்கள், ஸர்வாங்கவாதம், பக்ஷவாயு, ப்லீஹரோகம்,[7] ஊர்த்வாங்கவாதம்[8] இவ்வியாதிகளைத் தீர்க்கவல்லது. 6—9.

காஸத்தில் விதார்யாதி க்ருதம் :—விதார்யாதி கணத்தின்[9] சரக்குகளைக் கஷாயமிட்டு, அதில் க்ருதம் சேர்த்து, அச்சரக்குகளையே கல்கமாகச் செய்து பக்குவம் பண்ணி, அதை உபயோகிக்கக் காஸரோகம் தீரும்.—9½.

காஸத்தில் அசோகபீஜாதி க்ருதம் :—அசோகவிதை, [illegible] தைத்தும்பை, வாய்விடங்கம், [illegible], தாமரைக்கிழங்கு,

1. பஞ்சகோலம்—முதற் புத்தகம் பார்க்க.
2. சாணம்—மாகத பரிபாஷையைப்படி வீசம் பலங்கொண்ட அளவு.
3. குடவம்—நான்கு பலங்கொண்ட அளவு; அர்த்தசராவம்.
4. துலாம்—நூறு பலங்கொண்ட அளவு.
5. திரோணம் — முப்பத்திரண்டு சராவம் (32-சேர்).
6. ஆடகம் — நான்கு பிரஸ்த்தங்கள் (8-சேர் அல்லது 8-சராவம்).
7. ப்லீஹரோகம் — மண்ணீரலைப்பற்றிய வியாதி.
8. ஊர்த்வாங்கவாதம் — தோளுக்கு மேற்பட்ட அவயவங்களைப் பற்றிய வாதரோகம்.
9. விதார்யாதிகணம் — முதற் புத்தகம் பார்க்க.

கறுப்புப்பு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை யாவது, அசோகவிதை முதலிய சரக்குகளைச் சூர்ணம்செய்து நெய்யிற்கலந்தாவது உட்கொண்டு, வெள்ளாட்டுப் பாலையும் காஸரோகி அநுபானமா யுபயோகிக்கலாம்.—10, 11.

வாத - கபகாஸத்தில் விடங்காதி சூர்ணம்:—வாய்விடங்கம், சுக்கு, சிற்றரத்தை, திப்பிலி, பெருங்காயம், இந்துப்பு, கண்டு பாரங்கி, யவக்ஷாரம், இவற்றைச் சூர்ணம் செய்யவும். வாத கபங்களாலுண்டான காஸத்திலும், ச்வாஸரோகத்திலும், விக்கல் உண்டாயிருக்கையிலும், அக்னி மாந்தியத்திலும் இச்சூர்ணத்தை க்ருதத்திற்குக் கூறிய அளவின்படி[1] நெய் கலந்து உபயோகித்து வரலாம்.—12, 12½.

வாதகாஸத்தில் துராலபாதி சூர்ணம்:—காஞ்சொறி, சுக்கு, கிச்சிலிக்கிழங்கு, திராக்ஷை, கற்கண்டு, கடுக்காய்ப்பூ இவற்றைச் சூர்ணம்செய்து வாதத்தினால் உண்டான காஸத்தில் தைலத்துடன் உட்கொள்ளலாம்.—13½.

காஸத்தில் துஸ்பர்சாதி சூர்ணம் முதலியது:—பூனைக்காலி, திப்பிலி, கோரைக்கிழங்கு, கண்டுபாரங்கி, கடுக்காய்ப்பூ, கிச்சிலிக் கிழங்கு இவற்றைச் சூர்ணம் செய்து, பழைய வெல்லமும் எண்ணெயும் கலந்து உட்கொள்ள காஸம் தீரும். திப்பிலியையும் சுக்கையும் பொடித்து வெல்லத்தோடும் எண்ணெயோடும் உபயோகித்தாலும், கண்டுபாரங்கியையும் சுக்கையும் பொடித்து அங்ஙனமே உபயோகித்தாலும் அக் குணமுண்டாம்.—14, 15.

காஸத்தில் பிப்பலீ சூர்ணம் முதலியன:—(1) திப்பிலியை யும் இந்துப்பையும் பொடி செய்து இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ளலாம். (2) சுக்கைப் பொடித்து அத்துடன் சர்க்கரையைக் கலந்து புளித்த மோருடன் உபயோகிக்கலாம். (3) திப்பிலியையும் அதிவிடயத்தையும் சூர்ணம் செய்து தயிருடன் உட்கொள்ளலாம். (4) இலந்தைக் கொட்டையின் சூர்ணத்தை மனோசிலையுடனும் சாராயத்தோடாவது, தயிருடனாவது, தெளிவான மோரோடாவது உட்கொள்ளலாம். (5) அல்லது திப்பிலியின் சூர்ணத்தையும் இந்துப்பையும் கலந்து நெய்யில் வறுத்தெடுத்தும் புஜிக்கலாம்.—16, 17.

காஸமும் பீநஸமுமுள்ளவனுக்கு தூமபானம்:—பீநஸத்தோடு காஸரோகமுள்ளவன் முறைப்படி ஸ்நேஹதூமத்தைப்[2] பானம்

1. க்ருதமாத்ரை — க்ருதத்தை உத்தமமாத்திரையாக உபயோகிக்க வேண்டுமென்பது கருத்து; க்ருதமாத்ரையைப் பற்றி முதற் புத்தகம் பார்க்க.

2. ஸ்நேஹதூமம் — ஸ்நிக்ததூமம். முதற் புத்தகம் பார்க்க.

செய்யவேண்டும். பாலையும் மாம்ஸ ரஸத்தையும் உட்கொண்டவாறு ச்வாஸ·ஹித்மா ரோகங்களுக்குக் கூறப்போகிற தூமங்களையும் பானம் செய்யவேண்டும்.—18.

வாதகாஸத்தில் யூஷ-பேயாக்கள்:—(1) நாடுகளில் திரியும் மிருகங்களுடைய அல்லது ஆநூப மிருகங்களுடைய மாம்ஸ ரஸங்களோடாவது, உளுந்து அல்லது காஞ்சொறியின் யூஷங்களோடாவது, சம்பாதானியம், வாற்கோதுமை, கோதுமை, சார் அரிசி இவற்றில் எதையாவது பக்குவம்செய்து உபயோகிக்கலாம். (2) குராசானியோமம், திப்பிலி, பில்வப்பழத்தின் உட்சதை, சுக்கு, சித்திரமூலம், சிற்றரத்தை, ஜீரகம், சிற்றுமல்லி, பலாசம் பட்டை, கச்சோரம், தாமரைக்கிழங்கு இவற்றால் பக்குவம் செய்யப்பட்டதும், ஸ்நேஹம் அம்லம் லவணங்கள் சேர்க்கப்பட்டதுமான பேயாவை வாதத்தாலான காஸத்தில் உட்கொள்ளலாம்; இடுப்புவலி, இருதயநோய், பக்கச்சூலை, குடல்வலி, ச்வாஸரோகம், விக்கல், இவைகளையும் இந்த யவாங்யாதி பேயா தீர்க்கவல்லது. (3) தசமூலங்களின்[1] கஷாயத்தில் பஞ்ச கோலங்களையும்[2] வெல்லத்தையும் சேர்த்து முன் பேயாவைப் போலவே உபயோகிக்கலாம். (4) பாலில் பக்குவம் செய்த பேயாவையாவது எள்ளும் இந்துப்பும் சேர்த்து உட்கொள்ளலாம். (5) மத்லியம், கோழி, பன்றி இவற்றின் மாம்ஸங்களில் எதையேனும் நெய்யும் இந்துப்பும் கலந்து உபயோகிக்கலாம். 19—22½.

காஸத்தில் உபயோகிக்கக்கூடிய சாகங்கள் முதலியன:— சக்கரவர்த்திக்கீரை, மணித்தக்காளி, தகரக்கீரை, ஆரை, கண்டங்கத்திரிக்காய், கண்டங்கத்திரியிலை, இளசானதும் உலர்ந்ததுமான முள்ளங்கி இந்த சாகங்களும், தைலம் முதலிய ஸ்நேஹங்களும், பால், கருப்பஞ்சாறு, வெல்லம் இவற்றால் செய்த பக்ஷ்யங்களும், தயிர், மோரின் தெளிவுநீர், காடிநீர், புளிப்பான பழச்சாறு, மது இவைகளும் காஸத்தில் உட்கொள்ளத் தகுந்தவை.—23, 24½.

ஸம கபமான பித்தகாஸத்தில் வமநம் செய்தல்:—ஸம அளவான கபத்துடன்கூடிய[3] பித்தகாஸத்தில் (1) க்ருதத்தைப் பருகி வமநம்செய்வது ஹிதமாகும். (2) மருக்காரை, குமிழன், அதிமதுரம் இவற்றைச் சேர்த்துக் கஷாயமிட்டு அதை யுட்கொண்டும் அவ்விதமே வமநம் செய்யலாம். (3) நிலப்பனங்கிழங்கின் ஸ்வர

1. தசமூலம் — முதற் புத்தகம் பார்க்க.
2. பஞ்சகோலம் — முதற் புத்தகம் பார்க்க.
3. அடுத்தாற்போல் சொற்ப கபத்துடன் கூடியதும் அதிக கபத்துடன் கூடியதுமான பித்தகாஸத்தில் விரேசநம் செய்யச் சொல்லுவதால், "பித்தகாஸே துஸகபே" என்கிற மூலவாக்கியத்திற்கு "ஸம அளவான கபத்துடன்கூடிய பித்தகாஸம்" என்பதுதான் பொருளாகும்.

ஸம், கருப்பஞ்சாறு இவற்றில் மருக்காரையையும் அதிமதுரத்தையும் கல்கமாகச் சேர்த்துக் கலக்கியும் வமநம் செய்யலாம்.—25, 26.

கபம் சொற்பமாகவும் அதிகமாகவுமுள்ள பித்த காஸங்களில் விரேசநம் :—(1)கபம் சொற்பமாயுள்ள பித்தகாஸத்தில் கருஞ்சிவதையை மதுரத் திரவ்யங்களோடு சேர்த்து விரேசநமாவதற்காக உபயோகிக்கலாம். (2) கபம் மிகுதியாயிருக்கும் பித்த காஸத்தில் சிவதையைக் கசப்பான சரக்குகளோடு சேர்த்து விரேசநத்திற்கு உபயோகிக்கவேண்டும்.—27.

காஸத்தில் சோதந சிகித்ஸைக்குப் பிறகு பேயாதிக்ரமம் :—வமந-விரேசங்களால் தோஷங்கள் பரிஹரிக்கப்பட்ட பிறகு குளிர்ச்சியுள்ளதாகவும், மதுரமாகவும், ஸ்நிக்தமாகவுமுள்ள பேயா முதலிய பத்தியமான உணவுகளைப் புஜிக்கலாம். கபம் அதிகமாகவும் இறுகியுமிருந்தால் உட்கொள்ளப்படும் பேயா முதலிய உணவு குளிர்ச்சியாகவும், ரூக்ஷமாகவும், கசப்பான சுவையோடு கூடியதாகவும் இருக்கவேண்டும்.—28.

பித்த காஸத்தில் சில லேஹ்யாதிகள் :—(1) சர்க்கரை, நெல்லிக்கனி, தேன், திராக்ஷை, கற்பூரம், நெய்தல் இவற்றின் லேஹ்யம் பித்தகாஸத்தில் ஹிதமானது. (2) அதே லேஹ்யத்தில் கோரைக்கிழங்கும் மிளகும் சேர்த்துப் பக்குவம் செய்து கபத்துடன் கூடிய பித்தகாஸத்தில் உபயோகிக்கலாம். (3) வாதத்துடன் கூடிய பித்தகாஸத்தில் அதே லேஹ்யத்தில் நெய் சேர்த்து உட்கொள்ளலாம். (4) ஐம்பது திராக்ஷையும், முப்பது திப்பிலியும், ஒரு பலம் சர்க்கரையும் தேன் சேர்த்து லேஹ்யம் செய்தும் பருகலாம். (5) பாலையே உணவாகக்கொண்டு பசுஞ்சாணத்தின் சாற்றையாவது சிறிது உபயோகிக்கலாம்.—29, 30.

பித்தகாஸத்தில் லவங்கத்வகாதிலேஹ்யம் :—லவங்கப் பட்டை, த்ரிகடு, திராக்ஷை, மோடி, தாமரைக்கிழங்கு, நெற்பொரி, இச்சிலிக்கிழங்கு, கோரைக்கிழங்கு, சிற்றரத்தை, நெல்லிக்கனி, தான்றிக்காய் இவைகளைச் சூர்ணம்செய்து சர்க்கரை, தேன், நெய் இவை சேர்த்து லேஹ்யம் செய்து உபயோகிக்க இருதயத்தைப்பற்றிய வியாதிகளும் காஸமும் தீரும்.—31, 31½.

பித்தகாஸத்திற்கேற்ற சில உணவுகள் :—(1) வாற்கோதுமை, சாமை, கோத்ரவ தானியம் இவற்றில் ஏதேனுமொன்றால் பக்குவம் செய்த அன்னத்தை மதுரமான சுவையுள்ளதாகத் தயார் செய்யப்பட்ட ஜாங்கல மாம்ஸரஸங்களோடும், பயறு முதலியவற்றாலான யூஷங்களோடும், கசப்பான சாகங்களோடும் கனமான கபத்துடன்கூடிய பித்தகாஸமுள்ளவன் மிதமாகப் புஜிக்கலாம். கசப்பான சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்ட லேஹ்யங்களில் தேன் சேர்த்தும் அவ்வுணவுகளோடு உபயோ

கத்தில் சம்பா அரிசியையும், காரரிசியையும் அன்னமாகச் செய்து மாம்ஸ ரஸம் முதலியவைகளோடு உபயோகிப்பது ஹிதமாகும். சர்க்கரை சேர்த்த ஜலமும், திராக்ஷையின் ஸ்வரஸமும், கருப்பஞ்சாறும், பாலும் அனுபானமாய் உபயோகிக்கத் தகுந்தவையாம். (3) காகோலீ, க்ஷீரகாகோலீ, சிறுவழுதுணை, கண்டங்கத்திரி, மேதா, மஹாமேதா, ஆடாதோடை, சுக்கு இவற்றைச் சேர்த்து மாம்ஸ ரஸத்தையும், பாலையும், பேயாவையும் யூஷத்தையும் பக்குவம் செய்து பித்தகாஸத்தில் உபயோகிக்கலாம். (4) திராக்ஷை, திப்பிலி, திருணபஞ்சமூலம்[1] இவற்றைக் கஷாயம் காய்ச்சி, அதில் பால் சேர்த்துக் காய்ச்சி, ஆறியபிறகு தேனும் சர்க்கரையும் கலந்து பருகலாம். (5) அக்கஷாயத்திலேயே பேயா பக்குவம் செய்து, குளிர்ந்த பிறகு தேன் சேர்த்துப் பருகலாம். 32—36½.

பித்த காஸத்தில் சில க்ருதங்கள் :—(1) கச்சோரம், வெட்டிவேர், கண்டங்கத்திரி, சுக்கு, சர்க்கரை இவற்றின் சூர்ணத்தை ஜலத்தில் சேர்த்து நன்ருகப் பிசைந்து வடிக்கட்டி, நெய், கலந்து பித்த காஸத்தில் உபயோகிக்கலாம், (2) சர்க்கரை, ஜீவகம், நரிப்பயறு, இடிகொள் வேர், பூனைக்காலி இவற்றைக் கல்கமாகச் செய்து, எட்டுப் பங்கு பால் சேர்த்து, எட்டிலொரு பங்கு நெய் கூட்டி பக்குவம் செய்யவும் ; இந்த க்ருதத்தைப் பானம் செய்யவும், போஜனங்களில் கூட்டி யுண்ணவும், லேஹ்யம் பக்குவம் செய்யவும் உபயோகிக்கலாம். சர்க்கரை முதலிய இவற்றின் சூர்ணத்தையே லேஹ்யமாகச் செய்தும் உபயோகிக்கலாம் ; அல்லது அவற்றைக் கஷாயமிட்டும் பருகலாம். இந்த முறைகள் பித்த காஸத்தைப் போக்கும். 37—39½.

கபகாஸத்தில் தேவதாரு தைலம் முதலியன :—(1) தேவதாருக் கட்டையை எரியச்செய்து, அதிலிருந்து பொசியும் தைலத்தை கபகாஸ முள்ளவன் த்ரிகடுவையும் யவக்ஷாரத்தையும் சிறிது பொடித்துச் சேர்த்து முதலிற் பருகவேண்டும். (2) இதனுல் ஸ்நிக்த்தமானபிறகு மேல் முகமாய் வமநமும், கீழ் முகமாய் விரேசநமுமாகும்படி சிகித்ஸை செய்ய வேண்டும் ; முறை தவருமல் மூர்த்த விரேகமும்[2] செய்விக்க வேண்டும். (3) நல்ல தேஹவலிமையுள்ளவனுக்குத் தீக்ஷ்ண வீர்யமுள்ள விரேசந ஔஷதங்களைக் கொடுத்து, அப்பால் வாற்கோதுமை, பயறு, கொள் இவற்றில் எதையேனும் சேர்த்துச் சமைத்த அன்னத்தைக் காரம் அதிகமாகச் சேர்த்து, நெய் முதலிய

1. திருணபஞ்சமூலம்—முதற் புத்தகம் பார்க்க.
2. மூர்த்த விரேகம்—முதற் புத்தகம் பார்க்க.

ஸ்நேஹவஸ்துக்களைச் சேர்க்காமல் உஷ்ணமாகவே புஜிக்கக் கொடுக்கலாம். (4) தகரைக்கீரை, கத்திரி, கண்டங்கத்திரி, யவக்ஷாரம், திப்பிலி இவற்றைப் பொடித்துச் சேர்த்த ஜாங்கல மாம்ஸ ரஸங்களையும், பிலேசய மாம்ஸ ரஸங்களையும்[1] கொடுத்து உபசரிக்கலாம். (5) எள், கடுகு, வேம்பு இவற்றின் எண்ணெய்களாலும் ஸம்ஸர்க்க க்ரியைகளைச்[2] செய்யலாம். (6) தசமூல கஷாயம், வெந்நீர், மது, தேன் கலந்த தண்ணீர் இவற்றையாவது குடிக்கலாம். (7) தாமரைக்கிழங்கு, கொன்றைவேர், பேய்ப்புடல் வேர் இவற்றையாவது ஜலத்தில் இடித்துச் சேர்த்து இரவில் ஊறவைத்து, தேன் சேர்த்து மூன்று வேளை உணவுடன் சீத கஷாயமாகப் பருகலாம். 40—44½.

கபகாஸத்தில் சில லேஹ்யம் முதலிய முறைகள் :—(1) திப்பிலி, மோடி, சுக்கு, தான்றிக்காய் ; (2) மயிலிறகு, கோழியிறகு இவற்றை எரித்தெடுத்த மை, யவக்ஷாரம் ; (3) பேய்த்தும்மட்டி, மோடி, கருஞ்சிவதைவேர், தேன் ; இந்த மூன்று முறைகளில் எதையேனும் லேஹ்யமாகப் பக்குவம் செய்து உபயோகிக்க நன்மையுண்டாகும். (1) மிளகுப் பொடியைத் தேனில் கலந்து உபயோகிக்கலாம். (2) அகிற் கட்டையை இழைத்து அதையும் தேனோடு கலந்து உட்கொள்ளலாம். (3) கண்டங்கத்திரி, கத்திரி, சரிசிலாங்கண்ணி, தகரயிலை, குதிரையின் சாணம், கருந்துளஸி இவற்றுள் ஏதேனும் ஒன்றின் ஸ்வரஸத்தைக் கிரஹித்துத் தேன் கலந்து கபகாஸத்திற் பருகலாம். 45—48.

வாத-கபகாஸத்தில் தேவதார்வாதி லேஹ்யம் முதலியன :—(1) தேவதாரு, கச்சோரம், அரத்தை, கடுக்காய்ப்பூ, பூனைக்காலி விதை ; (2) திப்பலி, சுக்கு, கோரைக்கிழங்கு, கடுக்காய், நெல்லிக்கனி, கற்கண்டு ; (3) நெற்பொரி, கற்கண்டு, கடுக்காய்ப்பூ, நெல்லிக்கனி, நெய்; இம்மூன்று முறைகளில் எதையேனும் ஒன்றை லேஹ்யமாகச் செய்து, தேனையும் எண்ணெயையும் சேர்த்து வாததோஷத்தோடுகூடிய சிலேஷ்ம காஸத்தில் உட்கொள்ளலாம்.—49, 50.

காஸ ச்வாஸங்களில் தாடிமாதி குடயோகங்கள் :—(1) உலர்ந்த மாதளம் வித்து இரண்டு பலம், சுக்கு, திப்பிலி, மிளகு, இவை வகைக்கு ஒரு பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டுப்பலம் வெல்லம் சேர்த்துக் கலந்து உபயோகிக்கலாம். இது காஸ ச்வாஸங்களையும் பீநஸத்தையும் போக்குங்குணமுடையது ; ரோசநம்,[3] தீபநம், ஸ்வர்யம்[4] என்கிற குணங்களும்

1. ஜாங்கலமாம்ஸம் முதலியவற்றைப்பற்றி முதற் புத்தகம் பார்க்க.
2. ஸம்ஸர்க்க க்ரியை—ஸம்ஸர்கீ ; 17-ம் பக்கம் பார்க்க.
3. ரோசநம்—அரோசகத்தைப் போக்குங் குணம்.
4. ஸ்வர்யம்—கண்டத்தொனியைச் செம்மைப் படுத்துங்குணம்.

இதற்குண்டு. (2) வெல்லம் இரண்டுபலம், யவக்ஷாரம் அரைக்கால் பலம், மிளகு கால் பலம், திப்பிலி அரைக்கால் பலம், மாதளம்வித்து ஒரு பலம்; இவற்றையும் முன்போலவே பக்குவம் செய்து உபயோகிக்க ச்வாஸங்கள் தீரும்.—51, 52.

கபகாஸத்திற்குத் தகுந்த க்வாதங்கள்:—(1)ஜ்வரசிகித்ஸையிற் கூறப்பட்ட பாசநகுணமுள்ள பத்யாதிக்வாதத்தையும்[1] கடுக்காய்ப்பூ சூர்ணத்தையும் கலந்து உட்கொள்ளலாம். (2) அல்லது ஓமம், தும்மட்டிக்காய், கோரைக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, திப்பிலி இவற்றைப் பசுவின் சிறுநீரிலாவது ஜலத்திலாவது இடித்துச் சேர்த்து க்வாதம் காய்ச்சி கபகாஸத்திற் பருகலாம்.—53, 53½.

கபகாஸத்தில் பிப்பலீகல்கம் :—எண்ணெயிற் பொரித்தெடுத்த திப்பிலியைக் கால்பலமெடை கல்கமாய் அரைத்து, அதிற் சிறிது கற்கண்டுப் பொடியையும் கலந்து, கொள்ளை வேகவைத்த ஜலத்தில்கூட்டி, கபகாஸத்தைத் தீர்ப்பதற்குப் பருகலாம்.—54½

வாத-கபகாஸத்தில் தசமூலக்ருதம்:—தசமூலங்களைச் சேர்த்துக் காய்ச்சிய ஆடகமளவு கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் நெய் சேர்த்து, அடியிற் குறிப்பிடும் சரக்குகளில் வகை ஒன்றுக்குக் கால்பலம் வீதம் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும்; அவை: தாமரைச்கிழங்கு, கிச்சிலிக்கிழங்கு, பில்வவேர்ப்பட்டை, துளஸி, த்ரிகடு, சாயம் இவைகளே. பேயா இதற்கு அநுபானம். இந்த க்ருதம் வாத-கபகாஸம் முதலிய ரோகங்களைத் தீர்க்க வல்லது.—55, 56.

காஸத்தில் நிர்குண்டீ-விடங்க க்ருதங்கள் :—(1) கருநொச்சியிலைச் சாற்றில் பக்குவம் செய்த க்ருதமும், (2) வாய்விடங்க ஸ்வரஸத்தில் த்ரிகடுவை கல்கமாகக் கூட்டி பக்குவம் செய்த க்ருதமும் காஸத்தைப் போக்கும்.—57.

காஸாதிகளில் புநர்நவாதி க்ருதம் :—வெள்ளைச்சாறணை, இங்குபத்ரி, ஸரள தேவதாரு, தகரை, சீந்திற்கொடி, பேய்ப்புடல், கண்டங்கத்திரி, நாய்த்துளஸி இவற்றின் சாற்றையும் பாலையும் கலந்து, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும்; இதற்கு த்ரிகடுவைப் பொடித்து கல்கமாகச் சேர்க்கவேண்டும். இந்த க்ருதத்தை உபயோகிப்பவர் காஸம், விஷம ஜ்வரம், க்ஷயம், அர்சோரோகம் இவற்றால் வருந்த நேரிடாது.—58.

ஸர்வ காஸங்களிலும் கண்டகார்யாதி க்ருதம் :—கண்டங்கத்திரியை ஸமூலம் இடித்து இரஸம் பிழிந்து, ஆடகப்பிரமாணம்

1. பத்யாதி க்வாதம்—ஜ்வர சிகித்ஸையில் 61, 63-வது பத்தியங்களின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

அந்த ஸ்வரஸமெடுத்து, அதில் ஒரு பிரஸ்த்தம் நெய் சேர்த்துக் காய்ச்சவும்; சிற்றுமுட்டி, த்ரிகடு, வாய்விடங்கம், கிச்சிலிக்கிழங்கு, மாதுளை, ஸௌவர்ச்சல லவணம், யவக்ஷாரம், முள்ளங்கி, நெல்லிக்கனி, தாமரைக்கிழங்கு, வெள்ளைச்சாறடை, கண்டங்கத்திரி, கடுக்காய், ஓமம், சித்திரமூலம், ருத்தி, திராக்ஷை, சவியம், சிவப்புச்சாறடை, காஞ்சோறி, புளிவஞ்சி, கடுக்காய்ப்பூ, கீழாநெல்லி, கண்டுபாரங்கி, அரத்தை, நெரிஞ்சில் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை எல்லாக் காஸ ச்வாஸங்களிலும், விக்கல்களிலும் உபயோகிக்கலாம். 59—61½.

காஸாதிகளில் வியாக்ரியாதி லேஹ்யம்:—கண்டங்கத்திரியை ஸமூலமாய் இடித்து, நான்கு திரோணம் ஜலத்தில் சேர்த்து, அதை ஒரு ஆடகமாக வற்றும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டியெடுக்கவும். த்ரிகடு, அரத்தை, சீந்தில், சித்திரமூலம், கர்க்காடகச்ருங்கி, கண்டுபாரங்கி, கோரைக்கிழங்கு, கிரந்திதகரம், பூனைக்காலி இவற்றை வகைக்கு அரைப்பலம் வீதம் சேர்த்து இடித்துச் சூர்ணம் செய்து அக்கஷாயத்தில் சேர்க்கவும். பிறகு அதில் நெய் பதினாறு பலமும், அழுக்கில்லாமல் சுத்தம் செய்த கற்கண்டு நாற்பது பலமும் சேர்த்து, மறுபடியும் அடுப்பிலேற்றிக் காய்ச்சவும்; லேஹ்யம் கரண்டியில் பற்றிக்கொண்டு பாகு பதமாக வரும்போது தீயிலிருந்து எடுத்து ஆறவைத்து, திப்பிலியையும் மூங்கிலுப்பையும் வகைக்கு ஒரு சேர் பொடித்துச் சேர்த்து, ஒரு சேர் பழகிய தேனையும் கூட்டிக்கொள்ளவும். இந்த லேஹ்யம் காஸம், ச்வாஸம், குல்மம், இருதய வியாதிகள், அர்சஸ் இவைகளைத் தீர்க்கும். 62—65½.

காஸத்தில் தூமபானம்:—கப காஸத்தில் சமந தூமத்தைப் பானம் செய்யலாம். கபம் மிக்க அதிகரித்த காஸத்தில் சோதந தூமபானமும் செய்யலாம். மனசிலை, தாளகம், அதிமதுரம், ஜடாமாம்ஸீ, கோரைக்கிழங்கு, இங்கு நிமரப்பட்டை[1] இவற்றை காஸஹரமான முறைப்படி பக்குவம் செய்து தூமபானம் செய்து கபத்தைத் துப்பிவிட்டு, வெல்லம் சேர்த்துக் காய்ச்சிய பாலை இளஞ்சூடாயிருக்கையில் பருகவும். இந்த மனச்சிலாதி தூபம் நீடித்த வாதகபங்கள் மேலிட்ட காஸங்களைத் துரிதமாக நீக்கும். 66—68.

பல தோஷங்கள் ஸம்பந்தப்பட்ட காஸங்களுக்குச் சிகித்ஸைகள்:—(1) கப காஸத்தில் பித்த தோஷத்தினால் தொடரப்பட்ட தமகச்வாஸம் ஸம்பவிக்குமானால், அப்பொழுதுள்ள நிலைமைகளுக்கேற்றவாறு பித்த காஸத்திற்கான சிகித்ஸையைப் பிரயோகிக்கவேண்டும். (2) காஸத்தில் வாததோஷத்தை கபம்

1. இங்குதீ — இங்குணம்; நாட்டு வாதுமையென்று சிலர்.

தொடர்ந்திருக்குமானால் அதில் கபஹரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும். (3) வாத-கபங்களைப் பித்தம் தொடர்ந்திருக்குமானல் பித்தஹரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும்.[1] (4) வாத-கபங்களாலுண்டான சுஷ்ககாஸத்தில்[2] ஸ்நிக்தமான சிகித்ஸையும், அத்தகைய ஆர்த்ரகாஸத்தில்[3] ரூக்ஷணமான சிகித்ஸையும் செய்யவேண்டும். (5) பித்தத்துடன்கூடிய கபத்தினல் உண்டான காஸத்தில் திக்தரஸம் கூட்டிய ஔஷதத்தை உபயோகிக்க வேண்டும். 69—71.

க்ஷத காஸத்தில் லாக்ஷா க்ஷீராதியோகங்கள் :—(1) காஸத்தினல் மார்பின் உட்புறத்தில் விரணம் உண்டாய்விடுமானல் உடனே கொம்பரக்குப் பொடியையும் தேனையும் பாலோடு கலந்து பருகவேண்டும். இவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு சம்பா அரிசியினலான அன்னத்தைச் சர்க்கரை கலந்து பாலுடன் உண்ணவேண்டும். (2) க்ஷதகாஸரோகியானவன் விலாப்பக்கங்களின் வலி, வஸ்தியென்கிற மூத்திரப்பையில் வலி, பித்தமும் ஜாடராக்னியும் மிகச் சொற்பமாயிருத்தல் இவ் விகாரங்களோடு கூடியவனயிருந்தால் ஸுரை யென்கிற பானத்துடன் கலந்து அக் கொம்பரக்கைப் பருகச் செய்யவேண்டும். (3) க்ஷதகாஸரோகிக்கு மலமும் உடைந்து திரவமாகப் போய்க்கொண்டிருந்தால், கோரைக் கிழங்கு, அதிவிடயம், வட்டத்திருப்பி, வெட்பாலை இவற்றோடு கொம்பரக்கைக் கூட்டிக் கொடுக்கலாம். (4) கொம்பரக்கு, நெய், தேன் மெழுகு, ஜீவநீய கணச் சரக்குகள், சர்க்கரை, மூங்கிலுப்பு இவற்றைப் பாலில் சேர்த்துப் பக்குவம் செய்து, நல்ல பசியுள்ளவன் பருகலாம். (5) ஞாழல், தாமரைக் கிழங்கு, கிரந்திதகரம், தாமரையின் தாதுகள், சந்தனம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைத் தேன் கூட்டி, இரத்தத்தை ஸ்தம்பநம் செய்வதற்காகப் பருகலாம். 72—75.

ஜ்வரதாபத்துடன் கூடிய காஸத்தில் க்ஷீர-க்ருதாதிகள் :— (1) காஸத்தில் ஜ்வரமும் தொடருமானல் வறுக்காத வாற்கோதுமை மாவைப் பாலில் சேர்த்துப் பக்குவம் செய்து, நெய் கலந்து உட்கொள்ளலாம். (2) அல்லது சர்க்கரை, தேன், நெற்பொரி மா இவற்றைப் பாலில் பக்குவம் செய்தாவது பருகலாம். (3) காஸரோகி மதுர ரஸமுள்ள சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தையும் பருகலாம். (4) அல்லது தேன், மிளகு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய வெல்ல நீரையாவது குளிரச் செய்து

1. பித்த காஸம் முதலியவற்றிற்கு இதற்கு முன் இதே அத்தியாயத்தில் சிகித்ஸைகள் கூறப்பட்டிருக்கின்றன.

2. சுஷ்க காஸம் — கோழை முதலியது இல்லாத வறட்டிருமல்.

3. ஆர்த்ர காஸம் — கோழை முதலியதோடுகூடிய இருமல்.

குடிக்கலாம். (5) நெல்லிக்கனி சூர்ணத்தைப் பாலில் பக்குவம் செய்து, தேன் கலந்தும் உட்கொள்ளலாம். (6) இரஸாயந முறைப்படி திப்பிலிகளையாவது பிரயோகிக்கலாம். 76—78.

காஸாதிகளில் மதூகபுஷ்பாதி யோகம் :—இலுப்பைப்பூ, அதிமதுரம், திராக்ஷை, மூங்கிலுப்பு, திப்பிலி, சிற்றுமுட்டி இவைகளைப் பொடிசெய்து நெய்யும் தேனும் கலந்து காஸரோகியும், கீல்களிலும் அஸ்திகளிலும் நோவுள்ளவனும் உபயோகித்து வரலாம்.—79.

காஸாதிகளில் த்ரிஜாதகாதி குடிகை:—த்ரிஜாதகம்[1] வகைக்கு அரைக்கால் பலம், திப்பிலி அரைப் பலம், சர்க்கரையும், திராக்ஷையும், இலுப்பைப்பூவும், பேரீச்சையும் வகைக்கு ஒவ்வொரு பலம், இவ்விதம் சேர்த்து மிக்க மிருதுவாக இடித்துத் தேன் சேர்த்து மாத்திரைகள் உருட்டவும். இந்த மாத்திரை விருஷ்யகுணமுள்ளது ; இரத்த - பித்தம், காஸம், ச்வாஸம், அரோசகம், வாந்தி, மூர்ச்சை, விக்கல், தலைச்சுற்றல், க்ஷதக்ஷீணம், ஸ்வரபேத மென்னும் தொண்டைக்கம்மல், ப்லீஹம் என்கிற மண்ணீரலைப்பற்றிய வியாதி, சோகை, ஊருஸ்தம்பம், இரத்தம் கக்குதல், இருதயரோகம், பக்கசூலை, நாவறட்சி, ஜ்வரம் இவற்றையும் போக்கவல்லது. 80—82.

க்ஷதகாஸத்தில் வர்ஷாபூயோகம் முதலியன :—(1) சாறணை, சர்க்கரை, சிவப்புச்சம்பா அரிசி இவற்றின் சூர்ணத்தை திராக்ஷையின் சாறு, பால், நெய் இவற்றில் பக்குவம் செய்து இரத்தம் கக்குபவன் உட்கொள்ளலாம். (2) இலுப்பைப்பூ, அதிமதுரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் முள்ளுக்கீரையைப் பக்குவம் செய்து, அப்பாலையாவது பருகலாம். (3) முகம் முதலிய மார்க்கத்தினால் இரத்தம் வெளிவருமாயின் இரத்த-பித்த சிகித்ஸையிற் கூறிய ஔஷதங்களையும் அதஅதற்கேற்றவாறு பிரயோகிக்கலாம்.—83, 84.

காஸாதிகளால் க்ஷீணித்திருப்பவருக்கு ஆட்டுக் கொழுப்பு முதலியதைக் கொடுத்தல் :—(1) காஸரோகிக்கு வாயு அடைபட்டுப் பொருமலுண்டா யிருந்தால், வெள்ளாட்டுக் கொழுப்பை ஸுரை யென்னும் மதுவில் சமைத்தெடுத்து இந்துப்பையும் கலந்து புஜிக்கச் செய்யலாம். (2) காஸம் முதலியவற்றால் வாடியிருப்பவனும், மெலிந்திருப்பவனும், உரக்ஷத முள்ளவனும், போதியவளவு நித்திரை யில்லாதவனும், அதிக பசியுள்ளவனும் வெள்ளாட்டுக் கொழுப்பை நெய், தேன், சர்க்கரை இவற்றோடு கூட்டி, நன்றாகக் காய்ச்சியெடுத்த பாலாடையுடன் உட்கொள்ளலாம். (3) உரக்ஷதத்தினால் க்ஷீணமாயிருப்பவனும், காஸத்

1. த்ரிஜாதகம் — முதற்பாகம் பார்க்க.

தினால் கிருசமா யிருப்பவனும் சர்க்கரை, வாற் கோதுமை, கோதுமை, ஜீவகம், ருஷபகம் தேன் இவற்றைச் சேர்த்து ஒரு மிக்க உட்கொள்ளலாம்; அல்லது காய்ச்சிய பாலே அதற்கு அனு பானமாய் உபயோகிக்கலாம். (4) இறைச்சியுண்ணும் மிருகத்தின் மாம்ஸத்தைக் காய்ச்சி, அந்த ரஸத்தை நெய்யால் தாளித்து, திப்பிலிப் பொடியையும் தேனையும் கலந்து தேஹம் மெலிந்தவன் பருகலாம்; இந்த ரஸம் சரீரத்தில் மாம்ஸத்தையும், இரத்தத் தையும் விருத்தி செய்யும். 85—87½.

உரக்ஷதத்திற்கேற்ற க்ருதான்ன போஜனம் :—ஆலம்விழுது, அத்திப்பட்டை, அரசம்பட்டை, பூவரசம்பட்டை, வேங்கைப் பட்டை, ஏழழல், பனம்பூ, நாவற்பட்டை, ப்ரியாளம், தாமரைக் கிழங்கு, குங்கிலிய மரப்பட்டை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட நெய்யோடு சம்பா அரிசியி லான அன்னத்தை உரக்ஷதமுள்ளவனும், சுக்ரம்-தேஹபலம்-இந்த்ரியங்கள் இவை க்ஷீணித்தவனும் புஜிக்கலாம்.—88, 89½.

வாதவிகாரங்களோடு கூடிய காஸத்தில் வாதஹர சிகித் ஸைகள் :—(1) காஸ ரோகியானவன் வாத-பித்தங்களால் பீடிக் கப்பட்டு, உடல் ஒடிந்து விழுந்து விடுவதுபோன்ற உணர்ச்சி யுண்டால் க்ருதங்களால் அவனுக்கு அப்யங்கம் செய்துவைக்க லாம். (2) அங்ஙனம் வாயுவினால் தேஹம் பீடிக்கப் படு மானால் வாதரோகஹரமான தைலங்களால் அப்யங்கம் செய்து வைப்பது நலம். (3) இருதயத்திலும் விலாப் பக்கங்களிலும் நோவுண்டாயிருந்தால் ஜீவநீய கணத்திற் கூறிய சரக்குகளால் க்ருதம் பக்குவம் செய்து அதைப் பருகிவரலாம். (4) அல்லது வாதரோகஹரமான சிகித்ஸையைப் பித்தத்திற்கும் இரத்தத் திற்கும் கோளாறு நேரிடாவண்ணம் பிரயோகிக்கலாம்.—90, 91½.

க்ஷதகாஸத்தில் யஷ்ட்யாதி க்ருதம் :—அதிமதுரமும், பேய்ப்பீர்க்கம் வேரும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஸம பாகம் பாலும் சேர்த்து, அதில் க்ருதம் பக்குவம் செய்து, க்ஷீரகா கோலி, திப்பிலி, மூங்கிலுப்பு இவற்றைக் கல்கமாய் உபயோகிக் கவும். இது க்ஷதகாஸத்தில் ஹிதமானது.—92½.

க்ஷதகாஸாதிகளில் அம்ருதப்ராசம் :—ஜீவநீய கணத்தின் சரக்குகள், சுக்கு, தண்ணீர்விட்டாங் கிழங்கு, சிற்றுமல்லி, வெள் ளைச்-சாறடை, சிற்றுமுட்டி, கண்டங்காரங்கி, காஞ்சொறி, கச் சோரம், கீழாநெல்லி, திப்பிலி, அல்லிக்கிழங்கு, க்ஷீரகாகோலீ, லகுபஞ்சமூலம், திராக்ஷை, மலைபூவக்காய் முதலிய மதுரமாயும் ஸ்நிக்த்தமாயும் ப்ருஹ்மணமாயுமுள்ள கனிகளை வகைக்குக் கால் பல மெடுத்து, வழுமுண்ட கல்கமாகச் செய்து, இக் கல்கத்தினால் ஒரு பிரஸ்த்தம் கிருதத்தைப் பக்குவம் செய்யவும்; நெல்லிக்

கனி, நிலப்பனங்கிழங்கு, கரும்பு, ஆட்டிறைச்சி இவற்றின் ஸ்வரஸத்தையும் பாலையும் அதில் சேர்த்துக் காய்ச்சவும். க்ருதம் பக்குவமாய் ஆறிய பிறகு ஒரு சேர் தேனும், அரைத்துலாம் சர்க்கரையும், வகைக்கு அரைப்பலம் வீதம், மிளகு- இலவங்கப் பட்டை-இலவங்கப்பத்திரி-நாககேஸரம் இவற்றையும் பொடித்துச் சேர்த்து, அனைத்தையும் ஒன்றாகக் கலந்தெடுக்கவும். அவரவருடைய தேஹபலத்திற்கும் அக்னி பலத்திற்கும் ஏற்ற அளவுப்படி இதை உட்கொள்ளலாம். அம்ருதப்ராசக்ருதம் என்னும் இந்த க்ருதத்தை நாகங்கள் ஸுதையைப் போலவும், தேவர்கள் அமுதத்தைப் போலவும் மனிதர் உட்கொள்ளலாம். இதை யுட்கொள்பவன் பாலையும் மாம்ஸரஸத்தையும் விசேஷமாகப் பருகி வரவேண்டும். இரேதஸ் க்ஷீணித்திருப்பவன், க்ஷதகாஸத்தினால் க்ஷீணித்தவன், பலஹீனமானவன், வேறு வியாதிகளால் இளைத்திருப்பவன், சிற்றின்பத்தில் அதிகமாகப் பிரவ்ருத்தியுள்ளவன், இயல்பாகவே இளைத்திருப்பவன், மழுக்கங்கொண்ட தேஹ நிறமும் கண்டத்தொனியுமுள்ளவன் என்னும் இவர்களையெல்லாம் இந்த க்ருதம் ப்ருஹ்மணம் செய்யும்; காஸம், விக்கல், ஜ்வரம், ச்வாஸம், அழற்சி, நாவறட்சி, இரத்த-பித்தம், வாந்தி, மூர்ச்சை, இருதய வியாதி, யோனிரோகங்கள், மூத்திர ரோகங்கள் இவற்றையும் தீர்த்து, ஸந்தாநங்களையு மளிக்கும். 93—100.

ச்வதம்ஷ்ட்ராதி க்ருதம்:—நெரிஞ்சில், வெட்டிவேர், மஞ்ஜிஷ்டி, சிற்றாமுட்டி, குமிழன், சுக்குநாறிப்புல், தர்ப்பையின் வேர், சிற்றாமல்லி, பலாசம்பட்டை, ருஷபகம், மோர்மல்லி இவற்றை வகைக்கு ஒருபலம் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; கஷாயத்தில் நாலிலொரு பங்கு பால் சேர்க்கவும்; பிறகு பூனைக்காலிவிதை, ஜீவந்தீ, மேதா, ருஷபகம், ஜீவகம், தண்ணீர்விட்டான் கிழங்கு, ருத்தி, திராக்ஷை, சர்க்கரை, சிராவணி, தாமரைக் கிழங்கு இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும்; இக் கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்யவேண்டும். இந்த க்ருதம் வாதரோகங்கள், பித்தரோகங்கள், இருதயத்தைப்பற்றிய ரோகங்கள், வயிற்று நோய், மூத்ரச்ருச்சிரம், பிரமேஹம், அர்சஸ், காஸம், சோஷம், க்ஷயம் இவைகளை நீக்கி, யுத்தாதிகள் செய்தும், ஸ்த்ரீப்பிரஸங்கம் செய்தும், மதுபானம் பண்ணியும், சுமை தூக்கியும், வழி நடந்தும் களைத்திருப்பவர்களுக்குத் தேஹபலத்தையும் தசைநார் பலத்தையும் விருத்தி செய்யும். 101—104.

மதுகாதி க்ருதம்:—அதிமதுரம் எட்டு பலமும், திராக்ஷை ஒரு பிரஸ்த்தமும், திப்பிலி எட்டு பலமும் இடித்துச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம நெய் பக்குவம் செய்யவும்; அது ஆறிய பிறகு தேனும் சர்க்கரையும் பிரத்தியேகம்

எட்டு பலமும், அவற்றிற்குச் சமபாகமாய் நெற்பொரிமாவையும் சேர்த்து ஒன்றாகக் கலந்து விடவும். இது உரக்ஷதத்திஞல் க்ஷீணமாயிருப்பவனுக்கும், இரத்த குல்மரோகிக்கும் அனுகூலமான ஔஷதம்.—105, 106.

ஆயுஷ்ய க்ருதம் :—நெல்லிக்கனி, நிலப்பனங் கிழங்கு, கரும்பு, ஜீவநீய கணத்திற் கூறியுள்ள ஒஷதிகள் இவற்றிலிருந்து தனித்தனியே ஒவ்வொரு பிரஸ்த்தம் ஸ்வரஸம் கிரஹிக்கவும் ; இதில் ஒரு பிரஸ்த்தம் நெய் சேர்த்து, பசுவின் பாலும் வெள்ளாட்டுப்பாலும் ஒவ்வொரு பிரஸ்த்தம் ஊற்றி, அனைத்தையும் காய்ச்சியெடுத்து வடிக்கட்டி, தேனும் சர்க்கரையும் இரண்டு பிரஸ்த்தமளவில் கூட்டிக் கலக்கவும். இந்த க்ருதம் இராஜயக்ஷ்மா, அபஸ்மாரம், இரத்த-பித்தம், காஸம், மேஹரோகம், தேஹக்ஷீணம் இவற்றைப் போக்கும்; ஆயுஷ்யம் என்கிற குணம் இதற்கிருப்பதால் வயதை நீடிக்கச் செய்யும் ; தசைகளுக்கும் சுக்ரத்திற்கும் பல முண்டுபண்ணும்.—107, 108½.

க்ருதத்தை நிலைமைகளுக்கேற்றவாறு உட்கொள்வதும் அதன் உபயோகமும் :—(1) பித்தம் அதிகரித்திருக்கையில் க்ருதத்தை நாக்கிஞல் நக்கியுண்ணவும். (2) வாதம் அதிகரித்திருந்தால் க்ருதத்தைப் பானம் செய்யவேண்டும். க்ருதத்தை நக்கிஞல் அது பித்தத்தைத் தணிக்கும் ; இவ்விதம் உபயோகிக்கையில் க்ருதம் அளவில் சொற்பமாகவே உட்கொள்ளப்படுவதால் ஜாடராக்னியை அழிக்கமாட்டாது. (3) க்ருதத்தைக் குடித்தால், அளவில் அதிகமான அந்த க்ருதம் வாயுவைத்தாக்கி அதை ஒடுங்கச்செய்து ஜாடராக்னியையும் தகைத்து மந்தப்படுத்திவிடும். (4) வாடியும், க்ஷீணித்தும், இயற்கையில் மெலிந்தும் போன தேஹமுடையவர்கள் முற்கூறிய க்ருதங்களையே—மூங்கிலுப்பு, திப்பிலி, நெற்பொரிமா இவற்ருேடு பருகிவரவேண்டும். க்ருதத்தையும், சர்க்கரையையும், தேனையும் கலந்து கொடுத்து, அநுபானமாய் பாலையும் கொடுக்கவேண்டும். இவற்ருல் இரோதஸ்ஸையும், வீரத்தன்மையையும், சரீரவலிமையையும், புஷ்டியையும் வெகு சீக்கிரத்திற் பெறலாம். 109—112.

கூஷ்மாண்ட ரஸாயனம் :—சாம்பற் பூசுணிக்காயின் மேல் தோலையும் உள்ளே வித்துகளையும் அப்புறப்படுத்தி வேகவைத்தெடுக்கவும் ; அதிலுள்ள ஜலபாகத்தை விலக்கி, மற்றச் சதையைமட்டும் நூறுபல மெடுத்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யில் தேன் நிறமாகப் பக்குவமாகும் வரையில் வெதுப்பவேண்டும். கற்கண்டு நூறு பலம், திப்பிலி-சுக்கு-ஜீரகம் இவை வகைக்கு இரண்டு பலம், த்ரிஜாதகம்-கொத்தமல்லி விதை-மிளகு இவை தனித்தனி அரைப்பலம், இவற்றைப் பொடித்துச் சேர்த்து லேஹ்ய பாக

மாகச் செய்து தீயைவிட்டு இறக்கிவிடவும்; இது ஆறியவுடனே தேன் எட்டு பலம் சேர்த்து, அதனைத்தையும் துடுப்பால் நன்றாகக் கிளறியெடுத்து பத்திரப்படுத்தவும். இதை உபயோகித்தால் காஸம், விக்கல், ஜ்வரம், ச்வாஸம், இரத்த-பித்தம், க்ஷதக்ஷீணம் இவை தீரும்; மார்பினுள் இரத்தக் கசிவு முதலியதை நிறுத்தி, மார்புக்கு வலிவையும், புத்தி விசேஷத்தையும், ஞாபகசக்தியையும், தேஹபலத்தையும், இருதயத்திற்கு வன்மையையும் தரக்கூடிய இந்த கூஷ்மாண்ட ரஸாயனம் அச்விநீ தேவதைகளால் மொழியப்பட்டதாகும். 113—116½.

**நாகபலாகல்பம் முதலியன**:—பேய்ப்பீர்க்கன் வேரை அரைக்கால் பலம் வீதம் பாலில் கலந்து உட்கொள்ள ஆரம்பித்து, அரைக்காலரைக்கால் பலமாகப் பிரமாணத்தை விருத்தி செய்து, ஒரு மாஸத்தில் அந்த அளவை ஒரு பலமாகச் செய்துவிட வேண்டும். இதை யுபயோகித்து வருகையில் அன்னம் புஜிக்காமல், பாலையே பருகிவரவேண்டும். இந்த முறையானது தேஹ புஷ்டியையும், ஆயுளையும், சரீரவன்மையையும், நிறத்தையும் விருத்தி செய்வதில் சிறந்ததாகும். மண்டூகபர்ணீகல்பமும்,[1] யஷ்டிகல்பமும்,[2] சுண்டிகல்பமும்[3] இவ்விதமே பக்குவம்செய்ய இக்குணங்களை யுண்டுபண்ணும்.—117, 118½.

**நாகபலா க்ருதம்**:—ஒரு துலாப்பிரமாணம் பேய்ப்பீர்க்கன் வேரை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, அதை நாலில் ஒரு பங்காகச் சுண்டும்படிக் காய்ச்சி யெடுத்து, அக்கஷாயத்திற்குச் சம அளவு நெய் சேர்த்து, அதில் பாலையும் ஊற்றிக் காய்ச்சவும்; பேராமுட்டி, சிற்றாமுட்டி, அதிமதுரம், வெள்ளைச் சாறணை, வறள்தாமரை, பெருங்குமிழன், ப்ரியாளம், பூனைக்காலிவிதை, அமுக்கிராங்கிழங்கு, அகிற்பட்டை, அபீரு, மேதா, மஹாமேதா, த்ரிகண்டகம், காகோலீ, க்ஷீரகாகோலீ, க்ஷீரசுக்லா, ஜீரகம், கருஞ்ஜீரகம் இவற்றை வகைக்கு அரைப்பலம் வீதம் கிரஹித்துச் சூர்ணித்து கல்கமாகச் சேர்த்து, க்ருதத்தைப் பக்குவம் செய்யவும்; நாகபலா க்ருதம் எனப்படும் இது இரத்த-பித்தம், உரக்ஷதம், க்ஷயம், நாவறட்சி, தலைச் சுற்றல், அழற்சி, நரை-திரை இவைகளைத் தீர்க்கும்; சரீரவன்மையையும் புஷ்டியையும்தருவதில் சிலாக்கியமானது; வர்ண்யம், ஆயுஷ்யம், ஓஜஸ்யம் என்கிற குணங்களும் இதற்குண்டு; இதை ஆறு மாஸங்கள் தொடர்ந்துபயோகிக்கக் கிழவனும் குமாரனைப்போலாவான். ஜாடராக்னி நல்ல நிலைமையி லிருந்தால் அப்பொழுது இச்சிகித்ஸை ஹிதமானது. ஜாடராக்னி மந்தமா யிருக்குமாயின்

1. மண்டூகபர்ணீ—வல்லாரை யென்று வைத்யக சப்தஸிந்து.
2. யஷ்டி—அதிமதுரம் முதலியதைக்கொண்டு செய்யும் ஔஷதம்.
3. சுண்டி—சுக்கு முதலியதைக்கொண்டு செய்யப்படும் ஔஷதம்.

தீபந பாசந சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். க்ஷதகாஸம் என்கிற இரத்த-காஸமுள்ளவருக்கு யக்ஷ்ம சிகித்ஸையிற் கூறப்படு முறைகளைப் பிரயோகிக்கவேண்டும். மலம் திரவமாகப்போ விரேசனமாகையில் கிராஹி யென்கிற மலத்தைக் கட்டும் சிகி ஸைபைச் செய்வது பிரசஸ்தமாகும். 119—124½.

அகஸ்தியஹரீதகீ லேஹ்யம் :—தசமூலம், காஞ்சொறி சக்கரங்குப்பி, கிச்சிலிக்கிழங்கு, சிற்ருமுட்டி, யானைத்திப்பிலி நாயுருவி, மோடி, சித்திரமூலம், கண்டுபாரங்கி, தாமரைக்கிழங்கு இவற்றை வகைக்கு இரண்டு பலம் வீதம் கிரஹிக்கவும்; ஓர் ஆட மளவு யவதானியத்தையும் நூறு கடுக்காய்களையும் சேர்த்து ஐந்து ஆடகம் ஜலத்தில் கஷாயமாகக் காய்ச்சவும் ; அதில் சேர் துள்ள யவதானியம் சமையலாகும் வரையில் கஷாயத்தை காய்ச்சி, அப்பால் வடிக்கட்டவேண்டும் ; அதில் சேர்த்திருந் கடுக்காய்களை யெடுத்து வடிக்கட்டிய கஷாயத்தில் போட்டு, ஒரு துலாப் பிரமாணம் வெல்லத்தையும் சேர்த்துக் காய்ச்சவும் ; திப் பிலிப்பொடி அரைச் சேர், நெய் அரைச் சேர், நல்லெண்ணெய் அரைச்சேர் இவற்றையும் கூட்டி லேஹ்யத்தைப் பக்குவம் செய்யவும் ; இது பக்குவமாய் சூடு ஆறிய பிறகு, தேன் அரைச் சேர் ஊற்றிக் குழப்பவேண்டும். இந்த இரஸாயனத்திலிருந்து இரண்டு கடுக்காயையும் சிறிது லேஹ்யத்தையும் எடுத்துத் தினந் தோறும் உட்கொள்ளவும். இது நரை திரை முதலிய கிழத்தன் மைக்கான குறிகளைப் போக்கும் ; தேஹ நிறத்தையும், ஆயுளை யும், சரீரவன்மையையும் விருத்தி செய்யும் ; ஐந்து விதமான காஸங்கள், க்ஷயம், ச்வாஸம், விக்கல், விஷமஜ்வரம், மேஹ ரோகம், குல்மம், கிராஹணீரோகம், அர்சஸ், இருதயத்தைப் பற்றிய வியாதிகள், அரோசகம், பீநஸம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். அகஸ்தியரால் மொழிந்தருளப்பட்ட இந்த இரஸாயன மானது மிகவும் சிலாக்கியமான ஔஷதமாம். 125—130½.

வாஸிஷ்ட ரஸாயநம் :—தசமூலம், சிற்ருமுட்டி, பெருங் குரும்பை, மஞ்சள், மரமஞ்சள், திப்பிலி, யானைத்திப்பிலி, வட் டத்திருப்பி, அமுக்கிருங்கிழங்கு, நாயுருவி, காஞ்சொறி, அதி விடயம், சிந்திற்கொடி, இளம் பில்வமரப்பட்டை, சிவதை, நேபா ளம், சித்திரமூலம், சித்திர மூலத்தின் இலை, க்ஷீரகாகோலீ, வெட்பாலை, ஜடாமாம்ஸி, வேங்கையின் புஷ்பம், வேங்கையின் பிசின், மேர்மல்லி, மஹாச்ராவணீ, சேராங்கொட்டை, முருக்கம் லாங்கொடி, மருதோன்றி, முருங்கப்பட்டை, வேப்பம்பட்டை, நீர்முள்ளி இவை வகைக்கு ஒரு பலமெடையும், கடுக்காய் ஆயிரத்து நூறும், வாற்கோதுமை இரண்டு ஆடகமும் எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, வாற்கோதுமை நன்கு

சமையலானதும் தீயைவிட்டு இறக்கி வடிக்கட்டவும்; பிறகு வடிக்கட்டிய திப்பியிலிருந்து கடுக்காய்களை மட்டும் பொறுக்கி யெடுத்து, அக் கடுக்காய்களையும் நூறு பலம் பழகிய வெல்லத்தையும் அக் கஷாயத்தில் சேர்க்கவும்; அவற்றோடு நல்லெண்ணெய், நெய், நெல்லிக்கனியின் சாறு இவை தனித் தனியே ஒவ்வொரு பிரஸ்த்தப் பிரமாணம் கூட்டி, மறுபடியும் அக்கஷாயத்தைத் தீயிலேற்றி, மந்தாக்னியிட்டுக் காய்ச்சி, காண்டியில் பாகு பதத்தில் பற்றிக்கொள்ளும் தருணத்தில் தீயிலிருந்து இறக்கி, சூடும் ஆறிய பின்பு, அரைச் சேர் திப்பிலிப்பொடியும், மும்மூன்று பலம் த்ரிஜாதசப்பொடியும், நாலுசேர் தேனும் கலந்து, பழகிய மட்பாத்திரத்தில் அனைத்தையும் சேர்த்து, தானியக் களஞ்சியத்தினுள் ஒரு மாஸம் அடக்கம் செய்து வைத்து, அகஸ்திய ஹரீதகியைப் போலவே அவ்வித ரோகங்களிலெல்லாம் உபயோகிக்கலாம்; வஸிஷ்டரால் மொழியப்பட்ட இந்த இரஸாயனம் அகஸ்தியரஸாயனத்தினும் குணத்தில் மேலானது. ஆரோக்கிய நிலைமையிலும், எல்லா ருதுக்களிலும் நன்மை தரக் கூடியது. 131—139.

ஸைந்தவாதி சூர்ணம்:—இந்துப்பு ஒரு பலம், சுக்கு ஒரு பலம், ஸௌவர்சசல லவணம் இரண்டு பலம், உலர்ந்த புளியங்காய், உலர்ந்த மாதளம் பழம், மிளகரணையிலை இவை வகைக்கு நாலு பலம், மிளகு ஒரு பலம், ஓமம் ஒரு பலம், கொத்தமல்லி விதை இரண்டு பலம்; இவை யனைத்தையும் சூர்ணம் செய்து, பன்னிரண்டு பலம் சர்க்கரையும் கூட்டிக்கொள்ளவும். உணவுண்ணுகையிலும், பானவகைகளைப் பருகும்போதும் இச் சூர்ணத்தை அவரவருக்கேற்ற அளவில் கொடுக்கலாம். இது ருச்யம், தீபனம், பத்யம் என்கிற குணங்களை யுடையது; பார்ச்வசூலை, ச்வாஸம், காஸம் இவைகளையும் பரிஹரிக்கும். 140—142.

தாந்யகாதி காண்டவம்:—கொத்தமல்லி விதை அரைக்கால் பலம், ஓமம் கால் பலம், ஜீரகம் கால் பலம், மாதளம்பழம் அரைப்பலம், புளியங்காய் அரைப்பலம், ஸௌவார்ச்சல லவணம் ஒரு பலம், சுக்கு கால் பலம், விளாம்பழத்தின் உலர்ந்த உட்சதை ஐந்து பலம் இவையனைத்தையும் சூர்ணம் செய்து, பதினாறு பலம் சர்க்கரையைக் கலந்து விடவும். காண்டவம் என்கிற இந்த முறை[1] ஸைந்தவாதி சூர்ணத்தைப் போலவே அன்னபானாதிகளுடன் கலந்து உட்கொள்ளத் தகுந்தது—143, 144½.

உரக்ஷதம் நீங்கியதும் தலைவலிமுதலியதற்குச் சிகித்ஸை:— இனி இராஜயக்ஷ்மசிகித்ஸையிற் கூறப்படும் உபசார முறைகளும் உரக்ஷத ரோகத்தில் அந்தந்த நிலைமைகளுக்கேற்றவாறு அனுகூலமானவையாகும். உரக்ஷதம் நிவ்ருத்தியானதும், கபம் விருத்

1. காண்டவம் — முதற் புத்தகம் பார்க்க.

தியாயிருந்தால், எவனுக்கு மார்பும் சிரஸ்ஸும் பிளக்கப்படுவது போல் வேதனை யுண்டாகின்றதோ அந்த காஸரோகி அடியிற் கூறப்படும் தூமபானங்களை உபயோகிக்கலாம்.—145, 146.

கபத்திற்குப் பரிஹாரமான தூமபானங்கள் :—(1) மேதா, மஹாமேதா, சிற்றுமுட்டி, பேராமுட்டி, அதிமதுரம் இவற்றைக் கல்சமாக அரைத்து, ஒரு வெண்பட்டுத் துண்டில் ஒரு சிராகப் பூசி வர்த்திசெய்து, அதைக்கொண்டு தூமபானம் செய்யவும்; ஜீவநீயகணச் சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தை இதற்கு அனுபானமாய் உபயோகிக்கலாம். (2) மனச்சிலை, பலா சம்பட்டை, காட்டு ஜீரகம், மூங்கிலுப்பு, சுக்கு இவற்றையும் முன்போலவே வர்த்தி செய்து தூமபானம் பண்ணலாம்; இதற்கு சர்க்கரை, வெல்லம், இவற்றைக் கரைத்த ஜலத்தையாவது, கருப் பஞ்சாற்றையாவது அனுபானமாகக் கொள்ளலாம். (3) அப் பொழுதே கொய்துவந்து ஈரமாயுள்ள ஆலம் மொட்டுக்களையும் அவற்றிற்குச் சம நிறை மனச்சிலையையும் அரைத்து, நெய் கலந்து தூமபானம் செய்யவும்; தித்திரி யென்னும் பக்ஷியின் இறைச்சியை அச்சமயம் கூடவே புஜிக்கவேண்டும். 147—149.

காஸாதிகளால் க்ஷீணித்தவர் முதலியவர்களுக்குச் சோதந க்ருதங்கள் :—(1) க்ஷயத்தினால் உண்டாகிற காஸத்தில் முற் கூறிய ப்ருஹ்மண சிகித்ஸையைச் செய்யவேண்டும்; ஜாடராக் னியையும் விருத்தி செய்யவேண்டும்; தோஷம் மிகவும் அதி கரித்தவனுக்கு மிருதுவான விரேசன ஔஷதத்தை ஸ்நேஹம் கலந்து கொடுக்கவேண்டும். (2) பெருவாகையின் பட்டை, சிவதை வேர், இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றைப் பொடித்து, திராக்ஷையின் ஸ்வரஸத்தையும், நிலப்பனங்கிழங்கின் ஸ்வரஸத் தையும் உதியம்பட்டையின் கஷாயத்தில் சேர்த்து, அக்கஷாயத் தில் பக்குவமான க்ருதத்தை க்ஷதகாஸம் முதலியதால் இளைத் துப்போன தேஹமுள்ளவன் சோதநத்தின் பொருட்டு முறைப் படி உட்கொள்ளலாம். (3) க்ஷயகாஸமுள்ளவன் பித்த-கபங் களும் தாதுக்களும் க்ஷீணித்திருக்கையில் கடுக்காய்ப்பூ, பால், சிற்றுமுட்டி, பேராமுட்டி இவற்றால் பக்குவம் செய்த க்ருதத் தைப் பருகலாம். (4) மூத்திரம் நிறத்தில் மாறுபட்டு மிக்க கஷ்டத்துடன் வெளிவருமாயின் அந்த நிலைமையில் விதாரியின் இனங்களாலாவது,[1] கடம்பின் இனங்களாலாவது,[2] பனங்கனிக ளாலாவது பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தையும் பாலையும் உட்கொள்ளலாம். (5) ஆண்குறி வீங்கிப்போய் வேதனை யுள் ளதா யிருக்கையிலும், அவ்விதமே ஆஸநத்வாரமும் ப்ருஷ்ட பாகமும் துடையிடுக்குகளும் வீங்கி வருந்துகையிலும், நெய்

1. விதாரியின் இனங்கள் — விதாரீ, க்ஷீரவிதாரீ முதலியவை.
2. கடம்பின் இனங்கள் — கடம்பு, நீர்க்கடம்பு முதலியவை.

யின்மேல் படிந்துள்ள ஆடையினாலாவது, இலகுவான மிச்ரக ஸ்நேஹத்தினாலாவது[1] அநுவாஸநம் செய்யலாம். (6) பிறகு ஜாங்கல மாம்ஸங்களைப் பத்தியமாகப் புஜிக்க வேண்டும். அப்பால் வர்த்தகம் முதலிய பக்ஷிகளுடைய மாம்ஸங்களும், பிலேசய ஜந்துக்களின் மாம்ஸங்களும், அங்ஙனமே மாம்ஸபக்ஷிணிகளான ப்ரஸஹ வகுப்பைச் சேர்ந்த மிருகங்களின் இறைச்சிகளும் கிரமமாய் உணவாக உபயோகிக்கத் தகுந்தவை. உஷ்ணத்தன்மையும், பிரமாதி யென்கிற குணமும்[2] அவற்றிற்கு இருப்பதால் அவை ஸ்ரோதோமார்க்கங்களிலிருந்து கபத்தை நெகிழச்செய்து வெளிப்படுத்துகின்றன; ஸ்ரோதஸ்ஸுகள் கபம் கழிந்து, சுத்தமாய் விட்டால், அவற்றின் மூலமாய் இரஸதாது உடலெங்கும் தாராளமாயோடி புஷ்டியை யுண்டுபண்ணும். 150—156½.

**சவிகாதி க்ருதம்**:—சவ்வியம், த்ரிபலை, கண்டுபாரங்கி, தசமூலங்கள், சித்திரமூலம், கொள், மோடி, வட்டத்திருப்பி, இலந்தங் கொட்டை, வாற்கோதுமை இவற்றைச் சமபாகம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும். இக் கஷாயத்தில் க்ருதம் பக்குவம் செய்யவேண்டும். பிறகு சுக்கு, காஞ்சொறி விதை, திப்பிலி, கிச்சிலிக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, கடுக்காய்ப்பூ இவற்றைச் சமயெடையாகக் கல்கமாய்ச் சேர்த்து, க்ருதம் பக்குவமானதும், யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், பஞ்சலவணம் இவற்றைப் பொடித்துச் சேர்க்கவும். க்ஷயகாஸத்தினால் வருந்துபவன் இதை தேஹநிலைமை முதலியதை யுணர்ந்து ஏற்ற அளவில் உட்கொண்டுவரலாம். 157—159½.

**காஸமர்தாதி க்ருதம்** :—தகரவிதை, கடுக்காய், கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, சிறு தேக்கு, சுக்கு, திப்பிலி, கடுகரோகிணி, பெருங்குமிழன் இவற்றின் ஸ்வரஸம் தனித்தனியே கால்பலம், பால் ஒரு ஆடகம், திராக்ஷையின் சாறு ஒரு ஆடகம்; இவற்றில் ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தைப் பக்குவம் செய்யவும். இது க்ஷயம், ஜ்வரம், ப்லீஹரோகம், ஸர்வகாஸங்கள் இவற்றை யெல்லாம் பரிஹரிக்கக்கூடிய சிறந்த க்ருதமாகும்.—160, 161½.

**வாஸா க்ருதம்** :—ஆடாதோடை, கண்டங்கத்திரி, சீந்திற்கொடி இவற்றின் இலைகளையும், வேர்களையும், கனிகளையும், மொட்டுகளையும் இடித்து இரஸம் பிழிந்தும், அவற்றையே கல்கமாகச்செய்தும், க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க காஸம், ஜ்வரம், அரோசகம் இவை தீரும்.—162½.

---

1. மிச்ரகஸ்நேஹம் — க்ருதம், தைலம், வஸை முதலியவற்றை ஒன்றாகக் கூட்டி யுபயோகித்தல்.

2. பிரமாதி—தன் வீர்யத்தால் நாடிகளிலிருந்து தோஷங்களை அப்புறப்படுத்துங் குணம்.

தாடிமக்ருதம், பிப்பல்யாதி க்ருதம்:—(1) ஒருபங்கு நெய்யை இரண்டுபங்கு மாதளம்பழச் சாற்றில் சேர்த்து, த்ரிகடுவையும் பொடித்துக் கல்கமாகக் கூட்டி பக்குவம் செய்து, அந்த க்ருதத்தை உணவுண்ட பின்பு யவக்ஷாரமும் சிறிதளவு சேர்த்து உட்கொள்ளலாம். (2) திப்பிலி, வெல்லம் இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்தையாவது செம்மறியாட்டுப் பாலுடன் கலந்து பருகலாம்.—163, 164.

சவ்யாதி க்ருதம் முதலியவைகளுக்குக் காஸத்தில் பொதுவான உபயோகம் :—க்ஷயகாஸமுள்ளவர்களுக்கு ஜாடராக்னியை விருத்தி செய்யும் பொருட்டு முற்கூறிய க்ருதங்கள் உபயோகமானவை ; உள்ளே கபதோஷம் நிரம்பிய தொண்டை, மார்பு இந்த ஸ்ரோதஸ்ஸுகளைச் சுத்தம் செய்வதற்கும் இந்த க்ருதங்கள் ஏற்றவையாகும்.—165.

ஹரீதகீ லேஹ்யம் :—ஒரு பிரஸ்த்தம் வாற்கோதுமைக் கஷாயத்தில் இருபது கடுக்காய்களைச் சமைக்கவும ; அக்கடுச்சாய்களை நன்கு சமையலான பிறகு எடுத்து விதை நீக்கி அவற்றை நன்றாகக் கடையவும் ; பிறகு ஆறு பலம் பழகிய வெல்லத்தையும், இரண்டு பலம் திப்பிலிப் பொடியையும், கால் பலம் சுத்த மனச்சிலையையும், அரைக்கால் பலம் இரஸாஞ்ஜநத்தையும் அத்துடன் சேர்த்து, மிச்சமுள்ள அக்கஷாயத்திலேயே கலந்து, மீண்டும் லேஹ்ய பாகத்தில் பக்குவம் செய்தெடுக்கவும். இந்த லேஹ்யம் ச்வாஸ-காஸங்களைப் போக்கும்.—166, 167.

காஸங்களில் உபயோகமான சில சிறிய முறைகள் :—(1) முள்ளம்பன்றியின் முள்ளலகுகளை யெடுத்து, சாம்பலாகச் செய்து, அதை நெய், தேன், சர்க்கரை இவற்றுடன் கலந்து உட்கொள்ள ச்வாஸ-காஸங்கள் தீரும். (2) மயிலின் பாதங்களையாவது அவ்விதமே எரித்துத் தேன், நெய் இவற்றுடன் கலந்து உபயோகிக்கலாம். (3) ஆமணக்கிலைகளை யெரித்து க்ஷாரமெடுத்து அதையாகிலும் த்ரிகடு சூர்ணம், எண்ணெய், வெல்லம் இவற்றோடு கலந்து உபயோகிக்கலாம். (4) துளஸி யிலைகளையும் ஆமணக்கிலைகளையுமாவது எரித்து க்ஷாரமெடுத்து அங்ஙனமே த்ரிகடு முதலியவற்றோடு கலந்து லேஹ்யம்போல உட்கொள்ளலாம். (5) த்ரிகடு சூர்ணத்தையாவது பழகிய வெல்லத்துடனும் நெய்யோடும் கலந்து உபயோகிக்கலாம். (6) தாமரைக்கிழங்கு, த்ரிபலை, த்ரிகடு, வாய்விடங்கம், தேவதாரு, சிற்றுமுட்டி, சிற்றரத்தை இவற்றைச் சமபாகமெடுத்து சூர்ணம் செய்யவும் ; இச்சூர்ணமனைத்துக்கும் ஸமஎடையாகச் சர்க்கரையும் சேர்த்து புஜிக்கவும் ; அல்லது அச் சூர்ணத்தைத் தேன், நெய் இவற்றோடு கலந்து லேஹ்யம் போலவாவது உட்கொள்ளலாம். இது காஸத்தைப் போக்குவதிற் சிறந்ததாகும். (7) மிளகுப் பொடியை

அவ்விதமே ஸமயெடை சர்க்கரையோடாவது, தேன் - நெய் இவற்றோடாவது கூட்டி யுபயோகிக்கலாம். (8) கடுக்காய், சுக்கு, கோரைக்கிழங்கு இவற்றைச் சூர்ணம் செய்து வெல்லம் கலந்து குளிகைகளாகச் செய்து வாயில் அடக்கிவைத்திருக்கலாம். (9) தான்றிக்காயையாவது வாயில் அடக்கிக் கடித்து இரஸம் விழுங்கலாம்; கடுக்காய் முதலியதாலான இந்த குளிகையும் தான்றிக்காயும் எல்லாவித ச்வாஸ-காஸங்களிலும் வாயில் அடக்கிக் கொள்ளச் சிறந்தவையாம். 168—172½.

**க்ஷயகாஸாதிகளில் சில யூஷங்கள் :**—(1) உதியமரத்தின் இலைகளைக் கல்கமாய் அரைத்து, நெய்யிற் பொரித்து, சர்க்கரையும் கலந்து உபயோகிக்க வாந்தி, நாவறட்சி, காஸம், ஆமாதிஸாரம் இவை நீங்கும்; அந்த இலையின் கல்கத்தைச் சேர்த்து பேயாவாகிலும் உத்காரிகையாகிலும்[1] பக்குவம் செய்து உபயோகிக்க இப் பிணிகள் தீரும். (2) கண்டங்கத்திரி வேரின் கஷாயத்தில் பயற்றங்கஞ்சியைப் பக்குவம் செய்து, அதை நன்றாகத் தாளித்து, நன்கு பழுத்த நெல்லிக்கனிகளை இடித்துச் சேர்த்து, வேறு அம்லவஸ்துக்களையும் கலந்து உட்கொள்ள ஸகல காஸங்களும் தீருமென்று வைத்தியர்கள் நிர்ணயித்திருக்கின்றனர். (3) வாதஹரமான ஔஷதச் சரக்குகளாலான கஷாயத்தில் பாலையும், யூஷங்களையும் விஷ்கிரங்கள், ப்ரதுதங்கள், பிலேசயங்கள் இத்தகைய ஜந்துக்களின் மாம்ஸரஸங்களையும் பக்குவம்செய்து க்ஷயகாஸரோகிக்குக் கொடுக்கலாம். 173—175½.

**க்ஷயகாஸத்திற்கான தூமபான ப்ருஹ்மணாதிகள் :**—க்ஷதகாஸத்தில் எந்த தூமபான முறைகள் அநுபானங்களோடு நிரூபிக்கப்பட்டிருக்கின்றனவோ, அவற்றையெல்லாம் க்ஷயகாஸத்திலும் உபயோகிக்கலாம். மேலும் இனி இராஜயக்ஷ்ம சிகித்ஸையில் எந்த ப்ருஹ்மண சிகித்ஸையும், அக்னிதீபன சிகித்ஸையும், ஸ்ரோதஸ்ஸுகளைச் சோதநம் செய்யும் சிகித்ஸையும் கூறப்படப் போகின்றனவோ அவை யாவும் க்ஷயகாஸத்தில் பத்யமாய் உபயோகிக்கச் சிறந்தவையாகும்.—176, 177½.

**க்ஷயகாஸத்தில் ஸந்நிபாத சிகித்ஸை :**—க்ஷயகாஸம் ஸந்நிபாதத்தினால் உண்டாகின்றது; ஆகவே அது கொடிய வியாதி; ஆனதுபற்றி ஸந்நிபாத ஜ்வரத்திற்கு அநுகூலமான சிகித்ஸை இதற்கும் ஹிதமானதாகையால், தோஷங்களுடைய பலாபலங்களுக் கேற்றவாறு அச் சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்.—178.

---

1. உத்காரிகை—முதற் புத்தகம் பார்க்க.

# நான்காம் அத்தியாயம்.

## ச்வாஸ-ஹித்மா சிகித்ஸை.

இனி ச்வாஸ-ஹித்மா சிகித்ஸைகளைக் கூறும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

**ச்வாஸ-ஹித்மாக்களுக்கு ஒரேவிதமான சிகித்ஸை:**—ச்வாஸ ரோகத்திற்கும் ஹித்மா என்கிற விக்கலுக்கும் உற்பத்தி காரணம் முதலியவை ஸமானமாயிருப்பதால், அவற்றிற்குச் சிகித்ஸையும் அங்ஙனமே பொதுவாகக் கூறப்படுகிறது.—1.

**ச்வாஸ-ஹித்மாக்களுக்கு ஸ்வேதநம் :**—அவ் வியாதிகளால் வருந்துபவரை முதலில் ஸ்நிக்த்தமான ஸ்வேத சிகித்ஸைகளால் உபசரிக்கவேண்டுல்; ஸ்வேதம் செய்யும்போது உப்பும் தைலமும் கலந்து அப்பிணியாளியின் தேஹத்தில் பூசவேண்டும். இம் முறைகளால், ரோகியின் மார்பினுள் கபம் ஏற்கெனவே பலமாக ஊறியிருந்தாலும், அது கரைந்து மெதுவாகக் கோஷ்டத்தினுள் சேர்ந்துவிடு மாகையால், பிறகு அதை வெளிப்படுத்துவது எளிது; மேலும் ஸ்ரோதோ மார்க்கங்களும்[1] மிருதுவாகப்போய், வாதமும் சரியானபடி வெளிப்படும்.—2, 3.

**ச்வாஸ-ஹித்மாக்களில் வமநம் :**—ஸ்வேதசிகித்ஸை செய்து கொண்ட அப்பிணியாளிக்கு ஸ்நிக்த்தமான அன்னத்தை ஆநூப மாம்ஸ ரஸங்களோடு புஜிக்கக் கொடுக்கவேண்டும்; அல்லது தயிரைப் பிழிந்து அதிலிருந்துவரும் நீரையாவது மெதுவாக வாந்தியாவதற்கு உட்கொள்ளக் கொடுக்கலாம். காஸத்தினாலும், வாந்தியினாலும், இருதயப் படபடப்பினாலும், தொண்டைக் கம்மலாலும் வருந்துபவனுக்கு திப்பிலி, இந்துப்பு, தேன் இவற்றுடன் கூடியதும் வாதத்தை விருத்தி செய்யாததுமான வமந சிகித்ஸையை விசேஷமாகப் பிரயோகிக்கவேண்டும். சரீ ரத்தைத் தூஷிப்பிக்கும் கபம் வாந்தி முதலியவற்றின் மூலமாய் வெளிப்படுத்தப்பட்டதும், ஸ்ரோதோ மார்க்கங்கள் சுத்தம் செய்யப்பட்டு, ச்வாஸவாயுவும் ச்வாஸமார்க்கங்களில் தடங்கலின்றி ஸஞ்சரிக்கக் கூடியதாய் விடுவதால் அப்பிணியாளி சுகம் பெறுகின்றான். 4—6.

**ச்வாஸ-ஹித்மாக்களில் விரேசநம் :**—பொருமல், உதாவர்த்தம், தமகச்வாஸம் இவற்றில் அடியிற் கூறப்படுமாறு அன்னாதிகளைக் கொடுத்து மலம் மிருதுவாக வெளிப்படும்படி விரேசகம் செய்விக்கலாம்; அதாவது கொம்மட்டி மாதளை, புளிவஞ்சி, பெருங்காயம், சிறுகளர்வா, பிடாலைவணம் இவற்றைக் கூட்டி அன்னத்தைப் புஜிக்க, அது மலத்தைத் தாராளமாக வெளிப்

1. ஸ்ரோதோ மார்க்கங்கள் என்று இங்கே ச்வாஸ மார்க்கங்களில் அடங்கிய சிறிய பெரிய குழாய் முதலியவை குறிக்கப்படுகின்றன.

படுத்தும்; இந்துப்பையும் மாதளம்பழம் முதலிய கனிகளின் சாற்றையும் கூட்டி பக்குவம் செய்து, இளஞ்சூடாயிருக்கையில் விரேசநமாவதற்காவது உள்ளுக்குக் கொடுக்கலாம்.—7, 7½.

ச்வாஸ - ஹித்மாக்களில் சோதந சிகித்ஸையின் ஆவசியகம் :—இந்த ச்வாஸ-ஹித்மா ரோகங்கள் கபத்தினால் பிராணவாயுவின் மார்க்கங்கள் தடுக்கப்படவே அவ்வாயுவின் பிரகோபத்தினால் ஏற்பட்டவையாகும். ஆகையினால் பிராணவாயுவின் மார்க்கங்களைச் சுத்தம் செய்வதன்பொருட்டு மேல்முகமாய் வமனமும், கீழ்முகமாய் விரேசநமும் செய்வது அநுகூலமாயிருக்கும். ஓடுகிற ஜலத்தை அணையிட்டுத் தடுத்தால் பிரவாஹநீர் மேலோங்கிப் பொங்குவதுபோல, கபாதிகளால் ஸ்ரோதஸ்ஸுகள் அடைபட்டால் வாயு உள்ளே மிக்க அதிகரித்துவிடுமாகையால், இம்மார்க்கங்களைச் சுத்தம் செய்வது அவசியமாம்.—8, 9½.

ச்வாஸ - ஹித்மாக்களில் தூமபானம் :—சோதநசிகித்ஸை செய்தபிறகும் ச்வாஸ ஹித்மாக்கள் நிவ்ருத்தி யாகாவிட்டால், உள்ளே மறைந்து தங்கியிருக்கிற கபதோஷத்தை தூமபானங்களைச் செய்து வெளிப்படுத்தவேண்டும். (1) மஞ்சளிலை, ஆமணக்குவேர், திராக்ஷை, மனச்சிலை, தேவதாரு, தாளகம், ஜடாமாம்ஸி இவற்றைக் கல்கமாக அரைத்து வர்த்தி செய்யவும்; அதை நெய்யில் தோய்த்து, தூமபானம் செய்யவும். (2) யவதான்யங்களையாவது நெய் கலந்து எரித்து தூமம் பிடிக்கலாம். (3) தேன்மெழுகு, மட்டிப்பால், காகில் இவற்றையாவது தேனிற் கலந்து தூமம் பிரயோகிக்கலாம். (4) அல்லது சந்தனப் பொடியையாவது அப்படியே நெய் கலந்து தூமம் பிடிக்கலாம். (5) பசுமாடுகளின் கொம்பையாவது, வால்மயிர்களையாவது, ஸ்நாயு வென்னும் தசைநார்க் கயிறுகளையாவது எரித்து தூமபானம் செய்யலாம். (6) கரடி, உடும்பு, சிறிய மான், கறுப்பு மான் இவற்றின் சர்மம், கொம்பு, குளம்பு இவற்றையாவது எரித்து தூமபானம் செய்யலாம். (7) குங்கிலியத்தையாவது, (8) மனச்சிலையையாவது, (9) சாம்பிராணியையாவது, (10) யானைவணங்கி-குங்கிலியம்-அயம்-தாமரைக்கிழங்கு இவ்வனைத்தையுமாவது நெய் கலந்து எரித்து தூமபானம் செய்யலாம். 10—14.

ஸ்வேதசிகித்ஸை செய்யவேண்டிய நிலைமை :—ஸ்வேதசிகித்ஸைக்கு அநர்ஹர்களாயிருப்பவருக்கும் அச்சிகித்ஸையைச் செய்துதீரவேண்டிய நிலைமை அவசியமாய் நேரிட்டிருந்தால், அவர்களுக்குச் சர்க்கரையும் பாலும் கலந்த ஸ்நேஹ வஸ்துக்களைத் தாங்கக்கூடிய சூட்டில் மார்பிலும் கழுத்திலுமின்றி மற்றப் பாகங்களில் ஒரு கொடிப்பொழுது ஒற்றடம் கொடுக்கலாம்; அல்லது அவ்விதமே ஸ்வேதவிதி அத்தியாயத்திற் கூறிய ஊஷ்தங்களாலும், உத்காரிகையினாலும் மார்பிலும் கழுத்திலும் மிருதுவாக

ஒற்றடம் கொடுக்கலாம். ச்வாஸ-ஹிக்மாக்கள் ஆமதோஷத்துடன் கூடியவையாயிருந்தால் இலங்கநபாசநாதிகளான ஆமதோஷ சிகித்ஸைகளைச்[1] செய்யவேண்டும்.—15, 16.

ச்வாஸ-ஹிக்மாக்களில் சமநம் செய்விக்கும் நிலைமைகள் :—வமந-விரேசநாதிகளை மிதமிஞ்சி யுபயோகித்ததால் வாதம் மிகவும் அதிகரித்திருப்பதாகக் காணப்படுமானால் அதை வாதஹாரமாகவும், ஸ்நிக்த்தங்களாகவுமுள்ள இளஞ்சூடான மாம்ஸரஸம் முதலியவற்றாலும், அப்யங்கங்களாலும் சமநம் செய்யவேண்டும். உள்ளடங்கிய கபத்தை கிண்டிக் கிளப்பிக் கொள்ளாதவனுக்கும், ஸ்வேத சிகித்ஸையைச் செய்துகொள்ளாதவனுக்கும், பலவீனமாயிருப்பவனுக்கும் சோதந சிகித்ஸையைச் செய்வதால் வாயுவானது தேஹத்தினுள் பிரகோபிக்க இடம் பெற்று, பிரதான மர்மஸ்த்தலமாகிய இருதயத்தை மிகவும் சோஷணம் செய்து சிக்கிரத்தில் உயிரை உறிஞ்சுவிடும். ஆகையினால் அத்தகையவர்களுக்கு ச்வாஸ-ஹிக்மாக்களைக் கஷாயங்கள் லேஹ்யங்கள் ஸ்நேஹங்கள் இம்முறைகளால் சமநம் செய்யவேண்டும். க்ஷதகாஸத்தினால் க்ஷீணித்தல், அதிஸாரம், இரக்தபித்தம், அழற்சி இவற்றாலான விக்கல்களுக்கும் ச்வாஸங்களுக்கும் மதுரமாகவும் ஸ்நிக்த்தமாகவும் குளிர்ச்சியாகவுமுள்ள ஔஷதங்களால் சிகித்ஸை செய்யவேண்டும். 17—19½.

ச்வாஸ-ஹிக்மாக்களில் யூஷம் முதலிய உணவுகள் :—(1) கொள், தசமூலங்கள் இவற்றின் க்வாதத்தில் ஜாங்கல மாம்ஸரஸங்களையும், யூஷங்களையும் பக்குவம் செய்து ச்வாஸ-ஹிக்மாக்களில் உபயோகிக்கலாம். (2) முருங்கை, கத்திரி, துளசிவிதை, ஆடாதோடைவேர் இவற்றாலும், (3) வேம்பு, பன்றிமுகந்தான் செடி, கண்டங்கத்திரி, கொம்மட்டி மாதுளை இவற்றின் துளிர்களாலும், (4) சிறுவழுதுணை, காஞ்சொறி, கர்க்காடகச்ருங்கி, பில்வப்பழத்தின் உட்சதை, த்ரிகண்டகங்கள்[2] இவற்றாலும், (5) சித்திரமூலம், ஓமம், கர்க்காடகச்ருங்கி, அட்டிப்பு இவற்றாலும் பக்குவம் செய்த பேயாவையாவது, (6) தசமூலங்களைச் சேர்த்து பக்குவம் செய்த பேயாவையாவது உட்கொள்ளச் செய்தால், காஸ-ச்வாஸங்கள், விக்கல் இப்பிணிகள் தீரும், 20—22½.

தசமூலாதிகஷாயமும் பேயாவும் :—தசமூலம், கிச்சிலிக்கிழங்கு, சிற்றரத்தை, கண்டுபாரங்கி, பில்வம், ருத்தி, தாமரை, கர்க்காடகச்ருங்கி, திப்பிலி, கீழாநெல்லி, சீந்திற்கொடி, சுக்கு இவற்றால் பக்குவம் செய்த கஷாயத்தை முதலிற் பருக, இக்

1. ஆமதோஷ சிகித்ஸை — அபதர்ப்பணம். முதற்பாகம் பார்க்க.

2. த்ரிகண்டகங்கள் — கண்டங்கத்திரி, பூனைக்காலி, நெரிஞ்சில் இம்மூன்றுக்கும் பொதுப் பெயர்.

கஷாயம் ஜீர்ணமான பிறகு இதே சாக்குகள் சேர்த்து பேயாவைப் பக்குவஞ்செய்து குடிக்கலாம்.—23, 24.

ச்வாஸ-ஹிக்மாக்களில் வேறு சில உணவுகள்:—(1) சம்பா அரிசி, காரரிசி, கோதுமை, வாற்கோதுமை, பயறு, கொள் இவற்றாலான உணவைப் புஜித்து வருவதனால் காஸம், இருதயத்தைப்பற்றிய நோய், பக்கச்சூலை, விக்கல், ச்வாஸம், இவை நீங்கும். (2) எருக்கஞ்செடிமுளைகளின் பாலில் பாவனை செய்த வாற்கோதுமையை மாவாகச் செய்து, தேன் கூட்டி, முற்கூறிய தசமூலாதி கஷாயத்தையும் சேர்த்துக் கலந்து உட்கொள்ளலாம். (3) யவக்ஷாரம், காயம், நெய், கிருஷ்ணலவணம், தாமரைக் கிழங்கு, கிச்சிலிக்கிழங்கு, த்ரிகடு, கொடிமாதுளை, புளிவஞ்சி இவற்றையும் அன்னத்திற் கலந்து உபயோகிக்கலாம். 25—27.

நாவறட்சியில் உபயோகிக்கத் தகுந்த பானங்கள்:—(1) விக்கலும் ச்வாஸமு முள்ளவனுக்கு நாவறட்சி யுண்டானால் அவன், தசமூல கஷாயத்தையாவது, தேவதாருவின் கஷாயத்தையாவது, வாருணீ யென்கிற மதுவின் தெளிவு நீரையாவது பருகலாம். (2) திப்பிலி, மோடி, கடுக்காய், வாய்விடங்கம், சித்திரமூலம் இவற்றைக் கல்கமாகச் செய்து, அக்கல்கத்தை ஒரு நெய்ப்பாத்திரத்தின்மீது லேபனம் செய்து, அப்பூச்சு உலர்ந்த பிறகு, அப்பாத்திரத்தில் மோரைச் சேர்த்து ஒரு மாஸம் வைத்திருந்து, அப்பால் அதை யுபயோகிக்க அது அக்னி தீபனம் செய்து, ச்வாஸ-காஸங்களையும் போக்கும். (3) வட்டத்திருப்பி, பெருங்குரும்பை, தேவதாரு, குங்கிலிய மாப்பட்டை இவற்றை இடித்து ஸுரையென்கிற மதுவின் தெளிவு நீரில் சேர்த்து ஓர் இரவெல்லாம் ஊறவைத்து, சொற்ப அளவு உப்பு சேர்த்து, இரண்டு பலம் அளவில் அதைப் பருகலாம். (4) கண்டுபாரங்கியையும் சுக்கையும் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது இளஞ் சூடாயிருக்கையில் உட்கொள்ளலாம். (5) யவக்ஷாரத்தையும் மிளகையு ம்ஜலத்தில் சேர்த்தாவது குடிக்கலாம். (6) இங்குப்பத்ரியைக் கஷாயம் காய்ச்சி, அக்கஷாயத்திலேயே மீண்டும் இங்குப்பத்ரி கல்கத்தைக் கரைத்து, அந்த நீரையாவது உட்கொள்ளலாம். (7) வழிலம் பாலையிலைகளின் ஸ்வரஸத்தையாவது, காட்டுவாகைப்பூவின் ஸ்வரஸத்தையாவது தேனையும் திப்பிலிப் பொடியையும் சேர்த்து, பித்த-கபங்களால் உண்டாகும் விக்கலிலும் ச்வாஸத்திலும் உட்கொள்வது நலம். (8) மூங்கிலுப்பு, திப்பிலி, நீரிலுண்டாகும் அதிமதுரம், சுக்கு இவற்றைச் சூர்ணம்செய்து நெய்யிற் கலந்து உத்காரிகையாகப் பண்ணி, பித்தம் தொடர்ந்துள்ள விக்கலிலும் ச்வாஸத்திலும் உபயோகிக்கலாம். (9) வாதம் தொடர்ந்துள்ள ஹிக்மா-ச்வாஸங்களில் முள்ளம்பன்றி யிறைச்சி, முயலிறைச்சி, திப்பிலிப் பொடி, நெய், முள்ளம்பன்றியின் இரத்

தம் இவற்றை உத்காரிகை செய்து உபயோகிக்கலாம். (10) அல்லது நாலு பங்கு ஜலத்திற் சேர்த்துக் காய்ச்கிய பாலில் வெல்லமும் சுக்குப் பொடியும் கூட்டி யுட்கொள்ளலாம். (11) வாத-பித்தங்களால் தொடரப்பெற்ற ச்வாஸ-ஹித்மாக்களில் ஸுவர்ச்சலை முதலியதைச் சேர்த்து பக்குவம் செய்த பாலையாவது சம்பா அரிசியினலான அன்னத்தையுண்டதும் பருகுவது நலம். (12) மோடி, அதிமதுரம், வெல்லம், பசுஞ்சாணத்தின் இரஸம், குதிரைச்சாணத்தின் சாறு இவற்றைச் சேர்த்து, தேனும் நெய்யும் சேர்த்து உட்கொள்ள விக்கல், வாயில் அமிதமாய் உமிழ்நீரூறுதல், காஸம் இவை தீரும். (13) அதிக சிலேஷ்மமுள்ள ஹித்மா ச்வாஸ ரோகியானவன் பசு, யானை, குதிரை, பன்றி, ஒட்டகம், கழுதை, செம்மறியாடு, வெள்ளாடு இவற்றின் சிறுநீரைத் தனித்தனியாகத் தேனுடன் கலந்து உபயோகிக்கலாம். (14) அல்லது நாற்கால் ஜந்துக்களுடைய சர்மம், உரோமம், எலும்பு, குளம்பு, கொம்பு இவற்றை யெரித்து எடுக்கப்படும் மசியையாவது அங்ஙனமே தேனிற் கலந்து உட்கொள்ளலாம். (15) அல்லது கபம் அதிகரித்த அப்பிணியாளி அமுக்கிருங் கிழங்கை யெரித்துண்டான மசியையாவது அவ்விதமே தேனுடன் உபயோகிக்கலாம். (16) கிச்சிலிக்கிழங்கு, தாமரை, நெல்லிக்கனி இவற்றையாவது பொடித்துத் தேனுடன் கலந் துட்கொள்ளலாம். (17) தாமரைக்கிழங்கின்பொடியையும் திப்பிலிப் பொடியையுமாவது தேனுடன் பருகலாம். (18) கைரிகம் என்கிற சுத்திசெய்த காவி, சுத்திசெய்த நீலாஞ்ஜநம், திப்பிலி இவற்றின் பொடியையாவது தேனுடன் உபயோகிக்கலாம். (19) விளாம்பழ ஸ்வரஸத்தையாவது சாப்பிடலாம். (20) நெல்லிக்கனி, இந்துப்பு, திப்பிலி இவற்றின் பொடியையாவது விளாம்பழச் சாற்றுடன் உட்கொள்ளலாம். (21) கடுக்காய், வாய்விடங்கம், மிளகு, திப்பிலி இவற்றை நெய் தேன் இவைகளில் கலந்தாவது சாப்பிடலாம். (22) இலந்தம்பழம், பொரி, நெல்லிக்கனி, திராக்ஷை, திப்பிலி, சுக்கு இவற்றையாவது நெய்யில் அல்லது தேனில் கலந்து உபயோகிக்கலாம். (23) மஞ்சள், திராக்ஷை, திப்பிலி, சிற்றரத்தை, மிளகு இவற்றையாகிலும் வெல்லத்தோடும் எண்ணெயோடும் கலந்து பருகலாம். (24) ஏற்ற லேஹ்யங்களையும், மற்றும் தகுந்த ஔஷதச் சரக்குகளின் சூர்ணங்களையும் மாம்ஸரஸத்துடனாவது, ஜலத்துடனாவது, காடிநீரோடாவது பருகலாம். 28—41½.

ஜீவந்த்யாதி சூர்ணம் :—ஜீவந்தி, கோரைக்கிழங்கு, கருந்துளஸி, இலவங்கப்பட்டை, ஏலம், சிற்றேலம், தாமரைக்கிழங்கு, கருங்கச்சோரம், கீழாநெல்லி, அயம், கண்டுபாரங்கி, சுக்கு, வெட்டிவேர், கர்க்காடகச்ருங்கி, கிச்சிலிக்கிழங்கு, திப்பிலி, நாக

கேஸரம், சிறுநாகப்பூ இவற்றைச் சூர்ணம் செய்து, இவை அனைத்துக்கும் இரண்டுமடங்கு சர்க்கரையும் கூட்டி, போதிய வளவு உபயோகித்துவர பக்கச்சூலை, ஜ்வரம், காஸம், விக்கல், ச்வாஸம் இவை தீரும். 42—44.

சட்யாதி சூர்ணம்:—கிச்சிலிக்கிழங்கு, கீழாநெல்லி, கண்டு பாரங்கி, கருங்கச்சோரம், வெட்டிவேர், தாமரைக்கிழங்கு இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டுமடங்கு சர்க்கரையும் சேர்த்து, விக்கலையும் ச்வாஸத்தையும் பரிஹரிக்க உட்கொள்ளலாம்.—45.

ச்வாஸ-ஹித்மாக்களில் நஸ்யங்கள்:—(1) சுக்கையும் வெல்லத்தையும் ஸம அளவாகச் சேர்த்து இடித்து புஜித்து வரலாம். அல்லது சுக்கை வெல்லத்தில் சிறிதளவு நஸ்யமாய் உபயோகிக்கலாம். (2) வெள்ளைப்பூண்டு, ஈருள்ளி, வெங்காயம், சந்தனம் இவற்றில் எதையேனும் ஒன்றைக் கல்கமாகச் செய்து, முலைப்பால்விட்டுக் குழைத்து வடிக்கட்டி நஸ்யமிடலாம். (3) ஈயின் மலத்தை முலைப்பாலில் கலந்தாவது, செவ்வரக்கு நீரில் கலக்கியாவது நஸ்யமிடலாம்.—46, 47.

ச்வாஸ ஹித்மாக்களுக்கேற்ற க்ருதங்கள்:—(1) திப்பிலி, அட்டுப்பு, யவக்ஷாரம், கடுக்காய், காயம், சிறுநாகப்பூ, நெல்லிக்கனி இவற்றைப் பொடித்து, தசமூலஸ்வரஸத்தில் சேர்த்து, மோரின் தெளிவு நீரையும் கூட்டி, இதில் க்ருதத்தைப் பக்குவம் செய்யவும்; இதில் ஜீவநீயகணச் சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சிய பிறகு, அந்த க்ருதத்தைப் பருகலாம்; அல்லது தேன் கலந்து லேஹ்யம்போலச் செய்து உபயோகிக்கலாம். (2) வாலுளுவை, கடுக்காய், கோஷ்டம், திப்பிலி, கடுகரோகிணி, ஓமம், தாமரைக்கிழங்கு, முருக்கம்பட்டை, சித்திரமூலம், கிச்சிலிக்கிழங்கு, இந்துப்பு, கறியுப்பு, கீழாநெல்லி, பாலைக்கீரை, பில்வப்பழத்தின் உட்சதை, வசம்பு, இலவங்கப்பத்திரி, தாளிசப்பத்திரி; இவற்றை வகைக்குக் கால்பலம் எடுத்து, அனைத்துக்கும் நாலில் ஒருபங்கு காயம் கலந்து, க்ருதம் பக்குவம் செய்து உட்கொள்ள, கை கால்களைப் பற்றிய வாதநோய், மூலரோகம், கிரஹணி, விக்கல், இருதயரோகம், பக்கசூலை இவை நிவ்ருத்தியாம். (3) தாந்வந்தர க்ருதம், வ்ருக்ஷ க்ருதம், தாதிக க்ருதம், ஹபுஷாதி க்ருதம் இவற்றுள் ஒன்றை[1] அரைப் பங்கு யவக்ஷாரம் அல்லது இந்துப்பு சேர்த்துப் பருகலாம். 48—52½.

ச்வாஸ-ஹித்மாக்களில் தற்கால பரிஹாரத்திற்கான சில உபாயங்கள்:—ச்வாஸத்தினால் அல்லது விக்கலால் வருந்துபவன

1. தாந்வந்தர க்ருதம் — பிரமேஹ சிகித்ஸையிற் கூறப்படுவது. வ்ருக்ஷ க்ருதம்—இரத்த-பித்தத்திற் கூறிய வாஸாக்ருதம். தாதிக க்ருதம் — குல்மசிகித்ஸையிற் கூறப்படுவது. ஹபுஷாதி க்ருதம் — உதர சிகித்ஸையிற் கூறப்படுவது.

மீது குளிர்ந்த ஜலத்தைத் திடீரென்று இறைப்பதும், அவனைத் திடுக்கிடச் செய்வதும், திடீரென அசைத்துக் குலுக்குவதும், மனத்துயர முண்டுபண்ணுவதும், ஜடிதியில் மகிழச் செய்வதும், பொறுமை யுண்டுபண்ணுவதும், ச்வாஸத்தை அடக்கச் செய்வதும், விஷமற்ற பூச்சிகளைக் கடிக்கவிடுவதும் நலம்.—53½.

ச்வாஸ-ஹித்மாக்களில் ஸாமாந்ய சிகித்ஸை:—கப-வாத ஹரமாகவும், பரிசத்திலும் வீர்யத்திலும் உஷ்ணமாகவும், உள்ளடங்கிய வாயுவை வெளிப்படுத்தக் கூடியதாகவுமுள்ள ஆஹார விஹார ஔஷதங்கள் யாவும் ச்வாஸ-ஹித்மாக்களில் பெரிதும் உபயோகமானவை; அவற்றில் வாதஹரமானவை இன்னும் விசேஷம்.—54½.

ச்வாஸ - ஹித்மாக்களில் ப்ருஹ்மண - லங்கநங்களாலான குணங்கள்:—ச்வாஸ-ஹித்மாக்களால் வருந்தும் அனைவருக்கும் ப்ருஹ்மண சிகித்ஸை செய்கையில் ஏதேனும் மற்றொரு கோளாறு நேரிட்டால் அது அற்பமாகவே யிருப்பதுடன், பெரும்பாலும், எளிதில் நிவ்ருத்தி செய்யக்கூடியதாகவு மிருக்கும்; சமந சிகித்ஸை செய்வதாலும் அபாயம் அதிகமா யுண்டாகாது; கர்ஷணசிகித்ஸையால் அபாயம் அதிகமாயிருப்பதுடன் சிகித்ஸை செய்வதும் அஸாத்தியமாம்; ஆகையினால் அப்பிணியாளிகளைச் சமந சிகித்ஸைகளாலும் ப்ருஹ்மண சிகித்ஸைகளாலுமே பெரும்பாலும் உபசரிக்கவேண்டும்.—55, 56.

காஸ - ச்வாஸ - ஹித்மாக்களுக்குப் பொது சிகித்ஸை:—காஸம், ச்வாஸம், க்ஷயம், வாந்தி, விக்கல் இவற்றுள் ஒன்றுக்கு உபயோகமான சிகித்ஸை மற்றவைக்கும் ஏற்றதாம்.—56½.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

## இராஜயக்ஷ்மாதி சிகித்ஸை.

இனி இராஜயக்ஷ்மாதி சிகித்ஸை[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—

இராஜயக்ஷ்மாவில் முதலில் சோதந சிகித்ஸை:—இராஜயக்ஷ்ம ரோகிகளில் நல்ல தேஹவலிமை யுள்ளவனுக்கும், அதிக தோஷமுள்ளவனுக்கும், ஸ்நேஹ - ஸ்வேதங்களைச் செய்து கொண்டவனுக்கும், ஸ்நேஹத்துடன்கூடிய ஔஷதங்களைப் பிரயோகித்து மேல்முகமாய் வமனத்தினாலும் கீழ்முகமாய் விரேசனத்தினாலும் சோதநம் செய்விக்கவேண்டும்; ஆனால் அச்சிகித்ஸை தேஹத்தை இளைக்கச் செய்வதாயிருக்கக்கூடாது.—1.

1. இராஜயக்ஷ்மாவில் வேறு அநேகம் வியாதிகள் (க்ஷதக்ஷீணம், அரோசகம், பீநஸம், கிரஹணீ முதலியவை) அதை அனுஸரித்துண்டாகுமாகையால் இங்கே ராஜயக்ஷ்மாதி சிகித்ஸையென்று கூறப்பட்டது.

இராஜயக்ஷ்மாவில் வமனமுறை :—(1) மருக்காரை சேர்த்துக் காய்ச்சிய பாலைக் குடித்தாவது, (2) மதுரரஸமுள்ள வஸ்துக்கள் சேர்த்து மருக்காரையையும் கூட்டி பக்குவம்செய்த மாம்ஸரஸத்தைப் பருகியாவது, (3) வாந்தி யுண்டுபண்ணும் வஸ்துக்களைச் சேர்த்துக் காய்ச்சி நெய்கூட்டிய யவாகூ வென்னும் கஞ்சியை உட்கொண்டாவது வமனம் செய்யவேண்டும்.—2.

இராஜயக்ஷ்மாவில் விரேசன முறை :—வெண் சிவதை, கருஞ்சிவதை, கொன்றை, இவற்றைச் சர்க்கரை, தேன், நெய் இவற்றுடன் கலந்து விரேசனத்திற்காக உபயோகிக்கலாம்; அல்லது வெண்சிவதை முதலியதை தர்ப்பணௌஷதங்களால் பக்குவம் செய்த பாலுடன் உட்கொள்ளலாம்; அல்லது திராக்ஷா ரஸத்திலாவது, நிலப்பனங்கிழங்கின் ஸ்வரஸத்திலாவது, பெருங்குமிழன் சாற்றிலாவது, மாம்ஸரஸத்திலாவது அவற்றைக் கலந்து விரேசனத்திற்காகப் பருகலாம்.—3, 3½.

இராஜயக்ஷ்மாவில் சோதனத்திற்குப் பிறகு ஏற்ற உணவு முதலியன :—வமன - விரேசனங்களால் குடல் சுத்தமடைந்திருப்பவனுக்கு ப்ருஹ்மணமாகவும் தீபநமாகவுமுள்ள சிகித்ஸையைச் செய்யவேண்டும். அன்னபானங்களும் இருதயத்திற்குப் பலந்தரக்கூடியவைகளாகவும், வாதஹரங்களாகவும், இலகு குணமுடையவைகளாகவும் இருக்க வேண்டும். அன்னாதிகளுக்கு அவசியமான தானியங்கள் சம்பா அரிசியும், காரரிசியும், கோதுமையும், வாற்கோதுமையும், பயறுமேயாம்; அந்த தானியங்கள் ஒரு வருஷ காலம் பழகியவைகளா யிருத்தல் வேண்டும். வெள்ளாட்டுப் பாலும், வெள்ளாட்டு நெய்யும், வெள்ளாட்டின் இறைச்சியும், இறைச்சியுண்ணும் மிருகங்களுடைய மாம்ஸமும் க்ஷயத்தைப் போக்கடிக்கத் தகுந்தவை. காக்கை, சோட்டான், செந்நாய், புலி, பசு, குதிரை, கீரிப்பிள்ளை, பாம்பு, கழுகு, அண்டங்காக்கை, கழுதை, ஒட்டகம் இவற்றின் இறைச்சியும் பிணியாளிக்குத் தெரியாமல் வேறு பெயர்களைச் சொல்லி இதர பணியாரம் முதலியவற்றில் மறைத்துக் கொடுக்க அனுகூல முண்டுபண்ணும்; அவற்றின் உண்மை பிணியாளிக்குத் தெரிந்தால், அருவருப்பு ஏற்பட்டு வாந்தி யுண்டாகும்; ஆகவே பிறகு தேஹ வலிமையும் ஓஜஸ்ஸும் விருத்தி யடையமாட்டா. 4—7.

இராஜயக்ஷ்மாவில் வாதாதி தோஷங்களுக்கேற்ற மாம்ஸ போஜனங்கள் :—பித்த-கபங்களாலுண்டான இராஜயக்ஷ்மாவில் மிருகங்கள், விஷ்கிரங்கள், ப்ரதுதங்கள் இவையும், வாதத்தினாலுண்டான இராஜயக்ஷ்மாவில் ப்ரஸஹங்கள், மஹா மிருகங்கள், ஜலசரங்கள் இவையும் ஏற்ற உணவுகளாம்[1] முற்கூறிய மிருகாதி

1. இங்கு குறிப்பிட்டுள்ள மிருகங்கள், ப்ரதுதங்கள் முதலியவற்றைப்பற்றிய விவரங்களை முதற் புத்தகத்திற் பார்க்க.

களின் மாம்ஸங்களை வேஸவாரமாகப் பக்குவம்செய்தும்,[1] மாம்ஸ ரஸாதிகளில் சேர்த்துச் சமையல் செய்தும், கடுகெண்ணெயினுலாவது நெய்யினுலாவது அந்தந்த நிலைமைக் கேற்றவண்ணம் பொரித்தெடுத்தாவது உபயோகிக்க வேண்டும்; இனிய சுவையுள்ளவைகளாகவும், மிருதுவாகவும், ஸ்நிக்த்தமாகவும், மிருது குணமுள்ளவவற்ருல் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டும் இருக்கவேண்டும். இப்படியே முள்ளங்கியினுலும் கொள்ளாலும் பக்குவம் செய்த யூஷங்களும் க்ஷயரோகிக்கு ஏற்றவையாம்.—8, 9½.

இராஜயக்ஷ்மாவின் ஆறுவித விகாரங்களிலும் வெள்ளாட்டு மாம்ஸரஸம் :—வெள்ளாட்டு மாம்ஸரஸத்தை நெய் முதலியதால் ஸ்நிக்த்தமாகச் செய்து, பீநஸம் முதலிய க்ஷயரோகத்தைப்பற்றிய ஆறுவித உபத்திரவங்களைப்[2] பரிஹரிக்க முறையே திப்பிலி, வாற்கோதுமை, கொள், சுக்கு, மாதளை, நெல்லிக்கனி இவற்றை அந்த மாம்ஸரஸத்தில் சேர்த்து உபயோகிக்கலாம்.—10, 11.

இராஜயக்ஷ்மாவில் உபயோகிக்கத் தகுந்த பானங்களும் அன்னமும் :—வெகு நாள் பழகிய மதுவை இப்பிணியாளி உட்கொள்ளலாம்; அது தோஷங்கள் அடைபட்டுள்ள ஸ்ரோதஸ்ஸுகளைச்[3] சுத்தம் செய்யவல்லது. பித்த வாத கபங்கள் அதிகரித்திருக்கையில் மதுவையும், அரிஷ்டத்தையும், வாருணியென்கிற கள்ளையும் விசேஷமாகப் பருகுவது நலம். பஞ்சமூலங்கள் சேர்த்துப் பக்குவம் செய்த கஷாயத்தையாவது, அல்லது கீழாநெல்லியைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது, சிறுமல்லி, பெருமல்லி, நரிப்பயறு, நெய்ச்செட்டிக்கீரை இவற்றின் கஷாயத்தையாவது, கொத்தமல்லி விதை, சுக்கு இவற்றின் கஷாயத்தையாவது உட்கொள்ளலாம். பிணியாளி தன்னிடம் அன்புள்ளவனுல், நன்கு பக்குவம் செய்யப்பட்ட முற்கூறிய பஞ்சமூல கஷாயாதிகளில் மிகவும் சுத்தமாகப் பக்குவம் செய்யப்பட்ட அன்னத்தை உபயோகிக்க வேண்டும்.—12, 13½.

இராஜயக்ஷ்மாவில் உட்கோள்ளத்தகும் சில க்ருதங்கள் :—(1) தசமூல க்வாதத்தினுலாவது, (2) பாலினுலாவது, (3) மாம்ஸரஸத்தினுலாவது, (4) இறைச்சி யுண்ணும் ஜந்துக்களின் மாம்ஸரஸத்தினுலாவது சிற்றுமுட்டியின் கல்கத்தைச் சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தை யுட்கொள்ளலாம். (5) அல்லது பத்து மடங்கு பாலில் பக்குவம் செய்த க்ருதத்தைத் தேன் கலந்தாகிலும் பருகிவரலாம்.—14, 15.

---

1. வேஸவாரம் — முதற் புத்தகம் பார்க்க.

2. பீநஸம், ச்வாஸம், காஸம், அரோசகம், தோள்வலி, ஸ்வரபங்கம் என்பவை ஆறு உபத்திரவங்களாம்.

3. ச்வாஸாசய த்வாரங்களும் நிணநீர்க் குழாய்களும் இங்கு ஸ்ரோதஸ்ஸுகள் எனப்படுகின்றன.

இராஜயக்ஷ்மாவில் ஜீவந்த்யாதி க்ருதம் :—ஜீவந்தி, அதிமதுரம், திராக்ஷை, குடசப்பாலையின் கனிகள், தாமரைப்பூ, கச்சோரம், திப்பிலி, கண்டங்கத்திரி, நெரிஞ்சில், சிற்றுமுட்டி, கருநைதல், கீழாநெல்லி, கழற்சிக்காய், காஞ்சொறி இவற்றைக் கல்கமாகச் செய்து, நெய்யில் சேர்த்து பக்குவம் பண்ணவும். இந்த க்ருதம் க்ஷயரோகத்தைப் போக்குவதிற் சிறந்தது.—16, 17.

இராஜயக்ஷ்மாவில் கர்ஜூராதி க்ருதம் :—பேரீச்சம்பழம், திராக்ஷை, அதிமதுரம், ஈச்சம்பழம் இவற்றின் கஷாயத்தில் நெய் சேர்த்து, திப்பிலிப் பொடியைக் கல்கமாகக் கூட்டி பக்குவம் செய்து உட்கொண்டு வந்தால் க்ஷயத்தில் அரோசகம், காஸம், ச்வாஸம், ஜ்வரம் இவை நிவ்ருத்தியாகும்.—18.

தசமூல க்ருதமும், பஞ்ச பஞ்சமூல க்ருதமும் :—(1) தசமூல கஷாயத்தில் பால் சேர்த்துக் காய்ச்சி, அப்பாலிலிருந்து கடைந்தெடுத்த புத்துருக்கு நெய்யில் திப்பிலிப் பொடியையும் தேனையும் கூட்டி உட்கொள்ளலாம். அது தொண்டைக்கு வலிவைக் கொடுத்து ஸ்வரத்தைச் செம்மைப்படுத்துவதில் சிறந்த ஔஷதம்; தலைவலியையும், பக்கச்சூலையையும், தோள்பட்டைவலியையும் தீர்க்கும்; காஸம், ச்வாஸம், ஜ்வரம் இவற்றைப் போக்கும். (2) அல்லது ஐந்து விதமான பஞ்சமூலங்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்து உண்டாக்கப்படும் நெய்யும் முற்கூறிய விகாரங்களைப் பரிஹரிக்கும். ஐந்து வித பஞ்சமூலங்களின்[1] ஸ்வரஸம் நாலு பங்கும், பால் ஒரு பங்கும் கூட்டி, அதில் நெய் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் க்ஷயரோகிக்கு உண்டாகிற ஏழுவிதமான விகாரங்களைப் போக்கும். 19—21.

ஷட்பல க்ருதம் :—பஞ்சகோலங்களில் ஒவ்வொரு சரக்கையும் ஒவ்வொரு பலம் எடுக்கவும்; யவக்ஷாரம் ஒரு பலம்; ஆக இச்சரக்குகளின் ஆறுபலங்கொண்ட கல்கத்தைச் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யை அதற்குச் சமயெடையான பாலில் கூட்டி பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் ஸ்ரோதோமார்க்கங்களிலுள்ள தோஷங்களை அகற்றிச் சுத்தம் செய்யும். குல்மம், ஜ்வரம், மஹோதரம், ப்லீஹரோகம், கிரஹணீ, பாண்டு, பீநஸம், ச்வாஸம், காஸம், அக்னிமாந்தியம், சோகை, ஊர்த்வச்வாஸம் இவற்றைப் பரிஹரிக்கும்.—22, 23.

ராஸ்நாதி க்ருதம் :—சிற்றரத்தை, சிற்றுமுட்டி, நெரிஞ்சில், சிற்றுமல்லி, சாறடை இவற்றின் கஷாயத்தில், ஜீவந்தியையும் திப்பிலியையும் கல்கமாகச் சேர்த்து, பால்கூட்டி க்ருதம் பக்குவம் செய்து உட்கொள்ள க்ஷயரோகம் தீரும்.—24.

---

1. பஞ்ச பஞ்சமூலங்கள்—மஹாபஞ்சமூலம், லகுபஞ்சமூலம், மத்யம பஞ்சமூலம், ஜீவந பஞ்சமூலம், திருணபஞ்சமூலம் என்பவையாம். மற்ற விவரங்களைப்பற்றி முதற் புத்தகம் பார்க்க.

**அச்வகந்த க்ருதம்** :—அமுக்கிருங்கிழங்கு சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கடைந்தெடுத்த நெய்யில் சர்க்கரை கலந்து, சிறிது பாலையும் கூட்டி இராஜயக்ஷ்மாவில் உட்கொள்ளலாம்.—24½.

**மாம்ஸ க்ருதம்** :—ஸாதாரண மிருகங்களுடைய[1] நூறுபலம் மாம்ஸத்தை இரண்டு திரோணம் ஜலத்தில் சேர்த்து எட்டில் ஒரு பங்கு ஜலம் மிகும்படிக் காய்ச்சி, அதில் ஜீவநீய கணச் சரக்குகளை ஒவ்வொரு பலம் பொடித்துக் கல்கமாகச் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்யவும். 'மாம்ஸ க்ருதம்' எனப்படுகிற இவ்வௌஷதத்தை அப்படியேயாவது மாம்ஸரஸத்துடன் கூட்டியாவது உட்கொண்டுவரலாம்; இது வாத வியாதிகளையும், பித்த வியாதிகளையும் போக்கும்; காஸம், ச்வாஸம், தொண்டைக்கம்மல், க்ஷயம், இருதயசூலை, பக்கசூலை, இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 25—27.

**ஏலாதி க்ருதம்** :—ஏலம், ஓமம், த்ரிபலை, ஸௌராஷ்ட்ரம்ருத்திகை[2], த்ரிரூஷணம், சித்திரமூலம், வேப்பம்பிசின், கருங்காலிமரப் பிசின், வேங்கைமரப்பிசின், மாதளம்பிசின், சேராங்கொட்டை, வாய்விடங்கம் இவற்றை எட்டு பலம் வீதம் பதினறு மடங்கு ஜலத்தில்சேர்த்துப் பதினறில் ஒரு பங்காக வற்றும்படிக் காய்ச்சியெடுக்கவும்; அப்பால் அதில் ஒரு பிரஸ்த்தம் நெய் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும். பக்குவமான பிறகு மூங்கிலுப்பு ஆறுபலமும், சர்க்கரை முப்பது பலமும், தேன் க்ருதத்திற்கு இரண்டு மடங்கும், த்ரிஜாதகம் மூன்று பலமும் பொடித்துக் கல்கமாகச் சேர்த்துத் துடுப்பால் அனைத்தையும் கிளறி ஒன்ருகக் கூட்டவும். பிறகு இதை முற்பகலில் உட்கொண்டு, பாலை இதற்கு அநுபானமாகப் பருகிவரவேண்டும். இதற்குக் கடுமையான பத்தியம் முதலிய நியமம் ஒன்றுமில்லை. இது இரஸாயனம், மேத்யம், சக்ஷுஷ்யம், ஆயுஷ்யம், தீபனம் என்கிற குணங்களுடையது; மேஹம், குல்மம், க்ஷயரோகம், பாண்டுரோகம், பகந்தரம் இவற்றைச் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். முன்னல் க்ஷதகாஸத்தில் கூறியுள்ள க்ருதங்களையும் லேஹ்யங்களையும் க்ஷயத்திலும் உபயோகிக்கலாம். 28—32½.

**லவங்கத்வகாதி சூர்ணம்** :—இலவங்கப்பட்டை ஒரு பங்கு, ஏலம் இரண்டு பங்கு, திப்பிலி நாலுபங்கு, சாக்கொன்னை எட்டு பங்கு, சர்க்கரை பதினறு பங்கு; இவ்விதம் சேர்த்து சூர்ணம் செய்து கொள்ளவும். இதை நெய்யும் தேனும் கலந்து உட்கொள்ளவும். பலஹீனனுக்கு இது அனுகூலமான ஔஷதம்;

---

1. ஸாதாரண மிருகங்கள்—பிரஸஹங்கள், பிலேசயங்கள் என்கிற மிருகங்கள். விவரங்களுக்கு முதற் புத்தகம் பார்க்க.

2. ஸௌராஷ்ட்ர ம்ருத்திகை—சிறிது வெண்மையும் வாஸனையுள்ளதுமான ஸௌராஷ்ட்ர தேசத்து மண்; துவரீ என்றும் கூறுவர்.

நாக்கில் நற்சுவையைத் தரும்; காஸம், க்ஷயம், ச்வாஸம், பார்ச்வசூலை, கபப்பிரகோபம் இவற்றைப் போக்கும்.—33, 34.

இராஜயக்ஷ்மாவில் ஸ்வர பங்கத்திற்கு விசேஷ சிகித்ஸைகள் :—தொண்டையின் குரல் குன்றிப் போயிருந்தால் (1) நஸ்யப் பிரயோகம் செய்வதும், தூமபானம் முதலியதைப் பிரயோகிப்பதும் விசேஷ சிகித்ஸைகளாம். (2) அதிலும் வாதஸம்பந்தமான ஸ்வரபங்கத்தில் தகாவிதை, கத்திரி, கரிசிலாங்கண்ணி; இவற்றின் ஸ்வரஸங்களால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தை இளஞ்சூடாகவே போஜனத்திற்குப் பிறகு உட்கொண்டு வரலாம்: இந்த க்ருதம் காஸத்தையும் போக்கும், கண்டத்தொனியையும் செம்மைப்படுத்தும். (3) கருங்குறிஞ்சிச் சாற்றால் பக்குவம் செய்த க்ருதத்தையாவது முன்போலவே உபயோகிக்கலாம். (4) இலந்தயிலையை அரைத்து, அக்கல்கத்தையாவது நெய்யிற் பொரித்து, இந்துப்பும் சேர்த்து உட்கொள்ளலாம். (5) அல்லது அதிமதுரம், திராக்ஷை, திப்பிலி, வாய்விடங்கம், மருக்காரை, செருப்படை வேர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சியெடுத்த தைலத்தையாவது நஸ்யமிடலாம். (6) நெய் சேர்த்துச் சர்க்கரான்னத்தைப் புஜித்து ஸூகோஷ்ணமான ஜலத்தை அநுபானமாகப் பருகலாம். (7) அல்லது பாயஸத்தையாவது நெய் சேர்த்து உஷ்ண ஜலத்தின் அநுபானத்தோடு பானம் செய்யலாம். (8) ஸ்நிக்த்தமான ஸ்வேத சிகித்ஸையைப் பிரயோகிக்கலாம். (9) பித்தஸம்பந்தமான ஸ்வரபங்கத்தில்பாலுள்ள விருக்ஷங்களின் முளைகளைக் கஷாயமாகவும் கல்கமாகவும் சேர்த்துப் பக்குவம் செய்த க்ருதத்தைத் தேன் கூட்டிப் பருகவும்; இதற்குக் கொதிக்க வைத்தாறிய பாலை அநுபானமாகக் கொள்ள வேண்டும். (10) அதிமதுரம் சேர்த்துப் பக்குவமான பாயஸத்தையும் நெய் கலந்து உட்கொள்ளலாம். (11) சிற்றுமுட்டி, மேர்மல்லிகை, நிலப்பனங்கிழங்கு, அதிமதுரம் இவற்றால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தில் இந்துப்பைச் சேர்த்து உட்கொள்ளவும்; இது ஸ்வர்யகுணத்திற் சிறந்தது. (12) வெள்ளைத்தாமரை, அதிமதுரம், திப்பிலி, கண்டங்கத்திரி, சிற்றுமுட்டி, இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கடைந்தெடுத்த நெய் நஸ்யமிடுவதற்குச் சிறந்த ஔஷதம்; இதுவும் ஸ்வர்ய குணத்திற் சிறந்தது. (13) மதுரரஸமுள்ள வஸ்துக்களுடைய சூர்ணத்தைத் தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ளலாம். (14) கபஸம்பந்தமான ஸ்வரபங்கத்தில் கடுரஸமுள்ள பதார்த்தங்களைப் பசுமூத்திரத்துடன உட்கொள்ளலாம்; ரூக்ஷமான உணவுகளையே புஜிக்கவேண்டும். (15) சிறு தேக்கு, நெல்லிக்கனி, த்ரிகடு இவற்றைச் சூர்ணம் செய்து தைலத்திலும் தேனிலும் கலந்து உட்கொள்ளலாம். (16) த்ரிகடு, யவக்ஷாரம், சித்திரமூலம், சவியம், கண்டுபாரங்கி,

கடுக்காய் இவற்றின் சூர்ணத்தையாவது தேன் கலந்து உபயோகிக்கலாம். (17) வாற்கோதுமையைக் கொண்டும், திப்பிலி, நெல்லிக்கனிகளைச் சேர்த்தும் யவாகூவென்னும் கஞ்கியைப் பக்குவம் செய்து, யமகஸ்நேஹத்தில்[1] சேர்த்துப் பருகலாம். (18) போஜனம் செய்து திப்பிலியையும் சுக்கையுமாவது மென்று விழுங்கலாம். (19) தீக்ஷ்ண ஔஷதங்களால் வமனமும் செய்யலாம். (20) உரத்த குரலோடு பேசி தொண்டைக் கம்மல் உண்டானால், மதுர வஸ்துக்களால் பக்குவம் செய்த சர்க்கரையும் தேனும் கலந்துள்ள பாலைக் குடிக்கலாம். 35—46.

இராஜயக்ஷ்மாவில் அரோசகத்திற்கு விசேஷசிகித்ஸைகள் :—அரோசக முண்டாயிருக்கையில் பத்திய வஸ்துக்கள் கலந்த அநேகவிதமான சித்திரான்னம் அனுகூலமா யிருக்கும். (2) தேஹம் உள்ளும் புறமும் எப்பொழுதும் நிர்மலமா யிருக்குமாறு செய்து கொள்ளவேண்டும். (3) மனம் கவலையற்று அமைதி பெற வேண்டும். (4) இருதயத்திற்கு வன்மைதரக்கூடியதும், மனதுக்கின்பமுமான ஔஷதத்தை உட்கொள்ள வேண்டும். (5) தினந்தோறும் காலையிலும் மாலையிலுமாக இரண்டு முறை பல் துலக்கவேண்டும் ; அப்பொழுது முகத்தை நன்கு சுத்தம் செய்யக்கூடிய கஷாயவகைகளால் பற்களையும் வாயையும் கழுவிக் கொப்புளிக்க வேண்டும். (6) ஸ்நிக்த்தமான ஔஷதங்களால் முறைப்படி தூமபானமும்[2] செய்யலாம். (7) தாளிஸாதி சூர்ணமும் தாளிஸாதி வடகமும்,[3] (8) கர்ப்பூரமும் கற்கண்டும் கலந்த சசாங்க கிரணங்கள்[4] என்கிற பக்ஷணவகைகளும் நாக்கில் நற்சுவையை மிகவும் விருத்திசெய்யக்கூடியன. (9) அவற்றுள் வாதஸம்பந்தமான அரோசகத்தில் அடியில் குறிப்பிடப்படும் சூர்ணத்தை நீர்மோரின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம் ; அச் சூர்ணமாவது :—அரேணுகம், திப்பிலி, வாய்விடங்கம், திராக்ஷை, இந்துப்பு, சுக்கு இவற்றின் சூர்ணமேயாம். ஏலக்காய், கண்டுபாரங்கி, யவக்ஷாரம், காயம் இவற்றைக் கூட்டி பக்குவம் செய்த க்ருதத்தோடாவது முற்கூறிய சூர்ணத்தை யுபயோகிக்கலாம். (10) வசம்பின் கஷாயத்தைக் குடிக்கச்செய்து வமனமாவது செய்விக்கலாம். (11) பித்த ஸம்பந்தமான அரோசகத்தில் வெல்லம் கரைத்த நீரை வயிறு நிரம்பவும் குடித்து வாந்தி செய்யலாம். (12) சர்க்கரை, நெய், இந்துப்பு இவற்றைத் தேனில் கலந்தாவது உட்கொள்ளலாம். (13) கப ஸம்பந்தமான அரோசகத்தில் வேப்பம்பட்டைக் கஷாயத்தைப் பருகி வாந்தி செய்ய

1. யமகஸ்நேஹம் — முதற் புத்தகம் பார்க்க.
2. ஸ்நிக்த்த தூமம் — மிருது தூமம். முதற் புத்தகம் பார்க்க.
3. தாளிஸாதி சூர்ணம் — அடுத்த பக்கம் பார்க்க.
4. சசாங்க கிரணங்கள் — முதற் புத்தகம் பார்க்க.

லாம். (14) ஓமம், சரக்கொன்றை இவற்றின் கஷாயத்தையும் பருகலாம். (15) தீக்ஷ்ணமான அரிஷ்டங்களைத் தேன்சேர்த்து, அல்லது தீக்ஷ்ணமான திராக்ஷாஸவாதி மதுவகைகளைத் தேன் கலந்து முட்கொள்ளலாம். (16) முன் கூறிய அரேணுகாதி சூர்ணத்தையும் உஷ்ண ஜலத்துடன் சாப்பிடலாம். 47—53.

ஏலாதி சூர்ணம்:—ஏலம் ஒரு பங்கு, இலவங்கப்பட்டை இரண்டு பங்கு, நாககேஸரம் மூன்று பங்கு, மிளகு நாலு பங்கு, திப்பிலி ஐந்து பங்கு, சுக்கு ஆறு பங்கு இவ் வளவுப்படி இச் சரக்குகளைக் கூட்டி சூர்ணம் செய்து, அனைத்துக்கும் ஸமபாகம் சர்க்கரை சேர்த்து உட்கொள்ள, அமிதமாய் உமிழ்நீரூறுதல், அரோசகம், இருதயநோவு, பார்ச்வசூலை, காஸம், ச்வாஸம், வேறு தொண்டை வியாதிகள் இவை நிவ்ருத்தியாம்.—54, $54\frac{1}{2}$.

யவாங்யாதி சூர்ணம்:—ஓமம், புளி, புளிவஞ்சி, சுக்கு, மாதளம்பழம், இலந்தம்பழம்; இவை ஒவ்வொன்றும் கால்பல மெடையும், சர்க்கரை நான்கு பலமும், கொத்தமல்லிவிதை, ஸௌவர்ச்சலலவணம், ஜீரகம், இலவங்கப்பட்டை இவை ஒவ்வொன்றும் அரைக்கால்பல மெடையும், நூறு திப்பிலியும், இருநூறு மிளகும் சேர்த்து சூர்ணம் செய்யவும். இது ருச்சியம், க்ராஹி, ஹ்ருத்யம் என்கிற குணங்களிற் சிறந்த ஔஷதம்; மலபந்தம், காஸம், இருதயத்தைப்பற்றிய வியாதிகள், பக்கசூலை, ப்லீஹ ரோகம், அர்சஸ், கிரஹணீ இவற்றைப் போக்கும். 55—$57\frac{1}{2}$.

தாளிஸாதி சூர்ணம்:—தாளிசப்பத்திரி ஒரு பங்கு, மிளகு இரண்டுபங்கு, சுக்கு மூன்றுபங்கு, திப்பிலி நாலுபங்கு, மோடி ஐந்துபங்கு[1], இலவங்கப்பட்டை அரைப்பலம், ஏலம் அரைப்பலம், இச்சரக்குகளை இங்ஙனம் சேர்த்து சூர்ணம் செய்யவும்; மோடியின் அளவுக்கு எட்டுமடங்கு சர்க்கரையையும் அச்சூர்ணத்திற் கலந்து உபயோகிக்கலாம். இதற்கு தீபன குணம் உண்டு; காஸம், ச்வாஸம், அரோசகம், வாந்தி, ப்லீஹரோகம், இருதயசூலை, பார்ச்வசூலை, பாண்டுரோகம், ஜ்வரம், அதிஸாரம் இவற்றை நிவ்ருத்தி செய்யும்; குடல் முதலியவற்றில் அடைபட்டுள்ள வாயுவையும் வெளிப்படுத்தும். 58—60.

அதிக உமிழ்நீரூற்றைக் குறைக்கும் முறைகள்:—வாயில் உமிழ்நீர் அதிகமாய் ஊறுகையில் (1) வாற்கோதுமையை எருக்கம் வேர், சீந்திற்கொடி இவற்றின் கஷாயத்திலும் பாலிலும் ஓரிரவெல்லாம் ஊறவைத்தெடுத்து, அதன் மாவையும் அதனாலான பணியாரங்களையும் அப்பிணியாளி புஜிக்கலாம். (2) பிணியாளி பலிஷ்டனாயிருந்தால் கார்ப்பும் கைப்புமான வஸ்துக்களையுட்கொண்டு வமநம் செய்யலாம். (3) ஜாங்கல மாம்ஸத்தைச்

1. மோடிக்குப் பதிலாக மூங்கிலுப்பு சேர்க்கும்படி சார்ங்கதரன் முதலியவர்கள் கூறுகிறார்கள்.

சலாகையில் குத்தித் தணலில் வாட்டியெடுத்து உண்ணலாம். (4) ஈரப் பசையின்றி யுலர்ந்து மிகவும் இலகுகுணமுள்ள பக்ஷ ணங்களைச் சிறுசடலையைச் சேர்த்துக் காய்ச்சிய இரஸத்தின் அநுபானத்துடன் புஜிக்கலாம்.—61, 62.

அமிதமான கபம் முதலியது ஸ்ரவிப்பதற்கு ஏற்றபரிஹாரம்:— கபம் அதிகமாக வெளியில் ஸ்ரவித்துக்கொண்டிருந்தால் வாயு கபத்தை மிக்க க்ஷயிக்கச் செய்யும்; விஷயமுணர்ந்த வைத்தியன் இக் கபத்தை ஸ்நிக்த்தமும் உஷ்ணவீர்யமுமுள்ள ஔஷதாதி களாலேயே தீர்க்கவேண்டும். பீநஸத்திலும் வாந்தியிலுங்கூட இம்முறையையே பிரயோகிக்கலாம்.—63, $63\frac{1}{2}$.

இராஜயக்ஷ்மாவில் பீநஸத்திற்கு விசேஷசிகித்ஸை :— பீநஸத்தில் விசேஷமாக உத்காரிகா பிண்டங்களைக் கொண்டு[1] ஸ்நிக்த்தமான அப்பங்களையும், ஸ்நேஹஸ்வேதங்களையும் சிரஸ் ஸின் பாரிசங்கள், கழுத்து முதலியவற்றில் பிரயோகிக்கலாம். இலவணமும் அம்லமும் கடுரஸமுமுள்ள மாம்ஸரஸாதிகளை ஏதே னும் ஸ்நேஹங்களோடு கூட்டியும் பருகலாம்.—64, 65.

இராஜயக்ஷ்மாவில் சிரோவேதனை முதலியவற்றிற்கு சிகித் ஸை :—சிரஸ்ஸிலும், தோள்களிலும், தோளின் பக்கங்களிலும் வலியுண்டானல், அக் கோளாறுகள் ஸம்பவிக்கக் காரணமான தோஷபரிஹாரத்திற்கேற்ப சிகித்ஸை செய்யவேண்டும். நீர் வாழும் பிராணிகளின் மாம்ஸம், ஆநூப மாம்ஸம் இவற்றில் நான்குவித ஸ்நேஹவஸ்துக்களையும்[2] கூட்டி, முறைப்படி பக்குவம் செய்த உபநாஹங்களைப்[3] பிரயோகிப்பதும் அக் கோளாறுகளில் உபயோகமானவையெனக் கருதப்படுகின்றன. —$66\frac{1}{4}$.

இராஜயக்ஷ்மாவில் ஸம்ஸர்க்கதோஷ சிகித்ஸை :—இராஜ யக்ஷ்மாவில் ஸம்ஸர்க்க தோஷம்[4] ஸம்பவித்திருந்தால், அப் பொழுது, (1) நந்தியாவர்த்தம், அதிமதுரம், சதகுப்பி, கோஷ் டம், சந்தனம் இவற்றின் கல்கத்தினாலும், (2) சிற்றாமுட்டி, சிற்றரத்தை, எள், அதிமதுரம், கருநைதல், நெய் இவற்றாலும் சரீரத்தில் அவ்வவ்விடங்களில் லேபநம் செய்யவேண்டும். (3) சாறணை, முருங்கை, சிற்றாமுட்டி, தண்ணீர்விட்டாங் கிழங்கு, நிலப்பனங்கிழங்கு இவற்றின் சாற்றால் நஸ்யமிடலாம்; அல்லது அச் சரக்குகளால் தூமபானம் செய்யலாம். (4) அச்சரக்குகளால்

1. உத்காரிகா பிண்டங்கள் :—எண்ணெய்ப் பசையோடு கூடிய இலுப்பைப் பிண்ணாக்கு முதலியவற்றின் கல்கபிண்டங்கள்.

2. க்ருதம், தைலம், வஸா, மஜ்ஜை.

3. உபநாஹம் — முதற் புத்தகம் பார்க்க.

4. ஸம்ஸர்க்கதோஷம் — முதற்பாகம் பார்க்க.

பக்குவம் செய்த ஸ்நேஹங்களை ஔத்தரபக்திகமாய்[1] உபயோகிக்கலாம். (5) அப்யங்கத்திற்குச் சிறந்தவையெனக் கருதப்படும் தைலங்களால் அப்யஞ்ஜநமும் செய்யலாம். (6) மேலும் வஸ்திசிகித்ஸையும் இக் ரோகாதுகளிற் சிறந்ததாகும் 67—69.

இராஜயக்ஷ்மாவில் அசுத்த ரத்தத்தை வெளிப்படுத்தல் :—க்ஷயரோகத்தினால் வருந்துபவர்களுக்கு எந்த தோஷத்தினால் இரத்தம் கோளாறடைந் திருக்கின்றதோ, அந்த தோஷத்திற்கேற்றவாறு ச்ருங்கம் முதலிய உறிஞ்சும் கருவிகளால்[2] விகாரமடைந்த இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும் —69½.

இராஜயக்ஷ்மாவில் அப்யங்கத்திற்கான ஔஷதங்கள் :—(1) தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், சந்தனம் இவற்றின் கல்கத்தில் நெய்யைக் கலந்து தேஹத்தில் பூசுவது நலம். (2) அறுகம்புல், அதிமதுரம், மஞ்ஜிஷ்டி, நாககேஸரம் இவற்றின் கல்கத்தோடாவது நெய் கலந்து உடலிற் பூசலாம். (3) ந்யக்ரோதாதிகணத்தினால் பக்குவம் செய்த தைலத்தினாலாவது, (4) சததௌத க்ருதத்தினாலாவது அப்யங்கம் செய்வதும், (5) பாலாலும், அதிமதுரம் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தினாலும் அபிஷேகம் செய்வதும் சிறந்தது.—70, 71½.

இராஜயக்ஷ்மாவிலுண்டாகும் அதிஸாரத்திற்கு சிகித்ஸை:—யக்ஷ்மாவில் ஜாடராக்னியானது பெரும்பாலும் அழிவுறுமாகையால், பிசுபிசுப்பான கசடுகளுடன் அதிஸாரமுண்டாகும்; அவ்வித ரோகிக்கு அதிஸார சிகித்ஸையிலும், கிரஹணீ சிகித்ஸையிலும் கூறப்பட்டுள்ள ஔஷதங்கள் அநுகூலமானவையாம்.-72½.

இராஜயக்ஷ்மாவில் மலத்தினாலான பலம்:—மிக்க மெலிந்து வரும் க்ஷயரோகிக்கு மலம் மாத்திரம் முற்றிலும் க்ஷயமடையாது பெரு முயற்சியோடு சிகித்ஸிக்க வேண்டும்; ஏனெனில், ஸர்வதாதுக்களும் க்ஷீணித்து வருந்தும் க்ஷயரோகியை மலத்தின் பலமே ஒருவாறு தாங்கிவரும்.—73½.

இராஜயக்ஷ்மாவில் மாம்ஸ போஜனமும் மதுபானமும் :—முறை தவறாமல் மாம்ஸத்தையே புஜித்து, திராக்ஷாஸவத்தை அநுபானமாகவும் உட்கொண்டு, மலஜலாதி வேகங்களை அடக்காமல் நியமமாயிருந்து வருபவனுடைய தேஹத்தில் இராஜயக்ஷ்மா இடம்பெறுவதில்லை. மாம்ஸங்களைப் புஜித்துக்கொண்டு ஸுரை, மண்டம், மார்த்வீகமது, அரிஷ்டங்கள், மாதவம்[3] என்கிற மத்யம் இவற்றுள் எதையேனும் ஒன்றை அவரவரது தேஹ நிலை

1. ஔத்தரபக்திகம் — போஜனத்திற்குப் பிறகு ஔஷத முட்கொள்ளும் முறை.

2. ச்ருங்கம் முதலிய கருவிகளைப்பற்றி முதற் புத்தகம் பார்க்க.

3. ஸுரை, மண்டம், மார்த்வீகம், அரிஷ்டம், மாதவம் இவற்றைப் பற்றி முதற் புத்தகம் பார்க்க.

மைக்கும் வியாதி நிலைமைக்கும் ஏற்றவண்ணம் அநுபானமாய்
உட்கொள்ள, மாம்ஸபோஜனம் ஸ்ரோதோமார்க்கங்களிலுள்ள
அடைப்புகளை அகற்றவும், சரீரவன்மையையும் புஷ்டியையும்
உண்டுபண்ணவும் ஏற்றதாகும். 74—76.

இராஜயக்ஷ்மியை ஸ்நேஹாதிகளில் மூழ்கச் செய்தல் :—
எண்ணெயில் நன்றாக உடல் முழுமையையும் அப்யஞ்ஜநம் செய்து
வைத்து ஸ்நேஹத்தொட்டியிலும், பால் தொட்டியிலும், தண்
ணீர்த் தொட்டியிலும் அம் மனிதனை அமிழ்ந்து குளிக்கச் செய்
யவும்; அவற்றிலிருந்து எழுந்த பிறகு மீண்டும் மிச்ரகஸ்நேஹங்
களால் அப்யங்கம் செய்து வைத்து, கைகளால் சுகமாக
உடம்பை மர்த்தநம் செய்யவும்; பிறகு சுகமாக உட்காரச்செய்து
இன்பமாக உத்வர்த்தநம்[1] செய்யவும்.—77, 77½.

இராஜயக்ஷ்மாவில் உத்வர்த்தந சூர்ணமும் ஸ்நாந நீரும் :—
(1) ஜீவந்தி, தண்ணீர்விட்டாங் கிழங்கு, மஞ்ஜிஷ்டி, சாறணை,
அமுக்கிறாங்கிழங்கு, நாயுருவி, தழுதாழை, அதிமதுரம், சிற்று
முட்டி, நிலப்பனங் கிழங்கு, வெண்கடுகு, கோஷ்டம், வாலு
ளுவை, ஆளி விதை, உளுந்து, எள், மத்யத்தின் அடியில் படிந்
துள்ள திப்பி இவற்றை யெல்லாம் ஒருமிக்கப் பொடித்துக்
கொள்ளவும்; இவ்வனைத்துக்கும் இரு மடங்கு வாற்கோதுமைப்
பொடியைக் கூட்டி, தயிரும் தேனும் விட்டுக் கலந்து விடவும்.
இதை உத்வர்த்தநத்திற்கு உபயோகிக்கவும். இது சரீரத்திற்குப்
புஷ்டியையும், நல்லநிறத்தையும், வன்மையையும் உண்டுபண்ணும்.
(2) வெண்கடுகுப்பொடியை உத்வர்த்தநம் செய்து கொண்டு,
ஸ்நாநத்திற்குபயோகமான மணமுள்ள வஸ்துக்களையும்[2] வேறு
உசிதமான மூலிகைகளையும்,[3] ஜீவநீயகணச் சரக்குகளையும்
சேர்த்து அந்தந்த ருதுவின் தன்மைக்கேற்க சுகம் தருமாறு
காய்ச்சிய நீர்களால் அப்பிணியாளி ஸ்நாநம் செய்யலாம். 78—81½.

இராஜயக்ஷ்மாவில் சிறந்த சிகித்ஸைகளின் ஸங்கிரஹம் :—
இந்த ரோகி சந்தனம் முதலிய ஸுகந்தங்கள், புஷ்பஹாரங்கள்,
இவை முதலியவற்றைப் பீடா பரிஹாரத்தின்பொருட்டு அணிந்து
கொள்ளலாம். நண்பர்களைக் கண்டு களிப்புறலாம். ஸங்கீதம்,
வாத்யம் முதலிய மனோஹர விஷயங்களைச் செவியுறலாம். வஸ்தி
கர்மங்களைச் செய்துகொள்ளலாம். பாலையும், நெய்யையும், மது
வகைகளையும், மாம்ஸங்களையும் முறைப்படி உட்கொள்ளலாம்.
அதர்வ வேத விதிகளை அனுஸரித்து தைவாநுக்கிரஹம் பெறக்
கூடிய ஜபஹோமாதிகளையும் நிறைவேற்றலாம். இவை யாவும்
க்ஷயரோகிக்குச் சிறந்த சிகித்ஸா முறைகளாகும்.—82, 83½.

---

1. உத்வர்த்தநம்-முதற் பாகம் பார்க்க.
2. சந்தனம், அகில் முதலிய வஸ்துக்கள்.
3. கீழாநெல்லி, த்ரிபலை முதலியவை.

# ஆறாம் அத்தியாயம்.

## சர்தி-ஹ்ருத்ரோக த்ருஷ்ணா சிகித்ஸை.

சர்தி - ஹ்ருத்ரோக - த்ருஷ்ணாசிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் இனி விவரிக்கப்படுகின்றது :—

### சர்தி சிகித்ஸை.

சர்தியில் லங்கநமும் வமநமும் :—சர்திகள் யாவும் பெரும்பாலும் ஆமாசயம் என்னும் இரைப்பையிலுண்டாகும் ஒருவித அழற்சியுடன் கூடிய கிளர்ச்சியினாலேயே உண்டாகின்றன; ஆகவே முதலில் அதற்கு லங்கநம் செய்வது ஹிதமாகும்; ஆனால் வாதஸம்பந்தமான சர்தியில் லங்கநம் கூடாது; வாதத்தினாலுண்டான சர்தியில் பிணியாளி வலிவுள்ளவனாயிருந்தால், தோஷம் அதிகரித்திருந்தால், அடிக்கடியாவது அதிக அளவாகவாவது வாந்தியானால் அவனுக்கு வமநம் செய்விக்கவேண்டும்.—1, $1\frac{1}{2}$.

சர்தியில் விரேகமும் சமநமும் :—வமநம் செய்வித்த பிறகு மதுவகைகளோடாவது, திராக்ஷை முதலிய கனிரஸங்களுடனாவது, பசும்பால் முதலியவைகளோடாவது கிரமமாக இருதயத்திற்கு வன்மைதருங் குணமுள்ள விரேசனௌஷதத்தை உட்கொள்ளக் கொடுக்கலாம். அவ்விரேசநமானது மேல் நோக்கிய தோஷத்தைக் கீழ்முகமாகச் செலுத்திவிடுகின்றது. அந்த நிலைமையில் சோதநத்திற்குப் பதிலாய் சமந ஔஷதத்தையும் பிரயோகிக்கலாம்; ரூக்ஷமாகவும் துர்ப்பலமாகவுமுள்ள பிணியாளிகளுக்கோ சமநௌஷதத்தையே உபயோகிக்க வேண்டும்.—2, 3.

சர்தியில் பத்தியமான ஆஹார- விஹாரங்கள் :—(1) ஈரப்பசையில்லாமல் உலர்ந்திருப்பதும், மனதுக்கு இரம்யமாயிருப்பதும், ஸாத்மியமானதும், இலகு குணமுள்ளதுமான அன்னம் சர்தியில் பிரசஸ்தமானது. (2) உபவாஸமிருப்பதும் நலமாகும். (3) யூஷம், மாம்ஸரஸம், காம்பலிகம்[2], கலம்[3], சாகவர்க்கம், லேஹ்யங்கள், நற்சுவையுள்ள வேறு பண்டங்கள், ராக-காண்டவங்கள்[4], பானகங்கள், ஈரப்பசையற்ற விசித்திரமான பணியாரங்கள், கனி

---

1. சர்தி-வாந்தியாதல்; ஹ்ருத்ரோகம் - இருதயத்தைப் பற்றிய வியாதி; த்ருஷ்ணா-நாவறட்சி; இம் மூன்றுவித வியாதிகளுக்கும் முறையே சிகித்ஸா கிரமங்களை விவரிக்கும் அத்தியாயம்.

2. காம்பலிகம் — எள்ளுப்பொடியையும், சமைத்த கிழங்குகளை அல்லது சாகத்திற்குபயோகமான வேர்களையும் சேர்த்து பக்குவம் செய்யப்படும் ஒருவித சித்திரான்னம்.

3. கலம் — பில்வத்தின் உட்சதையின் கல்கம், எள்ளுப்பொடி, புளித்த தயிரின் ஆடை இவற்றைக் கூட்டி ஸ்நேஹங்களால் தாளிக்க, அது "கலம்." எனப்படும். (அதாவது ஒருவித பச்சடி).

4. ராக காண்டவங்கள் — முதற் புத்தகம் பார்க்க.

கள் இவை உபயோகிக்கத் தகுந்தவையாம். (4) சரீரத்தைத் தேய்த்து ஸ்நானம் செய்வதும், நறுமணமுள்ள கனிகள், மலர்கள், உணவுகள், பானங்கள் இவற்றிலிருந்துண்டாகும் ஸுவாஸனைகளை அனுபவிப்பதும், பிணியாளி உணவுண்டவுடனே குளிர்ந்த ஜலத்தைத் திடீரென்று அவனது முகத்தில் தெளிப்பதும் குணந்தரக் கூடியவையாம். 4—6.

வாதச்சர்தியின் சிகித்ஸை:—வாத தோஷத்தினாலான சர்திக்கு விசேஷ சிகித்ஸை கூறப்படுகிறது:—(1) இளஞ்சூடான க்ருதத்தில் இந்துப்பைக் கலந்துட்கொள்ள அது காஸம், கெடுதலான இருதயத்துடிப்பு இவற்றுடன் கூடிய சர்தியைப் போக்கும். (2) த்ரிகடுவும், த்ரிலவணமும்[1] மிகக் கலந்துள்ள க்ருதமும் அவ்விதமே உபயோகமாகும். (3) மாதளம்பழச் சாற்றிற் பக்குவம் செய்த க்ருதமாவது, (4) சுக்கு, கொத்தமல்லி விதை, தயிர் இவற்றில் பக்குவம் செய்த க்ருதமாவது அங்ஙனமே உபயோகமாம். (5) ஸம அளவு ஜலம் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது பருகலாம். (6) விஷ்கிரங்களுடைய மாம்ஸரஸத்தில் போதிய புளிப்பும் இந்துப்பும் நெய்யும் சேர்த்து பக்குவம் செய்தாவது உட்கொள்ளலாம். (7) சுக்கு, தயிர், மாதளம்பழச்சாறு இவற்றால் பக்குவம் செய்யப்பட்டதும் ஸ்நிக்த்தமுமான உணவையும் புஜிக்கலாம். (8) ஸ்நேஹத்தில் உப்பைக் கலந்து இளஞ்சூடாக வாதச்சர்தியில் விரேசனமாவதற்கும் உபயோகிக்கலாம். 7—9½.

பித்தச்சர்தியின் சிகித்ஸை:—(1) பித்த ஸம்பந்தமான சர்தியில் திராக்ஷையின் ஸ்வாஸம், கருப்பஞ்சாறு இவற்றோடு சிவதையின் சூர்ணத்தை விரேசனமாவதற்காகப் பிரயோகிக்கலாம். (2) தில்வக க்ருதத்தையாவது[2] கொடுக்கலாம். (3) மிகவும் அதிகரித்து கபஸ்த்தானத்தை அடைந்துள்ள பித்தத்தை இனிப்பும் கைப்புமுள்ள ஔஷதங்களால் மேல்நோக்கி வாந்தி செய்வித்தே வெளிப்படுத்திவிடவேண்டும். (4) இங்ஙனம்சோதந சிகித்ஸை செய்துகொண்டவன் மந்தத்தையாவது, தேன் சர்க்கரைகள் கூட்டிய யவாகூவையாவது நெற்பொரியோடு உட்கொள்ளலாம். (5) பயறு, ஜாங்கலமாம்ஸம் இவற்றாலான வியஞ்ஜனங்களோடு சம்பா அல்லது காரரிசி யன்னத்தையாவது புஜிக்கலாம். (6) மட்பாண்டத்தில் காய்ச்சியெடுத்து சுயமாய் நன்றாகக் குளிர்ந்துபோன தண்ணீரைப் பருகலாம். (7) திராக்ஷையின் இரஸத்தில் பயறு, வெட்டிவேர், திப்பிலி, கொத்தமல்லி விதை இவற்றைச் சேர்த்து ஓரிரவெல்லாம் ஊறவைத்து, அப்பால் அச்சாற்றையாவது குடிக்கலாம். (8) அவ்விதமே பக்குவம்

1. த்ரிலவணம்—ஸௌவர்ச்சலவணம், ஸைந்தவலவணம், பிடாலவணம். (இலவணத்ரயம்.)

2. தில்வக க்ருதம் — குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.

செய்த கருப்பஞ்சாற்றையாவது, (9) சீந்திற்கொடியின் ஸ்வரஸ்த்தையாவது, (10) பாலையாவது பருகலாம். (11) நாவல் மா இவற்றின் தளிர்கள், வெட்டிவேர், ஆலம்மொட்டு, ஆலம்விழுது இவற்றை க்வாதம் செய்தாவது, சீதகஷாயமாகச் செய்தாவது தேன் கூட்டிப் பருக சர்தி, ஜ்வரம், அதிஸாரம், மூர்ச்சை, கஷ்ட ஸாத்யமான நாவறட்சி இவை நிவ்ருத்தியாம். (12) பயற்றந் தழையைக் கஷாயம் காய்ச்சியாவது, சீதகஷாயமாக்வாவது நெல்லிக்கனியின் ஸ்வரஸத்தோடு உட்கொள்ளலாம். (13) இலந்தங் கொட்டை, சர்க்கரை, நெற்பொரி, ஈயின் மலம், திப்பிலி இவற்றை எரித்து மையாகச் செய்து தேனிற் கலந்துட்கொள்ளலாம். (14) கடுக்காயையாவது, (15) திராக்ஷையையாவது, (16) இலந்தம் பழங்களையாவது தேன் கலந்துட் கொள்ளலாம். 10-15½.

கபச்சர்தியின் சிகித்ஸை :—(1) சிலேஷ்மத்தினு லுண்டான சர்தியில் வேப்பம்பட்டை, திப்பிலி, கடுகு இவற்றைப் பொடித்து இளஞ்சூடான ஜலத்திற் சேர்த்து உட்கொண்டு வாந்தி செய்யலாம். (2) பிணியாளி பலஹீனமாயிருந்தால் இலங்கநம் போடலாம். (3) ஆரக்வதாதி கணத்தின் சரக்குகளைக் கஷாயமிட்டு சூடாறியபிறகு தேன் கலந்து அதைப் பருகலாம். (4) சர்திக்நமான[1] ஔஷதங்களில் அநேக முறை பாவனை செய்யப்பட்ட வாற்கோதுமையை மந்தம்[2] செய்தாகிலும் குடித்து வரலாம். (5) இருதயத்திற்குப் பலந்தரக்கூடியதும், கபஹரமுமாயுள்ள அன்னத்தையாவது புஜிக்கலாம். (6) கஞ்சாங்கோரை, படர்புல் இவற்றுடன் ராகங்களையும் கூட்டிப் புஜிக்கலாம். (7) மனச்சிலையையும், திப்பிலியையும், மிளகையும் பொடித்துக் கொடிமாதளையின் சாற்றிற் கலந்தாவது, விளாம்பழச்சாற்றிற் கலந்தாவது, தேன் கூட்டி யுட்கொள்ள வமநம் நிவ்ருத்தியாகும். (8) விளாம் பழத்தை த்ரிகடுப் பொடியோடு கலந்தும் உபயோகிக்கலாம். (9) பூனைக்காலியை ஸமூலமாகப் பொடித்துத் தேன் கலந்தாவது உட்கொள்ளலாம். 16—20½.

அருவருப்பான வஸ்துவாலுண்டான சர்திக்குப் பரிஹாரம்:—அருவருப்பான அல்லது வெறுக்கக்கூடிய வஸ்துவினுல் ஏற்பட்ட சர்தியானது, அப்பிணியாளிக்கு விருப்பமான வஸ்து முதலியவற்றைக்கொண்டு உபசரித்து வந்தால் நிவாரணமாகும்.—21.

கிருமிகளாலுண்டாகும் சர்திக்கு சிகித்ஸை :—கிருமிகளால் உண்டாகும் சர்தியானது கிருமிஹ்ருத்ரோகத்திற்குக் கூறப்படும் சிகித்ஸைகளால் நிவ்ருத்தியாகும். மேலும் கிருமியினுலுண்டாகும் மிச்சமுள்ள மற்ற வியாதிகளும் கிருமிஹ்ருத்ரோகத்திற்குக் கூறப்படுகிற சிகித்ஸைகளினுல் ஸ்வஸ்த்தமாகும்.—22.

---

1. சர்திக்நம் — வாந்தியைத் தணிக்குங் குணம்.
2. மந்தம் — முதற் புத்தகம் பார்க்க.

சர்திகளைத் தடுத்துவிட வேண்டியதன் ஆவச்யகதை:—சர்தி அதிகமாவதால் தாதுக்கள் க்ஷீணிக்க வாததோஷம் அவசியம் பிரகோபித்துக் கேடு விளைவிக்கும். ஆகவே இந் நிலைமையில் அளவு மீறிய வமநத்திற்குக் கூறியுள்ள முறையை[1] அநுஸரித்து ஸ்தம்பந ப்ருஹ்மண சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். வமந ஹரமாகப் பக்குவம் செய்யப்பட்ட க்ருதங்களும், லேஹ்யங்களும், மாம்ஸரஸங்களும் உபயோகமானவை. கல்யாணகக்ருதமும், த்ரியூஷண க்ருதமும், ஜீவநீய க்ருதமும் இதற்குத் தகுந்தவை. சர்தியைப் பரிஹரிப்பதற்கு அநுகூலமான சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட க்ஷீரங்களும், லேஹ்யங்களும் வாந்தியைத் தணிக்கக் கூடியவைகளாம்.—23, 24.

## ஹ்ருத்ரோக சிகித்ஸை.

வாதஹ்ருத்ரோக சிகித்ஸை:—(1) வாதத்தினால் உண்டாகும் ஹ்ருதயரோகத்தில் தயிராடை, காடிமோர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தை இளஞ்சூடாயிருக்கையில் சுருப்புப்பையும் சிறிதளவு கூட்டிக் கொடுக்கவும். இத்தைலம் குல்மம், வயிற்றுப்பொருமல் இந்நோய்களையும் நிவ்ருத்தி செய்யும். (2) பஞ்சலவணங்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த தைலமும் அவ்விதமே குணம் செய்யக்கூடியது.—$25\frac{1}{2}$

வாதஹ்ருத்ரோகத்தில் பில்வாதிதைலம்:—பில்வப்பட்டை, சிற்றரத்தை, வாற்கோதுமை, இலந்தம்பழம், தேவதாரு, சாறணை, கொள், பஞ்சமூலம் இவற்றின் கஷாயத்தில் எண்ணெய் பக்குவம் செய்து, அதை நஸ்யமிடவும், பானம் செய்யவும், வஸ்தி பிரயோகிக்கவும் உபயோகிக்கலாம்.—26, 27.

சுண்ட்யாதி க்ருதம்:—சுக்கு, நெல்லிக்காய், இந்துப்பு, காகோலி, காயம், தாமரைக்கிழங்கு, கடுக்காய் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதமானது பக்கசூலை, இருதயத்தைப்பற்றிய நோவு, குல்மம் இவற்றை நிச்சயமாய் நிவ்ருத்திக்கவல்லது.—28.

பத்யாதி க்ருதம்:—விதை நீக்கிய ஐம்பது கடுக்காய்களையும் இரண்டு பலம் ஸௌவர்ச்சலவணத்தையும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்து உபயோகிக்க, இது ஹ்ருதயத்தைப்பற்றிய வியாதிகள், ச்வாஸம் குல்மம் இவற்றைப் பரிஹரிக்கும்.—29.

புஷ்கராதி கல்கமும் யவாங்யாதி க்வாதம் முதலியதும்:—(1) தாமரைக்கிழங்கு, கச்சோரம், சுக்கு, கொடிமாதளைவேர், கடுக்காய், இவற்றைக் கல்கமாகச் செய்து, யவக்ஷாரம், நெய், ஏதேனும் அம்லம், இந்துப்பு இவற்றுடன் சேர்த்து உட்கொள்ள

1. அளவுமீறிய வமநம் — முதற் புத்தகம் 186-ம் பக்கம் பார்க்க.

மார்பிலுண்டாகும் வேதனை, இருதயசூலை இவை நிவ்ருத்தியாகும். (2) குராஸானி யோமம், இந்துப்பு, யவக்ஷாரம், வசம்பு, ஓமம், சுக்கு இவற்றாலும், பொன்னலங்காய், தேவதாரு, கொம்மட்டி மாதளை, கடுக்காய், கச்சோரம், தாமரைக்கிழங்கு இவற்றாலும் பக்குவம் செய்த கஷாயத்தை இளஞ்சூடாகப் பருகினாலும் அவ்வித குணத்தைக் கொடுக்கும். 30—31½.

பஞ்சகோலாதி கல்கம்:—பஞ்ச கோலங்கள், கச்சோரம், கடுக்காய், சீந்தில், கொம்மட்டிமாதளை, தாமரைக்கிழங்கு இவற்றை வாருணீயென்கிற மதுவைச்சேர்த்து[1] கல்கமாக அரைத்து, யமக ஸ்நேஹத்தில் வறுத்தெடுத்து, இந்துப்பு சேர்த்து இருதயசூலை, பக்கசூலை, யோனிசூலை இவைகளிலும், குல்மம், உதரரோகங்கள் இவற்றிலும் புஜித்துவரலாம்.—32, 33.

ஸ்வேதமும் க்ருதபானமும் :—இந்த ஹ்ருத்ரோகத்தில் ஸ்நிக்தமான ஸ்வேதங்களைப் பிரயோகிப்பதும், தகுந்தவாறு பக்குவம் செய்த க்ருதங்களைப் பருகுவதும் ஹிதமாகும்.—33½.

த்ருஷ்ணையுடன் கூடியஹ்ருத்ரோகத்தில் பானவகைகள்:—ஹ்ருத்ரோகத்தில் நாவறட்சியுண்டானல் இலகுபஞ்சமூலக்வாதம், சுக்குக்கஷாயம், வாருணியின் ஆடை, தயிரின் ஆடை, காடி இவற்றில் எதையாவது குடிக்கலாம்.—34½.

வாதஹ்ருத்ரோகத்தில் மாம்ஸரஸங்கள்:—இசிவு, ஸ்தம்பித்துப்போதல், சூலம், ஆமதோஷம், இக்கோளாறுகளாலும் வாததோஷத்தினாலும் இருதயம் பீடிக்கப்படுகையில் முற்கூறியவாறு இச்சிகித்ஸைகள் ஹிதமானவையாம். ஆனால் இருதயத்திற் படபடத்த நடையும், இசிவும், மூர்ச்சையும் உண்டாகும்போது அவ்வித வாதஹ்ருத்ரோகத்தில் தித்திரி, சக்கிரவாகப்புள், மயில், வர்தகம் என்கிற பக்ஷி, காடி இவற்றின் மாம்ஸரஸங்களை அதிக ஸ்நேஹத்துடன் கூட்டி யுபயோகிப்பது நலம்.—35, 36.

ஸ்நேஹ பானங்கள்:—இருதய ரோகமுள்ளவன் பலாதைலத்தையாவது[2], ஸுகுமார க்ருதத்தையாவது,[3] நூறு முறை பக்குவம் செய்த யஷ்ட்யாதி தைலத்தையாவது,[4] மஹா ஸ்நேஹத்தையாவது பருகுவது உத்தமம்.—37.

மஹாஸ்நேஹம்:—சிற்றரத்தை, ஜீவகம், ஜீவந்தி, சிற்றுமுட்டி, கண்டங்கத்திரி, சாறடை, கண்டுபாரங்கி, மல்லிகை, வசம்பு, த்ரிகடு, இவற்றைக் கல்கமாகச் செய்து, நாலு மடங்கு தயிரில் எண்ணெயைச் சேர்த்து, கிடைக்கக்கூடிய அம்லவஸ்துக்களையும்

---

1. வாருணீ - முதற் புத்தகம் பார்க்க.

2. சிற்றுமுட்டியின் கஷாயத்தில் காய்ச்சி, சிற்றுமுட்டியையே கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்த தைலம்.

3. ஸுகுமார க்ருதம்-பிரமேஹ சிகித்ஸையில் கூறப்படுவது.

4. யஷ்ட்யாதி தைலம்-வாதரக்த சிகித்ஸையிற் கூறப்படுவது.

கூட்டி தைலம் பக்குவம் செய்யவும். இது மஹாஸ்நேஹம் எனப்படும். இத்தைலத்தைப் பருகினால் வாத ஹ்ருத்ரோகம் நிவ்ருத்தியாகும்; தர்ப்பணம், ப்ருஹ்மணம், பல்யம் என்கிற குணங்களும் இதற்குண்டு.—38, 39.

வாதஹ்ருத்ரோகாதிகளில் அனுகூலமும் அனுகூலமல்லா தவையுமான உணவுமுதலியன :—அதிக படபடப்போடும் இசிவோடும் கூடிய வாதஹ்ருத்ரோகத்தில், ஜாடராக்கினி உத்தீபனமடைந்திருக்கும் நிலைமையில் பால், தயிர், வெல்லம், நெய், ஜலஜந்துக்களுடைய மாம்ஸம், ஆநூபமாம்ஸம் இவை ஹிதமாகும். வாத ஹ்ருத்ரோகத்தைத் தவிர மற்ற நாலுவித ஹ்ருத்ரோகங்களிலும், ஸ்தம்பித்தல், சைத்தியம், ஆமதோஷம் இவற்றோடு கூடிய வாதஹ்ருத்ரோகத்திலும் இந்த வஸ்துக்கள் விலக்கத் தகுந்தவை. வாத ஹ்ருத்ரோகத்தில் கபமும் சேர்ந்தால் ரூக்ஷமும் உஷ்ண வீர்யமுமுள்ள பதார்த்தங்களால் சிகித்ஸை செய்யவேண்டும்.—40, 41½.

பித்த ஹ்ருத்ரோகத்தில் விரேசநமுறை :—பித்த ஸம்பந்தமான ஹ்ருத்ரோகத்தில் திராக்ஷை, கரும்பு இவற்றின் சாறும், சர்க்கரையும், தேனும், ஈச்சம்பழமும் கூட்டிய விரேசனௌஷதத்தை உட்கொள்வது ஹ்ருத்யமாயிருக்கும்.[1] விரேசநமாய் சரீரம் சுத்தமானபிறகு பித்தஹரமான உபசாரம் செய்யப்படவேண்டும். க்ஷத காஸத்திலும் பித்த ஜ்வரத்திலும் கூறியுள்ளபடி உள்ளும்புறமும் சோதனமுறை செய்யவேண்டும். கடுகரோகிணி, அதிமதுரம் இவற்றின் கல்கத்துடன் சர்க்கரை கூட்டி ஜலத்துடன் உட்கொள்ளலாம்.—42, 43½.

பித்த ஹ்ருத்ரோகத்திற்கேற்ற க்ருதபானங்கள் :—(1) யானைத்திப்பிலி, சர்க்கரை, திராக்ஷை, ஜீவகம், ருஷபகம், நெய்தல், சிற்றுமுட்டி, பேரீச்சம்பழம், காகோலீ, மேதா, மஹாமேதா இவற்றைச் சேர்த்து பாலும் ஊற்றி பக்குவம் செய்யப்பட்ட எருமைநெய் பித்த ஹ்ருத்ரோகத்தைப் போக்கும். (2) வறள் தாமரை, அதிமதுரம், தாமரைக்கிழங்கு, கிரந்தி தகரம், தட்டைக் கோரைக்கிழங்கு, சுக்கு, வேலம்பாசி இவற்றைப் பாலில் சேர்த்து, நெய் ஊற்றிக் காய்ச்சி, ஆறியபிறகு தேன் கலந்து உட்கொள்வது உசிதம். (3) மதுரவர்க்க வஸ்துக்களால் பக்குவம் செய்த க்ருதத்தையும் பருகலாம். 44—46½.

மது தைலக வஸ்தி :—அதிமதுரம் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தையும் தேனையும் கூட்டி, அதனால் பித்த ஹ்ருத்ரோகத்தில் வஸ்தியைப் பிரயோகிக்கலாம்.—47.

கப ஹ்ருத்ரோகத்தில் வமந சிகித்ஸைகள் :—(1) கபதோஷக்கோளாறால் உண்டாகும் ஹ்ருத்ரோகத்தில் ஸ்வேத சிகித்ஸை

1. ஹ்ருத்யம்-முதற் புத்தகம் பார்க்க.

செய்து, கொள், ஜாங்கல மாம்ஸம், தீக்ஷ்ணமான மது, வாற் கோதுமை இவற்றை உண்ணக் கொடுத்து, வேப்பம் பட்டையும் வசம்பும் சேர்த்துப் பக்குவம் செய்த கஷாயத்தைக் குடிக்கச் செய்து வமநம் செய்விக்கவும். (2) வசம்பு, காயம், இந்துப்பு, சவுட்டுப்பு, சுக்கு, ஏலக்காய், குராஸானி யோமம், திப்பிலி, யவ க்ஷாரம் இவற்றைச் சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொண்டு வமநம் செய்யலாம். (3) காடி, கொள்ளின் சஞ்சி, பசுவின் மூத்திரம், ஆஸவங்கள் இவற்றோடு மருக்காறையை உப யோகித்தும் வமனம் செய்யலாம். (4) தாமரைக் கிழங்கு, கடுக் காய், சுக்கு, கச்சோரம், சிற்றரத்தை, வசம்பு, திப்பிலி இவற்றின் சூர்ணத்தையும் முற்கூறிய உஷ்ண ஜலம் முதலியவற்றுடன் உட்கொள்ளலாம். (5) கடுக்காய், சுக்கு, திப்பிலி, ஸரள தேவ தாரு, சிறு தேக்கு இவற்றின் கஷாயமும் பருகலாம். 48—50½.

ரோஹிதகாதி அவலேஹம் :—செம்மரம்பட்டை, அரசம் பட்டை, கருங்காலிப்பட்டை, அத்திப்பட்டை, மருதம்பட்டை, முருக்கம்பட்டை, ஆலம்பட்டை இவற்றின் கஷாயத்தில் த்ரி கடுவையும் கருஞ்சிவதையையும் பொடித்துச் சேர்த்து, லேஹ்ய பாகமாகச் செய்து, இளஞ்சூடான ஜலத்தின் அனுபானத்தோடு உட்கொள்ள கப ஹ்ருத்ரோகம் தீரும்.—51, 52.

கபஹ்ருத்ரோகத்தில் சில ரஸாயனப் பிரயோகங்கள்:—(1) கப குல்ம சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ள க்ருதங்களையும், பலவித மான க்ஷாரவகைகளையும்[1] இவ்வியாதியிலும் உட்கொள்ளலாம். (2) சிலாஜதுவையாவது பிரயோகிக்கலாம். (3) பிராஹ்ம ரஸா யனத்தையாவது, (4) ஆமலகலேஹ்யத்தையாவது,[2] (5) அகஸ்திய ஹரீதகி லேஹ்யத்தையாவது[3] உட்கொள்ளலாம்.—53, 53½.

போஜனமுட்கொண்டதும் உண்டாகும் ஹ்ருதயசூலைக்கு குஷ்டாதி சூர்ணம் :—எவனுக்கு உணவை யுட்கொண்டதும் இரு தயவலி அதிகரித்து, அது ஜீர்ணமாகையில் வலி குறைந்து, முற் றிலும் ஜீர்ணமான பிறகு வலியும் சமன மடைகின்றதோ, அவன் உஷ்ண ஜல அனுபானத்தோடு கோஷ்டம், வாய்விடங்கம், இந் துப்பு, அட்டுப்பு, வெள்ளிலோத்தி, தேவதாரு, அதிவிடயம் இவற்றின் சூர்ணத்தை உபயோகிக்கலாம்.—54, 55.

எல்லாவித ஹ்ருதய சூலைக்கும் சிகித்ஸை :—(1) உணவு ஜீர்ணமான பிறகு அதிக இருதயவலியால் வருந்தும் பிணியா

---

1. அடுத்த 14-வது அத்தியாயத்தில் கூறப்படுகிற க்ருதங்கள் க்ஷாரங்கள் இவை குறிக்கப்படுகின்றன.

2. சிலாஜதுப் பிரயோகம், பிராஹ்ம ரஸாயனம், ஆமலக லேஹ்யம் இவற்றின் விவரங்கள் உத்தர ஸ்த்தாநம் 39-ம் அத்தியாயத்தில் கூறப் படுகின்றன.

3. அகஸ்திய ஹரீதகீ—காஸ சிகித்ஸையிற் கூறப்பட்டது.

ர்க்கு ஸ்நேஹங்களால் விரேசனம் செய்விக்கலாம். (2) உணவு ஜீர்ணமாகும் ஸமயத்தில் இருதயவலி அதிகமானால் பல விரேசனம் செய்விக்கலாம்.[1] (3) இருதய சூலை எப்பொழுதுமே அதிகமாயிருந்தால் தீக்ஷ்ணகுணமுள்ள மூலங்களால் அங்ஙனமே விரேசனம் செய்விக்கலாம்.[2]—56.

ஆமாசயத்தில் வாயு பிரகோபிப்பதாலான ஹ்ருதய சூலைக்கு சிகித்ஸை :—வாயு, அதன் மார்க்கம் அடைபடுவதால் பெரிதும் ஆமாசயத்திற் சென்று பிரகோபிக்கும்;[3] சோதனம், லங்கனம், பாசனம் இச் சிகித்ஸைகளால் அவ்வாயுவை அநுலோமநமாக்கி[4] வெளிப்படுத்த வேண்டும்.—57.

க்ருமிஹ்ருத்ரோக சிகித்ஸை :—கிருமிகளா லுண்டாகும் இருதய ரோகத்தில் கிருமிஹரமான ஔஷதங்களை யெல்லாம்[5] உபயோகித்து சிகித்ஸை செய்யலாம்.—57½.

## த்ருஷ்ணை சிகித்ஸை.

த்ருஷ்ணை ரோகத்திற்கான போது சிகித்ஸைகள் :—த்ருஷ்ணை யென்கிற நாவறட்சி ஸம்பந்தமான எல்லா விகாரங்களிலும் பெரும்பாலும் வாத-பித்த ஹரமான சிகித்ஸா முறை யுக்தமானது; அங்ஙனமே உள்ளும் புறமும் சீதளமான உபசாரமும், சமந சோதந சிகித்ஸைகளும் ஏற்றவையாம். (1) குளிர்ச்சியான ஆந்தரிக்ஷோதகத்தைத் தேனுடன்[6] பருகலாம். (2) பௌமோதகத்திலும்[7] தேன் கூட்டி யுபயோகிக்க அதே குணமுண்டாகும். (3) அக்கினியில் பழுக்கக் காய்ச்சிய மண்ணோடு,

---

1. பலவிரேசனம் — திராக்ஷை, வாய்விடங்கம், பேரீச்சு, ஈச்சு, கொன்னை, நெல்லிக்கனி, கடுக்காய், தான்றிக்காய், கம்பில்லகம், வாளம், வெள்ளரிவிதை இவை முதலியவற்றைச் சேர்த்து செய்யப்படும் ஔஷதத்தைப் பிரயோகித்து செய்யப்படும் விரேசனம்.

2. மூலவிரேசனம் —எழிலைப்பாலை, சங்கங்குப்பி, நேபாளம், கருஞ் சிவதை, வெண்சிவதை முதலியவற்றாலான ஔஷதத்தைப் பிரயோகித்துச் செய்யப்படும் விரேசன சிகித்ஸை.

3. ஆமாசயத்தில் உணவாவது வாயுவாவது அமிதமாகச் சேரும் போது அவ்வவயவம் விம்மிக்கொண்டு அதற்கு அடுத்துள்ள இருதயத்தைப் பரிசிக்கக்கூடுமாகையால், இரைப்பையில் உணவு முதலியது சேருவதால் இருதய வலியும் உண்டாவது இயல்பு.

4. அநுலோமநம்-அபானவாயு முதலியதைக் கீழ் நோக்கி வெளிப்படுத்தல்.

5. கிருமிஹரங்கள்-ஸூத்திர ஸ்த்தாநம் 15-வது அத்தியாயத்திற் கூறிய அர்க்காதிகணம் முதலியவை.

6. ஆந்தரிக்ஷோதகம் — முதற் புத்தகம் பார்க்க.

7. பௌமோதகம் — நிர்மலமானதும் கறுத்து விசாலமாயுள்ளதுமான கெட்டி பூமியில் விழுந்துள்ள ஜலம்.

கல், மணல் முதலியவற்றைச் சுத்தமான ஜலத்தில் சேர்த்து ஆறிய பிறகு அக்குளிர்ந்த நீரையாவது சர்க்கரை கூட்டிப் பருகலாம். (4) திருண பஞ்சமூலம் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது உட்கொள்ளலாம். (5) நெற்பொரிமாவைச் சேர்த்து பக்குவம் செய்த மந்தமும் சிறந்ததாகும். (6) வாற்கோதுமையின் பச்சைமாவாலாகிய வாட்யமண்டத்தில் சர்க்கரையும் தேனையும் கூட்டிக் குளிர்ந்தபிறகு அதை உட்கொள்வதும் நலம். (7) பழகிய சம்பாஅரிசியாலும் கோத்ரவதானியத்தினலும் ஆகிய யவாகூவையாவது குளிரச்செய்து குடிக்கலாம். (8) குளிர்ந்த நீரில் குளித்து, சீதவீர்யமான திரவ்யங்களால் பக்குவம் செய்யப் பெற்றதும், சர்க்கரையும் தேனும் கலந்து குளிர்ச்சியாக்கப்பட்டதுமான பாலோடு உணவுண்ணலாம். (9) உப்பும் புளிப்பும் சேர்க்காமல், நெய் சேர்த்துத் தாளித்த ஜாங்கல மாம்ஸரஸங்களோடும், ஜீவநீயகணச்சரக்குகளின் ஸ்வரஸங்களைக் கூட்டி, பயறு முதலியவற்றின் யூஷங்களோடும் அங்ஙனமே போஜனம் செய்யலாம். (10) பாலிலிருந்தெடுத்த நெய்யைச் சீதவீர்யமான சரக்குகளில் பக்குவம் செய்து நஸ்யமிடுவதும் நலம். (11) அங்ஙனமே கருப்பஞ்சாற்றில் பக்குவம் செய்த அவ்வித நெய்யையும் நஸ்யமிடலாம். (12) ஸூத்திர ஸ்த்தாநத்திற்கூறிய ரோபண கண்டூஷங்களும், (13) தாஹஜ்வரத்திற்கூறிய லேபாதிகளும் இதில் ஹிதமானவையாம். (14) வேலையொழிந்து அமைதியுடன் மகிழ்ச்சி பெற்றிருப்பதும், நதிகள், பெரிய நீரோடைகள் முதலியவற்றைக் காண்பதும் நினைப்பதும் இப்பிணியில் நன்மையுண்டாக்கும். 58—65½.

வாத த்ருஷ்ண சிகித்ஸை:—(1) வாதத்தினலான த்ருஷ்ணையில் வெல்லம் கலந்த தயிர் சிறந்தது. (2) சீதவீர்யமான ப்ருஹ்மணகுணமுள்ள மாம்ஸரஸமாவது, விதார்யாதிகண கஷாயமாவது உபயோகிக்கலாம்.—66½.

பித்தத்ருஷ்ண சிகித்ஸை:—பித்தத்தினல் உண்டாகும் த்ருஷ்ணையில் நன்கு கனிந்த அத்திப்பழச்சாற்றில் சர்க்கரை கூட்டிப் பருகலாம்; அக்கனிகளாலான க்வாதத்தையாவது, அவற்றின் ஹிமகஷாயத்தையாவது, சாரிபாதிகண க்வாதத்தையாவது பானம் செய்யலாம். அங்ஙனமே சீதவீர்யமான திரவ்யங்களால் பக்குவம் செய்த சீதகஷாயங்களில்[1] சர்க்கரையும் தேனும் கூட்டி உட்கொள்ளலாம். அவ்விதமே மதுரரஸமுள்ள ஔஷதச் சரக்குகளாலும் பாலுள்ள மரங்களின் பட்டைகளாலும் பக்குவம் செய்யப்பட்ட சீதகஷாயங்களையும் பானம் செய்யலாம். கொம்மட்டிமாதளை, திராக்ஷை, ஆல், நீர்வஞ்சி இவற்றின் தளிர்களையும், ஞாழல் வேரையும், தர்ப்ப வேரையும்,

1. சீதகஷாயம் — இதுவே ஹிமகஷாயம் எனப்படும்.

அதிமதுரத்தையும் ஜலத்தில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சியுட்கொள்ளலாம். ஜ்வர சிகித்ஸையிற் கூறிய திராக்ஷாதி பாண்டம் அல்லது ஹிம கஷாயத்தையாவது, பஞ்சஸார பானகத்தையாவது பருகலாம். 67—70.

கபத்ருஷ்ணா சிகித்ஸை :—கபதோஷத்தினு லுண்டாகும் த்ருஷ்ணைகளில் வேப்பிலைச் சாற்றை உட்கொண்டு வமநம் செய்யலாம்; அல்லது வில்வவேர், துவரை, பஞ்சகோலம், த்ருண பஞ்சமூலம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது, மஞ்சளின் கஷாயத்தையாவது குடிக்கலாம். த்ரிகடு, பேய்ப்புடல், வேப்பிலை இவற்றைக் கூட்டி தேனையும் சர்க்கரையையும் சேர்த்து, பயற்றங் கஞ்சியையாவது பருகலாம். வாற்கோதுமையினுலான அன்னத்தையும், தீக்ஷ்ண கபளத்தையும், தீக்ஷ்ண நஸ்யத்தையும், தீக்ஷ்ணகுணமுள்ள லேஹ்யத்தையும் உபயோகிக்கலாம். 71-72½.

ஸந்நிபாத-ஆமதோஷ த்ருஷ்ணைகளுக்கு சிகித்ஸை :—ஸந்நிபாத த்ருஷ்ணையிலும், ஆமதோஷ த்ருஷ்ணையிலும் முறையே ஸந்நிபாத ஹர சிகித்ஸையும், ஆமதோஷ ஹர சிகித்ஸையும் உசிதமாம். அவ்விதமே த்ரிகடு, சோரங்கொட்டை, வசம்பு இவற்றை எலுமிச்சம்பழ ரஸத்தோடாவது, வெந்நீருடனுவது, மஸ்துவுடனுவது பருகலாம்.—73½.

பட்டினி முதலியதாலான த்ருஷ்ணைகளுக்கு சிகித்ஸைகள்:—(1) உணவின்மையினுல் உண்டாகும் த்ருஷ்ணையில் உஷ்ணமான மண்டத்தையும், குளிர்ந்த மந்தத்தையும் காலமறிந்து உட்கொள்ள வேண்டும். (2) சிரமத்தினுலுண்டாகும் த்ருஷ்ணையில் மாம்ஸரஸத்தையாவது, மதுவையாவது சர்க்கரை கலந்து பருகுவது நலம். (3) வெயிலின் ஸம்பந்தத்தினுல் உண்டாகும் த்ருஷ்ணையில், சர்க்கரை சேர்த்த மந்தத்தை வாற்கோதுமை, இலந்தங்கொட்டை இவற்றின் திரவச்சத்துக்களோடு உட்கொள்ளலாம். எள்ளுப்பிண்ணுக்கு, காடி இவற்றை உடம்பெங்கும் பூசலாம். (4) சீதஜல ஸ்நானத்தினுல் உண்டாகும் த்ருஷ்ணையில் மதுவையும் தண்ணீரையும் கூட்டிப் பருகலாம்; அல்லது வெல்லம் கரைத்த ஜலத்தையாவது உட்கொள்ளலாம். (5) மதுபானத்தினுல் உண்டாகும் நாவறட்சியைப் போக்குவதற்கு, ஸ்நானம் செய்துவிட்டு, புளிப்பும் உப்புங்கலந்த மதுவை, அதற்கு அரைப் பங்கு தண்ணீரில் சேர்த்து விளாவி பானம் செய்யலாம். (6) ஸ்நேஹங்களை உபயோகித்து, அதனுல் உடற்சூடு அல்லது ஜாடராக்னி மிகக் கடுமையாகப் போய் உண்டாகும் வறட்சியைப் போக்குவதற்கு இயற்கையிலேயே குளிர்ந்துள்ள ஜலத்தைப் பருகலாம். உட்கொண்ட ஸ்நேஹம் ஜீர்ணமாகாமல் உண்டாகும் த்ருஷ்ணையில் உஷ்ணஜலத்தையும், (7) ஸ்நேஹ பதார்த்தம்

---

1. பஞ்சஸாரம் — முதற் புத்தகம் பார்க்க.

ஜீர்ணமாய் ஸம்பவிக்கும் நாவறட்சியில் மண்டத்தையும் பானம் செய்யலாம். (8) ஸ்நிக்த்தமான அன்னத்தைப் புஜித்து நாவறட்சி கொண்டவன் பனிபோல் குளிர்ந்துள்ள வெல்லம் கரைத்த ஜலத்தைப் பருகலாம். (9) குருபோஜனம் முதலிய உணவால் நாவறட்சி கொண்டவன் உஷ்ண ஜலத்தைக் குடித்து அவ்வுண வைக் கல்லி வாந்தி செய்யலாம். (10) க்ஷய ரோகத்தினாலான நாவறட்சியில் க்ஷயத்திற்கு ஹிதமான ப்ருஹ்மண ஔஷதம் அனைத்தும் உபயோகமுள்ளதாம். 74—79.

பலஹீனர் முதலியவருக்கு த்ருஷ்ணா சிகித்ஸைகள் :—(1) இளைத்திருப்பவருக்கும், பலஹீனமாயிருப்பவருக்கும், ரூக்ஷ சரீரமுடையவருக்கும் உண்டாகிற நாவறட்சியில் பாலாவது, செம்மறியாட்டின் மாம்ஸரஸமாவது அனுகூலமானதாகும். (2) ஊர்த்வ ச்வாஸத்துடன் கூடிய நாவறட்சியில் க்ஷயகாஸங்களைப் போக்கக்கூடிய குணமுள்ள சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகலாம். (3) சில ரோகங்களாலும் உபத்திரவங்க ளாலும் நாவறட்சி யுண்டாகையில் சர்க்கரையும் தேனும் கலந்த காடி உட்கொள்வதற்குச் சிறந்த வஸ்துவாம். மேலும் அந்தந்த ரோகங்களின் தன்மைகளுக் கேற்றவாறு எல்லாவித சிகித்ஸை களையும் செய்வது நலம். ஏற்கனவே வியாதியினால் இளைத்துப் போனவன் நாவறட்சியினாலும் வருந்தும்போது அவனுக்குத் தண்ணீர் கிடைக்காவிடில், அதனால் சீக்கிரத்தில் மரணமாவது நீடித்த காலம் போராடும் கடும் வியாதியாவது ஸம்பவிக்கும்; அவனுக்கு ஸாத்மியமான அன்ன பானங்களையும் ஔஷதங்களை யும் கொடுத்து முதலில் நாவறட்சியைப் பரிஹரிக்க வேண்டும்; அங்ஙனம் த்ருஷ்ணை நிவ்ருத்திக்கப்பட்டால், அதற்கு முந்திய இதர வியாதிக்கும் எளிதில் சிகித்ஸை செய்யலாம். 80—83.

---

## ஏழாம் அத்தியாயம்.

## மதாத்யய சிகித்ஸை.

இனி மதாத்யய சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரிக் கப்படுகின்றது :—

மதாத்யயத்திற்குப் போது சிகித்ஸை :—மதாத்யய வியாதி யில் எந்த தோஷம் அதிகரித்திருக்கின்றதோ அதற்கு முதலில் சிகித்ஸை செய்யவேண்டும். மூன்று தோஷங்களும் ஒரே அள வில் கோளாறடைந்திருக்குமானால் கபத்திற்கு முதலிற் சிகித்ஸை செய்து, அப்பால் பித்தத்திற்கும், பிறகு வாதத்திற்கும் செய்ய லாம்; அல்லது ஆமாசயாதி ஸ்த்தாநங்களின் நிலைமைகளை அனு ஸரித்து முதலில் ஆமாசயத்திற்கும், பிறகு பக்வாசயத்திற்கும்,

அதன்பிறகு வாதாசயத்திற்கும் சிகித்ஸை செய்யலாம். ஏனெனில் மதாத்யயக் கோளாறு பெரும்பாலும் கபத்தில் ஆரம்பித்து, அப்பால் பித்தம் அல்லது வாததோஷம் வரையிலும் தொடர்வது இயல்பு.—1, 1½.

மதாத்யயத்திற்குச் சில ஸமயம் மதுபானமே பரிஹாரம்:—ஹீநயோகமாகவோ, மித்யாயோகமாகவோ, அதியோகமாகவோ மதுபானம் செய்து மதாத்யயம் உண்டானால், அது அதே மத்யத்தை ஸம அளவாக உபயோகிப்பதால் நிவ்ருத்தியாகும்; மத்யம் விஷகுணங்களைப் பெற்றிருப்பதால் இவ்வித சிகித்ஸை உசிதமாகும். ஆனால் தீக்ஷ்ணம் முதலிய குணங்கள் விஷத்தில் மிகவும் அதிகம்; ஆகவே ஒருவித விஷத்தினாலான கோளாறுக்கு மற்றொருவித விஷம் சிகித்ஸையில் தேவையாகும்.[1]—2, 3½.

மிதமிஞ்சிய மதுபானத்தினால் மதாத்யயம் உண்டாகும் வகை:—இயற்கையிலேயே தீக்ஷ்ண குணமும், உஷ்ண வீர்யமும், குடலிற் சென்று புளித்துக் காந்தலை யுண்டு பண்ணும் தன்மையுமுள்ள மத்யத்தை மிதமிஞ்சிக் குடிப்பதால் குடலிலுள்ள அன்னரஸம் எரிக்கப்பட்டு க்ஷாரத்தன்மை யடையும். அவ்வித அன்னச்சத்தானது அக்னி மாந்த்யம், நாவறட்சி, மூர்ச்சை, ஜ்வரம், உடலுட்புறத்தில் அழற்சி, தலைச்சுற்றல் இக் கோளாறுகளை யுண்டுபண்ணும். மத்யபானத்தினால் தூண்டப்பட்டு மேலோங்கிய ஆமதோஷத்தினால் ஸ்ரோதோமார்க்கங்களில் வாயு தகையப்பட்டுப் போகும்; அவ்வாயுவானது சிரஸிலும், அஸ்த்திகளிலும், ஸந்தி பாகங்களிலும் கடுமையான வேதனையை உண்டுபண்ணும். 4—6.

மதாத்யயத்திற்கு மதுபானமே பரிஹார முறை:—ஆம விகாரங்களுடன் கூடிய அவ்வித மதுபான ஸம்பந்தமான தோஷம் பக்குவ நிலைமை யடைந்ததும், உணவு முதலியவற்றில் விருப்பம் ஏற்பட்டு தேஹத்திலும் இலாகவமுண்டானால் நன்கு பக்குவம் செய்யப்பட்ட மதுவையே அளவறிந்து உபயோகிக்க அவ்விகாரங்கள் ஒழியும். க்ஷாரமானது அம்ல வஸ்துவின் சேர்க்கையினால் மதுரத்தன்மையைப் பெறும். மதுரத்தன்மையை யுண்டுபண்ணும் அவ்வம்ல வஸ்துக்களுள் மத்யம் சிறந்தது. தோஷங்களைக் கழித்துத் தள்ளுவதற்கும் போதுமான சக்தியுடையது. முற்கூறிய தீக்ஷ்ணம், உஷ்ணம் முதலிய வீர்யாதிகளாலும், தீபநம் முதலிய குணங்களாலும், அடிக்கடி உபயோகித்து ஸாத்மியமாகப் போகும் தன்மையினாலும் அந்த மத்யமே இப்பிணியாளிக்குக் கோளாறடைந்துள்ள தாதுக்களைச் சமநிலைமைக்குக் கொண்டுவரச் சிறந்த வஸ்துவாம். 7—9.

---

1. விஷத்திற்கும் மதுவுக்கும் ஸமானமாயுள்ள தீக்ஷ்ணாதி குணங்களைப்பற்றி முதற் புஸ்தகம் பார்க்க.

மதாத்யயம் ஔஷத ஸேவையால் சாந்தமாகும் கால அளவு:- (1) மதாத்யயத்தைப் போக்குவதற்கு ஏழு நாட்களாவது எட்டு நாட்களாவது ஔஷதம் உபயோகிக்கவேண்டும். சரீரத்திலும் விபரீதமான மார்க்கங்களில் வியாபித்துள்ள மத்யமானது இவ்வளவு காலத்திலேயே பக்குவமடைந்து ஜீர்ணமாய்விடும். (2) மதாத்யயம் இங்ஙனம் ஏழெட்டு நாட்கள் பரிஹார முறையைச் செய்தும் நிவ்ருத்தியாகாமல் தொடருமானால், அப்பிணியாளிக்கு அவனது நிலைமைகளுக்கு ஏற்ற ஔஷதங்களைப் பக்குவம் செய்து உபயோகிக்கவேண்டும்.—10, 11.

வாதமதாத்யய சிகித்ஸை :—அவற்றுள் வாததோஷம் மேலோங்கிய மதாத்யயத்தில் அடியில் வருமாறு சிகித்ஸை செய்யவேண்டும். (1) கொடிமாதளை, புளி, இலந்தை, மாதளை, ஓமம், குராசாணியோமம், கொட்டைக்கரந்தை, ஜீரகம், த்ரிகடு, த்ரிலவணம், இஞ்சி, சூலத்தில் குத்தி வாட்டியெடுத்த இறைச்சிகள், பசுமையான கீரைகள், ஸ்நேஹம் கலந்த மாப்பண்டங்கள் இவற்றோடு மாப்பண்டங்களாலான மத்யத்தைக் கொடுக்கலாம். (2) உஷ்ண வீர்யமும், ஸ்நிக்த்தகுணமும், அம்ல - லவண - ரஸங்களும் நிரம்பியவைகளும், கொழுக்கச் செய்பவையுமான மாம்ஸரஸங்களும் ஹிதமாம். (3) மாம்பழம், காட்டுமாம்பழம் இவற்றின் கதுப்புகளால் செய்யப்பெற்ற ராக காண்டவங்களும் இப்பிணியாளருக்கு ஏற்றவையாம். (4) ம்ருதுவாகவும், விசித்திரமாகவும், இனிதாகவும் பக்குவம் செய்த கோதுமைப் பணியாரங்களும், உளுந்துப் பணியாரங்களும் ஏற்றவையே. (5) இஞ்சியின் பிஞ்சு, முதிர்ந்த இஞ்சி, காராமணி, சுக்தம், மாம்ஸம் இவைகளடங்கியதும், நறுமணம் பொருந்தியதும், இலவணரஸம் கலந்ததும், குளிர்ச்சியாயிருப்பதும், மிகப் பழகியதுமான அச்சஸுரையும்[1] அநுகூலமானது. (6) மாதளம்பழ ஸ்வரஸமும், லகு பஞ்சமூல க்வாதமும், சுக்கு, கொத்தமல்லிவிதை இவற்றின் கஷாயமும், தெளிவான மோர், சுக்தம், தண்ணீர் இவற்றாலான காடியும் ஹிதமாம். (7) அப்யஞ்ஜநம், நலங்குப்பொடி முதலியதைத் தேய்த்தல், ஸ்நாநம் செய்தல், வெப்பந்தரக்கூடிய கனமான போர்வையைப் போர்த்தல், அகிற்கட்டையை எரித்து அதிலிருந்தெழும்பும் அடர்த்தியான தூமத்தைப் பிரயோகித்தல், அகிற்கட்டையின் சந்தனக் குழம்போடு குங்குமப் பூவையும் கலந்து கனமாக தேஹத்திற் பூசுதல் என்கிற இவைகளும் அநுகூலம் தரும். (8) பருத்த ஸ்தனங்களோடும், துடைகளோடும், கடிப்ரதேசங்களோடும் விளங்கும் மனதுக்கினிய யௌவன ஸ்த்ரீகள் உஷ்ணம் பொருந்தி திரண்டுருண்ட அங்கங்களைப் பெற்றவர்களாய், ஆனந்தத்துடன் ஆலிங்கனம் செய்து, வாதமதாத்யய

1. அச்சஸுரை-முதற் புத்தகப் பார்க்க.

ரோகியின் தேஹத்தைப் பிடித்துச் சுகமாக மர்த்தனமும் செய்யலாம். 12—18½.

பித்த மதாத்யய சிகித்ஸை :—பித்தம் உபரியாயுள்ள மதாத்யயத்தில் (1) சர்க்கரையினாலாகிய மத்யத்தை அதிகஜலம்சேர்த்து விளாவி, சிறிது தேனும் கலந்து உபயோகிக்கலாம். (2) மாதளம் பழம், பேரிச்சம்பழம், பிரப்பம்பழம், திராக்ஷை, ஈச்சம்பழம் இவற்றின் சாற்றோடும் அவ்வித மத்யத்தைப் பருகலாம். (3) அங்ஙனமே மாதுளஞ்சாறு முதலியதோடு பானகத்தையும், சர்க்கரை, மாவின் தெளிவு நீர் இவற்றைக் கூட்டி, நன்றாகக் குளிரச்செய்து உட்கொள்ளலாம். (4) மதுரத் திரவ்யவர்க்கத்தைச் சேர்ந்த வஸ்துக்களைக் கஷாயமிட்டு, அக்கஷாயங்களோடு மத்யத்தைக் கலந்து சிறிது தேனும் கூட்டி பானம் செய்யலாம். (5) முயல், வெள்ளாடு, வெண்தித்திரி யென்னும் பறவை இவற்றின் மாம்ஸ ரஸங்களோடும், சிறுகாராமணி, பயறு, நெல்லிக்கனி, புடல், மாதளை இவற்றின் இரஸங்களோடும், சம்பா அரிசி அன்னத்தையும் காரரிசி அன்னத்தையும் புஜிக்கலாம். (6) நாவறட்சியும் உடலழற்சியுமுள்ள மதாத்யயரோகியானவன் குளிர்ந்த ஜலத்தையாவது, அதிக கருப்பஞ்சாறு கலந்த மதுவையாவது, திராக்ஷையின் சாற்றையாவது பானம் செய்து இடம் விட்டுப் பெயர்ந்த கபபித்தங்களைக் கிளப்பி வாந்தி செய்துவிடவேண்டும். (7) பிறகு தர்ப்பணம் முதலிய ஸம்ஸர்கி என்கிற முறையும் மிகவும் அனுகூலமாம்; அவ்விதம் செய்ய மிச்சமுள்ள தோஷங்களைப் பக்குவம் செய்வதற்கான ஜாடராக்னி விருத்தியடையும். (8) பித்த மதாத்யயத்தில் காஸமும், இரத்தம் துப்புதலும், விலாப்பக்கங்கள், ஸ்தனங்கள் இவற்றில் நோவும், அழற்சியோடு நாவறட்சியும், இருதயத்திலும மார்பிலும் ஒருவாறு குமட்டலும் உண்டாகுமானால் சிந்திற்கொடி, பத்ராமுஸ்தை யென்கிற சிறு கோரைக்கிழங்கு இவற்றின் ஸ்வரஸத்தில் சுக்தத்தையும் சேர்த்து உட்கொள்ளலாம். (9) தித்திரி யென்னும் சிறு பக்ஷியின் இறைச்சியை உணவாகவும் கொடுப்பது நலம். (10) வாதமும் பித்தமும் அதிகரித்து மிகக் கடுமையான நாவறட்சி யுண்டாயிருக்குமாயின் தோஷங்களை ஒழுங்கான வழியில் கொண்டுவரக்கூடியதும், குளிர்ச்சி பொருந்தியதுமான திராக்ஷாரஸத்தைப் பானம் செய்யக் கொடுக்கலாம். (11) இது ஜீர்ணமான பிறகு இனிப்பும் புளிப்பும் கலந்த வெள்ளாட்டின் மாம்ஸரஸத்தோடு உணவுகளை யுண்ணலாம். (12) மதாத்யயத்தினால் நீர் வேட்கை யுண்டாகையில் தேஹத்திலுள்ள மேதஸ் என்னும் கொழுப்பைக் காப்பதற்காகச் சொற்ப அளவான மத்யத்தில் அதிக தண்ணீரை விளாவி அதைப் பருகலாம். (13) கோரைக் கிழங்கு, மாதளை, பொரி, நெல் ஊறிய ஜலம் இவற்றையாவது, (14) நரிப்பயறு, இடிகொள்வோர் இவற்

றின் கஷாயத்தையாவது, (15) பேய்ப்புடல், அல்லிக்கிழங்கு இவற்றின் கஷாயத்தையாவது, (16) இயற்கையிலேயே குளிர்ந்த தண்ணீரையாவது பருகலாம். (17) மதுபானத்தை மிதமிஞ்சி செய்வதால் தேஹத்திலுள்ள நிர்மலமான தாது க்ஷீணமடைய உடற்சூடு ஓங்கி யதிகரிக்க, எவன் தொண்டையும், உள் தவடைகளும், உதடுகளும் உலர்ந்து நாக்கை யிழுத்துக்கொண்டு துடித்து வருந்துகிறானோ அவனுக்கு இரவில் திறந்த வெளியிற் காற்றில் வைத்திருந்த குளிர்ந்த நீரைக் கொடுத்துப் பருகச்செய்யலாம். (18) இலந்தம்பழம், மாதளம்பழம், புளி, காடி, காடியின் தெளிவு நீர் இவ்வைந்தும் பஞ்சாம்லம் எனப்படும்; இப்பஞ்சாம்லத்தினால் வாயின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் பூச்சிடலாம்; இது உடனே நாவறட்சியைப் போக்கும். (19) மதாத்யயத்தினாலான அவ்வுஷ்ணமானது பித்தத்தினாலும் உஷ்ணத்தினாலும் இன்னும் அதிகரித்து சர்மத்தின்மீது விசேஷமாக அழற்சியையுண்டுபண்ணும்; இதில் மிகக் குளிர்ந்த வஸ்துக்களைக் கொண்டு சீதோபசாரத்தை நிறைவேற்றலாம். (20) அதனாலும் தாபம் அடங்காவிடில், ரோஹிணீ யென்கிற ஸிரையைக் கீறி இரக்த மோக்ஷணம் செய்யலாம். 19—32.

கப மதாத்யய சிகித்ஸை:—(1) கபம் மேலோங்கிய மதாத்யயத்தை வமனத்தினாலும் லங்கனத்தினாலும் பரிஹரிக்கவேண்டும். (2) சுக்கு, மல்லிகை, வெட்டிவேர், காஞ்சொறி இவற்றுள் ஏதேனும் ஒன்றின் கஷாயத்தை நன்கு குளிரச் செய்து குடிக்கலாம். (3) ஆமதோஷம் நீங்கி பசியுள்ளவனுக்கு ஏற்ற சாலத்தில் அதிகதேன்சேர்த்துச் சர்க்கரையினாலான மத்யத்தையாவது, நன்றாகப் பழகிய திராக்ஷாஸவத்தையாவது பருகக் கொடுக்கலாம். (4) ரூக்ஷமாகவும் தர்ப்பண குணமுள்ளவையுமான சரக்குகளோடு கூடியதும், ஓமம் சுக்கு இவை சேர்ந்ததுமான அரிஷ்டத்தையாவது சீதுவையாவது உட்கொள்ளச் செய்யலாம். (5) உஷ்ண வீர்யமும் கடுரஸமும் கலந்து, சிறிது நெய் சேர்த்து, மிகவும் திரவமாகப் பக்குவம் செய்யப்பெற்ற சொற்ப அளவான குளுத்தயூஷமென்னும் கொள்ளுக்குழம்போடு யவான்னத்தையும் கோதூமான்னத்தையும் புஜிக்கச் செய்யலாம். (6) புளிவஞ்சி, புளி, புடல், த்ரிகடு, மாதளை இவைகளைக் கூட்டி பக்குவம் செய்த உலர்ந்த முள்ளங்கியின் கஷாயத்தோடாவது, செம்மறியாட்டின் மாம்ஸரஸத்தோடாவது ஜாங்கல ஜந்துக்களின் மாம்ஸ ரஸத்தோடாவது போஜனம் செய்விக்கலாம். (7) சுக்கு, மிளகு, ஈரமான இஞ்சிச்சாறு இவைகளை மிகுதியாகக் கூட்டி, கொடி மாதளையின் சாறு முதலியவற்றால் அம்லமாகச் செய்து, ஏதேனும் தகுந்த ஸ்நேஹத்திற் சேர்த்துப் பொரித்து ஈரப்பசையற்றதாகச் செய்து, மூங்கிற்குருத்து - பெருங்களாக்காய் இவற்

னைடம். கரிவேப்பிலை முதலிய வாஸனையிலைகளையும், சுவை யதிகரிக்குமாறு அதிக அஷ்டாங்க லவணத்தையும் கூட்டி, பலவித முறைகளில் கடைந்து பக்குவம் செய்த மாம்ஸத்தை அவரவரது ஜாடராக்னியின் நிலைமைக்கேற்றவாறு புஜித்து, பழகிய மாதவம் என்கிற[1] மத்யத்தைப் பருகலாம். 34—40½.

அஷ்டாங்க லவணம் :—சர்க்கரை, ஸௌவர்ச்சல லவணம், ஜீரகம், புளி, புளிவஞ்சி இவை வகைக்கு ஒருபங்கும், இலவங்கப் பட்டை, ஏலம், மிளகு இவை வகைக்கு அரைப்பங்கும் சேர்த்து இடிக்கவும். அஷ்டாங்க லவணம் என்கிற இது கபாதிகமான மதாத்யயத்தில் ஸ்ரோதஸ்ஸுகளைச் சுத்தம் செய்யவும், ஜாடராக்னியை விருத்தி செய்யவும் ஏற்றது.—41, 42.

கபமதாத்யயத்தைத் தணியச்செய்யுமுபாயங்கள்:—ரூக்ஷமாகவும் உஷ்ணவீர்யமாகவுமுள்ள பூச்சுகளாலும், அக்குணமுள்ள நீர்களில் ஸ்நானம் செய்வதாலும், அத்தகைய போஜனங்களாலும், லங்கனத்தினாலும், சிற்றின்பத்திற் பற்றுள்ள ஸ்த்ரீகளோடு கூடுவதாலும், இரவிற் கண் விழிப்பதாலும் கபாதிகமான மதாத்யயம் சீக்கிரத்தில் தணிந்துவிடும்.—43, 43½.

ஸந்நிபாத மதாத்யய சிகித்ஸை :—தனித்தனியே ஒவ்வொரு தோஷமும் மேலோங்குவதாலாகும் மதாத்யயத்திற்கான சிகித்ஸைகள் கூறப்பட்டன. அச் சிகித்ஸைகளையே மற்றப் பத்துவிதமான ஸந்நிபாத மதாத்யயங்களிலும் அதற்கேற்றவாறு பகுத்தறிந்து நிறைவேற்றலாம்.[2]—44½.

எல்லா மதாத்யயங்களுக்கும் ஏற்ற ஔஷதம் :—இலவங்கப் பட்டை, சிறுநாகப்பூ, திப்பிலி, மிளகு, ஜீரகம், கொத்தமல்லி

---

1. தேனைக்கொண்டு செய்யப்பட்ட மத்யம் மாதவம் எனப்படும்.

2. இதற்குமுன் வாதாதிகமான மதாத்யயம், பித்தாதிகமான மதாத்யயம், கபாதிகமான மதாத்யயம் என்று கூறப்பட்டவைகளை யெல்லாம் வாதாதிகள் அதிகரித்த ஸந்நிபாத ஸம்பந்தமான மதவிகாரங்கள் என்றறியவும். பத்துவிதமான ஸந்நிபாத மதாத்யயங்களாவன :—(1) ஒரு தோஷம் அதிகமாகவும் இரண்டு தோஷங்கள் மத்யமமாகவும் பிரகோபித்த மதாத்யயம். (2) இரண்டு தோஷங்கள் அதிகரித்தும் ஒரு தோஷம் மத்யமாகவுமுள்ள மதாத்யயம். (3) ஒரு தோஷம் மத்யமமாகவும் இரண்டு தோஷங்கள் சொற்பமாகவும் பிரகோபித்த மதாத்யயம். (4) ஒரு தோஷம் மிகவும் பிரகோபித்து, இரண்டு தோஷங்கள் சொற்பமாகவும் பிரகோபித்தது. (5) இரண்டு தோஷங்கள் மிகவும் அதிகரித்து ஒன்று சொற்பமாயுள்ளது. (6) ஒரு தோஷம் சொற்பமாகவும் இரண்டு தோஷங்கள் மத்யமமாகவும் பிரகோபித்தது. (7) எல்லாத் தோஷங்களும் மிகவும் பிரகோபித்த நிலைமை. (8) எல்லாத் தோஷங்களும் மத்யமமாகப் பிரகோபித்தல். (9) எல்லாத் தோஷங்களும் சொற்பமாகப் பிரகோபித்தது. (10) ஒரு தோஷம் சொற்பமாகவும், ஒன்று மத்யமாகவும், மற்றொன்று மிக்க அதிகமாகவும் பிரகோபித்த மதாத்யயம்.

விதை, ஈச்சம்பழம், இலுப்பைப்பூ, ஏலக்காய், தேவதாரு இவற்றின் கஷாயத்தில் சர்க்கரையையும், விளாம்பழச்சாற்றையும் கூட்டி, கர்ப்பூர வாஸனையேற்றி பக்குவம் செய்யவும். இருதயத்திற்கு ஹிதமான இப்பானகம் எல்லா மதாத்யயங்களிலும் நலமானது; நற்சுவையும் அக்னிதீபனமும் உண்டுபண்ணும்.—45, 46½.

மதாத்யயத்தில் மனக்களிப்பு ஹிதமானது :—மத்யமானது மனதைக் கலக்காமலாவது, தேஹத்தைச் சீரழிக்காமலாவது வெறியுண்டுபண்ணுவதில்லை; ஆகவே மதாத்யயத்தில் மனதைக் களிப்பூட்டும் சிகித்ஸை அவசியமெனப்படுகின்றது.—47½.

மத்யத்தினால் க்ஷீணித்தவனுக்குப் பால் சிறந்த பானவஸ்து:- சோதன சிகித்ஸைகளும் சமன சிகித்ஸைகளும் செய்யப்பட்டும், மதாத்யயம் நிவ்ருத்தியாகாவிடில், மதுபானத்தினால் தேஹம் அழன்று, மேலோங்கிய வாத பித்தங்களோடு கூடிய அம் மனிதனுக்கு கபம் க்ஷீணித்து, பலஹீனமும் இலாகவமும் ஏற்பட்டிருக்கையில், கடுங்கோடையினால் வாடும் மரத்திற்கு மழைபோல, பால் மிகவும் உபயோகமானது. ஏனெனில் பால் மத்யத்திற்கு நேர் எதிரிடையான குணங்களைப்[1] பெற்றது; ஓஜோதாதுவினுடைய ஸகல குணங்களோடும் பாலின் குணங்கள் ஒத்திருக்கின்றன;[2] ஆகையால் மதுபானத்தினால் க்ஷீணித்திருப்பவனுடைய தேஹத்தில் க்ஷீணமாயுள்ள ஓஜோதாதுவைப் பால் துரிதமாகப் போஷிக்க வல்லது. 48—50½.

க்ஷீரப் பிரயோகத்தை நிறுத்துவதும் மதுவைச் சொற்பமாயுபயோகிப்பதும் :—பாலைப் பிரயோகித்து மதாத்யயரோகம் நிவ்ருத்தியான பின்பு, சரீரத்தில் வலிவும் உண்டாய்விடுமானால், க்ஷீரப் பிரயோகத்தை நிறுத்தலாம். விட்க்ஷயமென்கிற மலக்ஷயத்தினால்[3] உண்டாகும் கோளாறுகளும், த்வம்ஸகரோகத்தினாலுண்டாகும்[4] உபத்திரவங்களும் நேரிடாதபடி மதுவைச் சிறுகச் சிறுக உபயோகிக்கலாம்.—51, 52.

விட்க்ஷய - த்வம்ஸகங்களுக்குச் சிகித்ஸை :—விட்க்ஷயமும் த்வம்ஸகமும் உபத்திரவமாக உண்டானால், கிருதபானமும், க்ஷீர

1. மத்யத்தின் பத்து குணங்களைப்பற்றி முதற் பாகம் பார்க்க.

2. பாலுக்கும் ஓஜஸ்ஸுக்கு முள்ள பொதுவான பத்து குணங்கள்:- மதுரம், சீதம், மிருது, ஸ்நிக்த்தம், பஹலம், ச்லக்ஷ்ணம், பிச்சிலம், குரு, மந்தம், பிரஸந்நம் என்பனவாம்.

3 விட்க்ஷயத்தினால் மத்ய சரீரத்தையும் சிரஸ்ஸையும்பற்றியுண்டாகும் மதவிகாரங்கள் குறிக்கப்படுகின்றன.

4. த்வம்ஸகம்—மத்ய விகாரத்தினாலான பிணி. "கபம் வாயிலிருந்து ஊறுதல், தொண்டையில் வறட்சி, தொனிகளைச் செவியுற முடியாமை, சோம்பல், நித்ரை இவை த்வம்ஸகக் குறிகள்" என்று சாகர்.

பானமும், ப்ருஹ்மண வஸ்துக்களால் வஸ்தி செய்வதும் நன்மை செய்யும். அப்யங்கமும், நலங்குப் பொடி முதலியவற்றைப் பூசு வதும், ஸ்நாநமும், வாதஹரமான அன்ன பானங்களும் தகுந்த வையாம்.—53.

மதுவின் விசேஷ குணங்களும் இனிய மதுபான முறை களும்:—முறைப்படி மிதமாக மதுபானம் செய்பவனுக்கு மது வினல் வியாதி யுண்டாகாது; ஆகவே இன்பமளிப்பதற்கேற்ற மதுபான முறை பின்வருமாறு: ஸுரை யென்னும் எந்த மது வானது அச்வினீ தேவதைகளின் மஹத்தான தேஜஸ்ஸையும், ஸாரஸ்வதி ஸம்பந்தமான பலத்தையும், இந்திரனுடைய வீர்யத் தையும், விஷ்ணுவின் பிரபாவத்தையும் பெற்றுளதோ, எது மன்மதனுக்கு மோஹநாஸ்திரமாகவும், பலபத்ரனுக்கு முக்கிய மான புருஷார்த்தமாகவும் ஆகின்றதோ, யாகம் முதலிய வைதி கச் சடங்கில் யாதொன்று ஹோமம் செய்யப் படுகின்றதோ, ஸகல மூலிகைகளும் நிரம்பிய பாற்கடல் தேவாஸுரர்களால் கடையப்படுங்கால் ஸ்ரீதேவி சந்திரன் அமுதம் இவற்றோடு யாதொன்று ஸம்பவித்ததோ, மது - மாதவம் - மைரேயம் - சீது - கௌடம் - ஆஸவம் முதலிய அநேகவிதமான மத்ய ஸ்வ ரூபங்களாக மாற்றப்படினும் வெறியுண்டாக்கும் இயற்கைச் சக்தியினின்றும் யாதொன்று மாறுவதில்லையோ, விலாஸினிகள் எதைப் பருகி தமது அப்பெயரைப் பொருளுள்ளதாகச் செய்து கொள்கின்றனரோ, குலஸ்த்ரீயும் எதைப் பானம்செய்து தார்ஷ்ட் யம் மேலிட்டு மன்மத விகாரங்கொண்ட அங்கங்களால் முனிவ ரது மனதையும் இழுக்க வல்லவளாகின்றாளோ, கணவனிடம் பிரணயகோபமுள்ள பெண்மணி எதைப் பருகி நீரலைகளைப்போல் வளைந்தசையும் தன் புருவ நெரிப்புகளால் விரட்டி மனக்கலக்கத் தைப் போக்கி இருவர்மனதையும் ஒரு மனதைப்போலாக்கி மன தைப் பறிக்கின்றாளோ, கூட்டங் கூட்டமான அப்ஸர ஸ்த்ரீகள் தமது விருப்பத்திற்கேற்ற வீர புருஷர்களுக்கு மாலையிட்டு ஆனந்தபரவசர்களாவதற்கு ஏற்ற போர்க்களத்தில் போர்வீரர்கள் யாதொரு மதுவைப் பருகிப் பிராணனைத் துரும்புபோலக் கருதி மாய்த்துக் கொள்கின்றனரோ, மது-மைரேயாதி அநேகவகையான ஸ்வரூபங்களைப் பெற்ற யாதொரு மத்யத்தை நீடித்த காலமாகப் பன்முறை பானம் செய்தும் மீண்டும் பார்க்கும்போதெல்லாம் அப்பொழுதே புதிதாகக் காண்பதுபோல் மனிதர் எதை உப யோகிக்கின்றனரோ, யாதொன்றைக் கண்டால் மனிதர் மனத் துயரத்தினாலாவது, திகிலாலாவது, மனக் கலவரத்தினாலாவது, பயத்தினாலாவது பீடிக்கப்படுவதில்லையோ, விருந்துண்பது முத லிய கோஷ்டிகளும், பெரிய உத்ஸவச் சடங்குகளும், தோட்டங் களிற் சென்று களிகூறுவதும் யாதொரு மத்யமின்றி நன்கு

சோபிப்பதில்லையோ, வழக்கமாய் உபயோகிப்பவன் யாதொரு ஸுரை இல்லாமற்போனால் எண்ணியெண்ணி ஏக்கங்கொண்டு மிகவும் வருந்தவேண்டி நேரிடுகின்றதோ, தெளிவில்லாமல் அசுத்தமாயிருந்தும் யாதொன்று மனதுக்குத் திருப்தியைத் தருகின்றதோ, தெளிந்து மிகச் சுத்தமான யாதொரு மத்யம் ஸ்வர்க்கலோக ஸுகத்தை யுண்டுபண்ணுமோ, எதைப் பானம் செய்தால் அச்சமயம் இந்திரபதவியும் அற்பகமாகக் கருதப்படுமோ, எதனுடைய இரஸானுபவமானது இவ்வித ஸுக முண்டுபண்ணுமென்று குறிப்பிட்டுணர முடியாமல் சுகானுபவத்தால் மாத்திரம் அறியக்கூடியதா யிருக்கின்றதோ, இங்ஙனம் எது வெவ்வேறு நிலைமைகளிலும் மனிதனுக்கினிய மனுட்டியை ஒத்திருக்கின்றதோ, எது தன்னிடம் விருப்பங்கொண்டவனுக்கு மேன்மேலும் அதிகப்பிரீதியை யுண்டுபண்ணுமோ, தேவர்கள் - அஸுரர்கள் - கந்தர்வர்-யக்ஷாள்-இராக்ஷஸர்கள்-மானிடர் என்னும் எவரும் பானகோஷ்டியை நடத்துகையில் எதைப் பிரீதியென்றும், மேலான இன்பமென்றும், இனியவாக்கென்றும், புஷ்டிதரும் அரும்பொருளென்றும் போற்றுகின்றனரோ அவ்விதமான ஸுரையை முறைதவறாமற் பருகவேண்டும். மேதஸ் என்கிற கொழுப்பு அதிகரிப்பதாலான ஸ்த்தூலரோகமும், வாத கபங்களாலான வியாதிகளும் மதுபானம் முறைப்படி செய்யப்பட்டால் மனிதருக்கு உண்டாகமாட்டா; முறைப்படி யுபயோகிக்கப்படாமற் போனால் அக்கொடிய வியாதிகள் நிவ்ருத்தியாகமாட்டா. பானம் செய்யக்கூடாத நிலைமையும் சரீரத்திற்குண்டாவதுண்டு; ஆனால் அந்நிலைமையிலும் பலவகையான ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த மிகப் பழகிய மத்யம் உபயோகிக்கக் கூடியதாம். ஆநூபமாம்ஸமாவது ஜாங்கலமாம்ஸமாவது முறைப்படி பக்குவம் செய்யப்பட்டிருந்த போதிலும், அத்துடன் மத்யமும் அனுபானமாக எடுத்துக்கொள்ளப்படாமற்போனால் அம்மாம்ஸம் நன்கு ஜீர்ணமாவது எங்ஙனம்? மிகக் கடுமையான வாதரோகத்தைப் போக்கும் குணமுடைய வெள்ளைப்பூண்டை மது-மாம்ஸங்களின்றி யுபயோகித்தால் அதனால் ஏதும் குணமுண்டாகாது. சரீரத்தில் மறைந்துள்ள சல்யங்களை வெளிப்படுத்துகையிலும், சஸ்திர சிகித்ஸைகளைச் செய்கையிலும், அக்னியினால் சுட்டுச் செய்யப்படும் சிகித்ஸையிலும் வைத்தியரால் உண்டாகும் கடுந்துன்பத்தையும் மதுபானத்தினால் மனிதன் ஸஹித்துக்கொண்டு ஸுகமாயிருப்பான். மத்யமானது ஜாடராக்னியைத் தூண்டி விருத்தி செய்கிறது; நற்சுவையைத் தருகின்றது; மனத்துயரத்தையும் சிரமத்தையும் போக்கி இன்பமளிக்க வல்லது; ஆரோக்யத்தையும் பலத்தையும் புஷ்டியையும் தரக்கூடிய சிறந்த வஸ்து மத்யத்தினும் வேறொன்றில்லை. ஆகவே பகுத்தறிவுள்ள மனிதன் நிலைமையறிந்து, உயிருக்குக் கேடு நேரிடா

வண்ணம் தனக்கும் தன்னைச் சேர்ந்தவருக்கும் அனுகூலமான தும், சிறந்த தர்மஸாதனமுமான மத்யத்தை விதிப்படி யுபயோகிக்கலாம். 54—75.

இன்பமான மதுபானரஸானுபவம் :—ஸ்நானம் செய்து, தேவதையையும் அந்தணரையும், பரமாசிரியர்களையும் பணிந்துவிட்டு, பணிவிடை செய்யும் அனைவருக்கும் அவரவருக்கேற்ற கடமைகளை நிறைவேற்றுமாறு நியமங்களைச் செய்துவிட்டு, போஜனசாலைக்கு அருகில் அமைக்கப் பெற்றதும் - நறுமணங் கமழும் தண்ணீரூற்றிக் குளிரச் செய்யப்பெற்றதுமான பான பூமிக்குச் சென்று, மிருதுவான மேல்விரிப்பு முதலியவற்றுடன் மனோஹரமான சயனத்தின்மீது அமர்ந்து, பணியாளர்களாலும், மித்ரர்களாலும், மங்கையர்களாலும் சூழப்பட்டவனாய், கட்டியக்காரர்களாலும் சாரணர் கூட்டங்களாலும் வர்ணிக்கப் படும் லோகோத்தரமான தனது கீர்த்தியைச் செவியுற்றவனாய், விலாஸ விசேஷங்களால் விளங்குவதும், விவரித்துரைக்க வியலாது இன்ப மளிக்கும் தூர்யவாத்யங்களாலும் அழகாகக் குலுங்கி யொலிக்கும் சதங்கை நிரம்பிய அரைநூண்மாலைகளாலும் - விளையாடுவதற் கென்று வளர்க்கப்படும் பறவைகளின் இனிய குரல்களாலும் பின் தொடர்ந்து பாடப்பெற்றதும், நடனத்துடன் கூடியதுமான வேசி மங்கையரின் ஸங்கீதத்தைக் கேட்டுக்கொண்டு, பின் கூறப் படுமாறு மதுபானம் செய்யக்கடவன்: மிகவும் கனமான ஸ்தனங்களாலும், கடிப்ருஷ்டங்களாலும், மந்தமாய்-பிரபுவின் தர்சனத் தினால் வியாகுலமாக நடந்து வருபவர்களும், மிரண்டமான்களு டைய கண்களைப்போல் அழகிய பார்வையுடையவர்களும், யௌ வனத்தினாலும் மதுபானத்தினாலும் மதங்கொண்டு விலாஸமான நடையுடைகளைப் பெற்றவர்களும், ஆகவே முனிவர் மனதையும் கலக்கக்கூடியவர்களாகவு முள்ள பெண்மணிகளால் ஜலத்தில் நனைத்த விசித்திரமான பட்டாடைகளைக் கொண்டு மறைத்த மாணிக்கச் சொம்புகளிலும் பொற்கலயங்களிலும் ஒருமிக்க இங்கு மங்குமாய் ஆட்டிப் பரிமாறப்படும் அம்மதுவை ஆனந்தத்துடன் அளவறிந்து அருந்தவேண்டும். மிகக் குளிர்ந்த சிற்றாலவட்டக் காற்றாலும், தாமரையிலைக் காற்றாலும் நன்கு சீதளமாக்கிய மத் யத்தைக் கண்ணுறுவதாலேயே மன்மதனுக்கு வசமாய்விட நேரிடுமென்றால், அதைப் பருகினால் கேட்கவும் வேண்டுமோ? மாம்பழச்சாறு, கர்ப்பூரம், கஸ்தூரி இவற்றால் நறுமண மேற்றப் பட்டதும், நன்கு மலர்ந்து பிரகாசிக்கும் மல்லிகைப்பூவுடன் கூடி யதும், படிகமணி மயமான சிப்பியில் ஊற்றப்பட்டு மெல்லிதாக ஆடும் அலைகளோடு கூடியதும், ஆகவே மன்மதனைப்போல் மன தைத் தத்தளிக்கச் செய்யு மியல்புள்ள உருவத்தைப் பெற்றது மான மத்யத்தைப் பருகியதற்குப் பின்பு இருதயத்திற்கு பலங்

தாக்கூடியதான தாளிஸாதி சூர்ணத்தையாவது, ஏலாதி சூர்ணத்தையாவது[1], வயஸ்த்தாபந ரஸாயனத்தையாவது[2] உட்கொள்ளவும்; மதுபானத்திற் பிரியமுள்ள தேவதைகளின் பொருட்டு நன்கு மெழுகிச் சுத்தம்செய்த பூமியின்மீது சிறிது மத்யத்தையும் பிறகு தண்ணீரையும் நிவேதனம் செய்யவும்; பிறகு நல்ல மனோதிடமுள்ளவனாய், ஞாபகசக்தியைக் கைவிடாதவனாய், உசிதமான உபசாரங்களைப்பெற்று, அவசியமான எல்லாச் சடங்குகளையும் நிறைவேற்றிக் கொண்டவனாய், மலர்ந்த சருநெய்தல் மலர்களைச் சீர்மையினால் வென்ற மனைாட்டியின் நேத்திரங்கள் பிரதிபலித்து அதனாலான விசேஷ காந்தியையுடையதும், தனது ஸௌகந்தத்தினால் இழுக்கப்பெற்ற வண்டுகளால் சூழப்பட்டதும், ஆகவே மனதுக்கினிய மனைவியின் முகத்தைப் போல மனோஹரமாயுள்ளதுமான மத்யத்தை அளவிற் குறையாமலும் அதிகப் படாமலும் பருகுவானாக. இப்படி இரண்டு சஷகம்[3] மத்யத்தைப் பானம் செய்து, தன்னுடன் இருப்பவர்கள் அனைவருக்கும் ஏற்ற மரியாதைகளைச் செய்துவிட்டு, அப்பால் போஜனசாலைக்குச் சென்று, அங்கு வைத்திய ச்ரேஷ்டனுடைய முன்னிலையில் மாம்ஸம், பணியாரங்கள், நெய், இஞ்சி, மற்றுமுள்ள பசுமையான காய்கறி கீரைகள், ஸௌவர்ச்சலலவணம் முதலியவைகளோடு மீண்டும் இரண்டு மூன்று சிறு ஸரகங்கள்[4] அளவான மதுவை இரவில் மனைவியைத் திருப்தியுறச் செய்வதன்பொருட்டுப் பருகலாம். ஏகாந்தத்தில் இன்பமுற்ற இல்லாளை மடியிற் போட்டு மார்பை திருடமாகக் கிரஹிப்பதால் உடலில் மயிர்ச்சிலிர்க்கையுண்டாக, சரீர மெங்கும் வியர்க்க, ஸ்தனங்கள் நடுங்க, அவளுக்குப் பரபரப்புடன் இரண்டொரு ஸரகம் மதுவைப் பருகக் கொடுத்து, இன்பமனுபவித்து, தன் ஜன்மத்தைப் பயன் பெற்றதாகச்செய்து கொள்ளாமற்போனால், பெரும்பாலும் க்லேசம் நிரம்பிய ஸாம்ஸாரிகக்ருத்யங்களைச் செய்து கஷ்டமனுபவிப்பதெதற்கு? பெண்மணியினுடைய வாயின் பரிசத்தினால் முன்னினும் அதிக பரிமளம் பொருந்தியதும், உருகி ஆஸவரூபத்தைப் பெற்றுள்ள பத்மராக மணியைப்போல் தோற்றுவதுமான ஸரகத்திலுள்ள மதுவை ஸம்போகத்தினால் வாடிய தேஹமுள்ளவள் சிறிதளவு பருகினாலும் மதம் உண்டாய் விடுவதோடு, மன்மத விகாரம் மேலிட்டு ஓஜஸ்ஸும் க்ஷயித்துவிடும்; ஆகவே

1. தாளிஸாதி சூர்ணம், ஏலாதி சூர்ணம் இவ்விரு முறைகளும் இராஜயக்ஷ்ம சிகித்ஸையிற் கூறப்பட்டிருக்கின்றன.

2. வயஸ்த்தாபந ரஸாயனம் என்கிற ஔஷதம் உத்தர ஸத்தாநத்தில் இரஸாயனவிதி அத்தியாயத்திற் கூறப்படுவது.

3. சஷகம்-பானபாத்திரம்; கோப்பை போன்றது.

4. ஸரகம் — ஒரு வாய் நிரம்ப உட்கொள்ளக்கூடிய மது முதலிய திரவ பதார்த்தத்தின் அளவுகொண்ட பாத்திரம்.

அவ்விதம் ஓஜஸ் க்ஷீணிப்பதைப் பரிஹரிப்பதற்காகப் படுத்து நித்திரையுற வேண்டும். இங்ஙனம் யோகமறிந்து மதுவைப் பானம் செய்பவன் தர்மார்த்த காமங்களென்கிற த்ரிவர்க்கத்தி லிருந்து நழுவியவனுகமாட்டான்; ஸாரமற்றதெனக் கருதப்படும் ஸம்ஸாரத்திற் கிடைக்கக்கூடிய மிகவும் மேலான இன்பத்தைப் பெற்றவனுவான்; ஐச்வர்யானுபவம் செய்வதென்றால் இதுவே யாம்; இம்மதுபான ஸுகம்தேவர்களாலும் விரும்பக்கூடியதாம். இவ்வாறு இன்பமனுபவிக்காமலே திரவ்யத்திற்கு ஆபத்து நேரிடு மானல், அப்பொழுது அப்பொருள் பச்சாத்தாபமாகிற அக் னிக்கு விறகுபோல் ஆகின்றது; ஸுகானுபவம் செய்யாதவனை "என்ன போகவான்!" என்று ஏளனமாகக் கூறி, "புதையலைக் காக்கும் பூதம்போல் செல்வத்தை அனுபவிக்காமலே காப்பதற் கென்று இவ்வற்ப பிரபுவும் பிரம்மதேவனால் படைக்கப்பட் டானே!" என்று இரஸிகர் நிந்திப்பார்கள்; ஆகையினால் விஷயங் களில் ஆவல்கொண்டு தாவியோடு மியல்புள்ளவையான புலன் களுக்குச் சுதந்திரமளிக்காமல் அவற்றைக் கட்டிப் பிடித்தவாறு முறை தவறாமல் மதுவைப் பருகுவது எப்பொழுதும் ஆரோக் கியத்திற்கு அனுகூலமாகும். இந்த மதுபான விதியானது செல் வம் படைத்த பிரபுக்களுக்கேயாம். எவர்கள் இனி திரவ்யம் செழிக்கக்கூடிய நிலைமையில் இருக்கின்றனரோ அவர்கள் தமது யோக்யதைக்கு ஏற்றவாறு ஹிதமான மத்யத்தை மிதமாகப் பானம் செய்யலாம். 76—94.

மிதமான மது பானத்திற்கான அளவு :—மதுவை எவ்வளவு பானம்செய்தால் திருஷ்டிகள சுழலமிடாது தலைச்சுற்றலும் உண் டாகாதோ, மனதும் கலக்கமுறாமல் ஒழுங்கான நிலைமையில் நிற்குமோ அவ்வளவு மாத்திரம் அருந்திவிட்டு, மனதை அடக்கி யாண்டு விவேகத்துடன் நடந்துகொள்ள விரும்புபவன் அவ்வள வோடு மதுபானத்தை எப்பொழுதும் நிறுத்திக்கொள்ள வேண் டும்.—95.

வாதாதிதோஷங்கள் மேலிட்டவருக்கு ஏற்ற மதுபான முறை கள் :—(1) வாத தோஷம் மேலிட்ட மனிதன் அப்யங்கம் செய் துகொண்டு, நலங்குப் பொடிகளைப் பூசி ஸ்நானம் செய்து, தூபங்களால் சரீரத்தை ஸம்ஸ்கரித்துக் கொண்டு, சந்தனம் முதலிய லேபனங்களை புபயோகித்து, ஸ்நிக்தமாகவும் உஷ்ண மாகவுமுள்ள உணவுகளைப் புஜித்து, அப்பால் மதுவைப் பானம் செய்யலாம். (2) பித்தம் மேலிட்ட சரீரமுள்ளவன் பற்பல சீதோபசாரங்களாலும், மதுரமாகவும் சீதவீர்யமாகவும் ஸ்நிக்த மாகவு முள்ள உணவுகளாலும் உபசரிக்கப்பட்டவனுய் மத்யத் தைப் பானம் செய்துவர தீங்கொன்றும் நேரிடாது. (3) கபம் மேலிட்டிருக்கும் மனிதன் உஷ்ணவீர்யமும் உஷ்ண ஸ்பர்சமு முள்ள வஸ்துக்களாலும் உபசரிக்கப்பட்டவனுய், யவதானியத்தி

ஞலும் கோதுமையினுலும் ஆகிய உணவுகளைப்புஜித்து ஜாங்கலமாம்ஸங்களோடும் மிளகுப்பொடியோடும் மதுவைப் பருகலாம். --96, 97.

வாதாதி பிரக்ருதிகளுக்கேற்ற மத்யங்கள் :—(1) அவற்றுள் வாதப்பிரக்ருதியான மனிதனுக்கு மாப் பண்டங்களிலிருந்தும் வெல்லத்திலிருந்தும் ஸந்தானம் செய்யப்பட்ட மதுவும், பித்தப்பிரக்ருதிக்கு ஜலம்விட்டு விளாவிய மதுவும், கபப்பிரக்ருதிக்கு திராக்ஷையிலிருந்தும், வேம்பிலிருந்தும், தேனிலிருந்தும் ஸந்தானம் செய்யப்பட்ட மதுவும், ஹிதமானதாம். (2) கபப்பிரக்ருதியான மனிதன் மத்யத்தைப் போஜனத்திற்கு முந்தியும், பித்தப்பிரக்ருதியானவன் போஜனத்திற்குப் பிந்தியும், வாதப்பிரக்ருதி போஜனத்திற்கு இடையிலும், எல்லாத் தோஷங்களையும் ஸமநிலைமையிற் பெற்றவன் இஷ்டப்படி எந்த நேரத்திலும் மதுபானம் செய்யலாம்.—98, 99½.

மதுபானத்தினுலுண்டாகும் வெறிகளுக்குப் பரிஹாரங்கள் :—மதுபானத்தினுலுண்டாகும் வெறிகளிலும் மூர்ச்சைகளிலும் பெரும்பாலும் வாத பித்தஹரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும். எல்லாவிதமான மதுபானவெறிகளிலும் விசேஷமாகப் பித்தமே அதிகரித்திருப்பதைக் காணலாம். இதில் குளிர்ச்சியான திரவங்களைப் பூசுவதும், இரத்தினங்களைப் பூணுவதும், சீதள வஸ்துக்களை மேலே தெளிப்பதும், சிற்றுலவட்டத்தினுல் வீசுவதும் ஹிதமாம் ; மேலும் சர்க்கரை, திராக்ஷை, கரும்பு, பேரீச்சம்பழம், குமிழம்பழம் இவற்றின் சாறுகள், மதுரத்திரவ்ய வர்க்கத்தினுல் பக்குவம் செய்யப்பட்ட பால், மாதளம்பழச்சாறு கலந்தமாம்ஸரஸங்கள், யூஷங்கள், காரரிசி, செஞ்செம்பா அரிசி, வாற்கோதுமை, ஜீவநீயக்ருதம், கல்யாணகக்ருதம்,[1] மஹாதிக்தகக்ருதம்,[2] ஷட்பலக்ருதம்,[3] சித்திரமூலம் சேர்த்துக் காய்ச்சிய பால் இவற்றை உபயோகிக்சலாம் ; இரஸாயன முறைப்படி திப்பிலியையாவது, சிலாஜதுவையாவது, நெய், தேன், சர்க்கரை இவற்றுடன் கூட்டிய த்ரிபலையையாவது பிரயோகிக்கலாம். மதுபானத்தினுலுண்டாகும் வெறி வெளிப்படையாகக் கண்டால் வாயையும் நாசியையும் கெட்டியாகச் சிறிது நேரம் மூடிவிடுவது நலம் ; மூலைப்பாலையாவது பருகச் செய்யலாம் ; அப்பாலே நஸ்யமாகவாவது பிரயோகிக்கலாம் ; தாமரைக்கொடி, தாமரைக்கிழங்கு இவற்றைக் கல்கமாக்கி, திப்பிலியையும், கடுக்காயையும் கூட்டி, தேன் கலந்தாவது உட்கொள்ளலாம் ; காஞ்சொறிவேரையாவது, கோரைக்கிழங்கையாவது பொடித்துத் தேனுடன் உபயோகிக்க

---

1. கல்யாணகக்ருதம் - உத்த்ரஸ்த்தாநத்தில் உந்மாதப்பிரதிஷேதாத்தியாயத்திற் கூறப்படுவது.

2. மஹாதிக்தகக்ருதம்-குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.

3. ஷட்பலக்ருதம் - உதரசிகித்ஸையிற் கூறப்படுவது.

லாம்; மிளகு, இலந்தங்கொட்டையின் பருப்பு, வெட்டிவேர், நாககேஸரம் இவற்றைப் பொடிசெய்து குளிர்ந்த ஜலத்தோடாவது உட்கொள்ளலாம்; நெல்லிக்கனிச் சாற்றிலாவது, கடுக்காய்க் கஷாயத்திலாவது பக்குவம் செய்த க்ருதத்தையாவது பானம் செய்யலாம். இவ்வெறியில் எந்தெந்த தோஷம் அதிகரித்திருக்கின்றதோ அந்தந்த தோஷத்திற்கு உபசாந்தியாகக் கூறப்பட்டுள்ள சிகித்ஸைகளையும் [1] செய்யலாம். பஞ்சகர்மங்களையும் பிரயோகிக்கலாம்; இரத்தமோக்ஷணமும் செய்யலாம்; விவேகபூர்வகமான விசேஷ ஞானத்தில் புத்தியைச் செலுத்துவதும், விஷயேச்சைகளில் மனம் செல்லாதபடி அடக்குவதும் நலம். 101-108.

கடுமையான மதுபான வெறிகளுக்குப் பரிஹார முறைகள்:—மதுபானத்தினாலான வெறி அதிகரிக்கையிலும், பலமான மூர்ச்சைகளிலும், ஸந்நியாஸ மென்கிற[2] வியாதிக்கு விதிக்கப்படும் தீக்ஷ்ண நஸ்யம் முதலியதைப் பிரயோகிக்கலாம்; விஷத்தினுலுண்டாகும் வெறிகளிலும் மூர்ச்சைகளிலும் விஷஹாரமான சிகித்ஸையைச் செய்யவும். ஸந்நியாஸ விகாரங்களில் தாமதமின்றி தீக்ஷ்ணமான நஸ்யத்தையும், அஞ்ஜநத்தையும் பிரயோகிக்க வேண்டும்; நாசியில் தூமத்தை ஊதிச் செலுத்தலாம்; நகங்களின் இடுக்குகளில் ஊசிகளால் குத்தலாம்; மயிர்களை இழுத்துப் பெயர்க்கலாம்; அக்கினியினுல் சூடிடலாம்; பற்களால் கடிக்கலாம்; தேளைக் கொட்டவைக்கலாம்; வாயில் காரமாகவும் புளிப்பாகவுமுள்ள திரவங்களை ஊற்றலாம்; பூனைக்காலியிலைகளை உடம்பில் தேய்க்கலாம்; நினைவு வந்து எழுந்த பிறகு வெள்ளுள்ளியின் சாற்றைக் குடிக்கச் செய்யலாம்; கொம்மட்டி மாதளையின் உட்புறச் சோற்றில் காரமும் உப்பும் கலந்து உண்ணச்செய்யலாம்; ஸ்ரோதஸ்ஸுகள் சுத்தியாவதற்காக இலகுவான அன்னத்தைப் புஜிப்பிக்கலாம். வியப்புறச் செய்வதாலும், மனோஹாரமான விஷயங்களை நினைப்பூட்டுவதாலும், இன்பமான விஷயங்களைக் கேட்பதாலும், பார்ப்பதாலும், இனிய ஸங்கீதங்களையும் வாத்தியம் முதலியவற்றின் தொனிகளையும் செவியுறுவதாலும், வியாயாமங்களைச் செய்வதாலும், ஸ்ரம்ஸநம்-லேகநம்[3] என்கிற குணங்களையுடைய தூமங்களை முகரச் செய்வதாலும், இரக்தமோக்ஷணங்களாலும் மீண்டும் மூர்ச்சை முதலியவை தொடாரதபடி அடிக்கடி உபசாரம் செய்யவேண்டும். மனக்கோளாறு முதலியது நேரிடாதபடி மனோநிலைமையையும் பரிபாலித்து வரவேண்டும். 110—115.

1. ஸூத்திர ஸ்த்தானத்தில் தோஷோபக்ரமணீயாத்தியாயத்தில் ஒவ்வொரு தோஷத்திற்கும் குறிக்கப்பட்டுள்ள சிகித்ஸாக்கிரமங்கள்.

2 ஸந்நியாஸம் - முதற்புத்தகம் பார்க்க.

3. ஸ்ரம்ஸநம் என்றுல் மல தோஷாதிகளை உள்ளிருந்து நெகிழச்செய்வது. லேகநம் என்றுல் தோஷத்தைத் தூண்டிக் கிளப்புவது.

## எட்டாம் அத்தியாயம்.

### அர்சஸ் சிகித்ஸை.

இனி அர்சஸ் சிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

அர்சஸ்ஸில் சஸ்திர சிகித்ஸை செய்யும் வகை:—ஸாதாரண காலத்தில்,[2] ஆகாயம் மேகத்தினால் மூடப்படாமலிருக்கையில் அதிக பலஹீனப்படாத அர்சோரோகிக்குக் குடல்களைச் சுத்தம் செய்து, இலகுவாகவும், சொற்ப அளவாகவும், மலத்தை நெகிழச் செய்யுந் தன்மையுள்ளதுமான உணவைப் புஜிக்கச் செய்து, பரிசுத்த தேஹத்துடன் ஸ்வஸ்திவாசனம் செய்து கொண்டு, அப்பால் மலமூத்திரங்களை விஸர்ஜனம் பண்ணி, வேறு வியாதி இல்லையா என்பதைக் கவனித்து, பிணியாளியைப் பலகையிலாவது, இதர மனிதனுடைய மடியிலாவது படுக்கச் செய்யவும்; அப்பொழுது முன்னுடல் நிமிர்ந்தாற்போல் அமர்ந்திருக்கவும், குதபாகம் சூரியனுக்கு எதிராக ஒழுங்காய் நிற்குமாறும் படுத்திருக்கவேண்டும்; இடுப்புப் பிரதேசம் சிறிது உயர்ந்திருக்க வேண்டும். பிறகு பிணியாளியை அசையாமல் ருஜுவாக இருக்கச் செய்து, தொடைகளை மடக்கி அத் தொடைகளுக்கும் கழுத்துக்குமாக பந்தநவஸ்திரத்தினால் பிணைத்துக் கட்டி, பரிசாரகர்களைக் கொண்டு பிணியாளியைத் தாங்கிக் கொள்ளச் சொல்லி, நெய்யைக் குதத்தில் தடவி, பிறகு யந்திரத்தையும்[3] நெய்யிலிட்டு, அதை நேர்மையாகக் குதத்தினுள் மெள்ள மெள்ள வாட்டமாகச் செலுத்தவேண்டும்: அப்பால் பிணியாளி முக்கி அழுத்துவதால் அர்சஸ் என்னும் மூலமுளை யந்திரத்தில் சிக்கிக்கொள்ள, அதை உற்று நோக்கி, சீலையினால் மறைக்கப் பெற்ற முனையையுடைய சலாகையினால் வைத்தியன் மூலமுளையைப் பிடித்துக்கொண்டு, முறைப்படி ஆர்த்ரார்சஸ்ஸை க்ஷாரத்தினாலும், சுஷ்கார்சஸ்ஸை[4] க்ஷாரத்தினாலாகிலும் அக்கினியினாலாகிலும் சுடலாம்; அர்சஸ் பெரிதாயிருந்தால் பிணியாளியும் பலசாலியாயிருந்தால், அர்சஸ்ஸைச் சஸ்திரத்தினால் அறுத்து, அப்பால் க்ஷாரத்தினாலாவது அக்கினியினாலாவது சுட்டுவிடலாம். பிறகு ரோகியின் பந்தநங்களை அவிழ்த்துவிட்டு, குதத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் ஸ்நேஹங்களை லேபனம் செய்து, அவ்வித ஸ்நேஹம் நிரம்பிய நீண்ட தொட்டியில் படுக்கச் செய்யவும். அப்பால் அவனை அதிக காற்றோட்டமில்லாத அறையில் ஸுகமாகச் சயனத்தில் அமர்

1. அர்சஸ்—மூல வியாதி.
2. ஸாதாரண காலம்—முதற் புத்தகம் பார்க்க.
3. யந்திரம்—அர்சோயந்திரம். முதற் பாகம் பார்க்க.
4. ஆர்த்ரார்சஸ், சுஷ்கார்சஸ்—முதற் பாகம் பார்க்க.

த்தி, ஏற்ற பத்தியக்கிரமங்களைக் கொண்டு உபசாரம் செய்ய வைத்தியன் கட்டளையிடவேண்டும். முளைகளை யெல்லாம் வாரத்திற்கு ஒன்ருக இங்ஙனம் விலக்கி வியாதிக்ரஸ்தனை யுபசரித்து வரவேண்டும். அநேகம் மூல முளைகளிருந்தால், அவற்றில் உட்புறத்திலிருப்பவைகளில் வலது பாரிசத்து முளையை முதலிலும், பிறகு இடதுபாரிசத்து முளையையும், அதன் பிறகு முன்புறத்தி லுள்ளதையும் கிரமமாக விலக்கி சிகித்ஸை செய்யவும். 1—9.

அர்சஸ் நன்கு சுட்டு விலக்கப்பட்டதன் குறிகள்:—அர்சஸ் நன்கு சுடப்பட்டுப் போனல் அபாநவாயு ஸுகமாய் வெளிப்படும்; உணவில் விருப்பமும், ஜாடராக்னி விருத்தியும், தேஹத்தில் மற்ற ஆரோக்கியக் குறிகளும் ஏற்பட்டு, தேஹத்தில் இயற்கை நிறமும் வன்மையும் உண்டாகும்.—10.

தாஹாதிகளால் மல மூத்திரங்கள் தடுக்கப்படுவதற்குப் பரிஹாரம்:—(1) இதன் பிறகு சிலருக்கு வஸ்தியென்னும் மூத்திரப்பையில் வலியுண்டாவதுண்டு; அப்பொழுது வெள்ளைச் சாறடை, கோஷ்டம், வாஸனைப்புல், ஜடாமாம்ஸி, லோஹம், தேவதாரு இவற்றை மிகவும் வழுமூண்ட கல்கமாகச் செய்து நாபிக்கு அடியில் லேபநம் செய்யலாம். (2) மல-மூத்திரங்கள் அடைப்பட்டுத் தடையுண்டானல் மாவலிங்கம்பட்டை, பேய்ச் சுரையின் விதை, ஆமணக்கிலை, நெரிஞ்சில், சாறடை, கருஞ் ஜீரகம், வாஸனைப்புல் இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, சிறிது ஸ்நேஹம் கலந்து உஷ்ணமாகவே நாபிக்குக் கீழேயும், இடுப்பைச் சுற்றியும் ஊற்றலாம்; அல்லது அக்கஷாயத்தில் ஸ்நானம் செய்யலாம். (3) அல்லது வாதஹரமான சரக்குகளால் பக்குவம் செய்த பாலையாவது தைலத்தையாவது அவ்விதம் பிரயோகிக்கலாம். (4) மலத்தை உடைத்து வெளித்தள்ளுங் குணமுடைய உணவைப் புஜிக்கலாம். (5) வாதஹரமாகவும் தீபநமாகவுமுள்ள ஸ்நேஹங்களையும் உபயோகிக்கலாம். 11—13.

வீக்கங்கொண்ட அர்சஸ்ஸுகளுக்கு ஸ்வேத சிகித்ஸை:—(1) தாஹசிகித்ஸைக்குத் தகாத மனிதனுக்கு கப-வாதங்களால் உண்டானவையும், திமிர்-தினவு-குத்தல்-வலி-வீக்கம் இவைகளோடு கூடியவையும், வெளியில் பிதுங்கி வந்திருப்பவையுமான மூல முளைகளில் ஸ்நேஹத்தைத் தடவி, பில்வவேர், சித்திரமூலம், யவக்ஷாரம், கோஷ்டம் இவற்ருல் பக்குவமான தைலத்தையாவது, ஸர்ப்பம், பூனை, ஒட்டகம், பன்றி இவற்றின் கொழுப்பையாவது ஸேகம் செய்யலாம். (2) பிறகு பிண்டஸ்வேதமுறையிலாவது, திரவஸ்வேதமுறையிலாவது அவ்விடத்தில் உஷ்ணமாக ஒற்றடம் கொடுக்கலாம்; மாப்பண்டங்களாலாவது, பிண்டம்போல் செய்த மற்ற ஸ்நிக்தவஸ்துக்களாலாவது, தைலக்ருதங்களைச் சேர்த்தாவது, சிற்றரத்தை, கொட்டைக்கரந்தை

இவற்றின் பிண்டத்தையாவது, முருங்கப்பட்டைகளையாவது வேகவைத்து அவற்றால் ஒற்றடம் கொடுக்கலாம். 14—17.

வீங்கிய அர்சஸ்ஸில் தூபந சிகித்ஸை:—(1) எருக்கம்வேர், அகில் மரத்திலை, தலைமயிர்கள், பாம்புத்தோல், பூனையின் சர்மம், நெய் இவற்றைத் தணலிலிட்டு, அப்புகையினால் தூபமிடுவதும் வீங்கிய அர்சஸ்ஸுகளுக்கு ஹிதமாம்; (2) அங்ஙனமே அமுக்கிராங்கிழங்கு, துளஸி, கண்டங்கத்திரி, திப்பிலி, நெய் இவற்றைக்கொண்டும் தூபமிடலாம்.—18, 18½.

அர்சஸ்ஸில் வர்த்திப் பிரயோகம் :-(1) காடிவிட்டு தேவதாளி பீஜங்களை அரைத்து, அதன் மிருதுவான பூந்தாதுகளின் மேல் அதைப் பூசி, வர்த்தியாகச் செய்து, குதத்திலுபயோகிக்க, அது முளைகளை அழித்து உதிர்த்துவிடும். (2) தேவதாளி தாதுகளையும் அதன் வேர்களையும் சேர்த்துப் பக்குவம் செய்த லேஹ்யத்தில் யவக்ஷாரமும் சிறிது கூட்டி, குன்றுமணி, கருணைக்கிழங்கு, பூசினிவிதை இவற்றின் பொடியையும் சேர்த்து, வர்த்தி செய்து உபயோகிக்க முன்போலவே குணமுண்டுபண்ணும். 19—20½.

அர்சஸ்ஸில் லேபநங்கள் :—(1) கள்ளிப்பாலில் ஊறவைத்த மஞ்சளின் கல்கத்தினாலும், (2) கோழியின் மலம், திப்பிலி, மஞ்சள், குன்றுமணி இவற்றைப் பசுமூத்திரத்தினால் ஆட்டியும் அர்சஸ்ஸுகளின் மேல் பூச்சிடலாம். (3) வசம்பு, கலப்பைக்கிழங்கு, யானையின் தந்தம், கர்க்காடகச்ருங்கி, கடுக்காய், கோஷ்டம், சேராங்கொட்டை, மயில்துத்தம், முருங்கவிதை, முள்ளங்கி, அலரியிலை, வேப்பிலை, பில்லாந்திவேர், பில்வவேர், காயம் இவற்றைக் கள்ளிப்பால் விட்டு அரைத்து லேபநம் செய்யலாம். (4) கோஷ்டம், காட்டுவாகையின் வித்துக்கள், திப்பிலி, இந்துப்பு, வெல்லம், த்ரிபலை இவற்றை எருக்கம்பாலும் கள்ளிப்பாலும் விட்டு அரைத்து, அர்சஸ்ஸுகளின்மேல் லேபநம் செய்யலாம். (5) கள்ளித்தண்டு, பேய்ச்சுரையின் தளிர்கள், புங்கம் வித்து, செம்மறியாட்டின் சிறு நீர், எருக்கம்பால் இவற்றை அரைத்து, லேபநம் செய்ய அர்சஸ்ஸுகள் நிவ்ருத்தியாகும். (6) இனி கூறப்போகிற அநுவாஸநவஸ்திக்குரிய திப்பிலி முதலிய வஸ்துக்களால் லேபநம் செய்யலாம். (7) இதே சரக்குகளால் தைலங்களைப் பக்குவம் செய்தும் அவ்விடத்தில் அப்யஞ்ஜனம் செய்யலாம். இத் தூபங்களாலும், லேபங்களாலும், அப்யங்கத்தாலும் அசுத்த ரத்தம் அர்சஸ்ஸுகளிலிருந்து வெளியாய் பிணியாளி சுகம் பெறுகிறான். 21—27½.

அர்சஸ்ஸிலிருந்து இரத்தத்தை வெளிப்படுத்தல் :—மிகவும் வீங்கியும் கடினமாகவும் விருத்தியாயுள்ள மூல முளைகளிலிருந்து முற்கூறிய லேபநாதிகளால் அசுத்த இரத்தம் நன்கு ஸ்ரவிக்கா

மற்போனுல் அட்டைகள், சஸ்திரங்கள், ஊசிகள், கூர்ச்சம் இவற்ருல் அடிக்கடியும் அவ்வித இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும். இரத்தம் அசுத்தமாயிருக்கையில் சீதளமாகவும், உஷ்ணமாகவும், ஸ்நிக்த்தமாகவும், ரூக்ஷமாகவுமுள்ள முற்கூறிய சிகித்ஸைகளால் மாத்திரம் மூலம் நிவ்ருத்தியாகாது ; ஆகவே வைத்தியன் இரத்தத்தை அவசியம் வெளிப்படுத்தவேண்டும். 28—29½.

அர்சஸ்ஸில் தக்ரப்பிரயோகங்கள் :—(1) பாலில் சித்திரமூலத்தைப் பொடித்துச் சேர்த்து மோராக்கி அம்மோரையே பருகியும் அன்னத்துடன் கலந்து உட்கொண்டும் வரமூலம் தீரும். (2) மோரில் செம்மந்தாரை வேரைப் பொடித்துச் சேர்த்துப் பருகி, அது ஜீர்ணமான பிறகு பத்தியமான உணவுகளைப் புஜித்துவர அர்சஸ்ஸுகள் தீரும். (3) குதஸ்த்தானத்தில் வீக்கத்தினுலும் வலியினுலும் வருந்தி ஜாடராக்னியும் மந்தமாயிருந்தால், அப்பிணியாளி குல்ம சிகித்ஸையில் கூறப்படும் ஹிங்க்வாதி சூர்ணம் முதலியவைகளை மோருடன் உட்கொள்ளலாம். (4) வெல்லம் கலந்த கடுக்காயையும் மோரின் அனுபானத்தோடு உட்கொள்ளலாம். (5) கடுக்காய், வாய்விடங்கம், சித்திரமூலம், குடசப்பாலையின் பட்டை இவற்றையாவது மோருடன் புஜிக்கலாம். (6) வெட்பாலை ஒரு பங்கு, திப்பிலி இரண்டு பங்கு, சித்திரமூலம் மூன்று பங்கு, கருணைக்கிழங்கு நாலுபங்கு இவ்விதம் சேர்த்துச் சூர்ணித்து, அதையாவது மோருடன் உட்கொள்ளலாம். (7) இந்துப்பு, கறியுப்பு, சவுட்டுப்பு, த்ரிகடு, காயம், புளிவஞ்சி இவற்றையாவது பொடித்து மோரோடு உட்கொள்ளலாம். (8) பில்வப்பழம், விளாம்பழம் இவற்ருேடாவது, சுக்கு, பிடாலலவணம் இவற்ருேடாவது, சோராங்கொட்டையோடாவது, ஓமத்தோடாவது மோரைத் தர்ப்பணமாகப் பருகலாம். (9) கொட்டைக்கரந்தை, காயம், சித்திரமூலம் இவற்றையாவது மோரிற் கலந்து சாப்பிடலாம். (10) சிறுகளாப்பழங்களையாவது மோரின் அனுபானத்தோடு ஒரு மாஸம் உபயோகித்து வரலாம். (11) வெறும் வயிற்றில் தினந்தோறுமாவது வேண்டியவளவு மோரைப் பருகிவரலாம். (12) ஜாடராக்னியும் தேஹச்சூடும் மிகக் குறைந்துள்ள அர்சோரோகிக்கு மோரையே பானம் செய்வதற்குக் கொடுக்கலாம். (13) பிணியாளியின் சரீரபலம், காலம், வியாதியின் ஸ்வரூபம் இவற்றின் நிலைமைகளை நன்குணர்ந்த வைத்தியன் ஏழு நாட்களாவது, பத்து நாட்களாவது, பதினைந்து நாட்களாவது, ஒரு மாஸ காலமாவது மோரை உபயோகிக்கச் செய்யவேண்டும். (14) தினந்தோறும் மாலை நேரத்திலாவது நெற்பொரிமாவை மோரில் கலந்து குழம்புபோல் செய்தும் உட்கொள்ளக் கொடுக்கலாம் ; குடித்த மோர் ஜீர்ணமான பிறகு தக்ரபேயா என்கிற மோர்க்கஞ்சியில் இந்துப்புசேர்த்து பருகச் செய்யலாம். (15) இனி

ஏதேனும் ஏற்ற ஸ்நேஹமும் மோரும் கலந்த அன்னத்தைப் புஜிக்கச்செய்து, அதற்கு மோரையே அனுபானமாகவும் உபயோகிக்கச் செய்யலாம். (16) அதிகமாக மோரைக் கூட்டி பக்குவம் செய்த யூஷங்களோடும், அவ்வித மாம்ஸரஸங்களோடும் சம்பா அரிசியினாலான அன்னத்தையாவது மிச்ரமாய் புஜித்து வரச் செய்யலாம். (17) முற்றிலும் வெண்ணெயெடுத்து ரூக்ஷமாயுள்ளது, பாதி வெண்ணெ யெடுத்தது, சிறிதும் வெண்ணெயெடுக்காதது என்று மூன்றுவிதமாயுள்ள மோரைப் பிணியாளியின் சரீரதோஷங்களுடையவும், தேஹ வன்மையினுடையவும் நிலைமைகளை யுள்ளபடி யுணர்ந்த வைத்தியன் அர்சோகத்தில் உபயோகிக்கவேண்டும். இங்ஙனம் மோரைப் பிரயோகித்து நிவாரணம் செய்யப்பட்ட மூல முளைகள் மீண்டும் உற்பத்தியாக மாட்டா; ஏனெனில் தரையில் ஊற்றினாலும் மோர் புற்பு தரையும் எரிக்குங் குணமுடையது. மோரை உட்கொண்டால் ஸ்ரோதோமார்க்கங்கள் சுத்தமாகும்; ஆகவே இரஸதாது இதர தாதுக்களில் தாராளமாகப் பரவி, தேஹத்திற்குப் புஷ்டியும், பலமும், நல்ல நிறமும், மனக்களிப்பும் உண்டாகும்; வாத-கபஸம்பந்தமான அநேக வியாதிகளும் நிவ்ருத்தியாகும். (18) சிறு கண்டங்கத்திரிக்காயை அரைத்து, அக்கல்கத்தை ஒரு பாத்திரத்தினுள் தடவி யுலர்ந்த பிறகு, அதில் மோரை ஊற்றி, ஓர் இரவு அப்படியே ஊற வைத்து, மூலரோகிகள் அந்த மோரைக் குடிக்கலாம். 30—44½.

அர்சஸ்ஸில் தக்ராரிஷ்டம்: —கொத்தமல்லி விதை, சருஞ் ஜீரகம், ஜீரகம், கொட்டைக்கரந்தை, திப்பிலி, யானைத்திப்பிலி, ஓமம், கிரந்திதகரம், கிச்சிலிக்கிழங்கு, குராசானி யோமம், சித்திரமூலம், வாற்கோதுமை இவற்றைச் சூர்ணம் செய்து, நெய் வைத்துப் பழகிய பாத்திரத்தில் சேர்த்து, அதில் மோரை ஊற்றி ஸந்தானமுறைப்படி அது புளித்தும் காரமாகவும் பக்குவமாகும் வரையில் பாத்திரத்தில் வைத்து வைக்கவும். "தக்ராரிஷ்டம்" எனப்படும் இதை யதேஷ்டமாக அர்சோரோகி பானம் செய்து வரலாம். இது அக்னியை தீபனம் செய்யும்; நாக்குக்கு நற்சுவையைத் தரும்; நல்ல நிறத்தையும் தேஹத்தில் உண்டு பண்ணும்; கப-வாதங்களையும், குதத்தின் வீக்கத்தையும், தினவையும், வலியையும் போக்கி, சரீரபலத்தை விருத்தி செய்யும். 45—47½.

தக்ரப் பிரயோகத்தில் வேறொரு வகை :— (1) சித்திரமூலப் பட்டையைப் பொடித்து, ஜலம் விட்டு அரைத்து, மண் கலயத்தினுள் பூசி, அக்கல்கம் உலர்ந்த பிறகு, அதில் மோரையாவது தயிரையாவது வைத்திருந்து பருகினாலும், (2) கண்டுபாரங்கி, செந்தாமரை, சீந்தில், பஞ்சகோலங்கள் இவற்றில் எக்

கல்கத்தையும் முன்போலவே மட்கலயத்தில் தடவி, மோர் அல்லது தயிரை அதில் வைத்திருந்து பருகினாலும் மூலம் நீரும். —48, 49.

அர்சஸ்ஸில் உபயோகிக்கக் கூடிய பேயா முதலியவை :—யானைத்திப்பிலி, வட்டத்திருப்பி, கருஞ்ஜீரகம், பஞ்சகோலங்கள், தும்புருப்பட்டை[1], ஜீரகம், கொத்தமல்லிவிதை, பில்வப்பழத்தின் சோறு இவற்றைச் சேர்த்து, பலாம்லங்களையும்[2], யமக-ஸ்நேஹங்களையும், பேயா-யூஷம்-இரஸம் முதலியவைகளையும், பக்குவம் செய்து அர்சோரோகிக்கு உணவாகக் கொடுக்கலாம். யானைத்திப்பிலி முதலிய இதே சரக்குகளைத் தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி, குடிநீரைப் பக்குவம் செய்தும், இவற்றால் க்ருதத்தைப் பக்குவம் செய்தும் பானம் செய்தால் நன்கு அக்னிதீபந முண்டாகும்.—50, 51.

அர்சஸ்ஸை அனுஸரிக்கும் மலபந்தத்திற்குப் பரிஹாரங்கள் :—இதுவரையில் அர்சஸ்ஸில் மலம் எளிதில் வெளியாகும் நிலைமைக்கேற்ற சிகித்ஸாமுறை கூறப்பட்டது; இனி மலபந்தத்துடன் கூடிய அர்சோரோகிகளுக்கு ஏற்ற பரிஹாரமுறைகள் கூறப்படும். (1) ஸ்நேஹபதார்த்தங்களை அதிகமாகக் கூட்டிய மாப்பண்டங்களோடு வாருணியென்னும் மதுவைச் சிறிது உப்பும் சேர்த்து உட்கொள்ளலாம். (2) சீது, தான்யாம்லம், வாருணி இவற்றைத் தனித்தனியாகவும் உப்புடன் பருகலாம். (3) புங்கந்தளிர்களை யமகஸ்நேஹத்தில் வறுத்து, மாவையும் தூவி பக்குவம் செய்து போஜனம் செய்வதற்கு முன்பாகப் புஜித்து வந்தால், அடைபட்டுள்ள அபானவாயுவும் மலமும் தாராளமாய் வெளிப்படும். (4) சுக்கையாவது வட்டத் திருப்பியையாவது வெல்லத்துடன் கலந்து உண்ணலாம். (5) வெல்லம், யவக்ஷாரம், நெய் இவற்றைக் கலந்தாவது உட்கொள்ளலாம். (6) பசு மூத்திரத்தில் ஊறவைத்தெடுத்த கடுக்காயோடு வெல்லத்தையும் கூட்டிப் புஜிக்கலாம். 52—54½.

கோமூத்ரஹரீதகீ :—ஒரு திரோணம் பசு மூத்திரத்தில் இருநூறு கடுக்காய்களை மூத்திரம் முற்றிலும் சுண்டிப் போமளவும் சமையல் செய்யவும். இதில் தினத்திற்கு இரண்டு கடுக்காய்கள் வீதம் தேனுடன் புஜித்துவர, கபத்தினாலான அர்சஸ், குஷ்டம், சோதை, குல்மம், மேஹம், உதரரோகம், கிருமிகள், கிரந்தி, அற்புதம், அபசீ, ஸ்த்தூலரோகம், பாண்டு, ஆமவாதம் இவை தீரும்.. 55—56½.

1. தும்புரு — ஆங்கிலத்தில் Xanthoxylon alatam எனப்படும்.

2. பலாம்லங்கள்-எலுமிச்சம்பழம், புளிப்புமாதுளை, கொடிமாதுளை, புளி, புளிவஞ்சி இவை இக்கூட்டுக்கு பஞ்சாம்லம் என்றும் பெயர்.

அர்சஸ்ஸில் மலங்கழியச்செய்யும் சில முறைகள் :—(1) ஆடு தீண்டாப்பாளையின் வேரை அரைத்து, சிறிது பசு மூத்திரத்தோடு பானம் செய்துகொண்டு, கத்திரிக்காயையும் வெல்லத்தையும் சேர்த்துச் சமைத்து உண்டு வந்தால் மூல முளைகள் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். (2) த்ரிபலாகஷாயத்தோடு சிவதைவேர்ப் பொடியையாவது, (3) மோருடன் கடுக்காயையாவது, (4) நெய்யிற் பொரித்த திப்பிலியையும், கடுக்காயையும் வெல்லத்துடன் கலந்தாவது உபயோகிக்கலாம். (5) சிவதை வேரையும் நேபாளத்தையும் அளவறிந்து உண்ணலாம். இவ்வனைத்தும் மலத்தைத் தாராளமாக வெளிபடுத்தும். குதத்தைப்பற்றிய தோஷம் நிவ்ருத்திக்கப்பட்டால், அங்குண்டாகும் மூல முளைகளும் தானே நிவாரணமாகும். (6) மாதளம்பழரஸம், ஓமம், குராசானி யோமம், வெல்லம், சுக்கு இவற்றையும் மோரையும் கலந்தாவது, (7) வட்டத்திருப்பியை மோரிற் கூட்டியாவது உட்கொண்டுவர வாதஸம்பந்தமான மலபந்தம் நீங்கும். (8) சித்ரமூலத்தையும் சுக்கையும் சீது வென்னும் மதுவிற் பொடித்துச் சேர்த்தாவது, (9) அவற்றையே வெல்லத்தினலான மதுவில் சேர்த்தாவது உட்கொண்டு வரலாம். (10) கொட்டைக்கரந்தை, வட்டத்திருப்பி, ஸௌவர்ச்சல லவணம் இவற்றைக் கூட்டிய ஸுரையென்னும் மதுவையாவது பருகலாம். 57—61½.

அர்சஸ்ஸில் பிப்பலீவர்த்தமாநகம் :—பத்துத் திப்பிலியையும், அரைப்பலம் எள்ளையும் இடித்து முதலில் ஒருநாள் பாலோடு உட்கொள்ளவும்; இங்ஙனமே தினத்துக்குப் பத்துத் திப்பிலி வீதம் அதிகமாயெடுத்து எள்ளோடும் பாலோடும் உபயோகித்துவர தேஹமும் ஜாடராக்னியும் அர்சோரோகிக்கு பலப்படும்.—62½

அர்சஸ்ஸில் பாடா பிரயோகம் :—காஞ்சொறி வேர், பில்வ வேர், ஓமம், சுக்கு இவற்றில் ஒவ்வொன்ருடாவது பலவற்ருடாவது வட்டத்திருப்பியைக் கலந்து புஜித்துவர அர்சோரோகம் தீரும்.—63½.

அர்சஸ்ஸில் அபயாரிஷ்டம்:—கடுக்காய்த்தோல் எட்டு பலம், நெல்லிக்கனி பதினறுபலம், விளாம்பழத்தின் உட்சோறு பத்து பலம், தும்மட்டிக்காய் ஐந்து பலம், வாய்விடங்கம், சிற்றேலம் இவை வகைக்கு இரண்டு பலம்; இவ்வனைத்தையும் நான்கு திரோணங்கொண்ட ஜலத்தில் சேர்த்துச் சமைக்கவும்; நான்கில் ஒரு பங்காகச் சுண்டிய பிறகு வடிக்கட்டி, நெய் வைத்துப் பழகிய மட்பாத்திரத்தில் சேர்த்து, அதில் இருநூறு பலம் வெல்லத்தையும் கரைத்து, பதினறு பலம் காட்டாத்திப் பூவையும் சேர்த்து, பாத்திரத்தின் வாயை அகலால் மூடி, சீலமண் செய்து வைத்து பதினைந்து நாட்கள் கழித்து, இதை யெடுத்து உட்

கொண்டுவர, ஜாடராக்னி விருத்தியாம்; அர்சஸ், கிரஹணீ ரோகம், பாண்டு, குஷ்டம், மஹோதரம், விஷக் கோளாறுகள், ஜ்வரம், சோதை, ப்லீஹவீக்கம், இருதயக் கோளாறுகள், குல்மம், க்ஷயம், வாந்தி, கிருமி ரோகம் இவை தீரும். 64—67½.

அர்சஸ்ஸில் தந்த்யரிஷ்டம்:—சுத்தமான நேபாளவிதை, தசமூலம், த்ரிபலை, சித்திரமூலம் இவற்றை வகைக்கு ஒரு பலம் விதம் ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, நாலில் ஒரு பங்காகச் சுண்டியதும் நூறு பலம் வெல்லத்தைச் சேர்த்து, முன்பு அபயாரிஷ்டத்திற்குக் கூறிய விதமே மற்றவைகளையும் செய்யவும்; அபயாரிஷ்டத்திற்குள்ள குணங்களோடு மலத்தை அதினும் நன்கு வெளிப்படுத்துங் குணமுமுண்டு.—68, 69.

அர்சஸ்ஸில் துராலபாரிஷ்டம்:—காஞ்சொறி ஸமூலம் பதி ணறு பலம், நேபாளம்-வட்டத் திருப்பி-சித்திரமூலம்-கடுக்காய்-ஆடாதோடை-நெல்லிக்காய்-சுக்கு இவை பிரத்தியேகம் இரண்டு பலம்; இவற்றை இடித்து ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, நான்கில் ஒரு பாகம் மிகும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டி, நூறு பலம் சர்க்கரையையும், அபயாரிஷ்டத்திற்குக் கூறிய மற்றவை களையும் கூட்டி, மட்பாண்டத்தில் ஊற்றி, ஞாழல்-திப்பிலி-சவி யம்-நெய்-தேன் இவற்றை அரைத்து, அந்த பாண்டத்தின் மேற் பூசி சீலைமண் செய்து வைக்கவும். இதைச் சாப்பாட்டிற்குமுன் மலம் நன்கு வெளியாவதற்காக உட்கொள்ளலாம்.—70, 71.

அர்சஸ்ஸில் உபயோகிக்கக் கூடிய க்ருதமுறைகள்:—(1)எலு மிச்சம்பழரஸம் முதலியவற்றைச் சேர்த்த க்ருதத்தையாவது மலம் தாராளமாக வெளியாவதற்காக உட்கொள்ளலாம். (2) சவி யம், சித்திரமூலம் இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்யப் பட்ட க்ருதத்திலாவது யவக்ஷாரத்தையும் வெல்லத்தையும் கூட்டி யுபயோகிக்கலாம். (3) மோடியின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்திலாவது தேன், யவக்ஷாரம், சுக்கு இவற்றைக் கலந்து உட்கொள்ளலாம். (4) திப்பிலி, மோடி, கொத்தமல்லி விதை, மாதளை, தயிர் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ரு தம் அபானவாயு, மலம், மூத்திரம் இவற்றை வெளியாக்கும். (5) இரண்டு பங்கு பலாசக்ஷாரம் கரைத்த நீரில் ஒரு பங்கு நெய் சேர்த்து, வத்ஸகாதி கணச் சரக்குகளைக் கல்கமாகவும் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் அர்சஸ்ஸைத் தீர்ப்பதோடு, தீபந குணத்திலும் சிறந்தது. (6) பஞ்ச கோலங்கள், கடுக்காய், ஓமம், பிடால லவணம், இந்துப்பு, வட்டத்திருப்பி, கொத்தமல்லி விதை, மிளகு, பில்வவேர் இவற்றைப் பாலில் சேர்த்துக் காய்ச்சி, தயிரையும் சிறிது கூட்டி, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும். அந்த க்ருதம் குதத்திலும், துடையிடுக்குகளிலும் உண்டாகும் வேதனையையும், வயிற்றுக்கடுப்பையும், குதம் வெளியாய்விடுவ

தையும், நீர்ச்சுருக்கையும், இரத்தப் பெருக்கையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். (7) வட்டத்திருப்பி, ஓமம், கொத்தமல்லிவிதை, நெரிஞ்சி, பஞ்ச கோலங்கள், பில்வவேர் இவற்றைத் தயிரில் சேர்த்து, நாலு மடங்கு புளியாரத்தையின் ஸ்வரஸத்தில் அனைத்தையும் கூட்டி பக்குவம் செய்த க்ருதம் வயிற்றுப்பொருமல், நீர்ச்சுருக்கு, வயிற்றுக்கடுப்பு, குதம் வெளியாய்விடுதல், குதத்தில் வலி, மூல முளை, கிரஹணீ, வாதரோகங்கள் இவற்றைப் போக்கும். 72—78½.

மலபந்தமுள்ள அர்சஸ்ஸுக்கு ஏற்ற மாம்ஸரஸங்கள் :—(1) மயில், தித்திரி, லாவம் இப்பக்ஷிகளுடைய மாம்ஸரஸங்களில் அம்லரஸம் கலந்து தாளித்து, மலமும் அபாநவாயுவும் சிக்குண்டிருக்கையில் உட்கொள்ளலாம். (2) அண்டங்காக்கை, வர்த்தகம் இவற்றின் மாம்ஸரஸங்களையாவது பருகலாம்.—79½.

மலச்சிக்கலுடன் கூடிய அர்சஸ்ஸுக்கு ஏற்ற அன்ன-சாகாதிகள் :—சக்கரவர்த்திக்கீரை, சித்திரமூலம், சிவதை, நேபாளம், வட்டத்திருப்பி, புளியாரை முதலியவற்றையும், கப-வாத ஹரமாகவும் இலகு-பேதியுமான மற்றுமுள்ள சாகங்களின் தளிர்களையும் யமகஸ்நேஹத்தில் சேர்த்து, காயமும் கூட்டி வறுத்துத் தயிரின் ஆடையோடு அனைத்தையும் பக்குவம் செய்யவும் ; கொத்தமல்லிவிதையையும், பஞ்சகோலங்களையும் மாதளம்பழச் சாறு ஊற்றி கல்கமாகச் செய்து, அனைத்தையும் ஒன்றாகக் கூட்டி, இஞ்சியின் இளந்தளிர்களையும், இஞ்சித் துண்டுகளையும் அவற்றில் சேர்க்கவும் ; மனதுக்கு உவப்பான அங்காரதூபத்தினால் அதற்கு நறுமணம் ஏற்றவும் ;[1] ஜீரகம், மிளகு, பிடாலவணம், ஸௌவர்ச்சலவணம் இவைகளையும் போதுமாறு கூட்டிக்கொள்ளவும் ; இந்த சாகத்தைச் செஞ்சம்பா அரிசியின் அன்னத்தோடு வாததோஷம் மேலிட்டு ருக்ஷத்தன்மை, அக்னிமாந்த்யம், மலபந்தம் இவற்றுடன் கூடிய அர்சோரோகிக்குக் கொடுக்கவும் ; பசு, உடும்பு, செம்மறியாடு, ஒட்டகம் இவற்றின் மாம்ஸரஸங்களை முக்கியமாக இறைச்சியுண்பவருக்கு முற்கூறிய சாகாதிகளோடு மலச்சிக்கல் முதலியதைப் போக்கக் கொடுப்பது நலம். 80—84½.

மலபந்தத்துடன் கூடிய அர்சஸ்ஸுக்கு ஏற்ற பானங்கள் :—மதிரா எனப்படும் மது, வெல்லம் அல்லது சர்க்கரையாலான சீது, மோர், காடி, ஏதேனும் அரிஷ்டம், மஸ்து இவற்றில் எதையேனும் பருகலாம் ; அல்லது கொத்தமல்லி விதையையாவது, கொத்தமல்லிவிதையும் சுக்கையும் கலந்தாவது இடித்துத் தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி அந்த ஜலத்தையாவது பருகலாம். அல்லது கண்டங்கத்திரிவேர் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது குடிக்க

1. பெருங்காயம் முதலியதைத் தணலில் சேர்த்து அதிலிருந்து கிளம்பும் மணமுள்ள புகை அங்காரதூபம் எனப்படும்.

லாம். இந்த பானங்களைப் போஜனம் செய்த பிறகாவது, போஜனத்தின் மத்தியிலாவது உபயோகிக்கலாம்; இவை, அடைபட்டுள்ள அபானவாயுவையும் மலத்தையும் வெளிப்படுத்துங் குணமுடையன.—85, 86½.

அர்சஸ் நிவாரணமாதல் :—மலம், அபானவாயு, கபம், பித்தம் இவை கீழ்நோக்கி வெளிவந்துவிட்ட பிறகு, குதமும் தோஷம் நீங்கியதாய் விட்டால், மூலமுளைகளும் விலக்கப்பட்டுப் போகும்; ஜாடராக்னியும் விருத்தியடையும்.—87½.

அநுவாஸனத்திற்கேற்ற அர்சோரோகிகள் :—உதாவர்த்தத்திலும், மிகவும் ரூக்ஷத்தன்மையடைந்து அபானவாயு கீழ் நோக்காமல் குடலிலேயே சூழ்ந்து உண்டாகும் வயிற்றுவலியிலும் அநுவாஸன சிகித்ஸை செய்வது உசிதம்.—88½.

அர்சஸ்ஸில் அநுவாஸனத்திற்கேற்ற பிப்பல்யாதி தைலம் :- திப்பிலி, மருக்காரை, பில்வவேர், சதகுப்பி, அதிமதுரம், வசம்பு, கோஷ்டம், சுக்கு, தாமரைக்கிழங்கு, சித்திரமூலம், தேவதாரு இவற்றை இடித்து ஜலத்தில் சேர்த்து, தைலம் காய்ச்சவும்; தைலத்திற்கு இரண்டு மடங்கு பாலும் சேர்த்துப் பக்குவமாகக் காய்ச்சியெடுக்கவும்[1]. அபானவாயு அடைபட்டுள்ள அர்சோரோகிகளுக்கு அநுவாஸனம் செய்ய இத்தைலம் சிரேஷ்டமானது. குதம் பிதுங்கிப்போதல், வயிற்றுளைத்தல், நீர்ச்சுருக்கு, வயிறுகடுப்பு, இடுப்பு - துடைகள் - ப்ருஷ்டபாகம் இவை பலஹீனப்படுதல், துடையிடுக்குகளி லுண்டாகும் பொருமல் அல்லது வீக்கம், குதத்திலிருந்து பிசுபிசுப்பான திரவம் கசிதல், குதத்தில் வீக்கம், அபானவாயு - மலம் இவை அடைபட்டுப் போதல், அடிக்கடியுண்டாகும் மலப்போக்கு இவற்றை, இத்தைலத்தினால் அநுவாஸநம் செய்தால் நிவ்ருத்தி செய்யலாம். 89—92½.

அர்சஸ்ஸில் பஞ்சமூல நிரூஹம்:—பஞ்ச மூலங்களைக் கஷாயமிட்டு, அக்கஷாயத்திற்குச் சம அளவு பால்கூட்டி, பசுமூத்திரம் - எண்ணெய்-உப்பு இவற்றையும் சேர்த்து, பிப்பல்யாதி தைலத்திற்குக் கூறிய மருக்காரை முதலியவற்றின் கல்கத்தையும் கலந்து நிரூஹவஸ்தியையாவது முற்குறிப்பிட்ட சோளாறுகளில் பிரயோகிக்கலாம்.—93½.

## இரக்தார்சஸ் சிகித்ஸை.

இரக்தார்சஸ்ஸில் வாத - கபங்களின் அநுபந்தமும் அதன் சிகித்ஸையும் :—இனி இரக்தார்சஸ்ஸுகளுக்கு வாதத்தோடும் கபத்தோடும் உள்ள ஸம்பந்தங்களைக் கவனித்து, முறையே

1. இங்கே கஷாயம் பக்குவம் செய்ய ஜலத்தைக் கஷாய வஸ்துக்களினும் நாலு பங்காகவும், அதை நாலில் ஒருபாகமாகச் சுண்டக் காய்ச்சி, அவ்விதம் தயாரான கஷாயத்திற்கு நாலில் ஒருபாகம் ஸ்நேஹம் சேர்க்கவும். கஷாய வஸ்துக்களையே கல்கமாகவும் சேர்க்கவேண்டும்.

ஸ்நிக்த்தமான ஔஷதத்தையாவது, ரூக்ஷமான ஔஷதத்தை யாவது குளிர்ச்சி பொருந்தியதாகக் கொடுக்கவேண்டும். (1) இரக்தார்சஸ் உண்டானதற்கு ரூக்ஷமான பதார்த்த ஸேவையும் ரூக்ஷமான வேலையும் காரணமாகும் பக்ஷத்தில், அப்பொழுது மல மானது கறுத்தும் வறண்டும் கடினமாகவும் வெளியாகும்; அபாந வாயு வெளியாவதில்லை; இடுப்பிலும் துடைகளிலும் வலியுண் டாகும்; அந்த நிலைமையில் வாததோஷம் அவ்வியாதியில் தொடர்ந்திருப்பதாய் அறியவும். (2) ஸ்நிக்த்தமும் குருகுண மும் பொருந்திய பதார்த்தங்களின் உபயோகமும், அவ்வித வேலைகளைச் செய்வதும் இரக்தார்சஸ்ஸுக்குக் காரணமானால், அப்பொழுது மலமானது தளர்ச்சியாகவும், வெண்மை அல்லது வெளிறிய மஞ்சள் நிறமாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், பிசுபிசுப்பான பொசிவுடன் கூடியதாகவும் வெளியாகும்; குதம் திமிதப்பட்டிருக்கும்; அவ்வித நிலைமையில் இவ்வியாதியில் கப தோஷம் தொடர்ந்திருப்பதாய் அறியவும். அர்சஸ்ஸிலிருந்து கசியும் இரத்தத்தின் நிறம் முதலியதைக் கொண்டும் அது எந் தெந்த தோஷத்தினால் ஸம்பவித்ததென்று உணரலாம். 94-97.

இரத்தார்சஸ்ஸில் இரக்த மோக்ஷண-லங்கந-பாசந-ஸ்தம்ப நாதி சிகித்ஸைகள் :—(1) இரத்தம் தூஷிக்கப்பட்டிருந்தால் சோதந சிகித்ஸையையும், இலங்கந சிகித்ஸையையும் அவரவர்க ளுடைய தேஹநிலைமை முதலியவற்றைக் கவனித்துச் செய்ய வேண்டும். தோஷங்களால் இரத்தம் மலினமாயிருக்கையில், அம்மலினத்தன்மை நீங்கும் வரையில் இரத்தத்தை வெளிப் படுத்தவேண்டும். (2) இரக்த மோக்ஷணம் செய்த பிறகு மிச்ச முள்ள தோஷங்களைப் பக்குவம் செய்யவும், ஜாடராக்னியைத் தூண்டவும், இரத்தப்பெருக்கை நிறுத்தவும் திக்தரஸமுள்ள பதார்த்தங்களைக் கொடுத்து ரோகியை உபசரிக்கவேண்டும். (3) ஆமதோஷம் நன்கு க்ஷீணித்திருப்பவனுக்காவது, வாததோஷம் அதிகரிப்பவனுக்காவது அர்சஸ்ஸிலிருந்து இரத்தம் வெளியாகு மானால், ஸ்நேஹத்தைப் பானம் செய்வித்தாவது, அப்யங்கம் செய்வித்தாவது, வஸ்தியைப் பிரயோகித்தாவது அந்த இரத்தத் தைச் சுத்திசெய்யவேண்டும். (4) கோடைகாலத்தில் இரத்தத் தில் பித்தம் அதிகரித்து மூலத்திலிருந்து இவ்விதம் ஸ்ரவிக்கு மானால்-வாத-கபங்களுடைய அநுபந்தம் அதற்கு இல்லாமலிருந் தால், அந்த இரத்தப்பெருக்கை முற்றிலும் தடுக்கவேண்டும். (5) அர்சஸ்ஸிலிருந்து இரத்தம் கபத்தோடு ஸ்ரவிக்குமானால் உழ மண்ணுப்பு, சுக்கு, வெட்பாலைப்பட்டை இவற்றின் கஷாயத்தை யாவது, நிலவேம்பு, சுக்கு, காஞ்சொறி, செஞ்சந்தனம் இவற்றின் கஷாயத்தையாவது, மரமஞ்சள், இலவங்கப்பட்டை, விளாமிச்சை வேர் இவற்றின் கஷாயத்வதயாவது, மாதளம்பட்டைக் கஷாயத்

தையாவது பானம் செய்விக்கலாம். (6) வெட்பாலைப்பட்டை,
இரஸாஞ்ஜனம், தேன், வாய்விடங்கம் இவற்றை வகைக்கு ஒரு
பலம் எடுத்து அரைத்து அரிசி கழுவிய தண்ணீரோடு கலக்கி
யாவது உட்கொள்ளலாம். நாயுருவியையாவது கல்கமாகச் செய்து
அரிசி கழுவு நீரில் கலக்கிப் பருகலாம். 98—103½.

குடஜாவலேஹம் முதல் :—ஆந்தரிக்ஷம் என்கிற காங்கோ
தகத்தில், நூறு பலம் ஈரமான வெட்பாலைப்பட்டையைப் போட்
டுக் காய்ச்சவும்; பட்டையிலுள்ள ஸாரமெல்லாம் கஷாயத்தில்
இறங்கிய பிறகு, அடியிற் குறிப்பிடப்படும் சரக்குகளை நுண்ணிய
சூர்ணமாகச் செய்து அக்கஷாயத்தில் சேர்க்கவும்; அவையா
வன :—மஞ்ஜிஷ்டி, ஞாழல், இலவம்பிசின், எட்டிக்கொட்டை
இவை ஒவ்வொரு பலம்; அனைத்துக்கும் ஸமஅளவு வாலுழு
வைப் பொடியையும் சேர்த்து, வடிக்கட்டி, சாண்டியில் பூசிக்
கொள்ளுமாறு பாகுபதத்திற்கு வரும்படியாகப் பக்குவம் செய்து
எடுக்கவும். இந்த லேஹ்யத்தை உட்கொண்டு, அவரவருடைய
ஜாடராக்னியின் பலத்திற்கேற்றவாறு பேயா, மண்டம், ஆட்டுப்
பால் அல்லது பசுவின் பால் இவற்றைப் பருகலாம்; ஆட்டுப்
பாலும் அன்னமும் கலந்து உண்ணலாம். இந்த லேஹ்யம் இரத்
தாதிஸாரம், இரக்தார்சஸ், மேல் அல்லது கீழ் கோக்கிய பலமான
இரக்தபித்தம் இவற்றை எளிதில் தீர்க்கும். 104—107½.

குட ஜாவலேஹம்—இரண்டாவது :—நூறு பலம் குடசப்
பாலைப் பட்டையை ஒரு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து, எட்டில்
ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி, பின் வரும் சரக்குகளைக் கல்க
மாகச் சேர்க்கவும்; அவையாவன :—இரஸாஞ்ஜனம், த்ரிகடு,
வெள்ளிலோத்திப் பட்டை, உதியம்பட்டை, இலவம்பிசின்,
சிற்றாமுட்டி, மாதளம்பட்டை, பில்வவேர், கர்க்காடகச்ருங்கி,
கோரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, காட்டாத்திக்கனி இவை வகைக்கு
ஒரு பலம்; குடசப்பாலைப்பட்டை பத்து பலம்; வெல்லம் முப்
பது பலம்; காய்ச்சி வடிக்கட்டிய நெய் இருபது பலம். இவ்
வனைத்தையும் முறைப்படி லேஹ்யமாகச் செய்து, தானியக்
களஞ்சியத்தில் பதினைந்து நாட்கள் வைத்திருந்து உட்கொண்டு
வர, இது எல்லா அர்சஸ்ஸுகளையும், இரஹணீ தோஷத்தையும்,
ச்வாஸ-காஸங்களையும் போக்கும். 108—111½.

இரக்தார்சஸ்ஸில் பலவிதமான கல்கங்கள் :—(1) வெள்ளி
லோத்தி, எள்ளு, இலவம்பிசின், மஞ்ஜிஷ்டி, சந்தனம், கருநெய்
தல் இவற்றை அரைத்து, வெள்ளாட்டுப் பாலில் கலந்து, இரக்
தார்சோரோகியைப் பருகச் செய்யலாம். அந்த பாலோடு
சம்பா அன்னத்தைக் கலந்தும் போஜனம் செய்விக்கலாம். (2)
அதிமதுரம், தாமரைக்கிழங்கு, அருகம்புல், க்ஷீரகாகோலீ,
சர்க்கரையும்

தேனும் கூட்டி, குளிர்ந்த ஜலத்தோடு உட்கொள்ளக் கொடுக்கலாம் ; அல்லது வெள்ளாட்டுப் பாலுடனாவது சாப்பிடச் செய்யலாம். (3) வெள்ளிலோத்தி, பெருவாகை, குடசப்பாலைப்பட்டை, மஞ்ஜிஷ்டி, இலவம்பட்டை இவற்றை அரிசிகழுவிய நீருடன் உட்கொள்ளலாம் ; அல்லது சந்தனம், நாககேஸரம், அதிமதுரம், வெட்டிவேர் இவற்றையாவது அக்கழுவு நீரோடு உண்ணலாம். (4) ஓமம், வாலுழுவை, வட்டத்திருப்பி, பில்வவேர், சுக்கு, இரஸாஞ்ஜநம் இவற்றின் சூர்ணத்தை அதிக வலியுள்ள இரத்தார்சஸ்ஸில் ஜலத்துடன் உட்கொள்ளலாம். 112—115½.

இரக்தார்சஸ்ஸில் பலவித க்ருதபானங்கள் :—(1) பாலைக்கீரையையும் கண்டங்கத்திரியையும் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் இரக்தார்சஸ்ஸில் சிறந்த குணந் தரக்கூடியது. (2) அல்லது காட்டாத்திப்பூ, வெள்ளிலோத்தி, குடசப்பாலையின்பட்டை, மறுக்காரை, நெய்தல் இவற்றைக் கொண்டும் க்ருதம் பக்குவம் செய்து பருகலாம். (3) நாககேஸரம், யவக்ஷாரம், மாதளம்பழ ஸ்வரஸம், இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, (4) சர்க்கரை, தாமரையின் தாது இவற்றுடன் அல்லது எள்ளுடன் வெண்ணெயையாவது உபயோகிக்க இரக்தார்சஸ்ஸு தீரும். 116—118.

தையாவது பானம் செய்விக்கலாம். (6) வெட்பாலைப்பட்டை, இரஸாஞ்ஜனம், தேன், வாய்விடங்கம் இவற்றை வகைக்கு ஒரு பலம் எடுத்து அரைத்து அரிசி கழுவிய தண்ணீரோடு கலக்கியாவது உட்கொள்ளலாம். நாயுருவியையாவது கல்கமாகச் செய்து அரிசி கழுவு நீரில் கலக்கிப் பருகலாம். 98—103½.

குடஜாவலேஹம் முதல் :—ஆந்தரிக்ஷம் என்கிற காங்கோதகத்தில், நூறு பலம் ஈரமான வெட்பாலைப்பட்டையைப் போட்டுக் காய்ச்சவும்; பட்டையிலுள்ள ஸாரமெல்லாம் கஷாயத்தில் இறங்கிய பிறகு, அடியிற் குறிப்பிடப்படும் சரக்குகளை நுண்ணிய சூர்ணமாகச் செய்து அக்கஷாயத்தில் சேர்க்கவும்; அவையாவன :—மஞ்ஜிஷ்டி, ஞாழல், இலவம்பிசின், எட்டிக்கொட்டை இவை ஒவ்வொரு பலம்; அனைத்துக்கும் ஸமஅளவு வாலுழுவைப் பொடியையும் சேர்த்து, வடிக்கட்டி, காண்டியில் பூசிக்கொள்ளுமாறு பாகுபதத்திற்கு வரும்படியாகப் பக்குவம் செய்து எடுக்கவும். இந்த லேஹ்யத்தை உட்கொண்டு, அவரவருடைய ஜாடராக்னியின் பலத்திற்கேற்றவாறு பேயா, மண்டம், ஆட்டுப்பால் அல்லது பசுவின் பால் இவற்றைப் பருகலாம்; ஆட்டுப்பாலும் அன்னமும் கலந்து உண்ணலாம். இந்த லேஹ்யம் இரத்தாதிஸாரம், இரக்தார்சஸ், மேல் அல்லது கீழ் நோக்கிய பலமான இரக்தபித்தம் இவற்றை எளிதில் தீர்க்கும். 104—107½.

குடஜாவலேஹம்—இரண்டாவது :—நூறு பலம் குடசப்பாலைப்பட்டையை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, எட்டில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி, பின் வரும் சரக்குகளைக் கல்கமாகச் சேர்க்கவும்; அவையாவன :—இரஸாஞ்ஜனம், த்ரிகடு, வெள்ளிலோத்திப் பட்டை, உதியம்பட்டை, இலவம்பிசின், சிற்றாமுட்டி, மாதளம்பட்டை, பில்வவேர், கர்க்காடகச்ருங்கி, கோரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, காட்டாத்திக்கனி இவை வகைக்கு ஒரு பலம்; குடசப்பாலைப்பட்டை பத்து பலம்; வெல்லம் முப்பது பலம்; காய்ச்சி வடிக்கட்டிய நெய் இருபது பலம். இவ்வனைத்தையும் முறைப்படி லேஹ்யமாகச் செய்து, தானியக் களஞ்சியத்தில் பதினைந்து நாட்கள் வைத்திருந்து உட்கொண்டு வர, இது எல்லா அர்சஸ்ஸுகளையும், கிரஹணீதோஷத்தையும், ச்வாஸ-காஸங்களையும் போக்கும். 108—111½.

இரக்தார்சஸ்ஸில் பலவிதமான கல்கங்கள் :—(1) வெள்ளிலோத்தி, எள்ளு, இலவம்பிசின், மஞ்ஜிஷ்டி, சந்தனம், கருநெய்தல் இவற்றை அரைத்து, வெள்ளாட்டுப் பாலில் கலந்து, இரக்தார்சோரோகியைப் பருகச் செய்யலாம். அதே பாலோடு சம்பா அன்னத்தைக் கலந்தும் போஜனம் செய்விக்கலாம். (2) அதிமதுரம், தாமரைக்கிழங்கு, அறுகம்புல், க்ஷீரகாகோலீ, பெருங்குரும்பை இவற்றைச் சூர்ணம்செய்து, சர்க்கரையும்

தேனும் கூட்டி, குளிர்ந்த ஜலத்தோடு உட்கொள்ளக் கொடுக்கலாம்; அல்லது வெள்ளாட்டுப் பாலுடனாவது சாப்பிடச் செய்யலாம். (3) வெள்ளிலோத்தி, பெருவாகை, குடசப்பாலைப்பட்டை, மஞ்ஜிஷ்டி, இலவம்பட்டை இவற்றை அரிசிகழுவிய நீருடன் உட்கொள்ளலாம்; அல்லது சந்தனம், நாககேஸரம், அதிமதுரம், வெட்டிவேர் இவற்றையாவது அக்கழுவு நீரோடு உண்ணலாம். (4) ஓமம், வாலுழுவை, வட்டத்திருப்பி, பில்வவேர், சுக்கு, இரஸாஞ்ஜநம் இவற்றின் சூர்ணத்தை அதிக வலியுள்ள இரத்தார்சஸ்ஸில் ஜலத்துடன் உட்கொள்ளலாம். 112—115½.

இரக்தார்சஸ்ஸில் பலவித க்ருதபானங்கள் :—(1) பாலைக்கீரையையும் கண்டங்கத்திரியையும் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் இரக்தார்சஸ்ஸில் சிறந்த குணந் தரக்கூடியது. (2) அல்லது காட்டாத்திப்பூ, வெள்ளிலோத்தி, குடசப்பாலையின்பட்டை, மறுக்காரை, நெய்தல் இவற்றைக் கொண்டும் க்ருதம் பக்குவம் செய்து பருகலாம். (3) நாககேஸரம், யவக்ஷாரம், மாதளம்பழ ஸ்வரஸம், இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, (4) சர்க்கரை, தாமரையின் தாது இவற்றுடன் அல்லது எள்ளுடன் வெண்ணெயையாவது உபயோகிக்க இரக்தார்சஸ்ஸு தீரும். 116—118.

இரக்தார்சஸ்ஸில் பத்தியமான உணவு முதலியவை :—(1) ஆட்டின் வெண்ணெய், நெய், பால், இறைச்சி இவைகளும், புளிப்புச் சேராத அல்லது சொற்பப் புளிப்புச் சேர்ந்ததான சக்கரவர்த்திக் கீரையின் இரஸத்தோடு கூடிய ஜாங்கல மாம்ஸரஸமும், செஞ்சம்பா அரிசியினாலான அன்னமும், தயிராடையும், காரரிசியன்னமும், இனிய சுவை பொருந்திய ஸுரை யென்னும் மதுவும், அதே குணம் பொருந்திய ஸுராமண்டமும் ஆக இவை யாவும் இரக்தார்சஸ்ஸில் இரத்தப் பெருக்கை நிறுத்துவதற்குச் சிறந்த ஔஷதங்களாம். (2) பேயா, யூஷம், மாம்ஸரஸம் முதலியவைகளில் சேர்த்து பக்குவம் செய்தாவது, தனியாகவாவது வெள்ளுள்ளியைப் புஜித்து வந்தால், அது மிக்க அதிகரித்த இரத்தபெருக்கையும் வாதவிகாரத்தையும் போக்கும். 119—121.

அர்சஸ்ஸில் உண்டாகும் உபத்திரவங்களுக்குப் பரிஹாரங்கள் :—(1) அர்சோரோகத்தில் இரத்தம் மிதமிஞ்சி வெளியாகுமானால், பெரும்பாலும் வாததோஷம் பிரகோபமடைந்து, வாதார்சஸ்ஸுகள் விசேஷமாய் ஸம்பவிக்கும்; ஆகையினால் அவற்றைப் போக்குவதற்கு பலமான பிரயத்தனம் செய்யவேண்டும். (2) அம்லமும் பித்தமும் மிக்க அதிகரித்திருந்தால், கபமும் ஜாடராக்னியும் பலங் குன்றியிருந்தால், அக் கோளாறுகளைத் தணிக்கச் சீதோபசாரமும் செய்யவேண்டும். (3) அவ்விதம் செய்தும் கோளாறுகள் தீராவிட்டால், பிறகு ஸ்நிக்த்தமாகவும்

உஷ்ணமாகவுமுள்ள மாம்ஸரஸங்களைக் கொடுத்து, இளஞ்சூடான க்ருதங்களை அவபீடக நஸ்யமாகப் பிரயோகிக்கவும். சிறிது உஷ்ணமான தைலங்களையும், பாலையும், க்ருதங்களையும் யதேஷ்டமாக அப்பிணியாளியின்மீது ஊற்றலாம். 122—124½.

இரக்தார்சஸ்ஸில் பிச்சாவஸ்தி :—காஞ்சொறி, தர்ப்பம், ஞாழல் இவற்றின் வேர், இலவம் புஷ்பம், ஆலம்மொட்டு, அரசம்மொட்டு இவற்றை இரண்டு பலம் வீதம் மூன்று பிரஸ்த்தம் ஜலத்திற் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் பாலையும் கூட்டி, பாலின் அளவுக்குச் சுண்டும்படி கஷாயம் காய்ச்சி வடிக்கட்டவும்; பிறகு இலவம் பிசின், மஞ்ஜிஷ்டி, சந்தனம், நெய்தல், ஞாழல், வெட்பாலரிசி, தாமரைத்தாது இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, அப்பால் நெய்யும் தேனும் அதில் சேர்த்து பக்குவம் செய்யவும். இதைக்கொண்டு வஸ்தியைப் பிரயோகிக்கவும். பிச்சாவஸ்தி யெனப்படும் இது ஆஸனக்கடுப்பு, குதம் வெளியாவது, இரத்தக் கசிவு, ஜ்வரம் இவற்றைத் தீர்க்கும். 125—128½.

இரக்தார்சஸ்ஸில் அநுவாஸனவஸ்திக்கு ஸ்நேஹம்:—அதிமதுரம், வறள்தாமரை, இவற்றின் கஷாயத்தில் இலவம் பிசின் முதலிய கல்கங்களையும் சேர்த்து, கஷாயத்திற்கு எட்டில் ஒரு பங்கு பால் ஊற்றி, பாலுக்கு இருமடங்கு ஸ்நேஹத்தைப் பக்குவம் செய்து, இரக்தார்சஸ்ஸில் அநுவாஸனமாகப் பிரயோகிக்கலாம்.—129½.

சாங்கேரீ க்ருதம் :—புளியாரையின் ஸ்வரஸத்தில் நெய் சேர்த்துக் காய்ச்சவும்; பிறகு அதிமதுரம், நெய்தல், மஞ்ஜிஷ்டி, பில்வவேர், சந்தனம், சவியம், அதிவிடயம், கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, யவக்ஷாரம், மரமஞ்சள்பட்டை, சுக்கு, ஜடாமாம்ஸி, சித்திரமூலம், தேவதாரு இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும்.[1] இந்த க்ருதம் ஸந்நிபாதத்தைப் போக்கும்; அர்சஸ், அதிஸாரம், கிரஹணீ, பாண்டு, ஜ்வரம், அரோசகம், நீர்க்கடுப்பு, குதம் நழுவுதல், மூத்திரப்பையின் பொருமல், வயிற்றுக்கடுப்பு, குதத்திலிருந்து பிசுபிசுப்பான திரவம் கசிதல், குதத்தில் வலி இவற்றிலும் சிறந்த ஔஷதம். 130—133.

அர்சஸ்ஸில் வலி முதலியதைத் தணிக்குமுபாயம் :—எப்பொழுதும்மே ஜாடராக்னியைப் பலப்படுத்திக் கொணடே சிகித்ஸையில் நோக்கமா யிருக்கவேண்டு மாகையால், அதற்கேற்ப புளிப்பையும் இனிப்பையும், சீதத்தையும் உஷ்ணத்தையும் மாற்றி மாற்றி யுபயோகித்து வந்து, அர்சஸ்ஸினால் உண்டாகும் வலி முதலியவற்றை நிவ்ருத்தி செய்யவேண்டும்.—134.

---

1. புளியாரையின் சாறு நாலு பங்கு, நெய் ஒரு பங்கு, கல்கத் திரவியம் வகைக்கு ஒரு பலம்.

உதாவர்த்தத்தில் குதவர்த்தி முதலியன :—உதாவர்த்தத்தினால் வருந்துபவனுக்குச் சீதஜ்வரததைப் போக்கும் தைலங்களால் அப்யங்கம் செய்து வைத்து, அப்பால் மிக்க ஸ்நிக்த்தமான பிண்டங்களால் குதத்தில் ஸ்வேதம் செய்யவேண்டும். (1) சிவதை, கருஞ்சிவதை, நேபாளம், திப்பிலி, வெள்ளைச் சாறடை, மறுக்காரை, இந்துப்பு, கறியுப்பு இவற்றைச் சூர்ணம் செய்து, வெல்லமும் பசுமூத்திரமும் கலந்து ஆட்டி, அவ்வப் பிணியாளியின் கை பெருவிரலின் அளவாக நீண்ட குளிகை செய்து, குதத்தில் சிறிது ஸ்நேஹம் தடவி, அவ்வர்த்தியை உட்செலுத்தி வைக்கவும்; அது மலத்தை வெளிப்படுத்துங் குணமுடையது. (2) அங்ஙனமே திப்பிலி, மறுக்காரை, ஒட்டடை, கடுகு இவற்றைக்கொண்டும் வர்த்தி செய்து உபயோகிக்கலாம். (3) முற்கூறியவற்றின் சூர்ணத்தையே நாடி யென்கிற குழலின் மூலமாய் குதத்தினுள் ஊதி உட்செலுத்தலாம்[1]. இவையெல்லாம் குடலுக்குள் சென்றும், அவைகளும் உள்ளேயே அடைபட்டு மலம் வெளிவராமற்போனால், (4) ஸ்நிக்த்தமாகவும் அதிக தீக்ஷ்ணகுணமுள்ளதுமான ஔஷதத்தை வஸ்தியாகப் பிரயோகிக்கலாம்; அவ்வஸ்தியானது இப்பிணியாளியின் குதத்தின் முன்புறத்தைத் தளர்த்தி, மலம்-மூத்திரம்-அபாநவாயு இவற்றையும் வெளிப்படுத்தும். (5) அப்படிச் செய்துங்கூட மலம் முதலியது சிக்கிக்கொண்டேயிருந்தால், ரூக்ஷத்தன்மை அதிகரித்தே வாதமும் பிரகோபித்து அதனால் மலமூத்திராதிகள் அடைந்து விடுகின்றன வென்பதையுணர்ந்து, வாதஹரமாய், ஸ்நேஹரூபமான விரேசன ஔஷதங்களைக் கொடுத்தும், அநுவாஸனம் செய்தும் மலாதிகளை வெளிப்படுத்த வேண்டும். 135—139½.

கல்யாணகக்ஷாரம் :—த்ரிகடுகம், த்ரிலவணம், த்ரிபலை, நேபாளம், சேராங்கொட்டை, சித்திரமூலம் இவற்றின் சூர்ணத்தை எந்த ஸ்நேஹத்திலாவது கலந்து, பசுமூத்திரத்தையும் கூட்டி, ஒரு பாத்திரத்தில் அனைத்தையும் ஓர் அகலால் மூடி, சுற்றிலும் விளிம்புச் சந்துகளைச் சீலைமண் செய்து அடைத்து, பாத்திரத்தினடியில் தீயிடவும்; இவ்விதம் செய்ய உள்ளடங்கிய சரக்குகளிலிருந்து தூமங்கூட வெளிவராது உள்ளே சூழ்ந்து, அச்சரக்குகள் க்ஷாரமாகும்; இதற்குக் "கல்யாணக க்ஷாரம்" எனப் பெயர். இந்த க்ஷாரத்தை நெய்யிற் கலந்தாவது, உணவில்

---

1. முனை குவிந்ததும் வாயகன்றதுமான மரக்குழலை மழமழப்பாகச் செய்து, குவிந்த முனையை குதத்தினுள் செலுத்தி, அகன்ற அடிப்பிரதேசத்தினுள் மருந்தைப் போட்டு, வாயால் பலமாக ஊதவும். குழலின் அடிப்புறம் "ட" மாதிரி வளைந்து மேல் நோக்கியதா யிருக்கவேண்டும். இக் குழலின் நீண்ட முனையை குதத்தில் பிரவேசிக்கச் செய்யவும்; வளைந்த தலை மேல்நோக்கி யிருந்தால் ஊதுவதற்குச் சௌகரியமா யிருக்கும்.

சேர்த்து மறைத்தாவது உபயோகித்து வருவதோடு, ஸ்நிக்த்த மான போஜனங்களையும் புஜித்து வரவேண்டும். இதனால் உதாவர்த்தம், மலபந்தம், அர்சஸ், குல்மம், பாண்டு, மஹோதரம், கிருமிரோகம், நீரடைப்பு, அச்மரீ, சோகை, இருதய வியாதிகள், கிரஹணீ ரோகம், மேஹம், ப்லீஹரோகம், வயிற்றுப் பொருமல், ச்வாஸகாஸம் இவை தீரும். 140—143.

பலமான மலபந்தமுள்ள உதாவர்த்தத்திற்கு கிகித்ஸை :—அப்பால், மலம் இறுகிப்போய் வருந்தும் உதாவர்த்த ரோகிகளுக்கு மிகுந்த மலச்சிக்கலுள்ள அர்சோரோகிக்குக் கூறப்பட்டுள்ள சிகித்ஸைகளைச் செய்யலாம்.—143½.

அர்சஸ் முதலியவற்றிற்குக் கரஞ்ஜ சுக்தம்:—இரண்டு துலாம் புங்கமரப் பட்டையை இடித்து, ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒருபங்கு கஷாயமாய் மிகும்படியாகக் காய்ந்த பிறகு, அதில் எண்பது பலம் வெல்லத்தைக் கரைத்து, எட்டுப் பலம் த்ரிகடுவையும் சூர்ணம் செய்து சேர்க்கவும். இதை ஒரு மாஸகாலம் பாத்திரத்திலேயே சீலமண்செய்து மூடியிட்டு வைத்திருக்க, சுக்தம் என்கிற காடியாகப் பக்குவமடையும். இது ஜாடராக்னியை விருத்திசெய்து பாசநசக்தியை அதிகரிக்கச் செய்யும்; அநுலோமநமாக வேலைசெய்து, அர்சஸ், ப்லீஹ ரோகம், குல்மம், மஹோதரம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும்.—144.

கரஞ்ஜாதி சுக்தம்—இரண்டாவது:—நூறு பலமெடை புங்கம் பட்டையையும், இருநூறு பலம் சித்திரமூலத்தையும், இருநூறு பலம் கண்டங்கத்திரிவேரையும், மூன்று திரோணம் ஜலத்தில் சேர்த்து, அதை நாலில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி, வடிக்கட்டி, அதில் நூறு பலம் வெல்லம் சேர்க்கவும்; பிறகு த்ரிஜாதகம், த்ரிகடு, கிரந்திதகரம், மாதளைவேர், கல்லுருவி, தாமரைக்கிழங்கு, கொத்தமல்லி விதை, சவியம், கொட்டைக்கரந்தை, இஞ்சி, புளிவஞ்சி, இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்து நன்கு சூர்ணம்செய்து கல்கமாகச் சேர்க்கவும். கஷாயம் ஆறியபிறகு இருபது பலம் தேனையும், பத்துப் பலம் பச்சைத் திராக்ஷையையும், பத்துப் பலம் கொடிமாதளையையும், போதுமான அளவு கரும்புத் துண்டுகளையும் சேர்த்து, நெய்வைத்துப் பழகிய பாத்திரத்தில் ஒருமாஸம் ஊறிச் சீலமண் செய்து வைத்திருக்கவும். இது அர்சஸ்ஸுகளை வாளால் அறுப்பதுபோல் அடியோடு அகற்றக்கூடிய சிறந்த சுக்தம் என்னும் காடி; ஜாடராக்னியை நன்கு தீபநம் செய்யும். பாண்டுரோகம், விஷப்பற்று, மஹோதரம், குல்மம், ப்லீஹரோகம், வயிற்றுப் பொருமல், மூத்திரமார்க்கத்தில் கல்லடைப்பு, நீர்ச்சுருக்கு இவ்வியாதிகளையும் நிவ்ருத்தி செய்யும். 145—148.

பீல்வாதி சுக்தம் :—ஒரு திரோணம் சிறுகிளாப்பழத்தின் ரஸத்தை வடிகட்டி, நெய்வைத்துப் பழகிய பாத்திரத்தில் ஊற்றி, அதில் காட்டாத்திப்பூ, திராக்ஷை, பேரீச்சம்பழம், நெல்லிக்கனி, வட்டத்திருப்பி, அரேணுகம், காஞ்சொறிவேர், புளிவஞ்சி, த்ரிகடு, இலவங்கப்பட்டை, சிற்றேலம், நாகப்பூ, இலந்தங்கொட்டை, லவங்கம், வாய்விடங்கம், மோடி, சித்திரமூலம் இவற்றை வகைக்கு ஒரு பலம் வீதம் எடுத்துச் சூர்ணித்துச் சேர்த்து, நூறு பலம் வெல்லத்தையும் கரைத்து, அப்பாத்திரத்தைக் காற்றுப் புகாதபடி பதினைந்து தினங்கள் வைத்திருந்து, அதைப் பருகிவர, அர்சஸ்ஸும், குல்மமும் நிவ்ருத்தியாம்; இந்த சுக்தம் ஜாடராக்னியையும் நன்குபலப்படுத்தும்.-149, 150.

தசமூலாதி அவலேஹம் :—தசமூலம், சிவதைவேர், வட்டத்திருப்பி, எருக்கம்வேர், அதிவிடயம், சிறுதேக்கு இவை ஒவ்வொன்றும் பத்துப் பலமெடையெடுத்து, ஒரு திரோணம் ஜலத்தில் அவற்றை அமிழ்த்தி, கால் பாகமாகச் சுண்டக் காய்ச்சி வடிக்கட்டி, நூறு பலம் வெல்லத்தைச் சேர்த்து, த்ரிகடு, சவ்யம், கடுக்காய் இவற்றை வகைக்கு ஐந்து பலமும், சித்திரமூலமும் யவக்ஷாரமும் இரண்டிரண்டு பலமும் சூர்ணம்செய்து கலந்து, கரண்டியில் சூழ்ந்து தேன் பதமாக வரும்வரையில் கிளறியெடுக்கவும். இதை உட்கொள்ள குல்மம், ப்லீஹரோகம், அர்சஸ், குஷ்டம், மேஹம், அக்னிமாந்தியம் இவை தீரும்.—151, 152,

சித்ரகாதி அவலேஹம் :—ஐம்பது பலம் சித்திரமூலத்தை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, அதை நாலில் ஒருபங்காகச் சுண்டவைக்கவும்; பிறகு எட்டுப் பலம் பழைய வெல்லத்தைச் சேர்த்து, மீண்டும் லேஹ்யபதமாகக் காய்ச்சிப் பக்குவம் செய்யவும்; பிறகு த்ரிகடு, ஜடாமாம்ஸி, கடுக்காய், கோரைக்கிழங்கு, மஞ்சள், வாய்விடங்கம், சித்திரமூலம், ஏலம் இவற்றை ஒவ்வொரு பலமெடுத்து சூர்ணம்செய்து, லேஹ்யத்தில் கூட்டிக் கிளறவும். இது அர்சஸ், குஷ்டம், ப்லீஹரோகம், குல்மம், மஹோதரம் இவற்றைப் போக்கும். அடிக்கடி இதை உபயோகித்தால் ஜாடராக்னியும் நன்கு விருத்தியாகும்.-153, 154.

வியோஷாதி குளிகை :—த்ரிகடு, த்ரிபலை, வாய்விடங்கம், எள், மேசங்கொட்டை, சித்திரமூலம் இவற்றைச் சூர்ணம்செய்து, வெல்லம் கூட்டி குளிகை செய்யவும். இதை யுபயோகித்துவந்தால் அர்சஸ்ஸும் சர்மரோகமும் தீரும்.—155.

ஸூரண புடபாகம் :—காருங்கருணைக் கிழங்கு ஒன்று எடுத்து, அதன்மேல் களிமண் பூசி, புடபாக முறைப்படி பக்குவம் செய்யவும். இதையெடுத்து, மேல் சர்மம் முதலியதை விலக்கிவிட்டு, உப்பையும் எண்ணெயையும் சேர்த்துத் தாளித்து, அர்சஸ்ஸுகளைப் போக்க புஜித்து வரலாம்.—156.

ஸூரணாதி குளிகை:—(1) மிளகு ஒரு பங்கு, திப்பிலி இரண்டு பங்கு, சுக்கு மூன்று பங்கு, சித்திரமூலம் நான்கு பங்கு, இவ்விதம் இவற்றைக் கிரஹித்து, காருங் கருணைக்கிழங்கைப் பதினாறு பலம் சேர்த்து, வெல்லம் கலந்து செய்த குளிகை அர்சஸ்ஸை அடியோடு அகற்றும். (2) உலர்ந்த காருங் கருணைக் கிழங்கு பதினாறு பாகம், சித்திரமூலம் அதில் அரைப் பங்கு, சுக்கு இரண்டு பங்கு, மிளகு ஒரு பங்கு; இந்த அளவுப்படி இவற்றைச் சூர்ணம் செய்து, வெல்லம் கலந்து ஆட்டி குளிகைகள் செய்யவும். இதுவும் அர்சஸ்ஸைப் போக்கவல்லது.157,158.

பத்யாதி சூர்ணம்:—கடுக்காய், சுக்கு, திப்பிலி, புங்கம்வேர், வாய்விடங்கம், சித்திரமூலம் இவற்றைச் சம அளவாகச் சேர்த்து சூர்ணம் செய்து, அதற்குச் சமயெடை சர்க்கரை கலக்கவும். இது படபாக்னி போன்ற வீர்யத்துடன் வெகு குருவான உணவையும் ஜீர்ணம் செய்யவல்லது.—159.

களிங்காதி சூர்ணம்:—வாலுழுவை, நிலப்பனங் கிழங்கு, திப்பிலி, சித்திரமூலம், நாயுருவி விதை, நிலவேம்பு, இந்துப்பு இவற்றைச் சமபாகமாகச் சூர்ணித்து, வெல்லம் கலந்து குளிகைகள் செய்யவும். இக்குளிகை அர்சஸ்ஸைப் போக்கும்.—160.

ஸைந்தவாதி சூர்ணம் கலந்த தக்ரபானம்:—இந்துப்பு, சித்திரமூலம், வாலுழுவை, புங்கம்வேர், மஹாநிம்பப் பட்டை இவற்றைச் சூர்ணம் செய்து, மோரில் கலந்து, ஏழு நாட்கள் அந்த மோரை அர்சஸ்ஸுகளை அகற்றப் பருகிவரலாம்.—161.

சுஷ்கார்த்ரார்சஸ்ஸுகளுக்கு முக்கியௌஷதங்கள்:—சுஷ்கார்சஸ்ஸில் சேராங்கொட்டையும், ஆர்த்ரார்சஸ்ஸில் குடசப்பாலையின் பட்டையும் சிறந்த ஔஷதங்களாம். மோர் எல்லா அர்சஸ்ஸுகளிலும், எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கத் தகுந்தது; பலத்தை விருத்திசெய்யக் கூடியது; மலத்தையும் வெளிப்படுத்துங் குணமுடையது.—162.

அர்சஸ்ஸில் பொதுவாக உபயோகிக்கக்கூடியதும் கூடாததும்:—இறுகி அடைபட்டுள்ள மலங்களை உடைத்து அவற்றையும் அபானவாயுவையும் அநுலோமகமாகக் கொண்டு வருவதற்கு எவை ஏற்றவையோ, ஜாடராக்னியை எவை பலப்படுத்துமோ, அவ்வித அன்ன-பானங்களையும் ஔஷதங்களையும் அர்சோரோகி உபயோகிக்க வேண்டும்; இவற்றிற்கு எதிரிடையான குணமுள்ளவைகளை விலக்கிவிட வேண்டும்.—163.

அர்சஸ்முதலியதில் ஜாடராக்னியைப் பாதுகாப்பது பிரதானம்:—அர்சஸ், அதிஸாரம், கிரஹணீ என்னும் இவ்வியாதிகள் பெரும்பாலும் ஒன்றுக்கொன்று காரணங்களாயிருந்து, ஒன்றையொன்று உற்பத்திசெய்யு மியல்புடையன. இவை ஜாட-

ராக்னி குன்றிவிடுமானால் உற்பத்தியாகும்; அது விருத்தியானால் அடங்கிவிடுகின்றன; ஆகவே ஜாடராக்னியையே இதில் விசேஷமாகப் பாதுகாக்கவேண்டும்.—164.

---

## ஒன்பதாம் அத்தியாயம்.

## அதிஸார சிகித்ஸை.

இனி அதிஸார சிகித்ஸையென்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது:—

அதிஸாரத்தில் லங்கநம் அவசியம்:—அதிஸாரம் பெரும்பாலும் ஜாடராக்னியைச் சீரழித்து, ஆமாசயத்தைப்பற்றி உண்டாகும்; ஆகவே வாதாதிஸாரத்திலும் லங்கநம் அனுகூலமாகும்.-1.

அதிஸாரத்தில் வமநம் செய்விக்கும் நிலைமை:—வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், வாயில் அதிக நீர் ஊறுதல் இவற்றால் வருந்தும் அதிஸார ரோகிக்கு வமநம் செய்விக்க வேண்டும்.—1½.

அதிஸாரத்தில் மலப்போக்கைத் தடுக்கக்கூடாத நிலைமைகள்:—மிகவும் பிரகோபமடைந்தும், மிதமிஞ்சி பக்குவமானதும் பக்குவமாகாததுமான உணவுகளோடு மிச்ரமாகவும் உள்ள தோஷங்கள் அதிஸாரமாகப் பரிணமிக்கும்; அவ்வித அதிஸாரங்களில் பேதியாவதை நிறுத்த முயலாமல் உபேக்ஷிப்பதே ஏற்ற சிகித்ஸை; மிகவும் பொருமிப் பொருமி வெளிவருபவையும், அதைத் தானே இடம்விட்டுப் பெயர்ந்தோடி வெளியாகும் தன்மையனவுமான அவ்வித தோஷங்கள் அதிஸாரரூபமாய் வெளியாய்விடுவதே நலம். ஆமாதிஸாரத்தில் முதலில் மலத்தைக் கட்டுவதற்கு ஔஷதம் பிரயோகிக்கக் கூடாது.—2, 3½.

அதிஸாரத்தில் ஹரீதகியைப் பிரயோகிக்கும் நிலைமை:—வயிற்றுப் பொருமல், குருத்வம், வயிற்றுவலி, வயிறு ஸ்திமிதமாதல் ஆகிய இக்கோளாறுகளை யுண்டுபண்ணுவதும், வயிற்றில் கட்டுண்டதுமான தோஷத்தின் பற்றுள்ள அதிஸாரத்தில் கடுக்காய் பிராணனைக் காக்கக்கூடிய ஔஷதமாகும்.—4½.

மத்திமதோஷமான அதிஸாரத்திற்கேற்ற சிகித்ஸைகள்:—(1) மத்திம தோஷமுள்ள அதிஸார ரோகியானவன், வாஸனைப் புல், திப்பிலி, சுக்கு, வசம்பு, கொத்தமல்லிவிதை, கடுக்காய் இவற்றை ஜலத்தில் நன்றாகக் குழம்புபோல் காய்ச்சிக் குடிக்கலாம். (2) அல்லது பில்வப்பழம், கொத்தமல்லிவிதை, கோரைக் கிழங்கு, சுக்கு, வெட்டிவேர் இவற்றின் குழம்பையாவது, (3) பிடாலலவணம், வட்டத்திருப்பி, வசம்பு, கடுக்காய், வாய்விடங்கம், சுக்கு இவற்றின் குழம்பையாவது, (4) சுக்கு, கோரைக் கிழங்கு, வசம்பு, திப்பிலி, பில்வப்பழம், வெட்பாலரிசி, பெருங்காயம் இவற்றின் குழம்பையாவது பருகலாம். 5—7.

பழம், காட்டாத்திப்பூ, வட்டத்திருப்பி, த்ரிபலே, பஞ்சகோலம், யவக்ஷாரம், விளாம்பழம், மாம்பழம், நாவற்பழம், ஓமம் இவை ஸமபாகம், பில்வப்பழம் ஆறுபாகம் இவற்றை ஒருமிக்கத் தயிர், பயறு சமைத்த நீர், வெல்லம், யமகஸ்நேஹம் இவற்றில் கலக்கி பக்குவம் செய்யப்படும் அபராஜித கலம் என்கிற இதற்கு தீபநம், பாசகம், க்ராஹி, ருச்சியம் என்கிற குணங்கள் உண்டு; இது ப்ரவாஹிகையைப் போக்கும். 25—28.

மலக்ஷயத்தில்[1] உபயோகமான சில பத்திய உணவுமுறைகள்:—(1) இலந்தம்பழம், பில்வப்பிஞ்சு, சம்பா அரிசி, யவதானியம், பயறு, உளுந்து, எள்ளு இவற்றின் கல்கங்களைச் சேர்த்து தாந்யயூஷம்[2] என்கிற ஒருவகை கனத்த கஞ்சியைப் பக்குவம் செய்து, யமகஸ்நேஹத்தில் அதைக் கலந்து தாளித்து, தயிரையும் மாதளம்பழரஸத்தையும் சேர்த்துக்கொள்ளவும். மலம் க்ஷயித்து, வாய் வறட்சியுற்று வருந்தும் பிணியாளிக்கு இத்துடன் சம்பா அன்னத்தைக் கொடுக்கலாம். (2) தயிரின் ஆடையை யமகஸ்நேஹத்தில் சேர்த்து, வெல்லமும் சுக்கும் கூட்டித் தாளித்து, அதையாவது கொடுக்கலாம். (3) யமகஸ்நேஹத்தில் பக்குவம் செய்த ஸூரையையாவது வியஞ்ஜனமாக உபயோகிக்கலாம். (4) வெள்ளுள்ளியின் யூஷத்தை யமகஸ்நேஹத்தால் தாளித்து, சிறிது எலுமிச்சம்பழரஸத்தால் அம்லமாகச் செய்து, அதையாவது உட்கொள்ளலாம். (5) யமகஸ்நேஹத்தில் வறுத்தெடுத்த மாப்பண்டங்களில் த்ரிகடுகப் பொடியைத் தூவி, அதையாவது உண்ணலாம். (6) அவ்விதமே உளுத்தமாவையும் நன்ருகப் பக்குவம் செய்து, நெய்யின்மேற் படிந்துள்ள ஏட்டையும் அநுபானமாகக் கொண்டாவது உபயோகிக்கலாம். (7) அல்லது செம்மறியாடு, வெள்ளாடு இவற்றின் குடல் முதலிய உள்ளவயவங்களின் மாம்ஸரஸத்தை நன்ருகப் பக்குவம்செய்து வடிக்கட்டி, மாதளம்பழரஸத்தால் அம்லமாக்கி, கொத்தமல்லிவிதை·ஸ்நேஹம்·சுக்கு இவற்றையும் கூட்டி, செஞ்சம்பா அன்னத்தை இத்துடன் புஜிப்பதோடு, அம்மாம்ஸரஸத்தையும் பருகலாம்; இதை உபயோகிக்க மலக்ஷயக் கோளாறுகளிலிருந்து பிணியாளி விடுபடுவான். 29—34½.

ப்ரவஹிகையில் வேறு சில முறைகள் :—(1) பில்வப்பிஞ்சு, தைலம், திப்பிலி, சுக்கு இவற்றை நன்ருகத் துவைத்து, வெல்லமும் சேர்த்து லேஹ்யமாகப் பக்குவம் செய்யவும். வலியுடன் கூடிய ப்ரவாஹிகாரோகி அபானவாயு அடைப்பட்டிருக்கையில் இதை யுட்கொள்ளலாம். (2) வெள்ளிலோத்திப்பட்டை, காட்

1. ப்ரவாஹிகையில் மலம் இறுகி க்ஷீணித்துச் சீதமும் இரத்தமும் மாத்திரம் வெளியாவது ப்ரவஹித்தம்.

2. தாந்ய யூஷம் — பல தானியங்களாலான ஒருவித குழம்பு.

டாத்திப்பூ, இலந்தயிலை இவற்றைக் கல்கமாக ஆட்டி, தயிரின் ஆடை, தேன், விளாம்பழஸ்வரஸம் இவற்றில் கரைத்து ப்ரவாஹிகையில் பருகலாம். (3) அபாநவாயுவும் மலமும் சிக்கிக் கொண்டும் அதிக வலியும் கடுப்புமுண்டாய் வருந்துபவனும், பிசுபிசுப்பான இரத்தம் கசிந்துகொண்டு நாவறட்சியினால் கஷ்டப்படுகிறவனுமான ப்ரவாஹிகாரோகி பாலைவிசேஷமாகப் பருகி ஆப்யாயம் செய்துகொள்ளலாம். யமகஸ்நேஹத்தைக் கொடுத்து அதன்மேல் ஸாதாரண பசும்பாலையாவது, தாரோஷ்ணத்தையாவது கொடுக்கலாம். (4) மீண்டும் ஆமணக்கம்வேரைப் போட்டுக் காய்ச்சிய பாலையாவது, (5) பில்வப்பிஞ்சைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையாவது பருகக் கொடுக்கலாம். (6) பாலை மூன்று பங்கு ஜலம் விட்டு விளாவி, அதில் இருபது கோரைக்கிழங்குகளை உடைத்துப் போட்டு, பால் மாத்திரம் மிகும்படியாகக் காய்ச்சிப் பருகினால் வேதனையுடன் கூடிய சீதபேதி நிவ்ருத்தியாகும். (7) திப்பிலியையாவது மிளகையாவது மிருதுவாகச் சூர்ணம் செய்து, ஜலத்தில் கலந்து உட்கொண்டால், நீடித்து வருத்தும் ப்ரவாஹிகை சீக்கிரம் தீரும். (8) சீதப்பெருக்கு இல்லாமல் வலிமாத்திரம் அதிகரித்து வருந்துபவனும், ரூக்ஷமான குடலையுடையவனுமான பிணியாளிக்கு யவக்ஷாரம் கலந்த க்ருதத்தைக் கொடுத்து வரலாம். (9) தயிரின் ஆடை, ஸுராயின் ஆடை இவற்றிலும், தசமூலகஷாயத்திலும் இந்துப்பையும் பஞ்சகோலங்களையும் கல்கமாகச் சேர்த்துப் பக்குவம் செய்தெடுத்த தைலம் வயிற்றுக்கடுப்பை உடனே நிவ்ருத்தி செய்யும். (10) சுக்கு ஆறு பலம், கிரந்திதகரம் இரண்டு பலம், இந்துப்பு இரண்டு பலம், எண்ணெய் பதினாறு பலம் இவற்றை நாலு மடங்கு தயிரில் சேர்த்துப் பக்குவம் செய்யவும்; இது சீதபேதியைப் போக்கும். (11) மாம்ஸம், பால், நெய் இவை ஒருவகையில் மலச்சிக்கலையும் வலியையும் போக்கக்கூடியன; பானம் செய்வதற்கும், அநுவாஸனத்திற்கும், அப்யங்கத்திற்கும் உபயோகிக்கப்படுகிற தைலம் மற்றொரு வகையில் அச் செயல்களை நிறைவேற்றக் கூடியதாம்; எங்ஙனமெனில், கோளாறடைந்த வாயு வலியையுண்டுபண்ணும்; அவ்வித வாத விகாரங்களைப் போக்குங் குணமுடைய ஔஷதங்களுள் தைலமே முதன்மையானது. பித்தம் முதலிய இதர தோஷங்களால் நெருக்கப்படுவதால், இயற்கையிலேயே அசையும் சுபாவமுள்ளதும், பரவியோடும் தன்மையதுமான வாதம் தன் ஸ்த்தாநத்தில்[1] இருந்துகொண்டு துன்பம் விளைவிக்கும்; ஆகவே ஜாடராக்னி மந்தமாயிருப்பவனுக்கும் தைலம் முறைப்படி உபயோகிக்கப்படுமானால், அது மிக்க நன்மை தரும்; ஆம்: வாதாசயத்தில் தைலம் பிரவேசித்து ஸ்நிக்த்தமானால் ப்ரவாஹிகா

---

1. பக்குவாசயம் என்கிற கோஷ்டத்தின் ஒரு பாகம் வாதாசயம்.

ரோகம் நிலை நிற்காது. மலம் க்ஷீணித்து இதர தோஷங்கள் அதனதன் ஸ்த்தானங்களிலிருந்து நழுவி பலஹீனப்பட்டிருக்கையில், வாததோஷம் மாத்திரம் மிக்க பலம் பெற்றிருக்கையில், குடலிற் கடுப்புடன் வயிற்றுப்போக்குள்ள எந்த ப்ரவஹிகா ரோகிதான், உள்ளும் புறமும் தைல முபயோகிக்காமல் பிழைத்திருக்க முடியும்? 35—47.

குதப்ரம்சசிகித்ஸை:— (1) குதத்தில் வலியுண்டா யிருக்கையிலும், அந்த அவயவம் நழுவிப் போகையிலும் க்ருதத்தையும் பாலையும் இலந்தம்புளி-புளியாரை இவற்றின் இரஸத்திலும், தயிரிலும், சுக்கின் கல்கத்திலும் பக்குவம் செய்து பிரயோகிக்க வேண்டும். (2) முற்கூறிய இலந்தம் புளி முதலியவைகளை வெகு மிருதுவாகக் கல்கமாகச் செய்து சேர்த்து, கொத்தமல்லி விதை, மிளகு, பிடால லவணம், பஞ்சகோலங்கள், மாதளை இவற்றில் பக்குவம் செய்த க்ருதத்தையும் உபயோகிக்கலாம். (3) தசமூலகஷாயத்திற் பக்குவம் செய்த ஸ்நேஹவஸ்தியையாவது பிரயோகிக்கலாம். (4) கச்சோரம், சதகுப்பி, கோஷ்டம் இவற்றின் கஷாயத்திற் பக்குவம் செய்த ஸ்நேஹத்தையாவது, (5) வசம்பு, சித்திரமூலம் இவற்றின் கஷாயத்திற் பக்குவமான ஸ்நேஹத்தையாவது வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். (6) மதுர பதார்த்தங்களையும் அம்லபதார்த்தங்களையும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் பக்குவம் செய்த தைலத்தையாவது க்ருதத்தையாவது ப்ரவாஹிகையிலும், குதம் நெகிழ்வதிலும், மூத்திர அடைப்பிலும், இடுப்புப் பிடிப்பிலும் அநுவாஸந வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். (7) நழுவிப்போன குதத்திற்கு ஸ்நேஹங்களை லேபநம் செய்து, மிருதுவான பதார்த்தங்களால் ஸ்வேதநம் செய்து, மெதுவாக அதை உட்செலுத்திவிடவும்; அப்பால் மத்தியில் அமைக்கப்பெற்ற துவாரத்துடன் கூடிய சர்மத்தினால் கோபணம் என்கிற[1] பந்தநமிட்டுக் கட்டிவிடவும். (8) மஹாபஞ்சமூல கஷாயத்தில் பால் சேர்த்து, வாதஹரமான கல்கமும்[2] கூட்டி, அதில் குடல்நீக்கிய காட்டெலியின் இறைச்சியைச் சமைத்து, அதில் தைலத்தைப் பக்குவம் செய்து பானம் செய்யவும், அப்யங்கம் செய்யவும் உபயோகித்தால் குதநெகிழ்ச்சி நிவ்ருத்தியாகும். 48—53½.

பித்தாதிஸாரத்திற் கேற்ற சிகித்ஸைகள்:—(1) ஆமதோஷத்துடன் கூடிய பித்தாதிஸாரத்தில் தீக்ஷ்ணமும் உஷ்ணமுமான முறைகளை விலக்கி, முன் வாதாதிஸாரத்திற் கூறிய விதமாகவே லங்கநசிகித்ஸையைச் செய்யவேண்டும். (2) அதில் நாவறட்சியுண்டாகுமானால் நிலவேம்பும் நன்னாரி வேரும் கூட்டி பக்குவம்

1. கோபண பந்தநம் — முதற் பாகம் பார்க்க.
2. சிற்றாத்தை ஆமணக்கு முதலியவை வாதஹரமானவை.

செய்த ஷடங்கபாநீயத்தைப்[1] பானம் செய்விக்கலாம். (3) பசி யுண்டானால் கத்திரி, கண்டங்கத்திரி, தண்ணீர்விட்டாங் கிழங்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, சிற்றாமல்லி, மேர்மல்லி இவற்றின் கஷாயத்திற் பக்குவம் செய்ததும், ஆகவே ஜாடராக்னியைத் தூண்டுந்தன்மையதுமான பேயா முதலிய உணவு அநுகூல மாகும். (4) முற்கூறியவாறு செய்தும் அதிஸாரம் நிற்காமல் தொடருமானால், குடசப்பாலையின் கனியையும், அதன் பட்டை யையும், அதிவிடயத்தையும் தேன் சேர்த்து அரைத்துக் கல்க மாகச் செய்து, அரிசி கழுவிய நீரோடு உட்கொள்ளச் செய்ய லாம். (5) வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, வெட்பாலையின் பட்டை, மரமஞ்சள், கிரந்திதகரம், சுக்கு இவற்றையாவது தேன் விட்டு அரைத்து, அரிசி கழுவிய நீரோடு உட்கொள்ளச் செய்ய லாம். (6) அதிவிடயம், பில்வவேர், குடசப்பாலையின் பட்டை, வெட்டிவேர், கோரைக்கிழங்கு இவற்றின் கஷாயத்தைப் பருகக் கொடுக்கலாம். (7) அல்லது அதிவிடயம், பெருங்குரும்பை, மஞ்சள், வாலுழுவை, இரஸாஞ்ஜநம் இவற்றின் கஷாயத்தை யாவது தேன் கலந்து பானம் செய்விக்கலாம். (8) அல்லது அதி விடயம், சுக்கு, கோரைக்கிழங்கு, வாலுழுவை, சிறுதேக்கு இவற் றின் கஷாயத்தையாவது தேன் கூட்டி உட்கொள்ளச் செய்ய லாம். (9) ஒரு பலம் வெட்பாலரிசியைக் கஷாயம் காய்ச்சி யுட் கொண்டு, மாம்ஸரஸத்தையும் பருகினால் பித்த ஸம்பந்தமான வயிற்றுப் போக்கு சீக்கிரம் நிவ்ருத்தியாம். (10) இவ்விதமே கோரைக்கிழங்கையும் கஷாயம் செய்து அதில் தேன் ஊற்றி பானம் செய்யலாம். (11) இலவம்புஷ்பத்தின் காம்புகளைச் சேர்ந்து, ஹிமகஷாயம் பக்குவம் செய்தாவது, அதில் தேன் கூட்டி யுட்கொள்ளலாம். (12) நிலவேம்பு, கோரைக்கிழங்கு, வெட்பாலரிசி, இரஸாஞ்ஜநம் இவற்றின் சூர்ணத்தையாவது, (13) மரமஞ்சள், வெட்டிவேர், பில்வப்பழத்தின் உட்சதை, காஞ் சொறிவேர் இவற்றின் சூர்ணத்தையாவது, (14) எள், இலவம் பிசின், வெள்ளிலோத்தி, மஞ்ஜிஷ்டி, தாமரை, கருநெய்தல் இவற்றின் சூர்ணத்தையாவது, (15) சுக்கு, காட்டாத்திப்பூ, மாதளம்பட்டை, நெய்தல் இவற்றின் சூர்ணத்தையாவது தேன் கூட்டி, அரிசி கழுவிய நீரோடு உண்ணலாம். 54—63.

பக்வாதிஸார சிகித்ஸைகள்:—(1) மஞ்சள், வாலுழுவை, வெள்ளிலோத்தி, ஏலக்காய் இவற்றின் கஷாயம் பக்வாதிஸாரத் தைப் போக்கும். (2) ரோத்ராதிகணம், அம்பஷ்டாதிகணம், ப்ரி யங்க்வாதிகணம் இவற்றைத்[2] தனித் தனியே கஷாயமிட்டு, அங்

1. ஷடங்க பாநீயம்—ஜ்வரசிகித்ஸையிற் கூறிய முறை.

2. ரோத்ராதி கணம் முதலியவற்றைப் பற்றி ஸூத்திர-ஸ்த்தாநம் 15-ம் அத்தியாயம் பார்க்க

னமே பானம் செய்யலாம். (3) பெருவாகைப் பட்டை, அதிமதுரம், ஞாழல், மாதளந்தளிர்கள் இவற்றைக்கொண்டு பேயா, விலேபி, கலம் என்கிற பச்சடி இவற்றைச் செய்து, தயிரும் மாதளம்பழரஸமும் கூட்டி யுட்கொள்ளலாம். (4) அவ்விதமே விளாம்பழம், பில்வப்பழம், மாம்பழம், இலந்தம்பழம் இவற்றின் உட்சதைகளை யெடுத்து பேயா முதலியவற்றைப் பக்குவம் செய்து உபயோகிக்கலாம். (5) ஆமதோஷம் நீங்கிய பக்வாதிஸாரத்தில் வெள்ளாட்டுப் பாலைக் கொடுக்கலாம். (6) அதிஸாரத்திற்குக் காரணமான தோஷம் அதிகமாயிருந்து அதனால் வியாதி நிவ்ருத்தியாகாவிட்டால், பிணியாளி தேஹவன்மையுள்ளவனாயிருந்தால் அவனுக்கு விரேகம் செய்விக்கலாம். 64—66½.

இரத்தம் கலந்த அதிஸாரத்திற்கான சிகித்ஸை:—(1) மலமும் இரத்தமும் மாறி மாறி வெளியானால் முருக்கங்காயைக் கஷாயமிட்டுக் குடிக்கலாம்; அல்லது அதையே பாலுடன் கூட்டிப் பருகலாம்; பிறகு அவரவருடைய சரீரவன்மைக்கு ஏற்றவளவாக இளஞ்சூடான பாலையே அனுபானமாகப் பருகலாம். இதனால் வயிற்றிலுள்ள மலம் தாராளமாய் வெளிப்பட்டுப்போனால், அதிஸாரம் முதலிய வயிற்றுக்கோளாறு நிவாரணமாம். (2) முருக்கங்காய் போலவே கழற்சிக்காயையும் குடலைச் சோதகம் செய்ய உபயோகிக்கலாம். 67—69.

வயிற்றுவலியில் அநுவாஸநவஸ்தி :—மலங்களை வெளிப்படுத்திய பிறகு பிணியாளிக்கு ஸம்ஸர்கீ என்கிற பத்தியோபசாரம் செய்கையில் வயிற்றுவலி தொடருமானால், அவனுக்கு யதோசிதமாக அநுவாஸநவஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும். சதகுப்பி, தண்ணீர்விட்டாங்கிழங்கு, பில்வவேர், அதிமதுரம் இவற்றின் கஷாயத்தில், நாலிலொரு பங்கு நெய்யும், நெய்க்கு நாலிலொருபங்கு எண்ணெயும், பாலும் கூட்டி பக்குவம் செய்துள்ள க்ருதத்தை அநுவாஸநமாகப் பிரயோகிக்கலாம்.—70, 71.

நிற்காத அதிஸாரத்தில் பிச்சாவஸ்தி :—இவ்விதமெல்லாம் செய்தும் அதிஸாரம் நிவ்ருத்தியாகாமற் போனால், பிறகு பிச்சாவஸ்தியை[1] அடியிற் கூறப்படும் ஔஷதத்தைக் கொண்டு பிரயோகிக்க வேண்டும் :—இலவம்பூக்களின் ஈரமான காம்புகளைத் திரட்டி யெடுத்து, பசுமையான தர்ப்பைகளால் அவற்றைச் சுற்றவும்; கறுத்த களிமண்ணால் அதற்கு மேற்பூச்சிடவும். பசுஞ்சாணவறட்டிகளை யெரித்து, அவ்வக்னியினால் அதைக் காய்ச்சி யுலர்த்தவும். மேற்பூச்சாயுள்ள மண் உலர்ந்த பிறகு, உள்ளடங்கிய புஷ்பக்காம்புகளை யெடுத்துத் துவைத்து, அதை ஒரு பிடியளவு எடுத்துக் கொள்ளவும்; அதை ஒரு படிப் பால்

1. பிச்சாவஸ்தி — நிரூஹவஸ்திக்கான ஔஷதங்களையே சொற்ப அளவில் பிரயோகித்தல்.

சேர்த்து அரைத்து, வடிக்கட்டி, அதைக்கொண்டு நிரூஹவஸ்தி செய்யவும். பிறகு நதம் என்கிற கந்தத்திரவ்யம், அதிமதுரம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, நெய்யும் தேனும் கூட்டி பக்குவம் செய்த தைலத்தினல் அப்யங்கம் பண்ணி, ஸ்நானம் செய்து, பாலேபாவது, ஜாங்கலமாம்ஸரஸத்தையாவது சேர்த்துக் கொண்டு போஜனம் செய்யலாம். விரேசனமாகவும், ஆஸ்த்தாபநவஸ்தியாகவும் பிரயோகிப்பதற்கேற்ற இம்முறையானது பித்தாதிஸாரம், ஜ்வரம், வீக்கம், குல்மம், வாதரக்தம், கிரஹணீ இக்கோளாறுகளேயும், பொதுவில் கடுமையான அதிஸாரத்தையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யவல்லது. 72—75.

ஸர்வாதிஸாரத்திலும் குடஜாதி பாணிதம்:—குடசப் பாலேயினுலான பாணிதத்தில் வத்ஸகாதி கணத்தின் கல்கத்தையாவது, அம்பஷ்டாதி கணத்தின் கல்கத்தையாவது, தேனையாவது கூட்டி உட்கொள்ள எல்லாவித அதிஸாரமும் நிவ்ருத்தியாகும்.—76.

கடுமையான அதிஸாரங்களில் புடபாக முறைகள்:—வலியுண்டு பண்ணுததும், ஆமதோஷ ஸம்பந்தமில்லாததும், அக்னிதீபநமுள்ளவனுக்கு உண்டாயிருப்பதுமான அதிஸாரம் இரத்தக்கசிவுடன்கூடியதா யிருந்தாலும், நீடித்த நாட்களாகத் தொடர்வதாலும், பலவிதமான நிறங்களுடன் கூடியதா யிருந்தாலும், அவ்வதிஸாரத்தைப் புடபாகமுறைப்படி பக்குவம் செய்த ஔஷதங்களேக் கொண்டு சிகித்ஸை செய்யவேண்டும். (1) பெருவாகையின் பட்டையைக் கல்கமாக அரைத்து பிண்டமாகச் செய்து, அப்பிண்டத்தைப் பெருங்குமிழன் இலேகளால் சுற்றி, அதன்மேல் மண் பூசி, அக்னியில் புடமிட்டு, அதைப் பிழிந்து வரும் ரஸத்தைக் குளிரச்செய்து, அதில் தேனவது சர்க்கரையாவது கூட்டி அதிஸாரரோகி உட்கொள்வானுக. (2) இதேவிதமாகப் பாலுள்ள மரங்களின் பட்டைகளாலும் அவற்றின் விழுதுகள் அல்லது முளேகளாலும் புடபாக ஸ்வரஸம் செய்து உபயோகிக்கலாம். (3) பெருவாகைப் பட்டையை நெய் சேர்த்து, நீராவியில் வேகவைத்துத் தேனுடன் உபயோகித்தால், கடுமையான அதிஸாரத்தையும் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும். 77—80.

இரத்தாதிஸாரமும் அதன் சிகித்ஸைகளும்:—பித்தாதிஸாரத்தினல் பீடிக்கப்படுபவன் பித்தத்தை விருத்திசெய்யக் கூடியவைகளேயே உபயோகிக்க அவனுக்குப் பித்தமானது நாவறட்சியோடும் ஜ்வரத்தோடும் கூடிய இரத்தாதிஸாரத்தையும், குதத்தில் கடுமையான அழற்சியோடு கூடிய புண்ணேயும் உண்டுபண்ணும். அதில் (1) தாமரைப்பூ, கருநெய்தல், மஞ்ஜிஷ்டி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டுப் பாலேயாவது, (2) இல

---

1. ஆமதோஷம் என்பதால் சீதம் என்கிற வெளுத்த கோழை போன்றுள்ள மலம் இங்கு குறிக்கப்படுகிறது.

வம்பிசின் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டுப்பாலையாவது உட்கொள்ளக் கொடுப்பது அனுகூலமானதாம். (3) நன்னாரிவேர், அதிமதுரம், வெள்ளிலோத்திப் பட்டை இவற்றைக் கூட்டியாவது, (4) ஆலமரம் முதலியவற்றின்[1] தளிர்களைச் சேர்த்தாவது காய்ச்சிய ஆட்டுப்பாலில் தேனும் சர்க்கரையும் கூட்டிப் பருகுவதற்கும், அன்னத்தில் கலந்து புஜிப்பதற்கும், குதத்தில் ஊற்றி அவ்விடத்தை நனைப்பதற்கும் அதை உபயோகிக்கலாம். (5) அங்ஙனமே மாம்ஸரஸம் முதலியவைகளும்[2] அம்லம் சேராமல் நெய் கூட்டி பானத்திற்கும் அன்னத்துடன் கலந்து உபயோகிப்பதற்கும் அனுகூலமானவை. (6) பெருங்குமிழம்பழத்தினாலான யூஷத்திலும் சொற்பம் அம்லரஸமும் சர்க்கரையும் கலந்து உபயோகிப்பதும் நலம். (7) ஆட்டுப்பால் ஒரு பங்கும் ஜலம் அரைப்பங்கும் சேர்த்து, விளாமிச்சைவேர், கருநைதல், சுக்கு இவற்றையும், சிற்றுமல்லி ஸ்வரஸத்தையும் கூட்டி பேயாவாக உபயோகிக்க இரத்தாதிஸாரம் தீரும். (8) தேனும் சர்க்கரையும் கலந்த வெண்ணெயையாவது போஜனத்திற்கு முன்பு உண்ணலாம். (9) இரத்தப் பெருக்கு மிகுதியானால், வெள்ளாட்டினுடைய அல்லது மானின் இரத்தத்தை நெய்யிற் பசனம்செய்து மூன்று நாள் உட்கொள்ளவும்; இதற்குப் பால் அனுபானம்; இம்மூன்று நாட்களிலும் பால்கலந்த அன்னத்தையும் புஜிக்கலாம். (10) பாலைக் கடைந்தெடுத்த நெய்யைப் பருகிக்கொண்டே சாதகபக்ஷியின் மாம்ஸரஸத்தை உட்கொண்டால் ஆரோக்கியம் பெறுவான். (11) தண்ணீர்விட்டாங் கிழங்கின் கல்கத்தைப் பாலிற் கலந்து உட்கொண்டு, பாலும் அன்னமுமாகப் போஜனம் செய்யலாம்; அல்லது தண்ணீர்விட்டாங் கிழங்கைச் சேர்த்து பக்குவம்செய்த க்ருதத்தையாவது உபயோகிக்க இரக்தாதிஸாரம் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். 81—88.

ஸந்நிபாதாதிஸாரத்தில் லாக்ஷாதி க்ருதம் :—கொம்பரக்கு, சுக்கு, திப்பிலி, கடுகரோகிணி, மரமஞ்சளின் தோல், வாலுழுவை இவற்றைச் சேர்த்துச் செய்த க்ருதத்தை பேயா, மண்டம் இவற்றுடன் உட்கொள்ள கடுமையான ஸந்நிபாதாதிஸாரம் சீக்கிரம் தீரும்.—89, 89½.

இரக்தாதிஸாரத்திற்கேற்ற வேறு சில முறைகள் :—(1) கறுத்த மண், சங்கு, அதிமதுரம், தேன், இரத்தம், அரிசிகழுவிய நீர் இவற்றைக் கூட்டிக் கொடுக்க இரத்தாதிஸாரம் நீங்கும். (2) ஞாழலின் சூர்ணத்தை அரிசிகழுவிய நீருடனும், தேனுடனும் கலந்துண்டாலும் தீரும். (3) நன்கு முதிர்ந்து கருநிறமாயுள்ள

1. ஆலமரம் முதலிய என்பதால் முதற் புத்தகத்திற் கூறியுள்ள ந்யக்ரோதாதிகணம் குறிப்பிடப்படுகின்றது.

2. ரஸம் யூஷம் முதலிய திரவான்னங்கள் குறிப்பிடப்படுகின்றன

எள்ளின் கல்கம் ஐந்து பாகமும், சர்க்கரை ஒரு பாகமும் வெள்ளாட்டுப்பாலில் கலந்து உட்கொள்ள இவ்வியாதி உடனே நிற்கும். (4) சந்தனக் குழம்பில் சர்க்கரையும் தேனும் கலந்து, அரிசி கழுவிய நீருடன் பருகினால் நாவறட்சி, அழற்சி, மூர்ச்சை, இரத்தபேதி இவை நீங்கும். 90—92½.

குதம் அழற்சியுற்றால் குளிர்ந்த ஸேக-லேபங்கள் :—குதமானது அழன்றாவது புண்பட்டாவது இருந்தால், அந்த ஸ்த்தாநத்தில் குளிர்ந்த நீர்களை ஊற்றுவதும், குளிர்ந்த வஸ்துக்களை லேபநம் செய்வதும் அநுகூலமானவையாம்.—93.

குதப்ரம்சம் முதலியவற்றில் பிச்சாவஸ்திப் பிரயோகம் :—இரத்தமானது சிறுகச் சிறுகவும் அடிக்கடியும் வெகு தடவைகளிலும் வலியுண்டுபண்ணியவாறு வெளியானாலும், அபாநவாயுவும் சிக்குண்டு வெகு சிரமப்பட்டு வெளிப்படுமானாலும், அல்லது வெளியாகாமற்போனாலும் அப்பிணியாளிக்கு (1) முற்கூறியுள்ள பிச்சாவஸ்தியைப் பிரயோகிக்கவேண்டும். (2) சிம்சபாமரத் தளிர்களையும், மலையகத்தித் தளிர்களையும் நன்கு இடித்து, அவற்றுடன் யவதானியத்தையும் சேர்த்து, கஷாயம் காய்ச்சி, அக்கஷாயத்தில் நெய்யையும் பாலையும் கூட்டி பிச்சாவஸ்தியைப் பிரயோகிக்கவும் ; ஊன்போன்ற பசை கசியும்போதும், வயிற்றுக் கடுப்புண்டாயிருக்கையிலும் இவ்வஸ்தியைப் பிரயோகிக்கலாம் ; க்ஷதகாஸத்தினால் க்ஷீணித்திருப்பவருக்கு இது பலமுண்டு பண்ணும். (3) வறள்தாமரை சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தினால் அநுவாஸநமும் செய்யலாம். 94—97.

மலம் கலந்த இரக்தாதிஸாராதிகளுக்குச் சிகித்ஸை :—(1) மலத்தோடாவது, மலம் வெளிவரு முன்பாவது, வெளிவந்த பிறகாவது இரத்தம் வெளிப்படுமானால் தண்ணீர்விட்டாங் கிழங்கின் ஸ்வரஸத்தில் பக்குவம் செய்த நெய்யை லேஹ்யம்போல் உபயோகிக்கலாம். (2) அப்பொழுதே கடைந்தெடுத்த வெண்ணெயில் சரி பாதி சர்க்கரையும், கால் பங்கு தேனும் கலந்து, லேஹ்யம் போல் குழைத்துட்கொண்டாவது ஹிதமாகப் புஜிப்பவனுக்கு முற்கூறிய கோளாறு நிவ்ருத்தியாகும். (3) ஆல், அத்தி, அரசு இவற்றின் மொட்டுகளை இடித்து, ஓர் இராப்பகல் முழுதும் உஷ்ண ஜலத்தில் ஊறவைத்து, அந்நீரில் க்ருதத்தைப் பக்குவம் செய்து, அதில் பாதியளவு சர்க்கரை சேர்த்து, கால் பங்கு தேனும் கூட்டி, லேஹ்யபதத்தில் பக்குவப்படுத்தியெடுக்கவும் ; கீழ் நோக்கியாவது மேல் நோக்கியாவது இரத்தம் வெளிப்படும்போது இது ஏற்ற ஔஷதம். 98—101.

கபாதிஸார சிகித்ஸை :—கபஸம்பந்தத்தினாலான அதிஸாரத்தில் வாதாதிஸாரத்திற் கூறியுள்ள ஆமதோஷ பாசந சிகித்ஸையையே விசேஷமாகச் செய்யவேண்டும் ; அவ்விதம் செய்தும்

கபாதிஸாரம் தொடருமானல், அக்னிதீபநம் உண்டு பண்ணக் கூடிய அடியிற் குறிப்பிடப்படும் கஷாயங்களில் ஒன்றைப் பருக லாம்; அவையாவன :—(1) பில்வவேர், கர்க்காடகச்ருங்கி, கோரைக்கிழங்கு, கடுக்காய், சுக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயம்; (2) வசம்பு, வாய்விடங்கம், படர்புல், கொத்த மல்லிவிதை, தேவதாருச்சக்கை இவற்றின் கஷாயம்; (3) அல் லது திப்பிலி, யானைத்திப்பிலி, மோடி, சித்திரமூலம் இவற்றின் கஷாயம். (4) வட்டத்திருப்பி, சித்திரமூலம், வெட்பாலரிசி, கிரந்திதகரம், கடுகரோஹிணி, சுக்கு, வசம்பு, கடுக்காய் இவற் றைக் கஷாயமாகக் காய்ச்சி அல்லது கல்கமாக அரைத் துட் கொள்ள, கபாதிஸாரம் தீரும். (5) ஸௌவர்ச்சல லவணம், வசம்பு, த்ரிகடு, காயம், அதிவிடயம், கடுக்காய் இவற்றைச் சூர் ணம் செய்து, கபாதிஸாரத்தினல் வருந்துபவர் இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ளலாம். (6) விளாம்பழத்தின் உட் சதையை த்ரிகடு சூர்ணம், தேன், சர்க்கரை இவற்றுடன் கூட்டிக் குழைத்து உபயோகித்தாலும், (7) சிறு தேக்கின் சூர்ணத்தைத் தேனில் குழைத்து உபயோகித்தாலும் அதிஸாரம் முதலிய வயிற்று வேதனை தீரும். (8) திப்பிலிப் பொடியைத் தேன் கூட்டி யுபயோகித்தாலும், (9) சித்திரமூல சூர்ணத்தை மோரு டன் உட்கொண்டாலும், (10) பில்வப்பிஞ்சுகளை புஜித்தாலும் வயிற்று வேதனை நிவ்ருத்தியாகும். (11) வட்டத்திருப்பி, இல வம் பிசின், கோரைக்கிழங்கு, காட்டாத்திப்பூ, பில்வக்காய், சுக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, சிறிது வெல்லம் கலந்து, மோரை அனுபானமாகக் கொண்டு உட்கொள்ள மிகக் கடுமையான அதி ஸாரமும் துலையும். 102—108½.

கபித்தாஷ்டக சூர்ணம் :—ஓமம், மோடி, சதுர்ஜாதம், சுக்கு, மிளகு, சித்திரமூலம், நெற்பொரி, கோரைக்கிழங்கு, சோம்பு, கொத்தமல்லி விதை, ஸௌவர்ச்சல லவணம் இவை ஸமபாகம்; புளி, காட்டாத்திப்பூ, திப்பிலி, பில்வப்பழம், ஓமம் இவை வகைக்கு மூன்று பங்கு; சர்க்கரை ஆறு பங்கு; விளாம்பழம் எட்டுப் பங்கு; இவற்றைச் சேர்த்து சூர்ணம் செய்யவும். இது அதிஸாரம், கிரஹணீ, க்ஷயம், குல்மம், மஹோதரம், காஸம், ச்வாஸம், அக்னி மாந்த்யம், அர்சஸ், பீநஸம், அரோசகம் இவற் றைப் போக்கும். 109—111½.

தாடிமாஷ்டக சூர்ணம் :—மூங்கிலுப்பு கால் பலம், சதுர் ஜாதம வகைக்கு இரண்டு கர்ஷம், ஓமம் - கொத்தமல்லிவிதை - சோம்பு - கிரந்திதகாம் - த்ரிகடு இவை வகைக்கு ஒரு பலம், மாதளம்பழமும் சர்க்கரையும் தனித் தனியே எட்டு பலம்; இவற்றை ஒருமிக்கச் சேர்த்து சூர்ணம் செய்யவும்; தாடிமாஷ் டகம் என்கிற இச்சூர்ணம் கபித்தாஷ்டத்திற்குச் சமானமான

குணமுடையது. அந்தந்த நிலைமைகளுக்கேற்றவாறு கலம் முதலியவற்றை அனுபானமாகச் செய்து, வாதாதிஸாரத்திற் கூறிய விதமாகவே இதைப் புஜிக்கலாம். 112—114.

விடங்காதி கலம் :—வாய்விடங்கம், மிளகு, விளாம்பழம், சுக்கு இவை கலந்ததும், புளியாரத்தை, மோர், இலந்தை இவற்றால் அம்லமாகச் செய்யப்பெற்றதுமான கலம் என்கிற முறையானது சிலேஷ்மாதிஸாரத்தைப் போக்கும்.—115.

கபம் க்ஷீணித்த அதிஸாரத்திற்கேற்ற க்ருதங்கள் :—கபம் க்ஷீணித்துப் போனபிறகு முற்கூறிய அம்ல க்ருதத்தையாவது,[1] லாக்ஷாதி க்ருதத்தையாவது,[2] ஷட்பல க்ருதத்தையாவது,[3] புராண க்ருதத்தையாவது கொடுக்கலாம். பாலாடையுடன் கூடிய யவாகூ என்னும் கஞ்சியையாவது கொடுக்கலாம்.—116.

பலவிதமான வயிற்றுக் கோளாறுகளில் பிச்சாவஸ்தி :—வாதமும் கபமும் இறுகிக் கட்டுண்ட அதிஸாரத்திலும், அதிக கபம் ஸ்ரவிக்கும் அதிஸாரத்திலும், வயிற்றுவலியுள்ள அதிஸாரத்திலும் பிரவாஹிகையிலும் வசம்பு, பில்வம், திப்பிலி, கோஷ்டம், சதகுப்பி, இந்துப்பு இவற்றைக் கூட்டிய பிச்சாவஸ்தியைப் பிரயோகிப்பது சிறந்ததாம்.—117, 117½.

கப வாதங்களால் வருந்தும் அதிஸார ரோகிக்கு அநுவாஸநம் :—பில்வதைலத்தினாலாவது,[4] வசாதிகணத்தைச் சேர்த்து செய்த தைலத்தினாலாவது இளஞ்சூடாக கபவாதங்களால் வருந்தும் அதிஸாரரோகிக்கு அநேகமுறை அநுவாஸந வஸ்தி பிரயோகிப்பதும் ஹிதமாம்.—118½.

வாதாதி தோஷங்கள் குதத்தில் அதிகரிப்பதைத் தணியச் செய்தல் :—கபம க்ஷீணித்து, நீடித்த காலமாய் அதிஸாரத்தினால் குதம் பலஹீனப்பட்டிருக்கையில், தன் ஸ்த்தாநத்திலுள்ள வாததோஷம் மிகவும் வலுத்துப் போய் திடீரென்று மிகத் தீங்கு விளைவிக்கும் ; ஆகவே அவ்வாயுவைச் சீக்கிரம் தணியச்செய்ய வேண்டும். வாயுவுக்குப் பிறகு பித்தத்தையும், அதற்குப் பின் கபத்தையும் தணியச்செய்வது முறை ; அல்லது மூன்று தோஷங்களில் அதிக பலம் பெற்றுள்ளதை முன்னதாகவும், மற்றவைகளைப் பிறகு கிரமமாகவும் தணியச் செய்யலாம். 119—121.

பய சோகாதிஸாரங்களிற் பரிஹாரம் :—பயம் மனத்துயரம் இவற்றாலும் வாததோஷம் எளிதில் பிரகோபிக்கும் ; ஆகையால் அவ்விரண்டையும் போக்க வாதஹரமான சிகித்ஸையைச் செய்வ

---

1. அம்லக்ருதம் — குதப்ரம்ச சிகித்ஸையிற் கூறப்பட்டுள்ளது.
2. லாக்ஷாதிக்ருதம் — ஸந்நிபாதாதிஸாரத்திற் கூறியுள்ளது.
3. ஷட்பலக்ருதம் — உதரரோக சிகித்ஸையிற் கூறியுள்ளது.
4. பில்வப் பழத்தைக் காய்ச்சி தைலம் கூட்டி பக்குவம் செய்தது.

தோடு, பிணியாளியைக் களிப்புறச் செய்வதும், அவனுக்கு ஆச்வாஸ வசனங்கள் கூறுவதும் அனுகூலமாம்—122.

அதிஸாரம் முதலிய குடற்கோளாறு நிவாரணமானதன் குறிகள் :—மலம் வாாமல் மூத்திரமாவது அபானவாயுவாவது தனித்து வெளிப்பட்டு, ஜாடராக்னி விருத்தியடைந்து, கோஷ்டமும் இலகுவாய் ஸ்திமிதப்பட்டால், அப்பொழுது குடலைப்பற்றிய வியாதி நிவாரணமானதாய் அறியலாம்.—123.

---

## பத்தாம் அத்தியாயம்.

### கிரஹணீ சிகித்ஸை.

இனி கிரஹணீசிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

கிரஹணீ தோஷத்தில் உபசரிக்கவேண்டிய போது விதி :—கிரஹணியென்னும் அவயவத்தை ஆச்ரயித்துள்ள தோஷத்திற்கு அஜீர்ணத்திற்குச் செய்வது போல் சிகித்ஸை செய்யவேண்டும். அப்பிணியாளிக்கு உண்டாகும் ஆமதோஷத்தை அதிஸாரத்திற்குக் கூறியுள்ள முறையை அனுஸரித்து பக்குவ நிலைமைக்குக் கொண்டுவர வேண்டும்.[2]—1.

கிரஹணியில் அன்னகாலத்தில் உபயோகிக்கத் தகுந்த உணவுக்கான போது விதி :—நியமிதமான போஜனகாலத்தில்[3] பஞ்சகோலம் முதலியவற்றைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்டதும், இலவணம் சேர்க்கப்பெற்றதும், இலகுகுணமுடையதுமான யவாகூ முதலான திரவான்னத்தையும், அப்பால் தீபநகுணமுள்ள ஔஷதங்களையும் பிணியாளிக்குக் கொடுக்கலாம்.—2.

கிரஹணியில் ஆமதோஷம் அதிகரித்திருக்கையில் ஏற்ற பானங்கள் :—ஆமதோஷம்[4] மேலிட்டிருக்கையில் (1) அதிவிடயமும் சுக்கும் பொடித்துச் சேர்த்து, சிறிது அம்லரஸமும் கலந்துள்ள பேயா என்கிற குடிநீரைக் கொடுக்கலாம். (2) அதிஸாரத்திற் கூறிய ஜலத்தையும், மோரையும், ஸுரை முதலியதையும் பானம் செய்யலாம்.—3.

கிரஹணியில் மோர் சிறந்தது :—கிரஹணீதோஷம் உள்ளவருக்கு மோர் பத்தியமாய் உபயோகிக்கத் தகுந்தது. இது

---

1. கிரஹணீ — முதற் பாகம் பார்க்க.

2. அதிஸாரசிகித்ஸையில் ஆமதோஷபரிஹார முறைகளைப் பார்க்கவும்.

3. போஜனம் செய்வதற்கான காலநியமம்—முதற்பாகம் பார்க்க.

4. ஆமதோஷம் — முதற்பாகம் பார்க்க.

இலகுகுண முடையதாகையால் தீபநம் க்ராஹி என்னும் தன்மை யுடையது; மதுரபாகம்[1] அடையுமாகையால் பித்தத்தை விருத்தி செய்யாது ; துவர்ப்பு, உஷ்ணவீர்யம், விகாஸி[2], ரூக்ஷத்தன்மை இக்குணங்களால் கபத்திலும் அநுகூலமானது ; அப்பொழுதே கடைந்தெடுத்த மோர் இனிப்பும் சிறிது புளிப்பும் கலந்து தடித் திருக்குமாகையால், குடலில் அழற்சி யுண்டுபண்ணாததாகவும் வாததோஷஹரமாகவும் இருக்கும்.—4, 5.

சதுரம்லாதி சூர்ணம் :—சதுரம்லங்கள்[3] வகைக்குப் பதினாறு பலம், த்ரிகடு வகைக்கு மூன்று பலம், லவணத்ரயம் வகைக்கு நான்கு பலம், சர்க்கரை எட்டு பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து காய்கறிகள், பருப்புகள், அன்னம் முதலியவற்றில் கலந்து உப யோகிக்க, காஸம், அஜீர்ணம், அரோசகம், ச்வாஸம், இருதய வியாதிகள், பக்கசூலை, வயிற்றுநோய் இவை தீரும்.—6, 7.

குடலிலுள்ள ஆமதோஷத்தைப் பரிஹரிக்கும் முறைகள்:— (1) சுக்கு, அதிவிடயம், கோரைக்கிழங்கு இவற்றை இடித்துச் சேர்த்து க்வாதம் செய்து, ஆமதோஷத்தைப் போக்குவதற்குப் பருகலாம். (2) அச்சரக்குகளையே கல்கமாகச் செய்தாவது உஷ்ண ஜலத்துடன் உட்கொள்ளலாம். (3) அல்லது சுக்கை யாவது, (4) கடுக்காயையாவது, (5) இந்துப்பையும் வசாதிகணத் திற் கூறிய வஸ்துக்களையும் கூட்டியாவது அங்ஙனமே உஷ்ண ஜலத்தோடு புஜிக்கலாம். (6) அல்லது வசாதிகணத்தைச் சேர்ந்த சரக்குகளையும் இந்துப்பையும் கலந்து, மதிரை யென்னும் மதுவை அநுபானமாகக் கொண்டாவது உபயோகிக்கலாம்.—8, 8½,

மலாதிகள் ஆமமாயிருக்கையில் ஏற்ற ஔஷதங்கள் :— (1) மலம் ஆமமாயிருக்கையிலும், மலப்போக்கும் வெகு அதிகமா யிருக்கையிலும் பிடாலலவணம் என்கிற கிருஷ்ணலவணத்தைப் பொடித்து, மாதளம்பழச் சாற்றுடன் கலந்து உட்கொள்ளலாம். (2) கபமும் வாதமும் ஆமதோஷத்துடன் கூடிக் கோளாறடைந்து, குடலில் வலியை யுண்டுபண்ணும்போது பில்வப்பழம், சித்திர மூலம், சுக்கு இவற்றைக் கல்கமாகச் செய்து, இளஞ்சூடான ஜலத்தோடு உபயோகிக்கலாம்.—9, 10.

கிரஹணியில் வாந்தி-இருதயநோய் முதலியவை யிருந்தால் செய்யக்கூடிய பரிஹாரமுறைகள் :—கிரஹணீ தோஷத்தில் வாந் தியும், இருதய நோயும், வயிற்று வலியும் கூடியிருக்குமானல்

1 மதுரபாகம்—மூன்று வித விபாகங்களில் ஒன்று. விபாகங்களைப் பற்றி முதற்பாகம் பார்க்க.

2. விகாஸி — முதற்பாகம் பார்க்க.

3. சதுரம்லம் — இலந்தம்புளி, மாதளம்புளிப்பு, புளி, புளிவஞ்சி என்பவைகளின் கூட்டு.

பின்வரும் முறைகள் குணந்தரும் :—(1) வெட்பாலை, காயம், அதிவிடயம், வசம்பு, ஸௌவர்ச்சல லவணம், கடுக்காய் இவற்றைச் சூர்ணம் செய்து, வெந்நீரின் அநுபானத்துடன் உட்கொள்ளலாம். (2) கடுக்காய், ஸௌவர்ச்சல லவணம், ஜீரகம், மிளகு இவற்றின் சூர்ணத்தையாவது வெந்நீருடன் பருகலாம்.-11, 11½.

அக்னிதீபந சூர்ணம் :—திப்பிலி, சுக்கு, வட்டத்திருப்பி, நன்னாரி, கண்டங்கத்திரி, பார்ப்பாரமுள்ளி, சித்திரமூலம், குடஜக்ஷாரம்[1], பஞ்சலவணம்[2] இவற்றைச் சூர்ணம் செய்து, தயிர், ஸுரை, ஸுராமண்டம், உஷ்ணஜலம், காஞ்ஜிகம் இவற்றில் எதையாவது அநுபானமாகக் கொண்டு ஜாடராக்னியை விருத்தியாக்க உட்கொள்ளலாம்; இம்முறை குடலிற் சேர்ந்துள்ள வாத விகாரத்தைப் போக்குவதிற் சிறந்தது.—12, 13½.

பஞ்சலவணாதி குளிகை :—பஞ்சலவணம், க்ஷாரத்வயம்,[3] மிளகு, பஞ்சகோலம், ஓமம், காயம் இவற்றைச் சமமாகச் சூர்ணம் செய்து, கொடிமாதளம்பழரஸத்திலாவது, இலந்தம்பழ ரஸத்திலாவது, மாதளம்பழரஸத்திலாவது ஆட்டி மாத்திரை செய்யவும். இது அதிக தீபந-பாசநசக்தி உடையது.—14, 15.

தாளிஸாதி சூர்ணமும் வடகமும் :—தாளிஸப்பத்திரி, சவியம், மிளகு இவை வகைக்கு ஒரு பலம், திப்பிலியும் மோடியும் தனித்தனியே இரண்டு பலம், சுக்கு மூன்று பலம், சதுர்ஜாதமும் வெட்டிவேரும் தனித்தனி கால் பலம்; இவற்றை மிருதுவாகச் சூர்ணம் செய்து, மூன்று மடங்கு வெல்லம் கூட்டி, பில்லை மாதிரி மாத்திரைகள் செய்து எப்பொழுதும் உபயோகிக்கலாம்; மத்யங்கள், யூஷம், மாம்ஸரஸம், அரிஷ்டங்கள், மஸ்து, பேயாக்கள், பால் இவற்றில் எதையேனும் அநுபானமாய் பருகலாம். வாத-கபங்களின் ஸம்பந்தத்தினால் உண்டான வாந்தி, கிரஹணீ ரோகம், பக்கசூலை, இருதய நோய், ஜ்வரம், வீக்கம், பாண்டு, குல்மம், பாநாத்யயம் என்கிற வெறி, அர்சஸ், வாயில் உமிழ்நீர் அதிகமாகக் கசிதல், பீநஸம், ச்வாஸம், காஸம் இவைகளை நிவ்ருத்தி செய்வதற்கு இச்சூர்ணம் ஏற்றதாகும். மலபந்தம் நேரிட்டால், இம்முறையில் சுக்குக்குப் பதிலாகக் கடுக்காயைக் கொடுக்கலாம். பித்தாதிக்கியத்தினால் உண்டாகும் வாந்தி முதலியதில் நாலு பங்கு சர்க்கரை கூட்டி வடகங்களைச் செய்யவேண்டும்; பாகுபதமாகப் பக்குவம் செய்த சர்க்கரையினாலாவது வெல்லத்தினாலாவது வடகங்களைச் செய்யவேண்டும்; ஏனெனில் அக்னி ஸம்பந்தத்தினால் வடகங்கள் இலகு குணத்தைப் பெறுகின்றன.16—21.

---

1. குடஜக்ஷாரம் — வெட்பாலையைச் சமூலம் எரித்து, அதன் சாம்பரிலிருந்து எடுக்கப்படும் ஒருவித காரமான உப்பு.

2. பஞ்சலவணம் — முதற் புத்தகம் பார்க்க.

3. க்ஷாரத்வயம் — யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம்.

ஆமதோஷம் நீங்கிய கிரஹணீரோகிக்குச் செய்யும் பரிஹாரங்கள்:—பிறகு ஆமதோஷம் தீர்ந்துள்ள வாதகிரஹணீ ரோகிக்கு தீபநகுணமுள்ள சரக்குகள் சேர்த்து பக்குவம்செய்த க்ருதத்தை வைத்தியர் சொற்ப அளவில் பருகக் கொடுத்து வரவேண்டும். ஜாடராக்னி தூண்டப்பட்டு, சிறிது விருத்தியடைந்திருக்கையில், மல-மூத்திர-அபாநவாயுக்கள் கட்டுண்ட அப்பிணியாளிக்கு இரண்டு அல்லது மூன்று நாட்கள் ஸ்நேஹசிகித்ஸையைச் செய்துவைத்து, பிறகு ஸ்வேத சிகித்ஸையையும் அப்யங்கமும் செய்வித்து, நிரூஹ வஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும். அப்பால் வாததோஷம் தணிவடைந்திருக்கையில், யவக்ஷாரம் கலந்து ஆமணக் கெண்ணெயினாலாவது, தில்வகக்ருதத்தினாலாவது வயிற்றிலுள்ள தோஷம் முற்றிலும் வெளியாகும்படி விரேசனம் செய்விக்க வேண்டும். பிறகு குடலிலுள்ள ஆசயங்கள்[1] சுத்தமாகவும் ரூக்ஷமாகவும் ஆனபிறகு, மலமும் கட்டப்பட்டுப் போனால், தீபநகுணமும், அம்லரஸமும், வாதஹரமான குணமும் உள்ள சரக்குகளைச் சேர்த்துப் பக்குவம்செய்த தைலத்தினால் அப்பிணியாளிக்கு அநுவாஸநவஸ்தியைப் பிரயோகிக்கவும்; இங்ஙனம் நன்றாக நிரூஹவஸ்தியும், விரேகமும், அநுவாஸநமும் செய்துவைத்தபிறகு, இலகுவான பத்தியான்னங்களைக் கொடுத்து வருவதோடு, மீண்டும் க்ருதத்தைச் சிறுகச் சிறுக அப்யஸிக்கச் செய்யவேண்டும். 22—26.

பஞ்சமூலாதி க்ருதம் முதலியன :—(1) பஞ்சமூலம், கடுக்காய், த்ரிகடு, மோடி, இந்துப்பு, சிற்றரத்தை, த்விக்ஷீரம்,[2] ஜீரகம், வாய்விடங்கம், கச்சோரம் இவற்றைச் சேர்த்து கஷாயம் காய்ச்சி, அதில் க்ருதம் பக்குவம் செய்யவும். (2) கொடிமாதளம் பழத்தின் உட்புறச் சோற்றினாலாவது, (3) இஞ்சி ஸ்வரஸத்தினாலாவது, (4) உலர்ந்த முள்ளங்கி, இலந்தம் புளி, புளிவஞ்சி, மாதளை இவற்றின் இரஸத்தினாலாவது, (5) மோர், மோரின் மேல் தெளிவான திரவம், ஸௌவீரமண்டம், காடி, அரிசிகழுவிய நீர் இவற்றுள் எதினாலாவது அந்த க்ருதம் பக்குவம் செய்யப்பட்டால் ஜாடராக்னியை நன்கு உத்தீபநம் செய்யும். இது வயிற்றுவலி, குல்மம், மஹோதரம், ச்வாஸம், காஸம், வாதநோய், கபவிகாரம் இவற்றைப் போக்கும். (6) கொடிமாதளம்பழச் சாற்றையும் முற்கூறிய ஏதேனும் ஒன்றுடன் கலந்து, அதில் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தையாவது பருகலாம். 27—30.

பஞ்சமூலாதி தைலம் :—முற்கூறிய பஞ்சமூலம் முதலிய சரக்குகளையே சேர்த்து பக்குவம்செய்த தைலத்தை கிரஹணீ

---

1. ஆசயங்கள் — ஆமாசயம், பக்வாசயம், வாதாசயம், மலாசயம் முதலியன.

2. த்விக்ஷீரம் — பசும்பால், வெள்ளாட்டுப்பால்.

தோஷத்தில் ஆமதோஷம் நிவ்ருத்தியான பின்பு வாதஹரமாக அப்பஞ்ஜநம் செய்து வைக்க உபயோகிக்கலாம்.—30½.

பரஸ்பரம் ஆவ்ருதமான வாத கபங்களில் பஞ்சமூலாதி சூர்ணம் :—கிரஹணியில் வாததோஷமானது கபத்தினால் ஆவாணம் செய்யப்பட்டு அத்தோஷம் ஆமதோஷத்தாலும் கோளாறடைந்திருக்கையிலும், வாயுவால் கபம் ஆவரணம் செய்யப்பட்டு அத்தோஷம் ஆமதோஷ ஸஹிதமாயிருக்கையிலும் இதே ஔஷதச் சரக்குகளைச் சூர்ணம்செய்து, அதை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்வதும் நலம்.—31½.

கிரஹணியில் பித்தாதிக்யத்தாலான அக்னிமாந்த்யத்தைப் பரிஹரித்தல் :—திரவமாய் விருத்தியாயுள்ள பித்தம் ஜாடராக்னியை அவிக்கக் கூடியதாயிருந்தால், அதை விரேசகத்தினாலாவது வமநத்தினாலாவது நீக்கி, திக்தரஸமும்-இலகு-க்ராஹி-தீபநம் என்கிற குணங்களும் உடைய விதாஹி என்கிற தீயகுணமற்ற உணவுகளைப் பிணியாளிக்குக்கொடுக்கவேண்டும். அம்லரஸமுள்ள சூர்ணங்களாலும், திக்தரஸமுள்ள ஸ்நேஹௌஷதங்களாலும் ஜாடராக்னியை விருத்தி செய்யவேண்டும்.—32, 33.

படோலாதி சூர்ணம் :—பேப்புடல், வேம்பு, கழற்சிக்காய், நிலவேம்பு, கடுகரோஹிணீ, பர்ப்பாடகம், வெட்பாலைப்பட்டை, வெட்பாலையின் கனி, பெருங்குரும்பை, செம்முருங்கையின் கனி, வசம்பு, மரமஞ்சளின் பட்டை, தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், ஓமம், கோரைக்கிழங்கு, செஞ்சந்தனம், ஸௌராஷ்ட்ர ம்ருத்திகை, அதிவிடயம், த்ரிகடு, இலவங்கப்பட்டை, ஏலக்காய், இலவங்கப்பத்திரி, தேவதாரு இவற்றைச் சூர்ணம் செய்யவும்; இதைத் தேனோடு கலந்து உட்கொள்ளலாம்; மதுவகைகளோடாவது ஜலத்துடனாவது உபயோகிக்கலாம்; இது இருதயரோகம், பாண்டுரோகம், கிராஹணீரோகம், குல்மம், வயிற்றுவலி, அரோசகம், ஜ்வரம், காமாலை, ஸந்நிபாதம், முகத்தினுள் உண்டாகும் வியாதிகள் இவற்றைப் போக்கவல்லது.—34, 36½.

பூநிம்பாதி சூர்ணம் :—நிலவேம்பு, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, த்ரிகடு, வாலுழுவை இவை ஸமபாகம், சித்திரமூலம் இரண்டு பாகம், வெட்பாலையின் பட்டை பதினாறு பாகம்; இவற்றைச் சூர்ணம் செய்யவும்; இச்சூர்ணத்தை வெல்லம் கரைத்த குளிர்ந்த ஜலத்தோடு உட்கொள்ளலாம்; இது கிரஹணீதோஷம், குல்மம், காமாலை, ஜ்வரம், பாண்டு, மேஹம், அரோசகம், அதிஸாரம் இவற்றை நிவ்ருத்திசெய்யும்.—37, 38½.

நாகராதி சூர்ணம் :—சுக்கு, அதிவிடயம், கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, உலர்ந்த பில்வப்பழம், இரஸாஞ்ஜநம், வெட்பாலையின்பட்டை, வெட்பாலைக்கனி, கடுகரோஹிணி, காட்டாத்திப்பூ இவற்றைச் சூர்ணம்செய்து, தேனுடனாவது, அரிசி கழுவிய

நீருடனாவது பித்தக்கிரஹணியிலும், பிரவாஹிகை யென்கிற சித பேதியிலும், அர்சஸ்ஸிலும், குதத்தில் வலியுண்டாகையிலும், இரத்தப் பெருக்கிலும் உட்கொள்ளலாம்.—39, 40½.

சந்தநாதி க்ருதம் :—சந்தனம், தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், வட்டத்திருப்பி, பெருங்குரும்பை, வேங்கைப்பட்டை, வசம்பு, நன்னாரி, செம்மந்தாரை, ஏழிலம்பாலை, ஆடாதோடை, பேய்ப்புடல், அத்திப்பட்டை, அரசம்பட்டை, ஆலம்பட்டை, பூவரசம்பட்டை, வஞ்சி, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, வேம்பு இவைகளை வகைக்கு இரண்டு பலமாக ஒருதிரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, வடிக்கட்டிய அக்கஷாயத்தில் க்ருதம் பக்குவம் செய்யவும்; நிலவேம்பு, வாலுழுவை, தண்ணீர்விட்டாங்கிழங்கு, திப்பிலி, நெய்தல் இவற்றை வகைக்குக் கால்பலம் எடுத்து, கல்கமாக உபயோகிக்கவும்; இந்த க்ருதத்தையும், குஷ்ட சிகித்ஸையிற்கூறிய திக்தக க்ருதத்தையும் பித்தக் கிரஹணியில் உபயோகிக்கலாம். 41—44.

சிலேஷ்மக் கிரஹணி சிகித்ஸை :—(1) கபத்தினால்கிரஹணி விகாரப்படுமானால், அப்பொழுது தீக்ஷ்ண வஸ்துக்களால் வமநம் செய்வித்து, கடுவும் அம்லமும், க்ஷாரகுணமுமுள்ள ஔஷதங்களால் கிரமமாக ஜாடராக்னியை விருத்திசெய்யவும். (2) பஞ்சகோலம், கடுக்காய், கொத்தமல்லிவிதை, வட்டத்திருப்பி, மணமுள்ள பச்சிலைகள், கொடிமாதளையிலைகள் இவற்றைக் கஷாயம் காய்ச்சி, அதைக் கொண்டு பேயா முதலிய திரவான்னங்களைப் பக்குவம் செய்யலாம்--45, 46.

மதூகாஸவம் :—இலுப்பைப்பூ ஒரு திரோணம், வாய்விடங்கம் அதில் பாதிபாகம், சித்திரமூலம் வாய்விடங்கத்தில் பாதி பங்கு, சேராங்கொட்டை ஒரு ஆடகம், மஞ்ஜிஷ்டி எட்டு பலம்; இவ்வனைத்தையும் மூன்று திரோணம் ஜலத்திற் பக்குவம் செய்யவும்; அதை ஒரு திரோணம் மிகும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டி, அரை ஆடகம் தேன் சேர்த்து, ஏலம்-தாமரைக்கிழங்கு-அகில்கட்டை-சந்தனம் இவற்றால் அழுக்கெடுத்து ரூக்ஷமாகச் செய்யப்பட்ட மட்பாத்திரத்தில் அவ்வனைத்தையும் சேர்த்து, அதன் வாயை மூடியிட்டுச் சீலைமண்செய்து ஒருமாஸம் வைத்திருந்து எடுக்கவும். இந்த ஆஸவம் கிரஹணீவிகாரத்தைப் போக்கி அக்னியை விருத்திசெய்யும்; ப்ருஹ்மணம், இரக்தபித்தஹாம் என்னும் குணங்களுமுண்டு; க்ஷயம், குஷ்டம், வெண்குஷ்டம், பிரமேஹம் இவற்றையும் தீர்க்கும். 47—50.

இரண்டாம் மதூகாஸவம் முதலியது :—அரைச்சேர் இலுப்பைப் பூவின ஸ்வரஸத்தை அரைவாசி திரவம் மிகும்படியாகக் காய்ச்சியெடுத்து, அதற்குக் கால் பங்கு தேன் கூட்டி, கஷாயம் குளிர்ந்த பிறகு, முன் ஆஸவத்திற்குக் கூறியவிதமாக அவ்வித

மட்பாத்திரத்தில் ஒருமாஸம் வைத்திருந்து எடுத்து உட்கொண்டு, ஹிதமான போஜனமும் செய்து வந்தால் எல்லாக் கிரஹணீதோஷங்களும் தீரும். அதேவிதமாய் திராக்ஷ, கரும்பு, பேரீச்சு இவற்றின் ஸ்வரஸங்களையும் ஆஸவமாகப் பக்குவம் செய்து இவ்வியாதியிற் பருகலாம்.—51, 52.

ஹிங்க்வாதி சூர்ணம்:—காயம், கடுகரோஹிணி, வசம்பு, திப்பிலி, வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, நெறிஞ்சல், பஞ்சகோலம் இவை ஒவ்வொன்றும் கால்பலம், பஞ்சலவணம் வகைக்கு ஒரு பலம்; இவற்றை இடித்து, ஒரு சேர் நெய், ஒரு சேர் தைலம், இரண்டு பிரஸ்தம் தயிர், இவற்றை ஒருமிக்கக் கூட்டி, அதில் முற்கூறிய காயம் முதலியவற்றைச் சேர்த்து, சிறுகச் சிறுகத் தீயிட்டுக் காய்ச்சி, நெய் முதலியதை அச்சரக்குகள் உறிஞ்சு கொண்ட பிறகு, அக்கல்கத்தை ஒரு பாத்திரத்தில் போட்டு, மேலே மற்றொரு பாத்திரத்தினால் மூடி, உள்ளேயே சாம்பராகும்படி எரித்தெடுத்து சூர்ணம் செய்து, கால் பலம் அளவாக நெய்யிற் கலந்து உட்கொள்ளவும்; அவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு மதுரரஸமுள்ள உணவைப் புஜிக்கலாம். இவ்வௌஷதம் எல்லாவித வாத-கபவிபாதிகளையும், விஷப்பற்றுகளையும், கிருத்ரிம விஷக்கோளாறுகளையும் போக்கும். 53—55½.

அக்னிவர்த்தகக்ஷாரங்கள்:—(1) நிலவேம்பு, கடுகரோஹிணி, பேய்ப்புடல், வேப்பம்பட்டை, பர்ப்பாடகம் இவற்றை எரித்து க்ஷாரமெடுத்து, எருமையின் சிறுநீருடன் பருக, ஜாடராக்னி விருத்தியாம். (2) மஞ்சள், மரமஞ்சள், வசம்பு, கோஷ்டம், சித்திரமூலம், கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு இவற்றையெரித்து க்ஷாரமெடுத்து, வெள்ளாட்டின் சிறுநீருடன் உட்கொள்ள ஜாடராக்னி விருத்தியடையும்.—56, 57¼.

ஸுதாகாண்டாதி க்ஷாரகுளிகை:—கள்ளித்தண்டு நான்கு பலம், லவணத்ரயம் வகைக்கு மூன்று பலம், முதிர்ந்து உலர்ந்த கத்திரிக்காய் நான்கு பலம், எருக்கம் வேர் எட்டு பலம், சித்திரமூலம் இரண்டு பலம்; இவற்றை எரித்தெடுத்த க்ஷாரத்தைக் கத்திரிச்சாறு விட்டு ஆட்டி, குளிகைகள் செய்யவும். இக்குளிகையை உணவு எடுத்துக்கொண்ட பிறகு உட்கொண்டு வர, புஜித்த உணவு சீக்கிரம் ஜீர்ணமாகும்; காஸம், ச்வாஸம், அர்சஸ் இவற்றிலும் இது அனுகூலம் செய்யும்; விஷூசி, பிரதிச்யாயம், இருதய ரோகம் இவற்றையும் சமனம் செய்யும். 58—60.

மாதுலுங்காதி சூர்ணம்:—உலர்ந்த கொடிமாதளை, கச்சோரம், சிற்றரத்தை, த்ரிகடு, கடுக்காய், ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், பஞ்சலவணம் இவற்றைச் சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ள தேஹபலம், தேஹநிறம், ஜாடராக்னி இவை விருத்தியாகும்.—61, 61½.

வாத கபக் கிரஹணியில் க்ருதங்கள்:—வாத தோஷத்துடன் கூடிய கபக்கிரஹணியில் முற்கூறிய கொடிமாதளை முதலியவற்றைச் சேர்த்து செய்த க்ருதத்தையாவது, தாங்வந்தர க்ருதத்தையாவது,[1] ஷட்பல க்ருதத்தையாவது,[2] பல்லாதக க்ருதத்தையாவது,[3] அபயாக்ருதத்தையாவது[4] உட்கொள்ளலாம்.—62½.

க்ஷார க்ருதம்:—பிடால லவணம், வளையலுப்பு, காசலவணம், சவுட்டுப்பு, ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், கள்ளித்தண்டு, கண்டங்கத்திரி, சித்திரமூலம் இவற்றைச் சேர்த்து எரித்து, ஏழு தடவை ஜலத்திற் கரைத்துக் கரைத்து வடிச்கட்டி யெடுக்கப்படும் க்ஷாரம் இரண்டு பிரஸ்த்தம்; இதை நாலு பிரஸ்த்தம் நெய்யிற் சேர்த்துப் பக்குவம் செய்து, ஜாடராக்னியின் பலத்தை விருத்தி செய்வதற்குப் பருகலாம்.—63, 64½,

ஸந்நிபாதக்கிரஹணீசிகித்ஸை:—ஸந்நிபாத தோஷங்களால் உண்டான கிரஹணியில் பஞ்சகர்மங்களையும்,[5] தனித்தனி தோஷத்தினுல் உண்டாகும் கிரஹணிகளுக்குக் கூறியுள்ள சிகித்ஸைகளையும் பிணியாளியின் சரீரபலம் முதலியவற்றை அநுஸரித்துப் பிரயோகிக்க வேண்டும்.—65.

கிரஹணியில் உண்டாகும் அக்னிமாந்த்யத்திற்குப் பரிஹாரங்கள்:—(1) கிரஹணியில் ஜாடராக்னி மந்தப்பட்டிருப்பவனுக்கு கபப் பிரகோபத்தினுல் அதிகமாய் உமிழ்நீர் ஊறினுல் ரூக்ஷத் தன்மையும் திக்தரஸமுமுள்ள வஸ்துவால் ஜாடராக்னியை உத்தீபநம் செய்யவேண்டும். (2) தேஹம் மெலிவுற்ற அவ்வித பிணியாளிக்கு கபம் அதிகரித்திருந்தால், ஸ்நிக்த்த பதார்த்தங்களையும் ரூக்ஷபதார்த்தங்களையும் மாற்றி மாற்றி உபயோகிக்க வேண்டும். (3) மிகவும் இளைத்து வாடிப்போனவனுக்கு கபம் அதிகரித்திருந்தால் தீபநகுணமுள்ள திரவ்யத்தை ஸ்நேஹ வஸ்துக்களுடன் கூட்டி யுபயோகிக்க வேண்டும். (4) பித்தம் அதிகமாயுள்ள மனிதன் மந்தாக்னியாயிருந்தால், உமிழ்நீரும் ஊறினுல், மதுரரஸமுள்ள சரக்குகளைத் திக்தரஸமுள்ள வஸ்துக்களோடு கூட்டி யுபயோகிக்க வேண்டும். (5) வாதம் அதிகரித்துள்ள பிணியாளி மந்தாக்னியாயிருந்தால், அம்ல-லவண ரஸங்களுடன் கூடிய ஸ்நேஹம் அவனுக்குச் சிறந்ததாம். துர்ப்பலமாயுள்ள அக்னியை விருத்தி செய்வதற்கு ஸ்நேஹமே சிறந்த வஸ்து

---

1. தாங்வந்தர க்ருதம் — பிரமேஹ சிகித்ஸையிற் கூறப்பட்டது.
2. ஷட்பல க்ருதம் — உதர சிகித்ஸையிற் கூறப்பட்டது.
3. பல்லாதக க்ருதம் — குல்ம சிகித்ஸையிற் கூறப்பட்டது.
4. அபயாக்ருதம் — உதர சிகித்ஸையிற் கூறப்பட்டது (ஹரீதகீ க்ருதம் என்றும் சொல்லப்படும்.)
5. பஞ்ச கர்மங்கள் — வமநம், விரேசநம், நஸ்யம், நிரூஹம், அநுவாஸநம் என்பனவாம்.

வென்றறிக ; ஸ்நேஹத்தினுல் விருத்தி செய்யப்பெற்ற ஜாட ராக்னியை மிகவும் குருகுணமுள்ள வேறு எந்த வஸ்துவும் குறைத்துப் போடமுடியாது. (6) ஜாடராக்னி மந்தமாய்விடுவ தால், கபம் க்ஷீணித்திருக்கையில், மலம் பக்குவமடைந்திருந்தும் உடைந்து திரவமாக ஔஷதத்தோடு வெளியானுல், அவன் க்ரு தத்தைச் சொற்பமாய் உபயோகிக்க வேண்டும் ; அந்த க்ருதத் தினுல் ஸமாநவாயு அதன் சுயநிலைக்குக் கொண்டுவரப்பட்டு, அதன் இயற்கைக் காரியத்தைச் செய்யத் தூண்டப்படுமானுல், அவ்வாயு எப்பொழுதுமே அக்னி தீபநம் செய்வது இயல்பாகை யால் ஜாடராக்னியை விருத்தி செய்கின்றது. (7) மலம் மிகவும் இறுகிப்போய் வெகு கஷ்டப்பட்டு வெளிப்படுமானுல், பஞ்சலவ ணங்கள் கூட்டிய க்ருதத்தைப் பருகி அதன் பிறகு அன்னம் புஜிக்கவேண்டும். (8) ரூக்ஷத்தன்மை அதிகரித்ததால் அக்னி மந்தப்பட்டுப் போனுல், அக்னி தீபநகுணமுள்ள ஔஷதங்கள் கலந்த க்ருதத்தையாவது தைலத்தையாவது பருகலாம். (9) ஸ்நேஹங்களை அளவுக்கு மிஞ்சி யுபயோகித்ததால் அக்னிமாந் த்யம் உண்டாயிருந்தால் க்ஷாரங்களாலான சூர்ணங்களையும், ஆஸ வங்களையும், அரிஷ்டங்களையும் உபயோகிக்க வேண்டும். (10) உதாவர்த்தத்தினுல் ஜாடராக்னி மந்தமாகப்போயிருந்தால் நிரு ஹவஸ்திகளையும், ஸ்நேஹவஸ்திகளையும் பிரயோகிக்கவேண்டும். (11) தோஷங்கள் மிக விருத்தியாவதால் ஜாடராக்னி மந்தப்பட் டிருக்கையில், வமந-விரேசநாதி சிகித்ஸைகளால் சோதநம் செய் வித்து, பேயா முதலிய திரவான்னங்களை முறைப்படி உபயோ கிக்க வேண்டும். (12) ஒருவன் ஏதேனும் வியாதியினுல் வருந்தி, அது நிவ்ருத்தியான பின்பு அக்னிமாந்த்யம் ஏற்பட்டிருந்தால் அவ்வக்னியை உத்தீபநம் செய்வதற்கு க்ருதபானமே சிறந்தது. (13) நெடுந்தூரம் வழி நடப்பது, உபவாஸம், உடலிளைத்தல் இவைகளால் ஜாடராக்னி மந்தப்பட்டால், உணவுக்கிடையில் க்ருதபானம் செய்விக்க வேண்டும் ; க்ருதமானது அப்பிணி யாளிக்கு பல்யமாகவும், தீபநமாகவும், ப்ருஹ்மணமாகவும் ஆகின் றது. (14) நீண்ட காலம் பிரஸங்கம் செய்ததால் அக்னிமாந்த்யம் நேரிட்டு, அதனுல் தேஹம் வாடி, தாதுக்கள் க்ஷீணித்து, உடல் மிக்க மெலிவுற்றிருந்தால் மாம்ஸபக்ஷிணிகளான ப்ரஸஹம் முத லிய ஜந்துக்களின் மாம்ஸரஸங்களை அம்லவஸ்துக்களோடு கலந்து உண்ணவேண்டும் ; அவை இலகுவாகவும், உஷ்ணவீர்ய மாகவும், கடுரஸமாகவும், சோதநகுணமுள்ளவைகளாகவும்[1] இருப்பதால் ஜாடராக்னியை சீக்கிரம் விருத்தி செய்யும் ; இறை ச்சியுண்டு அதனுல் அந்த ஜந்துக்களின் மாம்ஸங்கள் செழித்து வளர்ந்திருப்பதால் தேஹவன்மையையும் மிகவும் விருத்தி செய் யும். (15) ஸ்நேஹங்களையும், ஆஸவங்களையும், ஸுரையையும்,

1. சோதந குணம் — வமந-விரேசநாதி குணங்கள்.

அரிஷ்டங்களையும், சூர்ணங்களையும், கஷாயங்களையும், பத்திய மான உணவுகளையும் முறை தவறாமல் நன்கு பிரயோகித்தால், தேஹத்தினுடையவும் அக்னியினுடையவும் பலம் விருத்தியடையும். (16) நல்ல ஸாரமுள்ள கட்டைகளிற் பற்றிய ஸாதாரண பாஹ்யாக்னியானது நல்ல ஜ்வாலையோடு ஸ்த்திரமாக எரிவது போலவே, ஜாடராக்னியும் ஸ்நேஹவர்க்கங்களோடு கூடிய ஆஹாரங்களால் பலம் பெற்று விருத்தியடையும். (17) உணவின்றியே ஜாடராக்னி விருத்தியடைவதில்லை; அதிக போஜனத்தினாலும் விருத்தி யடைந்து விடாது; விறகு இல்லாமல் பாஹ்யமான அக்னி எரிவதில்லை; சொற்ப அக்னியின்மேல் அதிக விறகுகளைப் போட்டாலும் அது எரியமாட்டாதல்லவா? 66—80.

**ஜாடராக்னி மிதமிஞ்சி அதிகரித்தலும் அதனாலுண்டாகும் உபத்திரவங்களும்:—**கபம் க்ஷீணித்து, அதன் ஸ்த்தாநத்தில் பித்தம் வாதத்துடன் கூடி விருத்தியடைந்து, ஜாடராக்னியை மேலோங்கச் செய்தால், அப்பொழுது வாயுவுடன் கூடிய அவ்வக்னி[1] உட்கொண்ட உணவை சீக்கிரத்தில் பசநம் செய்து, எல்லாத் தாதுக்களையும் ஓஜோதாதுவையும் அழித்து மரண முண்டு பண்ணும். அப்பிணியாளி போஜனம் செய்ததும் ஸுகமாயிருப்பான்; உணவு ஜீர்ணமானதும் பரிதவிப்பான்; அக்னி மிதமிஞ்சி யதிகரிப்பதால் நாவறட்சியும், இருமலும், தேஹ அழற்சியும், மூர்ச்சையும் உபத்திரவங்களாக உண்டாகும்.—81, 82½.

**மிதமிஞ்சிய ஜாடராக்னியைத் தணிக்கு முபாயம்:—**(1) மிக்க மேலோங்கி யெரியும் பாஹ்யாக்னியைத் தண்ணீர் ஊற்றி அவிப்பதுபோல மிதமிஞ்சிய ஜாடராக்னியை குருவாகவும் ஸ்நிக்த்தமாகவும் - மந்தமாகவும்-ஸாந்த்ரமாகவும்-சீதமாகவும்-ஸ்த்திரமாகவுமுள்ள அன்னபானங்களால் சமநம் செய்யவேண்டும். (2) மிதமிஞ்சி விருத்தியான ஜாடராக்னியானது இடையிடையே ஸமயம் நேரிடும்போது பசநம் செய்வதற்குத் தீனியின்றி பிணியாளியை அழித்து விடாதபடி, உணவு முற்றிலும் ஜீர்ணமாவதற்கு முன்பே இவனுக்கு போஜன பதார்த்தங்களை அப்போதைக்கப்போது கொடுத்துவர வேண்டும்.—83, 84½.

**மிதமிஞ்சிய ஜாடராக்னியைத் தணிக்கும் உணவுகள்:—** (1) க்ருஸரா, பாயஸம், ஸ்நிக்த்தமான மாப்பண்டங்களாலாகியதும் வெல்லத்தினால் செய்ததுமான பணியாரங்கள், நீர்வாழும் ஜந்துக்களென்ன ஆநூபதேசத்திய பிராணிகளென்ன இவற்றின் கொழுத்த இறைச்சிகள் இவைகளை இப்பிணியாளி புஜிக்கலாம். (2) மத்ஸ்யங்களை உபயோகிப்பது விசேஷமாகும்; அதிலும் ஓடாமல் ஸ்த்திரமாயுள்ள ஜலத்தில் ஸஞ்சரிக்கும் வழவழப்பான மத்ஸ்யங்களை உண்பது மேலாகும். (3) நன்றாகக் கொழுத்த

1. இது **பஸ்மகாக்னி** எனப்படும்.

செம்மறியாட்டின் இறைச்சியைக் கடுமையான ஜாடராக்னியைத் தணிப்பதற்கு உண்ணலாம்.—85, 86½.

கடுமையான ஜாடராக்னியினுலுண்டாகும் நாவறட்சிக்குப் பரிஹாரம் :—ஜாடராக்னியின் கடுமையினுல் நாவறட்சி யுண்டானுல் (1) தேன் மெழுகு கலந்த பாலேயாவது, (2) அவ்வித நெய்யையாவது பானம் செய்யலாம். (3) அதிக நெய் கலந்த கோதுமைமாவையாவது பாலுடன் பருகலாம். (4) நல்லெண்ணெயைத் தவிர மற்ற ஸ்நேஹங்களையாவது ஆநூப மாம்ஸரஸத்துடன் கலந்து பானம் செய்யலாம். (5) கருஞ்சிவதை வெண்சிவதை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலேயாவது விரேசநமாகும்படி யுட்கொள்ளலாம். (6) பித்தஹரமான பாயஸத்தை அடிக்கடியும் பத்திய உணவாகவும் பருகலாம். 87—89.

கடுமையான ஜாடராக்னியைத் தணிப்பதும் இல்லாவிடில் உண்டாகும் தீங்கும் :—(1) குருகுணமும், கொழுப்பை விருத்தி செய்யும் தன்மையும், கபத்தை அதிகப்படுத்தும் குணமும் உள்ள உணவுகள் மிதமிஞ்சிய ஜாடராக்னியைத் தணிக்க ஹிதமானவை ; பகலில் போஜனம் செய்து நித்திரை யுறுவதும் அக்குணமுண்டு பண்ணும். (2) அமிதமான ஜாடராக்னி புஜிக்த உணவைப் பசநம் செய்துவிடும் ; உணவில்லாமற் போனுல் அவ்வக்னி தோஷங்களே எரிக்கும் ; தோஷங்கள் க்ஷயித்துவிட்டால் தாதுக்களும் எரிக்கப்படும் ; தாதுக்கள் எரிந்து அழிவுறுமானுல் அவ்வக்னி இறுதியில் உயிரைப் போக்கிவிடும்.—90, 91.

ஜாடராக்னியை நன்கு பரிபாலிப்பதாலும் பரிபாலிக்காததாலும் உண்டாகும் பலன்கள் :—இன்ன உணவு இயற்கையிலேயே விரோதமானது, இன்ன உணவு சேர்க்கையினுல் அல்லது பக்குவம் செய்யும் வகையினுல்[1] விரோதமானது ; என்பது முதலியதை அறிந்துகொள்ளாமலே சிலர் தோன்றியவாறு பலவற்றையும் தின்றுப் பிழைத்துவருகின்றனரேயென்ருல், அது அவர்களுடைய ஜாடராக்னி பலத்திற்குள்ள விசேஷ சக்தியேயாம் ; ஆனுல் அது அனைவருக்கும் பொருந்தாது. ஆகையால் எவ்வகையிலேனும் ஜாடராக்னியைக் காக்கவேண்டும் ; ஏனெனில் அக்னி அழிவுற்ருல் மனிதனும் நாசமடைவது நிச்சயம். ஜாடராக்னி தோஷங்களால் மூடப்பெற்றுக் கோளாறடைந்தால் மனிதனையும் திரளான பிணிகள் சூழ்ந்துகொள்ளும் ; அவ்வக்னி நல்ல நிலைமையிலிருந்தால், மனிதனும் பிணியற்றவனுகவும் தீர்க்காயுளாகவும் வாழ்வான்.—92, 93.

---

1. விருத்தத்திரவ்யம் முதலியவற்றைப்பற்றி முதற் பாகம் பார்க்க.

## பதினோராம் அத்தியாயம்.

## மூத்திராகாத சிகித்ஸை.

இனி மூத்திராகாத சிகித்ஸிதம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

### மூத்திராகாத சிகித்ஸை.

**வாத மூத்திரக்ருச்சிரத்தில் ஸ்நேஹஸ்வேதங்கள் :—** வாத தோஷத்தினுலுண்டான மூத்திரக்ருச்சிரம் என்கிற நீர்ச்சுருக்கில் நாபிக்குக் கீழே வாதஹர தைலத்தைத் தேய்த்து, மிகவும் ஸ்நிக்தமான பிண்டம் - ஸேகம் - அவகாஹம் என்கிற ஸ்வேத முறைகளால் தேஹத்திற்கு ஸ்வேதம் செய்யவேண்டும்.—1.

**வாத மூத்திரக்ருச்சிரத்திற்கேற்ற ஸ்நேஹங்களும் உணவு முதலியவைகளும் :—**(1) தசமூலம், சற்றுமுட்டி, ஆமணக்குவேர், வாற்கோதுமை, தண்ணீர்விட்டாங் கிழங்கு, சாறடை, கொள், இலந்தை, நீர்த்திப்பிலி, வெள்ளைச்சாரணை, கல்லுருவி இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, இச்சரக்குகளையே கல்கமாகவும் சேர்த்து, தைலம் - க்ருதம் - பன்றிக்கொழுப்பு - கரடிக்கொழுப்பு இவற்றில் எதையாவது அதில் கூட்டிக் காய்ச்சி, பஞ்சலவணங்களையும் கலந்து பக்குவம்செய்து உட்கொண்டால் மூத்திராகாதம் முதலிய கோளாறுகள் நன்கு நிவ்ருத்தியாகும். (2) இதே திரவ்யங்களைச் சேர்த்துக் காய்ச்சிய பானங்களையும், அவற்றால் பக்குவம்செய்த உணவுகளையும் உட்கொள்ளலாம். (3) இவற்றையே பிண்டஸ்வேதம் செய்யவும் உபநாஹஸ்வேதம் செய்யவும் உபயோகிக்கலாம். (4) இச்சரக்குகளைத் தைலங்களோடும் கனிவர்க்கங்களோடும் கலந்து, அம்லவஸ்துக்களையும் கூட்டி யுபயோகிக்கலாம்; அவற்றுடன் ஸ்நேஹங்களையும் கலந்து முற்கூறிய உணவு முதலியவற்றோடு உபயோகிக்கலாம். (5) ஸௌவர்ச்சல லவணத்தை மதிரை யென்னும் மதுவில் அதிகமாகச் சேர்த்துப் பருக மூத்திரக்ருச்சிரம் முதலிய நீர்த்தாரையைப்பற்றிய வலி நிவ்ருத்தியாகும். 2—4½.

**பித்த மூத்திர க்ருச்சிரத்திற்குப் பரிஹாரங்கள் :—**(1) பித்த ஸம்பந்தமான மூத்திராகாதத்தில குளிர்ச்சியான ஸேகங்களையும், லேபங்களையும், அவகாஹநங்களையும்,[2] பிரயோகிக்கவேண்டும். (2) தண்ணீர்விட்டாங்கிழங்கு, நீர்முள்ளி, நிலப்பனங்கிழங்கு, தட்டைக் கோரைக்கிழங்கு, த்ருணபஞ்சமூலம் இவற்றைக் கஷாயம் காய்ச்சி, தேனும் சர்க்கரையும் கூட்டி யுட்கொள்ளலாம்.

---

1. மூத்திராகாதம் — முதற் பாகம் பார்க்க.

2. ஸேகம், லேபம், அவகாஹம் என்பவற்றின் விவரங்களைப்பற்றி முதற் புத்தகம் பார்க்கவும்.

(3) ஆடாதோடை, முள்வல்லாரை, வெள்ளிரிவேர், குலைம்பா வேர், குங்குமப்பூ இவற்றைக் கல்கமாகச் செய்து, திராக்ஷையின் கஷாயத்தோடு உட்கொள்ள மூத்திராகாத ஸம்பந்தமான எல்லாக் கோளாறுகளும் தீரும். (4) வெள்ளரிவிதை, அதிமதுரம், மரமஞ்சள் இவற்றை அரிசிகழுவிய நீரால் கல்கமாகச்செய்து, அதை யாவது பழகிய திராக்ஷாஸவத்தோடு உட்கொள்ளலாம். 5—8.

கப-மூத்திரக்ருச்சிரத்திற்குப் பரிஹாரங்கள் :—கபத்தினுலான மூத்திர க்ருச்சிரத்தில (1) வமநமும், (2) ஸ்வேத சிக்தையையும், (3) தீக்ஷ்ண குனம்-உஷ்ணம்-கடுரஸம் இத்தன்மையான போஜனமும், வாற்கோதுமையினுலாகிய பலவிதமான உணவுகளும், யவக்ஷாரமும், மோரும் உபயோகிக்கத் தகுந்தவையாம். (4) சிற்றேலத்தை மதுவின் அனுபானத்துடன் உட்கொள்ளலாம்; அல்லது நெல்லிக்காயின் சாற்றோடாவது அதை யுபயோகிக்கலாம். (5) தாமரைமணி, நெறிஞ்சில், சிற்றேலம், த்ரிகடு இவற்றின் சூர்ணத்தையாவது தேனுடன் கலந்தாவது, பசு மூத்திரத்துடனுவது உபயோகிக்கலாம். (6) கண்டங்கத்திரியின் ஸ்வரஸத்தையாவது தேன் சேர்த்துப் பருகலாம். (7) புங்கங்காயின் வித்தையாவது நன்ருகச் சூர்ணம்செய்து மோருடன் உட்கொள்ளலாம். (8) கருங்காலி, ஏழிலம்பாலே, வெட்பாலரிசி, சீந்தில், ஆமணக்குவேர், கடுகரோஹிணி, சிற்றேலம், புங்கம்விதை இவற்றைக் கஷாயமாகப் பக்குவம்செய்து தேன் கூட்டியும் குடிக்கலாம். (9) முற்கூறிய கருங்காலி முதலியவற்றையே பேயாவாகப் பக்குவம் செய்தாவது பானம் செய்யலாம். (10) பவளத்தையாவது நன்கு சூர்ணம்செய்து அரிசி கழுவிய நீரோடு உபயோகிக்கலாம். (11) அல்லது பாதிரி மரப்பட்டையைக் காய்ச்சிக் காய்ச்சி, ஏழுதடவை வடிக்கட்டி, அதிலிருந்து வரும் க்ஷாரத்தையாவது தைலத்தின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம். (12) பாதிரியின் க்ஷாரம், யவக்ஷாரம் இவற்றோடாவது, திலக்ஷாரத்தோடாவது வேப்பம் பட்டையின் க்ஷாரத்தையும் கூட்டி உட்கொள்ளலாம். (13) இலவங்கப்பட்டை, ஏலம், மிளகு இவற்றைக் கூட்டிய மதிரை யென்னும் மதுவையாவது யவக்ஷாரஜலத்துடன் பருகலாம். (14) வெல்லம் சேர்த்துப் பக்குவம் செய்த வியஞ்ஜநங்களையாவது உபயோகிக்கலாம். (15) இலவங்கப்பட்டை, ஏலம், மிளகு இவற்றைத் தனித்தனியாகவே வெல்லம் கலந்த வியஞ்ஜனங்களோடு உபயோகிக்கலாம். 9—14½.

ஸந்நிபாத மூத்திரக்ருச்சிர சிகித்ஸை :—ஸந்நிபாத ஸம்பந்தமான மூத்திரக்ருச்சரத்தில் முற்கூறிய எல்லாவற்றையுமே அந்தந்த நிலைமைகளுக்கு ஏற்றவாறு பிரயோகிப்பது ஹிதமாகும். வெகு நாட்களாயுள்ள அச்மரீயென்கிற கல்லடைப்பு வியாதியிலும், வாதவஸ்தி முதலிய மூத்திரமார்க்க ஸம்பந்தமான கோளாறுகளிலும் முற்கூறியவற்றையே பிரயோகிக்கலாம்.—15½.

## அச்மரீ சிகித்ஸை.

அச்மரீ சிகித்ஸை :—மூத்திரத்வாரத்தி லுண்டாகும் அச்மரீ யென்கிற கல்லடைப்பு வியாதி யமனுக்குச் சமானமாகக் கருதப் படுகின்றது ; வியாதி ஆரம்ப தசையிலிருந்தால் ஔஷதங்களால் நிவ்ருத்திக்கலாம் ; அது மிகவும் முதிர்ந்து விட்டால் சஸ்திர சிகித்ஸையினுல் நிவாரணம் செய்யவேண்டியதாகும். அவ்வச்மரீ ரோகத்தின் பூர்வரூபங்களில் அடியிற் கூறப்படும் ஸ்நேஹம் முத லிய சிகித்ஸா முறைகளைச் செய்யவேண்டும்.—16, 17.

வாதாச்மரியில் பாஷாணபேத்யாதி க்ருதம் :—கல்லுருவி, ஈச்வரமல்லி, கடலுப்பு, மேவளை, தண்ணீர்விட்டாங்கிழங்கு, சூர் யகாந்தி, பேராமுட்டி, பெருவாகை, வெட்டிவேர், முருக்கை, பில்லூரி, சிறுதேக்கு, கண்டங்கத்திரி, பேய்க்கரும்பு, பாப்பார முள்ளி, நெரிஞ்சில், நீர்முள்ளி, வாற்கோதுமை, கொள், இலந்தங் கொட்டை, மாவலிங்கை, தேற்றுங்கொட்டை இவற்றைக் கஷாய மிட்டு, அக்கஷாயத்தில் க்ருதம் சேர்த்து, ஊஷகாதி கணச்[1] சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதத்தைப் பானம் செய்ய வாததோஷத்தினுலுண்டாகும் அச் மரி சீக்கிரத்தில் உடைந்து வெளிப்படும். 18—20.

ஏரண்டாதி கல்கம் :—ஆமணக்கு, கண்டங்கத்திரி, பாப்பார முள்ளி, நெரிஞ்சல், நீர்முள்ளி இவற்றின் வேர்களைக் கல்கமாக அரைத்து, புளிப்பில்லாத தயிரில் கலந்து உட்கொள்ள, அச்மரி யென்ற மூத்திரக்கல் உடைந்து சுகமுண்டாகும்.—21.

பித்தாச்மரியில் குசாதிக்ருதம்:—குசம், ஞாழல், விழல், பேய்க் கரும்பு, இத்கடம் என்னும் மூலிகை, கருப்பம்வேர், கல்லுருவி, தருப்பை, நிலப்பனங்கிழங்கு, நிலப்பூசுணிக்கிழங்கு, சம்பாப் பயிர்வேர், பாப்பாரமுள்ளி, நெரிஞ்சில், பெருவாகை, பாதிரி, வட் டத்திருப்பி, நீர்த்திப்பிலி, மருதோன்றி, சாறடை, காட்டுவாகை இவற்றைக் கஷாயமிட்டு, இதில் வெள்ளரிவிதை முதலியவைகளை யாவது,[2] கருநெய்தலின் விதைகளையாவது, அதிமதுரத்தை யாவது, சிலாஜதுவையாவது கல்கமாகச் சேர்த்து க்ருதம் பக் குவம் செய்து உபயோகிக்க, பித்த அச்மரி உடைந்து சுக முண்டாம். 22—24.

கபாச்மரியில் வருணுதி க்ருதம் :—வருணுதி கணம்[3], வாத ஹரமான இரண்டு கணங்கள்[4] இவற்றையும், ஏலக்காய், அரே

---

1. ஊஷாதி கணம் — முதற் புத்தகம் பார்க்க.

2. வெள்ளரி முதலியவை — இதற்கு முன்பு 7-வது ச்லோக மொழி பெயர்ப்பில் கூறப்பட்டுள்ளவை.

3. வருணுதிகணம் — முதற் புத்தகம் பார்க்க.

4. வாதஹரமான இரண்டு கணங்கள் — வீரதாதிகணமும் விதார் யாதிகணமும்.

அப்யங்கமும் ஸ்வேதமும் செய்வித்து, அவசியமான மங்களச் சடங்குகளையும் நிறைவேற்றி, எதும் போஜனமெடுத்துக் கொள்ளாமலிருக்கச் செய்து, முழங்காலுயரமுள்ள ஆஸனத்தில் உட்கார்ந்துள்ள ஒரு மனிதனுடைய மடியில் சாய்த்து, உடலின் மேற்பாகம் நிமிர்ந்து நிற்க, மிருதுவான மெத்தையின்மேல் உட்காரச் செய்து, முழங்கால்களை மடக்கி, முழங்கைகளையுங் கட்டி, தாங்கிக் கொண்டுள்ள மனிதனோடு சேர்த்து வஸ்திரத்தினால் திடமாகக் கட்டி, பிறகு பிணியாளிக்குத் தேறுதல் சொல்லி, நாபிக்கு நாற்புறமும் ஸ்நேஹமிட்டுத் தேய்த்து, நாபிக்குக் கீழே இடது புறமாக அச்மரியென்கிற மூத்திரக்கல் கீழே நழுவிச் செல்லும் வரையில் நன்கு பலமாக அழுத்தி மர்த்தனம் செய்யவும்; பிறகு வைத்தியன் தன் விரல்களுடைய நகங்களை நன்றாக அறுத்துச் சுத்தம் செய்துகொண்டு, இடது கையின் ஆள்காட்டி விரலையும் நடு விரலையும் ஸேவநீ யென்கிற நாடியை நோக்கி மெதுவாகக் குதத்தினுள் செலுத்தி, நாபிக்கு அருகில் குதவலியைப் பற்றிக் கொண்டு, அச்மரியுள்ளவிடத்தைத் தேடிப்பிடித்து, அச்மரி தங்கியுள்ள பாகத்தைக் குதத்திற்கும் ஆண்குறிக்கும் இடையில் மெதுவாக இழுத்துச் சேர்த்து, மூத்திரப்பை சுருக்கங் கொள்ளாமலும் அதில் இசிவு உண்டாகாதவிதமாகவும் அதை மெதுவாக உட்செலுத்திய இரண்டு விரல்களாலும் ஒரு கிரந்திபோல் மேல் நோக்கி அச்மரி எழும்பும் வரையில் அழுத்தவும்; பிறகு ஸேவநீ மார்க்கத்திலிருந்து விரலை யெடுத்து, ஒரு யவதானியப் பிரமாணம் அல்லது அச்மரியின் அளவுக்குத் தக்கபடி அவ்விடத்தைக் கீண்டு, அச்மரி உடையாதபடி அதை ஸர்ப்பாஸ்யம் என்கிற கருவியினால் வெளியில் எடுத்துப் போடவும். ஸ்திரீகளுக்கு மூத்திர வஸ்தியானது கர்ப்பாசயத்தை அணுகிச் சிறிது பக்கவாட்டாகத் தங்கியிருக்கக் கூடுமாகையால், மேற்புறமாகவே மெதுவாகச் சஸ்திரத்தை அவர்களுக்குப் பிரயோகிக்க வேண்டும்; இல்லையேல் அவர்களுக்கு மூத்திரப் பெருக்குடன் கூடிய விரணம் உண்டாய்விடும். புருஷனுக்குக்கூட வஸ்தியின் ஒரு பாரிசத்தில் சஸ்திரத்தினால் விரணமுண்டாய், மூத்திரம் கசிந்து கொண்டிருந்தால் அது ஒருவாறு சிகித்ஸிக்கக் கூடியதே; ஆனால் அவனுக்கும் இருபுறங்களில் விரணமேற்பட்டு மூத்திரம்கசிந்தால், அது அஸாத்தியமான கோளாறாக ஆய்விடும். 45—54½.

அச்மரியில் சஸ்திரப் பிரயோகமான பிறகு செய்யு முபசாரங்கள் :—சல்யம் விலக்கப்பட்ட பிறகு பிணியாளியை உஷ்ண ஜலம் நிரம்பிய விசாலமான ஒரு தொட்டியில் உட்காரவைத்துக் குளிப்பாட்டவும்: அப்படிச் செய்தால் வஸ்தியில் இரத்தம் விழுந்து அதை நிரப்பாமலிருக்கும்; அப்படிச் செய்தும் வஸ்தியினுள் இரத்தம் நிரம்பிவிடுவதாகத் தெரிந்தால், பாலுள்ள மரங்களின்

கஷாயத்தை ஆண்குறி மூலமாய் உட்செலுத்தவும்; பிறகு மூத்திரம் சுத்தியாவதன் பொருட்டு திருப்தி யுண்டாகும் வரையில் பிணியாளிக்கு வெல்லத்தைக் கொடுக்கவும்; அப்பால் விரணத்தின்மேல் தேனையும் நெய்யையும் லேபநம் செய்துகொண்டு, மூத்திரசோதநவஸ்துக்களால்[1] பக்குவம் செய்த யவாகூவை இளஞ்சூடான நிலைமையில் நெய் கூட்டி, தினத்திற்கு இரண்டு வேளையாக மூன்று நாட்கள் உட்கொள்ளச் செய்யவும்; பிறகு சொற்ப அன்னத்தைப் பாலில் கலந்து, போதுமானவளவு வெல்லமும் கூட்டி, பத்து நாட்கள் சாப்பிடவேண்டும்; அதற்குப் பிறகு எலுமிச்சம்பழம் முதலியவற்றின் இரஸங்களையும் ஜாங்கல ஜந்துக்களுடைய மாம்ஸரஸங்களையும் கலந்து அன்னத்தைப் புஜித்து வரலாம். பாலுள்ள மரங்களின் கஷாயத்தினால் விரணத்தை ஆற்றி, வறள்தாமரை, மஞ்ஜிஷ்டி, அதிமதுரம், வெண்மையான அன்னபேதி இவற்றை மெழுகாகச் செய்து அந்த விரணத்தின்மேல் தடவலாம்; இச் சரக்குகளையும் மஞ்சளையும் சேர்த்துத் தைலம் பக்குவம் செய்து, விரணத்தின்மேல் லேசநம் செய்துவரலாம். இப்படிப் பத்து நாட்கள் ஸ்வேத சிகித்ஸையும் செய்யவேண்டும். ஏழு நாட்களுக்குள் மூத்திரம் வெளிவராமற் போனால் அச்மரியினால் ஏற்பட்ட விரணத்தை அக்னியினால் முறைப்படிச் சுடவேண்டும்; மூத்திரம் தன் வழியில் கிரமமாக வெளிவந்து விடுமானால், மதுரரஸமுள்ள வஸ்துக்களைக் கொண்டு வஸ்திகளைப் பிரயோகித்துப் பிணியாளியை உபசரிக்க வேண்டும். அச்மரீ ரோகிக்கு சஸ்திர சிகித்ஸை செய்த பிறகு, சஸ்திரமிட்டவிடத்திலுள்ள விரணம் ஆறியிருந்தாலும், அப்பிணியாளி ஒரு வருஷமளவும் பர்வதம், யானை, குதிரை, மரம், இரதம் இவற்றில் ஏறக்கூடாது; ஸ்த்ரீஸம்பந்தமும் அதுவரையில் ஆகாது; ஜலத்திலும் அவன் நீந்தக்கூடாது. 55—62.

சஸ்திரசிகித்ஸை செய்யக்கூடாத அவயவங்கள் :—மூத்திரம் ஊறிவரும் நாடியையும், வஸ்தியையும், சுக்ரதாது ஊறிவரும் நாடியையும், பீஜகோசத்தையும், ஸேவநீ யென்கிற அங்குள்ள மத்திய ரேகா பாகத்தையும், குதத்தையும், மூத்திரத்தை வெளிவிடுவதற்கான அவயவத்தையும், யோனியையும் ஆக இவ்வெட்டு அவயவங்களையும் சஸ்திர சிகித்ஸை செய்யக்கூடாத பாகங்களென்று விலக்கிவிட வேண்டும்.—63.

---

1 முள் வல்லாரை, வெள்ளிரி, பூசுணி, நெரிஞ்சில் முதலியவை மூத்திரசோதநங்கள்.

# பன்னிரண்டாம் அத்தியாயம்.

## பிரமேஹ சிகித்ஸை.

பிறகு **பிரமேஹ சிகித்ஸை** யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

**பிரமேஹத்தில் முதலில் செய்யவேண்டிய சிகித்ஸை** :— தகுந்த தேஹவலிமையுள்ள பிரமேஹரோகிக்கு முதலில் வமநம் விரேசநம் இவற்றைப் பிரயோகிக்க வேணும். கடுகெண்ணெய், வேப்பெண்ணெய், நேபாளவித்தெண்ணெய், மணிப்புங்கெண்ணெய் இவற்றாலும், பிறகு கூறும் முறைப்படி பக்குவம் செய்த த்ரிகண்டகாதி தைலத்தினாலும் ஸ்நேஹ சிகித்ஸை செய்வித்து, ஸுரஸாதிகஷாயத்தில் கோரைக்கிழங்கு, தேவதாரு, சுக்கு இவற்றையும் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்து, அக்கஷாயத்தினால் பிறகு நிரூஹவஸ்தியைப் பிரயோகிக்கவேண்டும். இங்ஙனம் சுத்திசெய்யப்பட்ட பிணியாளி பித்தவிகாரங்களால் வருந்தினால் அவனுக்கு நியக்ரோதாதிகணச் சரக்குகளின் ஸ்வரஸங்களால் தர்ப்பணசிகித்ஸை செய்விக்கவேண்டும். வமந-விரேசநாதி அபதர்ப்பண சிகித்ஸைகளால் நீர் கட்டிப்போதல், மூத்திர மார்க்கத்தில் வலி, குல்மம், க்ஷயம் இவ்விதமான கோளாறுகள் தொடர்வதைத் தடுப்பதற்காகச் சமநௌஷதங்களை யுபயோகிக்கவேண்டும். வமந விரேசநாதி சோதந சிகித்ஸைகளுக்குத் தகாத பிரமேஹரோகிக்கு எந்தவித பிரமேஹமாயினும், அவன் சமநௌஷதங்களையே உட்கொள்ளலாம். 1—4½.

**பிரமேஹத்தில் சமநௌஷதங்கள்** :—(1) மஞ்சள் பொடியை நெல்லிக்காய் ரஸத்தில் சேர்த்து, தேன் கூட்டி விடியற்காலத்தில் பருகலாம். (2) மாமஞ்சள், தேவதாரு, த்ரிபலை, கோரைக்கிழங்கு இவற்றை இடித்துச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது உட்கொள்ளலாம். (3) சித்திரமூலம், த்ரிபலை, மாமஞ்சள், வாலுழுவை இவற்றையாவது கஷாயம் செய்து தேன்கூட்டிப் பருகலாம். (4) சீந்திற்கொடியின் ஸ்வரஸத்தையாவது, (5) நெல்லிக்கனி ஸ்வரஸத்தையாவது தேன் கலந்து உட்கொள்ளலாம்.—5, 6.

**கபப்பிரமேஹத்தில் சமநகஷாயங்கள்** :— (1) வெள்ளி-லோத்தி, கடுக்காய், கோரைக்கிழங்கு, சிறுதேக்கு; (2) வட்டத்-திருப்பி, வாய்விடங்கம், மருதம்பட்டை, கொத்தமல்லி விதை; (3) கருங்காலி, மாமஞ்சள், வாய்விடங்கம், வசம்பு இம்மூன்று விதமான கூட்டுகளில் ஏதேனும் ஒன்றைக் கஷாயமிட்டுத் தேன் கூட்டி கபத்தினாலுண்டான பிரமேஹத்தில் உபயோகிக்கலாம்.-7.

**பித்தப்பிரமேஹத்தில் சமநகஷாயங்கள்** : — (1) வெட்டிவேர், வெள்ளிலோத்தி, மருதம்பட்டை, செஞ்சந்தனம்; (2) பேய்ப்புடல், வேம்பு, நெல்லிக்கனி, சீந்தில்; (3) வெள்ளிலோத்தி,

வெட்டிவேர், அகில், காட்டாத்திப்பூ; இம்மூன்று கூட்டுகளில் ஒன்றைக் கஷாயமிட்டு, தேன் கலந்து பித்தப்பிரமேஹத்தில் பருகலாம்.—8.

கப-பித்தாதி பிரமேஹங்களில் சமனமான உணவுகள்:—கபப்-பிரமேஹ-பித்தப் பிரமேஹங்களுக்காகக் கூறப்பட்டுள்ள சமன கஷாயங்களில் எவரெவருக்கு எது அனுகூலமாகுமோ அதில் பானவகைகளையும் அன்னத்தையும் பக்குவம் செய்து உபயோகிப்பதோடு வாற்கோதுமையையும், கோதுமையையும், அவற்றில் பாவனை செய்து உபயோகிக்கலாம்.—8½.

வாதப்பிரமேஹங்களில் சமனஸ்நேஹங்கள் :—வாதம் பிரகோபித்துண்டான பிரமேஹங்களில் முற்கூறிய கஷாயங்களைக்கொண்டே ஸ்நேஹங்களைப் பக்குவம் செய்து உபயோகிக்கலாம்.—9.

பிரமேஹத்தில் உபயோகிக்கக்கூடிய பலவித உணவுகள்:—(1) வாற்கோதுமையை உடைத்து அல்லது அரைத்து பக்குவம் செய்த அடை முதலிய பணியாரங்களும், அதன் மாவும், வாட்யம் என்கிற பாகமும் பிரமேஹத்தில் அனுகூலமான உணவாம். (2) அல்லது பசுக்களும் குதிரைகளும் விழுங்கி அவை குதத்தின் மூலமாய் வெளியிடும் யவதானியங்களையும், (3) மூங்கிலரிசிகளையும் முன்போலவே பக்குவம் செய்து உபயோகிக்கலாம். (4) செந்நெல் முதலிய திருண தானியங்களும், பயறு முதலிய சிம்பீ தானியங்களும், நன்றாகப் பழகிய சம்பாவும், பழகிய காரரிசியும் இவ்வியாதியில் ஹிதமாம். (5) எள்ளுப் பிண்ணாக்கு, கடுகுப் பிண்ணாக்கு இவற்றைக்கொண்டு பக்குவம் செய்யப்படும் ஶ்ரீகுக்குடம் என்கிற அம்லமான உணவும், கலகம் என்கிற உணவும்[1] இதில் அனுகூலமாகும். (6) விளாம்பழம், தும்பில், நாவற்பழம் இவைகளும் இவற்றாலான ராக-காண்டவங்கள் என்கிற பணியாரங்களும் உபயோகமாகும். (7) திக்தரஸமுள்ள சாகங்களும், தேனும், த்ரிபலையும், முற்கூறிய மாப்பண்டங்களால் பக்குவம் செய்யப்பட்ட சுஷ்கமான பக்ஷ்யங்களும் ஹிதமாகும். (8) சூலத்தில் குத்தி வாட்டிச் சுஷ்கமாகப் போன ஜாங்கல மாம்ஸங்களும், இவ்வத்தியாயத்தில் இனி விவரிக்கப்படும் அயஸ்க்ருதியும் உபயோகமான உணவுகளாம். (9) பழகிய மதுக்களும், அரிஷ்டங்களும், ஆஸவங்களும், பக்வாஸசீதுவும் உபயோகிக்கத் தகுந்தவையே. (10) அஸனமே அஸநாதி கணச்சரக்குகளின் ஸாரத்தினாலும், தர்ப்பத்தினாலும் பக்குவம் செய்த கஷாயங்களும், தேன் கலந்த ஜலமும் பிரமேஹத்தில் உபயோகிக்கக் கூடியவையாம். (11) யவதானியங்களை த்ரிபலாக்வாதத்தில் இரவில் ஊறவைத்து, பகலில் வெய்யிலில் சுண்டும்படி சாயவைத்து,

---

1. கலகம்—இதுவே கலம் எனப்படும் ஒருவித மாப்பணியாரம்.

அந்த தானியங்களை மாவாக அரைத்துத் தேனில் பிசைந்து புஜித்து, சீதுவென்னும் மத்யத்தை அனுபானமாக உபயோகிக்கலாம். 10—14½.

கப-பித்தப் பிரமேஹங்களில் உபயோகிக்கக் கூடிய சூர்ணம்:-குங்கிலியம், ஏழிலம்பாலை, கம்பில்லம், புளியம்பழம் (உலர்ந்தது), தான்றிக்காய், விளாம்பழம் (உலர்ந்தது), முள் முருங்கம் புஷ்பம் இவற்றைச் சூர்ணம் செய்து, தேன் கூட்டியாவது, நெல்லிக்கனியின் சாற்றில் கலந்தாவது கப-பித்தப் பிரமேஹங்களில் உட்கொள்ளலாம்.—15, 16.

மேஹங்களில் த்ரிகண்டகாதி ஸ்நேஹங்கள்:—த்ரிகண்டகம்,[1] மஞ்சள், வெள்ளிலோத்தி, வசம்பு, மருதம் பட்டை, தாமரைக் கிழங்கு, வேலை, வேப்பம்பட்டை, சந்தனம், அகில், ஓமம், பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, திப்பிலி, சேராங் கொட்டை இவற்றைக்கொண்டு தைலம் பக்குவம் செய்து வாத கபமேஹங்களிலும், க்ருதம் பக்குவம் செய்து பித்தமேஹத்தி லும், மிச்ரகஸ்நேஹத்தைப்[2] பக்குவம் செய்து மிச்ரதோஷங் களாலான மேஹங்களிலும் உபயோகிக்கலாம்.—17, 18.

தாங்வந்தர க்ருதம்:—தசமூலம், கச்சோரம், நேபாளம், தேவதாரு, வெள்ளைச்சாரடை, செஞ்சாரடை, கள்ளி வேர், எருக்கம்வேர், கடுக்காய், நிலக்கடம்பு, சேராங்கொட்டை, புங்கம் வேர், மாவலிங்கவேர், மோடி, தாமரைக்கிழங்கு இவை வகைக் குப்பத்துபலம்,வாற்கோதுமை,இலந்தங்கொட்டை,கொள் இவை வகைக்கு மூன்று பிரஸ்த்தங்கள், இவற்றை யெல்லாம் எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்து நாலில் ஒரு பங்கு மிகும்படியாய் காய்ச்சி, அக்கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம்சேர்த்து, அரிசித் திப்பிலி, யானைத்திப்பிலி, சவ்யம், வசம்பு, வஞ்சி, காவட்டம்புல், சிவதை, வாய்விடங்கம், கம்பில்லம், கண்டுபாரங்கி, பில்வவேர், இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்து கொள்ளவும். இந்த க்ருதம் ஸகல மேஹங்கள், பிரமேஹ பிடகைகள், விதைப் பற்றுகள், பாண்டு, வித்ரதி, குல்மம், அர்சஸ், சோபை, க்ஷயம், கிருத்ரிமவிஷங்கள், மஹோதரம், ச்வாஸம், காஸம், வமநம், அண்டவிருத்தி, ப்லீஹவ்ருத்தி, வாதரக்தம், குஷ்டம், உந்மாதம், அபஸ்மாரம் இவ்வியாதிகளைப் பரிஹரிக்கும். இதற்கு "தாங் வந்தரக்ருதம்" எனப் பெயர். 19 — 23½.

லோத்ராஸவம்:—வெள்ளிலோத்தி, பெருங்குரும்பை, கச்சோரம், வாய்விடங்கம், கண்டுபாரங்கி, நதம் என்கிற கந்தத்திர

1. த்ரிகண்டகம்—கண்டங்கத்திரி, நெரிஞ்சல், நீர்முள்ளி இவற்றின் கூட்டு.

2. மிச்ரகஸ்நேஹம்—எண்ணெய், நெய் முதலிய பல ஸ்நேஹங்களைக் கூட்டி பக்குவம் செய்த தைலம்.

வியம், புலியுகிர், பூவரசம்பட்டை, வாலுழுவை, கோஷ்டம், பாக்கு, ஞாழல், அதிவிடயம், சித்திரமூலம், தும்மட்டி, பேய்த்தும்மட்டி, சதுர்ஜாதம், நிலவேம்பு, கடுகரோகிணி, ஓமம், தாமரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, கிரந்திதகரம், சவியம், த்ரிஃலை இவற்றை வகைக்குக் கால்பலம் வீதம் ஒரு கலசம்[1] ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்கு கஷாயம் மிகும்படியாகக் காய்ச்சி, வடிகட்டி, குளிர்ந்த பிறகு, இரண்டு பிரஸ்த்தம் தேன் சேர்த்து, பாத்திரத்தின் வாயைச் சீலைமண் செய்து, பதினைந்து நாட்களளவும் திறக்காமல் வைத்திருக்கவும். "லோத்ராஸவம்" என்கிற இவ்வௌஷதம் மேஹங்கள், அர்சஸ், ச்வித்ரம், குஷ்டம், அரோசகம், குடல், கிருமிகள், பாண்டு, கிரஹணி, மேதோரோகம் இவற்றைப் போக்கும். 24—27½.

**அயஸ்க்ருதி** :—அஸநாதி கணச்சரக்குகளை வகைக்கு இருபது பலம் வீதம் எட்டு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; அது நாலில் ஒரு பங்காக வற்றிய பிறகு வெல்லம் இருநூறு பலமும், தேன் இரண்டு பிரஸ்த்தமும் சேர்த்து வத்ஸகாதிகணச் சரக்குகளை வகைக்கு ஒவ்வொரு பலம் இடித்து கல்கமாகச் சேர்க்கவும். நெய் வைத்துப் பழகிய ஒரு திடமான மட்பாத்திரத்தின்மீது தேனும் திப்பிலியின் சூர்ணமும் கலந்து பூச்சிட்டு, அதன்மேல் அரக்கையும் உருக்கி மெழுகிவிட்டு, அதில் முற்கூறிய கஷாயாதிகளைச் சேர்த்து, மிகவும் மெல்லிதாக அடிக்கப்பட்டுள்ள உருக்கு இரும்புத்தகடுகளைக் கருங்காலிக் கட்டைகளிட்டு எரித்த அக்னியில் பழுக்கப் பழுக்கக் காயச் செய்து, அத்தகடுகள் முற்றிலும் தேய்ந்துபோகும் வரையில் அக்கஷாயத்தில் அநேகமுறை தோய்த்து, பிறகு இப்பாத்திரத்தின் வாயைச் சீலைமண் செய்து மூடி, ஒரு மாஸம் தானியக் களஞ்சியத்தில் அடக்கம் செய்து வைத்திருக்கவும். "அயஸக்ருதி" எனப்படும் இது முற்கூறிய லோத்ராஸவத்தினும் அதிக குணமுள்ளது. 28—31½.

**பிரமேஹத்தில் கப-மேதோ ஹர சிகித்ஸைகள்** :—தைலம் முதலியதைத் தடவாமல் பலமாக உடம்பை மர்த்தனம் செய்தல், வியாயாமம், இரவில் கண்விழித்தல், கபஹரமாகவும் மேதோஹரமாகவும் உள்ளும் புறமும் பிரயோகிக்கக்கூடிய மற்றச் சிகித்ஸை ஆக இவை பிரமேஹத்தில் ஹிதமாகும்.—32½.

**பிரமேஹத்தில் சிலாஜதுப்பிரயோகம்** :—ஒரு துலாம் சிலாஜதுவை அஸநாதிகணச்சரக்குகளின் கஷாயங்களில் பாவனை செய்து, அச்சரக்குகளின் கஷாயத்தோடு அதை உட்கொள்ள வேண்டும். சம்பா அரிசி அன்னத்தை ஜாங்கல மாம்ஸ ரஸங்களோடு புஜித்து வரலாம். இது மிக்க உபத்திரவங்களோடு கூடிய

1. கலசம்—அறுபத்திநாலு பிரஸ்த்தங்கள்கொண்ட அளவு.

கழுவி, (2) அதிமதுரம், சீந்தில், எள்ளு இவற்றை அரைத்து லேபநம் செய்யவும். (3) மஞ்ஜிஷ்டி, வெட்டிவேர், தாமரைக் கிழங்கு, க்ஷீரகாகோலீ, மஞ்சள், மரமஞ்சள், த்ரிபலை, அதிமதுரம், பால் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தினுலாவது, (4) ந்யக்ரோதாதிகணத்திற் கூறியுள்ள மரங்களின் தளிர்கள், பட்டைகள், கனிகள் இவற்றின் கஷாயங்களாலாவது பித்தவிரணங்களை ரோபணம் செய்யலாம்—4, $4\frac{3}{4}$.

கபஜ விரணங்களுக்கு சிகித்ஸை :—(1) கபஸம்பந்தமான விரணத்தைச் சரக்கொன்றைப் பட்டையின் கஷாயத்தினுல் கழுவி, (2) அரிசிமா, சிவதைவேர், மஞ்சள், எள்ளு இவற்றை அரைத்து லேபநம் செய்யவும். (3) நீலாஞ்ஜனம், நேபாளம், வெண்சிவதை, கருஞ்சிவதை, சித்திரமூலம், வெள்ளிலோத்தி, இந்துப்பு, பசு மூத்திரம் இவற்றைக்கொண்டு தைலம் பக்குவம் செய்து ரோபணமாக உபயோகிக்கவும். 5—$6\frac{1}{2}$.

இரத்த வித்ரதி-ஆகந்துக வித்ரதிகளுக்கு சிகித்ஸை :—இரத்தக் கோளாறுலும், ஆகந்துகமான காரணங்களாலும் உண்டாகிற வித்ரதியில் பித்தவித்ரதிக்கு (பித்தவிரணத்திற்கு)க் கூறப்பட்டுள்ளதைப்போலவே சிகித்ஸை செய்யவேண்டும்.—7.

அபக்வமான அந்தர்வித்ரதியில் கஷாயம் — அந்தர்வித்ரதி பக்குவமாகாத நிலைமையிலிருக்கையில் வருணுதி கணச் சரக்குகளால் க்வாதம் செய்து, அதில் ஊஷகாதிகணச் சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்து முற்பகலில் அக்கஷாயத்தைப் பருகவும்.—8.

அபக்வ வித்ரதிகளில் கல்க-க்ருத நிருஹ அநுவாஸநப் பிரயோகங்கள் —(1) விரேசநகுணமுள்ள சரக்குகளால் க்ருதம் பக்குவம் செய்து, அதை முற்கூறிய வருணுதிகணக் கஷாயத்தின் அனுபானத்துடன், ஊஷகாதிகணகல்கத்தையும் கூட்டி உட்கொள்ளவும். (2) அதே வருணுதிகணக்வாதத்தில் ஊஷகாதிகண கல்கத்தைக் கூட்டி நிருஹவஸ்தியையும் அநுவாஸநவஸ்தியையும் பிரயோகிக்கலாம். (3) செம்முருங்கையைப் பானவகைகளிலாவது, போஜனங்களிலாவது, லேபங்களிலாவது அந்தந்த தோஷ நிலைமைகளுக் கேற்றவாறு கல்கமாகப் பிரயோகிக்க அபக்வமான வித்ரதி குணமடையும்.—9, 10.

த்ராயந்த்யாதி க்ருதம் :—கொன்றை, த்ரிபலை, வேம்பு, கடுகரோஹிணி, அதிமதுரம் இவை ஒவ்வொரு பாகம்; சிவதைவேர், பேய்ப்புடல்வேர் தனித்தனி நான்கு பாகம்; உமிநீக்கிய கடலை எட்டு பாகம்; இவற்றின் க்வாதத்தில் நெய்யைக் காய்ச்சிப் பயோகிக்க வித்ரதி, குல்மம், விஸர்ப்பம், அழற்சி, மேஹம், வெறி, ஜ்வரம், நாவரட்சி, மூர்ச்சை, வாந்தி, இருதய வியாதிகள், இரத்தபித்தம், குஷ்டம், காமாலை இவை தீரும்.—11, $12\frac{1}{2}$.

த்ராயமாணாதி க்ருதம் :—ஒரு குடவம் கொன்றைப்பட்டையை எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சிய கஷாயம் ஒரு குடவம், நெல்லிக்கனியின் சாறு ஒரு குடவம், பால் ஒரு குடவம், நெய் ஒரு குடவம், கடுகரோஹிணி, கொன்றைப்பட்டை, காஞ்சொறி, கோரைக்கிழங்கு, கீழாநெல்லி, காகோலி, ஜீவந்தி, செஞ்சந்தனம், நெய்தல் இவை வகைக்குக் கால் பலம்; இவற்றை ஒரு பாத்திரத்தில் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவும்; இது குணங்களில் முன் க்ருதத்திற்குச் சமானமானது. 13—15.

திராக்ஷாதி க்ருதம் :—திராக்ஷை, அதிமதுரம், பேரீச்சம் பழம், நிலப்பனங்கிழங்கு, தண்ணீர்விட்டாங்கிழங்கு, ஈச்சம் பழம், த்ரிபலை இவற்றின் கஷாயம், பால், நெல்லிக்கனியின் சாறு இவற்றில் க்ருதம் சேர்த்து, கடுக்காயின் கல்கத்தையும் கூட்டி, சர்க்கரை-தேன் இவற்றை நெய்யினும் கால் மடங்காகச் சேர்த்துக் காய்ச்சி யெடுத்து, ஆறிய பிறகு உபயோகித்தால் முன் க்ருதத்தைப்போலவே குண முண்டுபண்ணும்.—16, 17.

வித்ரதியில் இரக்த மோக்ஷணம் :—வித்ரதிக்குச் சமீபமாயுள்ள விடத்தில் ச்ருங்கம் என்கிற கருவி முதலியவற்றுலாவது, விரையினாலாவது இரத்தத்தை வெளிப்படுத்தலாம்.—17½.

பக்வமடையும் வித்ரதிக்கு உபநாஹஸ்வேதம் :—பக்வாவஸ்த்தை யடைந்து வரும் விதாதியையும், கோஷ்டத்தினுள் உண்டாய் வெளியில் காணக்கூடியவாறு பருத்துண்டா யிருப்பதுமான வித்ரதியையும் நன்கு பரிசோதித்துத் தெரிந்துகொண்டு உபநாஹஸ்வேதம் செய்யலாம்—18¼.

வித்ரதிகள் பக்குவமானதன் குறிகள் :—வலி சாந்தமாய், வீக்கம் திரண்டு, பக்கங்களை அழுத்தினால் வலியும் குறைந்திருக்கும்போது, அழற்சி முதலியவைகளும் சொற்பமா யிருக்கையில் வித்ரதி பக்குவ மடைந்திருப்பதாக அறிந்து, அதைச் சஸ்திரத்தினால் உடைத்து, அப்பால் விரணத்திற்குச் செய்வது போல் சிகித்ஸை செய்யவும். இக் குறிகளே பக்குவமான அந்தர்வித்ரதிக்கும் காணும்.—19, 20.

அந்தர் வித்ரதிக்கு சிகித்ஸை :—அந்தர் வித்ரதி பக்குவமாய் உடைந்து விட்டால், அதிலிருந்து வெளியாகும் தோஷம் குடல் முதலிய ஸ்ரோதோமார்க்கங்களை நிரப்பி, மேல்நோக்கி வாயினாலாவது, கீழ்நோக்கிக் குதத்தினாலாவது வெளியாகும். அந்த தோஷம் தனக்குத் தானாகவே வெளிவருமானால், ஹிதமான உணவுகளைப் புஜித்துக்கொண்டு, அத்தோஷம் வெளிவருவதைத் தடுக்காமல், பத்துப் பன்னிரண்டு நாட்களளவும் உபத்திரவங்கள் ஸம்பவிக்காதபடி வைத்தியன் பிணியாளியைப் பாதுகாத்து வர வேண்டும். துர்நீர் நன்கு வெளிவாராமற் போனால், வருணாதி கணச் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தை இளஞ்சூடா

கப் பருகலாம்; செம்முருங்கப்பட்டைக் கஷாயத்தையாவது, அக்கஷாயத்தில் பக்குவம் செய்தயவாகூவையாவது பானம் செய்யலாம்; வாற்கோதுமை, இலந்தம்பழம், கொள் இவற்றாலாகிய யூஷத்தைக் கொடுப்பதும் நலம். பத்து நாட்களுக்குப் பிறகு முன் கூறியுள்ள த்ராயந்த்யாதி க்ருதத்தினாலாவது, திலவக க்ருதத்தினாலாவது பிணியாளியின் சரீரபலாதிகளைப் பகுத்தறிந்து சோதநம் செய்விக்க வேண்டும்; தோஷங்கள் சுத்தமான பிறகு அப்பிணியாளி திக்தக க்ருதத்தைத் தேனுடன் பருகவேண்டும். இவ்வித்ரதிக்குச் சகலவிதத்திலும் குல்மத்திற்குச் செய்வது போலவே அந்தந்த தோஷங்களுக்குத் தகுந்தவாறு சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். 21—24½.

ஸகல வித்ரதிகளுக்கும் பொது சிகித்ஸை :—எல்லா வித்ரதிகளிலுமே அந்தந்த நிலைமைக்குத் தகுந்தபடி பக்குவம் செய்த கஷாயங்களோடு மஹிஷாக்ஷி குக்குலுவைக் கொடுக்கலாம்; அங்ஙனமே சிலாஜதுவையும் கொடுத்து வரலாம்.—25½.

வித்ரதியைப் பழுக்காமற் பராமரித்தல் :—வித்ரதி பழுத்துப் போகாதபடி அதைப் பராமரித்து வரவேண்டும்; பழுத்துப் போனால் அதை நிவ்ருத்தி செய்வது தைவாயத்தமேயன்றி வைத்தியனுக்கு அதீனமானதல்ல; மேலும் இவ்விரணம் சீக்கிரத்தில் அருகிலுள்ள தாதுக்களைச் சீரழிக்குந் தன்மையதாகையாலேயே "வித்ரதி" என்று வழங்கப்படுகிறது. இந்நிலைமையில் மேஹரோகமும் தொடருமானால், ப்ரமேஹங்களுக்குக் கூறிய சிகித்ஸையையும் நிறைவேற்ற வேண்டும்.—26, 27.

ஸ்தநவித்ரதி சிகித்ஸை :—ஸ்தநத்திலுண்டாகும் வித்ரதியில் விரணங்களுக்கு ஏற்ற[1] எல்லாச் சிகித்ஸைகளையுமே செய்யலாம்; ஆனால் உபநாஹமென்கிற ஒத்தடம் மாத்திரம் கூடாது. ஸ்தந்யவாஹிகளென்கிற முலைப்பாலோடும் நாடிகளையும், கறுப்பான முலைக்காம்பு பாகத்தையும் தாக்காமல் காத்துக்கொண்டு ஸ்தநவித்ரதியைக் கீறவும்; ஆமமான எல்லா நிலைமைகளிலும் ஸ்தநத்திலுள்ள பாலைக் கறந்துவிடவும்.—28, 28½.

## வ்ருத்தி சிகித்ஸை

வாத வ்ருத்தியில் ஸ்நேஹந சோதநங்கள் :—வாத தோஷத்தினாலுண்டான வ்ருத்தியில்[2] காட்டுமாவின் தைலம், வெள்ளிலோத்திரத் தைலம், ஆமணக்கெண்ணெய், இனி கூறப்படும் ஸௌகுமார ஸ்நேஹம், மிச்ரக ஸ்நேஹம்[3] என்கிற இந்த ஸ்நே

---

1. விரணங்களுக்குச் செய்யப்படும் சிகித்ஸைகள்—உத்தர ஸ்த்தாநத்தில் விரணவிஞ்ஞாநீய ப்ரதிஷேதாத்தியத்தில் விவரம் காண்க.

2. வ்ருத்தி—முதற்பாகம் பார்க்க

3. மிச்ரக ஸ்நேஹம்—அடுத்த அத்தியாயத்தில் கூறப்படுவது.

ஹங்களால் ரோகிக்கு ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்வித்து, பிறகு சிவதை வேரைக்கொண்டு சோதநம் செய்விக்கவேண்டும்.[1]--29½.

**வாதவ்ருத்தியில் வஸ்தி - ஸ்வேத - லேபநாதிகள்:**—பிறகு வாதஹரமான கஷாயங்கள், கல்கங்கள் இவற்றைக்கொண்டு நிரூஹ வஸ்தியைப் பிரயோகிக்கலாம். அப்பால் மாம்ஸரஸத்தை உணவாகக் கொடுத்து, பிறகு அதிமதுரம் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தினால் அநுவாஸநவஸ்தியையும் பிரயோகிக்கலாம். வாதஹரமான ஸ்வேதங்களும், லேபநங்களும் வீங்கிய பீஜத்தின் மீது பிரயோகிக்கத் தகுந்தவையே. இவற்றையெல்லாம் செய்து வீக்கம் பக்குவமான பிறகு, அதைக் கீறி அப்பால் விரணத்திற்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்யவேண்டும்.--30, 31.

**பித்தவ்ருத்தி சிகித்ஸை:**—பித்தத்தினாலும் இரத்தக் கோளாறினாலும் உண்டாகும் வ்ருத்திரோகம் ஆமமாயிருந்தால், சோபத்திற்குச் செய்யும் சிகித்ஸையையும், பக்குவநிலைமையிலிருந்தால், விரணத்திற்குச் செய்யக்கூடிய சிகித்ஸையையும் அந்தந்த நிலைமைகளுக் கேற்றவாறு நிறைவேற்றவேண்டும்; அடிக்கடி இரத்தமோக்ஷணமும் செய்யலாம்.—32.

**கபவ்ருத்தி சிகித்ஸை:**—(1) கபத்தினாலான வ்ருத்தியில் மரமஞ்சளின் கல்கத்தைப் பசுமூத்திரத்தோடு உட்கொள்ளலாம். (2) வாடச்செய்யும் சிகித்ஸையைத் தவிர்த்து சிலேஷ்மக் கிரந்திக்கு[2] ஏற்ற சிகித்ஸைகளெல்லாம் இதில் அனுகூலமானவை. (3) வ்ருத்தியானது பக்குவநிலைமையை அடைந்த பிறகு, அதைச் சஸ்திரத்தினால் கீறி அடியிற் கூறப்படும் விரணசோதந தைலத்தைக் கொண்டு ஆற்றவேண்டும்.—33, 33½.

**விரணசோதந தைலம்:**—ஜாதிக்காய், சேராங்கொட்டை, அழிஞ்சில் விதை, எழிலம்பாலை, பேய்ப்புடல், வேம்பு, மஞ்சள், வாய்விடங்கம், வெட்பாலை இவற்றைச் சேர்த்துத் தைலம் பக்குவம்செய்து விரணங்களை ஆற்றுவதற்கு உபயோகிக்கலாம்.—34½.

**மேதோவ்ருத்தியில் ஸ்வேத சிகித்ஸை:**—(1) மேதஸ்ஸின் விருத்தியாலுண்டாகும் வ்ருத்தியில், ஸுரஸாதிகணச் சரக்குகளைப் பசுமூத்திரத்தில் ஆட்டி, அக்கல்கத்தை வெதுப்பி அதனால் வீக்கத்தின்மேல் ஸ்வேதநம் செய்யலாம். (2) அல்லது சிரோவிரேசநத்திற்கான[3] சரக்குகளாலாவது ஒத்தடமிடலாம்;

---

1. த்ரிவ்ருத ஸ்நேஹம் என்று அருணதத்தன் கூறியுள்ள வியாக்யாநம், சோதநம் என்கிற விஷயத்துக்கு அனுகூலமானதா யில்லையாகையால் 'த்ரிவ்ருதா' என்று பதவிபாகம் செய்து, அதற்குச் சிவதை வேர் எனப் பொருள் கூறப்பட்டது.

2. சிலேஷ்மக்கிரந்தி-உத்தரஸ்த்தாநத்தில் 30-ம் அத்தியாயம் பார்க்க.

3. "சிரோவிரேசநத்திற்கு வேல்லாதி கணம்" என்கிற தலையங்கத்தை முதற் புத்தகத்தில் பார்க்க.

ஆனால் பீஜங்களுக்கிடையிலுள்ள ஸேவநீ யென்னும் ரேகையின் மேல் சூடு தாக்காதபடி ஸ்வேதநம் செய்யவேண்டும்.—35½.

மேதோவ்ருத்தியில் சஸ்திர சிகித்ஸை:—மேதோவ்ருத்தியில் வீக்கத்தை வ்ருத்திபத்திரமென்கிற சஸ்திரத்தினால் சேதநம் செய்து, உள்ளே சேர்ந்துள்ள மேதஸ் என்கிற நிணத்திரளை முற்றிலும் வெளிப்படுத்தி, உடனே தேன், அன்னபேதி, இந்துப்பு இவற்றால் விரணத்தைச் சுத்திசெய்து தைக்கவேண்டும்; மேதஸ் சுத்தியாவதற்காக மனச்சிலை, ஏலம், ஜாதிக்காய், கிரந்திதகரம், சேங்கொட்டை இவற்றால் பக்குவம் செய்த தைலத்தை விரணம் ஆறி கூடும்வரையில் மேலே லேபநம் செய்வதோடு, ஸ்நேஹநம் ஸ்வேதநம் என்கிற சிகித்ஸைகளையும் அங்ஙனமே செய்துவர வேண்டும். 36—38.

மூத்திரவ்ருத்திக்கு சிகித்ஸை:—மூத்திரஸம்பந்தமான வ்ருத்தியில்[1] ஸேவநீ யென்கிற இரேகைக்குக் கீழாக ஸ்நிக்த்தமான வஸ்துக்களைக் கொண்டு ஸ்வேதநம் செய்வித்து, வஸ்திரப்பட்டத்தினால் பீஜத்தைச் சுற்றி, அவ்விடத்தில் சஸ்திரத்தினால் குத்தி, உதரரோகத்தில் நீரை இறக்குவது போலவே,[2] உள்ளடங்கிய துர்நீரை இறக்கவும். பிறகு அவ்விடத்தில் ஸ்த்தகிகா பந்தநமிட்டு[3] விரணத்தை ஆற்றவேண்டும்.—39½.

அந்த்ர வ்ருத்தி சிகித்ஸை :—குடலிறக்கத்தினால் உண்டாகும் விருத்தியில், குடல் பலகோசமென்கிற பீஜப்பைக்குள் நன்றாக இறங்காமலிருக்கும் வரையில், வாதவ்ருத்திக்குக் கூறியுள்ளது போலவே சிகித்ஸை செய்யவேண்டும்.—40.

ஸுகுமார ரஸாயநம் :—வெள்ளைச்சாறடை நூறு பலம், தசமூலம், க்ஷீரகாகோலீ, ஸாளமென்கிற குங்கிலியமரப்பட்டை, ஆமணக்கு வேர், தண்ணீர்விட்டான்கிழங்கு, தர்ப்பை, மூஞ்சி, ஞாழல், நெட்டிக்கோரை, கரும்புவேர், வீழல் இவை வகைக்குப் பத்து பலம்; இவற்றை அறுபத்திநாலு பிரஸ்த்தம் ஜலத்தில் சேர்த்து, எட்டிலொரு பங்காக வற்றும்படிக் காய்ச்சி, வடிக் கட்டி, அதில் முப்பது பலம் வெல்லமும், ஒரு பிரஸ்த்தம் ஆமணக்கெண்ணெயும், இரண்டு பிரஸ்த்தம் நெய்யும், இரண்டு பிரஸ்த்தம் பாலும் கூட்டி, திப்பிலி, மோடி, இந்துப்பு, அதிமதுரம், திராக்ஷை, குராசானியோமம், சுக்கு இவற்றை வகைக்கு இரண்டு பலம் பொடித்துச் சேர்த்துப் பக்குவம் செய்யப்படுவது "ஸுகுமாரரஸாயநம்" எனப்படும். இது குணத்திலும் ஸுகுமாரமான ஔஷதம். காற்று, வெயில் இவைகளில் ஸஞ்சரிப்பது,

---

1. மூத்திர ஸம்பந்தமான வ்ருத்தி — மூத்திரம்போன்ற நிணநீர் சேர்ந்து அண்டம் வீங்கிப்போகும் வியாதி.

2. பதினைந்தாம் அத்தியாயத்தில் ஜலோதரம் பார்க்க.

3. ஸ்த்தகிகா பந்தநம் — முதற் புத்தகம் பார்க்க.

வழிநடப்பது, வாஹநங்களில் ஏறிச் சவாரி செய்வது முதலிய காரியங்களையும் இவ்வௌஷத முபயோகிப்பவன் விலக்கவேண்டிய அவசியமில்லை. ஸுகசாலிகளுக்கும், ஆகவே ஸுகுமாரமான சரீரமுடைய பிரபுக்களுக்கும், பல மனைவிகளுள்ளவருக்கும் இது கொடுக்கத் தகுந்தது; அலக்ஷ்மியையும் பாபத்தையுங்கூட போக்கவல்லது; எப்பொழுதும் உபயோகிப்பதால் நல்ல காந்தியையும், அழகையும், புஷ்டியையும் உண்டுபண்ணும்; வ்ருத்தி, வித்ரதி, குல்மம், அர்சஸ், யோனிரோகம், லிங்கத்தைப் பற்றிய ரோகங்கள், வாதரோகங்கள், சோபம், உதரரோகம், வாதரக்தம், ப்லீஹவ்ருத்தி, மலபந்தம் இவ்வியாதிகளில் உபயோகிப்பதற்கும் இது உத்தமௌஷதமாம். 41—47.

வ்ருத்தியிலும் வேறு சில வியாதிகளிலும் தாஹசிகித்ஸை :-- வ்ருத்திரோகம் ஸ்நேஹகர்மத்திலும், விரேகத்திலும், அநுவாஸந வஸ்தியிலும் நிவாரணமாகாவிட்டால், பிறகு முதலில் வஸ்திசிகித்ஸையைப் பிரயோகித்துவிட்டு, வ்ருத்தியுண்டாவதற்கான த்வாரத்தை அடைத்து, அதுமூலமாக வாதத்தைத் தடுப்பதன் பொருட்டு, வங்க்ஷணமென்கிற துடையிடுக்கிலுள்ள வீங்கிய பாகத்தை அக்னியினால் சுடவும். பிறகு எந்த பீஜம் வீங்கியிருக்கின்றதோ அந்த பாரிசத்துக் காலின் பெருவிரலை மேற்புறத்தில் வளைந்த ஊசியால் அர்த்தசந்திரன் போல் குத்தி, நூல் போன்ற நரம்பை உயரத் தூக்கி அறுத்து, அவ்விடத்தைக் குறுக்காகச் சுடவும். ஏனெனில் அந்த நரம்பின் கோளாறால் அவ்வியாதி ஸம்பவிக்கின்றது. ஒரு பாரிசத்து பீஜம் வீங்கியிருந்தால் மற்றொரு பாரிசத்துக் காலின் பெருவிரலிலுள்ள நரம்பைச் சுடலாமென்று வேறு ஆசாரியர்கள் கூறுகின்றனர்; வேறு சிலர் மற்றொரு காலின் மோதிரவிரலின் நரம்பைச் சுடலாமென்கிறார்கள். வாத-கபங்களால் உண்டாகும் குல்மரோகத்திலும், அவ்விதமான ப்லீஹரோகத்திலுமே முற்கூறியவாறு விரல்களின் நரம்புகளைச் சுடலாமென்று வேறு சில ஆசாரியர்கள் விதித்திருக்கின்றனர். எப்பக்கத்தில் விச்வாசி யென்கிற வாத வியாதி தோன்றுகிறதோ, அப்பக்கத்திலுள்ள சுண்டு விரலுடையவும் மோதிரவிரலுடையவும் நரம்புகளைச் சுடவேண்டுமென்று சிலர் கூறுவர். 48—51.

---

## பதினான்காம் அத்தியாயம்.

## குல்ம சிகித்ஸை.

இனி குல்ம சிகித்ஸையை விவரிக்கும் அத்தியாயம் கூறப்படுகிறது :—

வாதகுல்மத்தில் ஸ்நேஹ-ஸ்வேதங்கள் :—ருக்ஷத்தன்மை, குளிர்ச்சி இவற்றின் ஸம்பந்தத்தினால் ஏற்பட்டதும், மலம்

அபாநவாயு இவற்றை இறுகச்செய்வதும், கடுமையான வேதனைகளோடு கூடியதுமான வாததோஷத்தினால் உண்டாகிய குல்மத்திற்கு வாதரோகசிகித்ஸையிற் கூறப்படும் தைலங்களால் சிகித்ஸை செய்யவேண்டும். ஸ்நேஹபான வகைகள், ஸ்நிக்த்தமான உணவுகள், அநுவாஸந வஸ்திப்பிரயோகம் இவற்றால் பிணியாளியை ஸ்நிக்த்தமாகச் செய்து, அப்பால் அவனுக்கு ஸ்வேதசிகித்ஸையையும் செய்யவேண்டும்; வயிற்றுப்பொருமல், வயிற்றுவேதனை, வயிறு ஸ்தம்பித்துப் போதல், மலம் கட்டிப்போதல் இவை தோன்றியிருக்கையில் விசேஷமாக ஸ்வேதசிகித்ஸை செய்யவேண்டும்; ஏனெனில் ஸ்வேத சிகித்ஸை ஸ்நிக்த்தமான ரோகிக்கு ஸ்ரோதஸ்ஸுகளை மிருதுவாகச் செய்து, மிக்க அதிகரித்துள்ள வாயுவைத் தணித்து, மலபந்தம் முதலிய தோஷக்கட்டுகளை உடைத்து குல்மத்தைப் போக்குகிறது. 1—3.

குல்மத்தில் விசேஷமாக ஸ்நேஹபாநாதிகள் செய்விக்கும் நிலைமைகள்:—(1) நாபிக்கு மேற்புறத்தில் குல்மம் உண்டாயிருந்தால் விசேஷமாக ஸ்நேஹபானம் செய்வது ஹிதமாம்; (2) குல்மம் பக்வாசயத்தில் உற்பத்தியாயிருந்தால் விசேஷமாக வஸ்தி சிகித்ஸையைச் செய்வது அனுகூலமாம். (3) இரண்டுக்கும் இடையிலுள்ள உதரத்தில் உற்பத்தியானால் இவ்விரண்டு சிகித்ஸைகளும் விசேஷமாய் செய்யக்கூடியவையாம். (4) வாதஸம்பந்தமான குல்மத்தில் ஜாடராக்னி விருத்தியடைந்து, அபாநவாயுவும் மலமும் பந்தித்திருந்தால் ஸ்நிக்த்தமாகவும், உஷ்ணமாகவும், ப்ருஹ்மண குணமுள்ளவையாகவுமிருக்கிற அன்னபானங்களைக் கொடுப்பதோடு, அடிக்கடியும் ஸ்நேஹபானமும் செய்விக்கவேண்டும்.—4, 5¼.

வாதாதிகுல்மங்களில் வஸ்திகளுக்குப் பிராதாந்யம்:—வாதத்தினால் உண்டான குல்மத்தில் கபத்திற்கும் பித்தத்திற்கும் கோளாறு நேரிடாத வகையில் நிரூஹ-அநுவாஸந வஸ்திகளைப் பிரயோகிக்கவேண்டும். வஸ்திசிகித்ஸை சிறந்த குல்மஹரக்கிரியை; ஏனெனில் அச்சிகித்ஸை முதலில் வாததோஷத்தை அதன் ஸ்த்தாநத்திலேயே ஜயித்துவிட்டு, அப்பால் உடனே குல்மத்தைப் போக்குகின்றது. ஆகையினால் வாத-பித்த-கபங்களால் உண்டாகும் குல்மங்களில் நிரூஹவஸ்திகளையும் அநுவாஸந வஸ்திகளையும் அடிக்கடியும் பிரயோகித்துவர அவை நிவ்ருத்தியாகும். 6—8.

ஹிங்க்வாதி க்ருதம்:—காயம், ஸௌவர்ச்சல லவணம், த்ரிகடு, கறியுப்பு, மாதளை, ஜீரகம், தாமரைக்கிழங்கு, ஓடமம், கொத்தமல்லி விதை, புளிவஞ்சி, யவக்ஷாரம், சித்திரமூலம், கச்சோரம், வசம்பு, இராமதுளஸி, ஏலக்காய், கருந்துளஸி இவற்றைத் தயிரில் சேர்த்து, அந்த இரஸத்தில் க்ருதத்தைப் பக்

குவம் செய்யவும். இந்த க்ருதம் வயிற்றுவலியையும், வயிற்றுப் பொருமலையும் போக்கும்; வாதகுல்மத்தினால் வருந்துபவருக்கு இது ஹிதமானது.—9, 10.

ஹபுஷாதி க்ருதம் :—கொட்டைக்கரந்தை, மிளகு, ஜீரகம், பஞ்சகோலம், ஓமம், சோம்பு, இந்துப்பு இவற்றைப் பால், தயிர் இவற்றிலும், மாதளரஸம், முள்ளங்கியின் இரஸம், இலந்தம்பழ ரஸம் இவற்றிலும் சேர்த்து, நெய்யையும் கூட்டி பக்குவம் செய்யவும். இந்த க்ருதமானது வாதகுல்மம், மஹோதரம், வயிற்றுப் பொருமல், பார்ச்வசூலை, இருதயநோய், குடல்வலி, யோனி ரோகங்கள், அர்சஸ், கிரஹணீதோஷம், காஸம், ச்வாஸம், அரோசகம், ஜ்வரம் இவற்றைப் போக்கவல்லது.—11, 12½.

தாதிக க்ருதம் :—தசமூலம், சிற்றாமுட்டி, கருஞ்சாறணை, பெருஞ்ஜீரகம், வெள்ளைச்சாறணை, தாமரைக்கிழங்கு, ஆமணக்கு வேர், அரத்தை, அமுக்கிறாங்கிழங்கு, கண்டுபாரங்கி, சிந்தில், கச்சோரம், மாங்காயிஞ்சி இவற்றை வகைக்கு இரண்டு பலம் வீதமும், யவதானியம், இலந்தங்கொட்டை, கொள், உளுந்து இவற்றை வகைக்கு ஒரு பிரஸ்தம் வீதமும், ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சி, அதில் ஒரு ஆடகமளவு தயிரையும் கூட்டி, ஒரு பிரஸ்தம் நெய்யைச் சேர்த்துக் காய்ச்சவும். மாதளை, காட்டுமா, கொடிமாதளை இவற்றின் சாறுகள், அரிசி கழுவிய நீர், காடி இவைகளை நெய்க்குச் சம அளவாக ஊற்றவும். பிறகு கண்டுபாரங்கி, அசோகம்பட்டை, வசம்பு, கிரந்திதகரம், சிற்றரத்தை, சித்திரமூலம், கொத்தமல்லி விதை, சோம்பு, குராசானியோமம், புளிவஞ்சி, கருஞ்ஜீரகம், ஜீரகம், பெருங்காயம், கொட்டைக்கரந்தை, ஓமம், ஆடாதோடை, மிளகு, நேபாளம், சிவதை, பெருங்குரும்பை, யானைத்திப்பிலி, வாய்விடங்கம், மாதளை, சதகுப்பி, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், கருந்துளஸி, நன்னாரி, கருஞ்சாறணை, மருக்காரை, நெரிஞ்சில், வெள்ளரி, கக்கிரிக்காயின் வித்து, கண்டங்கத்திரி, கல்லுருவி, த்ரிகடு, உப்பு, இந்துப்பு, ஸௌவர்ச்சலலவணம் இவற்றை மிருதுவாக ஆட்டி, கல்கமாகச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவும். "தாதிக க்ருதம்" எனப்படும் இது முற்கூறிய வியாதிகளையும்[1] அபஸ்மாரம், க்ருத்ரிமவிஷம், உந்மாதம், மூத்திர அடைப்பு, வாதரோகங்கள் இவற்றையும் தீர்க்கும். 13—20½.

த்ரியூஷணாதி க்ருதம் :—த்ரிகடு, த்ரிபலை, கொத்தமல்லி விதை, சவ்யம், வாய்விடங்கம், சித்திரமூலம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, பால் கூட்டி, க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க வாதகுல்மம் நிவாரணமாகும்.—21½.

---

1. ஹபுஷாதி - ஹிங்க்வாதி க்ருதமுறைகளிற் குறிப்பிட்டுள்ள வியாதிகள்.

லசுநாதி க்ருதம்:—வெள்ளுள்ளி ஒரு துலாம், மஹாபஞ்ச மூலச் சரக்குகள் வகைக்கு ஐந்து பலம், இவ்வனைத்தையும் அரைப்பாரம் அளவான ஜலத்தில் சேர்த்துக் கால்பங்கு ஜலமாக வற்றும்படிக் காய்ச்சி, அதில் தனித்தனி அரைப்பங்கு மாதளம் பழஸ்வரஸத்தையும், ஸுராவையும், காடியையும், தயிரையும் கூட்டி, த்ரிகடு, த்ரிபலை, பெருங்காயம், குராசானியோமம், சவ்யம், ஜீரகம், புளிவஞ்சி, இந்துப்பு, தேவதாரு இவற்றை வகைக்கு அரைப்பலம் எடுத்து, நுண்மையாகக் கல்கமாகச் சேர்த்து, ஒரு பிரஸ்த்தமளவு க்ருதத்தைப் பக்குவம் செய்யவும். அது வாதகுல்மக் கோளாறுகளனைத்தையும் போக்கும். 22—25.

ஷட்பல க்ருதம்:—இராஜயக்ஷ்ம சிகித்ஸையிற் கூறிய ஷட்பலக்ருதத்தையாவது இந்த ரோகி பருகலாம். அக் கிருதத்தில் பாலுக்குப் பதிலாக பிரஸன்னு என்கிற மதுவையாவது, ஸுராவையாவது, மாதளம்பழச் சாற்றையாவது, தயிராடையை யாவது சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க அது வாதகுல்மத்தைப் பரிஹரிக்கும்.—26, 26½.

வாதகுல்மத்தில் லேகநம் செய்யவேண்டிய நிலைமை:—வாதகுல்மத்தில் கபம் விருத்தியடைந்து, ஜாடராக்னியை அழித்து, அரோசகத்தையும், கடுமையான இருதய சலனத்தையும், தேஹபாரத்தையும், சோம்பலையும் உண்டுபண்ணினுல், அக்கபத்தை லேகந சிகித்ஸையினுல்[1] வெளிப்படுத்த வேண்டும்.—27½.

வயிற்றுவலி முதலியதோடு கூடிய வாதகுல்மத்திற்குப் பரிஹாரம்:—(1) வாதகுல்மத்தில் வயிற்றுவலியும், வயிற்றுப் பொருமலும், மலபந்தமும் ஏற்பட்டிருக்கையில், ஆமாசய-பக்வாசயாதிகள் ஸ்நிக்த்தமா யிருக்கின்றனவா வென்பதைத் தெரிந்து கொண்டு, க்ருதரூபமான ஒளஷதங்களோடு கஷாயங்களையும், சூர்ணங்களையும், வடகங்களையும் கொடுக்கவேண்டும். (2) க்ருதெளஷதங்களுக்குக் கூறியுள்ள சூர்ணங்களையாவது, இலந்தம்பழஸ்வரஸம், மாதளம்பழஸ்வரஸம், உஷ்ண ஜலம், மோர், மது, புளித்த காஞ்ஜிகமென்கிற காடி, பாலாடை இவற்றுள் ஏதேனுமொன்றோடு விடியற்காலத்திலாயினும் அல்லது போஜனத்திற்குப் பிறகேனும் சாப்பிடலாம்.—28, 29½.

வாத-கபகுல்மங்களுக்கான வடகங்கள்:—அடியிற் கூறப்படும் சூர்ணங்களில் எதையாவது கொடிமாதளையின் ஸ்வரஸத்திற் பலமுறை பாவனை செய்து, மாத்திரைகளாகச் செய்து உபயோகிக்க, கபகுல்மத்திலும், வாதகுல்மத்திலும் நன்கு பலன் உண்டாம்.—30.

ஹிங்க்வாதி சூர்ணம்:—காயம், வசம்பு, கடுக்காய், காட்டு ஜீரகம், மாதளம் விதை, ஜீரகம், கொத்தமல்லி விதை, வட்டத்

1. லேகநம் — முதற் புத்தகம் பார்க்க.

திருப்பி, தாமரைக்கிழங்கு, கிச்சிலிக்கிழங்கு, கொட்டைக் கரந்தை, சித்திரமூலம், யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், த்ரிகடு, த்ரி லவணம், ஓமம், சவ்யம், உலர்ந்த புளி, புளிவஞ்சி இவற்றைச் சூர்ணம் செய்து உபயோகிக்கவும். இச்சூர்ணம் வாததோஷம், ஆமதோஷம், கபம் இவற்றால் ஸம்பவிக்கும் இருதயசூலை, பார்ச்வசூலை, வஸ்திசூலை, இடுப்புவலி, யோனிசூலை, குதசூலை இவற்றையும், மிகவும் துன்பம் விளைவிக்கும் குல்மநோய், அபாந வாயு-மலம்-மூத்திரம் இவை கட்டிப்போய் உண்டாகும் கஷ்டங் கள், தொண்டைக்கட்டு, மாரடைப்பு, பாண்டுரோகம், அன்னத் வேஷம், ப்லீஹரோகம், அர்சஸ், விக்கல், அண்டவீக்கம், வயிற் றுப்பொருமல், ச்வாஸ-காஸங்கள், அக்னிமாந்த்யம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 31—33.

வைச்வாநர சூர்ணம்:—இந்துப்பு ஒரு பங்கு, ஓமம் இரண்டு பங்கு, ஜீரகம் மூன்று பங்கு, திப்பிலி நான்கு பங்கு, சுக்கு ஐந்து பங்கு, இவ்வனைத்துக்கும் ஸம அளவாகக் கடுக்காயையும் சேர்த்து, சூரணம் செய்துகொள்ளவும். ஜாடராக்னியை விருத்தி செய்வதில் இது ஸாக்ஷாத் அக்னிக்குச் சமமானது. ஆகவே இது "வைச்வாநர சூர்ணம்'' எனப்படுகிறது.—34.

அஷ்ட சூர்ணம்:—த்ரிகடு, ஓமம், இந்துப்பு, ஜீரகம், கருஞ் ஜீரகம் இவற்றைச் சம பாகம் எடுத்து, அதே அளவாகக் காயத் தையும் கூட்டிச் சூர்ணம் செய்யவும். இதைப் போஜனஸமயத் தில் அன்னத்தில் சேர்த்து, நெய் ஊற்றிக்கொண்டு, முதல் கப ளத்துடன் புஜிக்க, ஜாடராக்னி நன்றாக விருத்தியாவதோடு, வாத குல்மமும் நிவ்ருத்தியாம்.—35.

சார்த்தூல சூர்ணம்:—பெருங்காயம், திப்பிலி, பிடாலலவ ணம், சுக்கு, ஓமம், கடுக்காய், தாமரைக்கிழங்கு, நேபாளம், சிவதைவேர் இவற்றை மேன்மேலும் முறையே ஒவ்வொரு பங்கு அதிகமாகச் சேர்த்து சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத் தோடு உட்கொள்ள, புலி மிருகக்கூட்டங்களை அடித்துப் போடு வதுபோல், 'சார்த்தூலம்'' என்கிற இச்சூர்ணம் குல்மம், மற்று முள்ள உதரரோகம் முதலியவற்றைத் தாக்கிப் போக்கிவிடும்.-36.

நாராச சூர்ணம்:—இந்துப்பு, கடுக்காய், திப்பிலி, ஜீரகம் இவற்றின் சூர்ணத்தை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்ள, கபத்தினாலும் வாதத்தினாலும் உண்டாகிற குல்மம் முதலியவை நாராசத்தினால் அடிக்கப்பட்டவைபோல் தீரும்.—37.

பூதிகாதி க்ஷாரம்:—புங்கவிதை, இலவங்கப்பத்திரி, பேய்த் தும்மட்டி, சவ்வியம், சித்திரமூலம், த்ரிகடு இவற்றை ஒன்றன் மீதொன்றாகப் பரப்பி, அனைத்துக்கும் மேலே உப்பையும் பரப்பி எரித்துச் சூர்ணம்செய்து, தயிர் அல்லது நீர்மோருடன் உட் கொள்ள குல்மம், மஹோதரம், சோதை, பாண்டு இவை தீரும்.38.

ஹிங்க்வாதி யோகம் :—காயம் ஒரு பங்கு, இந்துப்பு மூன்று பங்கு, ஆமணக்கெண்ணெய் அவ்வுப்பினும் மூன்று பங்கு, வெள்ளுள்ளிச்சாறு எண்ணெயினும் மூன்று பங்கு ; இவற்றைக் கூட்டி பானம் செய்ய, குல்மம், மஹோதரரோகம், பீஜவீக்கம், வயிற்று நோய் இவை தீரும்.—39.

மாதுலுங்காதி யோகம் :—கொடிமாதளம்பழரஸம், காயம், மாதளம்பழரஸம், பிடாலவணம், இந்துப்பு இவற்றை ஸுரை யின் தெளிவு நீருடன் பருக வாத குல்மம் நிவ்ருத்தியாம்.—40.

சுண்ட்யாதி யோகம் :—சுக்கு கால் பலம், வெல்லம் அரைப் பலம், கழுவி சுத்தம் செய்த எள் ஒரு பலம் ; இவற்றைச் சேர்த்து சூர்ணம் செய்து, இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ள, வாதத்தினுலுண்டாகும் இருதயரோகம், குல்மம், அர்சஸ், யோனிசூலை, மலபந்தம் இவை தீரும்.—41, 41½.

ஏரண்ட தைல பானமுறை :—(1) வாதகுல்மத்தினுல் வருந்துபவன், அவ்வியாதியில் கபமும் பின்பலமாயிருந்து வியாதியை விருத்தி செய்வதாயிருந்தால், அதில் ஆமணக்கெண்ணெயைக் கழுவுநீரில் கலந்து பானம் செய்யலாம். (2) வாதகுல்மத்தில் பித்தம் பின்பலமாயிருந்து வியாதியை விருத்தி செய்தால், அதில் ஆமணக்கெண்ணெயைப் பாலில் கலந்து பருகலாம்.—42½.

வாதகுல்மத்தில் விரேசநமும் இரத்த மோக்ஷணமும் செய்ய வேண்டிய நிலைமை :—(1) வாதகுல்மரோகிக்குப் பித்தம் அதிகரித்துத் தாபத்தை மிகுதியாக உண்டுபண்ணும். இவ்வித பிணியாளி அநுலோமநகுணமுள்ள[1] வஸ்துக்களோடு ஸ்நேஹத்தையும் கூட்டி, விரேசனம் செய்விக்கத் தகுந்தவனுகிருன். (2) அப்படியும் அவ்வழற்சி தொடர்ந்து வருத்தினுல், அவனுக்கு இரக்தமோக்ஷணம் செய்யவேண்டும்.—43, 44.

லசுந-க்ஷீரயோகம் :—நான்கு பலம் சுத்தமான உலர்ந்த வெள்ளுள்ளியை எட்டு மடங்கு ஜலம் கலந்த பாலில் சேர்த்து, பால் மாத்திரம் மிகும்படியாகக் காய்ச்சி பக்குவம் செய்த பால் வாதகுல்மம், உதாவர்த்தம், க்ருத்ரஸீவாதம், விஷமஜ்வரம், இருதய நோய், வித்ரதி, க்ஷயம் இவற்றை எளிதில் தீர்க்கும்.-45, 46.

குல்மாதிகளில் தைலாதியோகம் :—தைலம், கழுவுநீர், பசுவின் சிறுநீர், சாத்திரத்தம், சிறிது யவக்ஷாரம் இவற்றையெல்லாம் ஒருமிக்கக் கூட்டி பானம்செய்ய குல்மரோகம், உதரரோகம், வயிற்றுப்பொருமல் இவை நீங்கும்.—47.

சித்ரகாதி க்வாதம் :—சித்திரமூலம், கிரந்திதகரம், ஆமணக்கு வேர், சுக்கு இவற்றின் க்வாதத்தில் காயம், பிடாலவணம், இந்துப்பு இவற்றைக் கூட்டி யுபயோகிக்க வயிற்றுவலி, பொருமல், மலபந்தம் இவை தீரும்.—48.

---

1. அநுலோமநம் — முதற் புத்தகம் பார்க்க.

புஷ்கரமூலாதி க்வாதம் :—புஷ்கரமூலம், ஆமணக்கு வேர், யவக்ஷாரம், காஞ்செசாறி இவற்றை ஜலத்தில் சேர்த்து க்வாதமாகக் காய்ச்சி உட்கொள்ள குடலழற்சி, குடல்நோய் என்கிற குல்மத்தைப்பற்றிய கோளாறுகள் நீங்கும்.—49.

வாட்யாதி க்வாதம் :—தாமரைக்கிழங்கு, ஆமணக்குவேர், தர்ப்பை வேர், தேவதாரு, சுக்கு இவற்றை ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி யுட்கொள்ள, குல்மத்தினாலான குடல்வலி, இடுப்புவலி, தோள்வலி இவை நிவ்ருத்தியாகும்.—50.

சில உபத்திரவங்களோடு கூடிய வாத குல்மத்தில் சிலாஜத்வாதி பிரயோகம் :—(1) வாதகுல்மரோகியானவன, மஹா பஞ்சமூலங்கள் சேர்த்துக் காய்ச்சிய பாலோடு சிலாஜதுவையாவது உபயோகிக்கலாம். (2) உதாவர்த்தமும் இவ்வியாதியில் ஏற்படுமானல், யூஷம்போலச் செய்த திப்பிலியின் கஷாயத்தோடு வாட்யமண்டம் என்கிற கஞ்சியை ஸ்நேஹம் சேர்த்துப் பருகலாம். (3) அவ்வாட்ய மண்டத்தை முள்ளங்கிச் சாறுடனாவது உட்கொள்ளலாம். (4) யவதானியத்தினாலாகிய கஞ்சியைச் சூடான பாலுடன் கலந்து அபாநவாயு-மலம் இவை கட்டிப் போயிருக்கையில் உட்கொள்ளலாம். (5) அல்லது அதிக ஸ்நேஹம் சேர்த்து, அதிக உப்பையும் கூட்டி பக்குவம் செய்த சிறுகடலைகளையாவது புஜிக்கலாம்.—51, 52½.

நீலிங்யாதி க்ருதம் :—கறுப்புச்சாறடை, கருஞ்சிவதைவேர், நேபாளம், கடுக்காய், கம்பில்லம் இவற்றின் கஷாயத்தில் க்ருதம் சேர்த்து, அதில் பிடாலலவணம், யவக்ஷாரம், சுக்கு இவற்றைக் கல்கமாகவும் கூட்டிப் பக்குவம்செய்து, வயிற்றில் மலம் சேர்ந்துள்ள குல்மரோகிக்குக் கொடுக்கலாம்.—53½.

நீலிநீ க்ருதம்-இரண்டாவது :—கறுப்புச்சாறடை, த்ரிபலை, சிற்றரத்தை, சிற்றுமுட்டி, கடுகரோஹணி, வாய்விடங்கம், கண்டங்கத்திரி; இவற்றை வகைக்கு ஒரு பலம் எடுத்து, ஒரு ஆடகம் ஜலத்தில் சேர்த்து எட்டில் ஒருபங்காகச் சுண்டக் காய்ச்சி, ஒரு பிரஸ்த்தம் நெய்யையும், ஒரு பிரஸ்த்தம் தயிரையும், ஒரு பலம் கள்ளிப்பாலையும் கூட்டிப் பக்குவம் செய்தெடுக்கவும். பிறகு யவாகூ மண்டம் என்கிற கஞ்சியோடு இந்த க்ருதத்தை ஒரு பலம் அளவில் கொடுத்து, அது ஜீர்ணமாய், நன்கு விரேசநமும் ஆனபின்பு, மாம்ஸரஸங்கலந்த உணவைக் கொடுக்கலாம். "நீலிநீ க்ருதம்" என்கிற இவ்வௌஷதம் குல்மம், குஷ்டம், உதரரோகங்கள், வியங்கம், சோகை, பாண்டுரோகம், ஜ்வரம், ச்வித்ரம், ப்லீஹரோகம், உந்மாதம் இவற்றைப்போக்கவல்லது. 54-57¼.

வாதகுல்மத்தில் பத்தியமான உணவுகள் :—(1) கோழி, மயில், தித்திரிப் பறவை, கிரௌஞ்சபக்ஷி, வர்த்தகப்பக்ஷி, சம்பா அரிசி, மதிரை யென்னும் மது, நெய் இவை வாதகுல்மத்தில்

உபயோகிக்கத் தகுந்த உணவுகளாகும். (2) இந்த ரோகிகளுக்கு மிதமாகவும், உஷ்ணமாகவும், திரவமாகவும், ஸ்நிக்த்தமாகவுமுள்ள போஜனம் ஹிதமாயிருக்கும். (3) அவன் ஆடையுள்ள வாருணி யென்னும் மதுவோடு கொத்தமல்லிவிதை சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையும் பருகலாம்.—58, 59½.

ஸ்நிக்த்த தோஷங்களாலுண்டான பித்தகுல்மத்திற்கு சிகித்ஸை :—பித்தகுல்மம் ஸ்நிக்த்தமும் உஷ்ணமுமான வஸ்து முதலியவற்றால் உண்டானதாயிருந்தால், அதில் ஸ்ரம்ஸந சிகித்ஸை[1] அனுகூலமானது. (1) திராக்ஷை, கடுக்காய், வெல்லம் இவற்றின் திரவத்தை அங்ஙனம் மலம் வெளியாவதற்கு உபயோகிக்கலாம். (2) கம்பில்லத்தையாவது தேனிற் குழைத்து உட்கொள்ளலாம். (3) கல்பஸ்த்தானத்திற் கூறப்படும் விரேசன முறைகளையாவது,[2] (4) இரத்த-பித்தத்திற் கூறிய விரேசன முறையையாவது[3] பிரயோகிக்கலாம்.—60, 60¾.

ரூக்ஷோஷ்ணங்களாலுண்டான பித்தகுல்மத்திற்கு சிகித்ஸை :—ரூக்ஷமும் உஷ்ணமுமான குணங்கள் அதிகரித்துண்டாகும் பித்தகுல்மத்தில் (1) திக்தக க்ருதமும்[4], (2) வாஸாக்ருதமும்[5] சமநம் செய்வதற்கு மிகவும் ஏற்றவையாகும். (3) த்ருண பஞ்சமூல க்வாதத்திலாவது, (4) ஜீவநீயகணக்வாதத்திலாவது காய்ச்சி பக்குவம் செய்த க்ருதத்தையும் பருகலாம். (5) அல்லது ஜீவநீயகணத்தின் க்வாதத்திலேயே காய்ச்சியெடுத்த பாலையாவது, ந்யக்ரோதாதி கணக்வாதத்தில் காய்ச்சிய பாலையாவது உட்கொள்ளலாம். (6) இந்த குல்மத்திலும், நிலைமை அபாயகரமாயிருப்பதாகத் தெரிந்தால், அதில் வைத்தியன் கவனித்து, விரேசநகுணமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தையாவது, அவ்விதமே பக்குவம் செய்த பாலையாவது கொடுத்து ஸ்ரம்ஸநம் செய்விக்கவேண்டும். 61—63½.

ஆமலகாதி க்ருதம் :—நெல்லிக்கனி, கரும்பு இவற்றின் சாற்றில் ஒரு பிரஸ்த்தம் க்ருதமும், க்ருதத்திற்குக் கால் பங்கு கடுக்காய்த்தூளையும் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் பித்தகுல்மத்தைப் போக்கும்—64½.

பித்தகுல்மத்தில் தில்வக க்ருதம் முதலியவற்றின் உபயோகம் :—(1) பித்தகுல்மத்தில் தில்வகக்ருதத்தையாவது[6]

1. ஸ்ரம்ஸநம்—இலகு விரேசனம்.

2. கல்பஸ்த்தானத்தில் இரண்டாம் அத்தியாயம் பார்க்க.

3. அந்த அத்தியாயத்திற் கூறியுள்ள த்ரிவ்ருதாதி மோதகமும், த்ரிவ்ருத் அவலேஹமும் இங்கே குறிக்கப்படுகின்றன.

4. திக்தகக்ருதம்—குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.

5. வாஸாக்ருதம்—3-ம் அத்தியாயத்திற் கூறப்பட்ட க்ருதம்.

6. தில்வக்ருதம்—குஷ்ட சிகித்ஸையிற் கூறப்படுவது.

பானம் செய்யலாம். (2) அல்லது பித்தவித்ரதியில் சொல்லப்பட்டுள்ள க்ருதங்களையாவது[1] பருகலாம்.—65.

பித்தகுல்மத்தில் திராக்ஷாதி யோகம் முதலியன :—பித்த குல்மம் தணிய (1) திராக்ஷை, அதிமதுரம், க்ஷீரகாகோலி, சந்தனம், தாமரைக்கிழங்கு, தேன் இவற்றை அரிசி கழுவிய ஜலத்தோடு உட்கொள்ளலாம். (2) இரண்டு பலம் கொன்றைப்பட்டையை இரண்டு பிரஸ்த்தம் ஜலத்தில் சேர்த்து எட்டில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி வடிக்கட்டி, அக்கஷாயத்தில் ஸம அளவு பாலையும் கூட்டி இளஞ்சூடாகப் பானம் செய்யவும்; அப்பால் போதிய உஷ்ணமான பாலையே மீண்டும் பருகலாம். இதனால் வயிற்றிலுள்ள தோஷங்கள் கழிந்துபோக, பித்தகுல்மமும் நிவ்ருத்தியாகும். (3) பித்தகுல்மத்தில் அழற்சி அதிகரித்தால் சித வீர்யத் திரவ்வியங்களைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதங்களால் அப்யங்கநம் செய்யலாம். (4) நெய் கூட்டிய குளிர்ச்சியான ஔஷதங்களால் அழற்சியுள்ள விடங்களில் லேபநம் செய்யலாம். (5) ஜலத்தில் நனைத்த தாமரையிலைகளாலும், (6) குளிர்ந்த ஜலம் நிரப்பிய பாத்திரங்களாலும் சரீரத்தைப் பரிசிக்கலாம். 66—69.

பித்தகுல்மத்தில் இரக்தமோக்ஷணம் செய்யும் நிலைமை :—குல்மத்தில் அழற்சியைப் பிரதானமாயுடைய பூர்வரூபங்கள் உண்டாகையிலும், வயிற்று நோயிலும், அக்னிமாந்த்யம் உண்டாயிருக்கையிலும் அதிகமாய் இரக்தமோக்ஷணம் செய்யவேண்டும்; பித்தகுல்மத்தில் இன்னும் விசேஷமாக அதைச் செய்யவேண்டும். இங்ஙனம் இரக்த மோக்ஷணத்தினால் குல்மங்கள் வேரறுக்கப்பட்டு அழுன்று க்ஷயித்தும் போகின்றன; இரக்தமும் அங்கு அம்லத்தன்மை யடையாமல் சுத்தமாய், வலியும் ஏற்படுவதில்லை.—70, 71.

குல்மக்குறி மிச்சமிருப்பின் செய்யவேண்டிய பரிஹாரம் :—தோஷமெல்லாம் கழிக்கப்பட்டு மிக இளைத்துப்போயுள்ள ரோகிக்கு, ஜாங்கலமாம்ஸரஸங்களைக் கொடுத்துத் திருப்தியுண்டாக்கித், தேற்றியும் நோய் சிறிது மிச்சமிருந்தால், அதைப் பரிஹரிக்க மீண்டும் க்ருதத்தைப் பருகவேண்டும்.—72.

குல்மம் இரக்த-பித்தங்களால் அழற்சி கொண்டால் செய்யும் சிகித்ஸை :—இரத்தமும் பித்தமும் விருத்தியடைவதாலோ, ஏற்ற சிகித்ஸையின்மையினாலோ குல்மம் அழன்று பழுக்கத் தொடங்கினால், அப்பொழுது பித்தவித்ரதிக்குக் கூறிய எல்லா முறைகளாலும் சிகித்ஸை செய்யவேண்டும்.—73.

பித்த குல்மத்தில் பத்திய உணவுகள் :—சம்பா அரிசியினாலான அன்னத்தைப் பசுவின் பாலோடு அல்லது வெள்ளாட்

1. வித்ரதி சிகித்ஸையில் கூறப்பட்டுள்ள த்ராயமாணாதி க்ருதமும், திராக்ஷாதி க்ருதமும்.

டுப் பாலோடு புஜிக்கலாம். புடல், ஜாங்கல மிருகங்களின் நெய், நெல்லிக்கனி, ஈச்சு, திராக்ஷை, பேரீச்சு, மாதளம்பழம், சர்க்கரை இவைகளைப் புஜிக்கலாம். சிற்றாமுட்டியைச் சேர்த்தாவது, ப்ருஹத்யாதி கணச்[1] சரக்குகளைச் சேர்த்தாவது காய்ச்சிய ஜலத்தைப் பானம் செய்யலாம்.—74, 74½.

சிலேஷ்ம குல்ம சிகித்ஸைகள் :—(1) சிலேஷ்ம குல்மத்தில் முதலில் வமநம் செய்விக்கவேண்டும். (2) வமநசிகித்ஸை செய்வதற்குத் தகாதவனைப் பட்டினி போடலாம். (3) பிறகு திக்தரஸம் கடுரஸம் இவைகளைப் பிரதானமாகப்பெற்ற ஸம்ஸர்கீ என்கிற பத்தியோபசாரத்தினால் ஜாடராக்னியை விருத்தி செய்யவேண்டும். (4) யவக்ஷாரத்தையும், காயத்தையும், புளிவஞ்சியையும் இரண்டு மடங்காகச் சேர்த்துச்செய்த முன் கூறிய ஹிங்க்வாதி சூர்ணத்தை உபயோகித்தும் ஜாடராக்னியை விருத்தி செய்யலாம் (5) குல்மம் ஆழ்ந்து மறைந்திருந்தாலும், அல்லது வளர்ந்து மேற்கிளம்பி யிருந்தாலும், அசைவற்றிருந்தாலும், கடினமாயிருந்தாலும், வேரூன்றி ஸ்த்திரமாயிருந்தாலும், வயிற்றுப்பொருமல் முதலிய விகாரங்களோடு கூடியதாயிருந்தாலும் அதற்குச் சோதனசிகித்ஸை செய்யவேண்டும். (6) அடுத்தாற்போல கபகுல்மரோகி க்ஷாரவஸ்துக்களையும், கடுரஸமுள்ள வஸ்துக்களையும் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தைப் பானம் செய்யவேண்டும். 75—77½.

தசமூல க்ருதம் :—தசமூலகஷாயத்தில் த்ரிகடு, யவக்ஷாரம், இந்துப்பு, காயம், பிடாலலவணம், மாதளை இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்யவும். இது கபகுல்மத்தைச் சீக்கிரம் நிவ்ருத்தி செய்யும்.—78½.

பல்லாதகக் க்ருதம் :—சேராங்கொட்டை இரண்டு பலம், இலகு பஞ்சமூலம் வகைக்கு ஒரு பலம்; இவற்றை ஒரு ஆடகம் ஜலத்தில் சேர்த்து நாலில் ஒருபங்கு மிகும்படி காய்ச்சி, அக்கஷாயத்திற்குச் சம அளவு க்ருதமும் அதே அளவு பாலையும் கூட்டி பக்குவம் செய்யவும். பிறகு அதில் வாய்விடங்கம், காயம், இந்துப்பு, யவக்ஷாரம், கச்சோரம், பிடாலலவணம், கண்டங்கத்திரி, சிற்றரத்தை, அதிமதுரம், வசம்பு, திப்பிலி, இவற்றை வகைக்குக் கால்பலம் எடுத்து கல்கமாக உபயோகிக்கவும். "பல்லாதக க்ருதம்" எனப்படுகிற இது கபகுல்மத்தைப் போக்குவதிற் சிறந்தது. மேலும் ப்லீஹரோகம், பாண்டுரோகம், ச்வாஸரோகம், கிரஹணீரோகம், காஸம் இவற்றையும் நிவாரணம் செய்யும். 79—82.

குல்மத்தில் ஸ்நேஹ ஸ்வேதங்கள் :—பிறகு இந்த ரோகிக்கு குல்மத்தின்மேலும், தேஹத்திற் பொதுவிலும் ஸ்வேதம் செய்

1. ப்ருஹத்யாதி கணம்—ப்ருஹதீத்வயம்; முதற்புத்தகம் பார்க்க.

யவும். எல்லாக் குல்மத்திலுமே முதலில் ஸ்நேஹமும் ஸ்வேதமும் செய்து அப்பால் செய்யப்படும் சிகித்ஸையினால் உண்டாகும் பலன் ரூக்ஷநிலைமையில் செய்யும் சிகித்ஸையினால் உண்டாகமாட்டாது. 83—83½.

குல்மத்தில் கடயந்திரப் பிரயோகம்:—ஸ்நேஹ-ஸ்வேதங்களால் சரீரம் பக்குவமடைந்த பிறகு, குல்மம் தளர்ச்சியுற்றதானால், அப்பொழுது முன் கூறியுள்ளபடி ஒரு கடயந்திரத்தை[1] குல்மமிருக்கும் இடத்திற்கு நேராக வயிற்றில் கவிழ்த்து அழுத்தவும்; அதனால் குல்மம் கௌவிக்கொள்ளப்பட்டதும், ஒரு வஸ்திரத்தினால் அதை மறைத்துப் பிடித்து இழுக்கவும்; வயிற்றுக்குள் குல்மம் ஆக்கிரமித்து வளர்ந்திருக்கிற அளவையுணர்ந்த வைத்தியன் குல்மம் அறுபடும்படி அப்பாத்திரத்தினால் கௌவச்செய்து வலித்திழுக்கவேண்டும்; விமார்கம், அஜபதம், ஆதர்சம் என்னும்[2] கருவிகளைப் பிரயோகித்து, குல்மத்தில் வசப்படும் பாகம் அவ்வளவையும் பிடித்து மர்த்தநம் செய்யவும்; அவ்விதம் குல்மத்தை மாத்திரம் மர்த்தநம் செய்யலாமேயன்றி குடலின் உட்புறத்தை நசுக்கக் கூடாது. 84—86.

கபகுல்மத்தைக் கரையச்செய்யும் வேறு உபாயம்:—(1) எள்ளு, ஆமணக்குவித்து, ஆழிவிதை, கடுகு இவற்றைக் கல்கமாகச் செய்து கபகுல்மத்தின்மீது லேபநம் செய்து, தாங்கக்கூடிய சூடுள்ள இரும்புப்பாத்திரங்களால் பிறகு ஸ்வேதநம் செய்யலாம். (2) இவ்விதம் செய்து கபகுல்மம் தன் ஸ்த்தாநத்திலிருந்து நழுவிவிட்டபிறகு, ஸ்நேஹங்களைக் கொடுத்து விரேசநம் செய்வித்தும், தசமூலகஷாயத்தோடு ஸ்நேஹம்சேர்த்து அதைக் கொண்டு வஸ்திப்பிரயோகம் செய்தும் குல்மதோஷத்தை வெளிப்படுத்தி, குடலைச் சுத்தம் செய்யவேண்டும்.—87, 88.

மிச்ரகஸ்நேஹம்:—திப்பிலி, நெல்லிக்கனி, திராக்ஷை, கருஞ்சிவதை இவற்றை வகைக்கு ஒரு பலமும், ஆமணக்கெண்ணெய், நெய் இவை ஒவ்வொரு பிரஸ்த்தமும், ஆறு பங்கு பாலில் சேர்த்துப் பக்குவம் செய்யவும். "மிச்ரகஸ்நேஹம்" என்கிற இவ்வௌஷதம் குல்மரோகிகளுக்கு ஸ்ரம்ஸநத்திற்கு ஹிதமானது; மேலும் வ்ருத்தி, வித்ரதி, வயிற்றுநோய், வாதரோகங்கள் இவற்றிலும் அம்ருதம்போன்றது.—89, 90.

கபகுல்மத்தில் உபயோகிக்கத் தகுந்த வேறு க்ருதங்கள்:—இந்த ரோகி முற்கூறிய நீலிநீக்ருதத்தை இரண்டு பலம் அளவி

---

1. கடயந்திரம் — முதற் புத்தகம் பார்க்க.

2. **விமார்கம்** — சக்கரம்போல மரத்தினால் செய்யப்படும் ஒருவித கருவி; இது சக்கிலியர் விசேஷமாய் உபயோகிக்கும் கருவியாம். **அஜபதம்** என்பது ஆட்டின் குளம்பு மாதிரியுள்ள மர்த்தநம் செய்யும் கருவி. **ஆதர்சம்** என்பது கண்ணாடியினாலான கருவி.

லாவது, ஸுகுமாரக்ருதத்தையாவது,[1] உதரரோகத்திற் கூறப் படும் அவ்வியாதிக்கு ஹிதமான க்ருதங்களையாவது[2] பருக லாம்.—91.

தந்தீ-ஹரீதகீ அவலேஹம்:—நேபாளமும் சித்திரமூலமும் கடுக்காயும் வகைக்கு இருபத்தைந்து பலம் ஒரு திரோணம் ஜலத் தில் சேர்த்துச் சமையல் செய்யவும். இக் கஷாயத்தை வடி கட்டி, அதில் நேபாளத்துக்குச் சம அளவு வெல்லமும், நான்கு பலம் தைலமும், அவ்வளவே சிவதைவேரும், அரைப்பலம் திப் பிலியும், அதே அளவு சுக்கும் சேர்த்து லேஹ்யமாகச் செய்து, ஆறியபிறகு தைலத்துக்குச் சம அளவாகத் தேனையும், ஒரு பலம் சதுர்ஜாதத்தையும் சேர்த்துக் கலந்துவிடவும். இதில் ஒரு கடுக் காயையும், ஒரு பலம் லேஹ்யத்தையும் எடுத்துப் புஜிக்க, தேஹம் நன்கு ஸ்நிக்த்தமாய், ஒருபிரஸ்த்தம் தோஷம் விரேசந மாகும். குல்மம், இருதயரோகம், அர்சஸ், சோதை, வயிற்றுப் பொருமல், கிருத்ரிம விஷப்பிரயோகம், உதரரோகங்கள், பாண்டு ரோகம், காமாலே இவைகளைப் போக்கவல்ல இவ்வௌஷதம் "தந்தீ-ஹரீதகி" என்று வழங்கப்படும். 92—96½.

குல்மத்தில் விரேசநோபயோகமான சில முறைகள் :—(1) சிவதைவேர்ப் பொடியைக் கள்ளிப்பாலில் கரைத்து, அதில் நன் றுகப் பாவனைசெய்து, அதில் ஒரு சால் பலமளவு தேன், நெய், இவற்றையுங் கலந்து உட்கொள்ள நன்கு விரேசநமாகும். (2) கோஷ்டம், கருஞ்சிவதை, வெண்சிவதை, நேபாளம், கடுக்காய், யவக்ஷாரம், மஹிஷாக்ஷிகுக்குலு இவற்றைப் பசுவின்சிறுநீருடன் உட்கொள்ளலாம். (3) அல்லது மஹிஷாக்ஷிகுக்குலுவை மாத் திரமாவது பசுமூத்திரத்தோடுச் சாப்பிடலாம்.—97, 98½.

குல்மத்தில் நிரூஹவஸ்தி :—கல்பஸ்த்தாநத்திலும், உத்தர ஸ்த்தாநத்திலும் கூறப்படுகிற குல்மரோக நிவாரணத்திற்கு உப யோகமான நிரூஹவஸ்திகளையும் பிரயோகிக்கலாம்.—99.

குல்மத்தில் க்ஷாராதிகளைப் பிரயோகித்தல்:—நன்கு வே ரூன்றி, மிகுதியான இடங்களில் வியாபித்து, கடினமாகவும், அசைவற்றதாகவும், குருவாகவும், சதைகளில் ஆழ்ந்து மறைந் துள்ளதுமான குல்மத்தை க்ஷாரப்பிரயோகம், அரிஷ்டங்களின் பிரயோகம், சுடுதல் என்கிற இம்முறைகளைக்கொண்டு சிகித்ஸை செய்யவேண்டும். இதில் வைத்தியன் பிணியாளியின் தேஹ பலம், தேஹத்தில் சேர்ந்துள்ளதோஷம் இவற்றை முறையே விருத்தி செய்வதற்கும் க்ஷயிக்கச் செய்வதற்கும் முயன்றவனாய், இடையிடையே ஒவ்வொரு நாளாகிலும், இரண்டு நாட்களாகி லும், அல்லது மூன்று நாட்களாகிலும் ரோகிக்கு சிரமபரிஹாரம்

1. ஸுகுமாரக்ருதம் — இதற்குமுன் அத்தியாயம் பார்க்க.
2. அடுத்த அத்தியாயத்தைப் பார்க்கவும்.

செய்து வைத்து, அந்த க்ஷாராதிகளை மீண்டும் பிரயோகிக்க வேண்டும். கபம் அதிகரித்துண்டான குல்மத்தில் அர்சஸ்ஸி லும், அச்மரீரோகத்திலும், கிரஹணீரோகத்திலும் மொழியப் பட்டுள்ள க்ஷாரங்களை உபயோகிக்கலாம்.—100, 101½.

அகதக்ஷாரம் :—தேவதாரு, சிவதைவேர், நேபாளம், கடுக ரோஹிணி, பஞ்சசோலம் ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், த்ரிபலை, வட்டத்திருப்பி, கருஞ்ஜீரகம், கோஷ்டம், ஈச்வரமூலி இவை வகைக்கு அரைப் பலம்; பஞ்சலவணம் வகைக்கு ஒரு பலம்; இவ்வனைத்தையும் சூர்ணம் செய்து, தைலம், கொழுப்பு, தயிர், நெய் இவற்றில் அச்சூர்ணத்தைக் கலந்து ஒரு கலயத்தில் சேர்த்துத் தீயிட்டு எரிக்கவும்; அப்பாத்திரம் நன்றாகக் காய்ந்து அக்னிவர்ணமான நிலைமையடைந்திருக்கையில் இறக்கி, அதி லுள்ள க்ஷாரத்தைக் கிரஹித்து பால், நெய், மோர், மத்யம் இவை முதலியவற்றில் ஏதேனும் ஒன்றோடு அந்தந்த தோஷங்களுக் கேற்றவாறு கலந்து உட்கொள்ளவும். "அகத க்ஷாரம்" என்கிற இவ்வௌஷதமானது குல்மம், உதாவர்த்தம், அண்டவாதம், அர்சஸ், உதரரோகம், கிரஹணீரோகம், கிருமி, அபஸ்மாரம், உந் மாதம், யோனிரோகங்கள், சுக்ரதோஷங்கள், அச்மரீ இவைகளை யும், எலிவிஷம், ஸர்ப்பவிஷம் இவற்றையும் நிவாரணம் செய்ய வல்லது. 102—106.

குல்மத்தில் க்ஷாரப் பிரயோகத்தின் உபயோகம் :—மாம்ஸ ரஸம், பால், நெய், இவற்றை உட்கொள்ளும் பிணியாளியின் குடலில் சேர்ந்துள்ள மதுரமும் ஸ்நிக்த்தமுமான கபத்தை, காரமான க்ஷாரமானது அறுத்து, குல்மமுண்டாய் வேரூன்றி யுள்ள ஆசயத்தில் கோளாறடைந்த தாதுக்களையும் பெயர்த்து, கீழ் நோக்கி வெளியில் தள்ளிவிடுகின்றது.—107.

குல்மத்தில் மார்க்கசுத்திக்காக மத்யபானம் :—அக்னிமந்தமா யிருக்கையில், அரோசகமும் உண்டாயிருந்தால் அப்பொழுது ஸாத்மியமான மத்யங்களோடு ஆஹார மெடுக்கச் செய்து, குடல் மார்க்கத்தைச் சுத்தம் செய்வதற்காகப் புராதநமான ஆஸவங்களை யும் அரிஷ்டங்களையும் உட்கொள்ளக் கொடுக்கவேண்டும்.—108.

குல்மத்தில் உபயோகிக்கக்கூடிய போஜன பானங்கள் :— (1) பழகிய சம்பா, கார், கோள் இந்த தானியங்கள், ஜாங்கல மாம்ஸம், புங்கந்தளிர், சித்திரமூலக்கொழுந்து, தழுதாழையின் தளிர், ஓமயிலைத் தளிர், மாவலிங்கந் தளிர், முருங்கை, பில்வத் தளிர், இளசாகவும் உலர்ந்ததாகவுமுள்ள முள்ளங்கி, கொடிமா தளை, காயம், புளிவஞ்சி, யவக்ஷாரம், மாதளை, த்ரிகடு, மோர், நெய், தைலம் இவைகளைப் போஜன பதார்த்தங்களாகக் கிரஹிக்க லாம். (2) வாருணீயென்கிற மது, காடி, மோரின் தெளிவுநீர், ஓமமும் பிடாலவணமும் பொடித்துச் சேர்த்த மோர், பஞ்ச

மூலம் சேர்த்துக் காய்ச்சிய ஜலம், நன்ருகப் பழகிய திராக்ஷாரிஷ்டம் இவைகளைப் பானமாக உபயோகிக்கலாம். (3) திப்பிலி, மோடி, சித்திரமூலம், ஓமம், இந்துப்பு இவற்றை ஸுரையென்னும் மதுவிலாவது, ஜாங்கல மாம்ஸரஸத்திலாவது பொடித்துச் சேர்த்து அருந்திவர குல்மநோய் சீக்கிரம் தீரும். 109-112½.

கபகுல்மத்தில் தாஹசிகித்ஸை :—(1) வமநங்கள், ஸ்வேத சிகித்ஸைகள், க்ருதபானம், விரேசனங்கள், வஸ்திகள், க்ஷாரப் பிரயோகங்கள், ஆஸவாரிஷ்டங்களைப் பருகுதல், குல்மசிகித்ஸைக்கான பத்தியபோஜனங்கள் இவற்ருல் வேருன்றிப் போன கபகுல்மம் நிவ்ருத்தியாகாவிட்டால், கடைசியில் இரக்தமோக்ஷணம் செய்து, அம்புபோன்ற கருவி முதலியதைக் காய்ச்சி தாஹசிகித்ஸையும் செய்யலாம். (2) பிறகு வைத்தியன், சுற்றிலும் வரம்புடன் வளர்ந்துள்ள குல்மத்தை வஸ்திரத்தினல் போர்த்து நாபி, மூத்திரவஸ்தி, குடல், இருதயம் இவற்றையும், வயிற்றின் மந்தியரேகையையும் பரிசிக்காமல், பழுக்கக் காய்ச்சிய இரும்புச் சலாகையினுல் அதைச் சிறிது சுடவும்; அல்லது அரணிக் கட்டையையாவது தும்பிற்கட்டையினுலாகிய அலகையாவது காய்ச்சி, அதைச் சுடவும். அப்பால் சுட்ட அழற்சியின் வேகம் குறைவுபடுகையில் விரண சிகித்ஸையிற் கூறிய விதமாகச் சிதோபசாரங்களைச் செய்யவேண்டும். 113—117.

குல்மத்தில் ஆம-மிச்ர தோஷங்களுக்குச் சிகித்ஸை :—குல்மரோகத்தில் ஆமதோஷமும் ஸம்பந்தித்திருந்தால் பேயா முதலியவற்றைக் கொடுத்து, ஜாடராக்னியைத் தூண்டி, லங்கநமும் செய்வித்து, அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு சிகித்ஸை செய்யலாம்; பல தோஷங்கள் சேர்ந்துண்டான மிச்ரலக்ஷணமுள்ள குல்மத்திலும் வைத்தியன் காலமறிந்து அததற்கு அனுகுணமான சிகித்ஸையைச் செய்வானுக.—118.

இரத்த குல்ம சிகித்ஸை :—(1) ஸ்த்ரீக்கு இரத்த-குல்மம் உண்டாயிருக்கையில், கர்ப்பிணியாகவுமிருந்தால், பிரஸவகாலம் கழிந்தபிறகு ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்து, அப்பால் ஸ்நேஹங்களால் விரேசநம் செய்விக்கலாம். (2) மாதவிடாய் நின்ற பிறகு, ஸ்த்ரீகளுக்குக் குல்மம் உண்டானுல், நெய், வெல்லம், த்ரிகடு, கண்டுபாரங்கி இவற்றின் சூர்ணத்தை எள்ளுக் கஷாயத்தில் சேர்த்து பானம் செய்விக்கலாம்.—119, 120.

பார்ங்க்யாதி சூர்ணம் :—கண்டுபாரங்கி, திப்பிலி, புங்கம் பட்டை, கிரந்திதகரம், தேவதாரு இவற்றைச் சூர்ணம் செய்து, எள்ளுக் கஷாயத்தோடு உட்கொள்ள குல்மநோய் தீரும்.—121.

க்ஷாராவ்லேஹம் :—இரண்டு ஆடகம் பலாசக்ஷாரத்தை, இரண்டிரண்டு ஆடகம் தைலத்திலும் க்ருதத்திலும் சேர்த்து

பக்குவம் செய்து, இரத்த குல்மத்தை வெளிப்படுத்துவதற்கேற்ற அளவில் உபயோகிக்கலாம்.—122.

இரத்த குல்மத்தில் யோநிவிரேசநம்:—முற்கூறிய இம்முறைகளால் இரத்த-குல்மம் உடையாவிட்டால், யோனிவிரேசனத்திற்கான ஔஷதத்தைப் பிரயோகிக்கவும். (1) பலலத்தை[1] க்ஷாரத்துடன் கூட்டியாவது, (2) கள்ளிப்பாலில் கலந்தாவது, (3) கடுகரோஹிணியையும் மத்ஸியங்களையும் க்ஷாரம்-கள்ளிப்பால் இவற்றில் பாவனை செய்தாவது யோனியில் பிரயோகிக்கவும். (4) கடுகரோஹிணி - மத்ஸியங்களை வராஹபித்தம் - மத்ஸியபித்தங்களில் நன்கு பாவனை செய்தாகிலும் முன்போலவே பிரயோகிக்கலாம். (5) மதுவின் கிட்டத்தையாவது வெல்லத்தோடும் க்ஷாரத்தோடும் கூட்டி யோனியைச் சுத்தி செய்ய அதில் பிரயோகிக்கலாம். (6) இரத்த-பித்தஹரமான க்ஷாரத்தைத் தேன், நெய் இவற்றோடு கலந்து லேஹ்யம்போல உட்கொள்ளலாம். (7) வெள்ளுள்ளி, தீக்ஷ்ணமான மதிரையென்னும் மது-மத்ஸியங்கள் இவற்றையும் கொடுக்கலாம். (8) பால், பசுவின் சிறுநீர் இவற்றைக் கலந்தாவது, (9) தசமூலகஷாயத்தில் க்ஷாரத்தைச் சேர்த்தாவது வஸ்தி பிரயோகிக்கலாம். 123—126.

இரத்த-குல்மத்தில் சஸ்திரசிகித்ஸை:—முற்கூறியவாறு குல்மத்தைச் சிகித்ஸித்தும் இரத்தம் வெளிப்படாவிடில், அதைச் சஸ்திரத்தினால் உடைத்துவிடுவது நலம்.—126½.

இரத்த-குல்மத்தில் ஸ்ரவிக்கும் உதிரத்தைத் தடுக்கக் கூடாது:—இரத்தம் குல்மத்திலிருந்து வெளிவரத் தொடங்கிவிட்டால், யமகஸ்நேஹங்களை உடம்பிலும் முக்கியமாக யோனியிலும் அப்யங்கம் செய்துவைத்து, இரத்தத்தை நன்கு ஸ்ரவிக்கச் செய்யவேண்டும். இந்த நிலைமையில் மாம்ஸரஸம் கலந்த அன்னத்தை உணவாகவும், அதிக நாட்படாத ஸுரையென்னும் மதுவை பானம் செய்வதற்காகவும் கொடுக்கலாம்.—127½.

இரத்த குல்மத்தில் உதிரம் அதிகமாக ஸ்ரவிக்கையில் செய்யுமுபசாரம்:—(1) உதிரம் மிதமிஞ்சி ஸ்ரவித்தால், இரத்த-பித்தஹரமான சிகித்ஸைகளைச் செய்யலாம். (2) இரத்தம் மிகுதியாக வெளிப்பட்டு வாதரோகஸம்பந்தமான கோளாறுகள் கண்டால், வாதஹரமான எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். (3) வயிற்றுப்பொருமல் முதலிய வேறு கோளாறுகள் நேரிட்டால், உதாவர்த்தஹரமாகவும், கபதோஷத்தைப் பரிஹரிக்கக்கூடியவையுமான சிகித்ஸைகளை அந்தந்த நிலைமைகளுக்கு ஏற்றவண்ணம் நிறைவேற்றலாம்.—128, 129.

1. பலலம்—வறுத்த இ

# பதினைந்தாம் அத்தியாயம்.

## உதர சிகித்ஸை.

இனி உதரசிகித்ஸை[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப் படுகின்றது :—

உதரரோகத்தில் விரேசநம் செய்விப்பதின் ஆவச்யகம் :— தோஷங்கள் அமிதமாக விருத்தியாய்விடுவதாலும், ஸ்ரோதஸ் ஸுகளென்கிற ஜலநீர்க் குழாய்கள் அடைபடுவதாலும் உதர ரோகம் உற்பத்தியாகின்றது; ஆகையால் இவ்வியாதியில் எப் பொழுதுமே விரேசநம் செய்விக்கவேண்டும்.—1.

உதரத்தில் அதிருக்ஷ நிலைமையில் ஸ்நேஹாதி சிகித்ஸை :- ( ) ஒரு மாஸம் அல்லது இரண்டு மாஸகாலம் ஆமணக்கெண்ணெ யைப் பசு மூத்திரத்தோடாவது பசுவின் பாலுடனாவது சலந்து பருகிவரலாம். (2) அல்லது கோமூத்திரத்தையேயாவது, எரு மையின் சிறுநீரையேயாவது குடித்துக்கொண்டு, பசும் பால் கலந்த அன்னத்தையே பத்தியபோஜனமாகக் கொள்ளலாம். (3) கழுதைப்பாலையாவது குடிக்கலாம். உதரரோகத்தில் இவை உபயோசமானவை; தேஹதாபம், வயிற்றுப்பொருமல், அதிக நாவறட்சி, மூர்ச்சை இவைகளுள்ள உதரரோகிக்கு இம்முறைகள் இன்னும் விசேஷமானவை. (4) அதிக வாததோஷமுள்ளவர் களும், ஆகவே ருக்ஷமாயிருப்பவர்களும், தோஷங்களைச் சுத்தி செய்யவேண்டிய நிலைமையைப் பெற்றவர்களுமான இந்த ரோகி களுக்கு, உதரரோகஹரமாகவும், ஸ்நிக்தத்தன்மையை உண்டு பண்ணுபவையுமான க்ருதங்களைக் கொடுக்கவும். 2—4.

ஷட்பல க்ருதம் :—இரண்டு ஆடகங்கொண்ட மோரின் தெளிவுநீரில் தசமூல கஷாயம் கூட்டி, இராஜயக்ஷ்ம சிகித்ஸை யிற் கூறிய ஷட்பல க்ருதச் சரக்குகளையும் சேர்த்து, அதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் பக்குவம்செய்து உபயோகிக்கவும்.—4½.

சுண்ட்யாதி க்ருதம் :—ஒரு ஆடகம் மோரின் தெளிவுநீரில் மூன்று பலம் சுக்கைப் பொடித்துச் சேர்த்து, க்ருதம் தைலம் இவற்றை ஒவ்வொரு பிரஸ்த்தம் சேர்த்துப் பக்குவம் செய்த ஸ்நேஹத்தைப் பானம் செய்ய எல்லா உதரரோகங்களும், கப- வாதங்களால் உண்டாம் குல்மமும் நன்கு தீரும்.—5, 6.

கோமூத்திர க்ருதம் :—ஒரு பிரஸ்த்தம் நெய், அதற்கு நாலு மடங்கு ஜலம், இரண்டு மடங்கு கோமூத்திரமும் சேர்த்து, ஒரு பலம் சித்திரமூலத்தைக் கல்கமாகவும் யவக்ஷாரமும் சிறிது சேர்த்து உதரரோகமுள்ளவன் உபயோகிக்கலாம்.—7.

யவாதி க்ருதம் :—யவதானியம், இலந்தங்கொட்டை, கொள்ளு, மஹாபஞ்சமூலம் இவற்றை ஜலத்தில் சேர்த்து,

1. ஜலோதரம், ப்லீஹோதரம் முதலியவற்றின் சிகித்ஸை.

ஸுரையென்னும் மதுவையும், காஞ்ஜிகத்தையும் கூட்டி, க்ருதம் பக்குவம்செய்தாவது உட்கொள்ளச்செய்யலாம்.—8.

உதரங்களில் விரேசநம் பிரயோகிக்கும் நிலைமை :—முற் கூறிய க்ருதங்களால் ரோகி ஸ்நிக்த்தமாய், உடலில் வன்மையுண் டாய், வாதம் தணிந்து, தோஷங்கள் சேர்ந்துள்ள ஆசயமும் தளர்ச்சியுற்றிருக்கையில் கல்ப ஸ்த்தாநத்திற் கூறும் விரேச நௌஷதங்களைக் கொடுக்கவும்.—9.

படோலமூலாதி சூர்ணம் :—பேய்ப்புடல் வேர், த்ரிபலை, மஞ்சள், வாய்விடங்கம் இவை வகைக்குக் கால் பலம், கம்பில்லம் அவற்றினும் இரண்டு பங்கு, கருஞ்சாறடை மூன்று பங்கு, சிவதைவேர் நாலு பங்கு; இவற்றை நன்கு சூர்ணம் செய்து பசுமூத்திரத்தோடு உட்கொள்ளவும். இதனால் நன்கு விரேசந மான பிறகு, பேயாவைப் பருகி, பிறகு ஜாங்கல மாம்ஸரஸத் தோடு அன்னம் புஜித்து, த்ரிகடுவைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை ஆறு நாட்கள் உட்கொண்டுவரவும். இவ்விதமே அடிக் கடியும் உட்கொண்டுவந்தால், இச்சூர்ணம் நீர் சுறக்கும் மஹோ தரம் உட்பட எல்லா உதரங்களையுமே தீர்க்கும். 10—12.

கவாக்ஷ்யாதி சூர்ணம் :—தும்மட்டிக்காய், சங்கங்குப்பி, நேபாளம், வெள்ளிலோத்திப்பட்டை, வசம்பு இவற்றைச் சூர்ணம் செய்துகொள்ளவும். பேரிலந்தை, திராக்ஷை, இலந்தை இவற் றின் கஷாயத்தையாவது, கோமூத்திரத்தையாவது, மதுவையா வது அச்சூர்ணத்திற்கு அனுபானமாகப் பருகலாம்.—13.

நாராயண சூர்ணம் :—குரோசானி யோமம், கொட்டைக் கரந்தை, கொத்தமல்லிவிதை, சதகுப்பி, கருஞ்ஜீரகம், ஓமம், கண்டத்திப்பிலி, காட்டுஜீரகம், கச்சோரம், வசம்பு, சித்திரமூலம், ஜீரகம், த்ரிகடு, பிரும்மதண்டுவிதை, த்ரிபலை, யவக்ஷாரம், ஸர்ஜ க்ஷாரம், தாமரைக்கிழங்கு, கோஷ்டம், பஞ்சலவணம், வாய்விடங் கம் இவை ஸம பாகம்; நேபாளம் மூன்று பாகம்; சிவதைவேரும் தும்மட்டியும் தனித்தனி இரண்டு பாகம்; இலைக்கள்ளி நான்கு பாகம்; இவற்றின் சூர்ணம் 'நாராயண சூர்ணம்' என்று வழங்கப் படும். பலரோகங்களைப் போக்கவல்ல இதைப் பிரயோகித்த மாத் திரத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணுவைக் கண்ட அஸுரர்கள்போல, வியா திகள் தலையெடுக்கமாட்டா. இச்சூர்ணத்தை (1) உதரரோகமுள்ள வர்கள் மோருடனும் (2) குல்மரோகத்தில் இலந்தங்கொட்டைக் கஷாயத்தோடும், (3) வயிற்றுப்பொருமலில் ஸுரையோடும், (4) வாதரோகத்தில் சாத்தீர்த்தத்தோடும், (5) மலபந்தத்தில் தயிரின் ஆடையோடும், (6) அர்சஸ்ஸில் மாதளஞ் சாற்றோடும், (7) ஆஸ னக்கடுப்பில் புளியம்பழச்சாற்றோடும், (8) அஜீர்ணத்தில் வெந் நீரோடும் நிலைமைகளுக்கேற்றவாறு உபயோகிக்கலாம். மேலும் பகந்தரம், பாண்டுரோகம், காஸம், ச்வாஸம், கழுத்துப்பிடிப்பு,

இருதயரோகம், கிரஹணீதோஷம், குஷ்டம், அக்னிமாந்தியம், ஜ்வரம், கோரப்பற்கள் தாக்குவதாலான விஷம், மூலங்கள் என்கிற சில வேர்கள்ஸம்பந்தமான விஷம், காவிஷம், க்ருத்ரிமவிஷம் இவைகளிலும் அவரவர்களுக்குத் தகுந்தவாறு கோஷ்டத்தை ஸ்நிக்த்தமாகச் செய்து விரேசநத்திற்காக இச்சூர்ணத்தை உபயோகிக்கலாம். 14—21.

ஹபுஷாதி சூர்ணம்:—கொட்டைக்கரந்தை, பிரம்மதண்டு விதை, த்ரிபலை, அவுரிவிதை, கொன்றை, கடுகரோஹிணி, நிலவேம்பு, இலைக்கள்ளி, சிவதைவேர், வசம்பு, இந்துப்பு, கறுப்புப்பு, திப்பிலி இவற்றின் சூர்ணத்தை மாதளம்பழச் சாற்றுடனாவது, த்ரிபலா கஷாயத்துடனாவது, மாம்ஸரஸத்தோடாவது, கோமூத்திரத்தோடாவது, இளஞ்சூடான ஜலத்தோடாவது உட்கொள்ளலாம். ஸகல குல்மரோகங்கள், ப்லீஹோதரம், இதர உதரரோகங்கள், வெண்குஷ்டம், குஷ்டம், அஜீர்ணம், அக்னிமாந்தியம், ஜாடராக்னி விஷமித்திருத்தல், சோகை, அர்சஸ், பாண்டுரோகம், காமாலை, ஹலீமகம் இவைகளில் உபயோகிக்க இச்சூர்ணம் விரேகத்தை யுண்டுபண்ணி, வாதம், பித்தம், கபம் இத்தோஷங்களனைத்தையும் நன்கு வெளிப்படுத்தி விடும். 22—25.

நீலிங்யாதி சூர்ணம்:—அவுரிவிதை, நீர்வஞ்சி, த்ரிகடு, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், பஞ்சலவணம், சித்திரமூலம் இவற்றைச் சூர்ணம் செய்து, நெய்யிற் கலந்து உட்கொள்ள, உதரரோகங்களும் குல்மமும் தீரும்.—26.

உதரத்தில் விரேகத்தினல் பலஹீனமா யிருக்கையில் க்ஷீர பாநம்:—இவ்வௌஷதங்களால் சோதந சிகித்ஸை செய்கையில் பிணியாளி பலஹீனப்பட்டு சோர்வடையும்போது, இடையிடையே முன் போலவே[1] கழுதைப்பாலையாவது, பசுவின் பாலையாவது, வெள்ளாட்டுப்பாலையாவது உட்கொள்ளக் கொடுக்கலாம். வியாதி பலமாயிருக்குமாயின் விரேசனத்திற்கு ஸ்நேஹத்தையே உபயோகிக்கவேண்டும்; அதிலும் துர்பலமாயிருப்பவருக்கு விசேஷமாய் ஸ்நேஹந்தான் விரேகத்திற்குத் தகுந்தது. 27, 27½.

ஹரீதகீக்ருதம்:—ஒரு பிரஸ்த்தம் கடுக்காய்ப் பொடியை ஒரு ஆடகம் நெய்யில் சேர்த்துக் காய்ச்சி, துடுப்பால் நன்றாகக் குழப்பிக் கிளறி, அப்பாத்திரத்தின் வாயைச் சீலை மண்களால் நன்கு மூடி, தானியக்களஞ்சியத்தின் பள்ளத்தில் புதைத்துவைக்கவும்; பிறகு ஒரு மாஸம் கழித்து வெளியிலெடுத்து வடிகட்டி, கடுக்காய்க் கஷாயத்தையும், புளித்தத் தயிரையும் கூட்டி பக்குவம் செய்து பருகிவரவும். உதரரோகம், காவிஷம், அஷ்டீலை, வயிற்

1. இதற்கு முன் படோல மூலாதி சூர்ணத்திற்குக் கூறிய விதப் பேயாதிகளில் பாலை உபயோகிக்கவும்.

றுப்பொருமல், குல்மம், வித்ரதி, குஷ்டம், உன்மாதம், அபஸ்மாரம், இவற்றை இது நிவ்ருத்திசெய்யும். 28—30½.

**ஸ்நுஹீக்ஷீரஸித்த க்ருதங்கள் :—**(1) பசுவின்பாலில் கள்ளிப்பாலையும் கூட்டிக் காய்ச்சி ஆறியபிறகு, மத்திஞல் கடைந்து எடுக்கப்படும் வெண்ணெயிலிருந்துண்டான நெய்யும், (2) கள்ளிப்பாலில் சேர்த்துக் காய்ச்சியெடுத்த நெய்யும் முற்கூறிய ஹரீதகி க்ருதத்திற்குச் சமான குணமுள்ளனவாம். (3) ஒரு திரோணம் பாலில் அரைப்பிரஸ்த்தம் கள்ளிப்பாலைக் கூட்டித் தயிராகப் போனபிறகு கடைந்தெடுத்த நெய்யில் சிவதைவேரைச் சேர்த்துக் காய்ச்சவும். இந்த க்ருதமும் அதே குணமுடையது. (4) ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தை எட்டு மடங்கு பாலில் சேர்த்து, ஒரு பலம் கள்ளிப்பாலையும் கல்கமாகக் கூட்டி, சிவதைவேரையும் ஷட்பலச் சரக்குகளையும் பொடித்துப் போட்டு பக்குவம் செய்த க்ருதமும் அதே குணமுடையதாகும். 31—33½.

**உதரத்தில் க்ருதபானத்திற்குப் பிறகு பேயாதிகளின் உபயோகம்** — (1) இந்த க்ருதங்களை உபயோகித்த பிறகு பேயாவையாவது, மதுரமான பதார்த்தங்களால் பக்குவம் செய்த மாம்ஸரஸத்தையாவது, பாலையாவது பானம் செய்யவேண்டும். (2) க்ருதம் ஜீர்ணித்து, விரேசநமும் ஆனபிறகு, சுக்கை உடைத்துப் போட்டுக் காய்ச்சிய இளஞ்சூடான ஜலத்தைப் பானம்செய்யவும். (3) அதன் பிறகு பேயாவையும், (4) அப்பால் கொள்ளைச் சேர்த்து செய்த கஞ்சியையும் பருகலாம். (5) இங்ஙனம் பேயாதிகளை மூன்று நாட்கள் உபயோகித்த பிறகு முறைப்படி லங்கநம் செய்வித்து ரூக்ஷநிலைமையடைந்த பிறகாவது முற்கூறிய விதிப்படி வரிசையாக க்ருதபானம் செய்துவரவேண்டும். 34-36.

**உதராதிரோகங்களில் வேறு சில க்ருதங்கள் :—**முற்கூறியவாறு பக்குவம் செய்த க்ருதங்களை நிபுணனான வைத்தியன் குல்மரோகங்களையும், க்ருத்ரிம விஷங்களையும், உதரரோகங்களையும் பரிஹரிக்க நிலைமையறிந்து உசிதப்படி உபயோகிக்கவேண்டும். பெருஞ்ஜீரக கல்கத்தைச் சேர்த்துச் செய்த க்ருதத்தையாவது வயிற்றுப்பொருமலைப் போக்கப் பருகலாம். தில்வக க்ருதத்தையாவது, நீலிநீ க்ருதத்தையாவது, மிச்ரகஸ்நேஹத்தையாவது பானம் செய்யலாம். இவற்ருல் தோஷங்கள் வெளியான பிறகு, பிணியாளி சிறுகச் சிறுக இலகுகுணமுள்ள சம்பா அன்னத்தைப் புஜிக்கலாம்.—37, 38½.

**உதரரோகத்தில் மிச்சமுள்ள தோஷத்தை நிவ்ருத்தி செய்யு முறைகள் :—**பிறகு உதரரோகி மிச்சமுள்ள தோஷத்தை நிவ்ருத்தி செய்ய அடியில் கூறப்படுமாறு செய்யவேண்டும்:—(1) கோமூத்திரத்தில் நன்கு பாவனை செய்த ஆயிரம் கடுக்காய்களையாவது, (2) கள்ளிப்பாலில் நன்ருகப் பாவனை செய்த ஆயிரம்

திப்பிலிகளையாவது பாலின் அநுபானத்துடன் உண்ணலாம். (3) பிப்பலீவர்த்தமாநக முறையையாவது உபயோகிக்கலாம். (4) சிலாஜதுவை உபயோகித்துக் கொண்டு பாலையே அதற்குப் பத்தியமாய் உட்கொள்ளலாம். (5) அங்ஙனமே மஹிஷாக்ஷி குக்குலுவையாவது உபயோகிக்கலாம். (6) ஸம அளவாக இஞ்சிச்சாறு கலந்த பாலையாவது பானம் செய்யலாம். (7) சித்திரமூலம், தேவதாரு இவற்றின் கல்கத்தையாவது பாலோடு பருகலாம். (8) அப்படியே யானைத்திப்பிலி, சுக்கு இவற்றின் கல்கத்தையாவது பாலின் அனுபானத்தோடு நியதமாய் உபயோகித்து வரலாம். (9) வாய்விடங்கம், சித்திரமூலம், நேபாளம், சவ்வியம், த்ரிகடு இவற்றை வகைக்குக் கால் பலம் எடுத்து, கல்கமாகச் செய்து, பாலில் கலந்து பானம் செய்ய, மிகவும் விருத்தியடைந்த உதரரோகமும் தீரும். (10) கள்ளிப்பாலில் பக்குவம் செய்த க்ருதத்தை உணவில் கலந்து ஒரு மாஸம் புஜித்து வரலாம். (11) கள்ளிப்பாலில் பாவனை செய்த கடுக்காய், திப்பிலி இவற்றைக்கொண்டு செய்த உத்காரிகையையாவது[1] உபயோகித்து வரலாம். 39—44.

**உதரத்தில் பக்கசூலை முதலியவற்றிற்கு ஏற்ற க்ருதங்கள் :—** பக்கசூலை, வயிற்றுப் பொருமல், மாரடைடப்பு இவற்றை வாயு உண்டாக்கும் பொழுது (1) பில்வக்ஷாரம் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது (2) பெருவாகையின் க்ஷாரம், (3) சிற்றாமுட்டியின் க்ஷாரம், (4) பலாச க்ஷாரம், (5) திலக்ஷாரம், (6) பனையின் க்ஷாரம் (7) கதலீ க்ஷாரம், (8) நாயுருவி க்ஷாரம், (9) தழுதாழையின் க்ஷாரம் இவற்றுள் எதையேனும் சேர்த்துச் செய்த க்ருதத்தையாவது உட்கொள்ளலாம்.—45, 46.

**உதரத்தில் ஆவரண தோஷங்களுக்கு ஆமணக்கெண்ணெய் :-** வாத தோஷத்தினல் கபமாவது பித்தமாவது ஆவரணம் செய்யப்படுமானாலும், பித்த-கபங்களால் வாதம் ஆவரணம் செய்யப்படுமானாலும்[2] அந்நிலைமைகளில், பிணியாளி பலசாலியா யிருந்தால், அந்தந்த நிலைமைக்கேற்ற ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த ஆமணக்கெண்ணெயை உபயோகிக்கலாம்.—47.

**தேவதார்வாதிலேபம் :—** தேவதாரு, பலாசம்பட்டை, யானைத்திப்பிலி, முருங்கப் பட்டை, குங்கிலிய மரப்பட்டை இவற்றைப் பசுமூத்திரம் சேர்த்துக் கல்கமாகச் செய்து, வெளிப்புறத்தில் வயிற்றின்மேல் பூச்சிடவும்.—48.

**வ்ருச்சிகால்யாதி ஸேசநம் :—** தேள்கொடுக்கிலை, வசம்பு, சுக்கு, மஹாபஞ்சமூலம், வெள்ளைச்சாறணை, கருஞ்சாறணை, சொத்தமல்லி விதை, கோஷ்டம் இவற்றின் க்வாதங்களையும் கோமூத்திரத்தையும் வயிற்றின்மேல் ஊற்றி ஒத்தடமிடலாம்.—49.

---

1. உத்காரிகை — முதற் புத்தகம் பார்க்க.
2. தோஷங்களின் ஆவரண விகாரங்கள்—முதற் புத்தகம் பார்க்க.

• உதரத்தில் விரேசநமான பின்பு வயிற்றில் செய்யவேண்டிய சிகித்ஸை :—(1) முற்கூறியவாறு ஆமணக்கெண்ணெய் முதலியவற்றின் பிரயோகங்களால் விரேசநமாய் வயிறு நன்கு வாடியதும், ஸால்வணம்[1] முதலியவற்றால் ஸ்வேதம் செய்வித்த பிறகு, வயிற்றை வஸ்திரத்தினால் சுற்றிக் கட்டவும். இவ்விதம் செய்ய, மறுபடியும் வாயுவானது வயிற்றை ஊதச் செய்யாது. (2) நன்கு விரேசநமான பின் மறுபடி வயிறு ஊதிவிட்டால், அதிக ஸ்நேஹமும் அம்ல-லவணங்களும் சேர்ந்த கஷாயங்களால் நிரூஹவஸ்திகளைப் பிரயோகிக்கலாம். (3) வாயு ஸ்தம்பித்து வயிற்றுப்பொருமலுண்டானால் தீக்ஷ்ணமாகவும், க்ஷாரங்கள் பசுமூத்திரம் இவற்றோடு கூடியனவுமான வஸ்திகள் சிறந்த சிகித்ஸைகளாம். 50—52.

உதர ரோகத்தில் விசேஷ சிகித்ஸைகள் :—இங்ஙனம் உதர ரோகிகளுக்குக் கைகண்ட பலன் தரும் சிகித்ஸைகள் பொதுவாகக் கூறப்பட்டன. இனி வாதாதி தோஷங்களாலான உதர ரோகங்களுக்கு விசேஷ சிகித்ஸைகள் விவரிக்கப்படும்.—52½.

வாதோதரத்தில் ஸ்நேஹ-ஸ்வேதாதிகள் :—வாத தோஷத்தினால் உண்டான உதரரோகத்தில் தேஹவன்மையுள்ள பிணியாளிக்கு (1) விதார்யாதி கணச் சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தைக் கொடுக்கவும். (2) அவ்விதம் செய்து ஸ்நிக்த்தமான பிறகு, ஸ்வேத சிகித்ஸை செய்வித்து, (3) தில்வக க்ருதத்தினாலாவது, மிச்ரகஸ்நேஹத்தினாலாவது பல முறை விரேசநம் செய்விக்கவும். (4) ஸம்ஸர்க்கக்ரியையும் செய்துவைத்த பிறகு தேஹத்தில் பலமுண்டாகப் பாலைத் தாராளமாகக் கொடுக்கவும்; பலமுண்டாய், பால் தெவிட்டிப் போனால், பெரும்பாலும் அந்த நிலைமையே பாலைக் கிரமமாக நிறுத்த ஏற்றதாகும். (5) சொற்ப அளவு உப்பும் புளிப்பும் சேர்த்துப் பக்குவம் செய்த யூஷங்களாலும், மாம்ஸரஸங்களாலும் ஜாடராக்னியை விருத்தி செய்க. (6) உதாவர்த்தம் பிறகு ஏற்படுமானால், மீண்டும் அவனை ஸ்நிக்த்தமாகச்செய்து, (7) ஸ்வேதமும் செய்வித்து, (8) அப்பால் ஆஸ்த்தாபந வஸ்தியைப் பிரயோகிக்கவும்; இதற்குத் தசமூலகஷாயத்தைத் தீக்ஷ்ணவீர்யமுள்ள வஸ்துக்களையும் அதனடியில் சேர்த்து உபயோகிக்கவும். (9) ரூக்ஷமாகவும், மலபந்தம் - அபாநவாயு கட்டிப்போதல் இவைகளுடையவனாகவும், நல்ல ஜாடராக்னியைப் பெற்றுமுள்ள பிணியாளிக்கு நடுக்கம், இசிவு, பூட்டுகளில் வேதனை, அஸ்த்திவேதனை, பக்கசூலை, முதுகுவலி, கழுத்துவலி இவை நேர்ந்திருக்கையில் வாதஹரமான அம்லரஸச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த நல்லெண்ணெய் ஆமணக்கெண்ணெய் இவற்றைக்கொண்டு அநுவாஸநம் செய்விக்கவும். (10)

1. ஸால்வண ஸ்வேதம் — முதற் பாகம் பார்க்க.

முற்கூறிய குறிகள் தோன்றியிருக்கையில், விரேசனத்திற்குத் தகாதவனுக்கு வஸ்திப் பிரயோகமும், பால் நெய்களின் உபயோகமும் அக்கோளாறுகளைச் சமனம் செய்யக் கூடியவையாம். 53—58½.

பித்தோதரத்தில் ஸ்நேஹ-ஸ்வேதாதிகள்:—(1) பித்தத்தினுலுண்டான உதர ரோகத்தில் பிணியாளி சரீரவன்மையுள்ளவனுயிருந்தால், இனிய சுவையுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தைக் கொடுத்து நன்கு ஸ்நிக்த்தமாகச் செய்து, (2) கருஞ்சிவதை, வெண்சிவதை, த்ரிபலை இவற்றால் பக்குவம் செய்த க்ருதத்தினுல் விரேசநம் செய்விக்கவேண்டும். (3) பிறகு சர்க்கரை, தேன், நெய் இவற்றை அதிகமாகக் கூட்டிய ந்யக்ரோதாதிகணக் கஷாயத்தினுல் நிரூஹவஸ்தியைப் பிரயோகிக்கலாம். (4) அச்சரக்குகளையே சேர்த்து பக்குவம் செய்த கஷாயத்தையும் ஸ்நேஹவஸ்துக்களையும் கூட்டி அநுவாஸந வஸ்தியை மீண்டும் பிரயோகிக்கவேண்டும். (5) துர்ப்பலமான பிணியாளிக்கு க்ஷீரங்கலந்த வஸ்திகளால் முதலில் அநுவாஸநம் செய்வித்து, ஜாடராக்னி பலம் பெற்றதும் தேஹமும் ஸ்நிக்த்தமானதும், (6) சிவதை வேரையும் பாலையும் சேர்த்துக் காய்ச்சிய ஆம்ணக்கெண்ணெயை அடிக்கடியும் கொடுத்து விரேசநம் செய்விக்கவேண்டும். கள்ளியிலை, கொன்றை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தினுலாவது, கொன்றையின் கஷாயத்தினுலாவது விரேசநம் செய்விக்கலாம். (7) கபத்துடன் கூடிய பித்தோதரத்தில் கோமூத்திரம் கூட்டிய பாலையும், (8) வாததோஷத்துடன் கூடிய பித்தோதரத்தில் திக்தரஸமும் நெய்யும் கலந்த பாலையும் முற்கூறிய கஷாயங்களில் ஏதேனுமொன்றில் சேர்த்தாவது, விதார்யாதிகணக்வாதத்தில் கூட்டியாவது கொடுத்து வரவும். (9) வயிற்றின்மேல் பாயஸத்தினுல் சூடாக ஒத்தடமுங் கொடுத்து வரவும். (10) மறுபடி க்ஷீரத்தைக் கொடுத்தும், வஸ்திகளைப் பிரயோகித்தும், விரேசநம் செய்வித்து விடாமல் சிகித்ஸித்து வந்தால் பித்தோதரத்தைப் போக்கலாம. 59—65.

கபோதரத்தில் ஸ்நேஹ - ஸ்வேதாதிகள் :—(1) கபதோஷத்தினுலுண்டான உதரரோகத்தில் வத்ஸகாதிகணச் சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தினுல் ஸ்நேஹம் செய்வித்து, (2) அப்பால் ஸ்வேதசிகித்ஸையை நிறைவேற்றவேண்டும். (3) அப்பால் பிணியாளி பலசாலியாயிருந்தால் கள்ளிப்பாலைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தினுல் விரேசநம் செய்விக்கவும். (4) கடுரஸம், க்ஷாரங்கள் இவற்றோடு கூடியவையும், கபஹரகுணங்களுள்ளவையுமான உணவுகளால் ஸம்ஸர்க்கக்ரியையைச் செய்யவும். (5) பிறகு கோமூத்திரம், த்ரிகடு, தைலம் இவற்றை முஷ்ககாதி கஷாயத்தில் தாராளமாகக் கூட்டி அதனுல் நிரூஹவஸ்தியைப்

ப்ரயோகிப்பது ஹிதமாம். (6) அக்கஷாயத்திலேயே பக்குவம் செய்த ஸ்நேஹத்தினால் அநுவாஸநவஸ்தியையும் செய்யலாம். (7) த்ரிகடுவைச் சேர்த்து பக்குவம் செய்த பாலுடனாவது, கொள்ளுக்கஷாயத்தில் காய்ச்சிய பாலுடனாவது, மாம்ஸரஸத்திற் காய்ச்சிய பாலுடனாவது அன்னத்தைக் கூட்டி யுண்ணலாம் (8) கபம் மிகச் சேர்ந்து இறுகி உதரரோகம் அதிகரித்து வயிறு கனத்திருக்கையில், ஸ்திமிதத் தன்மையினாலும், அரோசகத்தினாலும், இருதயக் கோளாறாலும் பிணியாளி வருந்துகையில், மதுபானத்தினால் அக்னிமாந்தியமும் உண்டாயிருக்கையில் அரிஷ்டங்களையும் க்ஷாரங்களையும் கொடுக்கலாம். 66—69.

ஹிங்க்வாதி க்ஷாரம்:—காயம், திப்பிலி, த்ரிபலை, தேவதாரு, மஞ்சள், மரமஞ்சள், சேராங்கொட்டை, முருங்கைக்காய், கடுகரோஹிணி, நிலவேம்பு, வசம்பு, சுக்கு, யானைத்திப்பிலி, கோரைக்கிழங்கு, கோஷ்டம், குங்கிலியப்பட்டை, பஞ்சலவணங்கள் இவற்றைச் சூர்ணம் செய்து, க்ருதம்-தைலம்-வஸா மஜ்ஜா என்கிற நான்கு வித ஸ்நேஹங்களிலும் தயிரிலும் அச்சூர்ணத்தைக் கலந்து ஒரு பாத்திரத்தில் அதைத்தையும் சேர்த்து எரிக்கவும்; ஜலபாகம் வற்றிய பிறகு, பாத்திரத்தின் வாயை மூடி உள்ளேயே புகைந்து சாம்பலாய்விடுமாறு தீயிட்டெரிக்கவும். இவ்விதம் எரித்த சாம்பலிலிருந் தெடுக்கப்படும் க்ஷாரத்தை ஒரு கர்ஷப் பிரமாணம் மதிரை யென்னும் மதுவோடாவது, தயிரின் ஆடையோடாவது, உஷ்ண ஜலத்தோடாவது, அரிஷ்டங்களோடாவது, ஸுரையுடனாவது, ஆஸவங்களோடாவது பருகிவரவும். இந்த க்ஷாரம் மஹோதரம், குல்மம், அஷ்டீலை, தூநி, ப்ரதிதூநி, சோபம், விஷூசி, ப்லீஹோதரம், இருதயரோகம், அர்சஸ், உதாவர்த்தம் இவைகளை நிவ்ருத்தி செய்யும். 70—73.

துர்ப்பலமான கபோதரிக்கு சிகித்ஸை:—(1) அரிஷ்டங்கள், கோமூத்திரம், முற்கூறிய சூர்ணங்கள், அயஸ்க்ருதி இவைகளைப் பருகி, க்ஷாரம் கூட்டிய தைலங்களைப் பானம் செய்வதும் துர்ப்பலமான கபோதரரோகிக்கு அநுகூலமானது. (2) உபநாஹஸ்வேதமும் துர்ப்பலமான இப் பிணியாளிக்குச் செய்யத் தகுந்தது; அதில் வெண்கடுகு, மத்யத்தின் அடித்திப்பி, முள்ளங்கியின் வித்துகள், இவற்றைக் கல்கமாக ஆட்டி அடிக்கடியும் வயிற்றின் மேல் பூசலாம்.—74, 75.

ஸந்நிபாதோதர சிகித்ஸை:—தேஹபலமாவது, ஜாடராக்னியாவது அதிகம் க்ஷீணிக்காமலுள்ள ஸந்நிபாதோதரத்தில், அப்பிணியாளிக்கு தோஷம் அதிகரிப்பதால் நேரிடக் கூடிய நிலைமைகளை அநுஸரித்து, செய்யவேண்டிய சிகித்ஸையைப்பற்றி முன்னதாய் அறிவித்துவிட்டு, (1) நேபாள-ஜயபாள வித்துகளின் தைலத்தைப் பானம் முதலியதற்கும் உபயோகித்துச் சிகித்ஸை

செய்யவும். (2) இவ்வித சிகித்ஸைகளுக்கும் வசப்படாமல் உதரரோகம் மிகவும் அதிகரித்துவிட்டால், அதிலும் விசேஷமாக ஸந்நிபாதோதரத்தில், ரோகியின் உறவினர்களிடம் சொல்லி அவர்களுடைய அனுமதியைப் பெற்று, வெள்ளைக் குன்றுமணி, செங்குன்றுமணி, அவுரி இவற்றின் வேரைக் கல்கமாகச் செய்து, மத்யத்தில் கரைத்து பானம் செய்யக் கொடுத்துவிடவும். (3) பானவகைகளிலும் உணவுகளிலும் ஸ்தாவரவிஷத்தை யாவது கலந்து கொடுத்து விடலாம். (4) சினங்கொண்ட ஸர்ப்ப மானது எந்தக் கனியில் தனது விஷத்தைக் கக்குகின்றதோ அதையாவது பிரயோகிக்கலாம்; வேருன்றியும் வெவ்வேறு மார்க்கங்களில் லயித்துமுள்ள ஸந்நிபாத தோஷத்தில் ப்ரமாதி யென்கிற வீர்யமுள்ள அவ்விஷத்தின் பிரயோகத்தினால் சீக்கிரம் அந்த ஸந்நிபாத தோஷம் உடைக்கப்பட்டு வெளிப்படுத்தப் படும்; அல்லது தேஹத்திலேயே தங்கியிருப்பினும் அந்த ஸந்நிபாததோஷம் விஷத்தன்மையற்றதாகவும் ஆய்விடும். (5) தோஷமெல்லாம் நீங்கிய பிறகு அப்பிணியாளிக்குக் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்வித்து, பாலையாவது, பேயாவையாவது பானம் செய்விக்கலாம். (6) சிவதையிலையையாவது, வல்லாரை யிலையையாவது, சக்கரவர்த்திக்கீரையையாவது, கருவேப்பிலை யையாவது, யவசாகத்தையாவது அதனதன் இரஸத்திலேயே புளிப்பு, உப்பு இவற்றைச் சேர்க்காமல் சிறிது வேகுமாறுச் சமைத்துப் புஜித்து வரலாம்; அப்பொழுது அன்னம் புஜிக்கக் கூடாது; இங்ஙனம் ஒரு மாஸம் உபயோகித்து, அப்பால் நாவ றட்சியுண்டானால் முற்கூறிய சாகங்களின் ஸ்வரஸத்தையே பருகி வரவேண்டும். (7) இவ்விதம் சாகங்களால் தோஷம் விலக்கப் பட்டதும், ஒரு மாஸம் கழித்து, பலஹீனப்பட்டுள்ள அப்பிணி யாளிக்குப் பிராணதாரமாயுள்ள ஒட்டகப்பாலைக் கொடுத்து வரவும். 76—84.

ப்லீஹோதர சிகித்ஸை :—(1) ப்லீஹோதரத்தில் அந் தந்த தோஷத்திற்குத் தகுந்தவாறு ஸ்நேஹசிகித்ஸையையும் ஸ்வேதசிகித்ஸையையும் செய்து, (2) தயிர் சேர்த்து போஜனம் செய்தபிறகு, இடது புஜத்தில் ஸிரையைக் குத்தி இரத்த மோக்ஷணம் செய்யவேண்டும். (3) தகுந்தவளவு பலமுண்டான பிறகு மறுபடி ஸ்நேஹபானம் செய்து வைத்து, சோதநசிகித்ஸை யையும் செய்வித்து, (4) கடலிலுண்டாகும் நத்தையோட்டி லிருந்து எடுக்கப்படும் க்ஷாரத்தைப் பாலுடன் உட்கொள்ளச் செய்யலாம். (5) புங்கங்காயை யெரித்தெடுக்கப்படும் க்ஷாரத்தை ஏதேனும் அம்லவஸ்துவில் சேர்த்துக் காய்ச்சி, கருப்புப்பு, திப் பிலி இவற்றின் சூர்ணத்தையும் மிகுதியாகக் கூட்டி, அப்படியே பாலுடன் உட்கொள்ளலாம். (6) முருங்கப்பட்டையின் கஷா

யத்தையாவது இந்துப்பு, சித்திரமூலம், திப்பிலி இவற்றைப்
பொடித்துச் சேர்த்து உட்கொள்ளலாம். (7) பிணியாளியின்
தேஹபலத்தைக் கவனித்து ஹிங்க்வாதி சூர்ணத்தையும், க்ஷாரத்
தையும், க்ருதங்களையும் தகுந்தவாறு உபயோகிக்கலாம். 85-87½.

பிப்பல்யாதி சூர்ணம் :—திப்பிலி ஒரு பங்கு, சுக்கு ஒரு
பங்கு, நேபாளம் இரண்டு பங்கு, இரு மடங்கு கடுக்காய், இரண்
டரைப் பங்கு கருப்புப்பு, இவற்றைக் கூட்டி சூர்ணம்செய்து ப்லீ
ஹோதர முள்ளவன் உஷ்ணஜலத்துடன் பருகலாம்.—88½.

விடங்காதி க்ஷாரம் :—வாய்விடங்கம், சித்திரமூலம், ஸக்து
வென்னும் மாப்பண்டம், இந்துப்பு, வசம்பு இவற்றுடன் நெய்
கூட்டி, ஒரு கலயத்திலிட்டு எரித்து, அந்த க்ஷாரத்தைப் பாலின்
அனுபானத்தோடு உட்கொள்ள குல்மரோகம், ப்லீஹரோகம்
இவை தீரும்.—89½.

ப்லீஹத்தின்மேல் பந்தநமும் மர்த்தநமும் :—இலந்தையிலை
களைத் தைலம விட்டு அரைத்து, ப்லீஹ முள்ளவிடத்தில் கட்டி,
அதன்மேல் உலக்கை முனையை அழுத்தவும்; பிறகு பாலையே
உணவாக அருந்த, ப்லீஹரோகம் தீரும்.—90½.

ரோஹிதக - ஹரீதகீ யோகம் :—மெல்லிய முள்முருக்கங்
கிளைகளைச் சின்னஞ் சிறிய துண்டுகளாக வெட்டி, இத்துண்டு
களையும் கடுக்காய்களையும் ஜலத்திலாவது பசுமூத்திரத்திலாவது
ஆஸவத்திற்குச் செய்வது போல ஊறப் போட்டு, ஏழு நாட்கள்
கழித்து எடுத்து வடிகட்டி, அதிலுள்ள கடுக்காய்களை எடுத்துப்
புஜிக்க காமாலை, ப்லீஹரோகம், குல்மம், கிருமிரோகம், மேஹ
ரோகம், மஹோதரம் இவ்வியாதிகள் தீரும்.—91, 92.

ரோஹிதகாதி க்ருதம் :—இருபத்தைந்து பலம் முள்முருக்
கம்பட்டையையும், இரண்டு பிரஸ்தமளவு இலந்தங்கொட்டை
யையும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; பஞ்சகோலச் சரக்கு
களை வகைக்கு ஒரு பலமாகவும், கடுக்காயின் தோலை ஐந்து பல
மாகவும் எடுத்து, கல்கமாகச் செய்து, அதில் ஒரு பிரஸ்தம் க்ரு
தத்தைச் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதத்தை
உபயோகிக்க சீக்கிரம் ப்லீஹவீக்கம் போகும்.—93, 94½.

க்ஷார தைலம் :—வாழை, எள்ளுத்தண்டு, நீர்முள்ளி இவற்
றின் க்ஷாரங்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தைப்
பானம் செய்ய, கப-வாதங்களாலுண்டான ப்லீஹரோகம் நிவா
ரணமாகும்.—95½.

வாத கபங்களாலான ப்லீஹத்தில் சிகித்ஸை :—வாத-கபங்க
ளாலான ப்லீஹோதரம் முற்கூறிய சிகித்ஸைகளால் ஸ்வஸ்த
யாகாவிட்டால், தூர்நீர்ப்பசை யுண்டாய் வெளிவாராமலிருக்குமானால்,
குல்மத்திற்குக் கூறியபடி அக்னிதாஹம் செய்யலாம்.—96½.

பித்தத்தினலான ப்லீஹோதரத்திற்கு சிகித்ஸைகள் :—பித்தத்தினுலுண்டான ப்லீஹோதரத்தில் ஜீவநீய க்ருதங்களைப் பருகலாம். க்ஷீரவஸ்திகளைப் பிரயோகிக்கலாம். இரக்தமோக்ஷணம் செய்யலாம். விரேசநாதி சோதந சிகித்ஸைகளையும் நிறைவேற்றலாம். க்ஷீரபானம் செய்யலாம்.—97½.

யக்ருதுதர சிகித்ஸை :—யக்ருத்வ்ருத்தி அல்லது யக்ருத்தாலீ என்கிற உதரரோகத்தில் ப்லீஹோதரத்திற்குச் செய்வது போலவே எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். ஆனல் வ்யாதையில் இடது கைக்குப் பதிலாக வலது கையில் இரக்தமோக்ஷணம் செய்யவேண்டும்.—98.

பத்தகுதோதர சிகித்ஸை :—பத்தகுதோதரரோகத்தில்[1] (1) ஸ்வேத சிகித்ஸை செய்வித்து, (2) அநுவாஸநத்தைப் பிரயோகித்து, (3) அப்பால் கோமூத்திரம், தீக்ஷ்ணவீர்யமுள்ள ஔஷதங்கள், தைலம், இந்துப்பு இவற்றைச் சேர்த்து நிரூஹ வஸ்தியையும் செய்யவேண்டும். (4) ஸ்ரம்ஸநகுணமுள்ள உணவுகளைக் கொடுக்கவும். (5) தீக்ஷ்ணகுணமுள்ள ஔஷதங்களைக் கொண்டு விரேசநம் செய்விக்கலாம். (6) உதாவர்த்தஹரமான சிகித்ஸையையும், வாதஹரமான முறைகளையும் செய்யவேண்டும். 99, 100.

சித்ரோதர சிகித்ஸை :—சித்ரோதரத்தில்[2] ஸ்வேதமொன்றைத் தவிர்த்து கபோதரத்திற்குக் கூறிய மற்ற எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். வயிற்றில் நீர் சுரக்கச் சுரக்க அதை அடிக்கடி வைத்தியன் குத்தி வெளிப்படுத்தி, அவ்வியாதியைப் போக்க முயலவேண்டும்.—101.

உதகோதர சிகித்ஸை :—உதகோதரத்தில்[3] (1) கோமூத்திரம் கலந்தவையும், தீக்ஷ்ணவீர்யமுள்ளவையும், பற்பல க்ஷாரங்கள் சேர்ந்தவையும், நீர் ஸம்பந்தமான தோஷங்களை வெளிப்படுத்துங் குணமுடையவையுமான ஔஷதங்களை முதலில் பிரயோகிக்கவேண்டும். (2) தீபநீயகுணமும் கபஹரமான தன்மையுமுள்ள ஆஹாரங்களைக் கொடுத்து உபசரிக்கவேண்டும். 102, 102½.

க்ஷாரகுளிகை :—செம்மறியாட்டின் உலர்ந்த சாணத்தை யெரித்து, அதிலிருந்து எடுக்கப்படும் க்ஷாரத்தை கோமூத்திரத்தில் சேர்த்துக் காய்ச்சி, கெட்டியாக வரும் வரையில் தீயிட்டுப் பக்குவம் செய்யவும். அப்பொழுது திப்பிலி, யானைத்திப்பிலி, சுக்கு, பஞ்சலவணம், நேபாளம், சிவதைவேர், த்ரிபலை, பிரம்மதண்டு விதை, வேலிப்பருத்தி, ஸர்ஜக்ஷாரம், வசம்பு, கள்ளி,

1. பத்தகுதோதரம் — நிதாநஸ்த்தாநம் பார்க்க.
2. சித்ரோதமம் — நிதாநஸ்த்தாநம் பார்க்க.
3. உதகோதரம் — நிதாநஸ்த்தாநம் பார்க்க.

யவக்ஷாரம் இவற்றைச் சேர்த்து ஆட்டி இலந்தங் கொட்டையள வாகக் குளிகைகள் செய்து, அஜீர்ணம், சோகை, மிக விருத்தி யான உதகோதரம் இவற்றில் காடியோடு உட்கொள்ளலாம். 103—106.

பத்தோதரச் சித்ரோதரங்களில் சஸ்திரசிகித்ஸை :—இவ் வாறு முற்கூறிய ஔஷதங்களால் வியாதி தீராவிட்டால், பத்த குதோதரம், சித்ரோதரம், உதகோதரம் என்கிற இம் மூன்று ரோகங்களிலும் பிணியாளியின் பந்துக்களுடையவும், இராஜாதி காரிகளுடையவும் அனுமதி பெற்று வைத்தியன் சஸ்திரசிகித்ஸை செய்யவேண்டும். ரோகிக்கு ஸ்நேஹ - ஸ்வேதங்களைச் செய் வித்து, பத்தகுதோதரத்திலும் சித்ரோதரத்திலும் நாபிக்குக் கீழே மத்தியரேகைக்கு நான்கு அங்குலம் இடது பக்கமாக முறைப்படி நாலு அங்குலம் அளவில் சஸ்திரத்தினால் கீறவும். அந்தத் துவாரத்தின் வழியாகக் குடலை மெதுவாக வெளியில் இழுத்து, அதற்குள் சேர்ந்துள்ள மயிர்கள், அடைந்துள்ள மலங் கள், கற்கள் இவை முதலியவற்றை வெளிப்படுத்தவேண்டும். (2) நீர் சுரக்கும் சித்ரோதரத்தில் அங்குள்ள சல்யத்தை விலக்கி விட்டு, கசியும் நிணநீரைச் சமூவி சுத்தம் செய்து, அந்த துவார முள்ள விடத்தில் கட்டெறும்புகளை விட்டுக் கடித்துக்கொள்ளச் செய்து, பிறகு அவற்றின் தலைகளை விட்டு, உடலை மட்டும் கிள்ளி யெறிந்துவிடவும் ; பிறகு குடலை அதற்கியல்பான விடத்தில் அமர்த்தி, தேனையும் நெய்யையும் அவ்விடத்தில் பூசி, விரணத் தின் வெளி வாயைத் தைத்துவிடவும். கருத்த களிமண்ணையும் அதிமதுரத்தையும் கூட்டி அரைத்து, அவ்விடத்தில் லேபநம் செய்து பந்தநம் செய்து, காற்று வீசாத விடத்திலிருந்துகொண்டு பாலையே உணவாகக் கொண்டு, எண்ணெய்த் தொட்டியில் அமர்ந் திருக்கவேண்டும். 107—112.

உதகோதரத்தில் சஸ்திர சிகித்ஸையும் பத்யமும் :—உதகோ தரத்தில் வாதஹரமான தைலங்களால் அப்யங்கமும், உஷ்ண ஜலத்தினால் ஸ்வேதநமும் செய்வித்து, நாபிக்குமேல் அக்குள் வரையில் வஸ்திரங்களால் சுற்றிக் கட்டிவிட்டு, பத்தோதரச் சித் ரோதரங்களுக்குக் கூறிய விதமாய் அதேவிடத்தில் ஒரு அங் குலம் அளவு வயிற்றைக் கீண்டு, அந்த த்வாரத்தில் நாடீயந்திர மென்கிற குழலை வைத்து, வயிற்றில் சேர்ந்துள்ள நீரில் அரை வாசியை வடியச் செய்யவும். பிறகு அந்த நாடியை யெடுத்துப் போட்டு, தைலத்தினாலும் இலவணத்தினாலும் விரணத்தின் மேல் லேபநம் செய்து பந்தநமிடவும் ; அதன் மேல் வஸ்திரத் தினால் வயிற்றைச் சுற்றிக் கட்டி, பிறகு மூன்று அல்லது நான்கு தினங்கள் சிரமபரிஹாரம் செய்யப் பிணியாளிக்கு அவகாசம் கொடுத்துப் பதினாறுவது நாள்வரையில் அடிக்கடியும் சிறுகச்

சிறுக முன்போலவே நீரை வடித்து, நீர் வடிந்து வருகையில் வயிறு தளரத் தளர வஸ்திரத்தை வயிற்றின்மேல் இழுத்திழுத்துக் கட்டிக்கொண்டே வரவேண்டும். பிறகு லங்கநம் செய்வித்து, ஸ்நேஹமும் உப்பும் இல்லாத பேயாவைப் பருகக் கொடுத்து, அப்பால் ஆறு மாஸங்கள் வரையில் பாலையே உணவாக உபயோகித்து வரவேண்டும். பிறகு பால் கலந்த பேயாவை மூன்று மாஸங்கள் உட்கொண்டு, பிறகு மூன்று மாஸங்கள் வரையில் பழகிய சாமை கோத்ரவம் இத்தானியங்களாலான அன்னத்தைப் பாலுடன் மாத்திரமாவது, எலுமிச்சம்பழச் சாற்றுடனாவது, மாம்ஸரஸத்தோடாவது புஜித்துவரலாம். ஸ்நேஹத்தையும் உப்பையும் வெகு சொற்பமாக வேண்டுமானல் உபயோகிக்கலாம். இங்ஙனம் நியமங்களோடு இருந்துவந்தால் ஒரு வருஷத்தில் ஜலோதரத்தைப் போக்கிவிடலாம். விலக்க வேண்டியவைகளை நியமமாயிருந்து விலக்கியும், பத்தியமாகக் குறிக்கப்பட்டவைகளை அதிக நிர்ப்பந்தமின்றி உபயோகித்தும், குறிப்பிடப்படாதவைகளை அபத்தியமானவையென்று எண்ணி அவற்றில் ஜிதேந்த்ரியனாயிருந்தும் வரவேண்டும். 113—119½.

உதரரோகங்களின் பொதுவான தோஷமும் சிகித்ஸையும்:—உதரரோகம் அனைத்துமே பெரும்பாலும் ஸந்நிபாததோஷங்களால் உண்டாவதால், வாதாதி ஸகல தோஷங்களையும் நிவ்ருத்தி செய்யக்கூடிய எல்லாச் சிகித்ஸையும் இதிற் சிறந்ததாம். 120½.

உதரத்தில் ஜாடராக்னி மந்தப்படுதலும் அதற்கு ஹிதமான உணவும் :—தோஷங்களால் வயிறு நிரப்பப்பட்டுப் போக ஜாடராக்னி மந்தப்படுகின்றது ; ஆகையால் தீபநமாகவும் இலகுகுணமுள்ளவையுமான உணவுகளைப் பஞ்சமூலங்களைக் கூட்டிப் புஜிக்க வேண்டும் ; ஆனல், புளிப்பு, உப்பு, ஸ்நேஹங்கள், காரம் இவை சொற்பமாக இருக்கவேண்டும்.—121, 122.

உதரரோகங்களில் பொதுவான பத்தியாஹாரம் :—பசு மூத்திரத்தில் கார்நெல்லை ஊறவைத்து, அவ்வரிசியைப் பாலில் சமைத்து, யவாகுவாகச் செய்து, வேண்டியவளவு உட்கொண்டு, அனுபானமாகக் கருப்பஞ்சாற்றையும் பருகச் செய்ய, உதரரோகங்கள் நிவ்ருத்தியாய், பிரகோபித்திருந்த வாத-பித்த-கபங்களும் அதனதன் ஸ்த்தாநத்தை அடைகின்றன.—123, 124.

உதரரோகிக்கு ஆகாதவை :—அதிக உஷ்ணம், அதிக அம்லம், அதிக லவணம், ரூக்ஷம், க்ராஹி, அதிக குளிர்ச்சி, குரு இக்குணமுள்ள வஸ்துக்களும், வெல்லம், எண்ணெயிற் செய்த சாகம், ஜலபானம், இவையும், களைப்புண்டுபண்ணும் காரியமும், வழி நடப்பதும், பகல் நித்திரையும், வாஹநங்களில் செல்வதும் ஆக இவை இப்பிணியாளிக்கு ஆகா.—125, 125½.

உதரரோகங்களில் மோர் அருந்தும் முறைகள் :—(1) அதிக குழம்பாக இல்லாத மதுரமான மோர் பானம் செய்யச் சிறந்ததாகும். அதிலும் (2) வாததோஷம் அதிகரித்திருக்கையில் திப்பிலி, உப்பு இவை சேர்ந்த மோரும், (3) பித்தம் அதிகரித்திருக்கையில் மிளகுப்பொடியும் சர்க்கரையும் கூட்டிய மோரும், (4) கபம் அதிகரித்த உதரத்தில் ஓமம், இந்துப்பு, ஜீரகம், த்ரிகடு, தேன் இவற்றைக் கூட்டிய மோரும், (5) ஸந்நிபாதோதரத்தில் த்ரிகடு, யவக்ஷாரம், இந்துப்பு இவை கலந்த மோரும் சிறந்தனவாம். (6) தேன், தைலம், வசம்பு, சுக்கு, சதகுப்பி, கோஷ்டம், இந்துப்பு இவை கலந்த மோர் ப்லீஹோதரத்திற்கு ஏற்றது. (7) கொட்டைக்கரந்தை, ஓமம், இந்துப்பு, ஜீரகம் இவை சேர்ந்த மோரும், (8) திப்பிலியும் தேனும் கலந்த மோர் சித்ரோதரத்திலும், (9) த்ரிகடுகம் கலந்த மோர் உதகோதரத்திலும் ஹிதமாம். (10) சரீரத்தில் குருத்வம், அருசி, வயிற்றுப் பொருமல், அக்னிமாந்த்யம், அதிஸாரம் இவற்றாலும், வாத-கபதோஷங்களாலும் வருந்துபவருக்கும் மோர் அமுதம்போல் பிராணனைக் காக்கவல்லது. 126—129½.

உதரரோகிகளுக்கு எல்லா முறைகளிலும் பால் அநுபானம் :—எல்லா ஔஷத முறைகளையும் உபயோகிக்கும்போது பாலை அநுபானமாக உட்கொள்ள வேண்டும்; பால் எல்லாத் தாதுக்களுக்கும் வன்மையையும், தேஹத்திற்குப் பலத்தையும் கொடுக்கும்; வியாதிக்குக் காரணமான தோஷங்கள் மீண்டும் தொடர்வதைத் தடுத்துப்போடும். ஔஷதங்களால் திடம் பெற்ற சரீரத்திற்குப் பால் அமுதம் போன்றது.—130, 131.

---

## பதினாறாம் அத்தியாயம்.

### பாண்டுரோக சிகித்ஸை.

இனி பாண்டுரோக சிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

பாண்டுவில் முதலில் உபயோகிக்கும் ஔஷதங்கள் :— பாண்டுரோகி முதலில் கல்யாணக க்ருதத்தையாவது,[1] பஞ்சகவ்ய க்ருதத்தையாவது[2], மஹாதிக்தக க்ருதத்தையாவது,[3] ஆரக்வதாதிகணக்வாதத்தையாவது பானம் செய்யலாம்.—1.

---

1. கல்யாணக க்ருதம்—உத்தர ஸ்த்தாநத்தில் உந்மாதப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.

2. பஞ்சகவ்ய க்ருதம் — உத்தர ஸ்த்தாநத்தில் அபஸ்மார ப்ரதிஷேதாத்தியாயத்தில் கூறப்படுவது.

3. மஹாதிக்தக க்ருதம் — குஷ்ட சிகித்ஸையில் கூறப்பட்டது.

தாடிமாதி க்ருதம் :—ஒரு ஆடகம் ஜலத்தில் இருபது பலம் க்ருதமும், அதில் மாதளம் வித்து அரைச் சேர், கொத்தமல்லி விதை கால் சேர், சித்திரமூலமும் சுக்கும் வகைக்கு ஒரு பலம், திப்பிலி அரைப்பலம் இவற்றை இடித்துக் கல்கமாகச் சேர்த்து, பக்குவம் செய்தெடுத்த க்ருதம் இருதயரோகம், பாண்டு, அர்சஸ், ப்லீஹரோகம், வாதரோகங்கள், கபரோகங்கள், ச்வாஸ-காஸங்கள் இவற்றை நிவ்ருத்தி செய்யும்; தீபந குணமும், அடைபட்டுள்ள அபாந வாயுவை வெளிப்படுத்தும் தன்மையும் இதற்கு உண்டு; பிரஸவத்தில் அதிக தொந்தரவு அநுபவிப்பவருக்கும், மலட்டு ஸ்த்ரீகளுக்கும் இந்த க்ருதம் சிரேஷ்டமானது. 2—4.

பாண்டுவில் ஸ்நேஹந சோதநாதி முறைகள் :— 1) முற்கூறியவாறு ஸ்நேஹநம் செய்தபிறகு தீக்ஷ்ணகுணமுள்ள ஔஷதங்களால் வமநம் செய்விக்கவேண்டும். (2) மீண்டும் ஸ்நிக்த்தமாகச் செய்து, பசு மூத்திரம் கலந்த பாலால் அல்லது ஒன்றுங் கலவாத பாலால் அநேக முறை சோதநம் செய்விக்கவேண்டும். (3) ஒரு பலம் நேபாளவித்தின் இளஞ்சூடான இரஸத்தில் நான்கு பலம் பெருங்குமிழனை ஊறப்போட்டு, பாண்டுரோகிக்குக் கொடுக்கலாம். (4) அவ்விதமே நேபாளரஸத்தில் நான்கு பலம் திராக்ஷையை இடித்து ஊறவைத்து உபயோகித்தாலும் பாண்டு ரோகம் தீரும். (5) கடுக்காயைப் பசுமூத்திரம் விட்டு ஆட்டியெடுத்தும் உபயோகிக்கலாம். (6) த்ரிபலையைப் பசுமூத்திரத்தில் பக்குவம் செய்தெடுத்து உட்கொள்ளலாம். (7) பிரம்மதண்டு விதை, வெண்சிவதை, கருஞ்சிவதை- தேவதாரு, சுக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, பசுமூத்திரம் விட்டு ஆட்டி, அம்மூத்திரத்திலேயே கரைத்துக் கொதிக்க வைத்தும் பருகலாம். (8) பிரம்மதண்டு வித்தை முதலிய முற்கூறிய சரக்குகளையே சேர்த்துக் காய்ச்சி, ஆகவே தோஷங்களை அநுலோமநமாக வெளிப்படுத்து மியல்புடைய பாலையாவது பானம் செய்யலாம். (9) கோமூத்திரத்தில் ஏழு நாட்கள் ஊறவைத்தெடுத்த அயபஸ்மத்தைப் பாலின் அநுபானத்தோடாவது உட்கொள்ளலாம். அவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு பால் கலந்த அல்லது இனிய மாம்ஸ ரஸம் கலந்த உணவைப் புஜிக்கலாம். (10) இவ்வௌஷதப் பிரயோகங்களால் வமந-விரேசந மூலமாய் சுத்தியடைந்த பிறகு கடுக்காயின் சூர்ணத்தைத் தேனிலும் நெய்யிலும் கலந்து உட்கொள்ளவேண்டும். 5—9½.

விசாலாதி சூர்ணம் :—பேய்த்தும்மட்டி, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, கோஷ்டம், தேவதாரு, வெட்பாலரிசி இவை வகைக்குக் கால் பலம்; பெருங் குரும்பை அரைப் பலம்; அதிவிடயம் அரைக்கால் பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து வெந்நீருடன் உட்கொண்டு, அநுபானமாகச் சிறிது தேனையும் உப

யோகிக்கவும். இது பாண்டுரோகம், ஜ்வரம், தேஹ அழற்சி, காஸம், ச்வாஸம், அரோசகம், குல்மம், வயிற்றுப் பொருமல், ஆமவாதம், இரத்த-பித்தம் இவற்றைப் போக்கும். 10—12.

**வாஸாதி க்வாதம்** :—ஆடாதோடை, சீந்தில், த்ரிபலை, கடுகரோஹிணி, நிலவேம்பு, வேம்பு இவற்றைக் கஷாயமிட்டு, சிறிது தேன் கலந்து உட்கொள்ள பாண்டுரோகம், இரக்த-பித்தம், காமாலை இவை தீரும்.—13.

**நவாயஸ சூர்ணம்** :—த்ரிகடு, சித்திரமூலம், வாய்விடங்கம், த்ரிபலை, கோரைக்கிழங்கு இவை ஸம பாகம் ; இவ்வனைத்துக்கும் ஸமயெடை அயபஸ்மம் ; இவற்றின் சூர்ணத்தை மோர், தேன், நெய், இளஞ்சூடான ஜலம் இவற்றில் ஏதேனும் ஒன்றோடு உபயோகிக்க, காமாலை, பாண்டு, இருதயரோகம், குஷ்டம், அர்சஸ், மேஹரோகங்கள் இவை தீரும்.—14, 14½.

**சுண்ட்யாதி குளிகை** :—சுக்கு, மண்டூரம், எள்ளு, வெல்லம் இவை ஸம பாகம் ; திப்பிலி இரண்டு பாகம் ; இவ்வனைத்தையும் சேர்த்துக் குளிகைகளாகச் செய்து, பாண்டுரோகிக்குக் கொடுக்கலாம்.—15½.

**மண்டூர வடகம்** :—ஸ்வர்ண மாக்ஷிகம், மரமஞ்சளின் தோல், சவியம், கிரந்திதகாரம், தேவதாரு, வ்யோஷாதி லௌஹத்திற் கூறியமுதல் ஒன்பது சரக்குகள், ஆக இவற்றைச் சம பாகமெடுத்துச் சூர்ணம் செய்துகொள்ளவும் ; அதற்கு இரு மடங்கு மண்டூரத்தையும் மைபோல் மிக்க மிருதுவாகச் சூர்ணம் செய்துகொள்ளவும்[1]. இவ்வனைத்துக்கும் எட்டு மடங்கு பசுமூத்திரத்தில் இவ்விரண்டு சூர்ணங்களையும் தனித் தனியே சேர்த்து பக்குவம் செய்து, வடகங்களாகச் செய்யும் பக்குவத்துக்கு வரும்போது இறக்கிக் குளிகைகளாகச் செய்து உபயோகித்துக்கொண்டு, மோரும் அன்னமும் பத்தியமாக உட்கொள்ளவேண்டும். 'மண்டூரவடகங்கள்' எனப்படும் இவை பாண்டுரோகிகளுக்குப் பிராணனைக் கொடுக்கக் கூடியவையாம். மேலும் குஷ்டங்கள், அஜீர்ணம், நீர்க்கோவை, ஊருஸ்தம்பம், அரோசகம், அர்சஸ், காமாலை, மேஹரோகங்கள், ப்லீஹவிருத்தி இவற்றை நிவ்ருத்திசெய்யும். 16—19½.

**மண்டூராதி சூர்ணம்** :—முன் யோகத்திற் கூறிய ஸ்வர்ண மாக்ஷிகம் முதலிய சரக்குகளும், சிலாஜதுவும், வெள்ளியும், இரும்புக் கிட்டமும் தனித் தனியே அவ்வைந்து பலம் ; சித்திரமூலம், த்ரிபலை, த்ரிகடு, வாய்விடங்கம் இவை ப்ரத்தியேகம் ஒவ்வொரு

1. ஸ்வர்ணமாக்ஷிகம், மண்டூரம் இரண்டையும் முறைப்படி சுத்தி செய்து, பஸ்மங்களாகவும் செய்து மருந்தில் உபயோகிப்பது முறை. பிறகுகூட லோஹங்களும் தாதுக்களும் ஔஷதங்களில் கூறப்படுகையில் அவற்றையும் சுத்தி மாரணங்கள் செய்தே உபயோகிக்கவேண்டும்.

பலம் ; இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டு பலம் சர்க்கரையும் கலந்து, தேனில் குழைத்து உட்கொள்ள, பாண்டுரோகம், விஷம், காஸம், க்ஷயம், விஷமஜ்வரம், குஷ்டங்கள், அஜீர்ணம், மேஹ ரோகம், சோகை, ச்வாஸம், அரோசகம் இவையும், விசேஷமாக அபஸ்மாரம், காமாலை அர்சஸ் இவையும் நிவ்ருத்தியாம். 20-22½.

சிலாஜத்வாதி குளிகை :—குடசப்பாலைப்பட்டை, த்ரிபலை, வேம்பு, பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, சுக்கு இவற்றை வகைக்கு எட்டுப் பலமாக எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்து, எட்டில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி வடிக்கட்டி, அதில் எட்டுப் பலம் சிலாஜதுவை பத்து முறையாவது, அல்லது அதற்கு இரண்டு மூன்று மடங்கு அதிகத்தடவையாவது பாவனை செய்யவும். பிறகு அதே அளவாக வெள்ளைச்சர்க்கரையையும், வகைக்கு ஒவ்வொரு பலம் வீதம் மூங்கிலுப்பு, திப்பிலி, கடுக்காய், கர்க்கடக ச்ருங்கி, கண்டங்கத்திரிச்காய்-வேர்கள், த்ரிஜாதகம் இவற்றையும் சேர்த்து முறைப்படி சூர்ணம் செய்து, மூன்று பலம் தேன் சேர்த்து ஆட்டியெடுத்து, கால் கால் பலமளவான குளிகைகளாகச் செய்து உணவுண்பதற்கு முன்போ ஆஹாரத்திற்குப் பிறகோ அக்குளிகைகளைப் புஜித்துவிட்டு, மாதளம்பழரஸம், பால், ஏதேனும் பக்ஷியின் மாம்ஸரஸம், ஜலம், ஸுரையென்னும் மது, ஆஸவங்கள் இவற்றில் ஏதேனுமொன்றை அநுபானமாய் உட்கொள்ளலாம. இவ்வௌஷதமானது பாண்டுரோகம், குஷ்டம், ஜ்வரம், ப்லீஹவ்ருத்தி, தமகச்வாஸம், அர்சஸ், பகந்தரம், இருதய ரோகங்கள், மூத்திரரோகங்கள், துர்க்கந்தமான சுக்ரம், அக்னி வைஷம்யம், க்ஷயம், க்ருத்ரிமவிஷம், மஹோதரம், காஸம், பெரும்பாடு, இரக்த-பித்தம், சோகை, குல்மம், தொண்டையைப் பற்றிய கோளாறுகள், மேஹரோகங்கள், அண்டவீக்கம், தலைச் சுற்றல் இவற்றையும் ஸந்நிபாதம் முதலிய ஸகலதோஷங்களையும் தீர்க்கும் சிறந்த ஔஷதம். 23—28½.

திராக்ஷாதி லேஹ்யம் :—திராக்ஷை ஒரு பிரஸ்த்தம், திப்பிலி ஒரு பிரஸ்த்தம, சர்க்கரை ஐம்பது பலம், அதிமதுரம் இரண்டு பலம், சுக்கும் மூங்கிலுப்பும் அதே அளவு ; இவற்றில் சூர்ணம் செய்துகொள்ள வேண்டியவைகளைச் சூர்ணித்து, ஒரு திரோணம் நெல்லிக்கனிரஸத்தில் சேர்த்து லேஹ்யமாகக் காய்ச்சி ஆறியபிறகு, ஒரு பிரஸ்த்தம் தேன் கூட்டி, கால்பலமளவில் சாப்பிடலாம. இந்த லேஹ்யம் ஹலீமகம், பாண்டு ரோகம், காமாலை இவற்றைப் போக்கும். 29—31.

---

பாண்டுவில் ஸாமான்ய-விசேஷசிகித்ஸைகள்:—இலகு பஞ்சமூலகஷாயம் பாண்டுரோகிகளுக்கும், காமாலையினால் வருந்துபவருக்கும் பான-போஜனங்களில் உபயோகிக்கச் சிறந்த ஔஷதம். அங்ஙனமே திராக்ஷாரஸமும், நெல்லிக்கனியின் இரஸமும்

அப்பிணியாளருக்கு உபயோகமானவையாம். இது பாண்டுரோகத்திற்குப் பொதுவான சிகித்ஸை. வைத்தியன் விஷயமறிந்து தோஷ நிலைமைகளையும், பிணியாளியின் தேஹ பலாபலங்களையும் பகுத்தறிந்து அவரவருக்கு ஏற்ற சிகித்ஸையைப் பிரயோகிப்பானாக. (1) வாதபாண்டுவில் ஸ்நேஹஸம்பந்தமான சிகித்ஸையையும், (2) பித்தபாண்டுவில் திக்தரஸமும் சீதவீர்யமுமுள்ள சரக்குகளால் சிகித்ஸையையும், (3) கபபாண்டுவில் கடுரஸமும் ரூக்ஷகுணமும் உஷ்ணவீர்யமுமுள்ள வஸ்துக்களால் சிகித்ஸையையும், (4) ஸந்நிபாதபாண்டுவில் தகுந்தாற்போல மிச்ர சிகித்ஸையையும் செய்யவேண்டும். 32—34.

பாண்டுவில் ம்ருத்திகையை வெளிப்படுத்துவது முதலியன :- (1) பாண்டுரோகத்தில் முதலில் தீக்ஷ்ணமான சோதனௌஷதங்களால் சரீரத்தினின்றும் ம்ருத்திகையை வெளிப்படுத்தவேண்டும். (2) ம்ருத்திகை வெளியாய் குடல் சுத்தமானபின், பலமுண்டுபண்ணும் க்ருதங்களை உபயோகிக்கவேண்டும்.—35.

பாண்டுவில் சில க்ருத முறைகள்:—(1) வியோஷாதி க்ருதம்: த்ரிகடு, பில்வவேர், மஞ்சள், மரமஞ்சள், த்ரிபலை, சாறணை, கோரைக்கிழங்கு, அயபஸ்மம், வட்டத்திருப்பி, வாய்விடங்கம், தேவதாரு, தேள்கொடுக்குப்பூண்டு, கண்டுபாரங்கி இவற்றின் கஷாயத்தில் பால் கூட்டி, க்ருதம் பக்குவம்செய்து உபயோகிக்க ம்ருத்திகையினாலுண்டான எல்லாக் கோளாறுகளும் நன்கு நிவ்ருத்தியாகும். (2) நாககேஸரம், அதிமதுரம், திப்பிலி, அறுகம்புல் இவற்றின் கஷாயத்தில் பாலையும் கூட்டி, அதில் க்ருதம் பக்குவம் செய்ய, அதுவும் முன் க்ருதத்தைப் போலவே குணம் செய்யும்.—36, 37½.

பாண்டுவில் ம்ருத்திகாதோஷங்களுக்கு ம்ருத்திகை முதலியதே பரிஹாரம் :—குடலில் பலவாறுகச் சேர்ந்துண்டான மண்ணைத் திரட்டி வெளிப்படுத்த வாய்விடங்கம், சித்திரமூலம், வேப்பம்பூ இவற்றின் கஷாயத்திலாவது, வட்டத்திருப்பிக் கஷாயத்திலாவது, பெருங்குரும்பைக் கஷாயத்திலாவது பாவனை செய்தெடுத்த ம்ருத்திகையையே உட்கொள்ளச் செய்யலாம். மண்ணுக்குள்ள வெவ்வேறு பேதங்களுக்கிணங்க பலவாறு கோளாறடைந்த வாதாதிகளின் நிலைமைகளை யுணர்ந்து, அததற்கேற்ற ஔஷதத்தையும் பிரயோகிக்கவேண்டும்.—38, 39.

## காமலா சிகித்ஸை.

பாண்டுவில் சேர்ந்துள்ள காமாலைக்குச் சிகித்ஸை :—பாண்டுவில் காமாலையும் உண்டானால், பித்தஹரமான ஔஷதத்தை யுபயோகிக்கவேண்டும்; ஆனால பாண்டுரோகத்தில் அதனால் விரோதமேற்படாதபடி அதைப் பிரயோகிக்க வேண்டும்.—39½.

பத்யா க்ருதம் :—நூறு கடுக்காய்களைக் கஷாயமிட்டு, அதில் நூறு கடுக்காய்ப்பூக்களை இடித்துக் கல்கமாகச் சேர்த்து, அதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் பக்குவம் செய்யவும். இது குல்மரோகம், காமாலை, பாண்டுரோகம் இவற்றைப் போக்கவல்லது.—40¼.

காமாலையில் உபயோகிக்கக்கூடிய சில முறைகள் :—(1) ஒரு பலம் சரக்கொன்றையைக் கருப்பஞ் சாற்றுடனாவது, நிலப்பனங் கிழங்கின் இரஸத்துடனாவது, நெல்லிக்கனி ஸ்வரஸத்துடனாவது கலந்து, த்ரிகடுவையும் கூட்டி உட்கொள்ள காமாலை தீரும். (2) நேபாளவித்தின் கல்கத்தையாவது இரண்டு பலம் குளிர்ந்த ஜலத்தின் அநுபானத்துடன் உட்கொள்ளலாம். (3) சிவதை வேர்ச் சூர்ணத்தையாவது தேனில் அல்லது த்ரிபலா கஷாயத்தில் கூட்டி யுபயோகிக்கலாம். (4) த்ரிபலா கஷாயத்தையாவது, (5) சீந்திற்கொடிக் கஷாயத்தையாவது, (6) மரமஞ்சள் கஷாயத்தை யாவது, (7) வேப்பம்பட்டைக் கஷாயத்தையாவது தேன் கூட்டிப் பிரதிதினமும் காமாலையில் கொடுக்கலாம். 41—43½.

தார்வ்யாத்யஞ்ஜநம் :—மரமஞ்சள், மனச்சிலை, கடுக்காய் இவற்றைத் தேய்த்து நேத்திரங்களில் அஞ்ஜநமாகப் பிரயோகிக்கலாம். இது காமாலையைப் போக்கவல்லது.—44.

காமாலையில் பித்தஹர-மலரஞ்ஜந சிகித்ஸைகள் :—காமாலையில் எள்ளுப்பிண்ணாக்கைப்போல மலம் வெளியானால் வயிற்றில் கபத்தினால் மார்க்கங்கள் அடைபட்டு பித்தம் தடுக்கப்பட்டிருக்கும்; அப்பித்தத்தை கபஹர ஔஷதங்களால் விலக்க வேண்டும். ரூக்ஷம், சீதம், குரு, மதுரம் இக் குணமுள்ள மருந்துகளாலும், அதிக வியாயாமத்தினாலும், பலமொடுங்கும்படியான வேலைகளைச் செய்வதாலும், வாயு பிரகோபமடைந்து கபத்துடன் கூடி, பித்தத்தை அதன் மார்க்கத்திலிருந்து வேறு தாதுக்களில் பரவுமாறு தள்ளினால் அப்பொழுது, அவனது கண்களும், மூத்திரமும், சர்மமும் மஞ்சள் நிறமாகும்; மலம் வெளுக்கும்; வயிற்றில் பொருமலும் இரைத்தலும் உண்டாகும்; இருதயம் பாரமாகத் தோற்றும்; பலக்குறைவு, அக்னிமாந்தியம், பக்க சூலை, விக்கல், ச்வாஸம், அரோசகம், ஜ்வரம் இவற்றால் பித்தம் சாகைகளைப்[1] பற்றி, க்ரமமாகச் சரீரமெங்கும் பற்றிவிடும். அந்நிலைமையில் பிணியாளிக்கு மயில், தித்திரி யென்னும் பக்ஷி, கள்ளிக்காக்கை இவற்றின் மாம்ஸரஸத்தை ரூக்ஷமாகவும், கடுரஸ-அம்லரஸங்கள் உள்ளதாகவும் பக்குவம் செய்து கொடுக்கவும். உலர்ந்த முள்ளங்கியினாலான யூஷத்தையும், கொள்ளின் யூஷத்தையும் கொடுக்கலாம். புளிப்பு, காரப்பு, உப்பு இச்சுவைகளையும், தீக்ஷ்ணத் தன்மையையும் அதிகமாயுடைய உணவை அதிக உஷ்ணமாகவே உபயோகிக்கலாம். த்ரிகடுவைக் கொடிமாதளைச்-

1. சாகைகள் — முதற் பாகம் பார்க்க.

சாற்றில் கலந்தும் உட்கொள்ளலாம். அதனுல் பித்தம் அதன் ஆசயத்தில் வந்துசேர்ந்து, அதனுல் மலமும் இயற்கை மஞ்சள் நிறம் பெற்று, வாயுவும் வயிற்றுப்பொருமலும் இரைத்தல் முதலிய உபத்திரவங்களும் சமநமடையும். பிணியாளிக்கு உபத்திரவங்கள் நீங்கிய பிறகு காமாலையிற் கூறியுள்ள முறைப்படி உபசாரம் செய்யவேண்டும். 45—51½.

கும்பகாமலாவில் சிலாஜது முதலிய யோகங்கள் :—கும்பகாமலா என்கிற கடுங்காமாலையில் (1) சிலாஜதுவைப் பசுமூத்திரத்தோடு ஒரு மாஸம் உட்கொள்ளலாம். (2) பொன்னிமிளையையாவது, (3) வெள்ளியின் கிட்டத்தையாவது அங்ஙனமே பிறகு ஒரு மாஸகாலம் உபயோகிக்கலாம்.—52½.

ஹலீமகத்திற் செய்யவேண்டிய சிகித்ஸாக்ரமம் :—ஹலீமக ரோகியைச் சீந்திற்கொடி ஸ்வரஸத்திலும் பாலிலும் பக்குவம் செய்த எருமைநெய்யினுல் ஸ்நிக்த்தமாகச் செய்யவேண்டும். பிறகு சிவதைவேரின் சூர்ணத்தை நெல்லிக்கனி ஸ்வரஸத்தோடு உட்கொண்டு விரேசநமான பிறகு, பித்தத்தையும் வாதத்தையும் நிவ்ருத்திசெய்யும் மதுரமான ஆஹாரத்தைப் புஜிக்கவும். முற்கூறிய திராக்ஷாதி லேஹ்யத்தையும், மதுரவஸ்துக்களைச்சேர்த்து பக்குவம் செய்த க்ருதங்களையும் உட்கொள்ளலாம். பிராணுதாரமான க்ஷீரவஸ்திகளையும் அநுவாஸந வஸ்திகளையும் பிரயோகிக்கலாம். திராக்ஷாரிஷ்டம் முதலியதையும் முறைப்படி ஜாடராக்னி விருத்தியாவதற்காக உட்கொள்ளலாம். காஸரோக சிகித்ஸையிற் கூறிய அபயாதிலேஹ்யத்தையும் உட்கொள்ளலாம். திப்பிலி, அதிமதுரம், சிற்றுமுட்டி இவற்றையும் அந்தந்த தோஷங்கள், சரீரபலம் இவற்றின் நிலைமைகளுக்கேற்றவாறு உபயோகிக்கலாம். 53—56½.

பாண்டுரோகங்களில் ச்வயது சிகித்ஸை :—திறமையுள்ள வைத்தியன் ச்வயது சிகித்ஸையை விவரிக்கும் அடுத்த அத்தியாயத்திற் கூறப்படும் சிகித்ஸாகிரமத்தையும் பாண்டுரோகங்களில் செய்வானுக.—57.

---

## பதினேழாம் அத்தியாயம்.

### ச்வயது சிகித்ஸை.

இனி ச்வயது சிகித்ஸையை விவரிக்கும் அத்தியாயம் கூறப்படுகிறது :—

ஸந்நிபாத சோதை முதலியவற்றில் முதலிற் செய்யவேண்டிய சிகித்ஸைகள் :—சோதையென்னும் வீக்கமானது எல்லாத் தோஷங்களைப்பற்றியதானுலும், ஸர்வசரீரத்தைப்பற்றியதானுலும், ஆமதோஷத்துடன் கூடியிருந்தாலும் முதலில் அதற்கு

லங்கந சிகித்ஸை செய்து, அப்பால் இலகுவான ஆஹாரத்தைப் புஜிக்கவேண்டும். (1) பிறகு சுக்கு, அதிவிடயம், தேவதாரு வாய்விடங்கம், வாலுழுவை, மிளகு இவற்றின் சூர்ணத்தை இளஞ்சூடான ஜலத்துடன் உட்கொள்ளலாம். (2) அல்லது கடுக்காய், சுக்கு, தேவதாரு, சாறடை இவற்றின் சூர்ணத்தை யாவது சிறிது உஷ்ணமான ஜலத்துடன் சாப்பிடலாம். (3) அதிக தோஷமுள்ள ச்வயதுரோகி முன் அத்தியாயத்திற் கூறிய நவா யஸசூர்ணத்தையாவது உபயோகிக்கலாம். (4) தோஷங்களைச் சுத்திசெய்வதற்காகக் கடுக்காய்களைப் பசுமூத்திரத்துடன் புஜிக் கலாம். (5) கடுகரோஹிணி, சிவதைவேர், அயம், த்ரிகடு இவற் றையாவது த்ரிபலா கஷாயத்தோடு உட்கொள்ளலாம். (6) மஹி ஷாக்ஷிகுக்குலுவையாவது, (7) சிலாஜதுவையாவது த்ரிபலா கஷாயத்துடன் பருகலாம். 1—3½.

சோதையில் மந்தாக்னி முதலியதைப் போக்கும் முறைகள் :- மந்தமான ஜாடராக்னியுடையவனாகவும், ஆமமாயும் குருவாயும் உடைந்து அல்லது கட்டிப்போனதாயுமுள்ள மலத்தை விஸர்ஜ னம் செய்பவனுமான பிணியாளி (1) ஸௌவர்ச்சலவணம், த்ரிகடு, தேன் இவற்றை மோருடன் பருகலாம். (2) அல்லது வெல்லங் கலந்த கடுக்காயையாவது மோரின் அநுபானத்தோடும், (3) அங் ஙனமே சுக்கு-வெல்லத்தையாவது உபயோகிக்கலாம் —4, 5.

குடார்த்ரகாதி பிரயோகம் :—(1) இஞ்சியையும் வெல்லத் தையும் ஸமமெடை சேர்த்து முதல் நாள் அதை அரைப் பலம் அளவில் ஆரம்பித்து, தினமொன்றுக்கு அரைப்பலம் வீதம் அதி கப்படுத்தி யுபயோகிக்கவும். ஆனால் ஐந்து பலத்திற்குமேல் அதிகப்படுத்தக்கூடாது. இதற்கு யூஷம், பால், மாம்ஸரஸம் இவற்றையே உணவாகக் கொண்டு, ஒரு மாஸகாலம் உபயோகிக்க வேண்டும். இம்முறை குல்மம், உதரரோகங்கள், அர்சஸ், ச்வ யது, பிரமேஹம், ச்வாஸம், ப்ரதிச்யாயம், அலஸகம், அஜீர்ணம், காமாலையுடன் கூடிய சோதை, மனோவியாதிகள், காஸம், கபப் பிரகோபம் இவற்றைப் போக்கும். (2) இஞ்சி, சுக்கு இவற்றின் கல்கஸ்வரஸங்களிலும், பாலிலும் நெய் சேர்த்து பக்குவம் செய்து உபயோகிக்க ச்வயது, தும்மல், உதரரோகங்கள், அக்னிமாந்தியம் இவையும் நிவ்ருத்தியாம். 6—8.

சோதையில் ஆமம் நீங்கிய நிலைமைகளுக்கு சிகித்ஸை :— ஆமதோஷம் நீங்கி, மலமும் கட்டிய சோதையில் (1) த்ரிகடு, சிவதைவேர், நேபாளம், சித்திரமூலம் இவற்றால் பக்குவமான பாலைப் பருகலாம். (2) பசுவின் சிறுநீரையாவது, (3) எருமை யின் சிறுநீரையாவது பாலுடன் பருகியவாறு பாலையே உணவாக வும் உபயோகிக்கலாம். (4) ஒட்டகத்தின் பாலையாவது ஏழு நாட்கள் அல்லது ஒருமாஸம் பருகலாம்.—9, 10.

யவாநிகாதி க்ருதம் முதலியன :—(1) குராசாணியோமம், யவக்ஷாரம், ஓமம், பஞ்சகோலம், மிளகு, மாதளம்பழம், வட்டத்திருப்பி, நெற்பொரி, புளிவஞ்சி, பில்வப்பிஞ்சு இவற்றை வகைக்குக் கால் பலமாக ஒரு ஆடகம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, அதில் ஒரு பிரஸ்த்தம் நெய் பக்குவம் செய்யவும். இது சோதை, அர்சஸ், குல்மம், மேஹம் இவற்றைப் போக்கும். (2) சித்திரமூலப்பொடி சேர்த்த பாலாலாகிய தயிரிலிருந்து எடுத்த க்ருதத்தைச் சித்திரமூலம் சேர்த்து மீண்டும் பக்குவம் செய்து, அதைத் அதேவிதத் தயிரைக் கடைந்தெடுத்த மோரின் அநுபானத்தோடு பருக, அதே குணம் உண்டாகும். வைத்தியன் தாங்வந்தரக்ருதம், மஹாதிக்தகக்ருதம், கல்யாணகக்ருதம், அபயாக்ருதம் இவற்றில் ஒன்றையும் நிலைமையறிந்து பிரயோகிக்கலாம். 11—13½.

தசமூலாதி லேஹ்யம் :—ஒரு ஆடகம் தசமூல கஷாயத்தில் நூறு கடுக்காய்களைச் சமைத்து, அதில் நூறு பலம் வெல்லம் சேர்த்து லேஹ்யபாகமாகச் செய்து, த்ரிஜாதகம், த்ரிகடு, சிறிது யவக்ஷாரம் இவற்றைச் சூர்ணம் செய்து கலந்து, ஆறியபிறகு அரைப் பிரஸ்த்தம் தேன் கூட்டி யுபயோகித்தால் மிக விருத்தியடைந்த சோதை, ஜ்வரம், மேஹம், குல்மம், உடலிளைப்பு, ஆமவாதம், அம்லபித்தம், இரத்த-பித்தம், நிற மாறுபாடு, மூத்திரதோஷம், வாததோஷம், சுக்ரதோஷம், ச்வாஸம், அரோசகம், ப்லீஹரோகம், விஷோதரம் இவை தீரும். 14—16.

ச்வயதுவில் ஹிதமான அன்ன-பானங்கள் :—(1) தசமூல கஷாயத்திற் பக்குவம் செய்து பழகிய யவதானியத்தை, (2) அல்லது அவ்வித சம்பா அன்னத்தை உப்பும் ஸ்நேஹமும் மிகச் சொற்பம் கலந்து, சொற்ப அளவில் ச்வயதுரோகி உட்கொள்வது நலம். (3) யவக்ஷாரம், த்ரிகடு இவற்றைக் கூட்டிய பயற்றங் கஞ்சி, (4) கொள்ளுக்கஞ்சி, (5) திப்பிலிப்பொடி சேர்த்த ஜாங்கல மாம்ஸரஸம், (6) அல்லது திப்பிலி சேர்த்த ஆமை-உடும்பு-முள்ளம்பன்றி இவற்றின் மாம்ஸரஸம்; இவைகளோடு போஜனம் செய்யலாம். (7) புளிப்பில்லாத மந்தமென்கிற பானமும், ஔஷதங்கள் சேர்த்த மத்யங்களும் பருக உபயோகமானவை. (8) ஜீரகம், கச்சோரம், ஜீவந்தி, ஓமம், தாமரைக்கிழங்கு, சித்திரமூலம், பில்வப்பழச் சோறு, யவக்ஷாரம், புளி இவற்றை வகைக்குக் கோலப்பிரமாணமெடுத்து, பேயா என்கிற திரவாஹாரமாகச் செய்து, நெய் தைலம் இவற்றால் தாளித்து உபயோகிக்க, சோகை, அதிஸாரம், இருதயரோகம், குல்மம், அர்சஸ், அக்னிமாந்த்யம், மேஹம் இவற்றில் ஹிதமானது. (9) வட்டத்திருப்பி, பஞ்சகோலம் இவற்றையும் கோலப் பிரமாணம் சேர்த்துச் செய்த பேயாவும் அதே குணங்களை உடையது. 17—21.

**சோதையில் உபயோகமான தைல-லேப-ஸ்நானுதிகள் :—** (1) கல்மாப்பட்டை, கோஷ்டம், மாசிப்பத்திரி, அரேணுகம், அகில்பட்டை, தாமரைக்கிழங்கு, ஸாள தேவதாருப்பட்டை, புலிநகிர், நாகப்பூ, தேவதாரு, ஞாழல், ஜடாமாம்ஸி, திப்பிலி, சாமை, வாஸனைப்புல், வெட்டிவேர், சதுர்ஜாதகம், தாளிஸப்பத்திரி, கோரைக்கிழங்கு, மாவிஞ்சி இவற்றைச் சேர்த்து ஸ்நானம் செய்வதற்குத் தைலத்தையும், பூசித் தேய்க்க லேபநத்தையும் பக்குவம் செய்து கொள்ளலாம். (2) வேப்பிலை, சாறணை, பச்சிலை, எருக்கிலை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்திலுவது ச்வயதுரோகி ஸ்நானம் செய்யலாம். 22—24.

**ஏகாங்க சோதைகளில் லேபநங்கள் :—** ஏதேனும் ஒரு அவயவம் வீங்கியிருந்தால் (1) சாறணை, அலரிவேர், பலாசம்பட்டை; (2) பேய்த்தும்மட்டி, த்ரிபலை, வெள்ளிலோத்தி, நளியென்கிற கந்தத்திரவ்யம், தேவதாரு ; (3) கண்டங்கத்திரி, புடலம் வேர், திப்பிலி, கல்லுருவி, சேம்பு ; (4) பெருங்குன்றுமணி, குங்கிலிய மாப்பட்டை, ஈச்வர மூலி, எலிச்செவிப் பூண்டு ; (5) வ்ருத்தி, ருத்தி, ஆமணக்கு ; இம்முறைகளுள் ஏதேனும் ஒன்றை மிருது கல்கமாக அரைத்துக் காய்ச்சி, இளஞ்சூடாகச் சோதையில் லேபநமாக உபயோகிப்பது நலம். 25—26½.

**வாதசோதையில் சிகித்ஸை :—** பிறகு வாயுவினுலுண்டான ச்வயதுவில் அரை மாஸ காலம் சிவதை வேரையும் ஆமணக்கெண்ணெயையும் உட்கொள்ளலாம். அபானவாயு, மலம் இவை மிகக் கட்டியிருந்தால் சிவதைவேர்-ஆமணக்கெண்ணெய்களைப் பாலிற் கூட்டி, அல்லது மாம்ஸரஸத்துடன் கலந்து, போஜனத்திற்கு முன்பு உட்கொள்ளலாம். வாதஹரமான ஸ்வேதங்களையும் அப்யங்கங்களையும் பிரயோகிக்கலாம். வீக்கம் ஏதேனும் ஒரு அவயவத்தைப்பற்றியிருந்தால், கொடிமாதளை, அகில், சுக்கு, கண்டங்கத்திரி, தேவதாரு இவற்ருல் லேபநமிடலாம். 27—29.

**பித்தசோதையில் சிகித்ஸை:—** பித்தஸம்பந்தமான சோதையில் திக்தகக்ருதத்தைப் பருகலாம். ந்யக்ரோதாதி கணச்சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தையாவது உட்கொள்ளலாம். நாவறட்சி, தேஹ அழற்சி இவ்வுபத்திரவங்களோடு கூடிய சோதையில் பாலைப் பருகலாம் ; குளிர்ச்சியான லேபநங்களும் அப்யங்கமும் நன்மை செய்யக்கூடியவையே.—30.

**படோல மூலாதி க்வாதம் :—** பேய்ப்புடல் வேர், கொன்றை, அதிமதுரம், கடுகரோகிணி, கடுக்காய், தேவதாரு, மரமஞ்சள், தாமரைக்கிழங்கு, நேபாளம், பேய்த்துமட்டி, நீர்வஞ்சி, திப்பிலி இவற்றைக் கஷாயம் காய்ச்சி, நெய் கூட்டிப் பருக தேஹத்தினுள் உண்டான அழற்சி, நாவறட்சி, தலைச்சுற்றல், ஸன்னிபாதக்குறி

கள், விஸர்ப்பம், சோகை, ஸாதாரண தேஹதாபம், விஷமஜ்வரங்கள் இவை நிவ்ருத்தியாகும்.—31, 32.

கபசோதையில் சிகித்ஸை :—கபத்தினுலுண்டான சோதயில் ஆரக்வதாதி கணச்சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தைப் பருகலாம்.—32½.

சோதையில் ஸ்ரோதோ பந்தாதிகளுக்குப் பரிஹாரங்கள்:—ஸ்ரோதஸ்ஸுகள் அடைபடுதல், அக்னிமாந்த்யம், அரோசகம் இவை யேற்பட்டால் ஆமாசயம் முதலியதை அமைதியாக வைத்து, க்ஷாரங்கள், சூர்ணங்கள், ஆஸவங்கள், அரிஷ்டங்கள், கோமூத்திரம், மோர் இவற்றை உபயோகிக்கவேண்டும்.—33½.

ஸர்வாங்கசோதையில் ஸ்நாந லேபநங்கள் :—(1) திப்பிலி, பழைய பிண்ணுக்கு, முருங்கப்பட்டை, மணல், ஆழிவிதை இவற்றைப் பசுமூத்திரம் விட்டு ஆட்டி, கல்கமாகச் செய்து லேபநம் செய்யவும், அழுத்தித் தேய்க்கவும் உபயோகிக்கலாம். (2) கோஷ்டம், தழுதாழை, சித்திரமூலம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பசுமூத்திரத்தையாவது, (3) அவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தையாவது, (4) அவ்விரண்டில் எதிலாவது கொள், சுக்கு, இவற்றைச் சேர்த்துக் காய்ச்சியாவது ஸ்நாநத்திற் குபயோகிக்கலாம். (5) கருங்கச்சோரம், அகில் இவ்விரண்டையும் கல்கமாகச் செய்து லேபநமாகப் பிரயோகிக்கலாம்.—34, 35½.

ஏகாங்க சோபையில் லேபநம் :—தகரவிதை, ஆடுதீண்டாப் பாளை, ஸரளதேவதாரு, காட்டு ஜீரகம், அமுக்கிருங்கிழங்கு, சிவதை வேர், இவற்றைக் கல்கம்போல் அரைத்து, ஓர் அவயவத்தை ஆச்ரயித்த சோதையில் லேபநம் செய்யலாம்.—36½.

பல தோஷங்களாலான சோதைகளில் சோதநங்கள் :—(1) எந்த தோஷத்தினுல் எந்த பாகத்தை ச்ரயித்து சோபை யுண்டாயிருக்கிறதோ, அதற்கேற்றவாறு அவ்வவயவத்திற்குச் சமீபமான (முகம்-குதம் இவற்றுள்) எதன் மூலமாகவாவது சோதநம் செய்யலாம்; அல்லது இரக்தமோக்ஷணம் பண்ணலாம். (2) பல தோஷங்களாலுண்டான சோபையில் கோளாறடைந்த அந்தந்த தோஷங்களுள் எது பிரபலமாயிருக்கின்றதோ அதை அனுஸரித்துச் சிகித்ஸை செய்யவும்.—37.

ஸந்நிபாதசோதை முதலியவற்றில் ஜீரகாதி-பூநிம்பாதி சூர்ணங்கள் :—(1) ஜீரகம், வட்டத்திருப்பி, கோரைக்கிழங்கு, பஞ்சகோலம், கண்டங்கத்திரி, மரமஞ்சள் இவற்றின் சூர்ணத்தை இளஞ்சூடான ஜலத்தோடு உட்கொள்ளலாம். (2) அவ்விதமே நிலவேம்பு, சுக்கு இவற்றின் சூர்ணத்தையும் உட்கொள்ளலாம். இவை ஸந்நிபாத சோதையையும், நீடித்துள்ள அல்லது மிக விருத்தியடைந்த சோதையையும் போக்கும்.—38.

அம்ருதாதிக்குலு :—சிந்தில், கடுக்காய், இங்குப்பத்திரி, தேவதாரு இவற்றின் சூர்ணத்தையும், மஹிஷாக்ஷி குக்குலுவையும் கூட்டி, குளிகைகளாகச் செய்து, பசுமூத்திரத்தின் அனுபானத்தோடு உட்கொள்ள ச்வயது, உதரரோகங்கள், குஷ்டம், பாண்டுரோகம், கிருமிகள், மேஹரோகங்கள் இவையும், கபமும், ஊர்த்வச்வாஸமும் தீரும்.—39.

இரத்தஜ-விஷஜசோபைகளில் சிகித்ஸை :—இங்ஙனம் வாதாதி தோஷங்களாலான சோபைகளுக்கு ஏற்ற சிகித்ஸைகள் கூறப்பட்டன. (1) இரத்ததோஷத்தினாலான சோபையில் இரக்தமோக்ஷணம், குளிர்ச்சியான ஔஷதங்கள், க்ருதம் இவற்றின் லேபநம், ஸேசநமென்கிற ஒற்றிடம், விரேசநம் இவற்றால் இரத்தத்தைச் சுத்தம் செய்யலாம். (2) விஷஸம்பந்தமான சோபையில் விஷஹரமான சிகித்ஸை செய்யலாம்.—40.

சோதையில் அபத்யங்கள் :—கிராம்யமாம்ஸம்,[1] ஆநூப மாம்ஸம், ஸத்தில்லாத மாம்ஸம், உலர்ந்த சாகம், எள் சேர்த்து பக்குவம் செய்த அன்னம், வெல்லம் சேர்த்து பக்குவம் செய்த அன்னம், மாப்பண்டங்களாலான அன்னம், உப்புக் கலந்த தயிர், புளித்துப்போனதும் நீர் விளாவாததுமான மத்யம், பொரி, உலர்ந்துபோன இறைச்சி, குருபோஜனம், அஸாத்மிய போஜனம், வயிற்றில் காந்தலுண்டுபண்ணும் உணவு, இரவில் நித்திரையுறுதல், புணர்ச்சி இவைகளை ச்வயதுரோகி விலக்கிவிட வேண்டும்.—41.

---

## பதினெட்டாம் அத்தியாயம்.

## விஸர்ப்ப சிகித்ஸை.

இனி விஸர்ப்ப சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது.

விஸர்ப்பங்களில் முதலிற் செய்யவேண்டிய சிகித்ஸைகள் :— விஸர்ப்பங்களில் முதலிலேயே லங்கநம், ரூக்ஷணம், இரக்தமோக்ஷணம், வமநம், விரேசநம் இவை ஹிதமானவை ; ஆனால் ஸ்நேஹநம் அனுகூலமானதல்ல.—1.

விஸர்ப்பத்தில் வமந - விரேசநசிகித்ஸைகள் :—(1) அதிமதுரம், வாலுழுவை, மதநபலம் இவற்றைச் சேர்த்து வமநம் செய்வித்தாலும், (2) பேய்ப்புடல், திப்பிலி, வேம்பு இவற்றின் தளிர்களோடு மதநபலத்தைக் கூட்டி வமநம் செய்வித்தாலும் விஸர்ப்பம் தீரும். (3) சிவதை வேரைக் கொன்றையின் சாறு,

1. கிராம்ய மாம்ஸம் — முதற் புத்தகம் பார்க்க.

திராக்ஷாரஸம், த்ரிபலாஸ்வரஸம், பால், நெய் இவற்றுள் ஏதே
னும் ஒன்றோடு விரேசநத்திற்காக உட்கொள்ளலாம். இவ்வியா
தியில் தோஷம் கோஷ்டத்தைப்பற்றியதாயிருந்தால் இன்னும்
விசேஷமாகச் சோதந சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்.—2, 3½.

விஸர்ப்பத்தில் சமந சிகித்ஸை :—சோதந சிகித்ஸைக்குத்
தகாத பிணியாளிக்கும், தோஷம் சொற்பமாயிருக்கையிலும்
சமந சிகித்ஸையை அடியில் வருமாறு செய்யலாம். (1) சந்த
னம், நைதல் இவற்றையாவது, (2) மஸ்துவையாவது, (3) வேம்பு,
பேய்ப்புடல் இவற்றையாவது, (4) படோலாதிகணச் சரக்குகளை
யாவது, (5) நன்னாரி, நெல்லிக்கனி, வெட்டிவேர், கோரைக்
கிழங்கு இவற்றையாவது கஷாயமாகக் காய்ச்சி உபயோகிக்கலாம்.
(6) காஞ்சொறி, பர்ப்பாடகம், சீந்தில், சுக்கு இவற்றின் கஷாயத்
தையாவது, சீதகஷாயத்தையாவது நாவறட்சியுள்ள விஸர்ப்ப
ரோகி பானம் செய்யலாம். (7) மரமஞ்சள், பேய்ப்புடல், கடுக
ரோஹிணி, சிறுகடலை, த்ரிபலை, வேம்பு, அதிமதுரம், கொன்றை
இவற்றின் கஷாயத்தில் நெய் கூட்டி யுட்கொள்ளலாம். 4—7.

விஸர்ப்பத்தில் இரக்தமோக்ஷணம் செய்யும் நிலைமை :—
கை-கால்களில் இரத்தம் கெட்டிருந்தால் இரத்தத்தையே முத
லில் வெளிப்படுத்த வேண்டும். ஏனெனில் இரத்தம் துர்நீர்
கொண்டு கேடுறுவதால் சர்மம், மாம்ஸம், ஸ்நாயுவென்னும்
தசைநார் இவையும் துர்நீரால் கோளாறடைகின்றன.—8.

விஸர்ப்பத்தில் திக்தக க்ருதாதிகளை யுபயோகித்தல் :—ஆம
தோஷம் நீங்கிய பிணியாளிக்குக் கபம் க்ஷீணித்து, வாத-பித்தங்
கள் மேலோங்கி நின்றால் அந்த நிலைமையில் (1) திக்தக க்ருத
மாவது, (2) மஹாதிக்தக க்ருதமாவது, (3) சரக்கொன்றை
சேர்த்து பக்குவம் செய்த க்ருதமாவது அநுகூலமானவை
யாம்.—9.

விஸர்ப்பத்தில் லேபநம் செய்யும் நிலைமை :—அசுத்தமான
இரத்தத்தை வெளியிட்ட பிறகு, சர்மம், மாம்ஸம், ஸந்திகள்
இவற்றில் அடங்கிய தோஷம் சுத்தம் செய்யப்பட்ட பிறகு,
உடனே விஸர்ப்பத்தைச் சமநம் செய்ய தேஹத்தின் வெளிப்
புறத்தில் பிரதேஹாதிபூச்சுகளைப் பிரயோகிக்கவேண்டும்.—10.

வாதவிஸர்ப்பத்திற்கு லேபநங்கள்:—(1) சதகுப்பி, கோரைக்
கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, மூங்கிற்குருத்து, கருங்குறிஞ்சி,
கொத்தமல்லிவிதை, தேவதாரு, முருங்கை இவற்றின் கல்கத்
தையாவது, (2) கோஷ்டத்தின் கல்கத்தையாவது வாத விஸர்ப்
பத்தில் லேபநமாக உபயோகிக்கலாம்.—11.

பித்தவிஸர்ப்பத்திற்கு லேபநங்கள் :—(1) பித்தவிஸர்ப்பத்
தில் ந்யக்ரோதாதிகணச் சரக்குகளாலான லேபநத்தையும்,

(2) பத்மோத்பலாதி[1] சரக்குகளாலான லேபநத்தையும் பிரயோகிக்கலாம். (3) இளசான ஆலம்விழுதுகள், மிக்க மிருதுவான வாழைக் குருத்துகள், தாமரைக்கிழங்கு இவற்றை நன்கு அரைத்து, சததௌத க்ருதத்திற்[2] குழைத்தாவது, (4) குளிரக் குளிர தாமரைச் சேற்றையாவது லேபநம் செய்யலாம். (5) ஜலம் விட்டு மிருதுவாக ஆட்டிய நல்முத்துக் குழம்பையாவது, (6) அவ்விதமே சங்குக் குழம்பையாவது, (7) பவழக்குழம்பையாவது, (8) முத்துச்சிப்பிக் குழம்பையாவது, (9) நெய் விட்டு அரைத்தெடுத்த மனச்சிலையையாவது பூச்சிடலாம்.—12, 13½.

கபவிஸர்ப்பத்திற்கு லேபநங்கள் :—(1) த்ரிபலை, தாமரைக்கிழங்கு, வெட்டிவேர், மஞ்ஜிஷ்டி, அலரிவேர், சவட்டுக்கோரையின் வேர், அறுகம்புல் இவற்றைக் கல்கமாக அரைத்து, கபவிஸர்ப்பத்தில் லேபநமாக உபயோகிக்கலாம். (2) வெண்கருங்காலி, ஏழிலம்பாலை, கருங்காலி, தேவதாரு, மருதோன்றி, கோரைக்கிழங்கு, கொன்றை இவற்றையாவது, (3) வருணாதி கணச் சரக்குகளின் கல்கத்தையாவது, (4) கொன்றையிலை, நறுவிலிப் பட்டை, கருநொச்சியிலை, மணித்தக்காளி, காட்டுவாகைப்பூ இவற்றின் கல்கத்தையாவது லேபநம் செய்யலாம். (5) இதே சரக்குகளால் ஸேசநதிரவத்தையும், விரணத்திற் பூசுவதற்கு க்ருதத்தையும், லேப நௌஷதத்தையும், சூர்ணத்தையும், பக்குவம் செய்து நிலைமைக்கேற்றவாறு உபயோகிக்கலாம். வாதவிஸர்ப்பத்தில் உபயோகிக்க வேண்டிய லேபங்களுக்கு நெய் அதிகமாகச் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும். 14—17½.

**ஸம்ஸர்க தோஷாதிகளாலான விஸர்ப்பங்களுக்கு சிகித்ஸைகள் :**—(1) ஆமதோஷத்துடன் கூடிய வாதம் கபஸ்த்தாநத்தையடைந்தால் லேபநங்கள் சிறிது உஷ்ணமாயிருக்கவேண்டும். (2) இரத்த-பித்தம் பித்தஸ்த்தாநத்தை அடைந்திருந்தால், நெய் கலந்த லேபநங்களைப் பிரயோகிக்கலாம்; மேலும் இவ்விதக் கோளாறில் லேபநங்கள் அதிக குளிர்ச்சியாகவும், மெல்லியனவாகவும், மெல்லிய வஸ்திரங்களின்மீது பரப்பி விஸர்ப்பத்தின் மீது இடக்கூடியவையாகவும் இருக்கவேண்டும். உபயோகப்படுத்திய லேபத்தையே எடுத்தெடுத்து மீண்டும் பிரயோகித்தால் வீர்யத்திற் குன்றிப்போமாகையால், அப்போதைக் கப்போது புதிய லேபங்களை பிரயோகிக்கவும். (3) ஸம்ஸர்க தோஷங்களாலான விஸர்ப்பங்களில் வாத-பித்த-கபங்களாலான விஸர்ப்பாங்

1. பத்மோத்பலாதிகணம்—தாமரை, நைதல், வெட்டிவேர், அறுகம்புல், தாமரைக்கொடி, அல்லிக்கிழங்கு, தட்டைக் கோரைக்கிழங்கு, சர்க்கரை, விளாமிச்சைவேர், சந்தனம், நல்முத்து, காவி, க்ஷீரகாகோலீ, வறள்தாமரை, இலுப்பைப்பூ, நெய், பால் இவற்றின் கூட்டு.

2. சததௌத க்ருதம் — முதற் புத்தகம் பார்க்க.

களுக்குத் தனித்தனி கூறியுள்ள சிகித்ஸைகளையே அதற்கேற்ற வாறு கலந்து பிரயோகிக்கவும். 18—20.

**அக்னிவிஸர்ப்ப சிகித்ஸை :**—அக்னி விஸர்ப்பத்தில் (1) சததௌத க்ருதத்தையாவது, (2) ஸாதாரணமான ஆடை போலத்தோய்ந்த நெய்யையாவது, (3) குளிர்ந்த அதிமதுரக்கஷாயத்தையாவது, (4) மிகக் குளிர்ந்த தண்ணீரையாவது, (5) தாமரையிலைத்தண்ணீரையாவது,[1] (6) பாலையாவது, (7) கருப்பஞ்சாற்றையாவது பிரயோகிக்கலாம். (8) பானம் செய்வதற்கும், லேபநம் செய்வதற்கும், விரணங்கள்மேல் ஊற்றுவதற்கும் மஹாதிக்தக க்ருதம் மிக்க அனுகூலமானது.—21, 22.

**கிரந்திவிஸர்ப்ப சிகித்ஸை:**-(1) கிரந்திவிஸர்ப்பத்தில் இரக்த-பித்தசிகித்ஸையிற் கூறியுள்ளபடி இரக்த-பித்தஹர சிகித்ஸையை நிறைவேற்றி, கப-வாதஹரமான பிண்டஸ்வேதம், உபநாஹ ஸ்வேதம்[2] இச்சிகித்ஸைகளைச் செய்வது தகும். (2) கிரந்திவிஸர்ப்பத்தில் வலியும் அதிகமானால், தசமூலங்கள் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தை உஷ்ணமாக அதன்மீது ஊற்றலாம். (3) அங்ஙனமே பசுமூத்திரத்தையும் தசமூலம் சேர்த்துக் காய்ச்சி யுபயோகிக்கலாம். (4) அல்லது தசமூலம் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது கிரந்திவிஸர்ப்பத்தின்மேல் ஊற்றலாம். (5) முருங்கப்பட்டையையாவது அரைத்துக் காய்ச்சி, இளஞ்சூடாய் கிரந்தியின் மேல் பூசலாம். (6) அல்லது பச்சிலைமரப் பட்டையையாவது, (7) உலர்ந்த முள்ளங்கிக் கல்கத்தையாவது, (8) ஊமத்தையிலையையாவது அங்ஙனமே உபயோகிக்கலாம். (9) நேபாளம், சித்திரமூலப்பட்டை, கள்ளிப்பால், எருக்கம்பால், வெல்லம், சேராங்கொட்டை, அன்னபேதி இவற்றை லேபநமாகப் பிரயோகித்தால் கல்லும் கரைந்துடையு மென்றால், வெளியிற் சர்மத்தைப்பற்றி கபத்தினாலுண்டான கிரந்தியை இந்த லேபம் உடைத்துவிடுமென்பதில் ஸந்தேஹமென்ன? நீடித்த நாட்களாயுள்ள கிரந்தியையும் இதே சாக்குகளால் உடைத்துவிடலாம். (10) முள்ளங்கி, கொள் இவற்றின் யூஷங்களில் யவக்ஷாரம், மாதளம்பழச்சாறு இவற்றைச் சேர்த்து பானம் செய்விக்கலாம். (11) கோதுமான்னம், வாற்கோதுமையன்னம் இவற்றில் சீது, தேன், சர்க்கரை இவற்றைச் சேர்த்தும், அல்லது தேன், வாருணீ மண்டம், கொடிமாதளம்பழரஸம் இவற்றைச் சேர்த்தும் அருந்த

---

1. 'சீதாம்பஸாம்போஜஜலை :'' என்று மூலத்திலுள்ளவாறு நாம் மொழிபெயர்த்திருக்கிறோம். ''ஸிதாம்பஸாம்போஜஜலை:'' என்று மூலம் இருக்கவேண்டுமென்று ஸர்வாங்க ஸுந்தரீ வியாக்யாநத்தினால் தெரிய வருகிறது ; சர்க்கரையின் நீர், தாமரைப்பூ சேர்த்த ஜலம், கோரைக் கிழங்கின் ஜலம் என்று அந்த வியாக்யாநப்படிக்குப் பொருள்.

2. பிண்ட ஸ்வேதாதிகளைப்பற்றி முதற்புத்தகம் பார்க்க.

லாம். (12) தேன் கூட்டிய த்ரிபலையை, அல்லது தேவதாரு-சீந்தில் இவற்றைப் பிரயோகிப்பதாலும், காவிக்கல் கல்கத்தினாலும், கோரைக்கிழங்கு - சோரங்கொட்டை - பிஷ்டம் இவற்றாலும், தேனைப் பூசுவதாலும், தூமப்பிரயோகங்களாலும், சிரோவிரேகங்களாலும், குல்மத்தைக் கரைப்பதற்கு முற் கூறியுள்ள முறைகளாலும், நெருப்பிற் காய்ச்சிய இரும்பு, பொன், உப்பு, கல் இவை முதலியவற்றால் அழுத்துவதாலும் கிரந்தி விஸர்ப்பத்தை யுடைக்கலாம். 23—31.

கிரந்திவிஸர்ப்பத்தில் தாஹ - பாக சிகித்ஸைகள்:—நல்ல பலன் தரக்கூடிய முற் கூறிய பலவித சிகித்ஸைகளாலும் கிரந்தி உடையாமல் கல்லைப்போல் கடினமாயிருந்து சிறிதும் குணமடையாவிட்டால், பிறகு (1) க்ஷாரத்தினாலாவது, இரும்புச் சலாகைகளாலாவது, பொன்னாலாவது அதைச் சுடுவது நலம். (2) அல்லது பழுக்கச் செய்யுங்குணமுடைய பதார்த்தங்களால் பழுக்கச் செய்து, சஸ்திரத்தினால் கீண்டாவது தோஷத்தை வெளிப்படுத்தலாம். (3) இப் பிணியில் தோஷங்கொண்டு விருத்தியாயுள்ள இரத்தத்தை அப்போதைக் கப்போது ஸிராவ்யதை செய்து வெளிப்படுத்தவேண்டும்; மீண்டும் இங்ஙனம் இரத்தம் வெளிப்படுத்தப்பட்ட பிறகு வாத-கபஹரமான ஔஷதத்தைப் பிரயோகிக்கவேண்டும். (4) சுடுதல், பழுக்கச் செய்தல் இச் சிகித்ஸைகளால் தூர்நீர் கசியும் விஸர்ப்பத்தில், ஸாதாரண விரணங்களுக்குக் கூறிய விதமே வெளியிலும் உள்ளேயும் ஔஷதப் பிரயோகம் செய்யவேண்டும். (5) மரமஞ்சள், வாய்விடங்கம், கம்பில்லம் இவற்றைச்சேர்த்து பக்குவம் செய்த தைலம் வாதஸம்பந்தமான விஸர்ப்பவிரணத்தில் உபயோகிக்கத் தகுந்தது. (6) அறுகம்புல்லின் ஸ்வரஸத்திற் பக்குவம் செய்த க்ருதத்தைக் கப-பித்தங்கள் விருத்தியாயுள்ள விஸர்ப்பவிரணத்திற் பிரயோகிக்கலாம். 32—35½.

விஸர்ப்பத்தில் இரக்த மோக்ஷணம்:—விஸர்ப்பத்தில் ஸாதாரணமாகக் கூறப்பட்டுள்ள மற்றச் சிகித்ஸைகளெல்லாம் ஒரு பகுதியாகவும், இரக்தமோக்ஷணம் மாத்திரம் மற்றொரு பகுதியாயுமிருப்பதாகக் கருதப்படுகிறது. விஸர்ப்பரோகம் பெரும்பாலும் இரத்தத்தோடும் பித்தத்தோடும் கலவாமல் உற்பத்தியாவதில்லை. இதற்கு இரத்தமே ஆதாரமாகின்றது; ஆகையால் இப்பிணியாளிக்கு அடிக்கடியும் இரக்தமோக்ஷணமே செய்யவேண்டும்.—36, 37.

விஸர்ப்பத்திற்குத் தகாத க்ருதம்:—விஸர்ப்பரோகி விரேசநகுணமற்ற க்ருதத்தைப் பருகக்கூடாது; அந்த க்ருதம் விஸர்ப்பஹேதுவான தோஷத்தைத் தேஹத்திலேயே தகைய, அது சர்மம் இரத்தம் மாம்ஸம் இவற்றை எரித்து விடும்.—38.

## பத்தொன்பதாம் அத்தியாயம்.

## குஷ்ட சிகித்ஸை.

இனி குஷ்டசிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும் :—

**குஷ்டங்களில் முதலிற் செய்யும் சிகித்ஸை** :—எல்லாவிதமான குஷ்டரோகிக்கும் முதலில் ஸ்நேஹபானம் செய்வித்து சிகித்ஸை ஆரம்பிக்கவேண்டும்.—½.

**வாதகுஷ்ட சிகித்ஸை** :—அவற்றுள் வாதம் அதிகரித்துண்டான குஷ்டத்தில் தசமூலம், சீந்தில், ஆமணக்கு, நாயர்வேளை, ஆடுதீண்டாப்பாளை இவற்றால் பக்குவம் செய்த தைலமாவது க்ருதமாவது அனுகூலமானதாம்.—1½.

**பித்தகுஷ்டசிகித்ஸை திக்தகக்ருதம்** :—பேய்ப்புடல், வேம்பு, கடுகரோஹிணி, மரமஞ்சள், வட்டத்திருப்பி, காஞ்சொறி, பர்ப்பாடகம், கொன்றை இவற்றை ஒரு ஆடகம் ஜலத்தில் ஒவ்வொரு பலம் அளவில் இடித்துச் சேர்த்து, எட்டிலொரு பங்காகச் சுண்டக் காய்ச்சி வடிக்கட்டி, பன்னிரண்டு பலம் நெய் சேர்த்து. அதில் கொன்றை, கோரைக்கிழங்கு, நிலவேம்பு, வாலுழுவை, திப்பிலி, சந்தனம் இவற்றை வகைக்குக் கால் பலம் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இது "திக்தக க்ருதம்" எனப்படும். இந்த க்ருதம் பித்தகுஷ்டம், விஸர்ப்பம், கட்டிகள், அழற்சி, நாவறட்சி, பிரமமென்னும் தலைச்சுற்றல், சொறி, பாண்டுரோகம், கண்டங்கள், கெட்டுப்போன நாடீவ்ரணங்கள், அபசீ, கொப்புளங்கள், வித்ரதி, குல்மம், சோகை, பித்து, வெறி, இருதயரோகம், கண்ணோய், வங்கு, கிரஹணி, ச்வித்ரம், காமாலை, பகந்தரம், அபஸ்மாரம், உதரரோகம், பெரும்பாடு, கிருத்ரிமவிஷம், அர்சஸ், இரக்த-பித்தம் முதலிய மற்றுமுள்ள கஷ்டஸாத்தியமான கடும் பிணிகளையும் தீர்க்கும். 2—7.

**மஹா திக்தக க்ருதம்** :—ஏழிலம்பாலை, பர்ப்பாடகம், பெருவாகை, கடுகரோஹிணி, வசம்பு, த்ரிபலை, தாமரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, மஞ்சள், மரமஞ்சள், வெண் நன்னாரி, கருநன்னாரி, திப்பிலி, யானைத்திப்பிலி, வேம்பு, சந்தனம், அதிமதுரம், பேய்த்தும்மட்டி, வாலுழுவை, சீந்தில், நிலவேம்பு, விளாமிச்சவேர், ஆடாதோடை, பெருங்குரும்பை, தண்ணீர்விட்டாங்கிழங்கு, பேய்ப்புடல், அதிவிடயம், கோரைக்கிழங்கு, கொன்றை, காஞ்சொறி இவற்றை எட்டு மடங்கு ஜலத்திற் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்துடன், இரண்டு பங்கு நெல்லிக்கனிச்சாற்றையும் கூட்டி, அதில் க்ருதம் பக்குவம் செய்யலாம். இது திக்தக க்ருதத்திலும் அதிக குணம் செய்யும்; ஆகவே இது "மஹாதிக்தக க்ருதம்" எனப்படும். 8—10½.

கபகுஷ்டத்தில்-நிம்பாதி க்ருதம் :—வேம்பு, ஏழிலம்பாலை, சித்திரமூலம், கோஷ்டம், மிளகு, வசம்பு, குங்கிலிய மரப்பட்டை, முறளஞ்செடி, ஆமணக்கு இவற்றைச் சேர்த்து செய்த க்ருதம் கபம் அதிகரித்த குஷ்டத்தில் உபயோகமாம்.—11.

ஸர்வ குஷ்டங்களிலும் ஸ்நேஹ சிகித்ஸை முதலியன :—எல்லாக் குஷ்டங்களிலுமே (1) சேராங்கொட்டைத் தைலம், (2) துவரகதைலம், (3) கடுகெண்ணெய் இவற்றையாவது, (4) வாய்விடங்கம், கடுக்காய், சேராங்கொட்டை இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்தையாவது பானம் செய்யலாம். (5) கொன்றைவேர்க்கஷாயத்தில் நூறு முறை காய்ச்சியெடுத்த க்ருதத்தை கருங்காலிக் கஷாயத்தின் அநுபானத்தோடு உட்கொள்ள சீக்கிரம் குஷ்டம் தீரும். (6) முற்கூறிய ஸ்நேஹங்களால் அந்தந்த நிலைமைகளுக்கேற்றவாறு அப்யஞ்ஜநம் செய்வதும் ஹிதமாம். (7) ஸ்நேஹசிகித்ஸை முடிந்த பிறகு விஸர்ப்பசிகித்ஸையிற் கூறப்பட்டுள்ளபடி சோதநக்ரியையைச் செய்யவேண்டும். 12—14½.

குஷ்டத்தில் ஸிராவ்யதை முதலியன :—(1) குஷ்டரோகிக்கு நெற்றியிலும், கைகளிலும், பாதங்களிலும் ஸிராமோக்ஷணம் செய்து இரத்தத்தை வெளிப்படுத்தலாம். (2) குஷ்டம் சொற்பமா யுண்டான நிலைமைகளுக்கு ஏற்றவாறு பிரச்சந்நம்[1] செய்வதும், ச்ருங்கம் முதலியவற்றால் துஷ்ட இரத்தத்தை வெளிப்படுத்துவதும் உசிதமாம். (3) குஷ்டஹரமான ஸ்நேஹங்களால் இடையிடையே ஆப்யாயம் செய்யவேண்டும். இரக்தமோக்ஷணம் செய்து, விரேசநமும் செய்தால் குடல் வற்றிய குஷ்டரோகிக்கு தேஹத்தில் வாயு ஸ்நேஹோபசாரங்களால் பிரகோபிக்காமலும், உடலுக்குக் கேடு விளைவிக்காமலு மிருக்கும். 15—17.

வஜ்ரக க்ருதம் :—ஆடாதோடை, சீந்தில், வேம்பு, த்ரிபலை, பேய்ப்புடல், கண்டங்கத்திரி, புங்கு இவற்றின் கஷாயத்தில் அச்சரக்குகளையே கல்கமாகவும் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவும். 'வஜ்ரக க்ருதம்' என்கிற இது விஸர்ப்பம், ஜ்வரம், காமாலை, இரக்த-பித்தம், குஷ்டம் இவற்றைப் போக்கும்.—18.

மஹா வஜ்ரக க்ருதம் :—த்ரிபலை, த்ரிகடு, கத்திரி, கண்டங்கத்திரி, சிறு வழுதுணை, கடுகரோஹிணி, நேபாளம், சிவதை வேர், கொன்றை, வசம்பு, அதிவிடயம், சித்திரமூலம், வட்டத்திருப்பி இவை வகைக்குக் கால் பலமெடை, அப்பொழுதே இறக்கிய கள்ளிப்பால் ஒரு பலம், இவற்றைக் கல்கம்போலச் செய்து, இதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் பக்குவம் செய்து,

1. பிரச்சந்நம்—சுரைக்குடுக்கை கோப்பை முதலியவற்றால் செய்யப்படும் (Cupping எனப்படும்) இரத்தவிலயந சிகித்ஸை.

கற்குடலாயிருப்பவனுக்குக் கொடுக்க, இது ஸ்நிக்த்தத் தன்மையையும் விரேசநத்தையும் உண்டுபண்ணும். குஷ்டம், ச்வித்ரம், ப்லீஹரோகம், அண்டவீக்கம், அச்மரீ, குல்மம் இவை கஷ்டஸாத்தியமான நிலைமையிலிருப்பினும், இதனால் தீரும். இது 'மஹா வஜ்ரக க்ருதம்' எனப்படும்.—19, 20.

தந்தீ க்ருதம் :—ஒரு ஆடகமளவான நேபாளத்தை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, பேய்த்தும்மட்டியை ஒரு பலம் கல்கமாகச் சேர்த்து, அதில் பக்குவம் செய்த க்ருதம் மேலே வமநரூபமாகவும் கீழே விரேசநரூபமாகவும் குடலைச் சுத்திசெய்யும்—21.

ஆவர்த்தகீ க்ருதம் :—ஒரு துலாப்பிரமாணம் வலம்புரிக்காயை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, எட்டிலொரு பங்கு மிகும்படிக் காய்ச்சி, அதில் ஒரு பிரஸ்த்தம் நெய் கூட்டி, அதன் வேரையே கல்கமாகவும் சேர்த்து பக்குவம் செய்யவும். இதை தினம் மாற்றி தினம் உட்கொள்ளலாம்; ஔஷதம் ஜீர்ணமான பிறகு வரகுதான்யம் சேர்த்துச் செய்த காடியோடு போஜனம் செய்யலாம். இது குஷ்டம், வெண்குஷ்டம், அபசி இவற்றைத் தீர்க்கும்; இதை யுபயோகிப்பதால் ஸந்தாந விருத்தியுண்டாகும்; விஷயங்களை எளிதில் கிரஹிக்கவும், மறந்து விடாமல் தரிக்கவும் கூடிய புத்தி சக்தியும் அதிகரிக்கும்.—22, 23.

குஷ்டத்தில் கந்தகம் உபயோகித்தல் :—(1) கந்தகத்தை தேன், கரிய பேளம் இவற்றுடன் கூட்டியாவது, (2) அதற்குச் சம அளவான நெய்யிற் குழைத்தாவது, (3) கருங்காலி, செம்மரம் இவற்றின் பட்டையைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயத்தில் கூட்டியாவது உட்கொண்டு, பிரஹ்மசர்ய விரதம் தவறாமலிருந்து வந்தால் குஷ்டரோகம் தீரும்.—24.

குஷ்டத்தில் ஹிதமும் அஹிதமுமான அன்ன பானுதிகள் :—ப்ரியங்கு, பயறு, கடலை, துவரை, வாற்கோதுமை, கோதுமை, வரகு, சம்பாதானியங்கள், கைப்புள்ள சாகங்கள் இவையும், த்ரிபலை, பேய்ப்புடல், கருங்காலி, வேம்பு, சேராங்கொட்டை இவற்றுடன் கூட்டிய ஜாங்கல மாம்ஸமும், ஔஷதங்களடங்கிய மதுவகைகளும், வாலுழுவை சேர்ந்த மோரும் ஆக இந்த அன்னபானங்கள் குஷ்டத்தில் அநுகூலமானவை. ஆனால் அம்லம், இலவணம், கடு இச்சுவையுடைய மற்ற வஸ்துக்கள் இதமல்ல; மேலும் தயிர், பால், வெல்லம், ஆநூபமாம்ஸம், எள்ளு, உளுந்து இவைகளையும் விலக்கி விடவேண்டும். 25—27.

படோல மூலாதி க்வாதம் :—பேய்ப்புடல் வேர், த்ரிபலை, பேய்த்தும்மட்டி இவை வகைக்குப் பதினாறு தாநகங்கள் அளவு;[1]

1. தாநகம் :—ஒரு மாஷப் பிரமாணம்; பதினாறு தாநகங்கள் கொண்டது ஒரு கர்ஷம்; கர்ஷமென்பது கால் பலம்.

கொன்றை, கடுகரோஹிணி இவ்விரண்டும் பிரத்தியேகம் ஆறு தாரகங்கள்; சுக்கு நான்கு தாரகங்கள்; இவ்விதம் இச்சரக்குகளை ஒரு பலம் கிரஹித்து நன்றாக இடித்து ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, சரீரத்திற் சேர்ந்துள்ள தோஷங்களைச் சுத்தி செய்ய பானம் செய்யவும். ஔஷதம் ஜீர்ணமான பிறகு ஜாங்கல தேச மிருக-பக்ஷிகளுடைய மாம்ஸரஸங்களோடு பழகிய சம்பா அரிசியினலாகிய அன்னத்தைப் புஜிக்கவும். இவ்வௌஷதத்தை ஆறு நாள் உபயோகிக்க குஷ்டம், வெண்குஷ்டம், கிரஹணீ ரோகம், அர்சஸ், மூத்திரக்ருச்சிரம், ஹலீமகம், இருதய சூலை, வஸ்தி சூலை, விஷமஜ்வரம் இவை தீரும். 28—30.

மாணிபத்ர குடம்:—வாய்விடங்கம், நெல்லிக்கனி, கடுக்காய் இவை மூன்று பலமெடை, சிவதைவேர் மூன்று பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, பன்னிரண்டு பலம் வெல்லம் சேர்த்து குளிகை செய்து, ஜிதேந்த்ரியர்களாயிருந்து கொண்டு உபயோகிக்க குஷ்டம், வெண்குஷ்டம், ச்வாஸ காஸங்கள், உதர ரோகங்கள், அர்சஸ், மேஹம், ப்லீஹரோகம், கிரந்தி, அரும்ஷிகா, கிருமிரோகம், குல்மம் இவை தீரும்; மாணிபத்ரன் என்கிற யக்ஷன் மோக்ஷம் விரும்பிய ஒரு பிக்ஷுவுக்கு இதை யுபதேசித்தான்.—31, 32.

பூநிம்பாதி சூர்ணம்:—நிலவேம்பு, வேம்பு, த்ரிபலை, தாமரைக்கிழங்கு, அதிவிடயம், திப்பிலி, பெருங்குரும்பை, பேய்ப்புடல், மஞ்சள், மரமஞ்சள், வட்டத்திருப்பி, கடுகரோஹிணி, பேய்த்தும்மட்டி, வாலுளுவை, வசம்பு இவை ஸமபாகம்; நேபாளம் இரண்டு பாகம்; சிவதைவேர் நான்கு பாகம்; பிரமியிலை எட்டு பாகம்; இவற்றைச் சூர்ணம் செய்து, தேன்-நெய் இவற்றின் அநுபானத்தோடு உட்கொள்ளலாம்; இது குஷ்டம், மேஹம், சர்மத்தின் உணர்ச்சியற்ற நிலைமை இவற்றிற்கு உத்தமௌஷதம்.—33, 34½.

த்ரிபலாதி சூர்ணம்:—த்ரிபலை, வாய்விடங்கம், திப்பிலி இவற்றின் சூர்ணத்தையாவது தைலம், நெய், தேன் இவற்றுள் ஏதேனுமொன்றோடு உட்கொள்ளலாம்.—35.

குஷ்டத்திலுபயோகிக்கக்கூடிய சில ஔஷத முறைகள்:—(1) பேயத்தி, வாய்விடங்கம், வேம்பு, கோரைக்கிழங்கு, த்ரிகடு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, வெட்பாலையின் கஷாயத்தைப் பருகிவந்தால் சர்ம வியாதிகளனைத்தும் போகும். (2) வெட்பாலை, சித்திரமூலம், வேம்பு, கொன்றை, கருங்காலி, வேங்கை, எழிலம்பாலை இவற்றின் பட்டைகளின் கஷாயத்தில் கடுக்காய்களைச் சமைத்து, தேனையும் நெய்யையும் கூட்டி, அவற்றைப் புஜிக்க குஷ்டம் தீரும். (3) மரமஞ்சள், கருங்காலி, வேம்பு இவற்றின் பட்டைகளுடைய கஷாயமும் குஷ்டஹரமாகும்.

(4) மாமஞ்சள், த்ரிபலை, வேம்பு, பேய்ப்புடல்வேர், கடுகரோஹிணி, வசம்பு, செஞ்சந்தனம், அதிமதுரம் இவற்றின் கஷாயம் முறைப்படி உபயோகிக்கப்படுமானால், நன்கு நிறைவேற்றப்பெற்ற தர்மம்போல், கப-பித்த ஸம்பந்தமான குஷ்டத்தைப் போக்கிவிடும். (5) இதே சரக்குகளாலான கஷாயத்தில் நல்ல க்ருதத்தைப் பக்குவம் செய்து உபயோகிக்க வாதகுஷ்டம் தீரும். (6) இங்ஙனமே கருங்காலி, வேம்பு, சீந்தில், தேவதாரு, மஞ்சள் இவற்றையும் தனித்தனியே பக்குவம் செய்தும் உபயோகிக்கலாம். (7) வட்டத்திருப்பி, மாமஞ்சள், சித்திரமூலம், வாய்விடங்கம், கடுகரோஹிணி, வாலுழுவை இவற்றின் சூர்ணத்தைப் பசுமூத்திரத்திலிட்டாவது, வெந்நீரிற் சேர்த்தாவது ஒரு மாஸம் பருகிவர குஷ்டரோகம், அர்சஸ், மேஹம், சோபை, பாண்டு, அஜீர்ணம், கிருமிரோகம் இவை நிவ்ருத்தியாம். 36—40.

லாக்ஷாதி சூர்ணம்:—கொம்பரக்கு, நேபாளம், அதிமதுரம், த்ரிபலை, கண்டங்கத்திரி, வட்டத்திருப்பி, வாய்விடங்கம், நாயுருவி, த்ரிகடு, மஞ்சள், ஏழிலம்பாலை, ஆடாதோடை, மஞ்ஜிஷ்டி, வேம்பு, தேவதாரு, தசமூலம் இவற்றைச் சூர்ணம் செய்து, பசுமூத்திரத்தின் அனுபானத்தோடு ஒரு மாஸம் பத்தியமான உணவுகளுடன் புஜித்துவர குஷ்டம் தீரும்.—41.

நிசாதி வடகம்:—மஞ்சள் ஒரு பங்கு, திப்பிலி இரண்டு பங்கு, சுக்கு மூன்று பங்கு, வாய்விடங்கம் நாலு பங்கு, சேராங்கொட்டை ஐந்து பங்கு, சித்திரமூலம் ஆறு பங்கு, பொன்னிமிளை ஏழு பங்கு, இவற்றைச் சூர்ணம் செய்து, மாத்திரைகளாக உருட்டி, பசுமூத்திரத்தின் அனுபானத்தோடு உட்கொள்ள மிகக் கடுமையான குஷ்டங்களும் நிவ்ருத்தியாம்.—42.

ஸப்த ஸமாகுளிகை:—த்ரிகடு, த்ரிபலை, எள்ளு, சேராங்கொட்டை, நெய், தேன், கற்கண்டு இவற்றைச் சமஎடை சேர்த்து செய்த குளிகை குஷ்டத்தைப் போக்கும்; இரஸாயநமாகவும், வ்ருஷ்யமாகவும் கூட உபயோகமாகும். இது 'ஸப்த ஸமா குளிகை' எனப்படும்.—43.

வாகுச்சியாதி குளிகை:—ஆட்லாங்கொடி, சித்திரமூலம், மஞ்சள், வாய்விடங்கம், சேராங்கொட்டை, துவரக பீஜம், த்ரிபலை இவற்றையும் வெல்லத்தையும் சேர்த்து, குளிகைகளாகச் செய்து உபயோகித்துவர ஸமஸ்தகுஷ்டங்களும் தீரும்.—44.

விடங்காதி குளிகை:—வாய்விடங்கம், சேராங்கொட்டை, ஆட்லாங்கொடி, கண்டங்கத்திரி, நிலப்பனங்கிழங்கு, கடுக்காய், நீர்த்திப்பிலி, எள்ளு, திப்பிலி இவற்றின் சூர்ணத்தை வெல்லம் சேர்த்து குளிகை செய்து உபயோகிக்க குஷ்டம் தீரும்.—45.

குஷ்டஹரமான வேறு முறைகள்:—(1) ஆட்லாங் கொடி, வாய்விடங்கவேர், திப்பிலி, சித்திரமூலம், இரும்புச் சிட்டம்,

நெல்லிக்கனி இவற்றின் சூர்ணத்தை நல்லெண்ணெயிற் கலந்துட்கொள்ள கஷ்டஸாத்தியமான குஷ்டமும் நிவ்ருத்தியாகும். (2) கடுக்காய், எள்ளு, சேராங்கொட்டை, வெல்லம் இவற்றைக் கொண்டு செய்த குளிகைகள் குஷ்டத்தைப் போக்கும். (3) சேராங்கொட்டை, வாய்விடங்கம், ஆட்லாங் கொடி இவற்றையும் வெல்லத்தையும் சேர்த்துச் செய்த குளிகைகளையாவது குஷ்டரோகி உபயோகிக்கலாம். (4) கருங்காலிப்பட்டைச் சூர்ணம், வாய் விடங்க சூர்ணம், சிலாஜது இவற்றைத் தேனும் நெய்யும் கலந்து உபயோகிக்க, கிடிபம், வெண்குஷ்டம், தத்ரு இவை தீரும். இவ்வௌஷத முபயோகிக்கையில் பத்தியமான உணவுகளை மிதமாகப் புஜிக்கவேண்டும். (5) வாய்விடங்கம், நெல்லிக்கனி, இரும்புச்சிட்டம், திப்பிலி இவற்றின் சூர்ணத்தைச் சர்க்கரையோடும் எண்ணெயோடும் கலந்துட்கொள்ளலாம்; இது பலமான குஷ்டங்களைத் தையும் நிவ்ருத்தி செய்யும். (6) கோரைக்கிழங்கு, த்ரிகடு, த்ரிபலை, மஞ்ஜிஷ்டி, தேவதாரு, தசமூலம், ஏழிலம்பாலை, வேப்பம் பட்டை, பேய்த்தும்மட்டி, சித்திரமூலம், பெருங் குரும்பை இவற்றைச் சமபாகமாகச் சேர்த்து சூர்ணம் செய்யவும்; இவற்றுடன் ஸக்துவென்னும் மாச்சரக்கை ஒன்பது பாகம் சேர்க்கவும்; இச்சூர்ணத்தை அதற்குச் சம அளவான தேனில் கலந்து தினந்தோறும் உட்கொள்ளவும்; அனுபவத்தில் உபயோகமுள்ளதென்று தெரிந்துகொண்டுள்ள இம்முறை குஷ்டத்தைப் போக்கவல்லது; மேலும் வீக்கம், பாண்டுரோகம், வெண்குஷ்டம், கிராஹணீரோகம், அர்சஸ், அண்டவீக்கம், பகந்தரம், பிடகைகள், சொறி, கோடம், அபசீ இவைகளும் தீரும். (7) துவரக பீஜங்களையும், சேராங்கொட்டையையும், ஆட்லாங் கொடியையும், சித்திரமூலத்தையும், சிலாஜதுவையும் இரஸாயநாத்தியாயத்திற் கூறப்படும் முறைப்படி குஷ்டரோகி உபயோகிக்கலாம். 46—53.

குஷ்டத்தில் லேபநாதிகள் செய்யும் நிலைமை முதலியன:— இங்ஙனம் முற்கூறிய முறைகளால் தேஹத்தின உட்புறத் தோஷம் பரிஹரிக்கப்பட, சர்மத்தின் மீதுள்ள விகாரங்களைப் போக்க, வெளியில் லேபகம் முதலியதை உபயோகிப்பது நலம். உட்புற தோஷம் விலக்கப்படாமல் தேஹம் கோளாறடைந்திருக்கையில் தீக்ஷ்ண லேபநங்களால் கிளறப்பட்டு குஷ்டம் முன்னிலும் அதிகரித்து விடும். நிலைத்து கடினமான தடிப்புகளையுடைய குஷ்டங்களின்மீது போட்டலிகைகளைக்கொண்டு ஸ்வேதம் செய்வது ஹிதமாம். ஸ்வேதசிகித்ஸை செய்து பருத்துப் பக்குவமாயுள்ள குஷ்ட விரணத்தைச் சஸ்திரங்களால் கீண்டு லேபநௌஷதங்களை அவற்றின்மீது பிரயோகிக்கவேண்டும். பரிச உணர்ச்சியிழந்த குஷ்டங்களில் சஸ்திரம் இறங்கவில்லையானல்,

இரத்தத்தையும் மற்றத் தோஷத்தையும் வெளிப்படுத்திவிட்டு
க்ஷாரத்தைப் பிரயோகிக்க வேண்டும். அதிக கடினமாகவும்,
கொடியதாகவும், பரிசவுணர்ச்சி யிழந்து நெடுநாட்களானதுமான
குஷ்டத்தில், ரோகி தகுந்த ஔஷதங்களை யுட்கொண்டு, மந்திரப்
பிரயோகத்துடன் விஷகுணமுள்ள சரக்குகளால் லேபநம் செய்ய
வும் ; பிறகு விஷஹரமான ஔஷதங்களைக் கொண்டும் லேபநம்
செய்யலாம். சலநமற்றவையும், மிகப் பரிச வுணர்ச்சி யிழந்த
வையும், வியர்வையைத் தடுப்பவையும், தினவுண்டுபண்ணுப
வையுமான குஷ்டங்களை வறட்டிகளாலும், கடினமான கடல்
நுரைகளாலும், சஸ்திரங்களாலும் தேய்த்துச் சுரண்டிய பின்
அவற்றிற்கு லேபநமிடவேண்டும். 54—58.

முஸ்தாதி க்வாதம் :—கோரைக்கிழங்கு, த்ரிபலை, மருக்காரை,
புங்கு, கொன்றை, வாலுளுவை, வாற்கோதுமை, எழிலம்பாலை,
கோஷ்டம், ஞாழல், மரமஞ்சள், வெண்கடுகு இவற்றின் கஷா
யத்தினால் ஸ்நானம் செய்யலாம் ; அக்கஷாயமே வமந-விரேசநங்
களுக்காகவும் உட்கொள்ளத் தகுந்தது ; இது தேஹநிறத்தைச்
செம்மைப்படுத்தும் ; சர்மதோஷங்களைச் சிதைத்துப்போடவும்
ஏற்றது ; சர்மதோஷம், குஷ்டம், வீக்கம் இவற்றைத் தாண்டி
யும் சமநம் செய்யும் ; பாண்டுரோகத்தையும் போக்கும். 59—60.

கரவீரமூலாதி லேபம் :—அலரிவேர், வேப்பம்வேர், வெட்
பாலைவேர், கொன்றைவேர், சித்திரமூலம் இவற்றின் சூர்ணத்
தைப் பசுமூத்திரத்திலிட்டுக் காய்ச்சி, கரண்டியில் பற்றிக்கொள்
ளும்படி பாகுபதத்தில் இறக்கி, லேபம் செய்ய குஷ்டம்
நீங்கும்.—61.

ச்வேதகரவீரமூலாதிலேபம் :—வெண்ணலரிவேர், குட
சப்பாலையின் கனி, புங்கங்காய், மரமஞ்சளின் தோல், அவற்றின்
புஷ்பங்கள், அவற்றின் தளிர்கள் இவற்றைக்கொண்டு செய்த
லேபம் குஷ்டஹரமான சித்தௌஷதமாகும்.—62.

சிரீஷத்வகாதி லேபம் :—காட்டுவாகையின் பட்டை, காட்டு
வாகைப் பூ, பருத்தியின் பட்டை, கொன்றையிலை, மணித்தக்
காளியிலை இவற்றை அரைத்து லேபமாக உபயோகிக்க நான்கு
விதமான குஷ்டங்களும் தீரும்.—63.

வ்யோஷாதி லேபம் :—த்ரிகடு, வெண்கடுகு, மஞ்சள், ஒட்
டடை, வாற்கோதுமையின் சுணை, உப்பு, சித்திரமூலம், கோஷ்
டம் இவை ஸமபாகம் ; நாபி அரை பாகம் ; இவற்றைக் கல்வத்தி
லிட்டு, கால் பல மெடையில் குளிகை செய்து, அதை அடிக்கடி
இழைத்து லேபநம் செய்யலாம் ; இது வெண்குஷ்டத்தையும்
குஷ்டத்தையும் போக்குவதற்குச் சிறந்த லேபம்.—64.

நிம்பாதி லேபம் :—வேம்பு, மஞ்சள், மரமஞ்சள், துளசி,
பேய்ப்புடல், கோஷ்டம், அமுக்கிறுங்கிழங்கு, தேவதாரு, முருங்

கை, கடுகு, தும்புரு மரப்பட்டை, கொத்தமல்லிவிதை, இலவங்கப்பட்டை, கருங்கச்சோரம் இவற்றைச் சம பாகம் சேர்த்து சூர்ணம் செய்து, முதலில் தைலம் பூசிக்கொண்டு, பிறகு அச் சூர்ணத்தை மோரில் குழைத்து உடம்பில் பூசவும். இதனால் சொறி, கட்டிகள், தழும்புகள், குஷ்டங்கள், வீக்கம் இவை நிவ்ருத்தியாகும்.—65, 66.

முஸ்தாதி லேபம் :—கோரைக்கிழங்கு, சீந்திற்கொடி ஸமூலம், மரமஞ்சள், அன்னபேதி, கம்பில்லம், கோஷ்டம், வெள்ளிலோத்தி, கந்தகம், சாம்பிராணி, வாய்விடங்கம், மநச்சிலை, தாளகம், அலரிமாப்பட்டை இவற்றைச் சூர்ணம் செய்து, தைலத்தைப் பூசிக்கொண்டு, பிறகு இச்சூர்ணத்தைத் தேய்க்கவும் ; படை, சொறி, தழும்பு, சிரங்கு, விசர்ச்சிகை இவை நிவாரணமாகும்.—67, 68.

ஸர்ஷப லேபம் :—கடுகின் கல்கத்தைக் கள்ளித் தண்டுகளில் பரப்பி, உமித்தணலில் பக்குவம் செய்து, லேபநமா யுபயோகிக்க, விசர்ச்சிகை யென்கிற சர்மரோகமானது, வெட்கத்தைப் பலமான காதல்போலப் போக்கிவிடும்.—69.

மநச்சிலாதி லேபம் :—மநச்சிலை, தாளகம், மிளகு இவற்றை எண்ணெயிலும் எருக்கம்பாலிலும் அரைத்து, குஷ்டத்தைப் போக்குவதற்கு லேபமாக உபயோகிக்கலாம்.—69½.

கரஞ்ஜபீஜாதிலேபம் :—புங்கம்விதை, தகரவிதை, கோஷ்டம் இவற்றைப் பசமூத்திரத்தால் அரைத்து, கல்கமாக உபயோகிக்க, முன் லேபம் போலவே குஷ்டத்தைப் போக்கும்.—70.

குக்குல்வாதிலேபம் :—குங்கிலியம், மிளகு, வாய்விடங்கம், கடுகு, அன்னபேதி, ஸர்ஜரஸம், கோரைக்கிழங்கு, ஸரளதேவதாரு, காசுகட்டி, மநச்சிலை, கோஷ்டம், கம்பில்லம், மஞ்சள், மரமஞ்சள் இவற்றை அப்பொழுதே ஆட்டியெடுத்துச் சூடுள்ள தானதைலத்தில் அரைத்து, சூரியபுடம் வைத்து, குஷ்டத்தின்மேல் பலமாகத் தேய்க்க அவ்வியாதி தீரும்.—71, 72.

மரிசாதி லேபம் :—மிளகு, பச்சிலை, கோஷ்டம், மநச்சிலை, அன்னபேதி இவற்றைத் தைலத்திற் கலக்கி, ஒரு செப்புப் பாத்திரத்தில் ஏழு நாட்கள் வைத்திருந்து, அப்பால் அதை தேஹத்திற் பூசிக்கொண்டு வரவும் ; இவ்விதம் உபயோகித்துக் கொண்டு வெயிலில் இருந்து வர ஏழு நாட்களில் ஸித்மம் என்கிற வியாதி நீங்கும். அதிக நாட்படாத வெண்குஷ்டத்தில் இவ்வௌஷதத்தை மேற்பூச்சாக உபயோகித்து வர ஒரு மாஸ காலத்திலேயே ஸ்நாநமில்லாமலே நன்கு சுத்தியடைந்து அப்பிணியாளி வியாதியிலிருந்து நிவ்ருத்தி யடைவான்.—73, 74.

ச்வித்ரத்தில் உபயோகமான வேறு லேபங்கள் :—ஏழுமுறை வடிக்கட்டி யெடுத்த நாயுருவி க்ஷாரம் கரைத்த ஜலத்தில்

வாதுழுவைத் தைலத்தைப் பக்குவம் செய்து, அப்பங்கம் செய்
தாலும், (2) தக்காளிவேர், சங்கங்குப்பியிலை, தாமரைமணி
இவற்றை மோர் விட்டு அரைத்து, மங்களவாரத்தில் லேபநம்
செய்தாலும் வெண்குஷ்டம் தீரும். (3) சிறுபாலை, மஞ்ஜிஷ்டி,
மரமஞ்சள், கம்பில்லம், பால்துத்தம் இவற்றை க்ருதத்திலும்
தைலத்திலும் சேர்த்து பக்குவம் செய்து, பிறகு ஸர்ஜரஸமும்,
தேன் மெழுகும் சேர்த்துக் கூட்டி யுபயோகிக்க, கால் சுருங்கி
வெடித்தல், ஏககுஷ்டம், கிடிமம், மற்றுமுள்ள குஷ்டவிகாரம்,
சேற்றுப் புண் இவை நீங்கும். 75—78.

**வஜ்ர தைலம்** :—ஏழிலம்பாலையின் வேர், காட்டு வாகைப்
பட்டை, அலரிப் பட்டை, எருக்கம் பட்டை, ஜாதிமல்லிகைக்
கொடிப் பட்டை, சித்திரமூலப் பட்டை, செம்மந்தாரைப்
பட்டை, வேப்பம் பட்டை, புங்கம் விதை, கடுகு, தகரவிதை,
த்ரிபலை, வாய்விடங்கம், த்ரிகடு, மஞ்சள், மரமஞ்சள் இவற்
றையும் பசுமூத்திரத்தையும் நல்லெண்ணெயிற் சேர்த்துக்
காய்ச்சி அப்யங்கம் செய்யவும். வாதகபங்களின் கோளாறுண்
டான சர்மவியாதிகளையும், கெட்டுப்போன நாடிவிரணங்களையும்
துலைப்பதற்கு வஜ்ராயுதம் போன்றதான இவ்வௌஷதம் 'வஜ்ர
தைலம்' எனப்படுகிறது.—79, 80.

**மஹாவஜ்ர தைலம்** :—ஆமணக்கு வேர், இரஸாஞ்ஜநம்,
காட்டுக் கடம்பு, கடம்பு, கண்டுபாரங்கி, கம்பில்லம், வாய்விடங்
கம், ஞாழல், தும்மட்டி, நொச்சிலி, சோரங்கொட்டை, தேவ
தாரு, பிரம்மதண்டி, ஸரளதேவதாரு, குங்கிலியம், மனச்சிலை,
இந்துப்பு, தாளகம், சுக்கு இவற்றையும், ஸம அளவாக எருக்கம்
பால் கள்ளிப்பால் இவற்றையும் சேர்த்துத் தைலம் காய்ச்சவும்;
இது வெண்குஷ்டம், அர்சஸ், கிரந்திகள் கண்டமாலை இவற்
றைப் போக்கும்; முற்கூறிய வஜ்ரதைலத்தினும் குணத்திற்
சிறந்த இது "மஹாவஜ்ர தைலம்" எனப் படுகிறது.—81, 82.

**குஷ்டாதி தைலம்** :—கோஷ்டம், அலரி, கரிசிலாங்கண்ணி,
எருக்கு, பசுமூத்திரம், கள்ளிப்பால், இந்துப்பு இவற்றின் கஷா
யத்தில் தைலம் பக்குவம் செய்யவும்; வத்ஸநாபியைக் கல்க
மாகச் சேர்க்கவும். இதை அப்யங்கம் செய்துகொள்ளவும்;
குஷ்டத்தைப் போக்க இது சிறந்த தைலம்.—83.

**ஸிக்த்தகாதி லேபம்** :—தேன் மெழுகு, ஸிந்தூரம், குங்கிலி
யம், துத்தம், இரஸாஞ்ஜநம் இவற்றைக் கடுகெண்ணெயிற்
சேர்த்து பக்குவம் செய்ய இது சிரங்கு, விசர்ச்சிகை இவற்றை
ஜடிதியில் நிவாரணம் செய்யும்.—84.

**லாக்ஷாதி லேபம்** :—அரக்கு, த்ரிகடு, தகரவிதை, ஸரள
தேவதாருப்பட்டை, கோஷ்டம், வெண்கடுகு, மஞ்சள், தாமரை

மணி இவற்றைச் சூர்ணம் செய்து, மோரில் கலந்து லேபநம் செய்ய தத்ருவென்கிற படை தீரும்.—85.

**வாத-கப குஷ்டஹரமான லேபங்கள் :**—(1) சித்திரமூலம், முருங்கவிதை ; (2) சீந்தில், நாயுருவி, தேவதாரு ; (3) கருங்காலி, அகில் ; (4) சிவதைவேர், நேபாளம், எலியால் ; (5) அரக்கு, இரஸாஞ்ஜநம், எலம் ; (6) சாறடை ; இந்த ஆறுவிதமான முறைகளில் எதையாவது சூர்ணம் செய்து, தயிரின்மேலுள்ள ஆடையிற் குழைத்து, வாதகுஷ்டத்தினாலும் கபகுஷ்டத்தினாலும் வருந்துபவர் மேலே லேபநம் செய்து கொள்ளலாம்.—86, 87.

**பித்த-கப குஷ்டங்களில் வாலகாதி லேபம் :**—வெட்டிவேர் ஒரு பங்கு, கோஷ்டம் இரண்டு பங்கு, அயப்பொடி மூன்று பங்கு, நாககேஸரம் நாலு பங்கு, இலவங்கப்பத்திரி ஐந்து பங்கு, ஆலம்விழுது ஆறுபங்கு, சந்தனம் ஏழு பங்கு, தாமரைக்கிழங்கு எட்டு பங்கு ; இவற்றைப் பித்த-கபங்களாலுண்டான குஷ்டங்களில் லேபமாக உபயோகிக்கலாம்.—88.

**கடுமையான குஷ்டங்களில் சில லேபநாதிகள் :**—(1) திக்தரஸமுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதங்களாலும், (2) ஜலத்திற் கழுவியெடுத்த க்ருதத்தினாலும் அழற்சியுடன் கூடிய குஷ்டங்களில் அப்யங்கம் செய்யலாம். (3) துர்நீர்ப் பெருக்குள்ளதும், அவயவங்களைச் சிதறச் செய்வதும், அழற்சியுண்டுபண்ணுவதும், கொப்புளங்களோடு கூடியதும், அவயவங்களைப் பிளக்கச் செய்யும் சர்மதளம் என்கிற நிலைமையைப் பெற்றதுமான குஷ்டங்களில் சந்தனம், அதிமதுரம், வறள்தாமரை, நைதல் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்துள்ள தைலங்களை அப்யஞ்ஜநத்திற்கு உபயோகிக்கலாம் ; (4) குளிர்ச்சியான பிரதேஹங்களும், (5) லேபநங்களும், (6) ஸிராவ்யதையும், (7) விரேசநமும், (8) திக்தரஸமுள்ள வஸ்துக்களால் பக்குவம் செய்த க்ருதமும் இவற்றில் உபயோகமானவை. (9) கருங்காலி, ஆடாதோடை, வேம்பு, வெட்பாலை, த்ரிபலை, வாய்விடங்கம், பேய்ப்புடல், சீந்தில் இவற்றைப் பசுமூத்திரத்தில் கூட்டியரைத்து உட்கொள்வதற்கும், மேலே லேபநம் செய்வதற்கும் உபயோகிக்க, கிருமி குஷ்டம் நீங்கும். 89—91.

**வாதாதி குஷ்டங்களில் முக்கியமான சிகித்ஸைகள் :**—(1) வாதம் அதிகரித்துண்டான குஷ்டங்களில் முதலில் க்ருதப் பிரயோகமும், (2) கபம் அதிகரித்துள்ள குஷ்டங்களில் வமநமும், (3) பித்தம் அதிகரித்துள்ள குஷ்டங்களில் இரக்தமோக்ஷணமும், விரேசநமும் ஹிதமாம்.—92.

**குஷ்டத்தில் நல்ல பலன் தருமாறு லேபநாதிகளைப் பிரயோகித்தல் :**—(1) இரத்தத்திலுள்ள தோஷங்களை வெளிப்படுத்தி, ஆசயங்களைச் சுத்தி செய்துகொண்ட குஷ்டரோகி

களுக்கு உபயோகிக்கப்படும் லேபங்களால் உடனே நல்ல பலனுண்டாகும். (2) சோதந சிகித்ஸைகளால் தோஷம் வெளிப்படுத்தப்பட்டு, இரக்தமோக்ஷணம் செய்து, வெளிப்புற உட்புற விகாரங்களுக்குச் சமநம் செய்து, காலம் தவறாது ஸ்நேஹமும் பிரயோகிக்கப்படுமானால், ஸாதாரணமாக நிவ்ருத்திக்கக்கூடிய குஷ்டம் தவறாமல் நிவாரணமாகும்.—93, 94.

**குஷ்டத்தில் சோதநம் செய்யு முறைகள்:**—மிகவும் தோஷம் அதிகரித்த குஷ்டரோகிக்கு அநேக முறை சோதந சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்; ஆனால் சோதநங்களால் பிணியாளிக்குப் பிராணாபாயம் நேரிடாதபடி ஜாக்கிரதையாகச் சிகித்ஸை செய்யவேண்டும். தோஷத்தை மிதமிஞ்சி வெளிப்படுத்தினால், ரோகி மிகவும் துர்பலமாவான்; அப்பொழுது பிரகோபிக்கும் வாயு பலஹீனமான அப்பிணியாளியை எளிதில் இறக்கச் செய்யும். (1) குஷ்டத்தில் பக்ஷம் தோறும் வமநத்தையும், (2) விரேசநத்தை மாஸத்திற் கொருமுறையாகவும், (3) மூன்றுநாட்களுக்கு ஒருதடவை சிரோ விரேகத்தையும், (4) ஆறு மாஸங்களுக்கு ஒருமுறை இரக்தமோக்ஷணத்தையும் செய்விக்கவேண்டும்.—95, 96.

**குஷ்டத்தில் தோஷங்களை முற்றிலும் வெளிப்படுத்தல்:**—குஷ்டரோகிக்கு வமந-விரேகங்களைப் போதுமாறு நிறைவேற்றாவிட்டால் தேஹத்தில் தோஷங்கள் முன்னிலும் அதிகமாக வியாபித்து, அந்த வியாதி சிகித்ஸிக்கக் கூடாததாய்விடும். ஆகையால் இவனது தேஹத்திலிருந்து தோஷமனைத்தையும் வெளிப்படுத்திவிடவேண்டும்.—97.

**குஷ்டத்தில் யம-நியம-விரதாதிகளைச் செய்தல்:**—விரதாநுஷ்டாநம், யம-நியம ஸேவை, தாநம், நல்ல ஆசாரம் இவற்றைச் சரிவரவே செய்தல், அந்தணர்களையும்-தேவதைகளையும்-குருமார்களையும் பூஜித்தல், ஸர்வப் பிராணிகளிடமும் அன்பு பாராட்டல், ஜினதேவர் - ஜினதேவ புத்திரர்[1] - தாரகைகள் - சூரியன் - இவர்களை ஆராதிப்பது ஆக இவைகள், தோஷங்களாலும் தீவினைகளாலும் ஸம்பவித்ததாகத் தெரியவரும் குஷ்டத்தை முற்றிலும் போக்கிவிடும்.—98.

---

1. நிர்ணய ஸாகர அச்சுக்கூடத்தில் வெளியான அஷ்டாங்க ஹ்ருதயத்தில் "சிவ சிவஸுத" என்றிருக்கிறது; அஷ்டாங்க ஸங்க்ரஹத்தில் "ஜிந ஜிநஸுத" என்றிருக்கிறது; அஷ்டாங்க ஸங்க்ரஹ பாடந்தான் முற்றிலும் சரியான தென்பது நமது கொள்கை. அஷ்டாங்க ஹ்ருதயம் முகவுரையில் வேறு விவரங்களைப் படிக்கலாம்.

# இருபதாம் அத்தியாயம்.

## ச்வித்ர-கிருமி சிகித்ஸை.

இனி ச்வித்ர - கிருமி சிகித்ஸை யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

### ச்வித்ரம்.

ச்வித்ரத்திற்கு ஆரம்பத்திலேயே பலமான சிகித்ஸை அவசியம் :—ச்வித்ரம் என்னும் வெண்குஷ்டம் குஷ்டத்தைவிட கோரமானதும், அதைவிட அதி சீக்கிரமாக அஸாத்தியமான நிலைமையைப் பெறுவதுமான வியாதி. ஆகையால் கிருஹத்தில் தீப் பற்றியதற்குச் செய்வதுபோல் வெகு சீக்கிரத்தில் அவ்வியாதியைப் போக்குவதற்கு முயலவேண்டும்.—1.

ச்வித்ரத்தில் முதலில் விரேசநம் முக்கியம் :—ச்வித்ரத்தில் முதலிலேயே விசேஷமாக சோதந சிகித்ஸையையே பிரயோகிக்க வேண்டும். ஆட்லாங்கொடிக் கஷாயத்தை வெல்லம் கூட்டி உட்கொள்வது ச்வித்ரத்தில் சிரேஷ்டமான ஸ்ரம்ஸந சிகித்ஸையாம்.[1] இதைப் பருகிய பிறகு தேஹத்தில் தைலம் பூசிக் கொண்டு, சக்திக்கியன்றவளவு வெயிலில் இருக்கவும்; விரேகமான பின் நாவறட்சி யுண்டானால் மூன்று நாட்கள் பேயாவைப் பானம் செய்யவும்.—2, 3.

ச்வித்ரத்தில் கொப்புளங்களுக்கு சிகித்ஸைகள் :—வெண் குஷ்டத்தில் தேஹத்தில் கொப்புளங்கள் உண்டானால் அவற்றைக் குத்தி யுடைத்துவிட வேண்டும். கொப்புளங்களிலுள்ள துர்நீர் வடிந்து போனபிறகு, (1) சந்தனம், கருங்காலி, ஞாழல் இவற்றின் கஷாயத்தையாவது, (2) அவரவரது தேஹபலத்திற் கேற்றவளவில் பலாசக்ஷாரத்தை[2] பாணிதத்துடன்[3] கலந்தாவது ஒவ்வொரு நாளும் காலையில் உட்கொள்ள வேண்டும். (3) பேயத்திப்பட்டை, தான்றிமரப் பட்டை இவற்றைக் கஷாயமிட்டு, அதில் கற்பூரம், கடுகு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, அதைப் பருகிய பிறகு வெண்குஷ்ட முள்ளவன் வெயிலில் இருக்க, உடம்பில் கொப்புளங்கள் கிளம்பும்; அப்பொழுது உப்பில்லாமல் மோர் கலந்து போஜனம் செய்யவும். 4—6.

கோமூத்ராரிஷ்டம் முதலியன :—(1) நெய் வைத்துப் பழகிய பாத்திரத்தில் பசுவின் மூத்திரம் ஊற்றி, அதில் சித்திர

1. ஸ்ரம்ஸநம்-ஸுகவிரேசநம்.

2. பலாசக்ஷாரம்—பலாசமரத்தின் எல்லாப் பாகங்களையும் சுட்டு, ஸூத்திர ஸ்தாநத்தின் முப்பதாவது அத்தியாயத்திற் கூறியிருப்பது போல் க்ஷாரம் பக்குவம் செய்யலாம்.

3. பாணிதம்-முதற் புத்தகம் பார்க்க.

மூலம், த்ரிகடு இவற்றைச் சேர்த்து, தேன் கூட்டிப் பதினைந்து நாட்களளவும் சேமித்து வைத்திருந்து, வெண்குஷ்டிகள் இதைப் பருகவும்; இப்பிணியாளருக்குக் குஷ்டத்திற் கூறியுள்ள மற்ற உபசாரமும் செய்யலாம், (2) தைலத்திற் பொரித்து, இரும்புப் பாத்திரத்தில் வைத்திருந்த கரிசிலாங்கண்ணியையாவது புஜிக்கலாம்; கருங்காலிப் பட்டையிட்டுக் காய்ச்சிய பாலையும் அதற்கு அனுபானமா யுட்கொள்ள ச்வித்திரம் தீரும்.—7, 8.

ச்வித்ரத்தில் உபயோகிக்கக் கூடிய லேபநங்கள்:—(1) புங்கு, எருக்கு, கொன்றை, கள்ளி, ஜாதி மல்லி இவற்றின் தளிர்களைப் பசுமூத்திரத்தில் ஆட்டியெடுக்கவும்; **பூதீகிஸலயாதிலேபம்** என்கிற இதை மேலே லேபமாகப் பூசிவந்தால் வெண் குஷ்டம், தத்ரு, அர்சஸ், சிரங்கு, கோடம், கெட்டுப்போன நாடி விரணம் இவை நிவ்ருத்தியாகும். (2) புலியின் சர்மத்தையாவது, (3) யானையின் சர்மத்தையாவது சுட்டு, அதன் கரியைத் தைலம் விட்டுக் குழைத்து, வெண் குஷ்டத்தில் லேபமாக உபயோகிப்பது நலம். (4) கொன்றையின் க்ஷாரத்தோடு நாகப் பூச்சி சேர்த்து கல்கம்போல் ஆட்டி, தைலமும் கூட்டிக் குழைத்துப் பூசலாம்; வெண் குஷ்டத்தைப் போக்குவதற்கு இந்த ஒரு லேபமே போதுமானது. (5) சேராங்கொட்டைகளை உடைத்து, இரவெல்லாம் பசுமூத்திரத்தில் ஊறவைத்து, மறு நாள் பகலெல்லாம் நிழலில் உலர்த்தியெடுத்து, இவ்விதம் மூன்றுமுறை பக்குவம் செய்த பிறகு, அவ்வித்துக்களை மைபோல் ஆட்டி, கள்ளிப்பால் விட்டுக் குழைக்கவும்; **பல்லாதக லேபம்** என்கிற இது வெண்குஷ்டத்தைப் போக்கும். (6) கருநாகத்தின் சர்மத்தை எரித்தெடுத்த மையைத் தான்றிக்காயெண்ணெயிற் குழைத்து லேபநம் செய்யலாம். (7) மயிலின் பித்தத்தையாவது லேபமா யுபயோகிக்கலாம். (8) வெட்டிவேரை எரித்தெடுத்த கரியையாவது, தான்றிக்கா யெண்ணெயிற் குழைத்து லேபமா யுபயோகிக்கலாம். (9) வாலுளுவை அரைச்சேர், அரிதாளம் அதிற் காற் பங்கு; இவற்றைப் பசுமூத்திரம் விட்டு அரைத்து, வெண்குஷ்டத்தின் மேல் லேபநம் செய்ய, சர்மத்திற்கு இயற்கை நிறம் உண்டாகும். (10) யானையின் சாணத்தை யுலர்த்தி, நன்றாக எரித்து, யானையின் சிறுநீரிலேயே அச் சாம்பலைக் கரைத்து வடிக்கட்டி, அதிலிருந்து வரும் க்ஷாரத்தை ஒரு திரோணமெடுத்து, வாலுளுவை வித்தை அதில் பத்து பங்கு சேர்த்துச் சமைக்கவும். மிகவும் பிசுக்குள்ள இந்த லேபத்தைப் பலதடவை தேய்த்துவர, வெண் குஷ்டம், மஷகம், திலகாலகம், மாம்ஸ வளர்ச்சியினாலுண்டான விரணம் இவை நிவ்ருத்தியாகும். (11) சேராங்கொட்டை, சித்திரமூலம், கள்ளிவேர், எருக்கம்வேர், குன்றுமணி, த்ரிகடுகம், சங்குப்பொடி, மயில்துத்தம், கோஷ்டம், பஞ்சலவணம், த்வி

க்ஷாரம், நீர்த்திப்பிலி இவற்றைக் கள்ளிப்பாலிலும் எருக்கம் பாலிலும் சேர்த்துக் காய்ச்சி, தடிப்பாகப் பக்குவமானதும், இரும்புப் பாத்திரத்தில் எடுத்து வைத்துக்கொண்டு, ஒரு சலாகையினுல் எடுத்து, குஷ்டம், வெண்குஷ்டம், திலகாலகம், துர்மாம்ஸ வளர்ச்சி, அர்சஸ், சர்மகீலகம் இவற்றில் லேபமாக உபயோகிக்கலாம். 9—17.

ச்வித்ரம் நிவாரணமாவது அரிது :— சோதந சிகித்ஸை, இரக்தமோக்ஷணம், ருக்ஷத்தன்மையுண்டாக்கும் சிகித்ஸை, ஸக்துவென்னும் மாப்பண்டங்களைப் புஜித்தல் இச்சிகித்ஸைகளால் எவனே ஒருவனுக்கே, தீவினைப்பயன் தீர்ந்திருக்குமாயின் வெண்குஷ்டம் நிவ்ருத்தியாகும்.—18.

## கிருமி சிகித்ஸை

வயிற்றுக் கிருமிகளை வெளிப்படுத்தும் சிகித்ஸை :— வயிற்றில் கிருமிகளையுடைய பிணியாளிக்கு ஸ்நேஹ-ஸ்வேத சிகித்ஸைகளைச் செய்து, வெல்லம் - பால் - மத்ஸியம் இவற்றை யுட்கொள்ளச் செய்து, கிருமிகளும் கபமும் இடம் விட்டுக் கிளப்பப்பட வேண்டும்; பிறகு அவ்விரவெல்லாம் ஸுகமாயிருந்து, மறுநாள் அடியிற் கூறப்படும் திரவத்திஞல் வஸ்தியைப் பிரயோகிக்கவும். சரிபாதி ஜலம் கலந்த பசுமூத்திரத்தில் ஸுரஸாதி கணச்சரக்குகளைச் சேர்த்து கஷாயம் காய்ச்சி, அதில் திப்பிலி, மருக்காரை, வாய்விடங்கம் இவற்றின் கல்கத்தைக் கூட்டி, தைலமும் ஸர்ஜக்ஷாரமும் கலந்து வஸ்தி பிரயோகிக்கவும். அவ்விதம் நிருஹம் செய்த பிறகு அதே தினத்திற் பகலில் மருக்காரை, திப்பிலி இவற்றின் கஷாயத்தில் சிவதைவேரின் கல்கத்தைக் கலக்கி விரேசநமாவதற்காக உட்கொள்ளச் செய்யவும். அங்ஙனம் மேலும் கீழும் சோதந சிகித்ஸை செய்த பிறகு, பஞ்சகோலங்களைச் சேர்த்த பேயா-விலேபீ முதலியவற்றை முறைப்படி யுபயோகிக்கவும். கடுவாகவும்-திக்தமாகவும்-கஷாயமாகவுமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்த கஷாயங்களை மேலே ஊற்றிக் குளிப்பாட்டி, பிறகு வாய்விடங்கம் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்திஞல் அநுவாஸனம் செய்துவைக்கவும். 19—23.

சிரஸைப்பற்றிய கிருமிகளுக்கு சிகித்ஸை :—சிரஸ்ஸைப் பற்றிய கிருமிரோகத்தில் சிரோரோக ப்ரதிஷேதவிதி அத்தியாயத்திற்[1] கூறப்படும் சிகித்ஸையைச் செய்யவேண்டும். பிறகு திக்தரஸமும் கடுரஸமும் மிகுதியாயுள்ள சரக்குகளையும் சொற்ப ஸ்நேஹத்தையும் சேர்த்து பக்குவம் செய்த போஜனத்தைக் கொடுக்கலாம்.—24.

1. உத்தர ஸ்த்தாநத்தில் 24-வது அத்தியாயம்.

**கிருமிகளைப் போக்கும் யவாகூ முதலிய முறைகள் :—**(1) வாய்விடங்கம், திப்பிலி, மிளகு, மோடி, முருங்கை இவற்றை மோரில் சேர்த்துப் பக்குவம் செய்த யவாகூவென்கிற கஞ்சியில் ஸர்ஜக்ஷாரம் சேர்த்துப் பானம்செய்யலாம். (2) காட்டுவாகை, நாயுருவி, வேம்பு, பாக்கு இவைகளின் ஸ்வரஸத்தை உட்கொள் ளக் கொடுக்கலாம். (3) பலாசம் வித்து, நீர்த்திப்பிலி, புங்கு இவற்றின் தனித் தனி ஸ்வரஸத்தையாவது இதனுடன் பருக லாம். (4) ஸுரஸாதிகணத்திற் கூறிய சாக்குகளின் தனித் தனி ஸ்வரஸத்தையாவது தேன் கூட்டி யுட்கொள்ளலாம். (5) குதிரையின் மலத்தை உலர்த்தி, அச்சூர்ணத்தை வாய் விடங்கக் கஷாயத்திலாவது, த்ரிபலையின் கஷாயத்திலாவது நூறுமுறை பாவனை செய்தெடுத்து, கிருமி ரோகி, அதைத் தேனிற் கலந்து புஜிக்கலாம். (6) சிரஸ்ஸைப் பற்றிய கிருமிகளில் சிரோரோக ப்ரதிஷேதாத்தியாயத்திற் கூறுகிறபடியே ப்ரதமநம் என்கிற நஸ்ய சூர்ணத்தையும் நாசியினுள் பிரயோகிக்கவேண்டும். (7) எலியால் என்னும் ஓஷதியின் தளிர்களை நன்கு அரைத்து, அத னுடன் மாவையும் கலந்து, பூபலிகை யென்கிற அடையாக அதைப் பக்குவம் செய்து புஜிக்கவும்; அதற்கு தான்யாம்லம் என்கிற காடியையாவது, பஞ்சகோலம் - இந்துப்பு இவற்றைக் கலந்த குழம்பான மோரையாவது அநுபானமாய் உட்கொள்ள வேண்டும். (8) கடம்பு, கரிசிலாங்கண்ணி, நொச்சி இவற்றின் தளிர்களையும் அதே முறையில் பக்குவம் செய்துபயோகிக்கலாம். (9) வாய்விடங்கத்தின் சூர்ணத்தையும் மாவையுங் கலந்து பக்ஷ் யங்கள் செய்தாவது உபயோகிக்கலாம். 25—31.

**கிருமிரோகத்தில் உபயோகிக்கக் கூடிய தைலங்கள் :—**(1) சோாங்கொட்டைத் தைலத்தில் அதற்குச் சரிபாதி வாய்விடங் கத்தைச் சேர்த்து, ஒருநாள் முழுய வெயிலில் வைத்திருந்து, பானம் செய்யவும், வஸ்தியில் பிரயோகிக்கவும் அத்தைலத்தை உபயோகிக்கலாம். (2) இங்ஙனமே தேவதாருவின் தைலத் தையும் பக்குவம் செய்துபயோகிக்கலாம்.—32.

**பலவகைக் கிருமிகளுக்கும் சிகித்ஸைகள் :—**(1) மலத்தைப் பற்றியுண்டாகும் கிருமிகளைப் போக்க வஸ்தியும் விரேசநமும் பிரயோகிக்கலாம். (2) கிருமிகள் கபத்தைப்பற்றி யுண்டா யிருந் தால் அவற்றைப் போக்க சிரோவிரேசநம், வமநம், சமநசிகித்ஸை இவற்றைச் செய்யலாம். (3) கிருமிகள் இரத்தத்தைப் பற்றி யவைகளா யிருந்தால், அவற்றிற்குக் குஷ்ட சிகித்ஸையிற் கூறிய பரிஹார முறைகளைச் செய்யலாம். (4) ரோமராஜி யெனப்படும் கிருமிகளில் இந்த்ரலுப்தத்திற்குக் கூறிய சிகித்ஸாக்கிரமத்தைச் செய்யலாம்.—33, 34.

கிருமிரோகி பரிஹரிக்க வேண்டிய வஸ்துக்கள் :—கிருமிஹர சிகித்ஸை செய்துகொள்பவன் பால் வகைகள், இறைச்சிகள், நெய், வெல்லம், தயிர், இலைபுருவமான கீரை முதலிய சாகங்கள், அம்லரஸ வஸ்துக்கள், மதுரரஸ வஸ்துக்கள் இவற்றைப் பரிஹரிப்பதே சுருக்கமான பத்தியமுறையாம்.—35.

---

## இருபத்தோராம் அத்தியாயம்.

### வாத வியாதி சிகித்ஸை.

இனி வாத வியாதி சிகித்ஸிதம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

**கேவலவாதத்தில் முதலிற் செய்யவேண்டிய சிகித்ஸா கிரமம்:**—உபத்திரவங்களேற்படாத வெறும் வாத தோஷத்தினாலுண்டான ரோகத்தில் முதலில் க்ருதம், வஸை, மஜ்ஜை, தைலம் இவற்றைப் பானம் செய்விப்பதாகிற ஸ்நேஹ சிகித்ஸைகளைப் பிரயோகிக்க வேண்டும். பிறகு சரீரத்தில் நன்கு ஸ்நேஹம் ஊறிய பிறகு பாலைத் தாராளமாகக் கொடுத்து ஆச்வாஸம் செய்விக்கவேண்டும். மீண்டும் ஸ்நேஹம் கூட்டிய யூஷமென்னும் கஞ்சியினங்களையாவது, காட்டு மிருகங்களுடையவும், நீர்வாழும் ஜந்துக்களுடையவும், ஆநூப மிருகங்களுடையவும் மாம்ஸரஸங்களையாவது பருகக் கொடுத்து ஸ்நிக்த்தமாகச் செய்யவும். அப்பால் அதிக ஸ்நேஹம் கூட்டிய அம்ல லவணங்களையும் சேர்ந்த மாம்ஸங்களையும், க்ருஸரங்களையும்[1], வாதஹரம்·தர்ப்பணம்[2] என்னும் குணங்களுள்ள அன்னங்களையும் கொடுத்து, அவ்விதகுணமுள்ள வஸ்துக்களால் அநுவாஸனங்களையும் பிரயோகித்து, நன்கு ஸ்நேஹநம் செய்விக்கவும். பிறகு நன்கு அப்யங்கம் செய்து வைத்து, அடிக்கடியும் ஸங்கரம் முதலிய ஸ்வேத முறைகளின்படி[3] ஸ்வேத சிகித்ஸைகளையும் நிறைவேற்றவும். 1—3½.

**வாதரோகத்தில் ஸ்நேஹஸ்வேதங்களாலுண்டாகும் பலன்கள் :**—ஒழுங்கினமாகவும், விறைத்துக்கொண்டும், வேதனையோடு கூடியதாகவுமுள்ள அவயவத்தில் ஸ்நேஹத்தைத் தேய்த்து,

---

1 க்ருஸரா — முதற் புத்தகம் பார்க்க.

2. தர்ப்பணம் — முதற் புத்தகம் பார்க்க.

3. ஸங்கரஸ்வேதம் — எருமைச்சாணம், குதிரைச்சாணம், பசுமூத்திரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி யிடப்படும் ஒற்றடம். பருத்திக்கொட்டை, கொள், எள், வாற்கோதுமை, ஆமணக்கு வேர், ஆழிவிதை, சாறடை, சணல்வித்து இவற்றைத் தனித் தனியாகவோ ஒருமிக்கச் சேர்த்தோ காடியிற் கலந்து வெதுப்பி ஒற்றடமிடுவதும் ஒரு முறை.

ஸ்வேதமும் செய்துவைத்த பிறகு, அவ்வவயவம் இஷ்டப்படி
ஸுகமாக அசைத்து வேலைசெய்ய அநுகூலமானதாகும். உலர்ந்த
கட்டைகளைக்கூட தைலம்போட்டு ஆவி முதலியவற்றைக்
கொண்டு வாட்டினால் அவை இயன்றவாறு வளைத்து உபயோகிக்
கக் கூடியவைகளாகின்றன ; அங்ஙனமிருக்க, உயிருள்ள பிராணி
களின் அவயவங்களில் ஸ்நேஹ-ஸ்வேதாதிகளால் ஸௌகரிய
முண்டாகக் கேட்கவேண்டுமா? அவயவங்கள் சிலிர்த்துப்போதல்,
குத்தல், வலி, இசிவு, வீக்கம், விறைப்பு, பிடித்தல் முதலிய
அவக்குறிகள் ஸ்வேதம் செய்தபிறகு தணிவடையும் ; தேஹம்
மிருதுத் தன்மையையும் அடையும். இப்பிணியாளிக்குப் பிர
யோகிக்கப்பட்ட ஸ்நேஹமும் சுஷ்கமாயுள்ள தாதுக்களைச் சீக்
கிரம் போஷிக்கச் செய்வதோடு, தேஹபலத்தையும், ஜாடராக்
னியையும் விருத்திசெய்து, புஷ்டியைக் கொடுத்து, ஆயுளையும்
அபிவ்ருத்தி செய்யும். இந்த ரோகிக்கு அடிக்கடியும் ஸ்நேஹங்
களையும் ஸ்வேதங்களையும் தொடர்ந்து பிரயோகித்து வர, அங்
ஙனம் ஸ்நேஹத்தினால் மிருதுத்தன்மையடைந்த கோஷ்டத்தில்
வாத ரோகங்கள் நிற்கமாட்டா. 4—8.

பலமான வாத தோஷத்தில் சோதந சிகித்ஸை :—தோஷம்
அதிகமாயிருந்து இச் சிகித்ஸையினால் வியாதி தணியாவிட்டால்,
ஸ்நேஹங்களைக் கூட்டிய மிருதுவான ஔஷதங்களைப் பிரயோ
கித்துச் சோதந சிகித்ஸை செய்யவேண்டும். (1) வெள்ளிலோத்
தியைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, (2)
பொன்னலம்பட்டையைச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தை
யாவது, (3) பாலிற் கலந்த ஆமணக்கெண்ணெயையாவது பானம்
செய்யலாம் ; இவை தோஷங்களை வெளிப்படுத்தி நல்ல குண
முண்டுபண்ணும்.—9, 10½.

வாதத்தில் அநுலோமநம் செய்யவேண்டிய அவசியம் :—
ஸ்நிக்த்தம், அம்லம், இலவணம், உஷ்ணம் இக்குணமுள்ள ஆஹா
ராதிகளால் தேஹத்தில் மலம் திணிந்து, ஸ்ரோதோமார்க்கத்தை
அடைத்து, வாயுவையும் தகைந்து விடும் ; ஆகவே அத்தோஷத்
தைக் கீழ்முகமாக வெளிப்படுத்த வேண்டும்.—11½.

விரேசநத்திற்குத் தகாத வாதரோகிக்கு நிரூஹவஸ்தி :—
விரேசநத்திற்குத் தகாத பலஹீனனுக்கு தீபந குணங்களும் பாசந
குணங்களுமுள்ள சரக்குகளை யுபயோகித்து நிரூஹங்களைப் பிர
யோகிக்க வேண்டும். அல்லது அவ்வித சரக்குகள் கூட்டிய
போஜநங்களையாவது கொடுக்க வேண்டும். இச் சிகித்ஸைகளால்
சுத்தியடைந்த பிணியாளிக்கு ஜாடராக்னி விருத்தியானபிறகு
மீண்டும் ஸ்நேஹ-ஸ்வேதங்களைப் பிரயோகிப்பது நலம்.—12,13.

வெவ்வேறு அவயவங்களைப் பற்றிய வாதவிகாரங்களுக்கு
சிகித்ஸைகள் :—(1) வாததோஷம் ஆமாசயத்தைப் பற்றியதா

யிருந்தால், அப்பிணியாளிக்கு வமநம் செய்வித்து, உடனே போஜனமும் செய்வித்து, அப்பால் ஷட்சரணயோகத்தை யாவது,[1] வசாதிகணச் சரக்குகளையாவது[2] இளஞ்சூடான ஜலத்துடன் கொடுக்கவும்; ஜாடராக்னி நன்கு தூண்டப்பட்டதும், கேவலவாதரோகத்திற்குக் கூறிய சிகித்ஸையைச் செய்ய வேண்டும். (2) நாபியைப் பற்றிய வாதத்தில் பில்வப்பிஞ்சுகளோடு சேர்த்து பக்குவம் செய்த மத்ஸியங்களைக் கொடுப்பது நலம். (3) நாபிக்குக் கீழ்ப் பாகத்தைப்பற்றிய வாதத்தில் வஸ்தி சிகித்ஸை செய்வதும், அவபீடக நஸ்யத்தைப் பிரயோகிப்பதும் நலம். (4) கோஷ்டத்தைப் பற்றிய வாதத்தில் பாசநகுணமும் தீபநகுணமுமுள்ள க்ஷாரங்கள், சூர்ணங்கள் முதலியவை அநுகூலமானவையாம். (5) வாததோஷம் இருதயத்தைப் பற்றியதாயிருந்தால் மல்லிகை வேரைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை உட்கொள்ளலாம். (6) சிரஸ்ஸைப்பற்றிய வாதத்தில் சிரோவஸ்தியைச் செய்யலாம்; ஸ்நேஹ நஸ்யமும், தூமபானமும், செவி முதலிய அவயவங்களுக்குத் தர்ப்பண சிகித்ஸையும் செய்யலாம். (7) சர்மத்தைப் பற்றிய வாதத்தில் ஸ்வேத சிகித்ஸை, அப்யங்கம், அதிக காற்றோட்டமில்லாத விடத்தில் வஸிப்பது இவையும், இருதயத்திற்கு பலந்தரக்கூடிய உணவும் உபயோகமானவையாம். (8) இரத்தத்தைப் பற்றிய வாதத்தில் சீதளமான பிரதேஹங்களெனப்படும் பூச்சுகளும், விரேசநமும், இரக்தமோக்ஷணமும் ஹிதமானவையாம். (9) மாம்ஸத்தையாவது, (10) மேதஸ்ஸையாவது வாததோஷம் பற்றியிருந்தால் விரேசநமும், நிரூஹ வஸ்திகளும், சமநசிகித்ஸைகளும் தகுந்தனவாம். (11) அஸ்தியையும், (12) மஜ்ஜாவையும் பற்றியுள்ள வாதத்தில் தேஹத்தின் மேற்புறத்திலும் உட்புறத்திலும் ஸ்நேஹங்களைப் பிரயோகிக்க வேண்டும். (13) சுக்ரத்தைப்பற்றிய வாதத்தில் மனக்களிப்பூட்டும் உபசாரமும், பலத்தையும் சுக்ரத்தையும் விருத்தி செய்யக்கூடிய உணவும் அநுகூலமாம். சுக்ரம் வெளிவருதற்கான வழி தடைபட்டிருந்தால், விரேசநம் செய்வித்து, உடனே ஏற்ற ஆஹாரம் கொடுத்து, முற்கூறிய சிகித்ஸையையும் செய்யவேண்டும். (14) வாததோஷத்தினுல் ஸ்த்ரீயின் கர்ப்பம் சுஷ்கித்துப் போனாலும், (15) அத்தோஷத்தினுல் பாலர்கள் இளைத்துக் கொண்டு வந்தாலும் சர்க்கரை, குமுழன், அதிமதுரம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பாலைப் போஷணையின் பொருட்டு உபயோகிக்க வேண்டும். (16) வாததோஷம் ஸ்நாயுக்களையும், (17) ஸந்திகளையும், (18) ஸிரைகளையும் பற்றியிருந்தால், ஸ்நேஹ

1. ஷட்சரண யோகம்—மாமஞ்சள், வாலுளுவை, கடுகரோஹிணி, அதிவிடயம், சித்திரமூலம், வட்டத்திருப்பி இவற்றின் சூர்ணமுறை.

2. வசாதிகணம் — முதற் புத்தகம் பார்க்க.

சிகித்ஸை, தாஹ சிகித்ஸை, உபநாஹ சிகித்ஸை இவற்றைச் செய்யலாம். (19) வேறு அவயவங்கள் வாயுவால் குறுகிவந்தால், உளுந்தையும் இந்துப்பையும் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தால் அப்யங்கம் செய்யலாம். 14—22½.

**திமிருண்டாக்கும் வாதத்திற்கு சிகித்ஸை:**—வாதரோகத்தில் அவயவம் பரிசவுணர்ச்சியற்றுத் திமிர்த்துப் போனால், இரக்த மோக்ஷணம் செய்து, ஒட்டடை, உப்பு, தைலம் இவற்றை லேபநம் செய்து, அவ்வவயவத்தில் வஸ்திரத்தையும் சுற்றி, உபநாஹ ஸ்வேதமும் செய்யலாம்.—23½.

**அபதாநக சிகித்ஸை :**—இனி அபதாநக சிகித்ஸை[1] கூறப்படும். இந்த்ரியங்கள் உணர்ச்சியற்றுப் போகாமலும், தேஹம் நடுக்க மேற்படாமலும், ஆண்குறி தடித்துக் கொள்ளாமலும், தேஹம் வியர்க்காமலும், கட்டில் படுக்கைகளை உதறி யுதைத்துத் தள்ளாமலும் இருக்கையிலேயே, பாஹ்பாயாமத்தைத்[2] தவிர்த்து மற்ற அபதாநக வியாதிகளில் தாமதமின்றி சிகித்ஸை செய்ய வேண்டும். முதலில் அவயவங்களுக்கு நன்கு ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்து, சிரஸ்ஸைப்பற்றிய ஸ்ரோதஸ்ஸுகளைச் சுத்தம் செய்ய, தீக்ஷ்ண நஸ்யம் பிரயோகிக்கவும். அச்சபேயாவையும், பிறகு விதார்யாதி கணச் சரக்குகளின் கஷாயத்திலும் தயிரிலும் பாலிலும் மாம்ஸரஸத்திலும் பக்குவம்செய்த க்ருதத்தையும் பருகலாம். இவ்விதம் செய்ய, வாயு அதிகமாய் தேஹத்திற் பரவாமல் அல்லது வெகு ஜடிதியிலாவது கெடுதி யுண்டுபண்ணுமலிருக்கும். 24—27.

**மஹாஸ்நேஹம்:**-கொள், யவதானியம், இலந்தங்கொட்டை, பத்ரதார்வாதிகணம், ஆநூபமாம்ஸம் இவற்றைக் கஷாயம் காய்ச்சி, அதில் காடியையும் பாலையும் கூட்டி, மதுரத்ரவ்யகணத்தைக் கல்கமாகச் சேர்த்து "மஹா ஸ்நேஹம்" என்கிற தைலம் பக்குவம் செய்யவும். இது ஸேசநம், அப்யங்கம், அமிழ்தல், அன்னபானங்களில் உபயோகித்தல், நஸ்யம், அநுவாஸநம் என்கிற பிரயோகங்களால் வாததோஷத்தைப் போக்கும்; மேலும் முற்கூறிய ஸ்நேஹ-ஸ்வேத சிகித்ஸைகளும் நன்கு பிரயோகிக்கப்படுமானால் வாததோஷத்தை நிவ்ருத்தி செய்யும்.—28, 29½.

**அபதாநகத்தில் சிரோவிரேசநம் :**— அபதாநகவாதத்தில் வேகங்களுக்கு இடையிடையே இப்பிணியாளிக்கு அடிக்கடியும் தீக்ஷ்ணமாகவும் கபத்தைப் போக்கக் கூடியவையுமான அவபீடக நஸ்யங்களாலும், ப்ரதமந நஸ்யங்களாலும் சிரோவிரேசநம் செய்விக்கவும்; இவ்வுபசாரங்களால் ச்வஸநங்கள் என்கிற பிராணநாடி

1. அபதாநகம் — முதற் புத்தகம் பார்க்க.
2. பாஹ்யாயாமம் — முதற் புத்தகம் பார்க்க.

களில் அல்லது ச்வாஸநாடிகளில் அடைபட்டுள்ள கபம் வெளிப் பட்டுப்போனால் ரோகிக்குப் பிரஞ்ஞை யுண்டாகும்.—30½.

அபதாநகத்தில் உபயோகமான சில க்ருதங்கள் :—(1) ஸௌவர்ச்சல லவணம், கடுக்காய், த்ரிகடு இவற்றைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தை வாதம் மிகுதியாயுள்ள அபதாநகத்தில் உபயோகிக்கலாம். (2) வெள்ளிலோத்திப் பட்டை எட்டுப் பலம், த்ரிபலை பதினாறு பலம், மஹாபஞ்சமூலம், ஆமணக்கு வேர், கண்டங்கத்திரிவேர், சிவதை இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; இவற்றை ஒரு திரோணம் ஜலத்திற் சேர்த்து, அது நாலிலொரு பங்காக வற்றும்படிக் காய்ச்சி யெடுக்கவும்; அதில் ஒரு ஆடகப் பிரமாணம் தயிர் சேர்த்து, மூன்று பலம் யவக்ஷாரமும் கூட்டி ஒரு பிரஸ்த்தம் க்ருதத்தை அதில் பக்குவம் செய்யவும். **தில்வகக்ருதம்** என்னும் இதைப் பருக ஓர் அவயவத்தை அல்லது ஸர்வாவயவங்களையும் பற்றிய மிகக் கேடான நிலைமையிலுள்ள வாதரோகங்களும், யோநிரோகங்களும், குல்மரோகமும், அண்டவிக்கமும், மஹோதரமும் நீங்கும். (3) பெருவாகையின் பட்டையையும், (4) அசோகம் பட்டையையும் சேர்த்துத் தில்வகக்ருதம் போலவே க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க, அதைப் போலவே குணமுண்டாக்கும். 31—33½.

மிச்ர தோஷங்களாலான அபதந்த்ரகத்திற்குச் சிகித்ஸை :—முற்கூறிய சிகித்ஸைகளைக் கேவல வாயுவினாலுண்டான அபதாநகத்திற் செய்யலாம். ஸம்ஸர்கதோஷங்களாலுண்டான கோளாறுகளில், தனித் தனி தோஷத்தினாலுண்டாகும் கோளாறுக்குக் கூறியவற்றையே ஏற்றவாறு சேர்த்துச் சேர்த்துப் பிரயோகிக்கவும். (1) கபத்துடன் கூடிய அபதாநகாதி வாதரோகத்தில் அசோகம் பட்டை, கடுக்காய், காயம், தாமரைக் கிழங்கு, இந்துப்பு, கடலுப்பு, ஸௌவர்ச்சலவணம் இவற்றின் சூர்ணத்தை யவதானியக் கஷாயத்துடன் உட்கொள்ளலாம். (2) இருதய நோய், பார்ச்வசூலை இவற்றுடன் கூடிய அபதந்த்ரகத்தில் காயம், ஸௌவர்ச்ச லவணம், சுக்கு, மாதளை, புளிவஞ்சி இவற்றின் சூர்ணத்தையாவது யவதானியக்வாதத்துடன் உட்கொள்ளலாம். (3) கப-வாதக்கோளாறுகளிலும், ஹ்ருத்ரோகத்திலும் கூறப்பட்டுள்ள ஔஷதங்களையாவது உட்கொள்ளலாம். 34—36½.

பாஹ்ய - அந்தராயாமங்களுக்குச் சிகித்ஸை :—பாஹ்யாயாமம் அந்தராயாமம் இவ்வாதரோகங்களில் அர்திதவாதத்திற்குக் கூறும் சிகித்ஸையைச் செய்யவேண்டும்; தைலத் தொட்டியிலும் பிணியாளி படுக்கலாம். இவ்விரு ஆயாமவாதங்களுள் அந்தராயாமம் மிகக் கஷ்டஸாத்தியமானது.—37½.

தநுர்வாதத்தில் ஸாத்யாஸாத்யக் குறிகள் :—(1) பற்களும் முகமும் கறுத்துப் போய், அவயவங்களெல்லாம் துவண்டுவிழ,

நினைவற்றுப் போய், உடலெல்லாம் வியர்த்துள்ள தநுர்வாத ரோகி பத்து நாட்களில் இறந்து விடுவான். (2) முற்கூறிய துர்க் குணங்களில்லாமலும், வேகங்கள் மந்தமாகவும் இருந்தால் அவன் ஜீவிப்பான்; மேலும் உடல் வளைந்தும், உணர்ச்சியற்றும், ஒரு கால் நொண்டியாகவும், கை முடமாகவும், ஒரு பாரிசம் வீழ்ந்து போயும், இரண்டு கால் விழுந்து முடமாகவும் போயிருந்தால், அல்லது அநேக அவயவங்கள் ஸ்வாதீன மற்றுப் போனால் அவனும் பிழைத்து விடுவான்.—38, 39½.

ஹநுஸ்ரம்ஸ-ஹநுஸ்தம்பங்களுக்குச் சிகித்ஸை:—(1) முகவாய்க்கட்டை நழுவிவிட்டால், கீழ்-மேல் தவடைகளில் ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்து, முகவாய்க் கட்டையை மெதுவாக அதன் ஸ்த்தாநத்தில் தள்ளவேண்டும். (2) வாய் திறந்து போய் மூட முடியாததா யிருக்கையில், இவ் வேலையில் நிபுணனாயுள்ள வைத்தியன் ஸ்நேஹ-ஸ்வேதாதிகளைச் செய்து முகவாய்க்கட்டையை மேலுக்குத் தூக்கித் தகுந்த நிலைமையில் வைக்கவும். (3) வாய் மூடிக்கொண்டு திறக்க முடியாத நிலைமையேற்பட்டால், முகவாய்க் கட்டையைத் தகுந்தவாறு கீழே இழுத்துச் சரிப்படுத்த வேண்டும். (4) ஏகாயாமத்திற்குச் செய்வதுபோல மற்றச் சிகித்ஸைகளையும் செய்யலாம்.—40, 41.

ஜிஹ்வாஸ்தம்ப சிகித்ஸைகள்:—(1) நாக்கு அசைவற்றுப் போகும் ஜிஹ்வாஸ்தம்பக்கோளாறில் நிலைமைகளுக்கேற்றவாறு வாதரோகத்திற்கான சிகித்ஸையைச் செய்ய வேண்டும். (2) அர்திதவாதத்தில் நஸ்யசிகித்ஸை, மூர்த்த தைலமென்கிற சிரஸ்ஸில் தைலப் பிரயோகம், கர்ண தர்ப்பணம், நேத்திர தர்ப்பணம் இச் சிகித்ஸைகளையும், இதே ரோகம் வீக்கத்துடன் கூடியிருந்தால் வமநமும், இதில் அழற்சியும் சிவப்புங்கூட ஏற்பட்டிருந்தால் ஸிராவ்யதையும் செய்யவும்.—42, 42½.

பக்ஷவாத சிகித்ஸை:—பக்ஷாகாத மென்கிற பார்ச்வ வாயுவில் ஸ்நேஹ சிகித்ஸையையும், ஸ்நேஹங் கலந்த ஔஷதங்களைக் கொண்டு விரேசநமும் செய்விக்க வேண்டும்.—43.

அபபாஹுக சிகித்ஸை:—அபபாஹுக வாதத்தில் நஸ்ய சிகித்ஸையைச் செய்வது நலம். போஜனம் செய்தபிறகு ஸ்நேஹ பானம் செய்வதும் அநுகூலமானதாம்.—43½.

ஊருஸ்தம்ப சிகித்ஸை:—ஊருஸ்தம்ப வாதத்தில் கபமும் ஆமதோஷமும் அதிகரிப்பதால் ஸ்நேஹ சிகித்ஸையும் கூடாது; சோதந சிகித்ஸையும் அநுகூலமானதல்ல. ஆகவே கபத்தையும் ஆமதோஷத்தையும் முறைப்படி வெளிப்படுத்தக்கூடிய சிகித்ஸைகளைச் செய்யவும்; ரூக்ஷோபசாரமும் தகுந்தது. யவதானியம், சாமை, கோத்ரவம் இவற்றைச் சிறிது ஜலமும் சொற்பம் தைலமும் சேர்த்து உப்பில்லாமல் பக்குவம்

செய்த சாகங்களோடு புஜிக்கலாம்; ஜாங்கலமாம்ஸங்களையும் அச் சாகங்களுடன் கலந்து நெய்யில்லாமற் பக்குவம் செய்து புஜிப்ப வன் தேன், ஜலம், அரிஷ்டமென்கிற மது இவற்றை அநுபான மாகப் பருகவேண்டும். (1) வத்ஸகாதிகண சூர்ணத்தையாவது, (2) ஹரித்ராதிகண சூர்ணத்தையாவது, (3) வசாதிகண சூர்ணத் தையாவது, (4) ஷட்சரண சூர்ணத்தையாவது இந்துப்பைக் கூட் டிய உஷ்ண ஜலத்துடன் உட்கொள்ளலாம். (5) த்ரிபலை, சவ்யம், கடுகரோஹிணி, கோரைக் கிழங்கு இவற்றின் கல்கத்தையாவது தேனுடன் புஜிக்கலாம். (6) சவ்யம், கடுக்காய், சித்திரமூலம், தேவதாரு இவற்றின் கல்கத்தையாவது அங்ஙனமே தேனுடன் உட்கொள்ளலாம். (7) கடுக்காய், குங்கிலியம், சிலாஜது இவற் றின் கல்கத்தையாவது பசு மூத்திரத்துடன் உபயோகிக்கலாம். 44—48.

வியோஷாதி குக்குலு:—த்ரிகடுகம், சித்திரமூலம், கோரைக் கிழங்கு, த்ரிபலை, வாய்விடங்கம் இவை ஸமபாகம்; அனைத்துக் கும் ஸமமாக மஹிஷாக்ஷி குக்குலுவும் சேர்த்து, குளிகைகள் செய்து புஜிக்க, மேதோ தோஷம், கபதோஷம், ஆம தோஷம், வாத தோஷம் இவற்றாலான எல்லா வியாதிகளும் தீரும்.—49½.

ஊருஸ்தம்பத்தில் ஸ்வேத-ஸேக லேபங்கள்:— முற்கூறிய சிகித்ஸைகளால் கபத்தினால் சூழப்பட்டதும், மேதோ தோஷத் துடன் கூடியதுமான வாயு தணிவடையும். க்ஷாரங்கள், கோமூத் திரம் இவற்றைக் கலந்த சரக்குகளைக் கொண்டு ஸ்வேதங்களையும், ஸேகங்களையும், உத்வர்த்தநமென்கிற பூச்சுக்களையும் பிரயோகிக்க லாம். புங்கங்காய், கடுகு இவற்றை அதிக அளவான பசு மூத்தி ரத்திற் கலந்து லேபமாயுபயோகிக்கலாம். அல்லது எருக்கு, தழுதாழை, வேம்பு, தேவதாரு இவற்றின் வேர்களை, தேன், கடுகு, நன்கு வேகாத மண் ஓடு, புற்றுமண் இவற்றுடன் கலந்து லேபமா யுபயோகிக்கலாம். 50—52.

ஊருஸ்தம்பத்தில் வியாயாமங்கள்:—கபத்தை க்ஷீணிக்கச் செய்ய இப் பிணியாளி அடியிற் கூறப்படும் எந்த வியாயா மத்தையாவது செய்யலாம்:—தாண்டுவது, சக்திக்கின்றவளவு புணர்வது, தண்ணீர்த் தேங்கி எவ்வித அபாயமுமில்லாத குளத் தில், அல்லது பிரவாஹத்திற்கு எதிரிடையாக ஆற்றில் நீந்தல் ஆகியனவாம். கபமும், மேதோ தோஷமும் நீங்கிய பிறகு இவ் வியாதியில் ஸ்நேஹாதி சிகித்ஸைகளைப் பிரயோகிக்கலாம்.— 53, 54.

மற்ற வாதரோகங்களுக்குச் சிகித்ஸை:—மற்ற வாத ரோகங் களிலும் அவை எந்த ஸ்தாநத்தைப் பற்றியவையாகவும், எந்த தாதுவை ஆச்ரயித்தவையாகவும் இருக்கின்றனவோ அதனதன் தன்மைக் கேற்றவாறு சிகித்ஸைகளைச் செய்யவும்.—54½.

**ஸஹசராதி தைலம்** :—மருதோன்றி, தேவதாரு, சுக்கு இவற்றைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, அதில் தைலம் கூட்டி, வாத விகாரங்களால் அசைந்து நடக்கச் சக்தியற்றவன் உட்கொள்ளவும். பிறகு அவன் இஷ்டப்படி துரிதமாகவோ மெதுவாகவோ நடந்து ஸஞ்சரிக்கக் கூடிய சக்தியைப் பெறுவன்.—55.

**ராஸ்நாதி க்ருதம்** :—சிற்றரத்தை, சுக்கு, சித்திரமூலம், திப்பிலி, கச்சோரம், தாமரைக் கிழங்கு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்து உட்கொள்ளலாம். இது வாத ரோகத்தைப் போக்குவதில் மிகச் சிறந்த ஔஷதம்.—56.

**நிம்பாதி க்ருதம்** :—வேம்பு, சீந்தில், ஆடாதோடை, பேய்ப்புடல், கண்டங்கத்திரி இவற்றை வகைக்குப் பத்து பலம் எடுத்து, ஒரு பிரஸ்தம் நெய்யிற் சேர்த்து பக்குவம் செய்யவும்; இதில் கால் பலம் அளவாக அடியிற் குறிக்கும் சரக்குகளைக் கல்கமாகக் கூட்டவேண்டும்; வட்டத்திருப்பி, வாய்விடங்கம், தேவதாரு, யானைத் திப்பிலி, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், சுக்கு, மஞ்சள், ஜடாமாம்ஸி, சவ்யம், கோஷ்டம், வாலுழுவை, மிளகு, வெட்பாலை, ஜீரகம், சித்திரமூலம், கடுகரோஹிணி, சேராங்கொட்டை, வசம்பு, மோடி, மஞ்ஜிஷ்டி, அதிவிடயம், எலிச்செவிப் பூண்டு, ஓமம், இவையும், ஐந்து பலம் சுத்தி செய்த மஹிஷாக்ஷி குக்குலுவுமேயாம். இந்த க்ருதத்தை உட்கொள்ள பிரபலமான வாத தோஷமும், ஸந்திகள் - எலும்புகள் - மஜ்ஜை இவற்றைப் பற்றிய குஷ்டமும் போகும்; நாடீவிரணம், அர்புதம், பகந்தரம், கண்டமாலை, கழுத்துக்கு மேலுள்ள எல்லா அவயவங்களையும் பற்றிய ரோகங்கள், குல்மம், அர்சஸ், மேஹம், க்ஷயம், அரோசகம், ச்வாஸம், பீநஸம், காஸம், சோகை, இருதய ரோகம், பாண்டு, வெறி, வித்ரதி, வாதரக்தம், இவையும் நிவ்ருத்தியாம். 57—60.

**சிரோவாதத்தில் க்ருத மண்ட - நஸ்யாதிகள்** :—(1) சிற்றாமுட்டி, பில்வவேர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் நெய்யின்மேல் படர்ந்துள்ள ஆடையைச் சேர்த்து பக்குவம் செய்யவும்; இந்த க்ருத மண்டத்தை அரைப் பலம் அல்லது ஒரு பலம் அளவில், சிரஸ்ஸைப் பற்றிய வாதரோகத்தில் நஸ்யமாக இடலாம். (2) அங்ஙனமே முதலை, மத்ஸ்யம், ஆமை, சுலூகம் என்கிற மத்ஸியம் இவற்றின் கொழுப்பை கேவலவாதத்தினாலான கோளாறில் விசேஷமாகப் பிரயோகிக்கலாம்.—61, 62.

**கபத்துடன்கூடிய வாதத்தில் ஜீர்ணபிண்யாகாதி தைலம்** :—பழைய பிண்ணாக்கையும், ப்ருஹத் பஞ்ச மூலத்தையும், தனித்தனியாகக் கஷாயம் காய்ச்சவும்; இவ்விரண்டு கஷாயத்தையும் பிறகு ஒன்றாகச் சேர்த்து, அதில் பாலையும் தைலத்தையும் கூட்டி பக்குவம் செய்யவும்; இதில் சேர்க்கப்படும் தைலம் பாலின் அளவில் எட்டில் ஒரு பங்காக இருக்க வேண்டும். இத் தைலத்தைப்

பானம் செய்து வந்தால் வாத ரோகங்கள் நிவ்ருத்தியாகும்; முக்கியமாய் கபத்துடன் கூடிய வாத ரோகங்கள் நீங்கும்.—63.

பிரஸாரிணீ தைலம் :—நூறு பலம் முதியார்கூந்தலைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் தைலத்தையும், அதற்குச் சம அளவு பாலையும் கூட்டிக் காய்ச்சவும். பிறகு மேதா, மஹாமதோ, ஜடாமாம்ஸி, மஞ்ஜிஷ்டி, கோஷ்டம், சிற்றரத்தை, இரத்த சந்தனம், ஜீரகம், ருஷபகம், காகோலீ, க்ஷீர காகோலீ, தேவதாரு இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும்; இத் தைலம் எல்லா வாத ரோகங்களையும் தீர்க்கும்.—64, 65.

மஹாஸஹசராதி தைலம் :— நூறு பலம் மருதோன்றியைச் சமூலமா யெடுத்து, அதற்குச் சமநிறை தசமூலத்தையும், ஐம்பது பலம் தண்ணீர்விட்டாங்கிழங்கையும் கூட்டி, ஒரு திரோணம் ஜலத்திற் சேர்த்து, நாலில் ஒரு பங்கு மிகும்படிக் கஷாயம் காய்ச்சவும். இதில் ஒரு ஆடகம் தைலத்தையும், அதற்குச் சம பாகம் பாலையும் கூட்டி, இதில் வெட்டிவேர், நகம் என்கிற கந்தத் திரவ்யம், கோஷ்டம், சந்தனம், ஏலக்காய், சிறு நாகப்பூ, ஞாழல், நளியென்னும் ஸுகந்தத்திரவ்யம், கோரைக் கிழங்கு, சிலாஜது, சிவப்புச் சாறணை, ஜடாமாம்ஸி, அயம், தேவதாரு, செவ்வலரி, சதகுப்பி, மட்டிப்பால், நதமென்கிற ஸுகந்தத்திரவ்யம் இவற்றை ஒவ்வொரு பலம் அளவில் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இதை யுபயோகிக்க நடுக்கம், இசிவு, வாயு அடைபட்டிருத்தல், உடல் சுஷ்கித்தல் முதலிய உபத்திரவங்களோடு கூடிய கஷ்ட ஸாத்தியமான வாத ரோகங்களும் நிவாரணமாகும். குல்மம், பித்து, பீநஸம், யோனி ரோகங்கள் இவைகளும் நிவ்ருத்தியாம். 66—68.

பேள தைலம் :—நூறு பலம் மருதோன்றியின் ஸ்வாஸத்தில், ஓர் ஆடகம் தைலமும், தசமூல கல்கம் பத்துப்பலமும், தைலத்திற்கு நான்கு மடங்கு பாலும் சேர்த்துக் காய்ச்சவும். அல்லது நத மென்கிற கந்தத் திரவ்யம், கச்சோரம், மல்லிகை, கோஷ்டம், தேவதாரு, ஏலக்காய், ஜடாமாம்ஸி, கல்மாம், சதகுப்பி, செஞ்சந்தனம் இவற்றையாவது கல்கமாகச் சேர்க்கலாம். பக்குவமானதும் பதினெட்டு பலம் சர்க்கரையைக் கூட்டவும். பேளமுனிவர் அங்கீகரித்த இத்தைலம் கஷ்டஸாத்தியமான வாதரோகங்களையும், வாத குண்டலிகா, பித்து, குல்மம், அண்ட ரோகம் முதலியவற்றையும் தீர்க்க வல்லது. 69—71½.

பலா தைலம் :—சிற்றாமுட்டி நூறு பலம், சீந்திற் கொடி இருபத்தைந்து பலம், சிற்றரத்தை பன்னிரண்டரைப்பலம்; இவற்றை நூறு ஆடகம் ஜலத்தில் சேர்த்து, நூற்றில் ஒரு பங்கு கஷாயமாக மிகும்படி காய்ச்சி யெடுத்து, அதில் ஓர் ஆடகம் தைலத்தையும், தயிர்-தயிராடை-கருப்பஞ்சாறு-சுக்த மென்

னும் காடி இவற்றையும் தைலத்திற்குச் சம அளவாகக் கூட்டி, வெள்ளாட்டுப் பாலைத் தைலத்தினும் அரைப் பங்காகச் சேர்க்கவும். கச்சோரம், ஸரளதேவதாரு, தேவதாரு, ஏலம், மஞ்ஜிஷ்டி, அகில், சந்தனம், தாமரைக்கிழங்கு, போராமுட்டி, கோரைக்கிழங்கு, பெருமல்லி, அரேணுகம், அதிமதுரம், கருந்துளஸி, புலியுகிர், ருஷபகம், ஜீவகம், முருக்கம்பிசின், கஸ்தூரி, கருஞ்சாறடை, ஜாதிபத்திரி, சிறு நாகப்பூ, குங்குமப்பூ, கல்மாச்சத்து, ஜாதிக்காய், சிறு தேக்கு, கோரைக்கிழங்கு, இலவங்கப்பட்டை, குந்துருகம், கர்ப்பூரம், மட்டிப்பால், ஸ்ரீவாஸ மென்கிற குங்கிலியத்தைலம், இலவங்கம், நகமென்கிற ஸுகந்தவஸ்து, தக்கோலம், கோஷ்டம், ஜடாமாம்ஸி, ஞாழல், சாமந்தி, கிரந்திதகரம், தமநம், வசம்பு, மருக்காரை, பெருங்கோரைக் கிழங்கு, நாககேஸரம் இவற்றை வகைக்கு ஒரு பலம் கல்கமாகச் சேர்த்துப் பக்குவம் செய்து வடிகட்டி, அதில் பத்ரகல்கத்தைச் சேர்க்கவும்.[1] இத்தைலத்தை முறைப்படி உபயோகித்தால் காஸம், ச்வாஸம், ஜ்வரம், வாந்தி, மூர்ச்சை, குல்மம், க்ஷதகாஸம், ப்லீஹம், க்ஷயம், அபஸ்மாரம் இவையும், வறுமையுங்கூட தீரும். "பலாதைலம்" எனப்படுகிற இது வாத ரோகங்களைப் போக்குவதில் மிகச் சிறந்தது. 72—80.

வாதரோகாத்தியாயத்திற் கூறிய ஸ்நேஹங்களின் பிரபாவம் :—முற்கூறிய ஸ்நேஹங்களைப் பானம் செய்யவும், நஸ்யமிடவும், அப்யங்கம் பண்ணவும் காலந்தவறாமல் உபயோகித்தால், தீங்கு விளைவிக்கக் கூடிய வாதரோகங்கள் சீக்கிரம் நிவ்ருத்தியாகும்; மலட்டு ஸ்த்ரீகளும் புத்திரப் பேறுடையவராவர்.—81.

ஸ்நேஹாதிகளால் திரவிக்கும் கப-பித்தங்களைப் பரிஹரித்தல் :—முற்கூறிய ஸ்நேஹ சிகித்ஸைகளாலும், ஸ்வேத சிகித்ஸைகளாலும் கபம் ஊறித் திரவித்து பக்வாசயத்தை யடைந்ததாகக் குறி தோன்றியதும், பித்தமும் மேலிட்ட குறி அங்ஙனமே காணப்பட்டதும், அக்கப-பித்தங்களை வஸ்திகளைப் பிரயோகித்து வெளிப்படுத்த வேண்டும்.—82.

---

1. தைலம் முதலியதைப் பக்குவம் செய்து இறக்கியவுடனே சூடான நிலைமையிலேயே, அதற்கு விசேஷ மணத்தையுண்டுபண்ணுவதற்காகக் கர்ப்பூரம், கஸ்தூரி முதலியவைக் குழம்பாக ஆட்டி அதில் சேர்ப்பது 'பத்ர கல்கம்' எனப்படுகிறது.

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

## வாத - சோணித சிகித்ஸை

இனி வாத-சோணித சிகித்ஸை[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

**வாத சோணிதத்தில் இரக்த-மோக்ஷணம் செய்தல் :**—வாத-சோணித ரோகிக்கு முதலில் ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்து, அப்பால் அந்தந்த தோஷ நிலைமைகளுக்கும், சரீர பலாதி நிலைமைகளுக்கும் ஏற்றவாறு, வாத தோஷமும் அதிகரிக்காத வண்ணம், இரத்தத்தைச் சொற்பமாக அடிக்கடியும் வெளிப்படுத்த வேண்டும். (1) வாத-சோணிதத்தில் அவயவங்களில் வலியும், சென்னிறமும், அழற்சியும் உண்டானால், அட்டைகளால் இரத்தத்தை வெளிப்படுத்தலாம். (2) சிமசிமா வென்கிற உணர்ச்சியும், தினவும், வலியும் உண்டாகிற நிலைமையில் ச்ருங்கமென்கிற பீச்சாங்குழலால் அல்லது அலாபுகடிகைகளால்[2] இரத்தத்தை உறிஞ்சலாம். (3) ஓரிடம் விட்டு மற்றோரிடத்திற் பாவும் அசுத்த இரத்தத்தைப் பிரச்சநமென்கிற கருவியினாலாவது, ஸிரைகளைக் கீண்டாவது வெளிப்படுத்தலாம்.—1-2½.

**வாத - சோணிதத்தில் இரக்த - மோக்ஷணத்திற்குத் தகாத நிலைமைகள் :**—வாத - சோணித ரோகிக்கு அவயவங்கள் வாடியிருந்தால் இரத்தத்தை வெளிப்படுத்தலாகாது ; இரத்தம் ரூக்ஷமாகவும், ஆகவே வாதம் அதிகரித்ததாகவும் இருந்தால் இரக்த மோக்ஷணம் செய்யக்கூடாது. இவர்களுக்கு இரத்தம் வெளிப்படுவதால் வாதம் அதிகரித்து, அத்தோஷம் ஆழமான வீக்கத்தையும், திமிர்ப்பையும், நடுக்கலையும், ஸ்நாயு-ஸிரைகள் இவற்றைப்பற்றிய ரோகங்களையும், ஆயாஸத்தையும், மற்றும் வாதத்தினாலேற்படக்கூடிய கோளாறுகளையும் உண்டுபண்ணும்.—3, 4.

**வாத சோணிதத்தில் விரேசநம் செய்விக்கு முறை :**—இப்பிணியில் முதலில் ஸ்நேஹசிகித்ஸை செய்து, ஸ்நேஹம் கலந்த ஔஷதங்களால் பிறகு விரேசநம் செய்ய வேண்டும்.—4½.

**வாதாதிகமான வாத - சோணிதத்திற்குச் சிகித்ஸைகள் :**—வாதம் அதிகரித்த வாத - ரக்தத்தில், ரோகிக்கு (1) புராண க்ருதத்தைப் பானம் செய்யக் கொடுக்கலாம். (2) ச்ராவணி, க்ஷீரகாகோலி, பிரம்மதண்டு, ஜீரகம், கடுகு இவற்றைச் சம அளவாகச் சேர்த்து, பாலும் கூட்டி பக்குவம் செய்த க்ருதம் வாத-ரக்தத்தைப் போக்கும். (3) திராக்ஷை, இலுப்பைப்பூ இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்தெடுத்த க்ருதத்தையாவது கற

1. வாத-சோணிதம்—வாத-ரக்தம்.

2. அலாபுகடிகை — முதற் புஸ்தகம் பார்க்க.

கண்டு கூட்டி பானம் செய்விக்கலாம். (4) அங்ஙனமே சிந்திற் கொடியின் ஸ்வரஸத்திற் காய்ச்சிய பாலையும் பருகலாம். (5) தைலம், பால், சர்க்கரை இவற்றைக் கலந்தாவது பானம் செய்யலாம். (6) சிற்றாமுட்டி, தண்ணீர்விட்டாங்கிழங்கு, சிற்றரத்தை, தசமூலம், பெருஞ்ஜீரகம், சிவதைவேர், ஆமணக்கு, மல்லிகை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையும் பருகலாம்; இது வாத ஸம்பந்தமான விகாரங்களையும் போக்கும். (7) தாரோஷ்ணத்தை கோமூத்திரம் கலந்தாவது உட்கொள்ள, வாததோஷம் அநுலோமநமாக வெளியாகும். 5—9.

பித்தாதிகமான வாத-சோணிதத்திற்குச் சிகித்ஸைகள் :—பித்தம் அதிகரித்துண்டான வாத-சோணிதத்தில் (1) தண்ணீர்விட்டாங் கிழங்கு, கடுக ரோஹிணி, பேய்ப்புடல், த்ரிபலை, சிந்தில் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தைப் பருகலாம்; (2) மதுரமாகவும், கைப்பாகவுமுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது, (3) அச் சரக்குகளாலேயே பக்குவம் செய்த பாலையாவது பானம் செய்யலாம். (4) பித்த தோஷம் மிக்க அதிகரித்திருந்தால், விரேசநமாவதற்காகப் பாலுடன் ஆமணக்கெண்ணெயை முறைப்படி பானம் செய்யலாம். அது ஜீர்ணமானதும் பாலும் அன்னமும் புஜிக்கலாம். (5) கடுக்காய்களைக் கஷாயமாகக் காய்ச்சி, அக்கஷாயத்தை நெய்யிலிட்டு பக்குவம் செய்தாவது பருகலாம். (6) சிவதைவேரின் சூர்ணத்தைப் பாலின் அநுபானத்தோடாவது உட்கொள்ளலாம். (7) அப்பிணியாளிக்கு நெய் கூட்டிய பாலைக்கொண்டு வஸ்திகளைப் பிரயோகித்தாவது மலத்தை வெளிப்படுத்த வேண்டும்; வாத-ரக்தத்தில் வஸ்திக்குச் சமானமாக வேறு சிகித்ஸை கிடையாது; அதிலும் விசேஷமாக குதத்தில் வலியும், பார்ச்வசூலையும், அஸ்திகளில் வலியும், வயிற்று நோயும் ஏற்பட்டிருந்தால், அந்நிலைமைகளில் வஸ்தி சிகித்ஸையே மிகச் சிறந்தது. 10—13½.

கபாதிகமான வாத-சோணிதத்திற்குச் சிகித்ஸைகள் :—கபம் அதிகரித்துண்டான வாத-சோணிதத்தில் (1) கோரைக்கிழங்கு, திராக்ஷை, மஞ்சள் இவற்றின் கஷாயத்தைத் தேன் கூட்டி யுட்கொள்ளலாம். (2) த்ரிபலாகஷாயத்திலாவது தேன் கலந்து பருகலாம். (3) சிந்திலையாவது, எந்த விதமாகவேனும் பக்குவம் செய்து பானம் செய்யலாம். (4) அவனவனது நிலைமைக்குத் தகுந்த ஸ்நேஹத்தைப் பருகச் செய்து, வமநமும் செய்வித்து, அப்பால் மெதுவாக தேஹம் ருக்ஷமாகக்கூடிய சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—14, 15.

த்ரிபலாதி அயஸ்க்ருதி :—த்ரிபலை, த்ரிகடு, இலவங்கப் பத்திரி, ஏலம், மூங்கிலுப்பு, சித்திர மூலம், வசம்பு, வாய்விடங்கம், மோடி, ஜடாமாம்ஸி, ஆடாதோடை, இலவங்கப்பட்டை, ருத்தி,

நீர்த்திப்பிலி, சவ்யம் இவற்றைச் சமபாகமெடுத்து, தண்ணீரைச் சேர்த்து நன்றாக ஆட்டி, காலையில் எடுத்து ஓர் இரும்புப்பாத்திரத்தினுள் இக்கல்கத்தை லேபநம் செய்து வைத்து, பகற்பொழுதில் புஜிக்கவும். எல்லாத் தோஷங்களாலுமுண்டான வாத-ரக்தத்தில், அதிலும் முக்கியமாய் வலியுடன் கூடிய வாத-ரக்தத்தில் இக்கல்சம் மிகவும் அனுகூலமானது.—16, 17½.

வாத - சோணிதத்தில் சில போது சிகித்ஸைகள் :—(1) நீர்முள்ளியிலையைச் சமைத்துப் புஜித்துக்கொண்டு, நீர்முள்ளியையே கஷாயமிட்டும் பருகிவந்தால், எப்பொழுதும் பொறுமையுடனிருக்கப் பழகியவனிடம் சினம் பற்றறுவதுபோல் வாத-ரக்தம் தீர்ந்து விடும். (2) பிணியாளி பிரஹ்மசர்யவிரத மனுஷ்டித்தவனாய், கந்தபாஷாணத்தையும் வஸையையும் பஞ்ச மூல ஸ்வரஸத்தோடாவது, நெல்லிக்கனியின் ஸ்வரஸத்தோடாவது உட்கொண்டுவர, தேஹத்தில் வெகு நாட்களாய் ஊறிப்போயுள்ள வாத-ரக்தமும் நிவாரணமாகும்.—18, 19½.

வாத-சோணிதத்திற்கு பாஹ்யசிகித்ஸை :—வாத - ரக்தத்திற்கு இதுகாறும் உள்ளே ஒளஷதமுபயோகிக்கும் சிகித்ஸை கூறப்பட்டது. இனி இதற்கு சர்மத்தின் மேல் பிரயோகிக்கக்கூடிய சிகித்ஸை விவரிக்கப்படும்.—20.

ஆரநாளாதி தைலம் :—அன்னம் ஊறவைத்த ஜலம் ஓர் ஆடகம் எடுத்து, அதிற் காற்பங்கு தைலம் சேர்த்து, ஸாம்பிராணியையும் கூட்டிக் காய்ச்சி, ஒரு பெரிய பாத்திரம் நிரம்பிய ஜலத்தில் ஊற்றிக் கடைந்து, வாத - ரக்தரோகிக்கு மேலே உபயோகிக்க, ஜ்வரம், அழற்சி, வலி இவை நீங்கும்.—21.

பிண்ட தைலம் :—முற்கூறிய தைலத்தில் தேன் மெழுக்கைச் சேர்த்து உருக்கி, அதில் மஞ்ஜிஷ்டியின் சூர்ணத்தையும் கல்கமாகக் கூட்டி பக்குவம் செய்து, அப்யங்கத்திற்கு உபயோகித்து வந்தால், வாத-ரக்த நோய் தீரும்.—22.

வாத - சோணிதத்தில் பலவித பாஹ்யோபசாரங்கள் :—(1) தசமூலம் சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பெரிதும் வாதம் அதிகரித்த வாத - சோணிதத்தில் மேலே ஊற்றிவந்தால், உடனே வலி நிவாரணமாகும். (2) இளஞ் சூடான நெய்யை அங்ஙனமே ஊற்றினாலும், அவ்விதமான குணமுண்டாகும். (3) மதுர ரஸமுள்ள சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த நான்கு விதமான ஸ்நேஹங்களையும் [1] ஒன்று கூட்டி, இளஞ்சூடாக மேலே ஊற்ற, பிடிப்பு, இசிவு, வலி இவை நீங்கும். (4) தேஹத்தில் அழற்சியிருந்தால், அந்த ஸ்நேஹங்களையே குளிரச் செய்து மேலே ஊற்றலாம். (5) பசுவின் பால், செம்மறியாட்டுப்பால், வெள்

1. க்ருதம், தைலம், வஸா, மஜ்ஜா என்பவை "நான்கு வித ஸ்நேஹங்கள்."

ளாட்டுப்பால். இவற்றில் தைலம் கலந்து முன்போலவே பிடிப்பு முதலியவற்றிற்கு இளஞ்சூடாகவும், அழற்சிக்குச் சீதளமாகவும் உபயோகிக்கலாம். (6) ஜீவநீய கணச் சரக்குகளாலான கஷாயத்தையும், (7) இலகு பஞ்சமூல கஷாயத்தையும் பிடிப்பு முதலியவற்றில் இளஞ் சூடாகவும், அழற்சியில் குளிர்ச்சியாகவும் மேலே ஊற்றலாம். (8) திராக்ஷாரஸம், (9) கருப்பஞ்சாறு, (10) மத்யங்கள், (11) தயிர், (12) தயிராடை, (13) காடி, (14) அரிசி கழுவிய நீர், (15) தேன் கலந்த ஜலம், (16) சர்க்கரை கரைத்த நீர் இவையெல்லாம் வாத-ரக்தத்தில் மேலே ஊற்றுவதற்குச் சிறந்தவையாம். (17) அன்பார்ந்தவரும், இன்பமுறப் பேசும்பண்பினரும், குளிர்ச்சியும் மிக்க மிருதுத் தன்மையும் பொருந்திய அங்கங்களைப் பெற்றவருமான பெண்கள் கரங்களாலும் ஸ்தனங்களிலும் சந்தனக் குழம்பைப் பூசிக்கொண்டு அணைத்துக்கொள்ள, இப்பிணியாளியின் தேஹ தாபமும், நோவும், வாட்டமும் தானே விலகும். 23—27.

வாத - சோணிதத்தில் லேபங்களும் உபநாஹாதிகளும் :—
வாத - ரக்தத்தில் சர்மம் சிவந்து, வலியும் அழற்சியும் மிகுதியாயிருக்கையில் இரக்தமோக்ஷணம் செய்து, அடியில் வரும் லேபநத்தைப் பிரயோகிக்கவும் : (1) வறள் தாமரை, மஞ்ஜிஷ்டி, மரமஞ்சள், அதிமதுரம், சந்தனம், கற்கண்டு, ஞாழல், கரும்பு, பெருங்கடலை, ஆமணக்கு, மா இவற்றை லேபமாகச் செய்யவும். இந்த லேபம் வலி, அழற்சி, விஸர்ப்பம், சிவப்பு, வீக்கம் இவற்றைப் போக்கும். (2) வாதஹரச் சரக்குகளைச் சேர்த்து ஸ்நிக்த்தமாகப் பக்குவம் செய்த க்ருஸராவும்,[1] (3) எள்ளு, கடுகு இவற்றின் கல்கத்தைச் சேர்த்த பயற்றம் பாயஸமும் உபநாஹமாகப் பிரயோகிக்கப்படுமானால், வலி நன்றாகத் தீரும். (4) நீர்வாழும் ஜந்துக்கள், ப்ரஸஹங்கள், ஆநூபஜந்துக்கள், வேஸவாரங்கள் இவற்றை ஜீவநீயௌஷதங்களோடும் ஸ்நேஹங்களோடும் கலந்து உபநாஹம் செய்ய உபயோகிக்கலாம். இதனால் திமிர்ப்பு, குத்தல் வலி, இசிவு, வீக்கம், அவயவப்பிடிப்பு இவை நிவ்ருத்தியாகும். (5) நீர்வாழும் ஜந்துக்கள் முதலியவற்றின் கொழுப்பை ஜீவநீயச் சரக்குகளோடு பக்குவம் செய்து, பாலுடன் கலந்து உபநாஹமாக உபயோகித்தாலும் அதே பயனுண்டு. (6) மருதோன்றி வேரையும், ஜீவந்தி மூலத்தையும் நெய் விட்டு அரைத்து, செம்மறியாட்டின் பாலில் கூட்டி லேப மிடலாம். (7) அங்ஙனமே பொரித்த எள்ளைப் பாலில் சேர்த்து, அரைத்து லேபமாகப் பிரயோகிக்கலாம். (8) வாதம் அதிகரித்த வாத-சோணிதத்தில் ஆழிவிதையைப் பால் விட்டு அரைத்து மேலே லேபநம் செய்யலாம். (9) அல்லது ஆமணக்கு விதைக

1. க்ருஸரா—முதற் புத்தகம் பார்க்க.

ளைப் பால் சேர்த்து அரைத்து லேபநமா யுபயோகிக்கலாம். இந்த லேபநங்கள் வலியை நிவ்ருத்தி செய்யும். (10) பசுவின் மூத்திரம், யவக்ஷாரம், ஸுரை இவற்றிற் பக்குவம் செய்த க்ருதம் அப்யங்கத்திற்கு ஹிதமாம். (11) நன்கு பக்குவம் செய்த சுக்தமென்கிற காடியை தேன் கூட்டி ஸேசநம் செய்யவும், அப்யங்கம் செய்யவும் உபயோகிக்கலாம். (12) கபாதிகமான வாத-சோணிதத்தில் ஒட்டடை, வசம்பு, கோஷ்டம், சதகுப்பி, மஞ்சள், மரமஞ்சள் இவற்றை லேபமாக மேலே உபயோகிக்க வலி நிவாரணமாகும். (13) செம்முருங்கையின் வித்துகளை காடி விட்டு ஆட்டி, வாத-கபாதிகமான வாத-சோணிதத்திற்கு மேலே லேபநம் செய்ய நல்ல குணமுண்டாகும். (14) வாதகபம் அதிகரித்த வாத-ரக்தரோகிக்கு செம்முருங்கை வித்தின் லேபத்தை யுபயோகித்த பின் முகூர்த்த நேரம் கழித்துக் காடிகளை ஊற்றிக் குளிப்பாட்டவும். 28—37.

உத்தாந வாத சோணிதத்திற்கு பாஹ்யோபசாரம்:— வாத-ரக்தம் சர்மத்தில் சிறிது மேற்புறமாக மாத்திரம் உண்டாயிருந்தால் லேபநங்கள், அப்யங்கம், ஸேகம், மூழ்குதல் இவற்றால் அது பரிஹரிக்கக் கூடியதாம்.—37½.

கம்பீர-வாத சோணிதத்திற்குப் பரிஹாரம்:— தேஹத்தில் ஆழமான பாகங்களைப் பற்றிய வாத-சோணிதத்திற்கு விரேசநம், ஆஸ்த்தாபநவஸ்தி, ஸ்நேஹ பாநங்கள் இவற்றைப் பிரயோகித்து பரிஹாரம் செய்யவேண்டும்.—38.

வாத-கபாதிகமான உத்தாநவாத சோணிதத்திற்கேற்ற லேபங்கள்:—வாத-கபங்கள் அதிகரித்த மேற்புறமாயுண்டான வாத-சோணிதத்தில் லேபம் முதலியவற்றை இளஞ்சூடா யுபயோகிக்க வேண்டும். அதில் குளிர்ச்சியான ஔஷதப் பிரயோகங்களால் ஸ்தம்பநம் என்கிற பிடிப்பு ஏற்பட்டு, அழற்சியும், வீக்கமும், வலியும், அரிப்பும் மிக்க அதிகரித்துவிடும்.—39.

பித்த-ரக்தாதிகமான வாத-சோணிதத்திற்கேற்ற லேபாதிகள்:—பித்தமும் இரத்தமும் மிகுதியாயுள்ள வாத-சோணிதத்தில் லேபம் முதலியவை குளிர்ச்சியா யிருக்கவேண்டும். அவை உஷ்ணமாயிருந்தால் கொப்புளித்தல், நோவு, சிவப்பு, வியர்த்தல், வெடிப்பு இக் கோளாறுகள் ஸம்பவிக்கும்.—40.

மதுயஷ்ட்யாதி தைலம்:—நூறு பலம் அதிமதுரத்தைப் பத்துப் பங்கு ஜலத்திற் சேர்த்து, நாலில் ஒரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி, அக்கஷாயத்தில் ஒரு ஆடகம் தைலமும் அதற்குச் சமமாகப் பாலையும் கூட்டி பக்குவம் செய்யவும். இதில் அடியில் வரும் கல்கத்திரவ்யங்களை ஒவ்வொரு பலம் அளவிற் சேர்க்கவும்:—பெருமல்லிகை, கீழாநெல்லி, அறுகம்புல், கொக்குமந்தாரை, தண்ணீர்விட்டாங்கிழங்கு, சந்தனம், அகில், கீடமாரி

யென்கிற பூண்டு, ஜடாமாம்ஸி, மேதா, மஹாமேதா, சிந்தில்,
காகோலீ, க்ஷீரகாகோலீ, சதகுப்பி, ருத்தி, தாமரைக் கிழங்கு,
ஜீவந்தி, ஜீவகம், ருஷபகம், இலவங்கப்பட்டை, இலவங்கப்
பத்திரி, நகமென்கிற கந்தத் திரவ்யம், வெட்டிவேர், வறள்
தாமரை, மஞ்ஜிஷ்டி, நன்னாரி, பேய்த்துமட்டி, பெருங்கோரைக்
கிழங்கு. இத்தைலத்தை நான்கு விதமாகத் தேஹத்தில் பிர
யோகிக்க[1] வாத-ரக்தம், பித்த எரித்தல், ஜ்வரம், வலி இவை
தீரும். 41—44.

**பலா தைலம்:**—சிற்றுமுட்டியைக் கஷாயமிட்டு, அதையே
கல்கமாகவும் சேர்த்து, அதில் தைலத்தையும் பாலையும் ஸம
மாகக் கூட்டி பக்குவம் செய்யவும். இத்தைலத்தையே இதே
கஷாயத்தில் ஆயிரமுறை அல்லது நூறுமுறை காய்ச்சி யெடுக்க,
வாத-ரக்தம், வாதரோகங்கள் இவை போகும். இது மிகவும்
சிறந்த இரஸாயனௌஷதம்; இந்திரியங்களுக்குத் தெளிவுண்
டாக்கும்; ஜீவநம்,[2] ப்ருஹ்மணம், ஸ்வர்யம்[3] என்கிற குணங்
களுமுண்டு; புருஷர்களின் சுக்கிரம், ஸ்த்ரீகளுடைய ஆர்த்த
வம்[4] இவற்றின் தோஷங்களையும் போக்க வல்லது.—45, 46.

**மார்க்கரோதத்தினால் வாதம் பிரகோபித்த வாத சோணிதத்
திற்குச் சிகித்ஸை:**—கொழுப்பாவது கபமாவது மிகவும் விருத்தி
யடைந்து, வாத மார்க்கம் அடைபட்டுப் போக, அதனால் வாதம்
பிரகோபிக்குமானால், அதில் முதலில் ஸ்நேஹமும், ப்ருஹ்மண
மும் செய்வது நலம்; பிறகு ஆட்யவாதத்திற் கூறியுள்ள [5]சிகித்
ஸையையும், அப்பால் வாத-சோணித சிகித்ஸையான ஸ்நேஹ
நாதி சிகித்ஸையையும், இரத்த சுத்திக்கான சிகித்ஸையையும்
செய்ய வேண்டும்.—47, 48.

**வாத-சோணிதத்தில் பிராணாதிவாயுக்கள் பிரகோபித்திருந்
தால் செய்யும் சிகித்ஸைகள்:**—பிராணவாயு முதலிய ஐந்து
வாயுக்களும் ஒருமிக்கப் பிரகோபித்திருந்தால், வாத வியாதியிற்
கூறியுள்ளபடி, வியாதிநிலைமைகளுக்கு ஏற்றவாறு எந்த
வாயுவுக்குச் சிகித்ஸை செய்யவேண்டுமோ அந்த வாயுவுக்குச்
சமீபமாயுள்ள விடத்தை அனுஸரித்து, அந்தந்த வாயுவுக்கேற்ற
சிகித்ஸையைப் பிரயோகிக்க வேண்டும்; மேலும் பஞ்ச வாயுக்
களில் எதெது மற்றவைகளைவிட அதிக பலமுள்ளதெனத் தெரிய

1. பானம், நஸ்யம், லேபகம், அநுவாஸந வஸ்தி என்று ஸ்நேஹத்
திற்குப் பிரயோகங்கள் நான்கு.
2. ஜீவநம்—முதற் புத்தகம் பார்க்க.
3. ஸ்வர்யம்—முதற் புத்தகம் பார்க்க.
4. சோணிதம் அல்லது ஆர்த்தவம்—முதற் புத்தகம் பார்க்க.
5. ஆட்யவாதம் — ஊருஸ்தம்பம்; ஊருஸ்தம்பசிகித்ஸையைப்
பற்றி முன் அத்தியாயம் பார்க்க.

வருகின்றதோ, அவ்விதம் அதிக பலமுள்ள அந்தந்த வாயுவுக்குக் கிரமமாக முதலில் சிகித்ஸை செய்யவேண்டும்.—49.

**வாத-சோணிதத்தில் ஆமதோஷம் நீங்கிய பிறகு செய்யும் சிகித்ஸை:**—ஆமதோஷத்துடன் கூடிய வாத-சோணிதரோகத்தில் ஸ்வேதம், இலங்கநம், பாசநம் இச்சிகித்ஸைகளாலும், ரூக்ஷ குணமுள்ள லேபந-ஸேசநாதிகளாலும் ஆமதோஷம் நீங்கியதாகச் செய்யப்பட்டதும், அப்பால் ஸாதாரண வாததோஷத்தைப் பரிஹரிக்கக்கூடிய சிகித்ஸையைச் செய்ய வேண்டும்.—50.

**வாத சோணிதம் முதலியவற்றிற்கு ஆரம்பத்திலேயே சிகித்ஸை செய்தல்:**—க்ஷயம், இசிவு, அவயவங்கள் சுருங்கிப் போதல், உணர்ச்சியற்றுப் போதல், நடுக்கம், முகவாய்க்கட்டை நெகிழ்தல், அர்திதவாதம், கஞ்ஜத்தன்மை, பங்குத்தன்மை, வாத-ரக்தம், ஸந்தி நழுவிப் போதல், பக்ஷவாதம், மேதஸ்-மஜ்ஜை இவற்றைப் பற்றிய நோய்கள் இவை ஆழமான ஸ்தாநங்களைப் பற்றியுண்டாவதால் மிகப் பிரயாஸையின்பேரில் நிவ்ருத்தியாகலாம்; நிவ்ருத்திக்க முடியாமலும் போகலாம்; ஆகையால் நல்ல தேஹவலிமையுள்ளவனுக்கு உண்டானவுடனே, உபத்திரவங்கள் ஏற்படாமலிருக்கையிலேயே இவ்வியாதிகளுக்குச் சிகித்ஸை செய்யவேண்டும்.—51, 52½.

**வாத-சோணிதத்தில் ஆவ்ருத தோஷங்களுக்கேற்ற சிகித்ஸைகள்:**—(1) வாயுவானது பித்தத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், சீத சிகித்ஸையையும் உஷ்ண சிகித்ஸையையும் அநேகமுறை மாற்றி மாற்றி யுபயோகிக்கவேண்டும். ஜீவநீய கணச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தைப் பானம் செய்விக்கலாம். ஜாங்கலதேசத்திய ஜந்துக்களின் மாம்ஸத்தையும், வாற்கோதுமையையும், சம்பா அரிசியையும் இப்பிணியாளிக்கு உபயோகிக்கலாம். மிருதுவாக விரேசநமாகக் கூடிய ஔஷதத்தையும் பால் கூட்டிக் கொடுக்கலாம். பாலுடன் கூட்டிய திரவத் திரவ்யங்களால் வஸ்திகளைப் பிரயோகிக்கலாம். பஞ்சமூலம், சிற்றாமுட்டி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலையும் பருகக் கொடுக்கலாம். மதுரரஸமுள்ள ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பக்குவம்செய்த தைலங்களால் காலமறிந்து அநுவாஸந வஸ்தியைப் பிரயோகிக்கலாம். அதிமதுரம் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தையும், பலாதைலத்தையும், பஞ்சமூல கஷாயத்தையும், குளிர்ந்த ஜலத்தையும் மேலே ஊற்றலாம். (2) வாயு கபத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், வாற்கோதுமை அன்னமும், ஜாங்கல தேசத்திய மிருக-பக்ஷிகளின் மாம்ஸங்களும், ஸ்வேதசிகித்ஸையும், தீக்ஷ்ணமான நிரூஹ வஸ்திகளும், வமந - விரேசநங்களும், புராணக்ருதமும், நல்லெண்ணெயும், கடுகெண்ணெயும் அநுகூலமானவை. (3) கப-

பித்தங்களால் வாதம் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், முதலில் பித்தத்தை நிவ்ருத்தி செய்யவேண்டும். (4) வாத-ரக்தத்தினால் ஆவரணம் செய்யப்பட்டால், ஸாதாரணமாய் வாத-சோணித வியாதிக்குச் செய்யப்படும் சிகித்ஸையைச் செய்ய வேண்டும். (5) வாதம் மாம்ஸதாதுவினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், ஸ்வேதசிகித்ஸையும், அப்யங்கமும், மாம்ஸரஸத்தின் பிரயோகமும் அனுகூலமாம்; பாலும் ஸ்நேஹமுங்கூட உபயோகிக்கத் தகுந்தவையாம். (6) வாதம் மேதஸ்ஸினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தால், பிரமேஹசிகித்ஸையும், மேதோரோக சிகித்ஸையும், வாதஹரசிகித்ஸையும் ஏற்ற பரிஹாரங்களாம். (7) வாயுவானது அஸ்த்தியினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தாலும், (8) மஜ்ஜையினால் ஆவரணம் செய்யப்பட்டிருந்தாலும் மஹாஸ்நேஹங்களை[1] உபயோகிக்கவேண்டும். (9) வாதம் சுக்ரத்தினால் ஆவரணம் செய்யப்பட்டால், முற்கூறியுள்ள சிகித்ஸையைச்[2] செய்யவேண்டும். (10) அன்னத்தினால் வாதம் ஆவரணம் செய்யப்பட்டால் இலகுகுணமுள்ள பாசநம், வமநம், தீபநம் என்கிற சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். (11) வாதம் மூத்திரத்தினால் ஆவரணம் செய்யப்பட்டால், மூத்திர விருத்தி செய்யும் ஔஷதங்களையும், ஸ்வேதசிகித்ஸைகளையும், உத்தரவஸ்திகளையும் பிரயோகிக்கலாம். (12) மலத்தினால் வாதம் ஆவ்ருதமானால் ஆமணக்கெண்ணெயும், பேதியென்கிற குணமுள்ள வஸ்திப் பிரயோகங்களும், ஸ்நேஹப் பிரயோகங்களும் ஏற்றவையாம். (13) வாதம் ஸர்வ தோஷங்களாலும், ஸகல தாதுக்களாலும் ஆவரணம் செய்யப்பட்டுள்ள நிலைமையில் கப-பித்தங்களுக்கு விரோதமுண்டுபண்ணாமலும், வாதத்தை ருஜுமார்க்கத்தினால் வெளிப்படுத்தவும் தகுந்த சிகித்ஸையை ஜடிதியிற் செய்யவேண்டும். இந்த நிலைமையில் அபிஷ்யந்தி[3] அல்லாததும், ஸ்நிக்த்தமானதும், ஸ்ரோஸ்ஸுகளைச் சுத்தி செய்வதுமான ஔஷதமும் பானமும் ஏற்றவையாம்; பாசநகுணமுள்ள நிரூஹவஸ்திகளும், பெரும்பாலும் மதுர வஸ்துக்களாலான தைலாதிகளால் அநுவாஸந வஸ்திகளும் பிரயோகிக்கலாம். போதுமான தேஹவன்மையிருக்கின்றதாவென்பதையறிந்து, மிருது விரேசநம் செய்விக்க வேண்டும். இரஸாயநௌஷதங்களை உபயோகிப்பதும் நலம். அதிலும் விசேஷமாய் சிலாஜதுவைப் பாலின் அனுபானத்தோடு

---

1 க்ருத-தைல-வஸா-மஜ்ஜா வென்கிற நான்கு விதமான ஸ்நேஹங்களையும் ஒருமிக்க உபயோகித்தல்; அல்லது வாதரோக சிகித்ஸையிற் கூறியுள்ள மஹாஸ்நேஹம்.

2. வாதரோகசிகித்ஸையில் சுக்ராவ்ருதமான வாதத்திற்குச் செய்யும் சிகித்ஸை யெனக் கருத்து.

3. அபிஷ்யந்தி—முதற் புத்தகம் பார்க்க.

உட்கொள்ளலாம் ; சுத்தமான மஹிஷாக்ஷிகுக்குலுவையாவது பாலுடன் உபயோகிக்கலாம் ; ச்யவநப்ராச லேஹ்யத்தையாவது உட்கொள்ளலாம் ; அல்லது ப்ராஹ்மரஸாயநப் பிரகரணத்தில் முதலிற் கூறப்படுகிற சர்க்கரை கூட்டிய அல்லது சர்க்கரை சேர்க்காத பதினொரு ரஸாயநௌஷதங்களில்[1] எதையும் உபயோகிக்கலாம். 53—65½.

வாத-சோணிதத்தில் அபாநாதி வாதங்கள் ஆவரணமாயிருந்தால் செய்ய வேண்டிய சிகித்ஸைகள் :—அபாநவாயுவை வதேனுமொன்று ஆவரணம் செய்தால் தீபநம், க்ராஹி என்கிற குணமுள்ள எல்லா ஔஷதத்தையும் பிரயோகிக்கலாம். மேலும் வாதம் ருஜு—மார்க்கத்திலிருந்து வெளியாகவும், மூத்திராசயத்தைச் சுத்தியும் செய்யவேண்டும். ஆவரணவாத விகாரங்களுக்கு இங்ஙனம் சுருக்கமாய் சிகித்ஸாமுறை கூறப்பட்டது. கற்றறிந்த வைத்தியன் தானுகவே பிராணுதிவாதங்களுக்கும் ஆவரணுதி விகாரநிலைமைகளைப் பகுத்தறிந்து, அததற்கேற்ற சிகித்ஸையை முறைப்படி நிறைவேற்றுக. விஷயமுணர்ந்த வைத்தியன் உதாநவாயு அடைபட்டிருந்தால், அதை மேல் நோக்கி வெளிப்படுத்த வேண்டும். அபாந வாயுவைக் கீழ்நோக்கி வெளியாகுமாறுத் தூண்டவேண்டும். ஸமாநவாயுவை வாதஹர ஔஷதங்களால் சமநம் செய்யவேண்டும். வியாநவாயுவை மேல்நோக்கியோ, கீழ்நோக்கியோ, மத்தியத்தில் சமநமாக்கியோ உசிதப்படி இயற்கை நிலைமைக்குக் கொண்டுவர வேண்டும். மற்ற நான்கு வாயுக்களிடமிருந்தும் பிராணவாயுவைக் காத்து வரவேண்டும் ; ஏனெனில் அவ்வாயு தேஹத்தில் நிலைத்திருந்தால்தான் சரீரமும் நிலைத்திருக்கும். இவ்வாறு தநாத மார்க்கங்களிற் பாவியுள்ள பிராணுதி வாயுக்களை அததற்குற்ற ஸ்த்தாநங்களிற் சேர்க்கவேண்டும். 66—69½.

வாத-சோணிதத்தில் ஆவரணவாத விகாரங்களுக்குப் பொது சிகித்ஸை :—பித்தாவரணம், இரத்தாவரணம் இவ்விரண்டைத் தவிர்த்து மற்ற எல்லா ஆவரணவாதக் கோளாறுகளிலும் வெள்ளுள்ளியை இரஸாயநமுறைப்படி யுபயோகிக்க அக்கோளாறுகள் தீரும். பித்தத்தினுல் ஆவரணம் செய்யப்பட்ட வாதத்தில் பித்தஹர சிகித்ஸையும், வாதத்தைக் கீழ் நோக்கச் செய்யும் சிகித்ஸையும் ஏற்றவையாம். இரத்தத்தினுல் வாதம் ஆவரணம் செய்யப்பட்டாலும் அதே சிகித்ஸைகளைச் செய்வதோடு, மற்ற ஸாதாரண வாத-சோணிதசிகித்ஸைகளையும் செய்யலாம் ; இதில் இரத்ததோஷம், பித்ததோஷம், வாததோஷம் இவற்றைப் பரிஹரிக்கும் பலவித இரஸாயநப் பிரயோகங்களும் அநுகூலமாம். 70—72.

---

1. இந்தப் பதினொரு ரஸாயநங்களும் உத்தரஸ்த்தாநத்தில் 39-வது அத்தியாயத்திற் கூறப்படுகின்றன.

**சிகித்ஸா ஸ்த்தாநத்தின் முடிவுரை:**—நிதாந ஸ்த்தாநத்திற் கூறிய கிரமப்படி வியாதிகளுக்கெல்லாம் முறையே இங்ஙனம் சிகித்ஸைகள் மொழியப்பட்டன. ஆயுர்வேதவித்யையின் பல னெனக் கூடிய இந்த ஸ்த்தாநம், இதைக் கற்பவருக்கு வியாதி களை யுடனே போக்கக் கூடிய பெருமை யளிக்கவல்லது.—73.

**ஔஷதம் என்பதன் பர்யாயச் சொற்கள்:**—சிகித்ஸிதம் அல்லது சிகித்ஸை, ஹிதம், பத்தியம், பிராயச்சித்தம், பிஷக்ஜிதம், பேஷஜம், சமநம், சஸ்தம் இவை ஔஷதம் அல்லது சிகித்ஸை யென்பதைக் குறிக்கும் ஓரினச் சொற்களாம்.—74.



# கல்ப ஸ்த்தாநம்.

## முதல் அத்தியாயம்.

### வமந கல்பம்.

இனி வமநகல்பம் என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும். ஆத்ரேயாதி மஹாருஷிகள் இங்ஙனம் மொழிந்தருளினர் :—

**வமநத்திற்கும் விரேசநத்திற்கும் சிறந்த சரக்குகள் :—** வமநம் செய்விப்பதற்கு மருக்காரை யென்னும் மருக்களாம் பழமும், விரேசநம் செய்விப்பதற்குச் சிவதைவேரும் எப்பொழுதும் சிரேஷ்டமானவை. இவற்றைத் தவிர மற்ற வமந-விரேசநகுணமுள்ள சரக்குகளை வியாதிகளின் விசேஷமான அந்தந்த நிலைமைகளில் உற்றவாறு உபயோகிக்கலாம்.—1.

**மதநபலத்தைப் பக்குவம் செய்யு முறை :—** அதிக பசுமையில்லாமலும் மிகக் கனியாமலுமுள்ள மருக்களாம்பழங்களை க்ரீஷ்ம-வஸந்தருதுக்களுக்கு இடையில், நல்ல நக்ஷத்திரத்தில், பகற் காலத்திற் கொண்டு வந்து, நன்றாகத் துடைத்து சுத்தம் செய்து, தர்ப்பைகளாலாகிய கவசம் போன்ற கூண்டில் அவற்றைப் போட்டு, நன்றாகக் கட்டி, பசுஞ் சாணத்தை மேலே பூசி, அப்பால் அதைத் தானியக்களஞ்சியத்திற் புதைத்து விடவும். தர்ப்பைகளால் மூடப்பட்டிருப்பதால் எட்டு நாட்கள் சென்ற பிறகு அவை மிருதுவாகவும், தேன்மணம் அல்லது வேறு இஷ்டமான மணமுமுள்ளவைகளாகப் பக்குவமாயிருக்கக் கண்டு, அவற்றை வெளியிலெடுத்து, வெயிலில் உலர்த்தி, அவற்றின் உள்ளிருந்து வித்துகளைக் கிரஹித்து, தயிர், தேன், நெய், இறைச்சி இவற்றைக் கூட்டி அரைத்து உலர்த்தவும். பிறகு அவற்றை யெடுத்து வைத்துக்கொண்டு அவசியமான ஸமயங்களில் உபயோகிக்கவும். 2—5½.

**மதநபலத்தை உட்கொள்ளும் முறை :—** பிறகு சேமித்து வைத்துள்ள அவ்வித்துகளிலிருந்து தேவையான அளவு எடுத்து, நன்கு சூர்ணம் செய்து, அதிமதுரம், செம்மந்தாரை, நறுவிலி, கோவை, கடம்பு, வஞ்சி, சணப்பு, செவ்வெருக்கு, நாயுருவி இவற்றுள் ஏதேனுமொன்றின் கஷாயத்தில் ஓரிரவெல்லாம் அதை ஊறவைத்து, மறுநாட் காலையில் அவ்வனைத்தையும் பிசைந்து வடிக்கட்டி, ஸூத்திரஸ்த்தாநத்திற் கூறியபடி[1] அக்கஷாயத்தைப் பருக, அதனால் நன்கு வாந்தியுண்டாகும். 6—8½.

1. ஸூத்திர ஸ்த்தாநத்தில் 18-ம் அத்தியாயம் பார்க்க.

வமநம் செய்விக்கத் தகுந்த வியாதிகளும் வமநத்தின் அள
வும் :—கபஜ்வரம், பிரதிச்யாயம், குல்மம், அந்தர்வித்ரதி இவ்
வியாதிகளில் விசேஷித்து வமநம் செய்விக்க வேண்டும். பித்தம்
வெளிப்படும் வரையில் வாந்தியாகச் செய்வது வமநத்திற்கான
போது அளவாகும்.—9½.

மதநபலத்தை ஜ்வராரோசகக்-கிரந்தியாதிகளில் உபயோகிக்
கும் வகை :—(1) மருக்காரை வித்துகளின் கஷாயத்திலேயே
மருக்காரை வித்துகளின் சூர்ணத்தைப் பாவனை செய்யவும். இச்
சூர்ணத்துடன் அதற்கு மூன்றில் ஒரு பங்கு த்ரிபலாசூர்ணத்
தைக் கூட்டி, செம்மந்தாரை முதலியதின்[1] கஷாயத்தின் அனு
பானத்தோடு இதை ஜ்வரத்தினலேற்பட்ட அரோசகத்தில் உட்
கொள்ளலாம். கிரந்தி, அபசி, அர்புதம், உதரரோகங்கள் இவற்
றால் வருந்துபவனும், பித்தம் கபஸ்த்தாநத்தை அடைந்திருக்
கையிலும் தேவதாளி முதலியவற்றின் கஷாயத்தோடு அதை
யுபயோகிக்கலாம். (2) இருதயத்தில் அழற்சியுண்டாகையிலும்,
கீழ் நோக்கிய இரக்த-பித்தத்திலும் மருக்காரையின் வித்துகளைச்
சேர்த்து பக்குவம் செய்த பாலையாவது, அவ்விதம் பக்குவம்
செய்த பாயஸத்தையாவது பருகலாம். (3) கபாதிச்யத்தின
லுண்டான வாந்தியிலும், வாயில் மிதமிஞ்சி உமிழ்நீருறுகை
யிலும், தமகச்வாஸத்திலும் மருக்காரைவித்தைச் சேர்த்துக்
காய்ச்சிய பாலிலிருந்துண்டான தயிரின் ஆடையையாவது, அல்
லது அவ்விதமான தயிரையாவது பானம் செய்யலாம். (4) மருக்
காரை முதலிய சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய பாலிலிருந்
தெடுத்த நெய்யை, மருக்காரை முதலியவற்றின் கஷாயத்தி
னலும், அதே சரக்குகளின் கல்கத்தினலும் பக்குவம் செய்து,
கபத்தினல் ஜாடராக்னி தாக்கப்பட்டிருக்கையிலும் தேஹம்
சுஷ்கித்துப் போகையிலும் வமநமாவதற்காக உபயோகிக்கலாம்.
10—14.

ஸாகவமநத்திற்கேற்ற மதநபலரஸக்ரியை முதலியன :—
(1) மருக்களாம் பழத்தின் வித்துகளைச் சேராங் கொட்டைகளைப்
பக்குவம் செய்யு முறைப்படி [2] கஷாயம் காய்ச்சி, கரண்டியில்
ஒட்டும் வரையில் பாகுபதமாகப் பக்குவம்செய்து, இந்த லேஹ

1. இதனல், முன்கூறிய அதிமதுரம், நறுவிலி, கோவை முதலி
யவைகளும் கிரஹிக்கப்படுகின்றன.

2. பல்லாதகாவலேஹம் :—ஒரு திரோணம் ஜலத்தில் ஆயிரம்
சேராங்கொட்டைகளைச் சமைக்கவும். ஜலம் நாலில் ஒரு பங்காகச் சுண்
டிய பிறகு வடிக்கட்டி, அந்த ஜலத்தில் ஒரு துலாம் வெல்லத்தையும்,
சமைத்து வடிக்கட்டி யெடுத்த சேராங் கொட்டைகளையும் நன்றாகச்
சிதைத்துப்போட்டு த்ரிபலை, த்ரிகடு, ஓமம் இவற்றை வகைக்குக் கால்
பலம் சேர்த்து லேஹ்யம் செய்தெடுக்கவும்,

யத்தைச் சிறிதளவு பருக ஸுகமாய் வாந்தியாகும். இதைப் பக்ஷணங்களிலும், மற்றப் போஜனங்களிலும் கலந்து வமநத்திற்காக உட்கொள்ளலாம்; அல்லது மருக்காரையின் அக்கஷாயங்களையாவது உணவுகளோடு உபயோகிக்கலாம். (2) மருக்களாம்பழக் கொட்டைகளைக் கஷாய மிடவும். அதில் வத்ஸகாதிகணச் சரக்குகளைக் கல்கமாகச் சேர்க்கவும். இக்கஷாயத்தை வேம்பு, எருக்கு இவற்றுள் ஏதேனும் ஒன்றின் கஷாயத்தோடு கூட்டிப் பருகவும். இந்த முறை தர்ப்பணசிகித்ஸையினால் நேரிடும் கோளாறுகளை — அவை வெருந்றி விருத்தி யடைந்திருந்த போதிலும் — போக்கிவிடும். (3) பலமான வமநத்தைத் தாங்க முடியாத ஸுக புருஷன், வயிறு நிரம்ப மாம்ஸரஸம், பாலேடு முதலியதைப் பருகி, மருக்காரையின் புஷ்பம், கனி இவற்றை நன்றாகச் சூர்ணம் செய்து, அச்சூர்ணத்தில் ஏதேனும் நல்ல வாஸனையுள்ள புஷ்பத்தைப் போட்டு ரூக்ஷமாகச் செய்தெடுத்து, அதை முகர்ந்து எளிதில் வாந்தி செய்யலாம். மருக்களாம்பழம் கிடைக்காவிடில் அதன் புஷ்பத்தையாவது காயையாவது பக்குவம் செய்து[1] வாந்தியாவதற்கு உபயோகிக்கலாம். 15—18½.

தேவதாளி முதலியதை வமநமாவதற்குபயோகித்தல்:— (1) மருக்களாம் பழத்தைப் போலவே தேவதாளி முதலியவற்றையும்[2] பக்குவம் செய்து வமநம் செய்விப்பதற்கு உபயோகிக்கலாம். (2) அவற்றுள் ஜீமூதமென்கிற தேவதாளியோ, ஜ்வரம், ச்வாஸம், காஸம், விக்கல் முதலிய ரோகங்களால் வருந்துபவருக்கு விசேஷமாய் உபயோகிக்கத் தகுந்தது. (3) தேவதாளி நன்கு புஷ்பித்திருக்கையில், அதன் புஷ்பத்தைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை வமநம் செய்ய உபயோகிக்கலாம். (4) நன்றாகப் பழுத்த அக்கனியைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைச் சேர்த்து செய்த பேயாவைப் பருகலாம். (5) சுணையுள்ள தேவதாளியைச் சேர்த்துக்காய்ச்சிய பால் மிருதுவா யிருந்தால், அதன் மேலுண்டாகும் ஆடையையும், (6) தேவதாளியின் சூர்ணத்தைச் சேர்த்துக் காய்ச்சிய பால் கடினமாயிருந்தால் அத்தயிரின் மேற்புறத்திற் படியும் ஆடையையும் வமந முண்டாகப் பருகலாம். (7) தேவதாளியைச் சேர்த்துக் காய்ச்சும்போது பால் மிருது-கடின நிலைமைகளுக்கு நடுத்தரமான நிலைமையில் பக்குவமடைந்தால், அதைப் புளிப்பான தயிராகச் செய்து உட்கொள்ள வேண்டும். (8) தேவதாளிக் கனியை வாருணி யென்னும் மதுவில் — மது

1. மருக்களாங் காய், பூ இவைகளை யுலர்த்தி இடித்து, அதிமதுரக் கஷாயத்திலாவது, செம்மந்தாரைக் கஷாயத்திலாவது சேர்த்து, ஓர் இரவு ஊறவைத்து எடுப்பது அதைப் பக்குவம் செய்யு முறை.

2. தேவதாளி முதலியது என்பதால் பேய்ச்சுரை, பேய்ப்பீர்க்கு முதலிய வமநகுணமுள்ள இதர சரக்குகள் குறிப்பிடப்படுகின்றன.

வைப் பக்குவம் செய்யு முறைப்படி—சேர்த்து, அவ்வாருணியின் மேலே படரும் ஆடையைக் கடைந்து வடிக்கட்டி பானம் செய்யலாம். கபம் அதிகரித்திருக்கையிலும், அரோசகத்திலும், காஸத்திலும், பாண்டுவிலும், க்ஷயத்திலும் இம்முறைகள் உபயோகமானவை. (9) பேய்ச்சுரை, பேய்ப்பீர்க்கு இவற்றின் வித்துக்களையும் முறைகளின்படி பக்குவம் செய்து உபயோகிக்கலாம். 19—22½.

வாத-பித்தங்களிலும் பலவித ஜ்வரங்களிலும் தேவதாளியை யுபயோகிக்கும் முறை: (1) நன்றாகப் பழுத்து உலர்ந்துள்ள தேவதாளி[1] பலங்களைச் சூர்ணம் செய்து, அதை அரைப் பலம் அளவு பாலில் சேர்த்து, வாத-பித்தங்களால் பீடிக்கப்படும் பிணியாளி உட்கொள்வானாகை. (2) வேப்பங்கஷாயத்தில் இரண்டு அல்லது மூன்று தேவதாளிக் கனிகளைச் சிதைத்துப் போட்டு, அதை நன்றாகப் பிசைந்து, வடிக்கட்டி, அக்கஷாயத்தையாவது பித்த-கபஜ்வரங்களால் வருந்துபவன் பருகலாம். (3) அல்லது ஆரக்வதாதிகணத்தில் முதலிற் கூறியுள்ள ஒன்பது சரக்குகளில் ஏதேனும் ஒரு பதார்த்தத்தினுடைய கஷாயத்தில் இரண்டு மூன்று தேவதாளிபலங்களை யுடைத்துப் போட்டு, அரிஷ்டம் பக்குவம் செய்து, அக்கல்கத்தை அதில் மர்த்தநம் செய்து வடிக்கட்டி, பித்த-சிலேஷ்மஜ்வரமுள்ளவன் பருகலாம். (4) தேவதாளியின் சூர்ணத்தையாவது கல்கத்தையாவது பித்தஜ்வரத்தில் குளிர்ந்த ஜலத்தோடும், (5) அவற்றையே கப-வாத ஜ்வரத்திலும் கப ஜ்வரத்திலும் இளஞ்சூடான ஜலத்தோடும் பருகலாம். 23—26.

பேய்ச்சுரையைப் பலவித ரோகங்களில் வமநத்திற்கு உபயோகிக்கும் முறைகள் :—(1) காஸம், ச்வாஸம், வாந்தி, ஜ்வரம் இவற்றால் பீடிக்கப் படுகையிலும், கபத்தினால் பிணியாளி மிகவும் க்ஷீணித்திருக்கையிலும், ப்ரதமக ச்வாஸத்தினால் மிகத் துன்புறுகையிலும் பேய்ச்சுரைவித்துக்களைக் கொண்டு வமநம் செய்விக்கலாம். (2) காய்க்காமலும் புஷ்பிக்காமலுமுள்ள பேய்ச்சுரைச் செடியின் இளந்தளிர்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை பித்தம் மிக்க மேலெழுந்துள்ள பித்த-கப ஜ்வரத்தில் பருகலாம். (3) நன்றாகப் பழுத்த சுரைக்காயின் உட் சதைகளை யெல்லாம் விலக்கி, அக் குடுவையில் பால் ஊற்றித் தயிராகச் செய்து, கப காஸத்திலும், கபச்வாஸத்திலும் வமநம் செய்விக்கத் தகுந்த ரோகிக்குக் கொடுக்கலாம். (4) பாண்டுரோகத்தினாலும், விஷ ஸம்பந்தத்தினாலும் வருந்துபவன் பேய்ச்சுரையின் உட்சதையை

---

1. தேவதாளியைப் பாலில் சேர்த்துக் காய்ச்சும்போது, பாலானது தேவதாளியின் வன்மைக் கேற்றவாறு இரண்டு வகையில் பக்குவமாகும். ஒன்று மிருது அல்லது லோமசம் என்றும், மற்றொன்று அலோமசம் அல்லது கடினமென்றும் வழங்கப்படும். இவ்விரண்டுக்கும் நடுத்தரமான பாகம் ஹரித-பாண்டரம் (வெண்-பசுமை) எனப்படும்.

மோரின் தெளிவுநீருடன் புஜித்து வமநம் செய்யலாம். (5) அல்லது அச்சதையை மோரில் சேர்த்துப் பக்குவம் செய்து, தேனையும் இந்துப்பையும் கூட்டி யுட்கொள்ளலாம். (6) பேய்ச்சுரையின் விதையை வெள்ளாட்டுப் பாலில் பாவனை செய்து, அவ் வித்தை ஆட்டுப்பாலுடன் உட்கொள்ளலாம். இதை விஷப் பற்றிலும், குல்மத்திலும், உதரரோகத்திலும், கிரந்திகளிலும், கண்டமாலையிலும், யானைக்கால் ரோகத்திலும் உபயோகிக்கலாம். (7) பேய்ச்சுரையின் ஸ்வாஸத்தில் பாவனை செய்த ஸக்துக்களோடு தயிரின்மேலுள்ள ஆடையை கபஜ்வரத்திலும், கபகாஸத்திலும், கபத்தினுலுண்டான தொண்டையைப்பற்றிய வியாதிகளிலும், அரோசகத்திலும் பருகலாம். (8) குல்மத்திலும், நெடுநாட்களாய் அனுஸரிக்கும் ஜ்வரத்திலும் பேய்ச்சுரையின் கல்கத்தை மாம்ஸரஸங்களோடு உட்கொள்ளலாம். இவ்விதம் செய்ய அந்த நோயாளி நன்கு வாந்தி செய்வான்; துர்பலத்தையும் அடையமாட்டான். (9) நறுமணங்களை யுபயோகிக்கும் வழக்கமுடைய, செல்வ-ஸுகங்களில் ஈடுபட்ட பிணியாளி, பேய்ச்சுரைக்காயின் ஸ்வாஸத்தில் உலர்ந்த பேய்ச்சுரைப்பூக்களைப் பொடித்துச் சேர்த்து, வேறு ஏதேனும் வாஸனையுள்ள புஷ்பத்தை அந்த இரஸத்தில் போட்டெடுத்து முகர்ந்தால் ஸுகமாக வாந்தியுண்டாகும். 27—34.

பேய்த்தும்மட்டியைப் பல வியாதிகளில் வமநமாவதற்கு உபயோகிக்கும் முறைகள்:—(1) காஸம், குல்மம், மஹோதரம், விஷ ஸம்பந்தமான கோளாறு இவற்றிலும், வாததோஷம் கபாசயத்திலிருக்கையிலும், தொண்டையிலும் வாயிலும் கபம் நிரம்பியிருக்கையிலும், கபம் சயாவஸ்த்தையை அடைந்திருக்கும்போதும், வெகு நீடித்த காலமாயுள்ள அல்லது பலமான வியாதிகளிலும், பேய்த்தும்மட்டி வமநம் செய்விக்க ஏற்றது. (2) ஜீவகம், ருஷபகம், வீரா, காஞ்சொறி, தண்ணீர் விட்டாங்கிழங்கு, காகோலி, ச்ராவணி, மேதா, மஹாமேதா, அதிமதுரம் இவற்றைத் தனித் தனியே சூர்ணம் செய்து, ஒவ்வொரு சூர்ணத்தையும் தனித் தனியே லேஹ்யமாகச் செய்து, பேய்த்தும்மட்டியின் சூர்ணத்தை ஒவ்வொன்றிலும் கலந்து, தேன் சர்க்கரைகளைக் கூட்டி, காஸத்திலும், இருதயத்தைப் பற்றிய அழற்சியிலும் உபயோகிக்க நல்ல குணம் தரும். (3) கபமானது பித்தத்துடனும், உஷ்ணத்தோடும் கூடியிருக்கையில் அதே லேஹ்யங்களை இளஞ்சூடான ஜலத்தின் அனுபானத்தோடு உபயோகிக்கலாம். (4) பேய்த்தும்மட்டியின் கல்கம் கொத்தமல்லி விதையினுடையவும், அசோகம்பட்டையினுடையவும் கஷாயத்தின் அனுபானத்தோடு உபயோகிக்க விஷங்களைப் பரிஹரிக்கும். (5) கோவை, சாறடை, தகரை இவற்றுள் ஏதேனும் ஒன்றின் ஸ்வாஸத்தில் ஒன்று அல்லது இரண்டு பேய்த்தும்மட்டிக் காயைச்

சிதைத்துப் போட்டு நன்கு பிசைந்து, மானஸரோகத்திற் பருக லாம். (6) பேய்த்தும்மட்டியைச் சேர்த்துக் காய்ச்சிய பாலி லிருந்து எடுக்கப்படும் நெய்யையாவது, (7) மதநபலாதிகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தையாவது மானஸரோகங் களில் பானம் செய்யலாம். 35—40.

பேய்ப்பீர்க்கைப் பல ரோகங்களில் வமநமாக உபயோகிக் கும் முறைகள் :—(1) பேய்ப்பீர்க்கு கைப்பாகவும், அதிக தீக்ஷ்ண மாகவும், அதிக உஷ்ணவீர்யமுள்ளதாகவும் இருக்கும். அது மிகவும் பலமான குஷ்டம், பாண்டு, ப்லீஹவியாதி, சோபை, குல்மம், கிருத்ரிமவிஷம் இவற்றில் வமநம் செய்விப்பதற்கு உபயோகமானது. (2) மதநபலம் முதலிய ஆறு சாக்குகளைத்[1] தனித் தனியே கஷாயம் காய்ச்சி, அவற்றில் ஒவ்வொன்றிலும் ஆநூபமாம்ஸத்தைப் பேய்ப்பீர்க்குடன் சேர்த்து பக்குவம் செய்து, அந்த மாம்ஸரஸத்தை உப்புடன் கலந்து பானம் செய்ய லாம். (3) அல்லது மதநபலம் முதலிய ஆறு சாக்குகளின் வித் துகளையும், அவற்றிற்குச் சம பாகம் மாம்ஸத்தையும் பேய்ப்பீர்க் கின் ஸ்வரஸத்திற் கூட்டி பக்குவம் செய்து பருகலாம். (4) அல் லது பேய்ப்பீர்க்கின் கஷாயத்திற் பக்குவம் செய்த மாம்ஸத்தைக் கருப்பஞ் சாற்றுடன் கலந்தாவது உபயோகிக்கலாம். 41—43.

வெட்பாலரிசியை வமநத்திற் குபயோகிக்கும் நிலைமைகள் :— ஸுகுமாரமான மனிதர்களுக்குப பித்தம், இரத்தம், கபம் இவை விருத்தியாயிருக்கையிலும், ஜ்வரத்திலும், விஸர்ப்பத்திலும், இருதயரோகங்களிலும், குடமென்கிற வாதரோகத்திலும், குஷ் டத்திலும் வெட்பாலரிசியைக் கொண்டு வாந்தி செய்விப்பது நலம். வெட்பாலரிசியைக் (1) கடுகின் கஷாயத்துடனாவது, (2) இலுப்பைப் பூவின் கஷாயத்தோடாவது, (3) உப்பு நீருடனாவது கலந்து உபயோகிக்கலாம். (4) அல்லது அதை க்ருஸராவென்கிற கஞ்சியுடனாவது[2] உட்கொள்ளலாம். (5) அல்லது வெட்பாலரி சியின் சூர்ணத்தை ஏழு நாட்கள் எருக்கம் பாலில் ஊறவைத்து, அச்சூர்ணத்தை மருக்களாம்பழம், தேவதாளி, பேய்த்தும் மட்டி, ஜீவந்தி, ஜீவகம் இவற்றின் கஷாயத்தோடு தனித்தனியே உட்கொள்ளலாம். 44—46.

வமநகல்ப முடிவுரை :—வாந்தியுண்டாக்குவதில் பிரதான மாயுள்ள சாக்குகளைப் பக்குவம் செய்துபயோகிக்கும் கல்பநா முறைக்கு இங்ஙனம் வழிகாட்டப்பட்டது; அறிவாளியான வைத்தியன் இவ்வழியைக் கொண்டு வேறு சாக்குகளையும் இவ் விதமே பக்குவம் செய்துபயோகிக்கலாம்.—47.

---

1. மருக்காரை, தேவதாளி, பேய்த்தும்மட்டி, பேய்ச்சுரை, பேய்ப் பீர்க்கு, வெட்பாலை என்பவை ஆறு சாக்குகள்.

2. க்ருஸரா—முதற் புத்தகம் பார்க்க.

# இரண்டாம் அத்தியாயம்.

## விரேசந கல்பம்.

இனி விரேசநகல்பம் என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

**சிவதைவேரின் குணவிசேஷங்கள்:**—சிவதைவேர் சுவையில் ஒருவாறு இனிப்பும், துவர்ப்பு முள்ளது; ரூக்ஷத்தன்மையும், விபாகத்தில் கடுரஸமும் உடையது; கப-பித்தங்களைத் தணிக்கும்; ரூக்ஷத்தன்மை யுடையதாகையால் வாயுவைப் பிரகோபிக்கச் செய்யும். இக் குணங்களைப் பெற்ற சிவதையானது வாத-பித்த-கபங்களின் கோளாறுகளைப் போக்குங் குணமுடைய ஔஷதங்களோடு கூட்டி யுபயோகிக்கப் படுமானல், கல்பம் அல்லது சேர்க்கும் முறைகளின் விசேஷங்களுக் கேற்றவாறு ஸர்வ ரோகங்களையும் நிவ்ருத்திசெய்யக் கூடியது.—1, 2.

**சிவதைவேர் இரண்டு விதம்:**—சிவதைவேரில், கறுப்பாக ஓர் இனமும், கருஞ்சிவப்பாக ஓரினமும் வழங்கப்படும். கறுப்பாயிருப்பது **ச்யாமம்** என்றும், கருஞ்சிவப்பானது **த்ரிவ்ருத்** என்றும் கூறப்படும். அவற்றுள் த்ரிவ்ருத் என்பது அபாயமுண்டு பண்ணமல், ஸுகமாக வேலையைச் செய்யக் கூடிய சிரேஷ்டமான சரக்கு; ஆகவே ஸுகுமாரதேஹிக்கும், குழந்தைகளுக்கும், கிழவர்களுக்கும், மிருது கோஷ்டமுடையவர்க்கும் த்ரிவ்ருத் அனுகூலமானது.—3, 3½.

**கருஞ் சிவதையினு லுண்டாகக் கூடிய துன்பங்களும் அதை யுபயோகிக்கும் நிலைமையும்:**—(1) ச்யாமம் என்கிற கருஞ்சிவதையானது தீக்ஷ்ணமாகவும், அதி துரிதமாய் வேலை செய்யுந் தன்மையதாகவு மிருப்பதால் மூர்ச்சை, மயக்கம், இருதயத்திற்கும் தொண்டைக்கும் பலக்குறைவு, மரணம் இவற்றை உண்டுபண்ணும். (2) ஆகிலும் இச் சிவதையையும் க்ரூரகோஷ்டம் என்கிற கெட்டிக்குடலிலும், தோஷம் மிகுதியாகச் சேர்ந்திருக்கும் நிலைமையிலும், வியாதிக்ரஸ்தன் கஷ்டத்தைத் தாங்கக்கூடிய சக்தியுள்ளவனயிருக்கையிலும் உபயோகிக்கலாம்.—4, 5.

**சிவதையில் கிரஹிக்கக்கூடியது:**—பூமியில் வெகு ஆழத்தில் இறங்கி, காடு முரடாயில்லாததும், சல்லிவேராய் குறுக்கு நெடுக்காயோடாமல் ஒழுங்காயிருப்பதுமான சிவதையைக் கொண்டுவந்து, அதன் உட்புறத்துத் தண்டை உடைத்து எறிந்துவிட்டு, தோலை யெடுத்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும்.—6.

**கருஞ்சிவதையை எந்தெந்த வியாதியில் எவ்விதம் உபயோகிக்கவேண்டும்?**—பிறகு அச்சிவதையின் சூர்ணத்தைச் சிறிது சுக்கு, இந்துப்பு இவற்றின் பொடியோடு கலந்து விரேசனம் செய்ய ஏற்ற காலத்தில் அடியில் வருமாறு அந்தந்த அனுபானங்

களோடு உபயோகிக்கலாம் :—(1) வாதரோகத்தில் காடிகளுடன் உட்கொள்ளலாம். (2) பித்தரோகத்தில் நெய், சர்க்கரை, தேன், பால், திராக்ஷாரஸம், கருப்பஞ்சாறு, குமிழம்பழரஸம், மற்றுமுள்ள இனிய சுவையான சரக்குகளின் ஸ்வரஸங்கள், த்ரிபலையின் கஷாயம் இவற்றுடன் உபயோகிக்கலாம். (3) கப-ஸம்பந்தமான வியாதியில் சிறுகளர்வாவின் ஸ்வரஸத்தோடும், பசுமூத்திரத்தோடும், மதுவோடும், காடிகளோடும், கபஹரமான பஞ்சகோலாதி சூர்ணங்களோடும் முறைப்படி பிரயோகிக்கலாம். 7-8½.

த்ரிவ்ருத் லேஹ்யம்:—கருஞ் சிவப்பான சிவதைவேரைக் கஷாயமிட்டு, அதையே கல்கமாகவும் சேர்த்துச் சர்க்கரை கூட்டி, குளிர்ந்த பிறகு, தேனும் த்ரிஜாதக சூர்ணமும் கலக்கவும். இந்த லேஹ்யம் ஸுகவிரேசந முண்டுபண்ணும்.—9½.

அஜகந்தாதி சூர்ணம் :—காட்டு ஜீரகம், மூங்கிலுப்பு, நிலப்பனங் கிழங்கு, த்ரிவ்ருத் இவற்றின் சூர்ணத்தில், சர்க்கரை கலந்து, தேனுடனும், நெய்யோடும் கூட்டி யுட்கொள்ள விரேசநமாகும்; ஸந்நிபாத ஜ்வரம், அவயவங்கள் விரைத்தல், நாவறட்சி, அழற்சி இவற்றில் இது ஹிதமானது.—10, 11.

இக்ஷுகண்ட கல்பம் :—கருப்பங்கழிகளை இரண்டாகப் பிளந்து, த்ரிவ்ருத்சூரணத்தை அவற்றின் உட்புறமெல்லாம் பூசி, இரண்டையும் ஒன்றாகக் கூட்டி, புடபாக முறைப்படி அக்னியில் வெதுப்பி யெடுத்து மென்றால் விரேசநமாகும்.—12.

லவங்கத்வகாதி சூர்ணம் :—இலவங்கப்பட்டையும், ஏலமும் ஸமபாகம் ; இவ்விரண்டுக்கும் ஸமபாகம் அவிரி ; இம்மூன்றுக்கும் ஸமஅளவு த்ரிவ்ருத்; இவற்றைச் சூர்ணம் செய்து, அனைத்துக்கும் ஸமமாகச் சர்க்கரையும் கூட்டி எலுமிச்சம்பழரஸத்தோடும், தேனுடனும், ஸக்துவோடும் உட்கொள்ள தர்ப்பணகுணத்தோடு விரேசநம் செய்விக்கும். இது வாத-பித்த-கபங்களால் உண்டாகிற ரோகங்களிலும், அக்னிமாந்தியத்திலும், ஸுகுமாரசரீரிகளுக்கும் அபாயமின்றி விரேசநம் செய்விக்க ஏற்ற ஔஷதம்.—13, 14.

விடங்காதி சூர்ணம் :—வாய்விடங்கம், த்ரிபலை, யவக்ஷாரம், திப்பிலி, இவை ஸமபாகம் ; த்ரிவ்ருத் அனைத்திலும் அரைப்பங்கு; இவற்றைச் சூர்ணம் செய்து, தேனுடனாவது, நெய்யோடாவது, வெல்லத்தோடாவது உட்கொள்ள குல்மம், ப்லீஹோதரம், காஸம், ஹலீமகம், அரோசகம், கப-வாதங்களாலுண்டாகிற இதர வியாதிகளும் நிவ்ருத்தியாம்.—15, 16.

கல்யாணக குடம் :—வாய்விடங்கம், மோடி, த்ரிபலை, கொத்தமல்லி விதை, சித்திரமூலம், மிளகு, வாலுழுவை, ஜீரகம், திப்பிலி, யானைத் திப்பிலி, ஓமம், பஞ்சலவணம் இவற்றை வகைக்குக் கால் பலமளவாக எடுத்துச் சூர்ணம் செய்யவும் ; நல்லெண்

ணெய் எட்டு பலம்; த்ரிவ்ருத்தின் சூர்ணம் எட்டு பலம்; நெல்லிக்கனியின் சாறு மூன்று பிரஸ்த்தங்கள்; வெல்லம் ஐம்பது பலம்; இவற்றை ஒருமிக்கக் கூட்டி, மிருதுவான தீயில் எரித்து பாகம் செய்து, தகுந்த அளவில் பத்தியம் முதலிய நிர்ப்பந்தமின்றி உபயோகிக்க குஷ்டம், அர்சஸ், காமாலை, குல்மம், பிரமேஹம், உதர ரோகங்கள், பகந்தரம், கிரஹணி, பாண்டு ரோகம் இவை தீரும். இது பும்ஸவநம்[1] என்னும் விசேஷ குணத்தையும் உடையது. "கல்யாணக குடம்" என்கிற இவ் வௌஷதம் எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கக்கூடியது. 17-20½.

வ்யோஷாதி குளிகை :—த்ரிகடு, த்ரிஜாதகம், கோரைக் கிழங்கு, வாய்விடங்கம், நெல்லிக்கனி இவை ஸமபாகம்; இவற்றிற்கெல்லாம் ஸமமாக த்ரிவ்ருத்தைச் சேர்த்து, சூர்ணம்செய்து, அனைத்துக்கும் ஸமமாகச் சர்க்கரை சேர்த்து, தேன் கூட்டி குளிகைகள் செய்யவும். இக் குளிகைகள், நீர்ச்சுருக்கு, ஜ்வரம், வாந்தி, இருமல், தேஹம் க்ஷீணித்தல், தலைச்சுற்றல், க்ஷயம், தேஹ அழற்சி, பாண்டுரோகம், அக்னி மாந்தியம், ஸகலவிதமான விஷப் பற்று இவற்றில் சிரேஷ்டமானவை.—21, 22½.

அந்தந்த ருதுவுக்கேற்ற த்ரிவ்ருத்சூர்ண கல்பங்கள் :—(1) த்ரிவ்ருத், வெட்பாலரிசி, திப்பிலி, சுக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, தேனுடனும் திராக்ஷாரஸத்துடனும் வர்ஷாகாலத்தில் விரேசநௌஷதமாக உபயோகிக்கலாம். (2) த்ரிவ்ருத், காஞ்சொறி, கோரைக்கிழங்கு, வெட்டிவேர், சந்தனம், அதிமதுரம், பொன்னுலங்காய் இவற்றைச் சூர்ணம் செய்து, சர்க்கரை கலந்து, திராக்ஷாரஸத்துடன் சரத்ருதுவில் விரேசநமாக உபயோகிக்கலாம் (3) த்ரிவ்ருத், சித்திர மூலம், வட்டத்திருப்பி, ஓமம், ஸரள தேவதாரு, வசம்பு, பிரம்மதண்டுவிதை இவற்றின் சூர்ணத்தை உஷ்ண ஜலத்தோடு ஹேமந்தருதுவில் விரேசநமாவதற்கு உபயோகிக்கலாம். (4) த்ரிவ்ருத்தைச் சூர்ணம் செய்து, ஸம அளவு சர்க்கரை கூட்டி, க்ரீஷ்மருதுவில் உபயோகிக்கலாம். (5) த்ரிவ்ருத், சரக்கொன்றை, கொட்டைக் கரந்தை, பொன்னுலங்காய், கடுகரோஹிணி, பிரம்மதண்டுவிதை இவற்றைச் சூர்ணம் செய்து, மூன்று நாட்கள் பசு மூத்திரத்தில் பாவனை செய்து எடுத்து, எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கலாம். தேஹத்தை ஸ்நிக்த்தமாகச் செய்துகொண்டவர்களுக்கு இது மல-தோஷங்களைப் போக்கும். 23—27½.

ருக்ஷ-தேஹிகளுக்கு ச்யாமாதி சூர்ணம் :—கருஞ்சிவதை, கருஞ்சிவப்பான சிவதை, காஞ்சொறி, யானைத் திப்பிலி, வெட்

1. பும்ஸவநம் — புத்திரோத்பாதந குணம்: [புருஷர்களது சுக்ர தோஷங்களையும், ஸ்திரீகளது ஆர்த்தவ தோஷங்களையும் போக்கி, ஸ்திரீகளை கர்ப்பம் (முக்கியமாகப் புருஷ கர்ப்பம்) தரிக்கச் செய்யுங் குணம்]

பாலரிசி, கருஞ்சாறடை, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, த்ரிபலை இவற்றைச் சூர்ணம்செய்து, மாம்ஸரஸம், நெய், உஷ்ண ஜலம் இவற்றேடு உபயோகிக்க ரூக்ஷதேஹிகளுக்குக் கூட நன்கு விரேசநமாகும்.—28, 29.

சரக்கோன்றை சாந்தமான சிறந்த விரேசநச்சரக்கு :—சரக்கொன்றைப்புளி குணத்தில் மிருது, சுவையில் இனிப்பு, சீதவீர்யம். ஜ்வரம், இருதயத்தைப் பற்றிய ரோகங்கள், வாத-ரக்தம், உதாவர்த்தம் முதலிய ரோகங்களில் மிகவும் அனுகூலமானது. சரக்கொன்றைப் புளி எவ்வித அபாயமும் தராத சிறந்த சரக்காகையால், இதை பாலர், வயது சென்றவர், க்ஷதகாஸ முள்ளவர், க்ஷீணித்துப் போகிறவர், ஸுகுமார தேஹிகள் ஆகியவர் விசேஷமாய் உபயோகிக்கலாம்.—30, 31.

சரக்கோன்றையைச் சேமித்து வைத்தல் :—தகுந்த காலத்தில் நன்ருகப் பழுத்த சரக்கொன்றைக் கனிகளைக் கிரஹித்து, அவற்றுள் சிறந்தவைகளாயிருப்பவற்றில் ஒரு பாரம் நிறையுள்ள கனிகளை ஏழு நாட்கள் மணலிற் புதைத்துவைத்து, பிறகு அவற்றை வெளியிலெடுத்து, வெயிலில் உலர்த்தவும். அக்கனிகளிலிருந்து சோற்றையும் கொட்டைகளையும் எடுத்து, ஒரு சுத்தமான பாத்திரத்தில் சேமித்து வைக்கவும்.—32, 33.

சரக்கோன்றையை விரேசநத்திற்காக உபயோகிக்கும் முறைகள் :—(1) தேஹ அழற்சி, உதாவர்த்தம் இவற்ருல் பீடிக்கப்படுபவருக்கும், நான்கு வயது முதற்கொண்டு பன்னிரண்டு வயது வரையிலுமுள்ள பாலர்களுக்கும் சரக்கொன்றைப்புளியை திராக்ஷையின் இரஸத்தோடு ஸுகவிரேசனமாவதற்குக் கொடுக்கலாம். (2) சரக்கொன்றையின் சதையுடன் கூடிய கொட்டையை ஹிமகஷாயமாகப் பக்குவம் செய்தாவது, தயிரின் ஆடை, ஸுரையென்னும் மதுவின் ஆடை, நெல்லிக்கனியின் ஸ்வரஸம் இவற்றின் தனித்தனி அனுபானத்தோடு உபயோகிக்கலாம். (3) அச் சீதகஷாயத்தையே காஞ்ஜிகமென்கிற காடியுடனாவது, த்ரிவ்ருத்தின் கல்கத்துடனாவது உட்கொள்ளலாம்.—34, 35½.

ஆரக்வதாரிஷ்டம் :—சரக்கொன்றையின் சதையுடன் கூடிய கொட்டைகளை நேபாளகஷாயத்திற் சேர்த்து, பழகிய வெல்லத்தையும் கூட்டி, ஒரு மாஸம் அல்லது பதினைந்து நாட்கள் மட்பாண்டத்தில் சீலைமண் செய்து வைத்திருந்து எடுத்து, விரேசநத்திற்காக உபயோகிக்கலாம்.—36½.

விரேசநத்திற்கு தில்வகசூர்ணம் :—வெள்ளிலோத்தி வேர்களின் மேல் தோல்களைச் சீவித்தள்ளி, வேர்களின் உட்புறச் சதைகளையெடுத்து உலர்த்தி சூர்ணம் செய்து, இதை மூன்று பங்குகளாகச் செய்து, அதில் இரண்டுபங்கு சூர்ணத்தை வெள்ளிலோத்தியின் கஷாயத்திலேயே சேர்த்துக் கலக்கி வடிகட்டி,

மிருந்துள்ள மூன்றுவது பங்கை வடிக்கட்டிய கஷாயத்திலேயே சேர்த்து பாவனை செய்து, பிறகு அதை தசமூலகஷாயத்திலும் பாவனை செய்து, மறுபடி யுலர்த்தி யெடுக்கவும். இச்சூர்ணத்தை கால் பலம் அளவில் தயிரின் ஆடை, பசு மூத்திரம், ஸுரையின் ஆடை, இலந்தம்பழச் சாறு, நெல்லிக்கனிச் சாறு இவற்றுள் ஏதேனுமொன்றை அனுபானமாகக் கொண்டு உபயோகிக்கலாம். 37—39½.

தில்வக லேஹ்யம் :—வெள்ளிலோத்தியைக் கஷாயமிட்டு, அதில் வெள்ளிலோத்தியையே கல்கமாகவும் சேர்த்து, சர்க்கரையும் நெய்யும் கூட்டி லேஹ்யம் பக்குவம் செய்யவும். இந்த லேஹ்யம் சிறந்த விரேசநௌஷதமாம்.—40½.

கள்ளிப்பால் கடுமையான விரேசநச் சரக்கு :—கள்ளியானது மிகுதியாகச் சேர்ந்துள்ள தோஷத் திரளையும் சீக்கிரம் உடைத்து வெளிப்படுத்திவிடும். அது குடலையும் வெளிப்படுத்தி விடக் கூடிய அவ்வளவு தீக்ஷ்ணத் தன்மையதாகையால், அதை மிருது கோஷ்டமுள்ளவனுக்கும், துர்பலனுக்கும், பாலனுக்கும், கிழவனுக்கும், நெடு நாட்களாக ரோகங்களால் பீடிக்கப்படுகிறவனுக்கும் பிரயோகிக்கக் கூடாது.—41, 42.

விரேசநத்திற்குச் சிறந்த கள்ளியும் அதை யுபயோகிக்கும் நிலைமைகளும் :—குல்மரோகம், உதரரோகங்கள், சர்மரோகங்கள், மதுமேஹம், பாண்டுரோகம், தூஷீவிஷக் கோளாறு, [1] சோபை, தோஷங்களின் பிரகோபாவஸ்தைகளால் மனம் கலங்கிப் போதல், இந்நிலைமைகளில் கள்ளி விரேசநத்திற்கு உபயோகிக்கத் தகுந்தது; கூர்மையான அநேகம் முட்களோடு கூடிய கள்ளி இதற்குச் சிறந்ததாகும்.—43. 43½.

கள்ளிப்பாலை உபயோகிக்கு முறை :—இதற்கு இரண்டு அல்லது மூன்று வருஷ காலம் முதிர்ந்துள்ள கள்ளி சிறந்தது. இதைக் க்ரஹிக்க விசேஷமாய் சிசிருதுவின் கடைசி காலமே ஏற்றது. சஸ்திரத்தினுல் அக்கள்ளியைக் கீறி, அதிலிருந்து பாலை யெடுத்து, பில்வம் முதலியவற்றினுடைய [2] அல்லது கண்டங்கத்திரி - சிறுவழுதுணைகளுடைய ஸம அளவான கஷாயத்தோடு ஒன்ருக அப்பாலைக் கூட்டி, அப்பால் தழலில் காட்டி சோஷணம் செய்து, குளிகைகளாகச் செய்து, மஸ்து, பசு மூத்திரம், ஸுரை இவை முதலியவற்றின் அனுபானத்தோடு உட்கொள்ளவும். 44—46.

---

1. தூஷீவிஷம்—உத்தரஸ்த்தாநம் 35-ம் அத்தியாயம் பார்க்க.

2. பில்வம், தழுதாழை, பெருவாகை, சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, நெரிஞ்சி, பாதிரி, குமிழன் என்கிற தசமூலச் சரக்குகள்.

கள்ளிப்பாலில் சில சரக்குகளை விரேசநமாவதற் கேற்றவாறு பாவனை செய்தல் :—த்ரிவ்ருத் முதலிய ஒன்பது சரக்குகளையும், த்ரிபலையையும், பிரம்மதண்டு விதையையும், பொன்னலங்காயையும் கள்ளிப்பாலில் ஒன்பது நாட்கள் பாவனை செய்து, பிறகு அவற்றை மாம்ஸரஸத்தின் அல்லது நெய்யின் அனுபானத்தோடு உட்கொள்ளலாம். அங்ஙனமே த்ரிகடு, சோரைக் கிழங்கு, த்ரிவ்ருத், நேபாளம் முதலிய சரக்குகளையும் கள்ளிப்பாலில் பாவனை செய்து உபயோகிக்கலாம்.—47, 47½.

விரேசநத்திற்குச் சங்கங்குப்பியும் சீய்க்காயும் :—சங்கங்குப்பியின் கனிகளைச் சிறிது உலர்த்தி, காம்பு முதலியவை இல்லாமல் ஆய்ந்தெடுத்து, அங்ஙனமே சீய்க்காய் வேரையும் கிரஹித்துக் கொள்ளவும். இவ்விரு சரக்குகளும் தீக்ஷ்ணமான விகாஸி குணமுள்ளவை. கபரோகம், உதரரோகங்கள், சோகை முதலியவற்றில் விரேசநத்திற்காக இவற்றைப் பிரயோகிக்கலாம். இவ்விரு சரக்குகளையும் கூட்டி யரைத்து, கால் பல மெடையில் குளிகைகள் செய்து மத்யம், உப்பு இவற்றுடன் வாத-கபங்களாலுண்டாகும் இருதய ரோகங்களிலும் அவ்விதமான குல்மத்திலும் உள்ளுக்குக் கொடுக்கலாம். 48—50.

விரேசநத்தில் நேபாள வேரின் உபயோகங்கள் :—(1) யானைத் தந்தம் போல் உரத்தும் பருத்துமுள்ள நேபாளவேரை கிரஹிக்கவும்; அது சிறிது சிவந்தும், சிறிது கறுத்தும் காணப்படும்; தீக்ஷ்ண குணமும், உஷ்ண வீர்யமும், ஜடிதியில் வேலை செய்யும் ஆசுகாரி யென்னும் குணமும், விகாஸி யென்னும் தன்மையும், குருகுணமும் அதற்குண்டு. அது வாததோஷத்தைப் பிரகோபிக்கவும், பித்த-கபங்களைத் திராவிக்கவும் செய்யும் குணம் உடையது. (2) அந்த வேரின் மேல் தேனையும் திப்பிலியையும் அரைத்துப் பூசி, மேலே தர்ப்பங்களைச் சுற்றி, மண் பூசி, அக்னியில் வாட்டி, பிறகு இளம் வெயிலில் உலர்த்தி யெடுக்கவும்; அக்னியும் வெயிலும் இச்சரக்குக்குள்ள விகாஸி யென்கிற விஷத்தன்மையைப் போக்குகின்றன. குல்மம், பிரமேஹம், மஹோதரம் முதலிய ரோகங்களுள்ளவர், கிருத்ரிமவிஷப் பற்றுள்ளவர் ஆகியவர்கள் ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்து கொண்டு, முற்கூறிய சரக்கை மஸ்து, மதிரை யென்னும் மது, மோர், பில்லாந்தியின் ஸ்வரஸம் இவற்றில் ஏதேனுமொன்றின் அநுபானத்தோடு உபயோகிக்கலாம்; பாண்டுரோகியும், குடலிற் கிருமிகளை யுடையவனும், பகந்தரரோகியும் அதே சரக்கைப் பசுவின் மோர், மாவின் அல்லது வெள்ளாட்டின் மாம்ஸரஸம் இவற்றின் அநுபானத்தோடு உபயோகிக்கலாம். (3) நேபாள வேரின் கஷாயத்தில் அதன் கல்கத்தையும், தசமூல ஸ்வரஸத்தையும் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க விஸர்ப்பம்,

வித்ரதி, அலஜியென்னும் சர்மவியாதி, அக்குளில் உண்டாகும் கக்ஷபா யென்னும் கட்டி, அழற்சி இவை நிவ்ருத்தியாகும். (4) இவ்விதமே பக்குவம் செய்த தைலமானது, குல்மரோகம், மேஹங்கள், அர்சஸ், மலபந்தம், கபதோஷம், வாததோஷம் இவற்றைப் பரிஹரிக்கும். (5) இவற்றால் பக்குவம் செய்த மஹாஸ்நேஹமானது மலபந்தம், சுக்ரத்தடை, அபானவாதத் தடை இவற்றைப் போக்கும். 51—56.

விரேசநத்திற்கு முக்கியமான ஒன்பது சரக்குகள் :—இங்ஙனம் முற்கூறிய சிவதைவேர் முதலான ஒன்பது சரக்குகளும்[1] விரேசநம் என்கிற மலத்தைக் கழிக்கும் வேலையில் மிகவும் பிரதானமானவை.—$56\frac{1}{2}$.

விரேசநத்திற்குக் கடுக்காய் :—த்ரிவ்ருத்தைப் பக்குவம் செய்வதற்கு முற்கூறிய முறைகளின்படி கடுக்காயையும் பக்குவம் செய்து விரேசநத்திற்கு உபயோகிக்கலாம்.—57.

அபயாமோதகம் :—இருபது கடுக்காய்கள், நேபாளமும்-சித்திரமூலமும் வகைக்கு ஒரு பலம், திப்பிலி-த்ரிவ்ருத் இவை ஒவ்வொன்றும் கால் பலம்; ஆக இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டுப்பலம் வெல்லம் கூட்டி, பத்து உருண்டைகளாகச் செய்யவும். பத்து நாட்களுக்கொரு முறை ஒவ்வொரு மோதகமாக வெந்நீர் அநுபானத்தோடு புஜிக்கவும்; இவ்விதிப்படி எல்லாக் குளிகைகளையும் உபயோகிக்க வேண்டும். இதற்குப் பத்திய நியமங்கள் ஒன்றுமில்லை. எல்லா வியாதிகளையும் போக்கும் இக்குளிகைகள் முக்கியமாக கிரஹணி, பாண்டு, சொறி, கோடம் என்கிற சர்மவியாதி, அர்சஸ் இவற்றைப் போக்குவதற்கு அநுகூலமானது. 58—60.

விரேசநௌஷதங்களில் ஹீநாதிக குணங்கள் :—(1) ஓர் ஔஷதச் சரக்கு அல்லது ஔஷதம் வீர்யத்திலாவது அளவிலாவது சொற்பமாயிருந்தால் அதை வேறு சரக்குகளோடு சேர்ப்பதாலோ, இதர சரக்குகளிலிருந்து பிரிப்பதாலோ, கால விசேஷத்தினாலோ, பக்குவம் செய்யும் முறையினாலோ, மற்றுமுள்ள சேர்க்கை முறைகளாலோ அச்சரக்கு அல்லது ஔஷதம் பெருங்குணங்களை யுண்டுபண்ணக்கூடியதாகும். (2) அங்ஙனமே வீர்யத்திலாவது அளவிலாவது ஓர் சரக்கு அல்லது ஔஷதம் மஹத்தாயிருந்தால் அதை மற்றவையோடு சேர்ப்பதாலாவது, மற்றவைகளிலிருந்து பிரிப்பதாலாவது, கால வேற்றுமையினாலாவது, ஸம்ஸ்கார விசேஷத்தாலாவது, வேறுவிதமான

1 கருஞ்சிவப்பான சிவதை, கருஞ்சிவதை, சரக்கொன்றை, வெள்ளிலோத்தி, சங்கங்குப்பி, சித்திரமூலம், நேபாளம், எலிச்செவி, கள்ளி என்பவை விரேசநத்திற்கான ஒன்பது சரக்குகள்.

சேர்மான முறைகளாலாவது குணத்தில் மந்தமாகச் செய்து விடக்கூடும்.—61.

**விரேசநௌஷதங்களின் அருவருப்பைப் போக்குதல் :—** இலவங்கப்பட்டை, நாககேஸரம், காட்டுமா, மாதளை, ஏலம், கற்கண்டு, தேன், கொடி மாதளை இவற்றோடும், மதுவகைகளோடும், மனதுக்கு இன்பமளிக்கக்கூடிய மற்றுமுள்ள வஸ்துக்களோடும் விரேசநௌஷதங்களைக் கூட்டிக் கொடுப்பதால் அருவருப்பு நீங்கி நன்மை அதிகரிக்கும்.—62.

---

## மூன்றும் அத்தியாயம்.

## வமந-விரேசந வியாபத்ஸித்தி.

இனி வமந-விரேசந வியாபத்ஸித்தி[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது.

**வமநம் நிறைவேறாக் காரணமும், அதைப் பயனுறச் செய்யு முறையும் :—** மிருதுகோஷ்டமுள்ளவன், பசித்தவன், சொற்ப கபமுடையவன், அஜீர்ணி, பலஹீனன் இவர்கள் அதிக தீக்ஷ்ணமாகவும், அதிக குளிர்ச்சியாகவும், மிகச் சொற்பமாகவுமுள்ள வமநௌஷதமுட்கொண்டால், அது கீழ்நோக்கிச் செல்ல, கோரிய பலன் ஏற்படாது, கபதோஷமும் அதிகரிக்கும். அவனுக்கு முன்பே ஸ்நேஹ சிகித்ஸை செய்திருப்பினும் மீண்டுமொரு முறை ஸ்நேஹம் செய்து, முன் வமநக்ரியைப் பயனுறாதிருப்பதை எண்ணி மறுபடி வமநம் செய்விக்க வேண்டும்.—1, 2.

**விரேசநம் நிறைவேறாக் காரணங்களும், அதைப் பயனுறச் செய்யு முறையும் :—** அஜீர்ணரோகிக்கும் அதிக கபதோஷமுடையவனுக்கும் விரேசநௌஷதமுபயோகித்தால், அது மேல் நோக்கி வாந்தியை யுண்டுபண்ணும்; மேலும் விரேசநௌஷதம் அதி தீக்ஷ்ணமாகவும், அதி சூடாகவும், அதிக உப்பாகவும், அருவருப்பைத் தரக்கூடியதாகவும், அளவில் அதிகமாகவு மிருந்தாலும் வாந்தியாய்விடும். அதில் வமந-வியாபத்திற்குக் கூறியதுபோலவே கோரிய பலனுண்டாகாமற் போவதோடு, தோஷமும் அதிகரித்து விடும்; அதற்குப் பரிஹாரமுறையும் வமநவியாபத்திற்குக் கூறியதுபோலவேயாம். அங்ஙனம் இரண்டாமுறை விரேசநௌஷத முபயோகித்து அதுவும் வயிற்றில் தங்காமற்போனால், மூன்று முறை அதைக் கொடுக்கக்கூடாது; ஆனால் ஸாத்மியமாகவும், இருதயத்திற்குப் பலந

---

1. வமந-விரேசநங்களைச் செய்கையில் உண்டாகக்கூடிய தீமைகளையும், அவற்றின் பரிஹாரமுறைகளையும் விவரிக்கும் அத்தியாயம்.

தரக் கூடியதாகவும், அபாயம் விளைவிக்காததாகவும், மனதுக்கின்பமாகவுமுள்ள ஏதேனும் வேறு வித ஔஷதத்தை உபயோகிக்கலாம்.—3, 4.

**விரேசநௌஷதத்தின் அயோகத்தினல் உண்டாகும் கேடுதிகள்:**—(1) ஸ்நேஹ-ஸ்வேதங்களால் ஸம்ஸ்காரம் செய்யப்படாதவனுக்கு விரேசநௌஷதத்தைப் பிரயோகித்தாலும், அவ்வௌஷதம் வெகு பழகியதாகவும் ஸூக்ஷ்மமாகவும் இருப்பினும் அது தோஷங்களை வெளிப்படுத்தச் சக்தியற்றதாயிருக்கும்; ஆகவே அது சரீரம் துவண்டுபோய் விழுதல், வீக்கம், விக்கல், கண்கள் இருளடைதல், நாவறட்சி, நாபியிலுளைத்தல், சொறி, துடைகளின் சுருக்கம், தேஹம் கருத்துப் போதல் இவ்விகாரங்களை யுண்டுபண்ணும். (2) ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்த பின்பு நல்ல ஜாடராக்னி யுள்ளவனுக்கு மிகச் சொற்ப அளவாகக் கொடுக்கப்படும் ஔஷதமும் ஜீர்ணித்துப் போய் பலனுண்டாக்காது. (3) விரேசநௌஷதம் மிகக் குளிர்ச்சியான வஸ்துக்களின் ஸம்பந்தத்தால், அல்லது குளிர்ச்சியான நிலைமைகளால், அங்ஙனமே ஆமதோஷம் அதிகரித்துள்ள நிலைமையில் குடலில் ஸ்தம்பித்துப்போய், பிறகு தோஷங்களை அவ்வவ் விடங்களிலிருந்து கிளப்பி வமந ரூபமாகவாவது வெளிப்படுத்தும். இஃதனைத்தும் அயோகம் எனப்படும்.[1] ஔஷதங்களின் இவ்வயோக முறை முற்கூறிய அதே ரோகங்களை யுண்டுபண்ணும். 5—7½.

**விரேசநத்தின் அயோகத்தினலான கேடுதிகளுக்குப் பரிஹாரம்:**—அம்மனிதனுக்குத் தைலத்தையும் உப்பையும் கூட்டி அப்யங்கம் செய்துவைத்து, ப்ரஸ்தரஸ்வேதம்,[2] ஸங்கரஸ்வேதம்[3] இவற்றால் ஸ்வேதசிகித்ஸையையும் செய்வித்து, நிரூஹவஸ்தியைப் பிரயோகித்து, ஜாங்கலமாம்ஸரஸங்களைப் பருகக் கொடுத்து, மதநபலம்-திப்பிலி-தேவதாரு இவற்றால் பக்குவம் செய்த தைலத்தைக்கொண்டு ஆளவறிந்து அநுவாஸநவஸ்தியையும் பிறகு பிரயோகிக்க வேண்டும். வாதஹரஸ்நேஹங்களால் ஸ்நிக்தமாகச் செய்து, மறுபடியும் தீக்ஷ்ணமான விரேசநௌஷதத்தினல் சுத்தி செய்விக்கவும். 8—9½.

---

1. அயோகம்—குறைந்த அளவில் உபயோகிக்கப் படுவதால் பலன் தரக்கூடாத முறை; இதுவே ஹீநயோகம் எனப்படும்.

2. ப்ரஸ்தரஸ்வேதம்—வேக வைத்து மிகச் சூடாயுள்ள சூகதானியம் முதலியதை, அல்லது மிகச் சூடான அன்னம் முதலியதைப் பலகையிற் பரப்பி, அதன்மேல் பட்டுத் துணி அல்லது கம்பளியை விரித்துப் போட்டு அல்லது ஆமணக்கிலைகளையாவது எருக்கிலைகளையாவது பரப்பி, அதன்மேல் பிணியாளி உடம்பில் தைலம் முதலியதைப் பூசிக்கொண்டு படுத்து நன்கு வியர்வை யுண்டாகச் செய்யும் முறை.

3. ஸங்கரஸ்வேதம்—வாதரோக சிகித்ஸை பார்க்க.

பலமான தோஷங்களில் சோற்ப ஔஷதோபயோகத்தால் விளையும் தீங்குகளும் பரிஹாரமும் :—தோஷம் மிகச் சேர்ந்துள்ள சரீரமுடையவன், ரூக்ஷ சரீரி, ஜாடராக்னி மந்தித்திருப்பவன், உதாவர்த்தரோகி இவர்களுக்குச் சொற்ப அளவான அல்லது சொற்ப வீர்யமுடைய ஔஷதமுபயோகித்தால், அது தோஷங்களைக் கிளறிவிட்டு, அவற்றால் மார்க்கங்களை அடைத்து, நாபிக்குச் சமீபத்தில் மிகப் பொருமலுண்டுபண்ணுவதோடு, ப்ருஷ்டபாகம்-விலாப்பக்கங்கள்-சிரஸ் இவற்றில் வலியையும், ச்வாஸம், மல-மூத்திர-அபாநவாயுக்களின் பந்தம் இவற்றையும் கடுமையாயுண்டாக்கும். இவ்வாறு பொருமலால் வருந்துபவனுக்கு அப்யங்கம், ஸ்வேதம், வர்த்திப் பிரயோகம், நிரூஹவஸ்தி, அநுவாஸநம் இவை முதலிய உதாவர்த்தஹரமான ஸகல சிகித்ஸையும் சிறந்ததாகும். 10—12½.

பஞ்ச மூலாதியவாகூ :—பஞ்சமூலம், யவக்ஷாரம், வசம்பு, சுக்கு நாறிப்புல், இந்துப்பு இவற்றைச் சேர்த்து நன்றாக யவாகூ பக்குவம் செய்து உபயோகிக்க வயிற்றுவலி, மலம் முதலியவற்றின் பந்தநம், வயிற்றுப் பொருமல் இவை தீரும்.—13½.

வயிற்றுக் கடுப்பு முதலியவற்றின் சிகித்ஸை:—திப்பிலி, மாதளை, யவக்ஷாரம், காயம், சுக்கு, புளிவஞ்சி, இந்துப்பு இவற்றை மதுவகைகளோடாவது, நெய் அல்லது உஷ்ண ஜலத்துடனாவது கூட்டி பிரவாஹிகை யென்கிற சிதபேதியில், அடிக்கடி மலம் கழிதல், வயிற்றுளைத்தல், குதத்தில் கடுப்புவலி இவற்றில் உட்கொள்ளலாம்.—14, 15.

தோஷ சோதநத்திற்கு ஔஷதம் உட்கொண்டு, பிறகு வேக நிரோதம் செய்வதாலான தீங்குகளும் பரிஹாரமும் :—ஔஷதபாநம் செய்தவன் வேகங்களை அடக்குவதால் வாதம் முதலியவை பிரகோபித்து, இருதயத்தைப் போயடைந்து, கடுமையான மாரடைப்பை யுண்டாக்குகின்றன ; அப்பொழுது விக்கல், பக்கசூலை, இருமல், இளைப்பு, உமிழ்நீ ரூறுதல், கண் சுழலல் இவை உண்டாவதோடு, ஞாபகமிழந்து, பற்களை நறநறவெனக் கடித்து, நாக்கையும் கடித்துக் கொள்வான். அந் நிலைமையில் வைத்தியன் மதிமயங்காமல் உடனே பிணியாளிக்கு வாந்தி செய்விக்கவும் ; அதில் பித்த மூர்ச்சையில் மதுரவஸ்துக்களாலும், கப மூர்ச்சையில் கடுரஸமான வஸ்துக்களாலும் வமநம் செய்விக்க வேண்டும். பிறகு பிணியாளியின் தேஹத்தில் மிச்சமுள்ள தோஷத்தைப் பாசநகுணமுள்ள ஔஷதங்களால் பக்குவம் செய்விக்கவும் ; அப்பால் உடற்சூட்டையும், தேஹ பலத்தையும் கிரமமாக விருத்தி செய்யவேண்டும். 16—19.

வாதாதிதோஷங்களால் இருதயம் பீடிக்கப் படுகையில் செய்யு முபசாரம் :—வாததோஷம் மேலிட்டதனால் அதிகமாய்

வாந்தி செய்கிறவனுக்கு இருதயமும் மிகப் பீடிக்கப்பட்டால், அவனுக்கு ஸ்நிக்த்தமாகவும், அம்லமாகவும், இலவணரஸ முள்ளதுமான ஔஷதத்தைக் கொடுக்கவேண்டும். பித்த-கபங்களால் வமநம் அமிதமாய் உண்டானல் வாததோஷத்தினு லேற்பட்டதற்கான சிகித்ஸைக்கு மாருன குணமுடைய ஔஷதங்களை யுட்கொள்ளக் கொடுக்கவும்.—20.

**ஔஷதபாநம் செய்தவன் வேகநிரோதாதிகள் செய்வதாலாகும் தீங்குகளும் பரிஹாரமும்:**—ஔஷதபாநம் செய்தவன் வேகங்களை அடக்குவதால், அல்லது கபத்தினுல் வாதம் தகையப்பட்டு, அல்லது நன்கு சுத்தியான பிறகு வாயு அவயவங்கள் தோறும் பிடிப்பை யுண்டுபண்ண, அதனுல் ஸ்தம்பித்தல், நடுக்கல், குடைத்தல், இளைத்தல், உளைத்தல், இடித்தல் இவ்விகாரங்கள் உண்டாகும். அதில் வாதஹரமான ஸ்நேஹ-ஸ்வேதம் முதலிய ஸகலவித வாதஹரமான சிகித்ஸையும் சிறந்ததாம்.—21,22.

**விரேசநத்தின் அதியோகத்தினுலுண்டாகும் கேடுதிகளும் பரிஹாரமும்:**—பசியால் வருந்துபவனுக்கும், மிருதுவான குடலைப் பெற்றவனுக்கும் அதிக அளவாகவும் தீக்ஷ்ணமாகவு முள்ள ஔஷதப் பிரயோகத்தால், மலம், பித்தம், கபம் இவை ஜடிதியில் வெளியாவதோடு, திரவமான தாதுக்களையும்[1] ஸ்ரவிக்கச் செய்யும். அவ்விதமான மிதமிஞ்சிய ஔஷதப்பிரயோகத்தினு லேற்படும் கெடுதிகளில் (1) மதுரரஸமுள்ள திரவியங்களால் குடலில் மிச்சமுள்ள ஔஷதத்தைக் கல்வி வெளிப்படுத்தி விடவும். (2) வமநம் அதிகமானுல் விரேசநமும், விரேசநம் அதிகமானுல் வமநமும் மிருதுவாகச் செய்விக்க வேண்டும். (3) மிகக் குளிர்ந்த நீர்களை மேலே ஊற்றுவது, அவ்வித நீர்களில் மூழ்கச் செய்வது முதலியவற்ருல் அவ்வமந-விரேகங்களைக் கட்டவும் வேண்டும். (4) அஞ்ஜநமிடலாம். (5) சந்தநம், வெட்டிவேர், மஜ்ஜை, இரத்தம், சர்க்கரை இவற்றைத் தண்ணீரிற் கரைத்து உட்கொள்ளச் செய்யலாம். (6) மந்தமென்கிற கஞ்சியை நெற்பொரி மாவுடன் பருகலாம். இவையெல்லாம் விரேசநங்களின் அதியோகத்தினுலான தீங்குகளைப் பரிஹரிக்கச் சிறந்தவையாம். 23—25½.

**வமநத்தின் அதியோகத்தினு லுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும்:**—வமநம் மிதமிஞ்சினுல் (1) பிணியாளியின் மீது குளிர்ந்த ஜலத்தைத் தெளித்து எலுமிச்சம்பழரஸமும், நெய்யும், தேனும், சர்க்கரையும் கூட்டி மந்தம் என்கிற கஞ்சியைப் பருகக் கொடுக்கலாம். (2) மேல் நோக்கி எப்பமும் வந்து, வாந்தியும் மிதமிஞ்சி யிருந்தால், பெருங் குரும்பை, கொத்தமல்லி விதை, கோரைக்கிழங்கு, இலுப்பைப்பூ, ஸௌவீராஞ்ஜநம்

1. திரவதாதுக்கள்—இரஸம், இரத்தம் முதலியவை.

இவற்றின் சூர்ணத்தைத் தேனுடன் கூட்டிப் பருகலாம். (3)
கடினமாக வாந்தியாவதால் நாக்கு உட்புறமாக இழுக்கப் படு
மானால், அதற்கு ஸ்நிக்த்தமாகவும், அம்லமாகவும், இலவண ரஸ
முள்ளவையும், இருதயத்திற்குப் பலந்தருபவையுமான கபளக்
கிரஹங்களும், கஞ்சிகளும், மாம்ஸரஸங்களும் அநுகூலமானவை
யாம். (4) அங்ஙனம் உட்புறமாக இழுத்துக்கொண்ட நாக்குக்கு
முன்புறமாகப் புளிப்பான பழங்களை வைத்துக் கடிப்பது நல
மென்றும் சிலர் கூறுவர். (5) அதிவமநத்தால் நாக்குத் தொங்
கிட்டு விட்டால் எள்ளு, திராக்ஷை இவற்றின் கல்கத்தை நாக்
கில் தேய்த்து, அதை உட்செலுத்தவேண்டும். (6) வாக்கிரஹம்
என்கிற வாக்குப் பிடித்தல் முதலிய வாதரோகங்களில் கிருதம்-
மாம்ஸம் இவற்றால் பக்குவம் செய்யப்பெற்ற மிகத் திரவமான
யவாகூவைக் கொடுக்கலாம். (7) காலமறிந்து சிகித்ஸை செய்யும்
திறமையுள்ள வைத்தியன் ஸ்நேஹ-ஸ்வேதங்களையும் செய்விக்க
லாம். 26—30½.

விரேசநத்தின் அதியோகத்தால் ஜீவசோணிதம் வெளிப்
படுதல்:—எந்த ஔஷதம் அளவுக்கு மிஞ்சி யுபயோகிக்கப்படுவ
தால் ஜீவசோணிதம் என்கிற இரத்தத்தை வெளிப்படுத்திவிடு
கிறதோ, அது ஜீவனை ஆகர்ஷிக்குமியல்புடையதாதலால் ஜீவா
தாநம் என்று கூறப்படுகிறது. விரேசநம் மிதமிஞ்சியானதால்
வெளியாகும் அந்த இரத்தத்தை அன்னத்திற் கூட்டி, அதை
நாய்க்காவது காக்கைக்காவது இடவும்; அந்த ஜந்து அதைப்
புஜித்தால் அது ஜீவரத்தம் என்றும், பரிஹரித்து விட்டால்
பித்தமென்றும் கூறலாம்;[1] அல்லது வெண்மையான வஸ்தி
ரத்தை ஸந்தேஹிக்கப்படும் அந்த இரத்தத்தில் நனைத்து, உலர
வைத்து, அப்பால் சிறிது சூடான ஜலத்தை ஊற்றிக் கழுவ
அது பித்தமானால் கறை பிடித்திருக்கும்; அப்படியின்றி இரத்த
மானால் துணி சுத்தமாய்விடும். 31—33½.

ஜீவசோணிதம் வெளிப்படுகையில் செய்யவேண்டிய உப
சாரங்கள்:—(1) அங்ஙனம் ஜீவசோணிதம் வெளிப்படுகையில்
உயிர்நீங்கும் வரையிலும், நாவறட்சி, மூர்ச்சை, வெறி இவற்றால்
வருந்த நேரிடும் மனிதனுடைய உயிரைக் காப்பதற்குபயோக
மான இரத்த-பித்தஹர சிகித்ஸையைச் சீக்கிரம் செய்ய வேண்
டும். (2) உயிருள்ள மான், பசு, எருமை இவற்றின் உடம்பி
லிருந்து அப்பொழுதே கிரஹிக்கப்பட்ட இரத்தத்தை ஜீவனை
நிலைநிறுத்த பருகச் செய்யலாம்; ஏனெனில் அது வெகு சீக்

1. பித்தம், இரத்தம் இவ்விரண்டும் சற்றேறக் குறைய மணத்தி
லும் நிறத்திலும் ஸமானமா யிருப்பதால், அதிவிரேசநத்தில் வெளி
யாவது இரத்தமா பித்தமாவென்று ஸந்தேஹமுண்டாகுமாகையால்,
அச் சந்தேஹத்தைப் போக்குவதற்கு இப்பரீக்ஷை கூறப்பட்டது.

கிரத்தில் உயிர் நிலைகளிற் சென்று பிராணனைக் காக்குந் தன்மையது. (3) அதே இரத்தத்தைத் தர்ப்பைகளால் கடைந்து, மூத்திரப்பையின் மேல் ஊற்றலாம். (4) சாமை, பெருங்குமுழன், அதிமதுரம், அறுகம்புல், வெட்டிவேர் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் நெய்யின் ஆடையையும், ஸௌவீராஞ்ஜநத்தையும் சிறிதளவு கூட்டி, குளிர்ச்சியாக வஸ்தியையாவது பிரயோகிக்கலாம். (5) நெய்யின் ஆடையைக் கொண்டு அநுவாஸநத்தை அல்லது மிகவும் சீதளமான பிச்சாவஸ்தியையாவது[1] பிரயோகிக்கலாம். 34—37½.

**குதப்ரம்ச சிகித்ஸை:—** அதிவிரேசநத்தினால் குதம் நழுவி விடுமானால், அதைத் துவர்ப்பான சரக்குகளால் செய்த கஷாயங்களால் ஸ்தம்பநம் செய்து உட்செலுத்த வேண்டும்.—38.

**அதிவிரேகாதிகளால் மூர்ச்சித்தவனுக்குச் செய்யுமுபசாரம்:—** அதிவிரேகாதிகளால் நினைவுதப்பி மூர்ச்சித்துள்ளவனுக்கு வேணுகாநம் முதலிய ஸ்வரங்களைச் செவியுறச் செய்து இனிய மொழிகளால் தேறுதல் சொல்லவேண்டும்.—38½.

---

## நான்காம் அத்தியாயம்.

### வஸ்தி கல்பம்.

இனி தோஷங்களைப் பற்றறப் பரிஹரிப்பதை விளக்கும் வஸ்தி கல்பம் என்னும் அத்தியாயம் கூறப்படுகின்றது:—

**ஸர்வரோகஹர வஸ்தி:—** சிற்றாமுட்டி, சீந்தில், த்ரிபலை, சிற்றரத்தை, மஹாபஞ்சமூலம், இலகுபஞ்சமூலம் இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; மறுக்களாம் பழம் எட்டு; செம்மறியாட்டின் மாம்ஸம் ஐம்பது பலம்; இவற்றைத் தண்ணீரிற் சேர்த்து, நாலில் ஒரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டவும்; ஓமம், மறுக்களாம் பழம், பில்வம், கோஷ்டம், வசம்பு, சதகுப்பி, கோரைக் கிழங்கு, திப்பிலி இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும்; பிறகு வெல்லம், தேன், எண்ணெய் இவற்றையும், உப்பையும் கூட்டி, இளஞ்சூடாக வஸ்தி பிரயோகிக்கவும். இது எல்லா வியாதிகளையும் போக்கும் சிறந்த வஸ்தி முறை; ஆரோக்கிய முள்ளவருக்கும் ஹிதமானது; ஜீவந-ப்ருஹ்மண குணங்களையும் உடையது. எந்த வஸ்திப்பிரயோக முறையில் கல்கம் கூறப்படவில்லையோ அம்முறையிலெல்லாம் இக் கல்கத்தைக் கூட்டிக்கொள்ளலாம். 1—3.

---

1. பிச்சாவஸ்தி—அர்சோரோகசிகித்ஸை பார்க்க.

ஸர்வ-வாதரோகஹர வஸ்தி :—தசமூலத்தையும் ஆட்டு மாம்ஸத்தையும் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, அதில் காடி கூட்டி, முன் வஸ்திமுறைக்குக் கூறிய கல்கங்களையும் சேர்த்து, மூன்று ஸ்நேஹங்களையும்[1] அதிற் கலக்கிக்கொள்ளவும். எல்லா வாத ரோகங்களையும் போக்க இது சிறந்த நிரூஹவஸ்தி முறை.—4.

பலாதி நிரூஹம் :—சிற்றாமுட்டி, பேய்ப்புடல், இலகு பஞ்ச மூலம், கொன்றை, ஆமணக்கு, வாற்கோதுமை இவற்றை ஜலத்திற் சேர்த்து பக்குவம் செய்து, ஒரு பிரஸ்தம் கஷாயத்தில், அரை பிரஸ்தம் ஆட்டு மாம்ஸத்தைக் கூட்டி, ஒரு பிரஸ்தம் கஷாயமாகச் சுண்டக் காய்ச்சி, பிறகு ஞாழல், திப்பிலி, கோரைக் கிழங்கு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, தைலம், க்ருதம், தேன், இந்துப்பு இவற்றையும் அதிற் கூட்டிக்கொள்ளவும். இதனால் வஸ்திப் பிரயோகம் செய்யவும்; இது ஜாடராக்னியை உத்தீபநம் செய்யும்; மாம்ஸங்களுக்கு வன்மை தரும்; சீக்கிரம் கண்களுக்கும் பலம் கொடுக்கும்.—5, 6.

ஏரண்ட மூலாதி நிரூஹம் :—ஆமணக்கு வேர் மூன்று பலம், பலாசம் வேர் மூன்று பலம், இலகு பஞ்சமூலச் சரக்குகள் ஒவ்வொரு பலம், சிற்றரத்தை, சிற்றாமுட்டி, சீந்தில், அமுக்கிருங் கிழங்கு, சாறடை, கொன்றை, தேவதாரு, மருக்களாம்பழம் இவை வகைக்கு எட்டு பலம், இவற்றை இரண்டு ஆடகம் ஜலத்திற் சேர்த்து எட்டில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சவும். அப்பால் வசம்பு, சதகுப்பி, கொட்டைக்கரந்தை, ஞாழல், அதிமதுரம், திப்பிலி, வேட்பாலரிசி, கோரைக்கிழங்கு, இரஸாஞ்ஜநம் இவற்றை வகைக்குக் கால் பலம் கிரஹித்து கல்கமாக்கி அக்கஷாயத்துடன் கூட்டி, வீசம் பலம் உப்பையும், தேன், தைலம், பசு மூத்திரம் இவற்றையும் கலந்து வஸ்தியாகப் பிரயோகிக்கலாம். லேகநம், தீபநம் என்கிற குணங்களையுடைய இவ்வஸ்தி முறையானது கால்கள், துடை, பாதம், பிடரி, முதுகு, குடல், மார்பு, குஹ்யப் பிரதேசங்கள் இவற்றிலுண்டாகும் வலிகளையும், குருத்வத்தையும், மலபந்தத்தையும், குல்மம்-அச்மரி-பீஜகோசங்களின் வீக்கம்-கிரஹணி இந்த ரோகங்களையும், கப-வாததோஷங்களாலான மற்றுமுள்ள வியாதிகளையும் நிவாரணம் செய்யவல்லது. 7—10.

யஷ்ட்யாதி நிரூஹம் :—அதிமதுரம், வெள்ளிலோத்தி, கடுக்காய், வெட்டிவேர், செஞ்சந்தனம், தாமரை, கருநெய்தல் இவற்றையும், ஜீவநீயகணச் சரக்குகளையும் சேர்த்துக் காய்ச்சிய பாலில் சர்க்கரையும், தேனும் கூட்டி, குளிர்ந்த பிறகு, அதைக்கொண்டு வஸ்தி பிரயோகிக்க பித்தரோகங்கள் நீங்கும்.—11.

---

1. க்ருதம், வஸை, மஜ்ஜை என்பவை மூன்று ஸ்நேஹவஸ்துக்கள்.

ராஸ்நாதி நிரூஹம் :—சிற்றரத்தை, ஆடாதோடை, செம்மரம், அறுகம்புல், சிற்றாமுட்டி, இலகுபஞ்சமூலம், த்ருணபஞ்சமூலம், நன்னாரி, சந்தனம், தாமரைக்கிழங்கு, ருத்தி, அதிமதுரம், வெள்ளிலோத்தி இவற்றை வகைக்கு அரைப்பலம் வீதம் ஜலத்திற் சேர்த்து காய்ச்சிய கஷாயத்தில் அரை ஆடகமளவு பால் சேர்த்து, ஜலம் முற்றிலும் வற்றும்வரையில் காய்ச்சியெடுக்கவும்; இதில் ஜீவந்தி, மேதா, தண்ணீர்விட்டாங்கிழங்கு, நிலப்பனங்கிழங்கு, வீரா, காகோலி, க்ஷீரகாகோலி, தட்டைக்கோரை, கற்கண்டு, ஜீவகம், தாமரைப்பூப்பொடிகள், தாமரை, அகில், காஞ்சொறி, அதிமதுரம், நாககேஸரம், தர்ப்பை, சந்தனம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, க்ருதமும், தேனும், இந்துப்பும் கூட்டி, நன்றாகக் குளிர்ந்த பிறகு நிரூஹவஸ்தியாகப் பிரயோகித்து, அங்ஙனம் செலுத்திய வஸ்தி வெளிவந்ததும், தேஹத்தைக் குளிப்பாட்டி, சம்பா அரிசியினாலான அன்னத்தை ஜாங்கல மாம்ஸரஸத்திற் கலந்து புஜிக்கக் கொடுக்கலாம்; அல்லது குளிர்ந்த பிறகு அன்னமும் பாலும் கலந்து உபயோகிக்கச் செய்யலாம். இந்த நிரூஹ முறையானது அழற்சி, அதிஸாரம், பெரும்பாடு, இரக்த-பித்தம், இருதயரோகம், பாண்டுரோகம், விஷமஜ்வரம், குல்மம், மூத்திரத்தின் அடைப்பு, காமாலை இவைகளையும், பித்தத்தினால் உண்டாகும் மற்ற எல்லா வியாதிகளையும் நிவ்ருத்தி செய்யும். 12—16.

கோசாதக்யாதி நிரூஹம்:—பேய்ப்பீர்க்கு, கொன்றை, தேவதாரு, பெருங்குரும்பை, நெறிஞ்சி, வெட்பாலை, எருக்கு, வட்டத்திருப்பி, கொள், கண்டங்கத்திரி இவற்றை ஜலத்திற் சேர்த்துக் காய்ச்சவும்; அக்கஷாயத்தில் இரண்டு பலம் எடுத்து, அதில் வெண்கடுகு, ஏலக்காய், மறுக்களாம்பழம், கோஷ்டம் இவற்றைக் கால் பல மளவாகவும், தேனும், மதநபலமும், அம்லங்களும் சேர்த்துப் பக்குவம்செய்த தைலம், யவக்ஷாரம், நெய் இவைகளை வகைக்கு இரண்டு பலமும் சேர்த்துப் பக்குவம் செய்து, கபதோஷ வியாதிகளால் வருந்துபவர்களுக்கும், மந்தாக்னியுள்ளவர்களுக்கும், அன்னத்வேஷமுடையவர்களுக்கும் நிரூஹவஸ்தியாகப் பிரயோகிக்கலாம்.—17, 18½.

**ஸுகுமார தேஹிகள் முதலியவருக்கு ஏற்ற நிரூஹங்கள் :—** பலமான ஔஷதங்களைத் தாங்க வியலாத ஸுகசரீரிகளுக்கு அனுகூலமான மிருது ஸ்நேஹங்களாலான நிரூஹவஸ்தி முறைகளை பிரஸ்ருதம் என்னும்[1] அளவுகளில் இனி விவரிக்கப் போகின்றோம். மேலும் ஸுகுமார தேஹிகளுக்கு ஸ்நேஹநம் செய்யக்கூடிய மிருதுவான நிரூஹவஸ்திகளையும், வமநாதி சிகித்ஸைகள் உபயோகப்படாமற் போனவர்களுக்கு அனுகூலமான

1. பிரஸ்ருதம் — இரண்டு பலங்கொண்ட அளவு.

வஸ்திமுறைகளையும் வெவ்வேறாக இனி பிரஸ்ருதம் என்கிற அளவுமுறையில் விவரித்துக் கூறுவோம்.—19, 20.

**ஸுகுமாரதேஹிகளுக்கேற்ற மிருதுவான நிரூஹவஸ்திகள் :**—(1) பால் இரண்டு பிரஸ்ருதம், தேன்-தைலம்-நெய் இவை வகைக்கு மூன்று பிரஸ்ருதங்கள் ; இவற்றை ஒன்றாகக் கூட்டித் துடுப்பால் குழப்பி வஸ்திப்பிரயோகம் செய்ய வாதஹாரமாகவும், பல-வர்ணகாரியாகவும் வேலைசெய்யும். (2) தைலம், காடி, தேன், நெய் இவை வகைக்கு ஒவ்வொரு பிரஸ்ருதம், பில்வம் முதலியவற்றின் மூலங்களின்[1] கஷாயம் இரண்டு பிரஸ்ருதம், கொள்ளுக் கஷாயம் இரண்டு பிரஸ்ருதம், ஆக இவற்றின் வஸ்தி வாத விகாரங்களைப் போக்கும். (3) பேய்ப்புடல், வேம்பு, சுக்குநாறிப் புல், சிற்றரத்தை, எழிலம்பாலை இவற்றின் ஒவ்வொன்றினுடையவும் கஷாயம் வகைக்கு ஒரு பிரஸ்ருதம் ; நெய் ஒரு பிரஸ்ருதம் ; இவற்றில் கடுகையும், பஞ்சதிக்தங்களையும்[2], கல்கமாகக் கூட்டி, வஸ்தி செய்ய அபிஷ்யந்தம்[3], கிருமி, குஷ்டம், பிரமேஹம் இவை நிவ்ருத்திபாகும். (4) தைலம், பசுமூத்திரம், தயிரின் ஆடை, காடி இவற்றை ஒவ்வொன்றையும் நான்கு பிரஸ்ருதங்கள் கூட்டி, அதில் கடுகைக் கல்கமாகச் சேர்த்து வஸ்தி பிரயோகிக்க மலச்சிக்கல், வயிற்றுப்பொருமல் இவை தீரும். (5) க்ஷீரகாகோலி, கரும்பு, பெருமல்லிகை, சிற்றரத்தை, நிலப்பனங்கிழங்கு இவற்றில் ஒவ்வொன்றினுடையவும் கஷாயம் ஒவ்வொரு பிரஸ்ருதம், தேன்-நெய் இவை தனித் தனியே ஒவ்வொரு பிரஸ்ருதம் ; இவற்றைக் கூட்டி, அதில் திப்பிலியைக் கல்கமாகச் சேர்த்து வஸ்தி பிரயோகிக்க வ்ருஷ்யம் என்கிற சுக்ரவிருத்தியைச் செய்யும்.[4] 21—25½.

**ஸித்த வஸ்திகள் :**—இதன் பிறகு "ஸித்த வஸ்திகள்" என்கிற வஸ்திமுறைகள் விவரிக்கப்படும்.[5] இவ்வஸ்திகளை எப்பொழுதுமே நன்கு உபயோகிக்கலாம். இவை தீங்கிழைக்காமல், அதிக பலன்களையுண்டுபண்ணும் ; சரீர வன்மையையும் புஷ்டியையும் உண்டுபண்ணி, நல்ல ஸுகம் தருபவை. —26½.

**மதுதைலக வஸ்தி :**—(1) தேனும் தைலமும் ஸமபாகம், இந்துப்பு கால் பலம் ; சதகுப்பி அரைப்பலம் ; இவற்றை ஒரு

---

1. பில்வம் முதலிய என்று இலகு பஞ்சமூலம் குறிக்கப்படுகிறது.

2. பேய்ப்புடல், நன்னாரி, கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, கடுகரோஹிணி இவ்வைந்தும் **பஞ்சதிக்தம்** எனப்படும்.

3. அபிஷ்யந்தம்—நீர்வழிந்து சிவந்துள்ள கண்ணோய்.

4. இந்த ஐந்து யோகங்களிலும் பிரஸ்ருதம் என்கிற அளவில் சரக்குகள் சேர்க்கப்படுவதைக் கருதி இம்முறைகள் "பிரஸ்ருத நிரூஹங்கள்" என்றும் கூறப்படும்.

5. இங்கு கூறப்படும் வஸ்திமுறைகள் குறிப்பிட்ட குணங்களைச் செய்வதாகத் தெரிந்திருப்பதால் "ஸித்த வஸ்திகள்" எனப்படும்.

மிக்கக் கூட்டி, ஆமணக்கன்வேரின் கஷாயத்தையும் கலந்து[1] நிருஹமாகப் பிரயோகிக்கவும். மதுதைலகவஸ்தி யென்கிற இதற்கு இரஸாயநம் என்கிற குணமும், பிரமேஹம் - அர்சஸ் - கிருமி-குல்மம்-அந்த்ரவ்ருத்தி இவற்றை நிவ்ருத்தி செய்யும் தன்மையும் முக்கியமா யுண்டு[2]. (2) இதில் அதிமதுரத்தையும் கூட்டி வஸ்தி செய்ய சக்ஷுஷ்யமாகவும்,[3] இரத்த-பித்தஹர மாகவும் இம்முறை உபயோகப்படும்.—27, 28½.

யாபந வஸ்தி :—தேன், தைலம், மாம்ஸரஸம், நெய் இவற்றோடும், கோரைக்கிழங்கின் கல்கத்துடனும் கூடிய இந்த முறையினல் செய்யப்படும் வஸ்தி "யாபநவஸ்தி" எனப்படும்; இது குதம், கால்கள், துடைகள், பீஜம், மூத்திரப்பை, ஆண்குறி இவற்றிற் காணும் வலியைப் போக்கும். இந்த வஸ்தியில் நெய், தேன், கொழுப்பு, தைலம் இவற்றைச் சேர்ப்பதானல் ஒவ்வொரு பிரஸ்ருதம் சேர்க்கவேண்டும்.—29, 30.

யுக்தரத வஸ்தி :—ஆமணக்கன் வேரின் க்வாதம், தேன், இந்துப்பு, வசம்பு, திப்பிலி, மருக்காரை இவற்ருல் செய்யப்படும் வஸ்தி "யுக்தரத வஸ்தி" என்று வழங்கப்படும்.—31.

தோஷஹர வஸ்தி :—ஆமணக்கன் வேரின் க்வாதம், தேன், கிச்சிலிக்கிழங்கு சதகுப்பி, பெருங்காயம், இந்துப்பு, தேவதாரு, வசம்பு, சிற்றரத்தை இவற்ருல் செய்யப்படும் வஸ்தி தோஷங்களை நன்கு விலக்குமாகையால் "தோஷஹர வஸ்தி" எனப்படும்.—32.

ஸித்த வஸ்தி :—பஞ்சமூலகஷாயம், தைலம், திப்பிலி, தேன், இந்துப்பு, அதிமதுரம் இவற்றைக்கொண்டு பிரயோகிக்கப்படும் வஸ்தி "ஸித்த வஸ்தி" என்று கூறப்படும்.[4]—33.

தசமூலாதிநிருஹம் :—இலகுபஞ்சமூலம், மஹாபஞ்சமூலம், த்ரிபலை, மருக்காரை, பில்வம் இவற்றைப் பசுவின் மூத்திரத்திற் சேர்த்துக் கஷாயம் காய்ச்சவும்; இதில் வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, கோரைக்கிழங்கு, மருக்களாம்பழம், யவக்ஷாரம், இந்துப்பு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, தேனும் தைலமும் கூட்டி வஸ்தி பிரயோகிக்க, கபவியாதிகள், பாண்டுரோகம்,

1. தேன் நான்கு பலமும், தைலம் நான்கு பலமும் சேர்க்கவேண்டும். ஆமணக்கன்வேரின் கஷாயம் எட்டு பலம் கூட்டவேண்டும்.

2. இவ்வஸ்தியில் தேனும் தைலமும் பிரதாநவஸ்துக்களாகையால் மதுதைலகவஸ்தி யெனப்படுகிறது.

3. சக்ஷுஷ்யம்—நேத்திரத்திற்கு ஹிதமானது.

4. 'மது தைலக வஸ்தி' முதற்கொண்டுள்ள ஐந்து வஸ்தி முறைகளுக்கும் பொதுவாக ஸித்தவஸ்தியென்றும், இறுதியில் கூறிய இம்முறைக்கு விசேஷமாக ஸித்தவஸ்தி யென்றும் பெயர்.

விஷூசி, சுக்ர அடைப்பு, அபாநவாயு ஸ்தம்பித்தல், மூத்திரப் பைப் பொருமல் முதலிய கோளாறுகள் நன்கு தீரும். 34—35½.

இரஸாயந வஸ்தி:—கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, சீந்தில், ஆமணக்கு, சிற்றுமுட்டி, சிற்றரத்தை, சாறடை, மஞ்ஜிஷ்டி, சரக்கொன்றை, வெட்டிவேர், கொன்றை, தான்றிக்காய், கடுகரோஹிணி, இலகுபஞ்ச மூலம் இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; மருக்களாம்பழம் எட்டு பலம்; இவற்றை ஒரு ஆடகம் ஜலத்திற் பக்குவம் செய்து, நாலில் ஒரு பங்காகச் செய்து, அக்கஷாயத்தில் இரண்டு பிரஸ்த்தம் பால் கூட்டி, பால் மிகும்படி மீண்டும் காய்ச்சவும்; இதில் கால் பங்கு ஜாங்கல மாம்ஸரஸம், நெய், தேன், இந்துப்பு இவற்றைச் சேர்த்து, பிறகு அதிமதுரம், சதகுப்பி, கருஞ்சிவதை, வெட்பாலரிசி, இரஸாஞ்ஜநம், இவற்றைக் கல்கமாகக்கூட்டி, இளஞ்சூடாக இதைக்கொண்டு வஸ்தி பிரயோகிக்க தேஹத்தில் மாம்ஸபுஷ்டி, ஜாடராக்னி, பலம், சுக்ர வ்ருத்தி இவை உண்டாகும்; வாத-ரக்தம், மூர்ச்சை, மேஹம், அர்சஸ், குல்மம், மலபந்தம், மூத்திரபந்தம், விஷமஜ்வரம், விஸர்ப்பம், அண்டவிருத்தி, வயிற்றுப் பொருமல், சீதபேதி, துடையிடுக்குவலி, துடைவலி, இடுப்புவலி, வயிற்றுவலி, பிடரி வலி, காதுவலி, தலைவலி, பெரும்பாடு, உந்மாதம், சோகை, காஸம், அச்மரி, குண்டலமென்கிற மூத்திர ரோகம் இவையும் நிவ்ருத்தியாம். நேத்திரத்திற்கும் ஹிதமானது; புத்திரஸந்தாந மளிக்குந் தன்மையது; ச்ருங்காரரஸத்திற் பற்றுள்ள அரசர்களுக்கும் இரஸாயநமாய் உபயோகமாகக் கூடியது. 36—42.

வ்ருஷ்ய குணத்திற் சிறந்த வஸ்திமுறைகள்:—(1) பெரிய மான்களுடையவும் சிறிய மான்குட்டிகளுடையவும் மாம்ஸ ரஸங்களையும், தசமூல கஷாயத்தையும் கூட்டி, அதில் கொட்டைக் கரந்தை - சதகுப்பி - கோரைக் கிழங்கு இவற்றின் கல்கத்தையும் மஹா ஸ்நேஹத்தையும் சேர்த்து, நிரூஹ வஸ்தியாகப் பிரயோகிக்க, நன்கு வாதஹரமாக வேலை செயயும்; வ்ருஷ்ய குணத்திலும் சிறந்தது. (2) மயிலின் சரீரத்திலிருந்து இறகுகள், பித்தம், குடல், பாதங்கள், வயிற்றிலடங்கிய மலம், அலகு இவற்றை விலக்கிவிட்டு மற்றப் பாகங்களைக் கிரஹித்து, இத்துடன் இலகு பஞ்சமூலச் சரக்குகளை ஒவ்வொரு பலம் கூட்டி, பாலும் ஜலமும் கலந்து, அதில் அச்சரக்குகளையும் மயிலின் இறைச்சியையும் சேர்த்து, நெய்யும் தேனும் கூட்டி, பால் மிஞ்சும்படியாகக் காய்ச்சியெடுத்து, அதில் நிலப்பனங்கிழங்கு, திப்பிலி, அதிமதுரம், சதகுப்பி, மருக்களாம்பழம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, சிறிது உப்பையும் கூட்டி வஸ்தி பிரயோகிக்கவும். இது சரீர வன்மையையும், சுக்ரதாதுவையும் விருத்தி செய்வதில் சிறந்தது. (3) தித்திரி முதலிய விஷ்கிர ஜந்துக்களையும், நீர்வாழும் ஸகல ஜந்துக்களையும் முன்போலவே வஸ்திமுறைகளில் உபயோகித்துக்

கொள்ளலாம்.[1] ஆனால் நீர்வாழும் இனத்தைச் சேர்ந்த மத்லி யங்களை உபயோகிக்கையில் பாலைச் சேர்க்கக் கூடாது. (4) உடும்பு, கீரி, பூனை, முள்ளம்பன்றி, மூஞ்சூறு இவற்றின் இறைச்சி வகைக் குப் பத்து பலம், இலகுபஞ்சமூலம் அவ்வளவு; இவற்றைப் பாலில் சேர்த்துக் காய்ச்சவும்; அதில் மருக்களாம்பழம், திப்பிலி, உப்பு, இந்துப்பு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, அப்பால் சர்க் கரை-தேன்-நெய் இவற்றையுங் கூட்டி, வஸ்தியாகப் பிரயோகிக் கவும்; இது சிறந்த இரஸாயநமாகும். பலமான வியாயாமத் தினால் மார்பு நசுங்கியிருக்கையிலும், இந்த்ரியங்கள் க்ஷீணித் திருக்கையிலும், தேஹவன்மையும் ஓஜஸ்ஸும் ஒடுங்கிப் போயிருக்கையிலும் இவ்வஸ்தி மிக்க உபயோகமானது; மேலும் சுக்ரம் கட்டிப்போவது, மலபந்தம், மூத்திரம் தடையுறுதல், ஆமவாதம், வாதரோகங்கள், இவ்வியாதிகளிலும் உபயோக மானது; யானை-குதிரை-இரதம் இவற்றில் ஏறிச் சவாரி செய்து குலுங்கியசைந்து தேஹம் மிகத் துவண்டு போனவர்களுக்கு மீண்டும் புதிய பலத்தையும் தென்பையும் உண்டுபண்ணும்; வாஜீகரண குணத்தில் மிகச் சிறந்தது. (5) காஞ்சொறி, குன்று மணி, நீர்முள்ளி இவற்றைச் சேர்த்து பக்குவம்செய்த பாலுடன் உணவுண்ணலாம். (6) கைகண்ட பலன் தரக்கூடிய சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்டவையும், பத்தியம் முதலிய நிர்ப்பந்தங்களுக்கு இடந்தராத குணமுடையவைகளுமான ஸ்நே ஹங்களால் அநுவாஸநவஸ்திகளையும் பிறகு பிரயோகிக்கலாம். 43—52½.

**தோஷஹர ஸ்நேஹ வஸ்திகள்:**—இனி ஸ்நேஹ வஸ்திகள் என்கிற அநுவாஸந வஸ்தி முறைகள் கூறப்படுகின்றன; அவை தோஷஹரங்களா யிருப்பதோடு பத்திய முறைகளோடு உபயோ கிக்க வேண்டியவைகளாய் இருக்கும்.—53.

**தசமூலாதி அநுவாஸநம்:**—தசமூலம், சிற்றாமுட்டி, சிற் றரத்தை, அமுக்கிறுங்கிழங்கு, சாறணை, சீந்தில், ஆமணக்கு, சுக்கு நாறிப்புல், கண்டுபாரங்கி, ஆடாதோடை, காவட்டம்புல், தண்ணீர்விட்டாங்கிழங்கு, மருதோன்றி, தக்காளி இவை வகைக்கு ஒவ்வொரு பலம்; வாற்கோதுமை, உளுந்து, ஆழி விதை, இலந்தை, கொள் இவை வகைக்கு ஒவ்வொரு பிரஸ்ருதம்; இவற்றை நாலு திரோணம் ஜலத்தில் சேர்த்து, ஒரு திரோணம் கஷாயமாகச் சுண்டக் காய்ச்சி, அதில் ஒரு ஆடகம் தைலம் பக் குவம் செய்யவும்; இதில் ஜீவநீய கணச் சரக்குகளை ஒவ்வொரு பலம் கல்கமாகக் கூட்டி, இதை அநுவாஸந வஸ்தியாகப் பிரயோ கிக்க எல்லா வாதரோகங்களும் தீரும். 54—56½.

---

1. விஷ்கிரம், ப்ரதுதம், ப்ரஸஹம் முதலியவற்றைப்பற்றி முதற் புத்தகம் பார்க்க.

**ஆநூபவஸாதி அநுவாஸநம்** :—ஆநூபதேசமிருகங்களின் கொழுப்பை ஜீவநீயகணச் சரக்குகளுடன் பக்குவம் செய்து அநுவாஸநமாகப் பிரயோகிக்க, முன் தைலத்திற்குக் கூறிய குணங்களேயுண்டாகும்.—57.

**சதாஹ்வாதி அநுவாஸநம்** :—சதகுப்பியையும், புங்கம் பட்டையையும், காடியையும் கூட்டி, அதில் தைலம் பக்குவம்செய்து அநுவாஸநம் பிரயோகிக்க வாதரோகங்களைப் போக்கும்.—57½.

**ஸைந்தவக்ருதாநுவாஸநம்** :—நெருப்பைப்போல் சிவந்த இந்துப்பைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை அநுவாஸநமாகப் பிரயோகித்தாலும் வாதஹரமாக வேலை செய்யும்.—58.

**ஜீவந்த்யாதி அநுவாஸநம்** :—ஜீவந்தி, மருக்காரை, மேதா, சிராவணி, அதிமதுரம், சிற்றுமுட்டி, சதகுப்பி, ருஷபகம், திப்பிலி, தக்காளி, தண்ணீர்விட்டாங்கிழங்கு, காஞ்சொறி, க்ஷீரகாகோலி, கர்க்காடகச்ருங்கி, கச்சோரம், வசம்பு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, தைலமும் நெய்யும் கூட்டி, நாலுபங்கு பாலில் இத்தைல-க்ருதங்களைப் பக்குவம் செய்து, அநுவாஸநமாகப் பிரயோகிக்க ப்ருஹ்மணம், வாத-பித்தஹரம், பலவர்த்தநம், சுக்ரவர்த்தநம், அக்னிவர்த்தநம், ரஜோதோஷஹரம், சுக்ரதோஷஹரம், புத்ரீயம்[1] என்கிற குணங்களைத் தரும். 59—61.

**ஸைந்தவாதி அநுவாஸநம்**:—இந்துப்பு, மருக்காரை, கோஷ்டம், சதகுப்பி, நீர்வஞ்சி, வசம்பு, வெட்டிவேர், அதிமதுரம், கண்டுபாரங்கி, தேவதாரு, சிறுதேக்கு, சுக்கு, தாமரைக்கிழங்கு, மேதா, சவியம், சித்திரமூலம், கச்சோரம், வாய்விடங்கம், அதிவிடயம், கருஞ்சிவதை, அரேணுகம், அவிரி, பெருமல்லிகை, பில்வம், ஓமம், திப்பிலி, நேபாளம், சிற்றரத்தை இவற்றைச் சம அளவுசேர்த்து, ஆமணக்கெண்ணெயையாவது நல்லெண்ணெயையாவது பக்குவம் செய்து, அதனால்அநுவாஸநம் செய்ய, கபரோகங்கள், அண்டவிருத்தி, உதாவர்த்தம், குல்மம், அர்சஸ், ப்லீஹம், மேஹரோகம், ஊருஸ்தம்பம், வயிற்றுப்பொருமல், அச்மரி இவை ஜடிதியில் தீரும். 62—65.

**கபஹரமான சில அநுவாஸநங்கள்** :—(1) இலகுபஞ்சமூல கஷாயத்திலாவது, (2) பில்வாதி கஷாயத்திலாவது[2] கபதோஷத்தைப் போக்க ஏற்ற தைலம் பக்குவம் செய்யவும். (3) அல்லது கபஹரமான வேறு சரக்குகளாலும், மதநபலங்களாலும், எட்டு மடங்கு காடிகளாலும் பக்குவம் செய்த தைலத்தையும்கபதோஷத்தில் அநுவாஸநமாகச் செய்யலாம்.—66, 66½.

**தீக்ஷ்ண-மிருதுவஸ்திகளை மாற்றி மாற்றிப் பிரயோகிக்கும் நிலைமைகள்** :—(1) மிருது குணமுள்ள வஸ்துக்களாலான வஸ்தியினால் குடல் ஸ்தம்பித்துப்போனால், தீக்ஷ்ணகுணமுள்ள வஸ்துக்

1. புத்ரீயம் — புத்திரஜநகம் ; கர்ப்போற்பத்தி செய்வது.
2. பில்வாதி — பில்வத்தை முதலாகவுடைய மஹாபஞ்சமூலம்.

களால் மற்றொரு வஸ்தி பிரயோகிக்கவும். (2) தீக்ஷ்ண குண முள்ள வஸ்தியினால் குடல் அல்லது குதம் வெளியில் தள்ளப்படு மானால், ஸ்நிக்த்தமாகவும், மதுரரஸமாகவும், குளிர்ந்ததாகவும், ஆகவே மிருதுவாகவுமுள்ள வஸ்துக்களால் வேறொரு வஸ்தி பிரயோகிக்கவும்.—67½.

தீக்ஷ்ண-மிருது வஸ்துக்களுக்கேற்ற வஸ்துக்கள் :—(1) பசு வின் மூத்திரம், பெருஞ்ஜீரகம், சித்திரமூலம், இந்துப்பு, யவ க்ஷாரம், கடுகு இவற்றைக்கொண்டு வஸ்திக்கு தீக்ஷ்ணத்தன்மை யையும், (2) நெல், பால் இவை முதலியவற்றால் அதற்கு மிருதுத் தன்மையையும் உண்டாக்கி, அந்தந்தக் காலத்தில் யுக்தப்படி அந்தந்த முறையைப் பிரயோகிக்கவேண்டும்.—68.

பல - காலாதிகளுக்கேற்ற ஔஷதங்களால் வஸ்திகளைப் பிரயோகித்தல் :—தேஹபலம், காலம், ரோகம், தோஷம், பிரக் ருதி இவற்றின் நிலைமைகளைப் பகுத்தறிந்து, அவற்றிற்கு ஏற்ற ஔஷதவர்க்கங்களால் வஸ்தி பிரயோகிக்கப்படுமானால், அந்தந்த ஔஷதங்கள் எந்தெந்த வியாதிகளைப் பரிஹரிக்கு மியல்புடைய னவோ அவ்வியாதிகள் நிவ்ருத்தி செய்யப்படும்.—69.

உஷ்ண-சீதளங்களால் வருந்துபவருக்கு ஏற்ற வஸ்திகள் :— உஷ்ணத்தினால் வருந்துபவருக்குச் சீதளமான வஸ்திகளையும், கடுங்குளிர்ச்சியால் வருந்துபவருக்கு இளஞ்சூடான வஸ்திகளை யும் பகுத்தறிந்து, அந்தந்த நிலைமைகளுக்கேற்ற ஔஷதங்களைக் கூட்டிப் பிரயோகிக்கவேண்டும்.—70.

ப்ருஹ்மண-சோதந வஸ்திகளுக்குத் தகுந்தவர்களும் தகாத வர்களும் :—(1) தோஷங்களை வெளிப்படுத்தி, சோதந சிகித்ஸை செய்வதற்கேற்ற வியாதிகளில் ப்ருஹ்மண வஸ்திகளைப் பிரயோ கிக்கக் கூடாது; மேதோரோகம் அதிகரித்தவர்களும், குஷ்ட மேஹங்களால் பீடிக்கப்படுபவர்களும் சோதநசிகித்ஸைக்கு ஏற்ற வர். (2) இளைத்தவர், க்ஷதகாஸமுள்ளவர், துர்பலர், மூர்ச்சிப்பவர், சுஷ்கிப்பவர், சோதநசிகித்ஸை செய்துகொண்டவர், தோஷங் கள் சேர்ந்திருப்பதாலேயே ஆயுளுடனிருப்பவர் இவர்களுக்குச் சோதநவஸ்திகள் கூடாது.—71, 72.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

### வஸ்தி வியாபத்ஸித்தி.

இனி வஸ்தி வியாபத்ஸித்தி யென்னும் அத்தியாயம் விவ ரித்துக் கூறப்படும் :—

வஸ்தியின் அயோகமும் அதனால் ஏற்படும் துர்க்குணங்க ளும் :—ஸ்நேஹ-ஸ்வேதங்களால் ஸம்ஸ்கரிக்கப்படாதவனுக்கும், குருகோஷ்டமுள்ளவனுக்கும் சீதமாகவும், ஸ்நேஹம்-இலவணம்-

திரவ்யம்-அளவு இவைகளில் அற்பமாகவுமுள்ள அல்லது கனமாயுள்ள வஸ்தியைப் பிரயோகிக்க, அது குணத்தில் அல்லது வீர்யத்தில் துர்பலமாயிருப்பதால் தோஷத்தைக் கிளப்பிவிட்டு, அதை வெளிப்படுத்த முடியாததாய் அயோகம்[1] என்கிற பரிணாம விகாரத்தை யுண்டுபண்ணும்; அதினால் அபாநவாதம், மூத்திரம், மலம் இவை சட்டப்படும்; நாபியிலும், வஸ்தியிலும் நோவும் அழற்சியும் உண்டாகும்; இருதயத்தில் பூசப்பட்டது போன்ற உணர்ச்சியும், குதத்தில் வீக்கமும் உண்டாகும்; மேலும் தினவு, கட்டிகள், கருநிறம், வேதனை, அக்னிமாந்தியம் இக்கோளாறுகளும் உண்டாகும். 1—3.

வஸ்தியின் அயோகத்தினாலான துர்க்குணங்களுக்குப் பரிஹார முறைகள் :—(1) முன்னால் மத்திம தோஷமான அதிஸாரத்தில் முதலிற்கூறிய இரண்டு கஷாயங்களுள் ஒன்றை[2] அயோகக் கோளாறில் சூடாகப் பருகுவது நலம். (2) பலவர்த்திகளும்[3], (3) ஸ்வேத சிகித்ஸைகளும், (4) காலமறிந்து விரேசநமும் செய்விக்கலாம். (5) பில்வவேர், சிவதை, தேவதாரு, வாற்கோதுமை, இலந்தங் கொட்டை, கொள்ளு இவை சேர்ந்த வஸ்தியும், (6) ஸுரை யென்கிற மது முதலியது சேர்ந்த வஸ்தியும் முற்கூறிய கல்கங்களுடன்[4] பிரயோகிக்கப் படுமானால், அடைபட்டுள்ள தோஷங்களை வெளிப்படுத்திவிடும்.—4, 5½.

மிகுதியான தோஷாதிகளுள்ளவனுக்குச் சொற்ப வீர்யமுள்ள வஸ்தியால் உண்டாகும் கெடுதிகளும் பரிஹாரமும் :—(1) தோஷம் மிகுதியாகச் சேர்ந்துள்ளவன், ரூக்ஷசரீரமுடையவன், க்ரூர கோஷ்டமுள்ளவன் இவர்களுக்குச் சொற்ப வீர்யமுடைய வஸ்தி பிரயோகிக்கப் படுமானால், அது தோஷங்களால் சூழப்பட்டு குத மார்க்கத்தை அடைத்து, அபாநவாயுவையும் தடுத்துப்போடும்; தவறுதலான வழியிற் செல்ல முயன்ற அவ்வாயு வயிற்றுப் பொருமலையும், மர்மஸ்த்தாநங்களில் வலியையும், குதம் குடல் இவற்றில் அழற்சியையும், பீஜம் துடையிடுக்கு இவற்றில் வேதனையையும் உண்டுபண்ணும்; இருதயத்தை அடைக்க முயலும்; இங்குமங்கும் வலியை யுண்டுபண்ணிக் கொண்டு ஓடும். (2) அத்தகைய கோளாறில் நன்கு அப்யஞ்ஜநம் செய்து வைத்து, ஸ்வேத சிகித்ஸையும் செய்து, பலவர்த்தியைப் பிரயோகிக்கவும். பெருஞ்ஜீரகம், கடுகு, பசுமூத்திரம் இவற்றைக் கூட்டிய பில்வாதி கஷாயநிரூஹமாவது பிரயோகிக்கலாம். ஸரளதேவதாரு, தேவதாரு இவற்றைக் கூட்டிப் பக்குவம் செய்த தைலத்தைக் கொண்டு அநுவாஸந வஸ்தியையாவது பிரயோகிக்கலாம். 6—9½.

---

1. அயோகம்—முதற்புத்தகம் பார்க்க.
2. சிகித்ஸாஸ்த்தாநத்தில் அதிஸார சிகித்ஸை பார்க்க.
3. பலவர்த்தி—முதற்புத்தகம் பார்க்க.
4. இதற்கு முன் ஸர்வரோகஹர வஸ்தியில் கூறியுள்ள கல்கமுறை.

விஷம நிரூஹவஸ்திகளும் அவற்ருலுண்டாகும் கேடுதிகளும் :—வேகங்களை அடக்குபவனுக்குப் பிரயோகிக்கப்படும் வஸ்தியும், அதிக அளவான வஸ்தியும், ஸ்நிக்தத்தன்மை-இலவண ரஸம்-சூடு இக்குணமுள்ள வஸ்திகளும், அற்ப அளவான வஸ்தியும், சொற்ப ஔஷதம் கலந்த வஸ்தியும், மிருதுவான வஸ்தியும் உட்புறத்தில் வாயுவினுல் மேலாகச் சிதறடிக்கப்பட்டு, வாய்-நாசி இவற்றின் வழியாக வெளிப்படுகிறது; அப்பொழுது மூர்ச்சை, பலமான இருதயத் துடிப்பு, நாவறட்சி, அழற்சி, இவை முதலியவையும் உண்டாகும்.—10, 11½.

விஷம நிரூஹவஸ்திகளாலுண்டான கேடுதிகளுக்குப் பரிஹாரங்கள் :—(1) இப்பிணியாளிக்கு மூர்ச்சை ரூபமான விகாரத்தைக் கண்டதும் குளிர்ந்த ஜலத்தை முகத்தில் தெளிக்கவும். (2) சோர்வு தணியும் வரையில் ஆலவட்டமெடுத்து வீசவும். (3) அவனைப் பிராணுயாமமும் செய்யச் சொல்லவும். (4) கைகளை உஷ்ணமாகச் செய்துகொண்டு, அவற்ருல் மேலிருந்து கீழ் நோக்கியவாறு முதுகு-பாரிசங்கள்-வயிறு இவற்றை உருவி விடவும். (5) தலை மயிர்களைப் பிடித்துத் தூக்கி அப்பிணியாளியை உதரச் செய்யலாம். (6) புலி, மற்றும் கோரப் பற்களையுடைய விலங்குகள், ஆயுதங்கள், கொள்ளி இவைகளைக் காட்டி அச்சமுறச் செய்யலாம்; இவ்வுபாயங்களால் வஸ்தியானது கீழ்நோக்கி வெளிப்படும். (7) உயிருக்கு அபாயம் நேரிடாதபடி கையாலாவது வஸ்திரத்தினுலாவது தொண்டைக்குள் ஒருவாறு அழுத்தலாம்; இவ்விதம் செய்வதால் பிராணவாயுவும் உதாநவாயுவும் தகையப்பட்டுப் போக, அதனுல் அபாநவாயு தடங்கலில்லாத விசாலமான அவகாசத்தைப் பெற்று, உள்ளடங்கிய அவ்வஸ்தியௌஷதத்தை ஜடிதியில் வெளிப்படுத்தும். (8) கோஷ்டம், கமுகு இவற்றின் கல்கத்தை அம்லவஸ்துக்களுடன் கூட்டியும் பருகச் செய்யலாம்; உஷ்ணத்தன்மையினுலும், தீக்ஷ்ணத்தன்மையினுலும், மலத்தை இளக்கி நெகிழச் செய்யுங் குணத்தினுலும் பிணியாளியின் குடலிலுள்ள வஸ்தியௌஷதத்தை அநுலோமநமாக்கி வெளிப்படுத்தும். (9) சிவதை, கடுக்காய் இவற்றின் கல்கத்தைப் பசுமூத்திரத்தில் கலக்கி உட்கொள்ளக் கொடுக்க அதுவும் மலாதிகளைக் கீழ் நோக்கச் செய்யும். (10) மலாதிகள் பக்வாசயத்தில் தங்கி யிருக்கையில், அவ்விடத்தில் ஸ்வேதம் செய்வித்து, தசமூலகஷாயத்தினுல் நிரூஹவஸ்தியைப் பிரயோகிக்கலாம்; யவதானியம், இலந்தை, கொள் இவற்றைப் பசுமூத்திரத்திற் பக்குவம் செய்து, அதைக் கொண்டும் வஸ்தி பிரயோகிக்கலாம்; அல்லது சீந்தில், மூங்கில்தளிர், புங்கம்பட்டை, புங்கயிலை, கச்சோரம், தேவதாரு, செம்மரம் இவற்றைப் பசுமூத்திரத்திற் கஷாயம் காய்ச்சி, தைலம், வெல்லம், இந்துப்பு இவற்றைக் கூட்டி, விரேசநகுணமுள்ள ஔஷதங்களைக் கல்கமாகவும் சேர்த்து

வஸ்தி பிரயோகிக்கலாம். (11) தோஷம் மார்புக்கு அருகிலிருப்பதாகத் தெரிந்தால் பில்வம் முதலிய பஞ்சமூலகஷாயத்திஞல் வஸ்தி செய்யலாம். (12) அதுவே சிரஸ்ஸை ஆச்ரயித்திருந்தால் நஸ்யமும், தூமபாநமும் செய்வதோடு, கடுகை அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் தடவி அதஞல் சிரஸ்ஸை மூடலாம். 12—20½.

நிருஹவஸ்தியின் அதியோகமும் அதஞலான தீங்கும் பரிஹாரமும்:—அதி உஷ்ணமாகவும், அதி தீக்ஷ்ணமாகவும், அதி அம்லமாகவும், அதி கனமாகவும் பிரயோகிக்கப்படும் வஸ்தியும், பலமாக ஸ்வேதம் செய்துகொண்டவன்-அற்பதோஷ முடையவன்-மிருது கோஷ்டி இவர்களுக்கு அடிக்கடி பிரயோகிக்கப்படும் வஸ்தியும் அதியோகமடைந்து, வயிற்று வலி யுண்டுபண்ணும்; விரேசநத்தின் அமிதப் பிரயோகத்தால் ஏற்படும் குறிகள் இதிலுண்டாகும்; விரேசநாதியோகத்தின் பரிஹார முறைகளே இதற்கும் ஏற்றவை.—21, 22½.

க்ஷாராதிகளால் அழற்சி தரும் நிருஹமும் பரிஹாரமும்:—க்ஷாரத்தன்மை, அம்லம், தீக்ஷ்ணம், உஷ்ணம், இலவணம் இக்குணமுள்ள வஸ்துக்களால் வஸ்தி பிரயோகிக்கப்படுமாஞலும், பித்ததோஷம் மிகவும் அதிகரித்தவனுக்கு வஸ்தி செய்யப்படுமாஞலும், ஆஸநத்வாரத்தில் எரித்தலுண்டுபண்ணிக்கொண்டும், பிறிக்கொண்டும், அவ்வவயவத்தை அறுப்பது போன்ற உணர்ச்சியுண்டுபண்ணிக்கொண்டும், குதத்திலிருந்து துர்நீர்க்கசிவையும் உண்டுபண்ணும்; அப்பிணியாளிக்கு அழன்றுபோன இரத்தமும், பலவித நிறமுள்ள பித்தமும், அடிக்கடியும் மிக்க விசையோடும் வெளியாகும். அவன் அடிக்கொரு முறை மூர்ச்சை யடைவான். அவ்வித வஸ்திவியாபத்தில் (1) இரத்த-பித்த ஹாரமாகவும், அதிஸாரத்தைப் பரிஹரிப்பதுமான சிகித்ஸைகளைச் செய்வது நலம். (2) அழற்சி முதலியவற்றில் சிவதைவேரின் கல்கத்தை திராக்ஷையின் இரஸத்தோடு உட்கொள்ள, அது பித்தத்தையும், மலத்தையும், வாயுவையும் வெளிப்படுத்தி, அழற்சிமுதலியவற்றையும் தணிக்கும். (3) நன்கு சுத்தியான பிறகு குளிர்ந்ததும், சர்க்கரை கலந்ததுமான யவாகூவைப் பருகலாம். (4) மிதமிஞ்சி விரேசநமாய், மலமெல்லாம் வெளியாய் விட்டவனுக்குச் சிறுகடலையை உளுத்தங்கஞ்சியோடு உணவாகக் கொடுத்து, தயிரையாவது ஸுராயென்னும் மதுவையாவது அருந்துவதற்கும் கொடுக்கலாம். 23—27½.

அநுவாஸநவியாபத்ஸித்திகள்:—இங்ஙனம் நிருஹவஸ்திகளால் நேரிடும் கெடுதிகளுக்கு அவசியமான பரிஹாரங்கள் கூறப்பட்டன; இனி அநுவாஸநவஸ்திகள் செய்கையில் நேரிடக்கூடிய கெடுதிகளுக்கு ஏற்ற பரிஹாரங்கள் மொழியப்படும்.—28.

தோஷாவ்ருதமான அநுவாஸநங்களும் செய்யும் பரிஹார முறைகளும் :— (1) வாததோஷம் அதிகமாயிருக்கையில் சீதளமாகவாவது, சொற்ப அளவாகவாவது அநுவாஸநவஸ்தியைப் பிரயோகித்தாலும், பித்தம் அதிகரித்திருக்கையில் உஷ்ணமான வஸ்தியைப் பிரயோகித்தாலும், கபம் மேலோங்கி யிருக்கையில் மிருது வஸ்தியைப் பிரயோகித்தாலும் இவை அயோகமாக ஆய்விடும். அதி போஜனம் செய்திருக்கும்போது குருவான வஸ்தியைப் பிரயோகிப்பதும், அதிக மலம் சேர்ந்திருக்கையில் வீர்யமில்லாத வஸ்தியைப் பிரயோகிப்பதும் அவ்விதமேயாம். இவ்வயோகவஸ்தி வாதாதி தோஷங்களால் ஆவரணம் செய்யப்பட்டு, மிக்க பலவந்தமாக முயற்சி செய்தும் வெளிவாராமல் அடைபட்டுப் போகும். ஸ்தம்பித்தல், துடைமெலிவு, வயிற்றுப் பொருமல், ஜ்வரம், வயிற்று நோய், உடல்வேதனை, பக்கசூலை, பார்ச்வங்களில் இசிவு இவ்வித லக்ஷணங்கள் உண்டாவதைக் கண்டு வாயுவினல் ஸ்நேஹம் குடலில் ஆவரணம் செய்யப்பட்டதாய் அறியலாம். காஞ்ஜிகமென்கிற காடி, ஸுரையென்கிற மது, இலந்தை, கொள், வாற்கோதுமை இவற்றையும், பஞ்சமூலங்களையும் சேர்த்து பக்குவம் செய்த ராஸ்நாதைலம், ஸரள தேவதாருவின் தைலம் இவற்றிற் பசு மூத்திரமும் கூட்டி நிரூஹவஸ்தியாகப் பிரயோகித்து, குடலிற் சேர்ந்துள்ள ஸ்நேஹாதிகளை நன்கு வெளிப்படுத்தி விடவேண்டும். மாலை நேரத்தில் போஜநம் செய்வித்து, அவ்விரண்டு தைலங்களையே அநுவாஸநமாகவும் பிரயோகிக்கலாம். (2) நாவறட்சி, உடலழற்சி, உடலில் சென்னிறமுண்டாதல், மூர்ச்சை, அல்லது தேஹம் கருநிறமாதல், தமகச்வாஸம், ஜ்வரம் இச்குறிகள் கண்டால், அநுவாஸநவஸ்தி பித்தத்தினல் ஆவரணம் செய்யப்பட்டதாய் அறிக. அப்பொழுது மதுரமாகவும் கைப்பாகவுமுள்ள சரக்குகளால் நிரூஹம் செய்து, அடைபட்டுள்ள அவ்வநுவாஸநத்தை வெளிப்படுத்தி விடலாம். (3) சோம்பல், தேஹத்தில் சீதளம் அதிகரித்தல், ஜ்வரம், ஆலஸ்யம், வாயில் நீரூறுதல், அரோசகம், தேஹம் கனத்துப்போதல், விசேஷமாக மூர்ச்சை, சோர்வு இக்குறிகளைக் கண்டு அநுவாஸநஸ்நேஹம் குடலில் கபத்தினல் ஆவரணம் செய்யப்பட்டிருப்பதாய் அறியலாம். துவர்ப்பும், கைப்பும், கார்ப்புமான சரக்குகளும், ஸுரை-பசுமூத்திரம் இவையும், மருக்காரை-தைலம்-அம்லவர்க்கம் இவையும் கலந்த கஷாயங்களை நிரூஹவஸ்தியாகப் பிரயோகித்து அடைபட்ட ஸ்நேஹத்தை வெளிப்படுத்தி விடலாம். (4) வாந்தி, மூர்ச்சை, அரோசகம், சோர்வு, வயிற்றுவலி, அதிநித்திரை, உடல்வலி, அழற்சி, மற்றும் ஆமதோஷக் குறிகள் இவற்றைக்கொண்டு அதிபோஜந தோஷத்தினல் ஆவரணம் செய்யப்பட்ட கோளாருகக் கருதவேண்டும். அதில் கடுரஸமும் இலவணரஸமுமுள்ள க்வாதங்களாலும், அவ்வித சூர்ணங்களாலும்

பாசநம் செய்விக்க வேண்டும்; மிருது விரேசநமும், ஆமதோஷ பரிஹாரத்திற்கு ஏற்ற மற்றச் சிகித்ஸைகளும் இதற்கு அநுகூல மானவை. (5) மலபந்தம், மூத்திரம் அடைபடுதல், அபானவாயு தடையுறுதல், வயிற்றுவலி, குருத்வம், வயிற்றுப் பொருமல், இருதயவேலை தடையுறுதல் இக்குறிகளைக் கண்டு ஸ்நேஹம் மலத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருப்பதாய் அறிந்து, ஸ்நேஹ சிகித்ஸைகளாலும், ஸ்வேத சிகித்ஸைகளாலும், பலவர்த்திகளா லும், கருஞ்சிவதை-பில்வம் முதலியவற்றாலான கஷாயவஸ்தி களாலும், அநுவாஸந வஸ்திகளாலும், உதாவர்த்தஹரமான மற் றச் சிகித்ஸைகளாலும் முறைப்படி அம்மலங்களை வெளிப்படுத்தி விடவேண்டும். 29—39½.

அநுவாஸநம் வெளிவராமல் வியாபிப்பதும் அதற்குப் பரி ஹாரங்களும் :—போஜனம் செய்யாமலிருக்கையிலும், குதம் அமுன்று வீங்கியிருக்கையிலும் ஸ்நேஹவஸ்தி பிரயோகித்துக் கொண்டவனுக்கு அல்லது பேயா என்கிற கஞ்சியை மாத்திர மாவது பருகியவனுக்கு அவ்வஸ்தி பிரயோகிக்கப் படுமானால் ஸ்நேஹம் கீழ்நோக்காமல் மேல்நோக்கி விசையாகப் பரவும்; பிறகு கழுத்துக்கு மேற்பட்ட த்வாரங்களின் மூலமாகவும் வெளி வரும். பசு மூத்திரம், கருஞ்சிவதை, கருஞ்சிவப்பான சிவதை, வாற்கோதுமை, இலந்தை, கொள் இவற்றின் கஷாயத்தையும், இக்கஷாயத்தில் பக்குவம் செய்த தைலத்தையும் முறையே நிரூ ஹமாகவும், அநுவாஸநமாகவும் இந்த வஸ்தி வியாபத்தில் பிர யோகிக்கலாம். ஸ்நேஹம் தொண்டையிலிருந்து வெளிவருமா னால் அவ்வேகத்தை அடக்குவது, கழுத்தைச் சிறிது அழுத்து வது, விரேசநம் செய்விப்பது இவ்வுபாயங்களாலும், வாந்தியைத் தணிக்கும் சிகித்ஸைகளாலும் ஸ்நேஹம் தொண்டையிலிருந்து வெளிவருவதைத் தடுக்கலாம். 40—43.

அபக்வஸ்நேஹவஸ்தியால் உண்டாகும் தீங்குகளும் பரிஹார மும் :—பக்குவமாகாத ஸ்நேஹத்தை வஸ்தியாகப் பிரயோகிக்கக் கூடாது; அது குதத்தில் பிசுபிசுப்புண்டாக்கி வலியோடு மூர்ச் சையையும், தினவையும், வீக்கத்தையும் உண்டுபண்ணும். இதில் தீக்ஷ்ண வஸ்தியும், எருக்கிலைச் சாற்றால் காய்ச்சிய தைலப் பிர யோகமும் ஏற்ற சிகித்ஸைகளாம்.—44, 44½.

வஸ்தியந்திரத்தைப் பலவாறு அழுத்துவதாலுண்டாகும் கெடுதிகளுக்குப் பரிஹாரங்கள் :—(1) வஸ்தியந்திரத்தின் வாய் ஊதப்படாமல் கட்டப்பட்டாலும், வஸ்தியந்திரத்தில் ஔஷதம் சிறிதும் மிச்சப்படாமல் பிரயோகிக்கப் பட்டாலும் வாயு குடலிற் பிரவேசித்து வலியையும் குடைச்சலையும் உண்டு பண்ணும். இதில் அப்யங்கமும், குதத்தில் ஸ்வேதமும் செய்வித்து, வாத ஹரமான உணவுகளையும் கொடுக்கலாம். (2) ஜடிதியில் வஸ்தி

யைப் பிரயோகித்து உடனே அதை வெளிப்படுத்தி விட்டா லும், திடீரென்று வஸ்திப் பிரயோகம் செய்தாலும் இடுப்பு, குதம், கால்கள், தொடைகள், வஸ்தி இவற்றில் ஸ்தம்பநமும், வலியும், பிளக்கப்படுவது போன்ற வேதனையும் உண்டாகும். இதில் வாதஹரபோஜனமும், வஸ்திசிகித்ஸைகளோடு ஸ்வேதமும் அப்யங்கமும் செய்யலாம். (3) வஸ்தியைப் பிரயோகிக்கையிலேயே இடையில் விடப்பட்டால், அப்பொழுது அதிலிருந்து விசையுடன் கிளம்பும் வாயு குதத்தைத் தாக்கி, மார்பிலும் சிரஸ்ஸிலும் வலியுண்டுபண்ணுவதோடு, தொடைகளையும் சுருங்கச் செய்யும். அதில் பில்வாதி பஞ்சமூலங்களையும், கருஞ்சிவதை-மருக்களாம் பழம்-பசு மூத்திரம் இவற்றையும் கூட்டி வஸ்தி பிரயோகிக்கலாம். (4) வஸ்தியை அதிகமாக அழுத்திப் பிரயோகித்தால், அது குடலிலேயே தங்கிவிடலாம், அல்லது தொண்டையில் எதிர்த்து வரலாம். இதில் வஸ்தியும், விரேசநமும், தொண்டையை அழுத்துவது முதலிய உபாயங்களும் அநுகூலமானவை. 45—50½.

வமநாதிகளால் சுத்தியடைந்தவனைப் பரிபாலித்தல்:—வமநாதி சோதந சிகித்ஸைகளால் சுத்தி யடைந்தவனுக்கு தேஹமும், சரீரபலமும், ஜாடராக்னியும் க்ஷீணித்திருந்தால் அவனை, வைத்தியன் முதிராத முட்டையையும், தைலம் நிரம்பிய பாத்திரத்தையும் காப்பதுபோல் அபாயம் நேரிடாதபடி வெகு ஜாக்கிரதையாய் பாதுகாக்க வேண்டும்.—51, 51½.

வஸ்தியாதிகளால் சுத்தியானவனை இயற்கைக்குக் கொண்டு வருதல்:—(1) இவ்வாறு சுத்தி யடைந்தவனுக்கு முதலில் மதுரமும் ஹ்ருத்யமுமான உணவுகளைக் கொடுத்து, பிறகு அம்லமும் இலவணமும் பொருந்திய வஸ்துக்களை யுபயோகித்து, பிறகு மதுரரஸமும் திக்தரஸமுமான உணவுகளைக் கொடுத்து, அப்பால் துவர்ப்பும் கார்ப்புமான வஸ்துக்களைக் கொடுக்கலாம். ஒன்றுக்கொன்று எதிரிடையான இரஸங்களையும், ஸ்நிக்த-ரூக்ஷங்களையும் மாற்றி மாற்றி யுபயோகித்து, கிரமமாக தேஹத்திற்கு இயற்கை நிலைமை யுண்டுபண்ணவும். (2) எதையும் தாங்கத் துணிபுள்ளவனாகவும், நிலையான தேஹவன்மையைப் பெற்றவனாகவுமுள்ள மனிதன் பிரக்ருதி என்கிற இயற்கை நிலைமையைப் பெற்று விட்டான் என்றறியலாம். 52—54.

# ஆறாம் அத்தியாயம்.

## பேஷஜ கல்பம்.

இனி பேஷஜகல்பம் என்னும் அத்தியாயம்[1] விவரிக்கப் படும் :—

ஔஷதோபயோகமான சிறந்த மூலிகைகள் :—மருவென்கிற சதுப்பில்லாத நிலம், ஸாதாரண பூமி, ஸமவெளிப் பிரதேசம், நல்ல ஸாரமான நிலம் இவற்றிலும், சுடலை - பூஜைக்குரிய கிராம விருக்ஷங்கள்-ஆலயங்கள்-பாழ்-புற்று இவற்றை விலக்கி மற்றப் பிரதேசங்களிலும், மிருது பூமியிலும், பிரதக்ஷிணமாக நீர் ஓடும் ஸ்தலத்திலும், தர்ப்பை-வாஸனைப்புற்கள் அடர்ந்த இடங்களிலும், கலப்பையிட்டு உழாத பூமியிலும், மிகப் பெரிய விருக்ஷங்கள் சூழ்ந்த நிலத்திலும் முளைத்து விருத்தியான ஓஷதிகள் சிறந்தவை. மேலும் இயற்கையான சிறந்த நிறம் சுவை முதலியவைகளைப் பெற்று, கிருமிகளால் அரிக்கப்படாமல், காட்டுத்தீயால் எரிக்கப்படாமல், துஷ்ட பூதங்களால் கெடுக்கப்படாமலுமுள்ள மூலிகைகளைக் கிரஹிக்கலாம்; நிழல், வெயில், தண்ணீர் இவை முதலியவற்றைக் காலத்திற் பெற்றுச் செழித்தவையும், வெகு ஆழத்தில் இறங்கி பெரிய வேர்களுள்ளவையும், வடதிசையை ஆச்ரயித்தவையுமான ஓஷதிகளும் ஔஷதங்களுக்குச் சிறந்தவையாம். 1—4.

மூலிகைமுதலியவற்றைக் கிரஹிக்கவேண்டிய காலாதிகள்:- மூலிகைகள் முற்கூறிய சிறப்புள்ளவை யென்றறிந்த பிறகு, ஸ்வஸ்த்யயநம் முதலிய மங்களச் சடங்குகளைச் செய்து, பரிசுத்தமாயிருந்து, போஜனம் செய்யாமல், நல்ல நிலைமையிலுள்ள மூலிகையைக்காலமறிந்து கிரஹித்துப் பாழலாமலிருக்கையிலே ஔஷதமாய் பக்குவம் செய்யவேண்டும்; முடியாவிடில் கிரஹித்து ஒரு வருஷத்திற்கு மேற்படாத சரக்குகளை யுபயோகிக்கலாம்; ஆனால் வெல்லம், நெய், தேன், கொத்தமல்லிவிதை, திப்பிலி, வாய்விடங்கம் இவற்றை ஒரு வருஷம் கழிந்தபின்பே உபயோகிக்க வேண்டும்.—5. 6.

கிரஹிக்கக் கூடிய பால்-கோமூத்திரம் முதலியன :—வெகு நாட்களுக்கு முன்பு கன்றையீன்ற பசுவின் சுத்தமான பாலையும், தோஷமற்ற சாணத்தையும், இளம் வயதுடன் நல்ல பலமாயுள்ள ஜந்துக்களின் தாதுக்களென்ன-பிசுபிசுப்புள்ள மற்றப் பாகங்களென்ன-கொம்புகளென்ன-குளம்புகளென்ன இவை முதலியதையும் ஔஷதங்களுக்காகக் கிரஹித்துக் கொள்ளலாம்.—7.

---

1. ஔஷதோபயோகமான சிறந்த மூலிகைகள், ஔஷதங்களைக் கிரஹிக்கும் காலாதிகள், கஷாயாதிபரிபாஷைகள், மாநபரிபாஷை முதலியவற்றை விவரிக்கும் அத்தியாயம்.

பஞ்சகஷாயங்கள்:—இலவணம் தவிர மற்ற ஐந்து இரஸங்களுள்ள பதார்த்தங்களும் கஷாயங்களுக்கு ஆதாரமாயுள்ளன; ஸ்வரஸம், கல்கம், க்வாதம், ஹிமம், பாண்டம் என்று கஷாய முறை ஐந்து வகைப்படும்; இவ்வைந்திலும் பாண்டத்திலும் ஹிமகஷாயமும், ஹிமத்திலும் க்வாதகஷாயமும், க்வாதத்திலும் கல்கமும், கல்கத்தைவிட ஸ்வரஸமும் மேன்மேலும் வீர்யத்திற் சிறந்தவையாம். (1) அப்பொழுதே கொண்டுவந்த ஔஷதிகளை இடித்து, வஸ்திரத்திலிட்டுப் பிழிந்து, வடிகட்டின இரஸம் அல்லது சாறு ஸ்வரஸம் எனப்படும். (2) ஔஷதச் சரக்குகளை நன்றாக இடித்து, தகுந்த திரவ வஸ்துவைக் கலந்து செய்யப்படுவது கல்க கஷாயம் என்றும், அச் சீதகஷாயமே திரவவஸ்துவின் சேர்க்கையில்லாவிடில் சூர்ணம் என்றும், (3) கொதிக்க வைத்துப் பக்குவம் செய்யப்படுவது க்வாதம் என்றும், (4) இரவில் ஏதேனும் திரவத்தில் ஊறவைத்து, மறுநாட் காலையில் வடிக்கட்டியெடுக்கப்படுவது சீதகஷாயம் என்றும், (5) கஷாயத்திரவ்யங்களை ஒரு பாத்திரத்திலிட்டு, அதில் கொதிக்கும் ஜலத்தை ஊற்றி, வடிக்கட்டிக் கொள்ளப்படுவது பாண்ட கஷாயம் என்றும் வழங்கப்படும். 8—10$\frac{1}{4}$.

பஞ்ச கஷாயங்களையுபயோகிக்கும் பிரமாணங்கள் :—பஞ்ச கஷாயங்களைப் பக்குவம் செய்யவும், உபயோகக்கவும் தகுந்த அளவுகளை வியாதி முதலியவற்றின் பலாபலங்களுக்கேற்ப ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்; அங்ஙனமே முனிவரது வசநமும் பின்வருமாறு :—"ஔஷதங்களைப் பக்குவம் செய்யவும், உபயோகிக்கவும், அளவுகளை நிர்ணயிக்க முடியாது; வியாதி, கோஷ்டம், தேஹவன்மை, வயது, தேசம், காலம் இவற்றின் நிலைமைகளை ஆலோசித்து, அவ்வவற்றிற் கேற்றவாறு கஷாயாதிகளின் பிரமாணங்களையும், அவற்றின் பல முறைகளையும் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். பொதுவாகக் கூறுமிடத்து, ஸ்வரஸம் நான்கு பலமாகவும், கல்கம் கால் பலமாகவும் உபயோகிக்கப் படலாம்; கல்கத்துடன் மூன்று பலம் திரவத் திரவ்யத்தையும் கூட்டி யுபயோகிக்க வேண்டும்." 11—13.

க்வாதாதிகளைச் செய்யுமளவுகள் :—(1) ஒரு பலம் கஷாயத்திரவியத்திற்கு எட்டுபலம் நீர்சேர்த்து, நாலிலொரு பங்கு வற்றக் காய்ச்சி, க்வாதம் என்னும் கஷாயத்தைப் பக்குவம் செய்யவும். (2) சீத கஷாயத்திற்கு ஒருபலம் சரக்குக்கு ஆறுபலம் திரவம் சேர்த்துப் பக்குவம் செய்யவும். (3) ஒரு பலம் சரக்குக்கு நான்கு பலம் திரவம் சேர்த்துப் பாண்ட கஷாயத்தைப் பக்குவம் செய்யவேண்டும்.—14.

ஸ்நேஹ பாகங்களில் கல்காதிகளின் அளவுகள் :—ஸ்நேஹங்களைப் பக்குவம் செய்யுமுறைகளைக் கூறுமிடத்து, அவற்றில்

சேர்க்கும் வஸ்து முதலியதற்கு அளவுகள் கூறப்படாமலிருந்தால், கல்கம் எவ்வளவோ அதினும் ஸ்நேஹத்தை நான்கு பங்காகவும், ஸ்நேஹத்திலும் கஷாயாதி திரவவஸ்துக்களை நான்கு பங்காகவும் செய்து கொள்க. இதைப்பற்றி சௌநகர் கூறுவதாவது :—"ஸ்நேஹம் சுத்தஜலத்திலும், க்வாதத்திலும், ஸ்வரஸத்திலும் பக்குவம் செய்யப் படுவதுண்டு; அவற்றுள் ஸ்நேஹம் சுத்த ஜலத்திற் பக்குவம் செய்யப்படுகையில் கல்கத்திரவ்யத்தை ஸ்நேஹத்திலும் நாலில் ஒரு பங்காகவும், க்வாதத்தில் பக்குவம் செய்யப்படுகையில் கல்கத்தை ஆறில் ஒரு பங்காகவும், ஸ்வரஸத்தில் பக்குவம் செய்யப்படுகையில் எட்டிலொரு பங்காகவும் சேர்க்க வேண்டும். ஸ்நேஹத்திற் சேர்க்கப்படும் திரவத் திரவ்யங்கள் நான்குக்கு அதிகப் படுமானால் அப்பொழுது ஒவ்வொரு திரவவஸ்துவையும் ஸ்நேஹத்திற்குச் சம அளவு சேர்க்க வேண்டும்."—15, 16½.

**ஸ்நேஹ லேஹ்யபாகங்களின் இலக்ஷணங்கள்** :— ஸ்நேஹம் பக்குவம் செய்யப்படுகையில், அதிற் சேர்த்துள்ள கல்கத்தை விரல்களால் எடுத்துத் திரட்ட, அது விரல்களில் ஒட்டிக்கொள்ளாமல் எளிதில் திரண்டு வரவேண்டும்; ஸ்நேஹத்தைச் சிறிதளவு நெருப்பில் ஊற்ற, அது சடசடவென்று சப்திக்கக் கூடாது; ஸ்நேஹத்தின் நிறமும் மணமும் பரிசமும் இரம்யமாயிருக்க வேண்டும்; அந்நிலைமையில் ஸ்நேஹம் பக்குவமானதாயறிந்து, அடுப்பிலிருந்து இறக்கிவிடவேண்டும். (1) இவற்றுள் க்ருதம் பக்குவமாகையில் நுரை முற்றிலும் அடங்கிப்போவதும், (2) தைலத்திற்கு முடிவில் நுரையுண்டாவதும் அவற்றின் பாகக் குறிகளாம். (3) லேஹ்யம் பக்குவமாகையில், அதை யெடுக்கும்போது நூல்போல் நீண்டு நெகிழ்ந்து வருவதும், ஜலத்தில் விட்டால் மூழ்கிப் போவதும், அதிற் சிதறிப்போகாமல் திரண்டு நிற்பதும் அது தகுந்தவாறு பக்குவமானதன் குறியாம். (4) ஸ்நேஹபாகங்களில் பாகமானது மந்தமென்றும், சிக்கணமென்றும், கர-சிக்கணமென்றும் மூவகைப்படும்: (1) ஸ்நேஹத்திற் சேர்க்கப்பட்டுள்ள கல்கம் விரல்களால் திரட்டக் கூடியதும் திரட்டமுடியாததுமான நிலைமையிலிருக்கும்போது **மந்தபாக**மென்றும், (2) சிறிது பிசுபிசுப்புடன் கூடியதாய் திரட்டும்போது விரல்களில் ஒட்டக்கூடியதாயிருந்தால் **சிக்கண**மென்றும், (3) விரல்களால் திரட்டும்போது சிதறிக் கருநிறமானால் **கரசிக்கண**மென்றும் கூறப்படும். அதற்குமேல் அக்னியில் பக்குவம் செய்யப்படுமானால் அது **தக்த்தபாக**மாகும்; அது பரிஹரிக்க வேண்டியபாகம். மந்தபாகத்திலும் குறைவான நிலைமையிலுள்ள பாகம் **ஆமபாகம்** எனப்படும்; அது ஜாடராக்னிக்கு மாந்த்யத்தை யுண்டுபண்ணும். இவற்றுள் மந்தபாகமென்கிற மிருது

பாகம் நஸ்யசிகித்ஸைக்கும், கரபாகம் அப்யங்கத்திற்கும், சிக்கணபாகம் பானம் செய்வது, வஸ்தி இவற்றிற்கும் உபயோகமானவை. 17—21.

சாஞ்ஜதி மாநங்கள்:—சாணம், [1] பாணிதலம், [2] முஷ்டி, [3] குடவம், [4] பிரஸ்த்தம், [5] ஆடகம், [6] திரோணம், [7] வஹம் [8] என்கிற இவை முறையே ஒன்றன்மேலொன்று நான்கு மடங்கு அதிக அளவு கொண்டவை யென்றறிக.—22.

சுஷ்க வஸ்துக்களினும் ஆர்த்ர-திரவங்களை இரண்டு பங்காகச் சேர்த்தல்:—ஓர் ஔஷதமுறையில் சுஷ்கவஸ்துவுக்குப் பதிலாக ஈரச்சரக்கைச் சேர்க்கவேண்டி நேரிட்டால், உலர்ந்த வஸ்துவை எந்த அளவில் சேர்க்கவேண்டுமோ அதற்கு இரண்டு பங்கு ஈரச்சரக்கைச் சேர்க்க வேண்டும். அங்ஙனமே சுஷ்க வஸ்துக்களும் ஒரு ஔஷத முறையில் சேர்க்கப்பட வேண்டுமென்று பொதுவாகக் கூறப்படுமானல், திரவத்திரவ்யங்களையும் குடவம் என்கிற அளவு முதற்கொண்டு இரண்டு மடங்காகவே [9] சேர்க்கவேண்டும்.—22½.

ஔஷத முறைகளில் திரவமோ அளவு முதலியவையோ குறிப்பிடாவிடில் செய்ய வேண்டிய வகை:—(1) ஒரு ஔஷத முறையில் சரக்குகளை அரைக்கவேண்டி யிருக்கையிலும், அல்லது கிளறிப் பக்குவம் செய்ய வேண்டி யிருந்தாலும் அவற்றில் இன்ன திரவவஸ்து சேர்க்கவேண்டு மென்று குறிப்பிடாமலிருந்தால் அதில் ஜலத்தையே ஏற்றத் திரவவஸ்துவாகக் கொள்ளவேண்டும். (2) ஸ்நேஹங்களைப் பக்குவம் செய்கையில் திரவவஸ்து குறிப்

---

1. சாணம் — இரண்டு மாஷப்பிரமாணம்; இதுவே கோலம், க்ஷுத்ரகம், வடகம், திரங்க்ஷணம் என்றும் கூறப்படும்.

2. பாணிதலம்—இதற்கு கர்ஷம், அக்ஷம், பிசு, திந்துகம், ஷோடசிகா, ஹம்ஸபதம், காமத்யம், ஸுவர்ணம், கவளக்ரஹம், உதும்பரம் என்றும் பெயர்.

3. முஷ்டி—ஒரு பலம்; சதுர்த்திகை, பிரகுஞ்சம், பில்வம் என்றும் கூறப்படும்.

4. குடவம்—அரைச் சேர்; அர்த்த சராவம், அஞ்ஜலி என்றும் கூறப்படும்.

5. பிரஸ்த்தம்—பதினறு பலம்; இரண்டு சராவம் கொண்ட அளவு.

6. ஆடகம்—இதற்கு பாஜநம், காம்ஸ்யபாத்திரம் என்றும் பெயர்.

7. திரோணம்—கடம், கலசம், இராசி, நல்வணம், உந்மாநம் என்றும் கூறப்படும்.

8. வஹம்—திரோணி, கோணி என்றும் கூறப்படும்.

9. குடவ அளவாகவும், அதற்கு மேற்பட்ட அளவாகவும் திரவ வஸ்துக்களைச் சேர்ப்பதானல், அப்பொழுதுதான் அவற்றை இரண்டு மடங்காகச் சேர்க்கவேண்டு மென்பது கருத்து.

பிடப்படாவிட்டாலும் ஜலத்தைத்தான் ஊற்றி பக்குவம் செய்ய வேண்டும். (3) எந்த ஔஷதமுறையில் சரக்குகளுக்கு அள வுகள் குறிப்பிடப்படவில்லையோ, அதில் அச்சரக்குகளையெல்லாம் ஸமபாகமாகச் சேர்க்கவேண்டும். (4) ஔஷதச் சரக்குகளைக் கூறிவிட்டு, அவற்றை இன்னவிதமாகப் பக்குவம் செய்யவேண்டு மென்று குறிப்பிடாத பக்ஷத்தில், அதைக் கல்கௌஷதமாகப் பக்குவம் செய்துவிடலாம்.—23, 24.

வடகம் முதலிய மாநங்கள் :—இரண்டு சாணங்கள் கொண்ட அளவு வடகம் எனப்படும்; அதுவே கோலம், பதரம், திரங்க்ஷ ணம் என்றும் கூறப்படும். இரண்டு வடகங்கள் கொண்ட அளவு அக்ஷம் எனப்படும்; இது பிசு, பாணிதலம், ஸுவர்ணம், கவள க்கிரஹம், கர்ஷம், பிடால பதகம், திந்துகம், பாணிமாநிகை என் றும் கூறப்படும்; இங்ஙனம் கூறும்போது ஒவ்வொரு அளவின் பெயருக்கும் வெவ்வேறு சொற்கள் கூறப்படுகின்றனவாயினும், பொருளில் வேற்றுமை கிடையாது. இரண்டு பிசுக்கள் கொண் டது சுக்தி யென்றும், அஷ்டமிகை யென்றும் வழங்கப்படும். ஒரு பலம் என்பதற்கு பிரகுஞ்சம், பில்வம், முஷ்டி, ஆம்ரம், சதுர்த்திகை என்பவை பிரதி பதங்கள். இரண்டு பலங்கள் கொண் டது ஒரு பிரஸ்ருதம். இரண்டு பிரஸ்ருதங்கள் சேர்ந்தது ஓர் அஞ்ஜலி. இரண்டு அஞ்ஜலிகள் கொண்டது ஒரு மாநிகை. ஆடகம் என்பதே பாஜநமென்றும், கம்ஸமென்றும் கூறப்படும். இரண்டு ஆடகங்கள் கொண்டத் திரோணமென்பதே கும்பம், கடம், அர்மணம் எனப்படும். நூறு பலங்கொண்ட அளவு ஒரு துலாம். இருபது துலாங்கொண்டது ஒரு பாரம். 25—28.

இமய-விந்தியமலைகளைச் சார்ந்த ஓஷதிகளின் குணபேதங் கள் :—இமயமலையாலும், விந்தியமலையாலும் பாரத பூமியின் பெரும்பான்மையான பாகமும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது; இவற்றுள் முதலிற் கூறிய பர்வதப்பிராந்தத்திலுள்ள ஓஷதிகள் சீதவீர்யாதி ஸௌம்ய குணங்களுடன் பத்தியமாகவும் இருக்கும்; விந்தியபர்வதப் பிராந்தங்களை ஆச்ரயித்தவை உஷ்ணவீர்ய முள்ள வையாம்.—29.

# உத்தர ஸ்தாநம்.

---

## முதல் அத்தியாயம்.

### பாலோபசரணீயம்.

இனி பாலோபசரணீயம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும். ஆத்ரேயர் முதலிய மஹருஷிகள் கூறியதற்கிணங்க நாம் இங்கு விஷயங்களை மொழிகின்றோம் :—

பிறந்த சிசுவுக்குச் செய்யவேண்டிய ஸம்ஸ்காரங்கள் :— (1) சிசு பிறந்ததும், கர்ப்பத்தில் அதைப் போர்த்திருந்த உல்ப மென்னும் கலையைச்[2] சிறிது இந்துப்பு கலந்த நெய்யால் சுத்தி செய்து விலக்கி, (2) கர்ப்பத்திலிருந்து வெளிவந்ததால் கிலேசப்பட்டுள்ள சிசுவை பலாதைலம்[3] ஊற்றி மீண்டும் சுத்திசெய்யவும். (3) சிறிய இரண்டு கற்களையெடுத்து ஒன்றோடொன்றாகத் தேய்த்துச் செவிக்கு அருகில் சப்தம் உண்டுபண்ணலாம். (4) அப்பால் அக்குழந்தையின் வலது செவியில் அடியில் வரும் மந்திரத்தை உச்சரிக்கவும் :—"அங்காதங்காத் ஸம்பவஸி ஹ்ருதயாதபிஜாயஸே. ஆத்மா வை புத்ரநாமாஸி ஸ ஜீவ சாதாம் சதம். சதாயுச் சதவர்ஷோஸி தீர்க்கமாயு ரவாப்நுஹி. நக்ஷத்ராணி திசோ ராத்ரி ரஹச் ச த்வாபிரக்ஷது."[4] 1—4.

சிசுவின் நாபிக்கோடியை அறுக்கும் முறை :—சிசுவுக்கு ஆச்வாஸமுண்டான பிறகு (1) நாபிக்கு நான்கு அங்குலம் மேலே நாபிக்கொடியைக் கட்டி, அதை அறுத்து விடவும். (2) பிறகு

---

1. பாலோபசரணீயம் — பாலர்களுக்குற்ற ஸம்ஸ்காராதிகளையும், அவர்களைப் பரிபாலித்தலையும் பற்றி விவரிக்கும் அத்தியாயம்.

2. உல்பம்—கருப்பையில் சிசுவைப் போர்த்திருக்கும் சவ்வுப்பை ; இது ஜராயு எனப்படும்.

3. பலாதைலம் — வாதரோக சிகித்ஸையிற் கூறப்பட்ட தைலம்.

4. "பிதாவின் ஒவ்வோர் அவயவாம்சத்திலிருந்தும் நீ ஜனிக்கிறாய். இருதயத்திலிருந்து பிறக்கிறாய். பிதாவின் ஆத்மாம்சமே புத்திரனாகப் பிறக்கிறான். அவ்வித பாலனான நீ நூறாண்டு ஜீவித்திருப்பாயாக என்று மூன்று முறை கூறுகிறேன். ஆகவே தீர்க்காயுளைப் பெறுக. நக்ஷத்திரங்களும், திக்பாலகர்களும், இராத்ரி பகல் இவற்றின் அதிதேவதைகளும் உன்னைக் காப்பாற்றுக." என்பது இம்மந்திரங்களின் பொருள்.

அக்கொடியைச் சமூத்தில் முடிந்து தொங்கவிடவும். (3) குஷ்ட தைலத்தை [1] நாபியின்மீது நன்றாகப் பூசி, (4) பாலுள்ள மரங்களின் [2] பட்டைகளுடைய கஷாயத்திலாவது, ஸர்வகந்த கஷாயத்திலாவது [3] வெள்ளி, பொன் இவற்றைக் காய்ச்சிக் காய்ச்சித் தோய்த்து சிறிது சூடாக்கி, அவ்விரண்டில் ஒரு கஷாயத்தை நாபியின்மேல் ஊற்றவும். 5—6½.

சிசுவின் சிரஸ்ஸில் ஸ்நேஹபிசு இடுதலும் ஔஷதப் பிரயோகாதிகளும்:—(1) பிறகு வைத்தியன தனது வலது கையின் ஆள்காட்டி விரலால் வாயினுள் மேற்புறத்தை உயர்த்தி, (2) சிரஸ்ஸில் ஸ்நேஹபிசுவை [4] யிட்டு மறைக்கவும். (3) தும்மட்டி, பிரமி, சங்கங்குப்பி இவற்றின் கல்கமும், தேனும், நெய்யும் சேர்த்து பக்குவம் செய்த லேஹ்யத்தை [5] ஓர் அரேணுகம் அளவில் உட்கொள்ளச் செய்யவும்; இது புத்திவிசேஷத்தையும், ஆயுளையும், தேஹவன்மையையும் விருத்திசெய்ய மந்திரமோதி உபயோகிக்கத் தகுந்தது. (4) அல்லது ஸ்வர்ணபஸ்மம், வசம்புப் பொடி, பிரமயிலைச் சூர்ணம், நிமிளைபஸ்மம், கடுக்காய்த்தூள் இவற்றை யாவது தேனும் நெய்யும் கலந்து லேஹ்யமாக முன்போல் உபயோகிக்கலாம். (5) ஸ்வர்ணபஸ்மம், நெல்லிக்கனித் தூள் இவற்றையாவது தேன் நெய் கலந்து உட்கொள்ளச் செய்யலாம். (6) பிறகு இந்துப்பு கலந்த நெய்பால் சிசுவின் தொண்டையில் அடைபட்டுள்ள கர்ப்ப நீரைக் கக்கச் செய்யவும். பிறகு பிராஜாபத்ய விதிகளை அநுஸரித்து குழந்தைக்குப் பிறந்ததும் செய்ய வேண்டிய ஜாதகர்மாதி சடங்குகளைச் செய்யவும். 7—10½.

ஸ்த்ரீகளுக்கு முலைப்பாலூறும் ஸமயம்:—பிரஸவித்ததனால் இருதயத்தைப் பற்றிய இரத்தக் குழல்களெல்லாம் நன்கு மலர்வதால் மூன்றாவது அல்லது நான்காவது தினத்தில் ஸ்த்ரீகளுக்கு முலைப்பால் ஊறத் தொடங்குகிறது.—11½.

சிசுவுக்குப் பிறந்தது முதல் ஏற்ற உணவுகள்:—ஆகையினாலே முதல் நாளன்று அறுகம்புற்சாறு கலந்து மந்திரமோதி பரிசுத்தமாக்கிய தேனையும் நெய்யையும் சிசுவுக்கு மூன்று வேளை களிலும் கொடுக்கவேண்டும். பிறகு கண்டங்கத்திரி வேர் சேர்த்து பக்குவம் செய்த க்ருதத்தை இரண்டாவது மூன்றாவது தினங்களில் சிறிதளவு மூன்று வேளை கொடுக்கவும். இதற்கு

---

1. குஷ்ட தைலம் — கோஷ்டகஷாயத்திற் பக்குவம் செய்த தைலம்.

2. பாலுள்ள மரங்கள் — ஆல், அரசு, அத்தி முதலியன.

3. ஸர்வகந்தம் — சதுர்ஜாதம், கற்பூரம், தக்கோலம், அகில். குங்குமப்பூ, லவங்கம் இவற்றின் கூட்டு.

4. பிசு—முதற்பாகம் பார்க்க.

5. இது ஐந்த்ரீ ரஸாயநம் எனப்படும்.

முன்பு முலையுண்ணுமலிருந்த அச்சிசுவுக்கு நான்காவது தினத்தில் முலையுண்ணும்போது அநுபானமாக இரண்டு வேளைகளிலும் சிறிது வெண்ணெயை நாக்கில் தடவவும். அதன்பிறகு குழந்தையின் தேஹம் வளருவதற்கு ஏற்ற ஆஹாரம் தாய்ப்பாலேயானையால், சிசு அதையே பருககவேண்டும். 12—14½.

தாத்ரியும் அவளது இலக்ஷணங்களும்:—தாயினிடம் பாலில்லாமற் போனால், குழந்தையினிடம் அன்புள்ள இரண்டு தாத்ரிகளை [1] முலையூட்ட அமர்த்தவேண்டும்; அவர்கள் அங்கக்கோளாறு பெறாதவராகவும், புணர்ச்சி விலக்கியவராகவும், குழந்தையின் நிறமும் அதற்குச் சமமான பிரக்ருதியுமுடையவராகவும், வியாதியற்றவராகவும், நடுப்பிராய முள்ளவராகவும், உயிருள்ள குழந்தையோடு கூடியவராகவும், சபலசித்தமின்றி பாலபோஷணையில் ஆதரவுள்ளவராகவும் இருக்கவேண்டும். ஹிதமான ஆஹார-விஹாரங்களைக் கொண்டு அவர்களையும் கருத்துடன் ஆதரித்து வரவேண்டும். 15—16½.

முலைப்பால் வற்றுவதற்கும் விருத்தியாவதற்கும் முகாந்தரங்கள்:—(1) மனத்துயரமும், கோபமும், இலங்கநமும், ஆயாஸமும் முலைப்பால் வற்றிப் போவதற்குக் காரணங்களாம். (2) சீதுவைத் [2] தவிர்த்துள்ள மற்ற மதுவகைகளும், ஆநூபஜந்துக்களின் மாம்ஸரஸங்களும், பாலும், பாலுள்ள மூலிகைகளும், மனத்துயரம் முதலியதற்கு எதிரிடையாயுள்ளவையும் [3] முலைப்பால் விருத்தியாவதற்குக் காரணங்களாகும் —17, 18.

சிசுவுக்கு வியாதியுண்டாக்கும் முலைப்பால்கள்:—விருத்தாஹாரங்களைப் [4] புஜித்தவள், பசித்தவள், ஸ்மரணையற்றிருப்பவள், கோளாறடைந்த தேஹதாதுக்களுடையவள், கருத்தரிப்பவள் இவ்வித ஸ்த்ரீகளின் ஸ்தந்யம் சிசுவுக்கு வியாதியுண்டாக்கக் கூடியதாகும்.—19.

முலைப்பாலுக்குப் பதிலாக வேறு பால்:—முலைப்பால் கிடைக்காவிடில் வெள்ளாட்டுப் பாலையாவது, இலகு பஞ்சமூலம் அல்லது சிறுமல்லிவேர் சேர்த்துக் காய்ச்சி, சர்க்கரை கூட்டி ஆட்டுப் பாலுக்குச் சமான குணமுள்ளதாகச் செய்யப்பட்ட பசுவின் பாலையாவது குழந்தைக்குப் புகட்டலாம்.—20.

சிசுவுக்கும் ஸ்த்ரீக்கும் செய்யவேண்டிய சடங்குகள்:—(1) சிசு பிறந்த ஆறும் நாள் இரவு, பந்துக்கள் குழந்தைக்கு இரக்ஷை செய்து, இஷ்டதேவதைகளுக்குப் பலிஹோமாதி க்ரியைகளும்

---

1. தாத்ரீ — தாதியெனப்படும் செவிலித்தாய்.

2. சீது — முதற் புத்தகம் பார்க்க.

3. மனக்களிப்பு, பொறுமை, போஜனம், அமைதி இவை மனத்துயரம் முதலியதற்கு எதிரிடையானவை.

4. விருத்தாஹாரங்கள் — முதற் புத்தகம் பார்க்க.

நிறைவேற்றி, அவர்கள் மிகக் களிப்பெய்தியவர்களாய் அவ்விர வெல்லாம் விழித்திருக்கவேண்டும். (2) பத்து நாட்கள் ஆனதும் பிரஸவித்த ஸ்த்ரீயை ஸூதிகாக்ருஹமென்கிற அவ்வறையி லிருந்து வெளியில் அழைத்து, அவரவரது குலாசாரங்களுக்கேற்ற விதிகளை அநுஸரித்து ஸ்நாநாதிகளைச் செய்விக்கவும்.[1] (3) அப் பால் சிசுவுக்கு சேஹத்தில் மனச்சிலை, அரிதாளம், கோரோசனை, அகில், சந்தனம் இவற்றைச் சிறிதளவு பூசி, குழந்தைக்கு அதன் ஜன்ம நக்ஷத்திர தேவதையின் பெயரையாவது, ஸம்பந்த பந்து வின் பெயரையாவது வைத்து நாமகரணம் செய்யவேண்டும்; அப்பெயர் சுபமானதாகவும், இரட்டைப்பட்ட எழுத்துக்களுள்ள தாகவும் இருத்தல் நலம். 21—23.

சிசுவைப் பரிபாலித்தல் :—பிறகு விக்ருதிவிஞ்ஞாநீயாத் தியாயத்திற்[2] கூறப்பட்டுள்ள குறிகளைக் கொண்டு சிசுவின் ஆயுளைப் பரிக்ஷிக்கவும். இதற்காக அறிவுள்ள வைத்தியன் நிர் மலமான தலையணையுடன் கூடிய நல்ல படுக்கையில், கிழக்குப் பக்க மாகவாவது வடக்குப் பக்கமாகவாவது தலையை வைத்துக் குழந் தையை விடவேண்டும். மேலும் அப்படுக்கையும் அதன் மேல் விரிப்புகளும் மேடு பள்ளமில்லாமல் மிருதுவாகவும், ரக்ஷோக்ந வஸ்துக்களைக் கொண்டு[3] தூபமிடப் பட்டவையாகவும் இருத்தல் வேண்டும். அடித்துக் கொல்லப்பட்ட காக்கையின் இறகு முதலி யவைதச் சிவதை வேருடன் சுட்டுப் படுக்கைக்குத் தூபமிடலாம். உயிருடன் பிடித்த கட்கம்ருகம் முதலியவற்றின் கொம்பு முத லியதிலிருந்துண்டான நல்முத்துக்களையும், பிராமி-தும்மட்டி- ஜீவகம் முதலிய சிறந்த ஔஷதிகளையும் குழந்தையின் கழுத் திலும், சிரஸ்ஸிலும், கைகளிலும் கட்டவும்; வசம்பானது ஆயுளையும், புத்தியையும், ஞாபக சக்தியையும் விருத்தி செய்து, ஆரோக்கிய நிலைமையையும் உண்டுபண்ணி, ரக்ஷோக்நமாகவும் வேலை செய்யுமாகையால் அதையும் அங்ஙனமே கழுத்துமுதலிய வைகளில் கட்டலாம். ஐந்தாம் மாஸத்தில் சுபதினம் பார்த் துக் குழந்தையைப் பூமியில் உட்காரவைக்க ஆரம்பிக்கவும். பிறகு கிரமமாக ஆறுவது மாஸத்தில் அந்நப்பிராசநச் சடங் கையும் செய்யவும். ஆறும் மாஸத்திலாவது, ஏழாம் அல்லது எட்டாம் மாஸத்திலாவது குளிர்காலம் நெருங்கும்போது சுப தினத்தில், உடம்பில் பிணியேது மில்லாமலிருக்கப் பார்த்து, குழந்தையை தாத்ரியின் மடியில் உட்காரவைத்து, நல்வார்த்தை கூறிக்கொண்டே வைத்தியனைக் கொண்டு காது குத்தவேண்

1. பத்து நாட்கள் கழித்து ஸூதிகைக்குச் செய்யப்படும் ஸ்நாநாதி சடங்குகள் "ஸூதிகோத்தாநம்" எனப்படும்.

2. விக்ருதிவிஞ்ஞாநீயம்—சாரீர ஸ்த்தாநம் 5-வது அத்தியாயம்.

3. ரக்ஷோக்நம்—முதற் புஸ்தகம் பார்க்க.

டும். ஆண் குழந்தைக்கு முதலில் வலது காதையும், பெண் குழந்தைக்கு முதலில் இடது காதையும் குத்துவது முறை. வைத்தியன் வலது கையில் ஊசியைப் பிடித்துக் கொண்டு, மற்றொரு காத்தினுல் குழந்தையின் காதைப் பிடித்துக்கொண்டு, கர்ணபீடம்[1] என்கிற காதின் அடிப்புறத்திற் சிறிது கன்னத்தை அணுகினாற் போல, ஜராயு வென்கிற மிருதுவான சர்மத்தினுல் மாத்திரம் மூடப்பட்டு ஸூரியகிரணம் ஊடுருவக் கூடிய மிருதுவான பாகத்தில் செம்பஞ்சுக்குழம்புத் துளியினுல் குறியிட்டு, கை நடுங்காமல் இலகுவாகவும், நேராகவும் ஒரே தடவையில் த்வாரம் விட வேண்டும்; அந்த த்வாரம் குறிப்பிட்ட விடத்திற்கு மேலாகவாவது, கீழாகவாவது, பக்கங்களிலாவது ஒதுங்கி விழக் கூடாது. ஏனெனில் அவ்விடங்களில் முறையே காலிகா, மர்மரீ, ரக்தா என்கிற இரத்தக் குழாய்கள் பரவியிருக்கின்றன. இக்குழாய்கள் குத்தப்பட்டுப் போனுல் அவ்விடத்தில் சென்னிறமும், வலியும், தேஹத்தில் ஜ்வரமும் ஏற்படும். மேலும் வீக்கம், அழற்சி, வேதனை, மந்யாஸ்தம்பம், அபதாநகம் இக்கோளாறுகளும் காணும். அக்கோளாறுகளுக்கு அதனதன் தன்மைக்கு ஏற்றவாறு பகுத்தறிந்து சீக்கிரம் சிகித்ஸை செய்யவேண்டும். குறித்த இடத்திற் குத்தினுல் இரத்தக்கசிவும் ஏற்படாது; சிவப்பு-வலி முதலிய விகாரங்களும் உண்டாகமாட்டா. காது குத்தியவுடனே எண்ணெயில் நனைத்த நூலை ஊசியிற் கோத்து, காதின் த்வாரத்திலிட்டு கட்டிவிடவும். விரணத்தில் ஆமதோஷம் சேர்ந்திருந்தால் அதைத் தைலத்தினுல் நனைக்கவும். காதில் த்வாரம் விடவேண்டிய பாகம் கனமாயிருந்தால் ஆரா யென்னும் ஆயுதத்தைக் கொண்டு முன் போலவே குறியிட்டு த்வாரம் இடவேண்டும்; அவ்விதம் த்வாரம் விடும்போது ஹிதமான ஆஹாரங்களைப் புஜித்து வரவேண்டும். முறைப்படி காது குத்தியான மூன்று நாட்கள் சென்றதும் சற்றுப் பெரிய வர்த்தியை த்வாரத்திலிட்டு வைக்கவும். அங்குள்ள விரணம் ஆறியதும் சிறுகச் சிறுக அந்த த்வாரத்தைப் போதிய அளவுக்கு வளர்த்து வரவும். 24—37.

முலைப்பால் மறத்தல் முதலியன:—(1) பிறகு பற்கள் முளைத்ததும் கிரமக் கிரமமாக ஸ்தந்யபாநம் செய்வதை மறக்கச் செய்து, முற் கூறிய பாலையும், இலகுவாகவும் ப்ருஹ்மணமாகவுமுள்ள அன்னத்தையும் கலந்து ஊட்டி வரவேண்டும். (2) ஸ்தந்யத்தை விட்ட சிசுவுக்கு அடியிற் குறிப்பிடப்படும் சில மோதகங்களை அதன் தேஹநிலைமையை அநுஸரித்துப் பக்குவம் செய்து கொடுக்கலாம்:—(1) மூராளம்பழவித்தின் உட்பருப்பு, அதிமதுரம், நெற்பொரி, சற்கண்டு இவற்றைக் கொண்டு

1. கர்ணபீடம்—காதின் அடிப்புறத்தில் வெகு மிருதுவாகத் தொங்கும் பாகம்.

மோதகம்[1] செய்துகொடுக்கலாம். இதற்கு ப்ரீணநகுணமுண்டு.[2] (2) பில்வப்பிஞ்சு, ஏலரிசி, சர்க்கரை, நெற்பொரிமா இவற்றைக் கொண்டு பக்குவம் செய்த மோதகம் குழந்தைக்கு தீபநமாக உபயோகப்படும். (3) காட்டாத்திப்பூ, சர்க்கரை, நெற்பொரிமா இவற்றைக்கொண்டு பக்குவம் செய்த மோதகம் ஸங்க்ராஹியாக[3] குழந்தைக்கு உபயோகப்படும். 38—40.

குழந்தைகளுக்குத் தீக்ஷ்ணௌஷதங்களை விலக்குதல் :—குழந்தைக்குண்டாகும் வியாதிகளை ஸுகுமாரமான துன்பம் விளைவிக்காத ஔஷதங்களால் பரிஹரிக்க வேண்டும்; ஆனால் வியாதி அபாயகரமாயிருந்தால் அதில் அவசியமானால் பலமான ஔஷதங்களை உபயோகிக்கலாம். இளங்குழந்தைகளுக்கு விரேசநௌஷதங்களைக் கொடுக்கவே கூடாது.—41.

குழந்தையை விரட்டுவது முதலியது கூடாது :—வழிக்கு வராத குழந்தையை அதட்டி விரட்டக் கூடாது. விரட்டப்பட்டு பயந்துவிடும் குழந்தையை துஷ்டக் கிரஹங்கள் எளிதில் தாக்கும். வஸ்திரத்தை வீசி மேலே காற்று வீசச் செய்வதும், கடினமான பரிசமும், இலங்கநமும் தகாது.—42.

ப்ராஹ்மீ க்ருதம் :—பிரமியிலை, வெண்கடுகு, வசம்பு, நன்னாரி, கோஷ்டம், இந்துப்பு, திப்பிலி இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்த க்ருதத்தைக் குழந்தை பருகி வரலாம். இது வாக்கையும், ஞாபகசக்தியையும், ஆயுளையும் விருத்திசெய்யும்; மேலும் தீவினைகளைப் போக்கி இரக்ஷாக்நமாகவும் வேலை செய்யும்; பூதங்களையும், உந்மாத விகாரத்தையும் விலக்கும்.-43, 43½.

அஷ்டாங்க க்ருதம் :—வசம்பு, வாலுழுவை, வல்லாரை, சங்கங்குப்பி, தண்ணீர்விட்டான், பிரம்மதண்டி, பொன்னாங்கண்ணி, பிரமியிலை இவ்வெட்டுச் சரக்குகளையும் வகைக்கு ஒரு பலமெடையெடுத்து, கல்கமாகச் செய்து, ஒரு பிரஸ்த்தம் அளவு நெய் சேர்த்து, அதற்கு நாலு மடங்கு பால் கூட்டி க்ருதம் பக்குவம் செய்யவும். 'அஷ்டாங்க க்ருதம்' எனப்படும் இதைப் பானம் செய்ய சரீரம் சீர்மையடையும், ஆயுள் விருத்தியாகும், வாக்கும்-புத்தியும்-ஞாபக சக்தியும் மேன்மையுறும்.—44, 45½.

ஸாரஸ்வத க்ருதம் :—வல்லாரையின் இரஸத்தில், வெள்ளாட்டுப்பால், கடுக்காய், த்ரிகடுகம், வட்டத்திருப்பி, வசம்பு, முருங்கை, இந்துப்பு இவற்றைச் சேர்த்து, பசுவின் நெய் பக்குவம் செய்து, குழந்தைக்கு உபயோகிக்க வாக்கும் மதியும் விருத்தியாவதோடு, ஜாடராக்னியும் தீபநம் செய்யப்படும்.—46½.

---

1. மோதகம்—பணியாரம் அல்லது சிற்றுண்டி.
2. ப்ரீணம்—இனிய சுவையுடன் இன்பந்தரும் பண்டம்.
3. ஸங்க்ராஹி—முதற் புத்தகம் பார்க்க.

வசாதி க்ருதம்:—வசம்பு, சிந்தில், கச்சோரம், கடுக்காய், சங்கங்குப்பி, வாய்விடங்கம், சுக்கு, நாயுருவி இவற்றால் பக்குவம் செய்த க்ருதம் முன் க்ருதத்திற்குச் சமானமானது.—47½.

நான்குவித ஸ்வர்ணயோகங்கள்:—(1) பொன், அதிவிடயம், கோஷ்டம்; (2) க்ஷீரசாகோலி, பொன்; (3) பொன், பொன்னாங்கண்ணி, சங்கங் குப்பி; (4) சிறுதேக்கு, பொன், வசம்பு, [1] இந்நான்கு முறைகளில் எதையேனும் தேனோடும் நெய்யோடும் கலந்து ஒரு வருஷம் கொடுத்து வரலாம்; இவை தேஹபோஷணை செய்யும்; மதியை விருத்திசெய்யும்; உடலுக்கு வன்மையுண்டு பண்ணும்; தேஹத்திற்கு நல்ல நிறம் தரும்; பொதுவில் குழந்தைக்குச் சிறந்த ஔஷதங்களாகும்.—48, 49½.

வசாதி க்ருதம் இரண்டாவது:—வசம்பு, அதிமதுரம், இந்துப்பு, கடுக்காய், சுக்கு, ஓமம், கோஷ்டம், திப்பிலி, ஜீரகம் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்த க்ருதத்தைக் கொடுக்க, குழந்தையின் வாக்கு சுத்தமாகும்.—50½.

---

## இரண்டாம் அத்தியாயம்.

### பாலரோகப் பிரதிஷேதம்.

இனி பாலாமயப் பிரதிஷேதம் [2] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும்:—

பாலர் உணவு ஸம்பந்தமாய் மூவகைப்படுவர்:—உணவைப் பற்றிய விஷயத்தில் பாலர் க்ஷீராஹாரமுள்ளவர், அன்னாஹாரமுள்ளவர், உபயாஹாரமுள்ளவர் என மூன்று வகைப்படுவர். அவர்களுக்கு ஊட்டப்படும் பாலும் அன்னமும் கெட்டுப் போகாமலிருக்கும் வரையில் அவர்கள் ஆரோக்கியமாகவும், கெட்டுப் போனால் வியாதியஸ்தராகவும் ஆவர்.—1.

சுத்தமும் அசுத்தமுமான முலைப்பால்:—(1) ஜலத்திற் சேர்த்தால் அத்துடன் ஒருமிக்கக் கலக்காமலும், தோஷங்கள் சேராமலும் உள்ள பால் சுத்தமானது. (2) வாததோஷத்தினால் கெட்டுப் போன பால் ஜலத்தில் மிதக்கும்; துவர்ப்பும் ரூக்ஷ குணமுமுள்ளது; நுரைத்திருக்கும்; மல-மூத்திரங்களைக் கட்டும். (3) பித்த தோஷத்தினால் விகாரமடைந்த பால் அம்லமும் காரமுமான சுவையையும், ஜலத்திலிட்டால் மஞ்சள் நிறமான

1. இந்த நான்கு முறைகளிலும் ஸ்வரணத்தைப் பஸ்மமாகச் செய்தும், மற்றவைகளைச் சூர்ணமாகச் செய்தும் உபயோகிக்கவேண்டும்.

2. பாலாமயப் பிரதிஷேதம்—பாலர்களுக்குண்டாகும் நோய்களைத் தடுக்கவும் நிவ்ருத்திசெய்யவும் ஏற்ற முறைகளை விவரிக்கும் அத்தியாயம்.

வரிகளையும் பெறும்; அழற்சியையும் உண்டுபண்ணும். (4) கபத்தினால் கெட்டுப்போன பால் உப்புக் கரிக்கும்; தடிப்பாய், தண்ணீரில் அமிழ்ந்துவிடும்; பிசுபிசுப்பாகவும் இருக்கும். (5) இரட்டைத் தோஷங்களால் கெட்டிருந்தால் அத்தோஷக்குறிகள் கலந்ததாகவும், (6) ஸந்நிபாததோஷங்களால் கெட்டிருந்தால் மூன்று தோஷக்குறிகளுள்ளதாகவும் இருக்கும். எந்தெந்த தோஷத்தினால் பால் கெட்டிருக்கிறதோ அந்தந்த தோஷங்களுக்கு ஏற்ற குறிகளுள்ள வியாதிகளை அந்தப் பால் உண்டு பண்ணும். 2—4½.

சிசுவின் தேஹத்தில் நோவுகளைக் கண்டுபிடித்தல்:—(1) சிசு அழுவதிலிருந்து அதற்கு ஏற்பட்டுள்ள வலி கடுமையா அல்லது மிருதுவா என்று தெரிந்துகொள்ளலாம்.[1] (2) குழந்தை அடிக்கடியும் எவ்விடத்தைத் தானே பரிசித்துக்கொள்கிறதோ, எந்த விடத்தை நாம் பரிசித்தால் அழுகிறதோ அவ்விடத்தில் நோவிருப்பதாய் அறியவும். (3) கண்களை மூடியிருந்தால் சிரஸ்ஸில் நோவிருப்பதாகவும், (4) நாக்கு-உதடு இவற்றைக் கடித்துக் கொள்வது, பெருமூச்செறிதல், கைகளை மூடிக்கொண்டு அழுத்துவது இவற்றால் மார்பில் அல்லது இருதயத்தில் வேதனையிருப்பதாகவும், (5) மலபந்தம், வாந்தி, தாயின் ஸ்தநத்தைக் கடித்தல், குடலிரைத்தல், வயிற்றுப்பொருமல், உடம்பு முதுகின் பக்கமாக வளைவது, வயிற்றின் பக்கமாய் வளைவது இவற்றால் கோளாறு குடலைப் பற்றியிருப்பதாகவும், (6) மலச்சிக்கல், மூத்திரச்சிக்கல், திடுக்கிடுதல், மூலை மூலையாகப் பார்த்தல் இவற்றால் நோய் மூத்திரவஸ்தியையும் குதத்தையும் பற்றி யிருப்பதாகவும் தெரிந்து கொள்ளலாம். 5—8.

ஸ்தந்யதோஷஹரமான சிகித்ஸைகள் :—இனி தோஷங்களையும் வியாதிநிலைமைகளையும் அனுஸரித்துத் தாய்க்குச் செய்ய வேண்டிய உபசாராதிகளைக் கூறுவோம்: அவற்றுள் **வாததோஷத்தினால் ஸ்தந்யம் கோளாறடைந்திருக்கையில்** (1) மூன்று நாட்கள் தசமூலத்தைக் கஷாயமிட்டுப் பருகலாம். (2) அல்லது சித்திரமூலம், வசம்பு, வட்டத்திருப்பி, கடுகரோஹிணி, கோஷ்டம், ஜீரகம், கண்டுபாரங்கி, தேவதாரு, ஸரளதேவதாரு, தேள்கொடுக்குப் பூண்டு, திப்பிலி, மிளகு இவற்றின் கஷாயத்தைப் பானம் செய்யலாம். (3) பிறகு வாதரோகஹரமான ஏதேனும் ஒரு க்ருதத்தை அருந்தலாம். (4) அப்பால் அச்சஸுரை யென்னும் மதுவைப் பானம் செய்யலாம். (5) இவற்றை யெல்லாம் கிரமமாக உபயோகித்து, அப்பால் ஸ்நிக்த்தமான வஸ்துக்களைக் கொடுத்து மிருதுவாக விரேசநம் செய்விக்கலாம். (6) அதன்

---

1. அழுவது கூர்மையாயிருந்தால் நோவு கடுமை யென்றும், மிருதுவானால் நோவு மந்தமென்றும் அறியலாம்.

பிறகு வஸ்திகளைப் பிரயோகித்து, (7) அப்பால் வாதஹரமான வஸ்துக்களைக்கொண்டு ஸ்வேதசிகித்ஸை முதலியவற்றையும் செய்விக்கலாம். (8) அவ்வித பாலை அருந்திய சிசுவுக்கு சிற்றாத்தை, ஓமம், ஸாளதேவதாரு இவற்றின் கல்கம் கூட்டி பக்குவம் செய்த க்ருதத்தையாவது, அதே சரக்குகளையும் கற்கண்டையும் கூட்டி பக்குவம் செய்த க்ருதத்தையாவது பருகக் கொடுக்கலாம். பித்தத்தினால் ஸ்தந்யம் கோளாறடைந்திருக்கையில் (1) சீந்தில், தண்ணீர்விட்டான், பேய்ப்புடல், வேம்பு, சந்தனம், நன்னாரி இவற்றைக் கஷாயம் காய்ச்சி, தாயும் குழந்தையுமாகப் பருகலாம். (2) த்ரிபலை, கோரைக் கிழங்கு, நிலவேம்பு, கடுகரோஹிணி இவற்றின் க்வாதத்தையாவது பருகலாம். (3) சாரிபாதிகணச்சரக்குகளின் கஷாயம், (4) படோலாதிகணத்தின் கஷாயம், (5) பத்மகாதிகணக் கஷாயம் இவற்றில் எதையேனும் பானம் செய்விக்கலாம். (6) சாரிபாதிகணச் சரக்குகள் முதலியவற்றால் பக்குவம் செய்த க்ருதங்களையும் பருகலாம். (7) பித்தஹர ஔஷதங்களால் விரேசநம் செய்விக்கலாம். (8) குளிர்ச்சியான தைலாதிகளால் அப்யங்கமும் லேபநங்களும் பிரயோகிக்கலாம். கபத்தினால் ஸ்தந்யம் கோளாறடைந்திருக்கையில் (1) அதிமதுரம், இந்துப்பு இவற்றால் பக்குவம் செய்த க்ருதத்தைக் குழந்தைக்குக் கொடுக்கலாம். (2) இந்துப்பு, திப்பிலி இவற்றால் பக்குவம் செய்த க்ருதத்தையாவது கொடுக்கலாம். (3) அப்பால் மருக்காரைப்பூவின் சூர்ணத்தைத் தேன் கூட்டி ஆட்டி, அக்கல்கத்தை ஸ்தநங்களின்மீதும், குழந்தையின் உதடுகளிலும் சிறிது லேபநம் செய்து, சுலபமாய் குழந்தைக்கு வாந்தி யுண்டுபண்ணலாம். (4) தாய்க்கு தீக்ஷ்ணவஸ்துக்களைக் கொடுத்து நன்றாக வாந்தி செய்விக்கவேண்டும். (5) அப்பால் ஸம்ஸர்கீக்ரியைகளைச் செய்வித்து, (6) முஸ்தாதிகணச்சரக்குகளின் க்வாதத்தைப் பருகக் கொடுக்கலாம். (7) அங்ஙனமே கிரந்திநகாம், இங்குபத்திரி, தேவதாரு, வெட்பாலரிசி இவற்றின் கஷாயத்தையாவது, (8) அதிவிடயம், கோரைக்கிழங்கு, வசம்பு, பஞ்சகோலம் இவற்றின் கஷாயத்தையாவது தாய்க்குக் கொடுக்கலாம். ஸந்நிபாததோஷத்தினால் ஸ்தந்யம் கோளாறடைந்திருக்கையில் குழந்தையின் மலம் துர்நாற்றமுள்ளதாகவும், ஆமமாகவும், ஜலத்திற்குச் சமானமாகவும், தோய்ந்து போனதாகவும், தெளிவாகவும், தோய்ந்து உடைந்து போனதாகவும், நுரைத்ததாகவும் பலவாறாக வெளியாகும். அப்படியே மூத்திரமும் மஞ்சள் நிறமாகவும், வெளுப்பாகவும், தடிப்பாகவும் பல நிறங்களோடும், பலவிதமான கோவை யுண்டுபண்ணிக்கொண்டும் வெளிவரும். மேலும் ஜ்வரம், அரோசகம், நாவறட்சி, வாந்தி, வறண்ட தேக்கெறிவு, அதிகக் கொட்டாவி, அவயவங்கள் துவண்டு போதல், அவயவங்களின் இசிவு, குடலிரைத்தல், நடுக்கம், தலைச்

சுற்றல் இவைகளும், நாசி-நேத்திரங்கள்-வாய் இவற்றில் வேக்காடும், இத்தகைய வேறுவிதமான கோளாறுகளும் உண்டாகும். இந்த வியாதிக்கு க்ஷீராலஸகம்[1] எனப் பெயர். இது பிராணபாயகரமான மிகக் கொடிய ரோகம். (1) இதில் காலதாமதமின்றி தாத்ரியையும் குழந்தையையும் வமநம் செய்வித்துச் சிகித்ஸிக்க வேண்டும். (2) பிறகு ஸம்ஸர்கீ க்ரியையைச் செய்து, (3) வசாதிகணக்கஷாயத்தையாவது, (4) ஹரித்ராதிகணக்கஷாயத்தையாவது, (5) திப்பிலி, வட்டத்திருப்பி, கடுகரோஹிணி, கோரைக்கிழங்கு, கோஷ்டம் இவற்றின் கஷாயத்தையாவது உபயோகிக்கலாம். (6) வட்டத்திருப்பி, சுக்கு, சீந்தில், கடுகரோஹிணி, நிலவேம்பு, தேவதாரு, நன்னாரி, கோரைக்கிழங்கு, பெருங்குரும்பை, வாலுழுவை இச்சரக்குகள் முலைப்பாலிலுள்ள தோஷங்களைப் பரிஹரிப்பதிற் சிறந்தவையாம். (7) ஏதேனும் கோளாறு தொடருமானால், கால-தேசாதி நிலைமைகளையறிந்த வைத்தியன் அந்தந்த வியாதிக்குத் தகுந்தவாறு சிகித்ஸையைச் செய்ய வேண்டும். 9—25½.

குழந்தைக்குப் பல்முளைக்கையிற் காணும் கோளாறுகளும் சிகித்ஸையும்:—(1) குழந்தைக்குப் பல் முளைக்கத் துவக்குவதும் ஸகலமான ரோகங்களுக்கும் காரணமாம்; பல்முளைப்பதால் முக்கியமாய் ஜ்வரம், பேதி, இருமல், வாந்தி, தலைவலி, அதிக இருதயத் துடிப்பு, போதகி,[2] விஸர்ப்பம் இக் கோளாறுகள் பாலர்களுக்கு உண்டாகும். பூனைகளுக்கு இடுப்புச் சரிந்துபோகையிலும், மயில்களுக்குத் தோகை முளைக்கையிலும், குழந்தைகளுக்குப் பல் முளைக்கையிலும்-பலவாறான கோளாறுகள் தோன்றிய போதிலும் தீங்கு விசேஷமாய் நேரிடாது. (2) இதில் அந்தந்த தோஷங்களுக்கும், அவற்றின் பிரகோபாதிநிலைமைகளுக்கும், ரோகங்களின் தன்மைகளுக்கும், ரோகாதிகளுக்குச் சம்பந்தமான ஆசயங்களின் தன்மைகளுக்கும் ஏற்றவாறு, தேச-காலாதிகளையும் அநுஸரித்து, பாலர்களுக்குச் சிகித்ஸை செய்யவேண்டும். குழந்தைகளுக்குப் பல்முளைத்தல் முதலிய நிலைமைகளில், முன்னால் பெரியவர்களுக்குக் கூறப்பட்டுள்ள அதே வாதாதிதோஷங்களும், அதே இரஸாதிதாதுக்களும் சேர்ந்திருப்பதோடு, ஜ்வராதி வியாதிகளும் முற்கூறியவாறே காணுமாகையால், ஔஷதங்களும் முற்கூறியவாறே இவர்களுக்குப் பிரயோகிக்கப்படவேண்டும்; ஆனால்

---

1. க்ஷீராலஸகம் — பாலிலுள்ள பலமான தோஷங்களால் உண்டாகும் ஆமஸம்பந்தமான கொடிய பாலரோகம்.

2. போதகி — பாலர்களுக்குக் கண் இமைப்பைக்குள் அரிப்பு, நீர்ப்பெருக்கு இவற்றுடன் கூடியதாகவும், குருவாகவும், சிவந்த கடுகு போன்றவையாகவும், வலி யுள்ளவையாகவும் உண்டாகும் சிறிய கட்டிகள் நிரம்பிய கோளாறு.

குழந்தைகள் ஸுகுமாரமான வெகு சிறிய தேஹமுள்ளவராகை யாலும், பெரியவர்களைப்போல எல்லாவித உணவுகளையும் உண்ண முடியாதவராதலாலும் இவர்களுக்கு ஔஷதங்களை மிகச் சிறிய அளவில் உபயோகிக்க வேண்டும் 26—30½.

குழந்தைகளுக்கு வமநம் செய்விக்கும் முறை :—(1) நெய்யை யும் பாலையும் விசேஷமாய்ப் பருகுவதால் பாலர்கள் எப்பொழு துமே ஸ்நிக்தமாயிருப்பார்கள் ; ஆகையால் கற்றறிந்த வைத்தி யன் அவர்களுக்கு மிருதுவான வமநௌஷதம் கொடுத்து, தேஹத்தில் தோஷம் ஊறுமலிருக்கையிலேயே சீக்கிரம் வமநம் செய்விக்கவேண்டும். (2) பாலையேயாவது, பாலையும் அன்னத்தை யுமாவது உண்ணும் குழந்தைக்கு முலைப்பாலை வயிறு நிரம்ப அருந்தச் செய்து அப்பால் வாந்தி செய்விக்கவேண்டும். (3) அன் னம் உண்ணும் குழந்தைக்கு மிகத் திரவமான பேயாவை நெய் கூட்டி நிரம்பவும் கொடுத்து வமநம் செய்விக்கலாம்.—31, 32½.

குழந்தைக்கு விரேசநாதிகளுக்குப் பதில் வேறு சிகித்ஸை கள் :—(1) விரேசநத்தினால் சிகித்ஸிக்கக்கூடிய வியாதியில் குழந் தைக்கு வஸ்தியைப் பிரயோகித்து வியாதி நிவாரணம் செய்ய வேண்டும். (2) மர்சம் என்கிற நஸ்யத்தினால் நிவ்ருத்திக்கக் கூடிய வியாதியில் ப்ரதிமர்சம் என்கிற நஸ்யம் பிரயோகிக்க வேண் டும். (3) குழந்தைக்கு விரேசநம் முதலியவை அவசியமாயிருந் தால், அந்தந்தக் கோளாறுகளுக்குக் கூறப்பட்டிருக்கும் முறைப் படி அச்சிகித்ஸைகளைத் தாய்க்கே பிரயோகிக்க வேண்டும்.-33½.

ஸ்தந்ய தோஷஹர சூர்ணம் :—பெருங்குரும்பை, த்ரிகடு, த்ரிபலை, இலந்தங்கொட்டை, நாவற்பட்டை, தேவதாரு, கடுகு, வட்டத்திருப்பி இவற்றின் சூர்ணத்தைத் தேனிற் கலந்து உப யோகிக்க, முலைப்பாலின் தோஷங்கள் தீரும்.—34½.

குழந்தைகளுக்கு தந்தபாலியில் உபயோகிக்கும் ஔஷதங் கள் :—(1) திப்பிலியின் சூரணத்தைத் தேனிற் குழைத்து, அத னால் தந்தபாலி யென்னும் [1] வியாதியில் பல்லீறைத் தேய்க்கவும். (2) அல்லது காட்டாத்திப்பூ, நெல்லிக்கனி இவற்றின் சூர்ணத் தையாவது அங்ஙனம் உபயோகிக்கலாம். (3) லாவம், தித்திரி, வல்லூறு இவற்றின் மலங்களை யெரித்துச் சூர்ணம் செய்து, தேனிற் கலந்து, குழந்தைகளின் பற்களைத் துலக்க, பற்கள் வரிசை வரிசையாய் அழகாய் வளரும்.—35, 36½.

ஸித்தக்ருதம் :—வசம்பு, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, வட்டத்திருப்பி, கடுகரோஹிணி, அதிவிடயம், கோரைக்கிழங்கு, இனிய சுவையுள்ள இதர சரக்குகள் இவற்றைச் சேர்த்துப் பக்கு வம் செய்த நெய் "ஸித்த க்ருதம்" எனப்படும். இது குழந்தை

1. தந்தபாலி—குழந்தைகளுக்கு உண்டாகும் ஒருவித பல்நோய்.

களுக்குப் பற்கள் நன்கு முளைப்பதற்காக உபயோகிக்கக்கூடிய ஸித்தௌஷதமாம்.—37½.

ரஜங்யாதி சூர்ணம்:—மரமஞ்சள், தேவதாரு, ஸரள தேவ தாரு, கடுக்காய், கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிற்றுமல்லி, சதகுப்பி இவற்றின் சூர்ணத்தைத் தேன் நெய் இவற்றிற் கூட்டி குழந்தைக்குக் கொடுக்க கிரஹணீரோகம் நீங்கி அக்னிதீபநம் உண்டாம்; அபாநவாயு வெளியாம்; அதிஸாரம், ஜ்வரம், ச்வாஸம், காமாலை, பாண்டு, காஸம் இவை தீரும்; குழந்தைக்கு உண்டாகும் ஸர்வரோகங்களிலும் சிறந்தது; தேஹபலத்தையும், தேஹநிறத்தையும் விருத்தி செய்யும். 38—40.

வ்ருத்த காச்யபக்ருதம்:—மஞ்ஜிஷ்டி, காட்டாத்திப்பூ, வெள்ளிலோத்தி, பெருவாகை, சிற்றுமுட்டி, வாடாக் குறிஞ்சி, சிறு குறிஞ்சி, பில்வப் பிஞ்சு, பருத்திக் கொட்டை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் பாலும் தயிராடையும் கூட்டிப் பக்குவம் செய்த க்ருதம், குழந்தைகளுக்குப் பல் முளைக்கையில் காணும் பல கோளாறுகளையும் ஜடிதி நிவ்ருத்தி செய்யும். இது வ்ருத்த-காச்யப முனிவரின் முறையாகும்.—41, 42½.

பல்முளைக்கையில் குழந்தையைப் பராமரித்தல்:—பல்முளைக்கையில் உண்டாகும் கோளாறுகளில் குழந்தையைச் சிகித்ஸைக்காக அதிகமாய் நிர்ப்பந்திக்கக் கூடாது. ஏனெனில், பற்கள் நன்கு வெளிவந்துவிட்ட பிறகு அக்கோளாறுகள் சுயமாகவே நிவாரணமாய் விடும்.—43¼.

குழந்தை கபப்பிரகோபத்தால் சுஷ்கித்தலும் சிகித்ஸையும்:—பகலில் மிகத் தூங்குவது, குளிர்ந்த ஜலம் பருகுவது, கபப் பிரகோபமுள்ள ஸ்திரீயின் முலைப்பாலை யருந்துவது இவற்றால் சிசுவின் இரஸதாது ஓடும் ஸ்ரோதஸ்ஸுகளில் கபம் விருத்தியாய் இரஸக்கால்களை அடைத்துவிட, அதனால் அரோசகமும், பிரதிச்யாயமும், ஜ்வரமும், காஸமும் உண்டாய் குழந்தை சுஷ்கித்துப் போக, அதன் முகமும், கண்களும் ஸ்நிக்த்தமாக வெளிறிக் காணப்படும். (1) இந்துப்பு, த்ரிகடு, நாயர்வேளை, வட்டத்திருப்பி, கடம்பு இவற்றின் சூர்ணத்தை அங்ஙனம் சுஷ்கித்து வரும் குழந்தைக்குத் தேனுடனும் நெய்யோடும் கலந்து கொடுத்துவர, இது அரோசகம் முதலியவற்றைப் போக்கும். (2) அசோகம்பட்டை, கடுகரோஹிணி, பஞ்சகோலம் இவற்றின் சூர்ணத்தையாவது, (3) இலந்தை, காட்டாத்திப்பூ, நெல்லிக்கனி இவற்றின் சூர்ணத்தையாவது நெய்யிற் குழைத்து இக்கோளாறிற் கொடுக்கலாம். (4) சிறுமல்லி, வசம்பு, கண்டங்கத்திரி, காகோலி, திப்பிலி, நதம் என்கிற கந்தத்திரவ்யம், வஞ்சி, நெப்தல், சாறடை, கண்டுபாரங்கி, கோரைக் கிழங்கு இவற்றை வகைக்குக் கால்பலம் வீதம் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, இதில் அரைப்பிரஸ்த்தம் நெய் கூட்டிப்

பக்குவம்செய்த க்ருதம் கபம் முதலியவற்றால் அடைபட்டுள்ள ஸ்ரோதஸ்ஸுகளைச் சுத்திசெய்வதிற் சிறந்தது. (5) கண்டங்கத்திரி, அமுக்கிருங்கிழங்கு, துளஸி, திப்பிலி இவற்றைக்கொண்டு பக்குவம் செய்த க்ருதமும் அதே குணமுள்ளது. 44—50½.

ப்ருஹ்மண க்ருதம்:—கர்க்காடகச்ருங்கி, அதிமதுரம், கண்டு பாரங்கி, திப்பிலி, தேவதாரு, அமுக்கிருங்கிழங்கு, காகோலி, க்ஷீரகாகோலி, சிற்றரத்தை, ருஷபகம், ஜீவகம், பெருமல்லி, வாய்விடங்கம் இவற்றைக் கல்கமாகச் செய்து, முயல் சிரஸ்ஸின் கஷாயத்தில் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்து உபயோகிக்க, சுஷ்கிக்கும் குழந்தை புஷ்டியடையும்.—51, 52½.

வசாதி தைலம்:—வசம்பு, கடுக்காய், கிரந்திதகரம், கச்சோரம் இவற்றைச் செம்மறியாட்டு மூத்திரத்திலும் ஸுரையிலும் கூட்டிக் காய்ச்சி, அதில் தைலம் பக்குவம்செய்து, சுஷ்கிப்பவர்களுக்கு அப்யங்கம் செய்விக்கலாம்.—53½.

லாக்ஷாதி தைலம்:—ஒரு பிரஸ்த்தம் கொம்பாக்குக் கஷாயத்தில் அவ்வளவு எண்ணெயும் சேர்த்துத் தயிரின்மேலுள்ள தெளிவு நீரை நாலு மடங்குகூட்டி, பிறகு அமுக்கிருங்கிழங்கு, மஞ்சள், தேவதாரு, அரேணுகம், கோஷ்டம், கோரைக்கிழங்கு, சந்தனம், பெருங்குரும்பை, கடுகரோஹிணி, சிற்றரத்தை, சதகுப்பி, அதிமதுரம் இவற்றைச் சமஅளவு கல்கமாகச்சேர்க்கவும். "லாக்ஷாதி தைலம்" எனப்படும் இதைக் கொண்டு அப்யங்கம் செய்ய, சரீரபலம் விருத்தியாகும்; ஜ்வரம், க்ஷயம், பித்து, ச்வாஸம், அபஸ்மாரம், வாதரோகம் இவை தீரும். யக்ஷர், இராக்ஷஸர், மற்றும் பூதங்கள் இவற்றின் பற்றுதலையும் போக்கும்; கர்ப்பிணிகளுக்கும் இது சிறந்த அப்யங்கதைலம். 54—56½.

குழந்தையின் இருமல்-வாந்தி முதலியவற்றிற்குச் சிகித்ஸைகள்:—இருமல், ஜ்வரம், வாந்தி இவற்றால் பீடிக்கப்படும் குழந்தைக்கு (1) அதிவிடயம், கர்க்காடகச்ருங்கி, திப்பிலி இவற்றின் சூர்ணத்தைத் தேனிலும் நெய்யிலும் கலந்து கொடுக்கலாம். (2) அல்லது ஒரு அதிவிடயத்தை மாத்திரமாவது சூர்ணம் செய்து அங்ஙனமே நெய்யிலும் தேனிலும் கலந்து கொடுக்கலாம். (3) முலைப்பாலைப் பருகிப் பருகி வாந்தி செய்யும் குழந்தைக்குக் கண்டங்கத்திரி, கத்திரி, பஞ்சகோலம், எலுமிச்சம்பழரஸம் இவற்றை நெய் தேன் கூட்டி, லேஹ்யமாகப் பக்குவம் செய்து கொடுக்கலாம். (4) திப்பிலி, பஞ்சலவணம், வாய்விடங்கம், தேவதாரு இவற்றையும் அங்ஙனமே பக்குவம் செய்து கொடுக்கலாம். (5) த்ரிகடுகத்தையாவது நெய்-தேன் இவற்றுடன் உபயோகிக்கலாம். (6) அல்லது முள்ளம்பன்றி, சென்னாய், உடும்பு, காடி, மயில் இவற்றில் ஏதனுடைய சர்மத்தையாவது, மயிர்களையாவது சுட்டு அவ்விதமே தேன் நெய்களிற் கலந்து உபயோகிக்கலாம். 57—60.

சர்திஹர க்ருதம் :—கருங்காலி, மருதை, தாளிஸப்பத்திரி, கோஷ்டம், சந்தனம் இவற்றின் கஷாயத்தில் பாலையும் நெய்யையும் ஊற்றி பக்குவம் செய்யவும்; இவ்வாறு பக்குவம் செய்த க்ருதம் குழந்தையின் வாந்தியைப் போக்கவல்லது.—61.

தகாதவிதமாய் பல்முளைக்கும் உத்பாதத்திற் செய்யும் பரிஹாரம் :—எக் குழந்தை பிறக்கும் போதே பற்களோடு ஜனிக்கின்றதோ, எக்குழந்தைக்கு முதலில் மேல்வாய்ப் பற்கள் முளைக்கின்றனவோ அவ்விதமான துர்நிமித்தம் நேரிடுகையில் தகுந்தவாறு சாந்தி செய்யவேண்டும்; அக்குழந்தைகளை ஏராளமான தக்ஷிணைகளோடு ஒரு அந்தணனுக்குக் கொடுப்பது நலம்; பூதாதிகளுக்கும் பூஜை முதலியவற்றைச் செய்யவும்.[1]—62, 62½.

தாலுகண்டகம் :—தவடையின் உட்புற மாம்ஸத்தில் கபம் பிரகோபித்து "தாலுகண்டகம்" என்கிற வியாதி உண்டாம். அதனால் தவடைப் புறத்தின் உச்சியில் குழி விழுந்து தவடை தளர்ந்துவிடும்; முலையுண்பதில் வெறுப்புண்டாம்; பால் முதலியதை கஷ்டப்பட்டு குடிக்கும்; மலம் திரவமாய் வெளிவரும்; நாவறட்சி, வாயில் அரிப்பு, கண்ணோய், கழுத்தைத் தாங்கக் கூடாமை, வாந்தி இவையும் காணும்.—63, 64½.

தாலுகண்டக சிகித்ஸை:—தாலுகண்டக வியாதியில் வாயைத் திறக்கச்செய்து தவடையின் உட்புறத்தில் (1) யவக்ஷாரம், தேன் இவற்றைக் கூட்டித் தடவலாம். (2) திப்பிலி, சுக்கு, பசுஞ்சாணத்தின் சாறு, இந்துப்பு இவற்றைக் குழைத்தாவது தாலுகண்டகத்திற் பிரயோகிக்கலாம். (3) சுக்கு, மஞ்சள், கரிசலாங்கண்ணி இவற்றைக் கல்கமாக்கி, ஆமிலைகளில் வைத்துச் சுற்றிக் கட்டி, பசுஞ்சாணத்தை மேலே பூசி, உமித்தணலில் அதை வேகவைத்தெடுத்து, உள்ளிருக்கிற கல்கத்திலிருந்து இரஸம் பிழிந்து, அதை வாயிலும் தவடையிலும் லேபநம் செய்து, நேத்திரத்திலும், சிறிது ஊற்றலாம். (4) கடுக்காய், வசம்பு, கோஷ்டம் இவற்றின் கல்கத்தைத் தேன் விட்டுக் குழைத்து, முலைப்பாலின் அநுபானத்துடன் உட்கொள்ளக் கொடுக்கத் தாலுகண்டகம் தீரும். 65—68.

குழந்தைக்குக் குதத்திலுண்டாகும் விரணம் :—மலம் தங்கி பூசிக் கொள்வதாலோ, வியர்வை சேருவதாலோ குழந்தையின்

---

1. இதன் பிறகு இரண்டு பிரக்ஷிப்த ச்லோகங்கள் சில புஸ்தகங்களில் காணப்படுகின்றன; அவற்றின் மொழிபெயர்ப்பு பின்வருமாறு: [முகவாய்க்கட்டையின் மூலபாகத்திலிருப்பதும், பற்கள் முளைப்பதற்கு ஆதாரமான அஸ்தியைப்பற்றியதுமான வாயு பிரகோபித்தால் குழந்தைக்குப் பற்கள் முளைப்பதில்லை. ரூக்ஷமான உணவுகளைப் புஜிக்கும் குழந்தைக்கு வாதம் தேஹத்தில் மேலிட்டு, அவ்வாயு முகவாய்க்கட்டையைப் பற்றிய நாடிகளை அசைக்கச் செய்து, குழந்தை தூங்கும்போது அதனால் பற்களைக் கடிக்கும்படி அதைத் தூண்டுகிறது.]

குதத்தில் இரத்த-கபங்கள் கோளாறடைந்து, ஒருவித விரணம் உண்டாம்; அது சிவந்து, உள்ளே அரிப்புடன், அதிக உபத்திரவங்களுள்ளதா யிருக்கும். அதைச் சிலர் "மாத்ருகாதோஷம்" என்றும், சிலர் "பூதகம்" என்றும், சிலர் ப்ருஷ்டாருஸ் என்றும், சிலர் "குதகுந்தம்" என்றும், சிலர் "அநாமிகம்" என்றும் கூறுகிறார்கள்.—69, 70.

குதவிரண சிகித்ஸை:—குதஸம்பந்தமான அந்த விரணத்தைப் பரிஹரிக்க (1) தாயினுடைய முலைப்பாலைச் சுத்தி செய்ய வேண்டும்; அதற்காகப் பித்த-கபஹரமான ஔஷதங்களைத் தாய்க்குக் கொடுக்கவேண்டும். (2) இரஸாஞ்ஜநம், தேன் இவற்றை ஒருமிக்கக் கூட்டி, கொதிக்கவைத்து ஆறிய ஜலத்தில் அதைக் கலந்து அப்போதைக்கப்போது பானம் செய்யக் கொடுக்கலாம்; அதை விரணத்திலும் லேபநம் செய்யலாம். (3) த்ரிபலை, இலந்தம்பட்டை, பூவரசம்பட்டை இவற்றைக் கஷாயமிட்டு, அதை விரணத்தின்மேல் ஊற்றி, (4) அன்னபேதி, கோரோசனை, துத்தம், மனச்சிலை, தாளகம், இரஸாஞ்ஜநம் இவற்றை ஏதேனும் அம்லம் சேர்த்து அரைத்து, லேபமாகச் செய்தாகிலும் அதன் மேல் பூசலாம். (5) அல்லது அச்சரக்குகளையே சூர்ணம்செய்து விரணத்தின்மீது தூவலாம். (6) அல்லது அதிமதுரம், சங்கு, ஸௌவீராஞ்ஜநம் இவற்றின் மிக்க நுண்மையான சூர்ணத்தை யாவது, (7) நன்னாரிவேர், சங்கின் உட்புறச் சுழி இவற்றின் பொடியையாவது, (8) வேங்கைப் பட்டையின் மிருதுவான சூர்ணத்தையாவது விரணத்தின்மீது தூவலாம். (9) சிவப்பும், அரிப்பும் கடுமையாகத் தோன்றுமானால், அட்டையைப் பிரயோகித்து இரத்தத்தை வெளிப்படுத்தவும். (10) "குதகுட்டகம்" எனப்படுகிற [1]இவ்விரணத்தில் பித்தவ்ரண ஹரமான ஸகல சிகித்ஸையும் அனுகூலமானது. 71—75.

குழந்தை மண் ணுண்பதாலான கோளாறுகளுக்குப் பரிஹாரம்:—வட்டத்திருப்பி, வாய்விடங்கம், மஞ்சள், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, கண்டுபாரங்கி, சாறடை, பில்வம், த்ரிகடு, தேள்கொடுக்குப் பூண்டு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய க்ருதத்தை அளவாகக் கொடுத்து வந்தால் மண் தின்பதாலாகும் கோளாறுகள் நீங்கி சுகமுண்டாம்.—76, 76½.

பாலரோகங்களை நிவாரணம் செய்ய ஸ்தனங்களில் ஔஷத லேபநம் செய்தல்:—எந்தெந்த வியாதிக்கு எந்தெந்த ஔஷதம் ஏற்றதோ அந்தந்த ஔஷதத்தைத் தாயின் ஸ்தனங்களின்மேல் பூசி, சற்று அப்படியே வைத்திருந்து, அப்பால் அதைக் கழுவிவிட்டு, குழந்தைக்கு முலையூட்டினால், குழந்தைக்குண்டாகும் அந்தந்த வியாதி நிவாரணமாகும்.—77.

1. குதகுந்தம் என்கிற வியாதியே "குதகுட்டகம்" எனப்படுகிறது.

## மூன்றும் அத்தியாயம்.

## பாலக்கிரஹப் பிரதிஷேதம்.

இனி பாலக்கிரஹப்பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரிக்கப்படுகிறது :—

**ஸப்த பாலக்கிரஹங்கள் :**—முன்னால் சுப்பிரம்மணியனைக் காப்பதற்காகச் சிவபெருமானால் பன்னிரண்டு கிரஹங்கள் படைக்கப்பட்டன. அவற்றுள் ஸ்கந்தன், விசாகன், மேஷம், ச்வக்கிரஹம், பித்ருக்கிரஹம் ஆக இவ்வைந்தும் புருஷவுருவங்கொண்டவை. சகுநி, பூதனை, சீதபூதனை, த்ருஷ்டிபூதனை, முகமண்டலிகை, ரேவதி, சுஷ்கரேவதி என்னும் இவ்வேழும் ஸ்திரீகிரஹங்களாம். 1—2½.

**குழந்தைகளுக்குக் கிரஹபீடையில் காணும் குறிகள் :**—(1) கிரஹங்கள் பாலகனைப் பிடிக்கப்போகிற தறுவாயில் குழந்தைகள் அடிக்கடியும் அழும்; ஜ்வரமும் உண்டாகும். (2) அவை குழந்தையைப் பற்றிக்கொண்ட பிறகு காணும் பொதுக் குறிகளாவன :—திடுக்கிடுதல், கொட்டாவி, புருவநெறிப்பு, தீனமான நிலைமை, வாயில் நுரைதப்புதல், மேற்பார்வை பார்த்தல், உதட்டையும் பற்களையும் கடித்துக் கொள்ளுதல், தூக்கமின்மை, அழுகை, கூவுதல், முலையுண்பதில் வெறுப்பு, குரல் மாறுதல், காரணமின்றி தன்னையும் தாயையும் நகங்களால் கீறுவது என்பவையாம். 3—5.

**ஸ்கந்தக்கிரஹக் குறிகள் :**—அவற்றுள் ஸ்கந்தக் கிரஹத்தினால் பீடிக்கப்படும் குழந்தைக்கு ஒரு கண்ணிலிருந்து நீர் வடியும்; தலையைப் புரட்டியசைக்கும்; பார்ச்வவாயு வந்தாற்போல் ஒரு பக்கமெல்லாம் விழுந்து போகும்; அவயவங்கள் விறைத்துக்கொள்ளும்; வியர்வை கசியும்; கழுத்துத் துவண்டு வளையும்; பற்களைக் கடித்துக்கொள்ளும்; முலையுண்பதில் வெறுப்புண்டாகும்; அஞ்சி நடுங்கும்; தொண்டைக் கம்மிப்போய் அழும்; வாய் கோணலாகும்; உமிழ்நீரைக் கக்கும்; அதிகமாய் மேற்பார்வை பார்க்கும்; உடலில் சவர்நாற்ற முண்டாகும்; திகிலடைந்திருக்கும்; கடினமாக முஷ்டிபந்தநஞ் செய்துகொள்ளும்; மலச்சிக்கலுண்டாம்; ஒரு கண்ணும், ஒரு புருவமும், ஒரு கன்னமும் அதிகமாய் அசைந்துகொண்டிருக்கும், இரண்டு கண்களும் சிவந்திருக்கும்; இந்தக் கிரஹம் பீடிப்பதால் ஸ்த்திரமாக ஏதேனும் அவயவக் கோளாறேனும் ஸம்பவிக்கும், மரணமாவது நேரிடும். 6—8½.

---

1. பாலக்கிரஹப் பிரதிஷேதம் — பாலர்களைப் பற்றிப் பீடிக்கும் பூதங்களைப் பரிஹரிக்கும் முறைகளைக் கூறும் அத்தியாயம்.

விசாகக்கிரஹக்குறிகள் :—விசாகக்கிரஹத்தினால் பீடிக்கப் படும் குழந்தைக்கு ஸ்மரணை தப்பிவிடும்; அடிக்கடியும் அது மயிர்களை அறுத்துக்கொள்ளும்; கழுத்து நிற்காமல் துவளும்; உடம்பை விறைத்துக்கொண்டு கொட்டாவிவிடும்; அச்சமயம் மலமூத்திரங்கள் தானே வெளியாகும்; வாயில் நுரைதப்பும்; சிரஸ், நேத்திரங்கள், கைகள், புருவங்கள், பாதங்கள் இவை மிகவும் துடிக்கும்; முலையுண்ணும்போது ஸ்தநத்தைக் கடிக் கும்; தன் நாக்கையும் கடித்துக்கொள்ளும்; உடம்பு வேதனை யால் வருந்தும்; ஜ்வரமுண்டாகும்; நித்திரையுண்டாகாது; சீழ் இரத்தம் இவற்றின் நாற்றமும் தேஹத்திற் காணும். இவை "ஸ்கந்தாபஸ்மாரம்"[1] என்னும் கோளாறின் குறிகளாம். 9—11.

மேஷக்கிரஹக் குறிகள் :—மேஷக்கிரஹம் என்கிற நைகமேஷக்கிரஹம் பீடித்தால் குழந்தைக்கு வயிற்றுப்பொருமலுண்டாகும்; கை-கால்கள் துடிக்கும்; வாயில் நுரை தப்பும்; நாவறட்சியுண்டாகும்; கைகளை விறைத்து மூடிக்கொள்ளும்; அதிஸாரமும், தொண்டைக்கம்மலும், தேஹம் கருத்தலும், கூவுதலும், பயப்படுதலும், வாந்தியாதலும், இருமலும், விக்கலும், தூக்கமின்மையும் காணும்; உதட்டைக் கடித்துக் கொள்ளும்; உடல் சுருங்கி தேஹம் விரைக்கும்; செம்மறியாட்டினுடையவும் ஆமதோஷத்தினுடையவும் நாற்றம் காணும்; உயரப் பார்த்து அழும்; இடை துவண்டு வளையும்; ஜ்வரம், மூர்ச்சை, ஒற்றைக் கண் வீங்குதல் இவைகளும் தோன்றும். 12—14.

ச்வக்கிரஹக் குறிகள் :—குழந்தை ச்வக்கிரஹத்தினால் பீடிக் கப்படுமானால் நடுக்கங் கொள்ளும்; மயிர்ச்சிலிர்க்கும்; வியர்வை அதிகமாயுண்டாகும்; கண் மூடிக்கொள்ளும்; உடல் முதுகின் பக்கமாய் விறைத்து வளையும்; அது தனக்குத்தானே நாக்கைக் கடித்துக் கொள்ளும்; உள்ளுக்குள் தானே கூவிக்கொள்ளும்; அதிகமாய் ஓடும்; மலத்திற்குச் சமானமான துர்நாற்றம் தேஹத் திலுண்டாகும்; அலறியழும்.—15, 15½.

பித்ருக் கிரஹக் குறிகள் :—பித்ருக் கிரஹத்தினால் குழந்தை பீடிக்கப்படுகையில் காணும் குறிகள் :—மயிர்ச் சிலிர்க்கை, அடிக் கடியும் அஞ்சி நடுங்கல், திடீரென்று அழுதல், ஜ்வரம், இருமல், அதிஸாரம், வாந்தி, கொட்டாவி, நாவறட்சி, உடம்பில் சவர்நாற் றம், உடல் இசிவு, உதரல், சுஷ்கித்தல், உடல் திமிர்ப்பு, கருநிறம், கைகளை அழுத்தி மூடிக்கொள்ளல், கண்ணீர் வடிதல் இவைகளேயாம்.—16, 17½.

சகுநிக்கிரஹக் குறிகள் :—பாலர் சகுநிக்கிரஹத்தினால் பீடிக் கப் படுவாரானால் அவயவங்கள் தளர்தல், அதிஸாரம், நாக்கு-

1. ஸ்கந்தாபஸ்மாரம் :—விசாகக் கிரஹத்தினால் குழந்தைக்கு நேரி டும் கோளாறுக்கு இது மற்றொரு பெயராம்.

தவடை-தொண்டை இவற்றில் விரணம், அழற்சி-வலி-வேக்காடுகளோடு கூடிய கொப்புளங்கள் இராக்காலத்தில் பூட்டுகள்தோறும் உண்டாய் பகற்பொழுதில் மறைந்துவிடுதல், வாயிலாவது குதத்திலாவது அழற்சி, பயப்படுதல், உடலில் பக்ஷிகளுக்கேற்ற நாற்றம், ஜ்வரம் இக்குறிகள் காணும்.—18, 19½.

பூதநாக்கிரஹக் குறிகள் :—குழந்தை பூதநாக்கிரஹத்தினால் பீடிக்கப்படுகையில் வாந்தி, நடுக்கம், சோம்பல், இரவில் நித்திரையின்மை, விக்கல், வயிற்றுப்பொருமல், பேதி, நாவறட்சி, மூத்திரம் அடைபடுதல், அவயவங்கள் தளர்வுற்று உரோமங்கள் சிலிர்த்துக் கொள்ளல், காக்கையைப்போல துர்நாற்றமுண்டாதல் ஆக இக்குறிகள் காணும்.—20, 21.

சீதபூதநாக்கிரஹக் குறிகள் :—குழந்தை சீதபூதனை யென்னும் கிரஹத்தினால் பீடிக்கப்பட்டால் அது நடுங்கும்; அழும்; மூலைப்பார்வை பார்க்கும்; நாவறட்சி கொள்ளும்; குடலிரைதலையும் அதிஸாரத்தையும் பெறும்; பதனழிந்த நிணநீர்போன்ற துர்நாற்றமடையும்; ஒரு பார்ச்வமெல்லாம் உடல் சீதளமாகும்; மற்றொரு பக்கமெல்லாம் உஷ்ணமா யிருக்கும்.—22, 22½.

அந்தபூதநாக்கிரஹக் குறிகள் :—அந்தபூதனை யென்னும்[1] கிரஹத்தினால் பீடிக்கப்படும் குழந்தைக்குக் காணும் குறிகள்:—வாந்தி, ஜ்வரம், இருமல், அக்னிமாந்தியம், பேதி, உடல் கருநிறம் கொள்ளுதல், துர்நாற்றம், உடல் சுஷ்கித்தல், கண்பார்வை மழுக்கங் கொள்ளல், தேஹத்தில் கடும் வலி, அதிக தினவு, போதகி, எங்கும் சூன்னியமாகத் தோற்றல், விக்கல், திகில், முலையுண்பதில் வெறுப்பு, குரல் கீச்சிடுதல், உடல் நடுக்கம், தேஹம் மத்ஸியத்தின் நாற்றங்கொள்ளுதல் அல்லது புளிப்பு நாற்றம் பெறுதல் ஆகியவையாம். 23—25.

முகமண்டிதையின் குறிகள் :—முகமண்டிதையென்னும்[2] கிரஹத்தினால் பீடிக்கப்படும் குழந்தைக்குக் கை-கால்கள் வெகு அழகாகத் தோற்றும்; வயிற்றின்மீது கருநிறமான ஸிரைகள் அடர்ந்து படர்ந்திருக்கக் காணும்; ஜ்வரமும், அரோசகமும், உடல் வாட்டமும், பசுமூத்திரத்திற்கொப்பான நாற்றமும் உண்டாகும்.—26, 26½.

ரேவதீக்கிரஹக் குறிகள் :—பாலர் ரேவதீக்கிரஹத்தினால் பீடிக்கப்படுவார்களானால் கருப்பும் நீலமுமாக தேஹநிறம் மாறும்; செவிகளையும், நாசியையும், நேத்திரங்களையும் தேய்த்துப் பிசைந்துகொள்வார்கள்; இருமலும் விக்கலும்

1. திருஷ்டிபூதனை யென்பதே அந்தபூதனை யென்றும் கூறப்படும்.

2. முகமண்டலிகை யென்பதே முகமண்டிதை யென்றும், முகமண்டநிகை யென்றும் வழங்கப்படும்.

காணும்; கண்களை விழித்துப் பார்ப்பார்கள்; முகம் வக்கிரமாகவும் சிவப்பாகவும் ஆகும்; செம்மறியாட்டின் நாற்றம் உண்டாகும்; ஜ்வரம் காணும்; தேஹம் சுஷ்கிக்கும்; மலம் அதிக பசுமையாகவும் திரவமாகவும் இருக்கும்.—27, 28.

சுஷ்க ரேவதியின் குறிகள்:—குழந்தை சுஷ்க ரேவதி யென்கிற கிரஹத்தினால் பீடிக்கப் படுமானால், அதற்குக் கிரமக் கிரமமாக எல்லா அவயவங்களும் உலர்ந்து க்ஷீணித்து வரும்.—28½.

கிரஹதோஷங்களில் அஸாத்தியக்குறிகள்:—(1) மயிர்கள் உதிர்தல், அன்னத்வேஷம், குரல்க்ஷீணித்தல், கருநிறம், அழுகை, கழுகைப்போன்ற துர்நாற்றம், வியாதி நீடித்த காலம் தொடருதல், வயிற்றில் உருண்டையான கிரந்திகள், மலம் பல வேறு விதமாக வெளிப்படுதல், நாக்கின் மத்தியில் பள்ளம் விழுதல், தவடை கறுத்தல் இக்குறிகள் கண்டால் அக்குழந்தை ஜீவிக்காதென்று தீர்மானிக்கலாம். (2) அநேக விதமான உணவைப் புஜித்தும் உடல் க்ஷீணித்தும், நாவறட்சியோடு வாடிய முகத்துடன் கூடியுமுள்ள குழந்தை சுஷ்க ரேவதீகிரஹத்தினால் வருந்துகிறதென்றும், அது அக்கிரஹத்தினால் கொல்லப்பட்டுப் போமென்றும் அறிக. 29—31½.

குழந்தைமுதலியவர் கிரஹங்களால் பீடிக்கப்படுவதேன்:—சிறுவரைத் துன்புறுத்தல், இன்ப மனுபவித்தல், பூஜை விரும்பல் ஆக இவையே கிரஹங்கள் பற்றிக் கொள்வதற்கான காரணங்களாம். அவற்றுள் (1) துன்புறுத்தும் தன்மையுள்ள கிரஹத்தினால் குழந்தையாவது, பாலியம் நீங்கிய பெரியவராவது பற்றிக் கொள்ளப்பட்டால் நாசியிலிருந்து நீர் வடியும்; நாக்கைக் கடித்துக் கொண்டு கூவி வருந்துவர்; மிகவும் அலௌக்கிய நிலைமையேற்படும்; கண்களில் நீர் வடியும்; தேஹம் விகார நிறங்கொள்ளும்; பேசமுடியாமற் போகும்; உடலில் துர்க்கந்தமுண்டாகும்; சரீரம் வாடும்; தனது மல-மூத்திரங்களைப் பிசைந்து அளைவர்; இவ்வித காரியத்தில் அருவருப்பு கொள்ளார்; பரபரப்புடன் இரு கைகளைத் தூக்கித் தன்னையும் பிறரையும் அடிப்பர்; அங்ஙனமே ஆயுதங்கள் கட்டைகள் முதலியவற்றாலும் தன்னையும் பிறரையும் தாக்குவர்; எரிந்துகொண்டிருக்கும் அக்னியிலாவது பிரவேசிப்பர்; ஜலத்தில் மூழ்குவர்; கிணற்றில் விழுந்து விடுவர்; அபாயகரமான அத்தகைய வேறு காரியங்களையும் செய்வர்; நாவறட்சி, அழற்சி, மூர்ச்சை இவற்றைப் பெறுவதோடு, சீழ்வாந்தியும் செய்வர்; தேஹத்திலுள்ள எல்லா த்வாரங்களிலிருந்தும் இரத்தம் வெளியாகும்; ரிஷ்டங்களும்[1] தோன்றும். இக்கோளாறுகளைப் பெற்றவர் பிழைக்க மாட்டார். (2) இன்பம் அனுபவிக்க விரும்பும் கிரஹத்தினால் பீடிக்கப் படுவோர் ஏகாந்தத்தில் ஸ்த்ரீ

---

1. ரிஷ்டம்—சாரீரஸ்த்தானத்தில் 5-ம் அத்தியாயம் காண்க.

யுடன் புணருவதிலும், ஸல்லாபம் செய்வதிலும், ஸுகந்தங்கள்-மாலைகள்-ஆபரணங்கள் இவற்றை அணிவதிலும் விருப்பமுள்ளவராய் மிகக் களிப்புற்று அமைதியுள்ளவராகவும் இருப்பர்; இக் கிரஹத்தை நிவ்ருத்தி செய்வது கஷ்டஸாத்தியம். (3) பூஜை விரும்பும் கிரஹங்களால் பீடிக்கப் படுபவர் ஏங்கிய முகத்தினராகவும், வறண்ட உதடுகள்-தொண்டை-தவடை இவற்றுடன் கூடியவராகவும், வாயைப் பரிசித்துக் கொள்வர்; பயந்து பயந்து உற்று நோக்குவர்; கத்துவர்; ஏதோ மனதில் சிந்திப்பர்; தீரத் தன்மையைப் பெறுவர்; அன்னத்தில் விருப்ப மிருந்தும் அதை ஆவலுடன் புஜிக்கமாட்டார். இதை எளிதில் நிவ்ருத்தி செய்யலாம். 32-39½.

மூன்றுவித நோக்கமுள்ள கிரஹங்களை விலக்குமுபாயங்கள் :- துன்புறுத்தி வதை செய்வதான கிரஹத்தை ஸித்த மந்திரங்களால் நிறைவேற்றப்படும் ஹோமங்களாலும், மற்ற விரண்டையும் அதனதன் விருப்பப்படி முறையே சிற்றின்பம், பூஜை இவற்றாலும் நிவ்ருத்தி செய்யலாம்.—40½.

ஸாதாரண கிரஹங்களால் பீடிக்கப்படும் குழந்தைகளுக்குப் பரிஹாரங்கள் :—(1) பிறகு ஏற்ற பரிஹாரங்களால் விலக்கக் கூடிய கிரஹங்களால் பீடிக்கப்படும் குழந்தையை ஓர் ஏகாந்தமான அறையில் விடவும். (2) அந்த அறை தினத்திற்கு மூன்று முறை மெழுகித் துடைக்கப்பட்டு, எப்பொழுதும் அக்னியும் அங்கு இருத்தல் வேண்டும்; விபூதி, புஷ்பங்கள், பத்திரங்கள், பீஜங்கள், அன்னம், வெண்கடுகு இவற்றை அவ்வறையில் இறைத்துவைக்கவும்; ரக்ஷோக்நகுணமுள்ள தைலத்தைக் கொண்டு தீபம் ஏற்றி, அவ்வறையிலுள்ள தோஷங்கள் விலக்கப்பட வேண்டும்; புணர்ச்சி, மதுபானம், இறைச்சியுண்ணல் இவற்றை விலக்கிய பரிசாரகர்கள் அவ்விடத்தில் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்க வேண்டும். (3) இத்தகைய கிருஹத்தில் குழந்தையை விட்டு, அதற்குப் புராண க்ருதத்தினால் அப்யங்கம் செய்து வைத்து, (4) அடியிற் கூறும் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தை இளஞ்சூடாக ஊற்றி ஸ்நாநம் செய்விக்கவும். சிற்றுமுட்டி, வேம்பு, தழுதாழை, சரக்கொன்றை, பவளமல்லிகை, பெருவாகை, நாவல், மாவலிங்கை, சுக்குநாறிப்புல், சூரியகாந்தி, நாயுருவி, பாதிரி, அதிமதுரம், முருங்கை, தக்காளி, வெண்ணிலப் பூசுணிக் கிழங்கு, விளா, அத்தி, கடம்பு, புங்கு இவற்றைக் கொண்டு ஸ்நாந நீரைக் காய்ச்சவும். (5) ஸ்நாநம் செய்து வைத்த பிறகு யானைத்தோல், புலித்தோல், பாம்புத் தோல், சிங்கத்தின் தோல் இவற்றில் நெய் கூட்டி எரித்து, அதிலிருந்து வரும் தூமத்தினால் குழந்தைக்கு தூபமிடவும். 41—46½.

கிரஹநாசந தூபங்கள் :—(1) புங்கு, தசமூலம், வெண்கடுகு, வசம்பு, சோரங்கொட்டை, ஓமம், கோஷ்டம் இவற்றைச் சேர்த்து

சூர்ணம் செய்து, நெய் கூட்டி தூபமிடவும். இது ஸர்வக்கிரஹ நாசநதூபம். (2) வசம்பு, காயம், வாய்விடங்கம், இந்துப்பு, யானைத்திப்பிலி, வட்டத்திருப்பி, அதிவிடயம், த்ரிகடு இவற்றைக் கூட்டி யிடப்படுவது **தசாங்க தூபம்** எனப்படும்; இது கச்யப முனிவர் மொழிந்த முறையாம். (3) வெண் கடுகு, வேப்பிலை, மோடி, விஷ்ணுக் கிராந்தி, வசம்பு, பூர்ஜபத்திரம் இவற்றைச் சூர்ணித்து, நெய் கூட்டி தூபமிடவும்; இது ஸர்வக் கிரஹங்களையும் நிவாரணம் செய்யும். 47—49½.

**கிரஹதோஷஹரக்ருதங்கள்** :—(1) அறுகம்புல், மாம்பருப்பு, கிரந்திதகரம், மிளகு, மதுரத்திரவ்யகணம்,[1] சிற்றுமல்லி, கோரைக் கிழங்கு இவற்றைக் கல்கமாகச் செய்து, தசமூல ஸ்வரஸத்தையும் பாலையும் சேர்த்து பக்குவம் செய்த **அநந்தாதிக்ருதம்** எனப்படும் இது கிரஹதோஷங்களைப் பரிஹரிப்பதில் சிறந்தது. (2) சிற்றரத்தை, மோர்மல்லி, மஹாபஞ்சமூலம், வசம்பு, கோரைக்கிழங்கு இவற்றின் கஷாயத்தில் க்ருதம் பக்குவம் செய்யவும்; அதில் நன்னாரி, த்ரிகடு, சித்திரமூலம், வட்டத் திருப்பி, வாய்விடங்கம், அதிமதுரம், க்ஷீரகாகோலி, காயம், தேவதாரு, கிரந்திதகரம், வாலுழுவை இவற்றைக் கல்கமாகச் சேர்க்கவும். **ராஸ்நாதிக்ருதம்** என்கிற இது சிசுவுக்கு எப்பொழுதும் ஹிதமானது; ஸர்வரோகங்களையும், ஸர்வக்கிரஹங்களையும் பரிஹரிக்கும்; ஜாடராக்னியை உத்தீபநம் செய்யும்; தேஹவன்மையையும் நிறத்தையும் விருத்தி செய்யும். (3) நன்னாரி, வாஸனைப் புல், பிரமி, சங்கங்குப்பி, கடுகு, வசம்பு, அமுக்கிறுங்கிழங்கு, துளஸி இவற்றைச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவும்; இந்த **சாரிபாதி க்ருதத்தைப்** பானம் செய்வதாலும், அப்யங்கம் செய்வதாலும் ஸர்வக் கிரஹங்களும் நிவாரணமாகும். 50—55.

**பூதாதிகளைப் போக்கும் தூபநவஸ்துக்கள்** :—பசுமாட்டின் கொம்பு, உரோமம், வாலின் மயிர், பாம்புத்தோல், பூனையின் மலம், வேப்பிலை, நெய், கடுகரோஹிணி, மருக்காரை, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, பருத்திக் கொட்டை, வாற்கோதுமை, செம்மறியாட்டுமயிர், தேவதாரு, கடுகு, மயிர்மாணிக்கம், ஸாள தேவதாரு, உமி, உரோமம், காயம் இவற்றை மட்பாத்திரத்தில் செம்மறியாட்டுமூத்திரத்தினால் பாவனை செய்து, உலர்த்தி யெடுத்து, அனைத்தையும் மிருது சூர்ணம் செய்து, பூதவிகாரங்களிலும், விஷம ஜ்வரத்திலும் தூபமிட உபயோகிக்கலாம். 56—58.

**பூதாதிபீடைகளில் பலி ஹோமாதிபரிஹாரங்கள்** :—(1) பூதவித்யாப்பிரகரணத்தில்[2] கூறப்படும் க்ருதமுறைகளையும் குழந்தைகளுக்கு உபயோகிக்கலாம்; மந்திர-தந்திரங்களைக் கற்றுணர்ந்த

1. மதுரத்திரவ்ய கணம்—முதற் புத்தகம் பார்க்க.
2. பூதவித்யாப் பிரகரணம்—இனிவரும் ஐந்தாம் அத்தியாயம்.

வைத்தியன் பூஜையையும், ஹோமத்தையும், நியமத்துடன் ஸ்நானத்தையும் செய்துவைக்கலாம். (2) புங்கம்பட்டை, வேலியிலுடையவும் பாலுள்ள மரங்களுடையவும் இலைகள், சுரைக்காய், தும்மட்டி, பெருவாகை, வன்னி, பில்வம், விளா இவற்றின் பட்டை; இவைகளைச் சேர்த்து ஜலம் காய்ச்சி, அதனால் பாலர்களுக்கு இரவில் ஸ்நானம் செய்விக்கக் குழந்தைகளுக்குள்ள பீடையெல்லாம் நீங்கி ஸௌக்கியமுண்டாகும். (3) கிரஹம் விலகியுங்கூட அதற்குமுன் உண்டாயிருந்த கோளாறுகள் தொடர்ந்தாலும், உபத்திரவங்கள் உண்டாயிருந்தாலும் அவற்றிற்குச் சிரமப்பட்டாவது "பாலாமயப்பிரதிஷேதம்" என்கிற முன் அத்தியத்தில் மொழியப்பட்டுள்ள ஔஷதங்களைப் பிரயோகித்து சிகித்ஸை செய்யவேண்டும். 56—61½

---

## நான்காம் அத்தியாயம்.

## பூதவிஞ்ஞானம்.

இனி பூதவிஞ்ஞானம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

பூதாவேசத்திலுண்டாகும் பொதுக்குறிகள் முதலியன :—(1) ஒருவனிடம் மானிடப்பிறவிக் குரித்தாகாத மேலான ஞானமும், சிற்பவிஞ்ஞானமும், வாக்கும், நடத்தையும், பலமும், ஆண்மையும் விசேஷமாகத் தோன்றினால் அவனை ஏதோ பூதம் பற்றியிருப்பதாகக் கூறலாம். ஒருவன் இலக்ஷணம், உருவம், பாஷை, நடை முதலிய சேஷ்டைகளால் எந்தப் பூதத்தை ஒத்திருக்கிறானோ அவனை அதே பூதம் பற்றியிருப்பதாகச் சொல்லலாம்; அந்தப் பூதங்கள் தேவர்-அஸுரர் முதலாகப் பதினெட்டு இனங்களாம். (2) அவ்விதம் பூததோஷம் தொடருவதற்குப் புத்தி பூர்வகமான பாவச் செயல் காரணமாகும்; அச்செயல் தற்காலத்திலாவது முற்பிறப்பிலாவது பண்ணியதாக இருக்கலாம். காம-க்ரோதாதிகளைக் காரணமாகக் கொண்ட இத்தகைய தீச் செயலால் மனிதன் தர்மத்தையும் விரதத்தையும் ஆசாரத்தையும் இழந்து, கௌரவிக்கத் தகுந்த பெரியோரை அவமதிப்பன்; மரியாதையற்றவனும், பாவச்செயல் புரிபவனும், ஆத்மாவுக்கே தீங்கிழைத்துக் கொள்பவனுமான அவனை ஸந்தர்ப்பம் பார்த்து ஹிம்ஸிக்குமியல்புடைய தேவக்கிரஹம் முதலியவைகளும் சேர்ந்து தொந்தரவு செய்ய முயலும். பாவச்செயல்களைச் செய்ய ஆரம்பிப்பதே அங்ஙனம் பூதம் தொடருவதற்கு ஏற்ற ஸந்தர்ப்பமாம்; அந்த நிலைமையை

1. பூத விஞ்ஞானம் — பூதங்கள் பற்றிக்கொள்வது முதலியவற்றைப் பற்றிய விவரங்களை அறிவிக்கும் அத்தியாயம்.

அநிஷ்டமான கர்மத்தின் பலதசையெனவும் கூறலாம்; சூன்யமான பிரதேசத்தில் தனித்து இருத்தல், சுடலை முதலிய விடங்களில் இரவில் வஸித்தல், ஆடையகற்றி திகம்பரனுயிருத்தல், குருவை நிந்தித்தல், நியமங்களை மீறிச் சிற்றின்பம் அனுபவித்தல், அசுசியா யிருந்துகொண்டு தேவதார்ச்சனை முதலியதைச் செய்தல், பிறாது ஸூதகதோஷத்தைக் கலந்துவிடுதல், ஹோமம்-மந்திரம்-பூஜை-யாகம் இவற்றை முறைதவருக அனுஷ்டித்தல், சுருங்கச் சொன்னல் திநசர்யாத்யாயம் முதலியவற்றிற் கூறியுள்ள விதிகளுக்கு மாருக நடத்தல் ஆகிய இவையெல்லாம் கிரஹங்கள் தொடர்ந்து பிடிப்பதற்கு ஆஸ்பதங்களாம். 1—8.

கிரஹங்கள் மனிதரைப் பற்றுவதற்கேற்ற காலங்கள்:— (1) தேவர்கள் மனிதனை சுக்லபக்ஷப் பிரதமையிலும் திரயோதசியிலும் பற்றிக்கொள்வது வழக்கம். (2) அஸுரக்கிரஹங்கள் சுக்லபக்ஷத்திரயோதசியிலும் கிருஷ்ணபக்ஷத்வாதசியிலும் பிடித்துக் கொள்ளும். (3) கந்தர்வக் கிரஹங்கள் சதுர்த்தசி-த்வாதசி திதிகளிலும், (4) நாகங்கள் பஞ்சமியிலும், (5) யக்ஷர் சுக்லபக்ஷ ஸப்தமி-ஏகாதசி திதிகளிலும், (6) பிரம்மராக்ஷஸ்ஸுகள் சுக்லபக்ஷ அஷ்டமி-பஞ்சமி-பௌர்ணமிகளிலும், (7) இராக்ஷஸர்-பிசாசம் முதலியவை கிருஷ்ணபக்ஷ நவமி-துவாதசி-பர்வங்களிலும், (8) பித்ருக்கிரஹங்கள் தசமி-அமாவாஸ்யைகளிலும், (9) குரு-வ்ருத்தாதி மற்றக் கிரஹங்கள் அஷ்டமி-நவமி திதிகளிலும் மனிதனைப் பற்றிக்கொள்ளும். எத்தினங்களிலும் ஸந்தியாகாலங்களே கிரஹங்கள் பிடிக்க ஏற்ற ஸமயங்களாம். 9—12.

கிரஹங்களால் பீடிக்கப்படும் லக்ஷணங்கள்:—(1) **தேவர்களுக்கு** வசமான மனிதனுக்கு அடியிற் குறிப்பிடப்படும் இலக்ஷணங்கள் தோன்றும்; அவனது முகம் நன்கு மலர்ந்த தாமரைப்பூபோல் துலங்கும்; பார்வை குளிர்ந்திருக்கும்; அவனுக்குக் கோபமே யுண்டாகாது; மிருதமாகப் பேசுவான்: வியர்வை, மலம், மூத்திரம் இவை சொற்பமாயிருக்கும்; உணவை விரும்பான்; தேவர்களிடமும் பிராம்மணர்களிடமும் மிகுந்த பக்தியுண்டாகும்; சுத்தமாகவும் சீர்திருந்தியவையாகவுமுள்ள வார்த்தைகளையே பேசுவான்; கண்களை வெகு மெதுவாக மூடிக்கொள்வான்; உடம்பு ஸுகந்தமுள்ளதாயிருக்கும்; வரனளிப்பான்; வெண் மலர்கள், வெளுத்த உடை, ஆறுகள், மலைகள், உன்னதமான மாளிகைகள் இவற்றில் விருப்பமுடையவனுயிருப்பன்; நித்திரையின்றி விழித்திருப்பான்; அஞ்சா நெஞ்சமுடையவனுவான். (2) வக்கிரமான பார்வை, துஷ்டத்தன்மை, குரு - தேவர் - பிராம்மணர் இவர்களை த்வேஷித்தல், பயமின்மை, மானத்தில் நோக்கம், சூரத்தன்மை, கோபித்தல், முயற்சியுடைமை, தன்னை ருத்திரனென்றும் - ஸ்கந்தன் என்றும்-விசாகனென்றும் - இந்திரனென்

றும் சொல்லிப் பெருமை பேசுதல், மதுவையும் மாம்ஸத்தையும் மிகுதியாக விரும்பல் ஆக இவை யெல்லாம் அஸுரக்கிரஹம் பிடித்திருப்பதன் குறிகளாம். (3) நல்ல ஆசாரம், ஸுகந்தமுள்ள தேஹம், மனக்களிப்பு இவற்றுடன் பாடுதல், நர்த்தநம், நீராடுவதிலும் பூஞ்சோலைகளிற் சென்று ஸஞ்சரிப்பதிலும் விருப்பம், சிவந்த உடைகளையும் புஷ்பங்களையும் பூச்சுகளையும் அணிவதில் ஆசை, ச்ருங்காரலீலைகளிற் பற்றுண்டாயிருத்தல் ஆக இந்த இலக்ஷணங்களுள்ளவன் கந்தர்வக்கிரஹத்தினுல் பற்றிக் கொள்ளப் பட்டிருப்பான். (4) கண்கள் சிவந்திருத்தல், கோபித்தல், பார்வை அசைவற்றிருத்தல், வக்கிரமான நடை, ஸ்திரமில்லாத ஸ்வபாவம், எப்பொழுதும் பெருமூச்செறிதல், நாக்கை அடிக்கடியும் அசைத்தல், வாயின் இரண்டு ஓரங்களையும் எப்பொழுதும் நாக்கால் துடைத்தல், பாலிலும்-வெல்லத்திலும்-ஸ்நாநத்திலும் விருப்பமதிகரித்தல், தலைகவிழ்ந்து சயனித்தல், குடையைக் கண்டு பயப்படுதல் ஆக இவை நாகக்கிரஹத்தினுல் பற்றிக் கொள்ளப்பட்டதன் இலக்ஷணங்களென்றறிக. (5) அடியிற்கண்ட இலக்ஷணங்களுள்ளவன் யக்ஷக்கிரஹத்தினுல் பிடிக்கப்பட்டவனென்று அறிக :—குதித்தோடல், சிவந்து விரண்ட கண்களுள்ளவனுயிருத்தல், நறுமணமும், நல்ல தேஜஸ்ஸும் பெறுதல், நர்த்தநம்-கதை-ஸங்கீதம் ஸ்நாநம்-ஹாரம்- வாஸனைப்பூச்சு இவற்றில் ப்ரியமதிகரித்தல், மத்ஸ்ய-மாம்ஸங்களைப் புஜிப்பதில் விருப்பம், மகிழ்ச்சி பொருந்தி யிருத்தல், தேஹவன்மை விருத்தியாதல், தாதுக்கள்அழிவற்று ஸுகம் பெறுதல், கை முனை நடுங்குதல், எவனுக்கு எதைக் கொடுப்பேனென்று கூறிக்கொண்டிருத்தல், இரஹஸ்யமாகப் பேசிக்கொள்ளுதல், வைத்தியர்களையும் பிராம்மணர்களையும் அவமதித்தல், சிறிது சினங்கொள்ளல், நடந்துச் செல்ல முடியாமை ஆக இவைகளேயாம். (6) பிரம்மரக்ஷஸ்ஸால் பிடிக்கப்பட்டவன் ஹாஸ்யத்திலும், நர்த்தனத்திலும் ப்ரியமுள்ளவனுவான் ; பயங்கரச் செயல்களைச் செய்வான் ; ஸமயம் பார்த்து ஹிம்ஸிப்பான் ; கடுங் கூச்சலிடுவான் ; விரைவாக நடப்பான் ; தேவர்களையும், அந்தணர்களையும், வைத்தியர்களையும் த்வேஷிப்பான் ; கட்டை-ஆயுதம் முதலியவற்றுல் தன்னை அடித்துக்கொள்வான்; ஹோவென்று சப்திப்பான்; சாஸ்திரங்களையும் வேதங்களையும் ஓதுவான். (7) சினங்கொண்டு விழித்துப் பார்த்தல், புருவநெறிப்புடன் கூடியிருத்தல், பரபரத்து ஓடுதல், அடித்தல், கூச்சலிடுதல், மிகப் பயங்கரமாகத் தோற்றல், உணவின்றியே பலசாலியாயிருத்தல், நித்திரையின்மை, இரவில் ஸஞ்சரித்தல், வெட்கமின்மை, சுசியின்மை, சூரத்தன்மை, க்ரூரமாயிருத்தல், கடுமையாகப் பேசுதல், கோபித்தல், சிவந்த புஷ்பங்கள்-ஸ்த்ரீ ஸேவை-உதிரம்-மதுபானம் - மாம்ஸ போஜனம் இவற்றில் விருப்பம், இரத்தத்தையாவது இறைச்சியையாவது

கண்டதும் உதடுகளை நாக்கால் நுழைசுதல், போஜனகாலத்தில் சிரித்தல் இவை யெல்லாம் இராக்ஷஸக்கிரஹத்தினால் பிடித்துக் கொள்ளப்பட்டவனின் குறிகளாம். (8) பிசாசக்கிரஹத்தினால் பற்றிக் கொள்ளப்பட்டவன் கீழ்க்கண்ட குறிகளுள்ளவனா யிருப்பான்:— சித்தஸ்வாதீனமற்றிருப்பான்; ஓரிடத்தில் நிலைத்திரான்; விரைந்தோடுவான்; பிறர் புஜித்து மிச்சமுள்ள உணவு, நர்த்தனம், ஸங்கீதம், சிரிப்பு, மதுபானம், மாம்ஸபோஜனம் இவற்றை விரும்புவான்; விரட்டினால் முகம் ஏங்கிவிடும்; காரணமின்றியே திடீரென்று அழுவான்; தன்னைத் தானே நகங்களால் பிறிக்கொள்வான்; ரூக்ஷசரீரத்தோடும் கம்மிப்போன தொண்டையோடும் கூடியவனாயிருப்பன்; ஏதேதோ துக்கங்களைச் சொல்லிக் கொள்வான்; தாறுமாறாகப் பேசுவான்; ஞாபகசக்தி யிழப்பான்; இன்பமற்றிருப்பான்; சஞ்சல சித்தனாகவும், வஸ்திர மிழந்தவனாகவும், அழுக்கடைந்தவனாகவும், தெருவில் வீழ்ந்துள்ள கந்தல்களைத் தரிப்பவனாகவும், புற்கள் முதலியவற்றாலான மாலையை அணிந்தவனாகவும் இருப்பான்; மரக்குதிரையின்மீதும் குப்பை மேட்டின்மீதும் ஏறுவான்; அமிதபோஜனம் உண்பான். (9) எவன் பிரேதத்திற்கொப்பான உருவமும் பிரேதமென்னும் பூதம் செய்வது போன்ற செயல்களும்-சவநாற்றமும் உள்ளவனாகவும், அஞ்சி நடுங்குபவனாகவும், அன்னத்வேஷமுடையவனாகவும், புற்பூண்டுகளை அறுப்பவனாகவும் இருக்கிறானோ அம்மனிதன் பிரேதக்கிரஹத்தினால் பற்றிக்கொள்ளப்பட்டானென்றறிக. (10) மிகவும் புலம்புதல், முகம் கறுத்தல், மெதுவாக நடந்துச் செல்லல், ஆண்குறி வீங்கித் தொங்குதல் இக்குறிகளுள்ளவனை கூஷ்மாண்டக்கிரஹம் பிடித்திருப்பதாகக் கூறவேண்டும். (11) கட்டை-ஓடு முதலியதை யெடுத்து ஓடித்திரிதல், மரையுரியைத் தரித்தல், அவதூதனாதல், நாசி யுலர்ந்து மேற்பார்வை பார்த்தல், புற்களை தேஹமெங்கும் தொங்கவிட்டுக் கொள்ளுதல், சுடலையிலும் நிர்மாநுஷ்யமான இடங்களிலும் சென்று வஸித்தல், வீதி விருக்ஷத்தின் கீழே அண்டிக்கொள்ளுதல், திலான்னம்-மது-மாம்ஸம் இவற்றிலே பற்றுள்ள பார்வை யுடையவனாயிருத்தல், கடும் வார்த்தைகளைச் சொல்லுதல் ஆகிய குறிகளுள்ளவனை நிஷாதக்கிரஹம் பிடித்திருப்பதாய் அறிக. (12) அன்னமும் தண்ணீரும் யாசிப்பது, கண்கள் விரண்டு மிகவும் சிவந்திருத்தல், மிகக் கடுமையாகப் பேசுதல் ஆக இக்குறிகளுள்ள மனிதனை ஔளகிரணக்கிரஹம் பிடித்திருப்பதாய் அறியவும். (13) ஸுகந்தங்களையும் புஷ்பங்களையும் அணிவதில் ஆவலுண்டாதல், ஸத்தியமே பேசுதல், அதிகமாய் நடுங்குதல், உடம்பில் ஆங்காங்கு அநேகம் த்வாரங்களை யுண்டு பண்ணிக் கொள்ளுதல் ஆக இந்த இலக்ஷணங்களை யுடையவன் வேதாளக் கிரஹத்தினால் பிடிக்கப்பட்டிருப்பதாய் அறிக. (14) கண் கலக்கங் கொள்ளுதல், முகம்

ஏங்கி யிருத்தல், தவடைகள் உலர்ந்து போதல், கண்களின் ரெப்பைகள் துடித்தல், உறக்கங்கொள்ளுதல், ஜாடராக்னி மந்தப்படுதல், வஸ்திரங்களை அப்பிரதக்ஷிணமாக உடுத்தல், எள்ளு மாம்ஸம் இவற்றில் விருப்ப முண்டாதல், தட்டுத் தடுமாறிப் பேசுதல் ஆக இக் குறிகளுள்ளவன் பித்ருக்கிரஹத்தினால் பற்றிக் கொள்ளப்பட்டிருப்பதாய் அறிக. (15) குரு, வ்ருத்தர், இருஷிகள், ஸித்தர் இவர்களால் இடப்படும் சாபம் மனக்கவலை இவற்றாலுண்டாகும் கோளாறுகளை அததற்கேற்ற குறிகளைக்கொண்டும், மற்றக் கிரஹங்களுடைய ஸம்பந்தத்தை அததற்கு அநுஸரணையான பேச்சு உணவு செயல் இவற்றைக் கொண்டும் தெரிந்து கூறவேண்டும். 13--43.

**கிரஹபீடையில் அஸாத்திய லக்ஷணங்கள் :—** அநேகம் சிறுவர்களால் பின் தொடரப்படுவது, திகம்பரனாயிருத்தல், தலைமயிர்கள் மேலுக்குக் கிளம்பி கோரமாகத் தோற்றுதல், மனம் தடுமாறிப் போயிருத்தல், கிரஹாவேசம் நீடித்துத் தொடர்தல் ஆகிய கிரஹாவேச நிலைமைகளைப் பெற்றுள்ள மனிதன் சிகிச்சைக்குத் தகாதவனாவான்.—44.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

## பூதப்பிரதிஷேதம்.

இனி பூதப்பிரதிஷேதம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும :—

**தீங்கிழைக்காத பூதங்களுக்குச் செய்யக்கூடிய பரிஹாரங்கள் :—** ஹிம்ஸிக்கு மியல்பில்லாத பூதத்தினால் ஒருவன் பிடிக்கப்பட்டிருந்தால் அப்பூதத்தை ஜபம், ஹோமம், பூஜை, விரதம், தவம், ஸதாசாரம், ஸமாதாநவார்த்தை, ஞானோபதேசம், தாநம், இஷ்டதேவதையின் தயையை ஸம்பாதித்தல் ஆக இவற்றால் பரிஹரிக்கலாம்.—1.

**இரக்ஷோக்ந யோகங்கள் :—** காயம், த்ரிகடு, கஸ்தூரி, வெள்ளுள்ளி, எருக்கம்வேர், ஜடாமாம்ஸி, காஞ்சொறி, அறுகு, கருநொச்சிலி, வசம்பு, ஞாழல், புங்கு, ஈச்வரமூலி, எள்ளு, காகோலி, க்ஷீரகாகோலி, பிரண்டை, கடுக்காய், அதிவிடயம், புல்லூறி, ஸ்ரோதோஞ்ஜநம், கடுகு, மற்றும் இரோக்ஷக்நகுணமுள்ள ஔஷதம் இவைகளையும், கழுதை, குதிரை, ஓனாய், ஒட்டகம், கரடி, உடும்பு, கீரிப்பிள்ளை, முள்ளம்பன்றி, யானை, பூனை, பசு, சிங்கம், புலி, கடலிலுள்ள இவ்விதமான பிராணிகள் இந்த ஜந்துக்களுடைய சர்மம் பித்தம் பற்கள் நகங்கள் இவற்றையும் கூட்டி,

---

1. பூதப் பிரதிஷேதம் — பூதங்கள், முன் கூறிய கிரஹாதிகள் அவற்றை விலக்கும் விஷயங்களை விவரிக்கும் அத்தியாயம்

(1) வெகு நாட்கள் பழகிய க்ருதத்தையாவது, (2) புதிய நல்லெண்ணெயையாவது பக்குவம் செய்யவும்; இந்த க்ருதமும் தைலமும் பானத்திற்கும், நஸ்ய மிடுவதற்கும், அப்யங்கம் செய்வதற்கும் உபயோகமானவை. (3) இச்சரக்குகளைச் சூர்ணம் செய்து தூபம் போடுவதும் நலம். (4) இதே சரக்குகளைக் கொண்டு குளிகை செய்து அஞ்ஜநமிடவும், அவபீடக நஸ்யம் பிரயோகிக்கவும் செய்யலாம். (5) இவற்றின் கல்கத்தை லேபநம் செய்யவும், (6) இச்சரக்குகளாலான க்வாதத்தை ஸேகம் செய்யவும் உபயோகிக்கலாம். இந்த முறை கிரஹங்கள், உந்மாதம், அபஸ்மாரம் இவற்றைப் போக்கும். 2—7½.

கிரஹதோஷஹரமான நஸ்யாதிகள் :—யானைத் திப்பிலி, மோடி, த்ரிகடு, நெல்லிக்கனி, கடுகு இவற்றை உடும்பு, கீரிப் பிள்ளை, பூனை, மத்ஸியம் இவற்றின் பித்தத்திலுல் ஆட்டியெடுத்து நஸ்யமிடுவதற்கும், அப்யங்கம் செய்வதற்கும், ஸேசநமாகப் பிரயோகிப்பதற்கும் உபயோகிக்கலாம்; இது கிரஹதோஷங்களைப் போக்கும்.—8, 9.

ஸித்தார்த்தக க்ருதம் :—வெள்ளைக்கடுகு, வசம்பு, காயம், ஞாழல், மஞ்சள், மரமஞ்சள், மஞ்ஜிஷ்டி, வாலுழுவை, விஷ்ணு கிராந்தி, வேப்பிலை, புங்கம்வித்து, காட்டுவாகையின் வித்து, தேவதாரு, த்ரிகடு இவற்றை நாலு மடங்கு பசுமூத்திரத்திலிட்டு நெய் சேர்த்து பக்குவம் செய்யவும். "ஸித்தார்த்தக க்ருதம்" என்னும் இது பானம் செய்வதற்கும் நஸ்யமிடுவதற்கும் உபயோகமானது; எல்லாக் கிரஹங்களையும், அதிலும் விசேஷமாக அஸுரக் கிரஹங்களையும், க்ருத்யை யென்னும் அபிசாரக் கிரியைகளாலான தீங்கையும் சீக்கிரம் போக்கிவிடும்; துர்ப்பாக்கியம், விஷக்கோளாறு, உந்மாதம், ஜ்வரம், அபஸ்மாரம், தீவினை இவற்றையும் நிவாரணம் செய்யும். 10—12½.

அகதௌஷதம் :—இதே சரக்குகளைச் செம்மறியாட்டின் சிறு நீரிற் சேர்த்து பக்குவம் செய்த ஔஷதத்தைப் பாநம் செய்வதற்கும், நஸ்யமிடுவதற்கும், அஞ்ஜநமிடுவதற்கும், லேபநம் செய்வதற்கும், ஸ்தநங்களின்மீது தேய்ப்பதற்கும் உபயோகிக்கலாம். இது முன் ஸித்தார்த்தக க்ருதத்திற்குச் சமானமான குணங்களுடையது; இவ்வௌஷத முபயோகிப்பவர் இராஜக்ருஹங்களிற் சென்றாலும் ஜயம் பெறுவர்.—13, 14.

ஸித்தார்த்தகாதி குளிகை :—வெண்கடுகு, த்ரிகடு, வசம்பு, அமுக்கிறாங்கிழங்கு, மஞ்சள், மரமஞ்சள், காயம், வெங்காயம், புங்கம்வித்து, காட்டுவாகைப்பூ, விளாம்பழம், விளாம்பட்டை, இந்துப்பு, நதம் என்கிற கந்தத்திரவ்யம், கோஷ்டம், பெருவாகையின் வேர், நாயுருவி, சர்க்கரை இவற்றைச் செம்மறியாட்டு மூத்திரத்தில் பாவனை செய்து, அப்பால் பசுவின் பித்தநீரை விட்டு

ஆட்டி குளிகைகள் செய்யவும். துர்விரணம் அல்லது அதிப்புண், உந்மாதம், இரவிற் கண்தெரியாமை, திமிரம் என்கிற கண்ரோகம் இவைகளை நிவ்ருத்தி செய்ய இக்குளிகை உபயோகமானது; தூக்கிட்டுக்கொண்டவர், தண்ணீரில் மூழ்கிப்போனவர், விஷதிக்த பாணங்களால் அடிக்கப்பட்டவர், வெறிபிடித்த ஸர்ப்பத்தினால் தீண்டப்பட்டவர் இவர்களுக்கெல்லாம் இதைக்கொண்டு நஸ்ய மிடுவதாலும், அஞ்ஜநமிடுவதாலும், லேபம் செய்வதாலும் நன்மை யுண்டாகும். 15—17.

இரக்ஷோக்ந தூபம் :—பருத்திக் கொட்டை, மயிற்றோகை, கண்டங்கத்திரி, சிவனுக்குபயோகித்து சேஷமாயுள்ள பிண்டுதக மென்னும் ஒருவகை மட்டிப்பால், இலவங்கப்பட்டை, ஜடாமாம்ஸி, பூனையின் மலம், உமி, வசம்பு, உரோமம், பாம்புத்தோல், யானையின் தந்தம், மாடு முதலியவற்றின் கொம்புகள், காயம், மிளகு இவற்றைச் சமயெடையாகச் சேர்த்து தூபமிடவும்; இந்த தூபம் ஸ்கந்தக்கிரஹம், உந்மாதம், பிசாச, இராக்ஷஸர், தேவர் இவற்றின் ஆவேசங்களையும், ஜ்வரத்தையும் போக்குவதற்குச் சிறந்ததாகும்.—18.

பூதராவ க்ருதம் :—த்ரிகடு, பச்சிலை, குங்குமப்பூ, கிரந்தி தகரம், யவக்ஷாரம், கண்டங்கத்திரி, மஞ்சள், தேவதாரு, சுக்கு, வெண்கடுகு, கோரைக்கிழங்கு, வாலுழுவை, வெங்காயம், த்ரிபலை, வெட்டிவேர், கடுகரோஹிணி, வசம்பு, பால்துத்தம், அதிமதுரம், சிற்றாமுட்டி, செஞ்சந்தனம், ஏலக்காய், மனச்சிலை, தாமரைக் கிழங்கு, தயிர், தகரவிதை, இலுப்பைப்பூ, ஞாழல், அதிவிடயம், காகோலி, இரஸாஞ்ஜநம், சவ்யம், கோஷ்டம் இவற்றையெல்லாம் கல்கமாகச் செய்து, பசுமூத்திரம் முதலிய எல்லா மூத்திரங்களையும் ஸம அளவாகச் சேர்த்து, புராண க்ருதத்தை இதில் பக்குவம் செய்யவும். "பூதராவம்" என்கிற இந்த க்ருதத்தைப் பாநம் செய்வதால் கிரஹங்கள் நீங்கும்.—19.

மஹாபூதராவ க்ருதம் :—நதம் என்கிற ஸுகந்தத்திரவ்யம், அதிமதுரம், புங்கு, அரக்கு, பேய்ப்புடல், மஞ்ஜிஷ்டி, வசம்பு, பாதிரி, காயம், வெண்கடுகு, கண்டங்கத்திரி, மஞ்சள், மரமஞ்சள், ஞாழல், கடுகரோஹிணி, இலந்தை, மிளகு, த்ரிபலை, சிலவேம்பு, தேவதாரு, வாய்விடங்கம், ஓமம், பெருங்குரும்பை, ஏறழிஞ்சல், சுரை, முருங்கை, வேம்பு, கோரைக்கிழங்கு, வாலுழுவை, கோஷ்டம், காரகிற்பட்டை, அதன் புஷ்பம், அதன் வித்து, நீர்முள்ளி, விஷ்ணுக்கிராந்தி, நேபாளம், சித்திரமூலம், பில்வம் இவற்றைச் சமயெடையாகக் கல்கமாகச் செய்து, மூத்திரவர்க்கத்தையும் கூட்டி, க்ருதம் பக்குவம் செய்யவும். இதை அப்யங்கம், பாநம், நஸ்யம் முதலிய கார்யங்களில் முறைப்படி உபயோகித்து வர, ஸகல விதமான கிரஹங்களும், உந்மாதமும், குஷ்டமும்,

ஜ்வரமும் நிவ்ருத்தியாகும். இது "மஹா பூதராவம்" என்று கூறப்படும்.—20

கிரஹோபசாரத்திற்கான பொதுவிதிகள் :—(1) எந்தக் கிரஹங்கள் எந்த நாட்களில் ஒருவனைப் பிடித்துக்கொள்கின்றனவோ அந்த தினங்களிலெல்லாம் சிகித்ஸை செய்பவன் அந்தக் கிரஹங்களுக்குப் பூஜை, ஹோமம் முதலியவற்றை விசேஷமாகச் செய்யலாம். (2) ஸ்நாநம், வஸ்திரம், வளை, எள்ளு, கொழுப்பு, மாம்ஸம், மது, பழைய வெல்லம் இவை முதலியவற்றுள் எதெது எந்தெந்தக் கிரஹங்களால் எவ்வெப்பொழுது விரும்பப்படுகிறதோ அதை அவ்வப்பொழுதே அந்தந்தக் கிரஹத்தின் திருப்தியின் பொருட்டு ஸம்பாதித்துக் கொடுத்து விடவும். (3) இரத்தினங்கள், ஸுகந்தங்கள், புஷ்பங்கள், பலவித வித்துகள், தேன், நெய், ஸகலவித பக்ஷ்யங்கள் ஆக இவையெல்லாம் எல்லாக் கிரஹங்களுக்கும் விருப்பமானவை. கிரஹோபசாரவிஷயத்தில் இது பொது விதியாகும். 21—23.

கிரஹங்களில் ஒவ்வொன்றுக்கும் பூஜைக்குரிய பிரதேசம்:—தேவக்கிரஹம், ருஷிக்கிரஹம், குருக்கிரஹம், வ்ருத்தக்கிரஹம் ஸித்தக்கிரஹம் இவற்றிற்கு ஒரு தேவாலயத்தில் பூஜையிடவேண்டும். அதிலும் முக்கியமாய் தேவக்கிரஹத்திற்குப் பிணியாளி வஸிக்கு மிடத்திற்கு வடதிசையிலுள்ள தேவாலயத்தில் பலியிடுவது நலம். அஸுரக்கிரஹத்திற்குக் காலமறிந்து மேல் திசையில் ஒரு நாற்சந்தியில் பலியிடவேண்டும். கந்தர்வக்கிரஹத்திற்குப் பசுக்கள் செல்லும்மார்க்கத்தில் நல்ல வஸ்திராபரணங்களையணிந்து கொண்டு பூஜை செய்யவேண்டும். பித்ருக்கிரஹத்திற்கு நதியிலும், நாகங்களுக்குத்தென் மேற்குத் திசையிலும், யக்ஷக்கிரஹத்திற்கு யக்ஷாலயத்தில் அல்லது இரண்டு நதிகள் ஸங்கமமாகிற விடத்திலும் பலியிடலாம். இராக்ஷஸக் கிரஹத்திற்கு நாற்சந்தியிலும், மிகப்பெரிய அடர்த்தியான காட்டிலும் தென் திசையிலும் பலியிடவேண்டும். பிரம்மராக்ஷஸ்ஸுகளுக்குக் கீழ்த் திசையிலும், பிசாசத்திற்கு அது மேல் திசையைச் சார்ந்திருக்கையில் சூர்யாலயத்திலும் பலியிடவேண்டும். 24—27½.

பலவேறு கிரஹங்களுக்குரிய பூஜாவஸ்துக்களும் சிகித்ஸையும் :—(1) தேவக்கிரஹங்களுக்குச் சுத்தமான வெள்ளைப் புஷ்பங்களும், ஸுகந்தங்களும், க்ஷீரான்னமும், தயிரும், வெண்குடையும் பூஜைக்குரியவையென்று கூறப்படுகிறது. காயம், கடுகு, வசம்பு, த்ரிகடு இவற்றை வகைக்கு அரைப்பலம் வீதம் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் நெய் கூட்டி, நெய்க்கு நாலு மடங்கு பசுமூத்திரம் சேர்த்து பக்குவம் செய்யவும்; இந்த க்ருதத்தைப் பானம் செய்வதாலும், நஸ்யமிடுவதாலும், அப்யங்கம் செய்வதாலும் தேவக்கிரஹம் விலகும். வசம்பு, வெள்ளுள்ளி, காயம்

இவற்றைச் செம்மறியாட்டின் சிறுநீரில் சேர்த்துப் பக்குவம் செய்து, அதை நஸ்யமிட்டாலும், அஞ்ஜநமாகப் பிரயோகித்தாலும் தேவக்கிரஹம் தீரும். (2) அநேகவிதமான சர்க்கரை, வெட்டிவேர் - தாமரை - கருநைதல் இவற்றையும் கொண்டு அஸுரக் கிரஹத்திற்குப் பலியிடுவது முறை. (3) பக்ஷ்யங்கள், நெற்பொரி, வெல்லம், பணியாரங்கள், சர்க்கரான்னம், பாயான்னம், தேன், பால், கறுப்பு மலர், நாககேஸரம், வசம்பு, தாமரை, குங்கிலியம், வெட்டிவேர், செந்தாமரை யிதழ்கள் இவற்றைக் கொண்டு நாகக்கிரஹத்திற்குப் பூஜை செய்யலாம் தாமரை, வெள்ளிலோத்தி, கிரந்திதகரம், நாககேஸரம், வெண்கடுகு இவற்றைக் குளிர்ந்த நீர் சேர்த்து அரைத்து நஸ்யமிடுவதற்கும், அஞ்ஜநமிடுவதற்கும் உபயோகிக்கலாம். (4) பால், தயிர், நெய், கதம்பம் எனப்படுகிற மிச்ரான்னம், குங்கிலியம், தேவதாரு, கருநைதல், தாமரை, வெட்டிவேர், வஸ்திரங்கள், நாககேஸரம், ஸ்வர்ணம் இவை யக்ஷக்கிரஹங்களுக்குப் பூஜை செய்வதற்கேற்ற வஸ்துக்களாம். பசுமூத்திரம், நெய், பால் இவற்றை ஒருமிக்கச் சமயெடையாகச் சேர்த்து பக்குவம் செய்து, அந்த க்ருதத்தைப் பானம் செய்யவும், நஸ்யமிடவும், அப்யங்கம் பண்ணவும் உபயோகிப்பது நலம். கடுக்காய், மஞ்சள், மரமஞ்சள், உள்ளிப்பூண்டு, மிளகு, வசம்பு, வேப்பிலை இவற்றைச் செம்மறியாட்டு மூத்திரம் விட்டு ஆட்டி நஸ்யமாகவும், அஞ்ஜநமாகவும் பிரயோகிக்கலாம். (5) ஆடகப் பிரமாணம் வாற்கோதுமையைப் பக்குவம் செய்தெடுத்த அன்னமும், தண்ணீர் நிரம்பிய குடமும், மாம்ஸமும், குடையும், வஸ்திரமும், ஸுகந்தப் பூச்சும் பிரம்மரக்ஷஸ்ஸின் பூஜைக்கு ஏற்றவையாம். கருங்காலிப்பட்டையை இருபது பலம் அளவு சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் த்ரிகடுகம், த்ரிபலை, காயம், வசம்பு, ஜடாமாம்ஸி, கடுகு, வேப்பிலை, வெள்ளுள்ளி இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, ஏழு குடவமளவு நெய் கூட்டி, அதற்கு மூன்று மடங்கு பசுமூத்திரத்திற் பக்குவம் செய்யவும்; இது பானம் செய்வதற்கும், நஸ்யமிடுவதற்கும், அப்யங்கம் செய்வதற்கும் அனுகூலமானது. 28—39½.

இராக்ஷஸக்கிரஹசாந்திக்கான முறைகள் :—(1) இராக்ஷஸக் கிரஹத்திற்கு எள்ளுப்பிண்ணாக்கு, வெண்மையான புஷ்பம், மிச்ரான்னம், சமைத்த அல்லது சமைக்காத இறைச்சிகள், உதிரங் கலந்த சோளம் முதலிய தானியங்கள் ஆகியவை பலியிடுவதற்குரிய வஸ்துக்களாம். (2) புங்கு, காட்டுவாகை, முருங்கை, இவற்றின் பட்டை, வேர், புஷ்பம், காய் இவையும்; பில்வவேர், த்ரிகடு, காயம், வாலுழுவை, வெண்கடுகு, வெள்ளுள்ளி, நெல்லிக்கனி இவையும் செம்மறியாட்டின் சிறுநீருடன் கலந்து நஸ்யமாகவும் அஞ்ஜநமாகவும் இடப்படுமானால் இராக்ஷஸக்கிரஹமான அகதமாம். (3) புங்கு முதலிய அநேக சாக்குகளை

நான்கு மடங்கு பசுவின் மூத்திரத்திற் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்து நஸ்யமாகவும், அஞ்ஜநமாகவும், பானமாகவும் உபயோகித்தால் இரக்ஷோக்கிரஹம் நீங்கும். 40—43½.

பிசாசக்கிரஹ சாந்திக்குரிய முறைகள் :-(1) சீதுவென்னும் மதுவின் திப்பி, எள்ளுப்பிண்ணுக்கு, தயிர், முள்ளங்கி, உப்பு, நெய், பூதோதநம்,[1] வாற்கோதுமையாலான அன்னம் ஆகியவற்றைப் பிசாசங்களுக்கு பலியிடலாம். (2) மஞ்சள், மரமஞ்சள், மஞ்ஜிஷ்டி, ஜடாமாம்ஸி, இந்துப்பு, சுக்கு, காயம், ஞாழல், த்ரிகடு, வெள்ளுள்ளி, த்ரிபலை, வசம்பு, பாதிரி, வெண்குன்றிமணி, வாகைப்பூ இவற்றின் கஷாயத்தில், நாலிலொருபங்கு பசு மூத்திரம் சேர்த்து, அதில் பக்குவம் செய்த க்ருதத்தைப் பருகவும், அப்யங்கம்செய்யவும் உபயோகித்தால் பிசாசக்கிரஹபீடையில் குணமுண்டாம். (3) அதே சரக்குகளைச் செம்மறியாட்டு மூத்திரத்தில் ஆட்டி இப்பீடையில் அஞ்ஜநமாகவும், நஸ்யமாகவும் உபயோகிக்கலாம். 44—47.

தேவக்கிரஹாதிகளின் சாந்தியில் சில விலக்குகள் :—(1) தேவக்கிரஹங்கள், முனிவர்கள், கந்தர்வக் கிரஹங்கள் இவற்றிற்கு தீக்ஷ்ணவீர்யமுள்ள நஸ்யாதிகளைப் பிரயோகிக்கக் கூடாது; ஆனால் இவற்றில் மிருதுகுணமுள்ள க்ருதபாநாதிரூபமான ஔஷதங்களைப் பிரயோகிக்கவேண்டும். (2) பிசாசக்கிரஹங்களைத் தவிர்த்து மற்றக்கிரஹங்களுடைய நோக்கத்திற்குப் பிரதிகூலமாக எதையும் செய்யலாகாது; அவை மிகப் பிரபாவசாலிகளாகையால், சினங்கொண்டு வியாதிக்கிரஸ்தனையும் வைத்தியனையுங்கூட ஹதம் செய்து விடுவதுண்டு.—48, 49.

ஸகல கிரஹங்களுக்கும் பொதுவான உபாஸநாதிசாந்திகள் :—(1) பன்னிரண்டு புயங்களையுடைய ஈச்வரனையும்[2], எல்லா வியாதிகளையும் போக்கவல்ல ஆர்யாவலோகிதன் என்கிற நாதனையும்[3] பணிந்து ஜபம் செய்ய கிரஹங்கள் அனைத்தும் நீங்கும்; அங்ஙனமே உன்மாதமென்கிற பித்து, அபஸ்மாரம் இவையும், வேறு மனோவியாதியும் நிவ்ருத்தியாகும். (2) பிணியாளியைப் பரிசுத்தமாக இருக்கச் செய்து, மயூர மஹா மந்திரத்தையும் எப்பொழுதும் அவன் கேட்க ஓதிவரலாம். (3) மேலும் பூதங்களின் அதிபதியான சிவபெருமானையும், பிரமதகணங்களையும் பூஜிக்கலாம். அவர்களைப்பற்றிய ஸித்தமந்திரங்களை ஜபித்தும் எல்லாக்கிரஹங்களையும் போக்கிவிடலாம். (4) அல்லாமலும் அடுத்த இரண்டு அத்தியாயங்களில் ஹிதமென்று கூறப்படும் முறைகளையும், இவ்வத்தியாயத்தில் மொழியப்பட்டவைகளையும் யுக்தப்படி பிரயோகித்து கிரஹாதிகளை நிவாரணம் செய்யலாம். 50—53.

---

1. பூதோதநம் — "எள்ளு, நெற்பொரி, தயிர், வாற்கோதுமை, மஞ்சள் இவை கலந்த அன்னபிண்டத்துக்கு பூதோதநம் எனப் பெயர்."
2. ஆறுமுகக்கடவுள் எனக் கருத்து.
3. ஆர்யாவலோகிதன் — ஜிநதேவதை.

# ஆறும் அத்தியாயம்.

## உந்மாதப்பிரதிஷேதம்.

இனி உந்மாதப் பிரதிஷேதம்[1] என்னும் அத்தியாயம் மொழியப் படுகிறது :—

### உந்மாதநிதாநாதிகள்

**உந்மாதமும் அதன் பேதங்களும் :**—(1) தோஷங்கள் அவற்றின் ஸ்த்தாநங்களிலிருந்து வேறிடங்களிற் பரவி மனதுக்கு வெறியுண்டுபண்ணுமாகில் அது 'உந்மாதம்' எனப்படுகிறது. (2) அவ்வுந்மாதம் ஒவ்வொரு தோஷத்தால் தனித் தனியே ஒன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், மனோவேதனையினால் ஒன்றும், விஷப்பற்றுதலால் ஒன்றுமாக ஆறுவிதமாம்.—1.

**உந்மாதத்தின் பொதுக் காரணங்களும் ஸம்ப்ராப்தியும் :**— அஹிதமான அன்ன-பானங்களையும் பதனழிந்தும் அஸாத்மியமானதும் மலினமானதும் விஷமமாகவுமுள்ள உணவுகளையும் உபயோகிப்பதாலும், விஷமத்தன்மையினாலும், மனோபலம் மிகக் குறைவாயிருப்பதாலும், வேறு வியாதியின் வேகம் அதிகரிப்பதாலும், மனோ வேதனையினாலும், மனோ பிரமையினாலும், விஷங்கள்-உபவிஷங்கள் இவற்றாலும் ஸத்துவமிழந்தவனுக்கு[2] இருதயத்தில் தோஷங்கள் மிகக் கோளாறடைந்து, புத்தியைக் கலங்கச் செய்து, மனோவஹமான நாடிகளைக்[3] கெடுத்து 'உந்மாத ரோகத்தை' யுண்டுபண்ணுகின்றன ; அதனால் மதியும் பகுத்தறிவும் நினைவும் இழக்கப்பட்டுப் போக, இன்ப-துன்பங்களையுணர வல்லமையற்றவனாய், ஸாரதியை யிழந்த இரதம்போல் காரியத்திற்குறிப்பில்லாமலே தோன்றியவாறு ஏதேதோ செய்யமுயன்று அப்பிணியாளி குழப்பமுற்றுத் திரிவான். 2—5¾.

**வாதோந்மாதம் :**—அவற்றுள் வாததோஷத்தினாலான உந்மாதத்தில் உடல் இளைக்கும் ; பிரஸக்தி யின்றியே அழுகை, கோபித்தல், சிரித்தல், புன்னகை செய்தல், கூத்தாடுதல், பாடுதல், வாத்தியமிசைத்தல், வாயையும் மற்ற அவயவங்களையும் அசைத்தல், விரல்களால் சுடிக்கைப்போடுதல், ஆடம்பரமாகப் புல்லாங்குழல், வீணை முதலிய வாத்தியங்களின் தொனிகளைப் போல அடிக்கடியும் சப்தித்தல் ஆகியவை முக்கியக் குறிகள் ; மேலும் வாயிலிருந்து நுரையூறும் ; எப்பொழுதும் ஓடித்திரிவான் ; அதிகமாகப் பேசுவான் ; அலங்காரத்திற்கேற்காதன

1. உந்மாதம் — பித்து, ப்ரதிஷேதம் — அக்கோளாறைத் தடுப்பதும் தீர்ப்பதும் ; இவ்விஷயங்களை விவரிக்கும் அத்தியாயம்.

2 ஸத்துவம் — தேஹ-மனோ வலிமையும், ஸத்துவகுணமும்.

3. மனோவஹநாடி — மனதின் வேலைக்கு ஆதாரமான உணர்ச்சியென்னும் சக்தி யூடுருவும் நாடி.

வற்றை அணிவான்; வாஹனமல்லாதனவற்றில் ஏறிச் செல்ல முயலுவான்; தின்பண்டங்களில் பேராவலிருந்தும், அவை கிடைத்தால் வெறுப்பான்; கண்கள் உருண்டு சிவந்திருக்கும்; உணவு ஜீர்ணமானபின் வியாதி வேகம் அதிகரிக்கும். 6—9½.

பித்தோந்மாதம் :—பித்ததோஷத்தினுலான உந்மாதத்தில் விரட்டுதல், சினங்கொள்ளல், முஷ்டிபந்தம் செய்து ஓட்டாஞ் சில்லிகளை யெடுத்துக்கொண்டு ஓடுதல், குளிர்ந்த நிழலையும் தண்ணீரையும் மிக விரும்புதல், நிர்வாணமாதல், உடல் பசுமையாதல், போலியான அக்னிஜ்வாலை, நக்ஷத்திரங்கள், தீபம் இவை புலப்படுதல் ஆகியவை இலக்ஷணங்களாம்.—10, 11.

கபோந்மாதம் :—சிலேஷ்ம தோஷத்தினுலான உந்மாதத்தில் அரோசகமும், வாந்தியும் உண்டாம்; உணவிலும் பேசுவதிலும் விருப்பம் சொற்பமாகும்; ஸ்திரீயினிடம் விருப்ப மதிகரிக்கும்; ஏகாந்தமாயிருக்க விரும்புவான்; உமிழ்நீரும் நாசியிலிருந்து சளியும் பெருகும்; அருவருத்த நிலைமையும், சுசியாயிருப்பதில் வெறுப்பும், நித்திரையும், முகவீக்கமும் தோன்றும்; இரவிலும் புஜித்த பிறகும் வியாதி பலப்படும்.—12, 13.

ஸந்நிபாதோந்மாதம் :—ஸந்நிபாதத்தினுலான உந்மாதத்தில் நிதாநங்களும் இலக்ஷணங்களும் பூர்ணமாயிருக்கும்; இது மிகக் கொடிய வியாதி; இதற்கு சிகித்ஸை செய்வதிற் பயனில்லை.--14.

மனோவேதனையாலான உந்மாதம் :—பொருள், மனைவி முதலியவைகளை இழந்த கடுந் துன்பத்தினுல் பீடிக்கப் பட்டவனுக்கும் உந்மாத முண்டாகலாம்; அவன் உடல் வெளிறி, தீனத்தன்மையையும், அடிக்கடி மூர்ச்சையையும் அடைவான்; ஹாவென்று புலம்புவான்; இழந்த பொருட்களின் குணங்களைப் பெரிதும் பாராட்டுவான்; மனத் துயரத்தினுல் கிலேசமுற்று ஏதோ சிந்தித்தவாறு நித்திரை யின்றியே தவிப்பான். இது மனோவேதனையாலான உந்மாதமாகும்.—15, 16.

விஷஜோந்மாதம் :—விஷப்பற்றுதலாலான உந்மாதத்தில் முகம் கறுத்துப் போம்; தேஹகாந்தி மலினமடைந்து, உடல் வலிமையும் இந்திரியங்களின் வலிமையும் குன்றிவிடும்; உந்மாத வேகம் தணிந்து மற்றொரு முறை அவ்வேகம் அதிகரிப்பதற்கு இடையிலும் மனக்குழப்ப முற்று, கண்கள் சிவந்திருக்கும். அவ்வித வியாதி அஸாத்தியமாகும்.—17.

## உந்மாத சிகித்ஸை.

வாதாதிகளாலான உந்மாதங்களுக்குப் பொது சிகித்ஸை :—

(1) வாததோஷத்தினுலான உந்மாதத்தில் முதலில் ஸ்நேஹபானம்[1] செய்விக்க வேண்டும். வாதம் வெளியாகும் மார்க்கம்

1. பிறகு விவரிக்கப்படும் க்ருதாதி யோகங்களை யுபயோகித்தல்.

அடைபட்டிருந்தால் ஸ்நேஹபானத்திற்கு முன்பு ஸ்நேஹம் சேர்ந்த ஔஷதங்களைக் கொண்டு மிருதுவான சோதந சிகித்ஸையைச்[1] செய்யவேண்டும். (2) கபம், பித்தம் இத் தோஷங்களாலான உன்மாதங்களிலும் ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்வித்து, முதலில் வமநமும் பிறகு விரேசநமும் செய்விக்க வேண்டும். அப்பால் சிரோவஸ்தியும் சிரோ விரேசநமும் மூன்றுவித உன்மாதங்களிலும் செய்விக்க வேண்டும். அவ்வித சிகித்ஸைகளால் சரீரம் சுத்தமான பிறகு அப்பிணியாளியின் மனதும் தெளிவடைகிறது. (3) இவ்விதம் செய்தும் வியாதி தொடருமானால் தீக்ஷ்ணமான நஸ்யம், தீக்ஷ்ணாஞ்ஜனம் இவற்றைப் பிரயோகிப்பதோடு, களிப்பூட்டுதல்-நல்வார்த்தை சொல்லல்-பயமுறுத்தல்-அடித்தல்-மிரட்டல் இவ் வுபாயங்களையும், அப்யங்கம் செய்வித்தல்-பலவித லேபநங்களையும் பூசுதல்-தூபமிடுதல்-க்ருதபானம் செய்வித்தல் ஆகிய முறைகளையும் பிரயோகிக்கவும். இம் முறைகள் சோதநம் செய்து கொண்டு நிர்மலதேஹத்தைப் பெற்ற பிணியாளியின் மனதை இயற்கை நிலைமைக்குக் கொண்டு வருகின்றன. 18—21½.

ஹிங்க்வாதி க்ருதம் :—காயம், ஸௌவர்ச்ச லவணம், த்ரிகடு இவற்றை வகைக்கு இரண்டு பலம் சேர்த்து, ஓர் ஆடகப் பிரமாணம் நெய்யைக் கோமூத்திரத்திற் பக்குவம் செய்யவும். இந்த க்ருதமானது உன்மாதம், பூதாவேசம், அபஸ்மாரம் இவற்றைப் போக்குவதிற் சிறந்தது.—22½.

ப்ராஹ்மீ க்ருதம் :—வல்லாரையின் ஸ்வரஸம் இரண்டு பிரஸ்த்தம் கிரஹித்து, அதில் ஒரு பிரஸ்த்தம் க்ருதம் சேர்த்து, அதில் த்ரிகடு, கருஞ்சிவதை, வெண்சிவதை, வாளம், சங்கங்குப்பி, சரக்கொன்றை, பொன்னாங்கொட்டை, வாய்விடங்கம் இவற்றை வகைக்குக் கால் பலமெடுத்து கல்கமாகக் கூட்டிப் பக்குவம் செய்யவும். இதை முதல் நாள் ஒரு பலமாகவும், இரண்டாம் நாள் இரண்டு பலமும், மூன்றும் நாள் மூன்று பலமும், நான்காம் நாள் நாலு பலமுமாக உட்கொள்ளவும். கடைசியாகக் கொடுக்கக் கூடிய இதன் உத்தமமாத்திரை நான்கு பலம். "ப்ராஹ்மீ க்ருதம்" எனப்படுகிற இச் சிறந்த ஔஷதம் உன்மாதம், குஷ்டம், அபஸ்மாரம் இவற்றைப் பரிஹரிக்கும்; மலட்டுத் தனத்தை நீக்கிப் புத்திரஸந்தான மளிக்கும்; வாக்கையும், குரலையும், புத்தியையும் விருத்தி செய்யும். 23—25½.

கல்யாணக க்ருதம் : த்ரிபலை, தும்மட்டிக்காய், ஏலம், தேவதாருப்பட்டை, சிற்றேலம், நன்னாரி, கறுப்பு நன்னாரி, மஞ்சள், மரமஞ்சள், சிறுமல்லி, பெருமல்லி, ஞாழல், புலியுகிர் என்னும் வாசனைச்சரக்கு, கண்டங்கத்திரி, கோஷ்டம், மஞ்ஜிஷ்டி, நாககேஸரம், மாதுளை, வாய்விடங்கம், தாளிசப்பத்திரி, இலவங்கப்பத்

1. வமந-விரேசந-வஸ்திகள் முதலிய சிகித்ஸா முறைகள்.

திரி, சிற்றேலம், முல்லைமொக்கு, நெய்தல், நேபாளம், பத்மகம், வெட்டிவேர் இவற்றை வகைக்குக் கால்பலம் சேர்த்து, ஒருபிரஸ்த்தம் நெய் பக்குவம் செய்யவும். பூதாவேசம், கிரஹாவேசம், உந்மாதம், காஸம், அபஸ்மாரம், பாண்டு, சொறி, விஷதோஷம், சோகை, மூர்ச்சை, மேஹம், கரவிஷம், ஜ்வரம், சுக்ரமின்மை, மலட்டுத்தனம், தைவக் கோளாறுலான மனோவிகாரம், புத்தி மந்தப்படுதல், தெற்றுவாய், ஞாபகக்குறைவு, அக்னிமாந்தியம் இவ்வியாதிகளில் உபயோசமானது. மேலும் "கல்யாணகம்" என்கிற இந்த க்ருதம் பலத்தையும், ஆயுளையும், தேஹகாந்தியையும், அழகையும், விருத்தி செய்யும்; புஷ்டியைத் தரும்; பும்ஸவந ஸம்ஸ்காரங்களிலும் வெகு சிலாக்கியமானது. 26—31.

மஹாகல்யாணக க்ருதம் :—முன் கல்யாணக க்ருதத்திற்குக் கூறிய நன்னாரி முதற் கொண்டுள்ள இருபத்தொரு சரக்குகளின் கஷாயத்தில் க்ருதமும் நாலு மடங்கு பசுவின் பாலும் கூட்டி, வீரா, மேதா, மஹாமேதா, காகோலி, காஞ்சொறி, வேலிப்பருத்தி, முல்லை இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும்; இது 'மஹாகல்யாணக க்ருதம்' எனப்படும். ப்ருஹ்மணம், ஸந்நிபாதஹரம் என்கிற குணத்திற் சிறந்தது; கல்யாணக க்ருதத்திலும் மற்ற குணங்களிலும் மேலானது.—32, 33½.

மஹாபைசாக க்ருதம் :—ஜடாமாம்ஸி, கடுக்காய், ஸுகந்த ஜடாமாம்ஸி, காஞ்சொறி, வசம்பு, கழற்சிக்காய், அகிற்கட்டை, காகோலி, கச்சோரம், கடுகரோஹிணி, கடுக்காய், கடற்பாலை, கொத்தமல்லி விதை, சதகுப்பி, அரக்கு, தண்ணீர் விட்டான், தான்றிக்காய், ஈச்வரமூலி, ஸர்ப்பாக்ஷி, பெருவாகை, தேள் கொடுக்குச் செடி, பெருமல்லி இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதம் சாதுர்த்திக ஜ்வரம், உந்மாதம், கிரஹதோஷம், அபஸ்மாரம் இவற்றைப் போக்கும். ஞாபகசக்தியையும் புத்தியையும் விருத்திசெய்வதிற் சிறந்தது; பாலர்களுடைய தேஹ போஷணைக்கும் ஏற்றது. 'மஹாபைசாகம்' என்று இதற்குப் பெயர்; இது குணத்தில் அமுதத்திற் கொப்பானது. 34—37½.

பிராஹ்ம்யாதி வர்த்தி :—வல்லாரை, வாய்விடங்கம், த்ரிகடு, காயம், ஜடாமாம்ஸி, வாலுழுவை, முரம், சிற்றரத்தை, நீர்த்திப்பிலி, உள்ளிப்பூண்டு, அதிவிடயம், துளஸி, வசம்பு, முடக்கற்றான், நேபாளம், அறுகு, கடுக்காய், காசுக்கட்டி இவற்றைப் பொடித்து, யானையின் சிறுநீர் விட்டு அரைத்து வர்த்திசெய்து, நிழலிலுலர்த்தி, நஸ்யமாகவும், அஞ்ஜநமாகவும், லேபநமாகவும், தூபமாகவும் உபயோகிக்க உந்மாதம் தீரும். 38—40.

வாதோந்மாதத்தில் நஸ்யாதிசிகித்ஸாமுறைகள் :— (1) மேலும் ஸ்நேஹபதார்த்தங்களோடும் கடுகோடும்கூடிய பலவகை

அவபீடநஸ்யங்களும்,[1] கடுகெண்ணெயினால் அப்யங்கமும், கடுகுப்பொடியை நாசியினுள் த்மாந முறையில்[2] ஊதுவதும் நலம். (2) அல்லாமலும் ஸூத்திரஸ்த்தானத்திற்கூறிய திக்ஷ்ணதூம முறையை காயத்துடன் சேர்த்தும் பிரயோகிக்கலாம். (3) நரி, முள்ளம்பன்றி, கோட்டான், விருஷபம், செம்மறியாடு இவற்றின் சிறுநீர், பித்தம், மலம், உரோமம், நகம், சர்மம் ஆகியவற்றைக் கொண்டு தூபம், அஞ்ஜனம், அப்யங்கம், பூச்சு, ஸேசநம் இவைகளைச் செய்யலாம். 41—43.

வாத-கபோந்மாதத்தில் தூபநம் :— வாத-கப ஸம்பந்தமான உந்மாதத்தில் நாய், பசு, மத்ஸ்யம் இவற்றின் ஒருவித துர்நாற்றம் வீசும் தூமங்களைக்கொண்டே பெரும்பாலும் எப்பொழுதும் தூபமிடுவது நலம்.—43¾.

பித்தோந்மாத சிகித்ஸைகள் :—பித்த ஸம்பந்தமான உந்மாதத்தில் (1) திக்தக க்ருதமும்,[3] ஜீவநீய க்ருதமும்,[4] மிச்ரக ஸ்நேஹமும்[5] உபயோகமானவை. (2) குளிர்ச்சியான அன்ன-பானங்களும், இனிப்பாகவும் இலகுவாகவுமுள்ள உணவுமுதலியவைகளும் ஏற்றவை. (3) விராவ்யதவிதி அத்தியாயத்திற்கூறியுள்ளபடி விரையைபாவது திறலாம். (4) செழிக்கச் செய்யக்கூடிய மாம்ஸத்தைத் திருப்தி யுண்டாகுமாறு புஜிக்கச் செய்து, ரோகியை அதிக காற்றோட்டமில்லாத விடத்திலாவது படுக்கச் செய்யலாம். இச் சிகித்ஸைகளால் புத்திப் பிரமையினின்றும் பிணியாளி விடுபடுகிறான். (5) வற்றிப்போன கிணற்றில் இறக்கிப் போட்டு பசியினால் வருந்தச் செய்யலாம். (6) தர்மார்த்தங்களடங்கிய வார்த்தைகளால் நண்பர்களாவது அவனுக்குத் தேறுதல் கூறலாம். (7) அன்பர்களுடைய விநாசத்தையாவது கூறித் திடுக்கிடச் செய்யலாம். (8) அற்புதக் காட்சிகளையாவது காட்டலாம். (9) கடுகெண்ணெயைப் பூசி உடம்பைக் கட்டி வெயிலில் மல்லாக்கப் படுக்கப்போடலாம். (10) காஞ்சொறியினாலாவது, காய்ச்சிய உலோகம்-தைலம்-ஜலம் இவற்றாலாவது பரிசிக்கலாம். (11) கசையடி கொடுத்து, கயிற்றாற் கட்டி, பள்ளத்திலாவது போட்டு வைக்கலாம். (12) அல்லது ஆயுதங்களாவது கற்களாவது இல்லாததும், நிர்ஜனமானதும், இருளடைந்ததுமான ஓர் அறையில் விட்டிருக்கலாம். (13) பற்களைப் பிடுங்கிய அடக்கி வசப்படுத்திய சிங்கத்தாலாவது, ஸர்ப்பத்தாலாவது,

1. அவபீடநஸ்யம் — ஸூத்திரஸ்த்தானம் பார்க்கவும்
2. த்மாநநஸ்யம் - ஸூத்திரஸ்த்தானம் பார்க்க
3. திக்தக க்ருதம்—குஷ்ட சிகித்ஸை பார்க்க.
4. ஜீவநீய க்ருதம் — ஜீவநீயகணத்தினாலான க்ருதம்
5. மிச்ரக ஸ்நேஹம்—குல்ம சிகித்ஸை பார்க்க.

*யானையாலாவது பயப் படுத்தலாம்.* (14) *அல்லது இராஜபடர்கள் இவனை வெளியில் அழைத்துப் போய், நன்ருகக் கட்டி, அரசனுடைய கட்டளையைப் பெற்று வதை செய்து விடுவதாகப் பயமுறுத்தலாம் ; சரீரத்தைப்பற்றிய துக்கம், பயம் இவைகளைவிட பிராணபயம் மிகக் கடுமையானதாகையால், நாநாவிதமாகச் சிதறுண்ட உன்மாத ரோகியின் மனதானது அப்பயத்திஞல் அமைதியடைகிறது. நற்பயனளிப்பவையாகக் கண்டுள்ள இம் முறைகளைக் கால-தேசாதிகளை அனுஸரித்துத் தகுந்தவாறு பிரயோகிக்க வேண்டும்.* $44-52\frac{1}{2}$.

காமக் குரோதாதிகளாலான உன்மாதத்திற்குப் பரிஹாரங்கள் :—(1) *பிரியமான பொருளை யிழந்ததால் மனம் பாதிக்கப் பட்டவனுக்கு இழந்த வஸ்துவுக்குச் சமானமானதைக் கிடைக்கச் செயதும், நல்வார்த்தை கூறியும் மனதைத் தணியச் செய்யவேண்டும்.* (2) *காமம், சோகம், பயம், கோபம், பெருமகிழ்ச்சி, பொருமை, லோபித்தனம் ஆகியவற்ருலான உன்மாதங்களை அதற்கு எதிரிடையான குணமுள்ள காரியங்களால்*[1] *சமநம் செய்யலாம்.*—53, $54\frac{1}{2}$.

பூதாதிகளாலான உன்மாதத்திற்குப் பரிஹாரங்கள் :—*பூதக்கிரஹங்களின் ஸம்பந்தமாக முற்கூறிய*[2] *குறிகளைக் காட்டிலும் அதிக கடுமையான குறிகள் உன்மாதத்தில் தோன்றிஞல் அது பூதங்களாலான உன்மாதமென்றறிந்து, பூதப்பிரதிஷேதாத்யாயத்திற் கூறிய ஔஷதங்களை அதிற் பிரயோகிக்கலாம். மேலும் இறைச்சி, வாற்கோதுமையன்னம், மாப்பணியாரம், ஸ்நிக்த்தமாகவும் இனிப்பாகவுமுள்ள உணவு, உதிரம் கலந்த அரிசி, பக்குவம்செய்தும் செய்யாததுமான பலவித மாம்ஸங்கள், ஸுரை-மைரேயம் முதலிய மதுவகைகள், குருக்கத்தி-இருவாட்சி-மருதோன்றி இவற்றின் புஷ்பங்கள் இவைகளைக்கொண்டு நற்சந்திகளிலும், கோமயம் வீழ்ந்துள்ள விடங்களிலும் நதிகள் சேருமிடங்களிலும் பலியிடலாம்.* 55—58.

உன்மாதத்திற்கு ஆளாகாதவர்கள் :—*மாம்ஸ போஜனம் மதுபானம் இவற்றைப் பரிஹரித்தவனுகவும், ஹிதமான உணவையுண்பவனுகவும், நியமந்தவருதவனுகவும்*[3], *நிர்மலமாகவும் இருக்*

---

1. *காமவிகாரத்திற்கு வைராக்கியமும், சோகத்திற்கு மகிழ்ச்சியும், பயத்திற்கு தைரியமும், கோபத்திற்குச் சாந்தியும், பெருமகிழ்ச்சிக்குச் சோகமும், பொருமைக்குப் பொறுமையும், லோபித்தனத்துக்கு உதாரத் தன்மையும் எதிரிடையானவையாம்.*

2. *பூதவிஞ்ஞாநாத்தியாயம்.*

3. *திநசர்யாதி அத்தியாயங்களிற்கூறிய நியமங்கள்.*

கிற தன்மையுள்ள மனிதனிடம் நிஜோந்மாதங்களாவது[1] ஆகந்து கோந்மாதங்களாவது[2] பற்றுவதில்லை.—59.

உந்மாத நிவ்ருத்தி லக்ஷணம்:—இந்த்ரிய விஷயங்களுக்கும்[3], புத்தி-ஆத்மா மனம் இவற்றிற்கும் தெளிவுண்டாதல், தாதுக்கள் இயற்கை நிலைமை யடைதல் ஆகியவை உந்மாதம் பற்றறவே நிவ்ருத்தியானதற்கான அறிகுறிகளாம்.—60.

---

## ஏழாம் அத்தியாயம்.

## அபஸ்மாரப்பிரதிஷேதம்.

இனி அபஸ்மாரப் பிரதிஷேதம்[4] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

### அபஸ்மார நிதானம்.

**அபஸ்மாரத்தின் ஸம்ப்ராப்தியும் பொதுலக்ஷணமும் :**—(1) ஸந்திகளும், ஸத்துவமென்கிற மனோ நிலைமையும் தடுமாற்றமடைவதால் மனது தாக்கப்பட்டு மிகக் கோளாறடைந்து ஸ்ம்ருதியென்னும் நினைவு இழக்கப்பட்டு "அபஸ்மாரம்" உண்டாகிறது. (2) மனக்கவலை, துயரம், பயம் முதலிய காரணங்களால் உந்மாதத்திற் பிரகோபமடைவது போல சிரஸ்ஸையும் தேஹத்தையும் பற்றிய தோஷங்கள் கோளாறடைய, அத் தோஷங்களால் மனதின் ஸத்துவநிலைமை தாக்கப்பட்டு, இருதயமும் ஸம்ஞாவஹ ஸ்ரோதஸ்ஸுகளென்கிற உணர்ச்சி நாடிகளும் அவற்றால் சூழப்படவே, பிணியாளி முற்றிலும் அறிவிழந்து இருளடைந்த நிலைமையைப்பெற்று, பீபத்ஸையாகப் பற்களைக் கடிப்பான் ; நுரை நுரையாக வாந்தி செய்வான் ; கை-கால்களை வலித்து உதைத்துக்கொள்வான் ; போலியுருவங்களைப் பார்ப்பான் ; தட்டுத் தடுமாறி பூமியில் வீழ்வான் ; கண்களையும் புருவங்களையும் வக்ரித்து நெரித்துப் பார்ப்பான். பிரகோபித்த தோஷங்களின் வேகம் நின்றதும் தெளிவு பெறுவான். மீண்டும் சில நாட்களில் இதே விதமாகத் துன்புறுவான். இவ்வபஸ்மாரம் வாதாதி தோஷங்களால் தனித்தனியே ஒவ்வொரு விதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும் ஆக நான்கு விதமாம். 1—5.

---

1. நிஜோந்மாதம் — வாதாதிதோஷங்களாலான உந்மாதங்கள்.
2. ஆகந்துகோந்மாதம் — பூதாதிகளால் காணும் உந்மாதங்கள்.
3. இந்த்ரிய விஷயங்கள் — தர்சநம், ச்ரவணம், ஸ்பர்சநம் முதலிய விஷயங்கள்.
4. நினைவு தடுமாற்றத்தை முக்கியமாகக் கொண்ட அபஸ்மார வியாதிக்குப் பரிஹார முறைகளை விவரிக்கும் அத்தியாயம்.

அபஸ்மார பூர்வரூபம் :—இவ்வியாதி உண்டாகுமுன் அதிகமாக இருதயம் படபடத்துத் துடிக்கும்; கண் பஞ்சடைந்து உலகம் சூன்யமாயிருப்பதுபோலத் தோன்றும்; தலை சுற்றும்; பிறகு பார்வை இருளடைதல், ஏதோ சிந்தையுதித்தல், புருவத்தை நெரித்தல், கண்கோணுதல், காதில் சப்தம்கேளாமை, வியர்த்தல், சொள்ளும் சளியும் பெருகுதல், அஜீர்ணம், அரோசகம், மூர்ச்சை, வயிற்றில் இரைத்தல், பலம் க்ஷீணித்தல், நித்திரையின்மை, உடல்வேதனை, நாவறட்சி, பாடுவதுபோலவும் ஆடுவதுபோலவும், மதுபான-தைலபானங்கள் செய்வதாகவும் கனவுகாணல், மது-தைலங்களைப்போன்று சிறுநீர் இறங்குதல் ஆகியவையாம். 6—8.

வாதாதி நான்கு அபஸ்மாரங்களின் ப்ரத்யேகலக்ஷணங்கள் :—அவற்றுள் (1) வாததோஷத்தினாலான அபஸ்மாரத்தில் பிணியாளி துடைநடுக்கங்கொண்டு, தட்டுத் தடுமாறி வீழ்ந்த வண்ணம் அடிக்கடியும் ஸ்மரணையிழந்தும் நினைவு பெறுவதுமாயிருப்பான்; பிறகு கண்விழி பிதுங்க தீனஸ்வரமாக அழுதவண்ணம் மூச்சுவிடுவான்; நுரையைக் கக்குவான்; நடுங்குவான்; தலையை இடித்துக்கொள்வான்; கழுத்தை விம்மிக்கொண்டு பற்களைக் கடிப்பான்; விறைந்து வளைந்துள்ள விரல்களுடன் அவயவங்களைக் கோணக்கோண அடித்துக்கொள்வான்; கண்கள், சர்மம், நகங்கள், முகம் இவை ரூக்ஷமாகவும், கறுவலாய் அல்லது சிவப்பாகவும் ஆகும்; பார்க்கப்படுவதெல்லாம் கருநிறமாகத் தோற்றும்; உருவங்கள் நிலைபற்றும், குரூரமாகவும், ஒழுங்கீனமாகவும், விகாரமடைந்த முசமுள்ளவையாகவும் தென்படும். (2) பித்ததோஷத்தாலான அபஸ்மாரத்தில் முன்போலவே அடிக்கொருமுறை ஞாபகமிழந்தும் ஞாபகம் பெற்றும் வருந்துவான்; வாயிலிருந்து வரும் நுரையும், கண்களும், முகமும், சர்மமும் பசுநிறங்கொண்டிருக்கும்; பூமியைக் கைகளால் அடிப்பான்; பயங்கரமாகவும் மிகப் பிரகாசமாகவும் சினங்கொண்டுமுள்ள உருவங்கள் தோன்றும்; நாவறட்சியுண்டாம். (3) கபதோஷத்தாலான அபஸ்மாரத்தில் ஞாபகத்தை மெதுவாக இழந்து, மெதுவாகவே மீண்டும் பெறுவான்; சரீரசேஷ்டைகளெல்லாம் சொற்பமாகக் காணும்; சொள் விசேஷமாகப் பெருகும்; நேத்திரம், நகம், முகம் இவை மிக்க வெளுக்கும்; உருவங்களெல்லாம் வெண்மையாகத் தோற்றும். (4) ஸந்நிபாதாபஸ்மாரத்தில் மூன்று அபஸ்மாரங்களுடைய குறிகள் யாவும் சேர்ந்து காணும்; ஆகவே அது அஸாத்தியமான வியாதி. 9—14½.

## அபஸ்மார சிகித்ஸை.

அபஸ்மாரத்தில் பொதுவான சிகித்ஸாகிரமங்கள் :—அபஸ்மாரத்தில் தோஷங்களால் சூழப்பெற்ற புத்தி-மனது-இருதயம்

முதலியவற்றின் ஸ்ரோதஸ்ஸுகளை தீக்ஷ்ணகுணமுள்ள வமநாதி சிகித்ஸைகளால் தூண்டி முதலில் தெளிவுறச் செய்யவேண்டும். அவற்றுள்: (1) வாதாபஸ்மாரத்தைப் பெரும்பாலும் வஸ்தி ஸம்பந்தமான சிகித்ஸைகளாலும், (2) பித்தாபஸ்மாரத்தை அஞ்ஜனமே விரேசநங்களாலும், (3) ச்லேஷ்மாபஸ்மாரத்தைப் பெரும்பாலும் வமநசிகித்ஸைகளாலும் உபசரிக்க வேண்டும். எல்லா வழிகளாலும் சோதந சிகித்ஸைகளைச் செய்து, நன்றாகத் தேற்றப்பெற்ற பிறகு, அபஸ்மாரம் முற்றிலும் தீருவதற்கு அவசியமான சமநமுறைகள் இனி விவரிக்கப்படுகின்றன. 15-17½.

லகு பஞ்ச-கவ்ய க்ருதம் :—பசுஞ்சாணத்தின் சாறு, பசுவின் பால், பசுவின் தயிர், பசுமூத்திரம் இவற்றில் பசுவின் நெய் சேர்த்துக்[1] காய்ச்சி, பானம் செய்ய அபஸ்மாரம், ஜ்வரம், உந்மாதம், காமாலை ஆகியவை தீரும்.—18½.

மஹா பஞ்ச-கவ்ய க்ருதம் :—இருவகையான பஞ்சமூலங்கள்,[2] த்ரிபலை, மஞ்சள், மரமஞ்சள், வெட்பாலைப் பட்டை, ஏழிலம்பாலை, நாயுருவி, கறுப்புச்சாறடை, கடுகரோகிணி, கொன்றை, தாமரைக் கிழங்கு, ஜடாமாம்ஸி, ஞாழல்வேர், காஞ்சொறி இவற்றை வகைக்கு இரண்டு பலம் வீதம் ஒரு த்ரோணம் ஜலத்திற் சேர்த்து, அதை நான்கில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி, கண்டுபாரங்கி, வட்டத்திருப்பி, துவரை, சிவதை, நேபாளம், த்ரிகடு, காவட்டம் புல், பெருங்குரும்பை, சுக்குநாரிப் புல், நிலவேம்பு, கடுக்காய், நன்னாரி, வெள்ளை நன்னாரி, சித்திரமூலம், நீர்வஞ்சி ஆகிய சரக்குகளை வகைக்குக் கால் பலம் அளவு கல்கமாகச் சேர்த்து, முற்கூறிய கோவின் சாணச்சாறு முதலிய நான்கு திரவ்யங்களையும் கூட்டி, ஒரு ப்ரஸ்த்தம் பசுவின் நெய்யை அதில் ஊற்றிக் காய்ச்சவும். இது "மஹாபஞ்ச-கவ்ய க்ருதம்" எனப்படும். இது ஜ்வரம், அபஸ்மாரம், உதரரோகம், பகந்தரம் இவைகளைத் தீர்ப்பதிற் சிறந்தது; மேலும் சோபை, அர்சஸ், காமாலை, பாண்டு, குல்மம், காஸம், க்ரஹதோஷங்கள் ஆகியவற்றையும் பரிஹரிக்கும். 19—23½.

ப்ராஹ்ம்யாதி க்ருதம் :—வல்லாரையின் ஸ்வரஸம், வசம்பு, கோஷ்டம், சங்கங்குப்பி இவற்றின் கஷாயத்திற் புராண க்ருதம் என்கிற பழகிய நெய்யைப் பக்குவம் செய்துகொள்ளவும்; இதற்கு மேத்யமென்கிற[3] குணமுண்டு; ஆகவே உந்மாதம், அசுபங்கள், அபஸ்மாரம் ஆகிய ரோகங்களைத் தீர்க்கவல்லது.—24½.

ஜீவநீய யமக ஸ்நேஹம் :—ஒரு ப்ரஸ்த்தம் தைலத்தையும், அவ்வளவு கிருதத்தையும் ஒவ்வொரு பலம் ஜீவநீயகணச் சரக்கு

1. இவ்வைந்துக்கும் "பஞ்ச-கவ்யம்" எனப் பெயர்.
2. லகு பஞ்சமூலமும், மஹா பஞ்சமூலமும்.
3. மேத்யம்—திறமையான புத்தியை விருத்தி செய்யும் தன்மை.

களின் கஷாயத்திலும், ஒரு திரோணம் பாலிலும் காய்ச்சி யுப யோகிக்க அபஸ்மாரவியாதி தீரும்.—25½.

**காச்மர்யாதி க்ருதம் :**—குமிழம்பட்டைக் கஷாயம் எட்டு பிரஸ்த்தம், பாலும் கருப்பஞ்சாறும் ஒவ்வொரு ஆடகம், ஜீவ நீயகணச் சரக்குகள் வகைக்குக் கால் பலம்;[1] இவற்றைக் கூட்டி, இதில் ஒரு பிரஸ்த்தம் நெய் பக்குவம் செய்யவும்; இதனுல் வாதாபஸ்மாரமும், பித்தாபஸ்மாரமும் எளிதில் தீரும்.—26, 27.

**காசாதிக்ஷீரம் :**—ஞாழல், நிலப்பனங்கிழங்கு, கரும்பு, தர்ப் பம் இவற்றின் கஷாயத்திற் காய்ச்சி யெடுத்த பால் காச்மர்யாதி க்ருதத்திற்குக் கூறிய குணங்களையே செய்யக்கூடியது.—27½.

**கூஷ்மாண்ட க்ருதம் :**—ஒரு பங்கு க்ருதத்தைப் பதி னெட்டு பங்கு கூஷ்மாண்டத்தின் ஸ்வரஸத்திற் சேர்த்துக் காய்ச்சி, அதிமதுரத்தைக் கல்கமாகச் சேர்த்துப் பக்குவம் செய் யவும்; இந்த க்ருதம் அபஸ்மாரத்தைப் போக்கும்; புத்தி, வாக்கு, குரல் இவற்றையும் விருத்தி செய்யும்.—28½.

**அபஸ்மாரத்திற்கு உபயோகமான நஸ்யமுறைகள் :**—(1) கபில நிறமான பசுக்களின் பித்தம் அபஸ்மாரத்தில் நஸ்யமாகப் பிரயோகிக்க மிக்க உபயோகமானது. (2) நாய், நரி, பூனை, சிங்கம் முதலிய விலங்குகளின் பித்தமும் நஸ்யத்திற்குச் சிறந்ததே. (3) உடும்பு, கீரிப்பிள்ளை, யானை, ரிஷபம், காடி, பசு இவற்றின் பித்தங்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த தைலம் நஸ்யமிடுவ தற்கும், அப்யங்கம் செய்வதற்கும் சிலாக்கியமாம். (4) த்ரிபலை, த்ரிகடு, அரசம்பட்டை, யவக்ஷாரம், நாய்த் துளஸி, கருஞ்சிவதை, நாயுருவி விதை, புங்கம் விதை இவற்றின் சூர்ணத்தையாவது, இச்சரக்குகளைச் சேர்த்து, செம்மறியாட்டு மூத்திரத்தில் பக்கு வம் செய்த தைலத்தையாவது நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். 29—32.

**அபஸ்மாரத்திற்கான தூமபான முறை :**—கீரிப்பிள்ளை, கோட் டான், பூனை, கழுகு, கிருமிகள், பாம்புகள், காக்கை இவற்றின் மூக்குகளையும், இறகுகளையும், மலங்களையும் சுட்டு, அப் புகை யையும் தூமபான முறைப்படி யுபயோகிக்கலாம்.—33.

**அபஸ்மாரத்தில் தைல-லசுநாதி முறைகள் :**—(1) வெள்ளுள் ளியையும் அதைச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தையுமாவது, (2) தண்ணீர்விட்டான் கிழங்கையும் பாலையுமாவது, (3) வல்லாரை ரஸத்தையாவது, (4) கோஷ்டத்தின் இரஸத்தையாவது, (5) தேனிற் கலந்த வசம்பையாவது உபயோகிக்கலாம்.—34.

**அபஸ்மாரத்தின் பிராபல்யமும் அதில் இரஸாயனப்பிர யோகமும் :**— சரீரத்தைப்பற்றிய வாதாதிதோஷங்களும் மன

1. ஜீவநீயகணச் சரக்குகளே இதில் கல்கமாம்.

தைப்பற்றிய தமோகுணம் முதலிய தோஷங்களும் யாவும் ஒரு மிக்கப் பிரகோபமடைந்து அபஸ்மாரம் உண்டாவதாலும், இவ் வியாதி மஹாமர்மத்தைப்[1] பற்றியதாகையாலும் எளிதில் சிகித்ஸிக்கக் கூடியதல்ல; ஆகவே இரஸாயன முறைகளைக் கொண்டு இதற்குச் சிகித்ஸை செய்யவேண்டும்.—35, 35½.

**அபஸ்மாரரோகியைத் தண்ணீர் முதலியவற்றிலிருந்து பரிபாலித்தல் :—** (1) அபஸ்மாரரோகத்தினல் பிடிக்கப்படுபவனை, அவனுக்கு மிகத் தீங்கு விளைவிப்பவையான அக்னி, தண்ணீர் முதலியவற்றினிடமிருந்து ஜாக்கிரதையாகக் காத்து வரவேண்டும். (2) மேலும் மனக்கோளாறு தணிந்து சுயநிலைமை பெற்றிருக்கையில், அபஸ்மார ஸமயத்தில் செய்த விகாரச் செயல்களையெல்லாம் அவனிடம் கூறக்கூடாது. (3) கோளாறுகள் தணிந்ததும் மிகக் கிலேசமுற்ற அவனது மனதை இனிய விஷயங்களால் தென்புறச் செய்யவேண்டும்.—36, 37.

---

## எட்டாம் அத்தியாயம்.

## வர்த்மரோக விஞ்ஞாநம்.

இனி வர்த்மரோகவிஞ்ஞாநம் என்னும்[2] அத்தியாயம் விவரிக்கப்படும் :—

**நேத்திரரோக ஸாமாந்ய ஸம்ப்ராப்தி :—**ஸர்வ ரோகநிதாநத்தில் மொழியப்பெற்றவையும்,[3] முக்கியமாக நேத்திரத்திற்குப் பிரதிகூலம் செய்பவையுமாயுள்ள அஹிதமான ஆஹாராதிகளால் தோஷங்கள் பிரகோபித்து, பெரும்பாலும் பித்தத்தை அநுஸரித்து ஸிரைகளின் மூலமாய் மேல்நோக்கிப் பரவி, நேத்திராவயவத்தைப் பற்றிக்கொண்டு, இரெப்பையிலாவது, ஸந்தியிலாவது,[4] வெண்மண்டலத்திலாவது, கருவிழியிலாவது, கருவிழியின் மத்தியிலாவது, கண்ணின் எல்லாப்பாகத்திலுமாவது வியாதிகளை யுண்டுபண்ணுகின்றன.—1, 2¼.

---

1. மஹாமர்மம் — இதனல் சிரஸ்விலடங்கிய மிகப் பிரதான மர்மமான மஸ்திஷ்கம் என்கிற மூளை குறிக்கப்படுகிறது. (இதரவிடங்களில் இருதயத்துக்கும் 'மஹாமர்மம்' என்கிற பெயருண்டு.)

2. 'வர்த்மா' என்பது இரெப்பை; கண்ணின் இரெப்பையைப் பற்றியுண்டாகும் வியாதிகளை அறிவிக்கும் அத்தியாயம்.

3. நிதாநஸ்த்தாநத்தின் முதல் அத்தியாயம். அதில் அஹிதாஹார விஹாராதிகள் ஆரம்பத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.

4. இரெப்பையும் வெண் மண்டலமுமாவது, வெண் மடலும் கருவிழியுமாவது, கருவிழியும் திருஷ்டியுமாவது சேரும் நேத்திரப்பிரதேசங்கள் ஸந்திகள் (நேத்திரஸந்திகள்) ஆம்.

**க்ருச்சிரோந்மீலம்** :—அவற்றுள் வர்த்மாவென்கிற இரெப்பைக்குச் சம்பந்தமான ஸிரைகளில் வாததோஷம் வியாபித்து, தூங்கி யெழுந்திருக்கையில் இரெப்பைகளை எளிதில் திறக்க முடியாமற் செய்கிறது. அதில் வலியும் விசேஷம்; கண்ணில் மண் நிரம்பியதுபோல் திறக்கக் கஷ்டமாகவும் இருக்கும்; கண்ணீரும் வடியும்; கண்ணைப் பிசைந்து கொண்டால் வேதனை முதலியது தணிவடையும்; இவ்வியாதியை 'க்ருச்சிரோந்மீலம்' என்று[1] வழங்குவர்.—3, 4.

**நிமேஷம்** :—வாததோஷம் இரெப்பைகளை அடிக்கடியும் அதிசமாய் அசைவிக்கும்; ஆனால் இதில் வலியிராது; இந்த வியாதி 'நிமேஷம்' எனப்படும்.[2]—$4\frac{3}{4}$.

**வாதஹத வர்த்மா** :—எந்த வியாதியில் இரெப்பையானது ஸந்திபாகத்துக் கட்டு விடப்பட்டதாய் சற்றுக் குறைவாக மூடிக் கொள்ளுகிறதோ, அசைவற்றதாகவும் ஆகிறதோ அந்த வியாதியை 'வாதாஹதம்' எனக் கூறுவர்.—5, $5\frac{1}{2}$.

**கும்பிகா** :—இரெப்பையின் உட்புறத்தில் கும்பிகமென்னும் நீர்ப்பூண்டின்[3] வித்துக்களைப்போல அநேகம் கருநிறமான சிறு கொப்புளங்கள் பித்த தோஷக் கோளாறுல் உண்டாகும்; அவை உடைந்தால் மீண்டும் விம்மிச் சுரந்துகொள்ளும்; அவற்றிற்கு 'கும்பி' என்று பெயர்.—$6\frac{1}{2}$.

**பித்தோத்க்லிஷ்ட வர்த்மா** :—பித்ததோஷத்தினால் இரெப்பையானது அழற்சி, துர்நீர்ப்பொசிவு, குத்தல் இவற்றுடன் கூடியதாகவும், செந்நிறமாகவும், பரிசிக்கக் கூடாத நோவுள்ளதாகவும் ஆவதுண்டு; அந்த வியாதியை 'பித்தோத்க்லிஷ்டம்' என்று கூறுவர்—$7\frac{1}{2}$.

**பக்ஷ்மசாதம்** :—இமையின் ஓரங்களிற் பித்தக்கோளாறு தோன்றி அரிப்பு, அழற்சி இவற்றை யுண்டுபண்ணி, அப்பால் கிரமமாக இரெப்பையின் மயிர்களை அரித்துச் சிதைத்துப் போடும்; இந்த வியாதியை 'பக்ஷ்மசாதம்' என்பார்கள்.—$8\frac{1}{2}$.

**போதகிகள்** :—கபதோஷக் கோளாறுல் இரெப்பையில் கடுகுகளைப் போன்ற வெண்ணிறமான அடர்த்தியான கொப்புளங்கள் உண்டாவதுண்டு; அதனால் வீக்கம், ஒருவாறு பசை, கண்களில் அரிப்பு, பிளிச்சை, கண்ணீர் இவை யுண்டாம்; இக் கொப்புளங்கள் 'போதகிகள்' எனப்படும்.—$9\frac{1}{2}$.

1. வெகு சிரமப்பட்டு கண்ணைப் பிரித்துத் திறக்க வேண்டியிருப்பதால் 'க்ருச்சிரோந்மீலம்' எனப் பெயர் வந்தது.

2. நிமேஷம் — கண்ணை மூடித் திறப்பது. இயற்கையினும் அதிகமாய் மூடி மூடித் திறக்கப்படுவதால் இப்பெயர் வந்தது.

3. நீவலம் பாசிபோன்ற ஓர் ஓஷதி.

கபோத்க்லிஷ்ட வர்த்மா :—இரெப்பை திமிர்த்து அசைவற்று, நீர்க்கசிவு பிளிச்சை முதலியவற்றால் பூசப்பட்டிருந்தால் அது 'கபோத்க்லிஷ்ட வர்த்மா' எனப்படும்.—10.

லகணம் :—கபதோஷக்கோளாறால் இரெப்பையில் இலந்தங்கொட்டையைப் போலவோ, அதினும் சிறிதாகவோ ஒரு கிரந்தியுண்டாகும்; அது வெண்மையாகவும், பழுத்துப் பக்குவமடையாததாகவும், தினவுடன் பரிசிப்பதற்குக் கடினமாகவும் இருக்கும்; அதற்கு 'லகணம்' என்று பெயர்.—11.

உத்ஸங்க பிடகைகள் :—இரத்ததோஷத்தினால் சென்னிறக் கொப்புளங்கள் இரெப்பையில் தோன்ற, அவற்றைச் சுற்றி அதே நிறமான வேறு சிறிய கொப்புளங்களும் சூழ்ந்திருக்கும்; அவை 'உத்ஸங்க பிடகைகள்' எனப்படும்.—11¾.

ரக்தோத்க்லிஷ்ட வர்த்மா :—உத்ஸங்க பிடகை போலவே 'உத்க்லிஷ்ட வர்த்மா' என்கிற வியாதியும் இரத்தக் கோளாறால் உண்டாகிறது; ஆனால் இவ்வியாதியில் பிடகைகளோடு கொடிகளைப் போன்ற கோளாறு தோன்றும்; இரெப்பை பரிசிப்பதையும் தாங்காத நோவுடையதாகவு மிருக்கும்.—12.

வர்த்மார்சஸ் :—இரெப்பையின் உட்புறமாய் தடித்து ஸ்நிக்த்தமாக மாம்ஸ வளர்ச்சி யுண்டாம்; அதில் அழற்சி, வலி, சிவப்பு, இரத்தக்கசிவு இவையுண்டாம். அறுக்க அறுக்க மீண்டும் மீண்டும் வளரும். இது 'வர்த்மார்சஸ்'[1] எனப்படும்.—13.

அஞ்ஜநநாமிகா :—இரெப்பையின் மத்தியிலாவது, உட்புறத்திலாவது யவத்தின் அளவாக இரத்ததோஷத்தினால் உண்டாகும் சிவந்த கட்டியில் அரிப்பும் வலியும் உண்டாம்; அது கடினமாயிருக்கும்; அதற்கு 'அஞ்ஜந நாமிகா' என்று பெயர்[2]—14.

பிஸவர்த்மா :—எல்லாத் தோஷங்களுடையவும் கோளாறால் இரெப்பையானது வெளியில் வீக்கங்கொண்டதாகவும், உட்புறத்தில் நுண்ணிய புரைகளோடு கூடியதாகவும் ஆகும்; அதிலிருந்து நீர் வடியும்; தண்ணீரில் அமிழ்ந்துள்ள தாமரைக்கிழங்கு போன்றதாயிருக்கும். அது 'பிஸவர்த்மா' எனப்படும்.—15.

---

1. வர்த்மார்சஸ்—இரெப்பையிலுண்டாகும் மூளைகள்.

2. க்ருச்சிரோந்மீலம் முதல் வாதஹதவர்த்மா வரையிலுள்ள மூன்றும் வாத தோஷத்தினாலும், கும்பி முதல் பக்ஷ்மசாதம் வரையிலுள்ள மூன்றும் பித்த தோஷத்தினாலும், போதகி முதல் லகணம் வரையிலுள்ள மூன்றும் கப தோஷத்தினாலும், உத்ஸங்கபிடகை முதல் அஞ்ஜநநாமிகா வரையிலுள்ள நான்கும் இரத்த தோஷத்தினாலும், பிஸவர்த்மாவும் உத்க்லிஷ்டவர்த்மாவும் ச்யாவவர்த்மாவும் ஸந்நிபாத தோஷங்களாலும் உண்டாகும் வர்த்ம ரோகங்களாம்.

உத்க்லிஷ்ட வர்த்மா :—அடிக்கடியும் இரெப்பை இரத்த தோஷத்தினாலும், வாதாதி தோஷங்களாலும் நான்கு வகையில் குத்தித் தொந்தரவளிக்கப்பட்டு திடீரென வாட்டமுறும். அது 'உத்க்லிஷ்டவர்த்மா' எனப்படுகிறது.—16.

ச்யாவ வர்த்மா:—இரத்த தோஷத்தினாலும், மற்ற மூன்று தோஷங்களாலும் இரெப்பையானது கன்றி ஒருவாறு கருநிறங் கொள்வதுண்டு; அதில் வலியும், வீக்கமும், நீர்க்கசிவும் உண்டாகும்; இவ் வியாதிக்கு 'ச்யாவ வர்த்மா' என்று பெயர்.—16½.

ச்லிஷ்ட வர்த்மா :—இரெப்பைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு, தினவையும், வீக்கத்தையும், செந்நிறத்தையும் பெறும்; இந்த வியாதி 'ச்லிஷ்டவர்த்மா' எனப்படும்.—17.

ஸிகதா வர்த்மா :—கடினமாகவும், ரூக்ஷமாகவும், சிறுமணல் போன்றும் இரெப்பையினுள் நுண்ணிய கொப்புளங்களுண்டாகும்; இவ் வியாதிக்கு 'ஸிகதாவர்த்மா' என்று பெயர்.—17½.

கர்தமம் :—இரெப்பையில் கறுப்பாகவும் சேறு போலவும் உண்டாகும் கோளாறை 'கர்தமம்' என்பார்கள்.—18.

பஹள வர்த்மா :—இரெப்பையின் நிறத்துக்குச் சமானமாய் அதில் மாம்ஸவளர்ச்சி மிகத் தோன்றி, நாற்புறமும் ஸம அளவாகப் பரவியிருக்கும்; இது 'பஹளம்' எனப்படும்.—18½.

குகூணகம் :—பல்முளைப்பதன் நிமித்தமாய் 'குகூணகம்' என்கிற நோய் குழந்தைக்கு மாத்திரம் உண்டாகும்; அதனால் குழந்தையின் கண் வீங்கியும் சிவந்தும் போய் எதையும் பார்க்க வல்லமையற்றதாய் விடும்; அதில் இரெப்பையில் குத்தல் வலியுண்டாம்; பிளிச்சை அதிகமாகச் சேரும்; செவிகளையும், நாசியையும், கண்களையும் குழந்தை தேய்த்துக் கொள்ளும்.—19, 20.

பக்ஷ்மோபரோதம் :—'பக்ஷ்மோபரோதம்' என்னும் வியாதியில் இரெப்பைகள் சுருங்கும்; இமை மயிர்கள் உரப்பாகவும் உட்புறம் முனைகளுள்ளவையாகவும் இருக்கும்; வேறு உரோமங்களாவது உட்புறமாக முளைக்கும்; கூரிய முட்களைப் போன்ற அவற்றால் கண் மிக்க தொந்தரவடையும்; அதிக அழற்சியெடுக்கும்; காற்று முதலியதைத் தாங்க முடியாது; அவற்றை யெடுத்துவிட்டால் சில நாள் தொந்தரவின்றி அமைதி யுண்டாம்.—21, 22.

அலஜி :—கருவிழியானது இரெப்பைக்கு மேலே கிரந்தி போல் திரண்டு பருத்து வளர்ந்து, கடினமாகவும் உயர்ந்தும் தோன்றும்; இரெப்பை சிவந்து பருத்தும், அதிலிருந்து இரத்தமும் சீழும் பெருகும்; இரத்தம் முதலியது வடிந்ததும் மீண்டும் கண் சூழ்ந்துகொள்ளும்; இதை 'அலஜி' என்பார்கள்.—23.

**அர்புதம் :—** இரெப்பையின் உட்புறமாக மாம்ஸச்சதையின் பிண்டம்போன்றதாய் வீக்கம் ஒன்றுண்டாம்; பரிசிப்பதற்கு முடிச்சுபோல் தோன்றும்; அதில் வலியிராது; கருகட்டினது போலவும் தோன்றும்; வெளித்தோற்றத்திலும் அசைவதைக் காணலாம். மூன்றுதோஷங்களாலும், இரத்ததோஷத்தினுலும் உண்டாகிற இவ்வியாதி 'அர்புதம்' எனப்படும்.—24.

**வர்த்மரோகங்களில் ஸாத்தியாஸாத்தியாதிகள் :—** இவ்விதம் இரெப்பையைப்பற்றிய வியாதிகள் இருபத்திநாலு விதம். இவற்றுள் க்ருச்சிரோந்மீலம் என்கிற வியாதியை ஔஷதங்களால் நிவாரணம் செய்யலாம். பிறகுள்ள நிமேஷம், வாதஹதவர்த்மா, அர்சஸ் என்கிற மூன்றும் அஸாத்தியங்களாம். பக்ஷ்மோபரோதம் என்பது யாப்யவியாதி. மற்ற வர்த்மரோகங்களை சஸ்திரங்களால் சிகித்ஸிக்கவேண்டும்.—25, 25½.

**வர்த்மரோகங்களில் சஸ்திர சிகித்ஸைகள் :—** அவற்றுள் பக்ஷ்மசாதம் என்கிற ரோகத்தில் அந்த பாகத்தை குட்டநமும், அர்புதம் என்பதைச் சேதநமும், லகணம், கும்பிகா, பிஸவர்த்தமா, உத்ஸங்கம், அஞ்ஜநநாமிகா, அலஜி இவற்றை பேதநமும் செய்யவேண்டும். போதகி, ச்யாவவர்த்மா, ஸிகதாவர்த்மா, ச்லிஷ்டவர்த்மா, உத்க்லிஷ்டவர்த்மாக்கள் நான்கு, கர்தமம், பஹளவர்த்மா, குகூணகம் ஆகியவற்றை லேகநம் செய்யவேண்டும்.[1]—26, 27½.

---

## ஒன்பதாம் அத்தியாயம்.

## வர்த்மரோகப் பிரதிஷேதம்.

**வர்த்மரோகப்பிரதிஷேதம்** என்னும் விஷயம் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்படுகிறது :—

**க்ருச்சிரோந்மீலத்தில் புராணக்ருதாதி பிரயோகம் :—** திராக்ஷாரஸத்தில் புராணக்ருதம் கூட்டி, திராக்ஷையையே கல்கமாகவும் சேர்த்து, அதற்குச் சமமாகச் சர்க்கரையும் கலந்து பக்குவம் செய்து, க்ருச்சிரோந்மீல ரோகத்தில் உபயோகிக்கலாம். ஸ்நிக்த்தமான நஸ்யம், தூமம், அஞ்ஜநம் முதலியதையும்[2] பிரயோகிக்கலாம்.—1.

---

1. **குட்டநம்** — ஸூசிகூர்ச்சம் முதலியதால் குத்தி, நசுக்குதல். **பேதநம்** — **சேதநம்** — வ்ருத்திபத்திரம் முதலியதால் அறுத்தல். **பேதநம்** — வ்ரீஹிமுகம் முதலியதால் பிளத்தல். **லேகநம்** — மண்டலாக்கிரம் முதலியதைக்கொண்டு கீறுதல்.

2. ஸ்நிக்த்தமான நஸ்ய-தூமாதிகளைப்பற்றிய விவரங்களை ஸூத்திரஸ்த்தாநத்தில் அததற்கான அத்தியாயங்களிற் பார்க்க.

கும்பீகவர்த்மாவுக்கு விசேஷ சிகித்ஸை :—கும்பீகவர்த்ம ரோகத்தில் முதலில் லேகநம் செய்து, இந்துப்பை கொண்டு பிரதிஸாரணம்[1] செய்து, அப்பால் அதிமதுரம், நெல்லிக்கனி, பேய்ப்புடல் இவற்றைக் கொண்டு காய்ச்சிய கஷாயத்தினுல் இரெப்பையில் ஸேசநம்[2] செய்யவேண்டும்.—2.

வர்த்மாவை லேகநம் செய்யுமுறை :—வர்த்ம ரோகிக்கு முதலில் சோதநம்[3] செய்வித்து, பிறகு அதிக காற்று வீசாத விடத்தில் ரோகியை மல்லாந்து படுக்கவிட்டு, ஆப்தர்கள் அவனைத் தாங்கிக் கொள்ளச் செய்யவும். சூடான ஜலத்தில் தோய்த்தெடுத்த வஸ்திரத்தினுல் இரெப்பையின் வெளிப்புறத்தில் ஒற்றடம் கொடுக்கவும். சிகித்ஸிப்பவன் தன் இடது கையின் பெருவிரல் ஆள்காட்டி விரல்களில் வஸ்திரத்தைச் சுற்றிக்கொண்டு, அவ்விரல்களால் இரெப்பையின் உட்புறம் வெளியாகுமாறு பிதுக்கி மடித்துக் கொள்ளவும் ; அதனுல் இரெப்பை எந்தப் பக்கமும் அசையாமலும் கையிலிருந்து நழுவாமலுமிருக்கும். பிறகு மண்டலாக்ரம் என்னும் சஸ்திரத்தினுல் இரெப்பையின் உட்புறம் நெடுகவும் கீறி உடனே அச் சஸ்திரத்தினுலாவது, சிறுதேக்கு, நொச்சி முதலியவற்றின் இலைகளாலாவது, கடல் நுரையினுலாவது சுறண்டி இரெப்பையிலிருந்து பெருகும் இரத்தத்தைப் பிசுவினுல்[4] துடைத்து வரவும் ; இரத்தக்கசிவு தானே நின்றுவிட்டால் லேகநசிகித்ஸை நிறைவேறியதாய் அறியலாம் ; உடனே அதற்குக் கூறியுள்ள பிரதிஸாரண ஔஷதங்களோடு[5] தேனையும் கலந்து கண்ணிற் பூசலாம். பிறகு உஷ்ண ஜலத்தினுல் கண்ணைக் கழுவி, அப்பால் க்ருதத்தினுல் ஸேகம் செய்து, தேனையும் நெய்யையும் கலந்து கண்மீது பூசி, செவிப்புறமாய் கீழும் மேலுமாக வாற்கோதுமைமாப்பிண்டங்களை வைத்து அவற்றின்மேல் பந்தநம் செய்யவேண்டும். இரண்டாம் நாள் கட்டை அவிழ்த்து, நிலைமைக்குத் தகுந்த ஔஷதத் திரவத்தினுல் பரிஷேகம் செய்து, நான்காவது தினம் நஸ்யம் முதலியதை யுக்தப்படி பிரயோகிக்க வேண்டும். ஐந்தாம் நாள் கட்டை அவிழ்த்து விடவும். 3—8½.

வர்த்மாவை நன்கு லேகநம் செய்ததன் குறிகள் :—இரெப்பையின் உட்புறமானது நறநறப்பின்றி ஸமமாகவும், வழுமையி

1. பிரதிஸாரணம்—ஔஷதத்தைத் தூவுதல் அல்லது பூசுதல்.

2. ஸேசநம்—நீருருவமான ஔஷதத்தை அந்தந்த அவயவத்தின் மீது ஊற்றும் முறை. இது **பரிஷேகம்** என்றும் வழங்கப்படும்.

3. வமந-விரேசநாதிகளால் தேஹத்தைச் சுத்தி செய்தல்.

4. பிசு — மிக்க மிருதுவாயிருக்குமாறு மெத்தைபோல மடித்த வஸ்திரம் அல்லது பஞ்சுப்பட்டை முதலியது.

5. ஸைந்தவம் (இந்துப்பு) முதலியதாலான பூச்சு மருந்துகள்.

லும் நிறத்திலும் நகத்திற்கொப்பாகவும், வீக்கம்-அரிப்பு-உறுத்தல் முதலிய தொந்தரவுகளில்லாததாகவு மிருக்கக் கண்டால், முறைப்படி நன்கு லேககம் செய்து முடிந்ததாய் அறியலாம். அப்படிக்கில்லாமல் மாறின குணங்கள் இருக்கக் கண்டால் அதை மீண்டும் லேககம் செய்யவேண்டும்.—9½.

அதிலேககத்தினுலுண்டாகும் தீங்கும் பரிஹாரமும் :—(1) லேககம் மிதமீறினுலும், அமிதமாக இரத்தத்தை ஸ்ரவிக்கச் செய்தாலும் வலியதிகரிக்கும்; இமையும் இரெப்பையும் குறுகிவிடும். (2) அதில் வாததோஷஹரமான ஸ்நேஹம் ஸ்வேதம் முதலிய சிகித்ஸாக்கிரமம் இதமானது. (3) வெள்ளிலோத்திப் பட்டையின்மேல் வெண்ணெயைத் தடவி, ஆமணக்கு வேரின் கல்கத்தினுல் அதற்குக் கவசமிட்டு, அதைப் புடபாக முறைப்படி பக்குவம் செய்து, அப் பட்டையைப் பிறகு ஆவியிலிட்டு, கழுவி, உலர்த்தி, சூரணம் செய்து, வஸ்திரகாளகம் செய்து முலைப்பாலிலாவது செம்மறியாட்டுப்பாலிலாவது குழைத்து ஸேசனௌஷதமாக உபயோகிக்கவும். (4) வெள்ளிலோத்திப் பட்டையை அவ்விதமாகவே[1] சம்பா அரிசி மாவால் கவசமிட்டுப் பக்குவம் செய்து, தயிரிலிருந்து இறக்கப்பட்ட நீரிற் குழைத்து அதிலேககம் செய்யப்பெற்ற நேத்திரத்தில் ஸேகம் செய்யலாம். (5) அல்லது தயிரிலிருந்து வடித்த நீரை மாத்திரமாவது ஸேகமாக உபயோகிக்கலாம். 10—14.

பிடகைகளுக்குச் செய்யவேண்டிய சஸ்திர சிகித்ஸை முதலியது :—கடினமாகவும் உயர்ந்து மேலுக்குக் கிளம்பியுமுள்ள பிடகைகளை[2] வ்ரீஹிவக்த்ரம் என்னும் சஸ்திரத்தினுல் பேதகம் செய்து, உடனே அழுத்தி துர்நீரைப் பெருக்கி விடவேண்டும். பிறகு செய்யவேண்டிய சிகித்ஸாதி உபசாரங்கள் முன் கூறிய விதமே[3]. எல்லா வர்த்ம ரோகங்களிலும் லேககம் பேதகம் என்கிற சஸ்திர சிகித்ஸைகளில் இதுதான் முறையாகும்.—15, 15½.

பித்த - ரக்தோத்க்லிஷ்டவர்த்மாக்களின் சிகித்ஸை :—(1) பித்தோத்க்லிஷ்ட வர்த்மாவிலும், ரக்தோத்க்லிஷ்ட வர்த்மாவிலும் மதுரத் திரவ்யங்களால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தினுல் பிணியாளிக்கு ஸ்நேஹநம் செய்விக்க வேண்டும். (2) பிறகு விரேசநம் செய்விக்க வேண்டும்; இதற்குக் கருஞ்சிவதை சிறந்த சாக்கு. (3) பின்னர் ஸிராமோக்ஷம் செய்யலாம்; லேககமும் செய்து இரெப்பையினின்றும் துஷ்ட ரக்தத்தை வடியச் செய்ய வேண்டும். (4) பிறகு அதிமதுரக் கஷாயத்தினுல் இரெப்பை

1. இந்த முறை ச்வேதலோத்ரத்வக் புடபாகம்-எனப்படும்.

2. பிடகைகள் என்று உத்ஸங்கபிடகைகள் குறிக்கப்படுகின்றன.

3. 'வர்த்மாவை லேககம் செய்யும் முறை' என்கிற தலையங்கத்தின் கீழ் விவரிக்கப்பட்டுள்ள விதம் என்று கருத்து.

யைக் கழுவி, சந்தநம் சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கொண்டு லேகநம் செய்யவேண்டும்.—16, 17½.

**பக்ஷ்ம சாதத்திற்குரிய சிகித்ஸை** :—பக்ஷ்மசாத வியாதியில் இமை மயிர்களின் அடிப்புறங்களை ஊசியினுல் இலகுவாகக் குத்தவும். அட்டைகளையாவது அதற்கு அருகில் கடிக்க விடலாம். பாலையாவது கரும்புச் சாற்றையாவது நிரம்பக் குடிக்கச் செய்து வமநம் செய்விக்கவும். இனிப்பாகவும் சீதவீர்யமுள்ளவையுமான சரக்குகளின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்தைக்கொண்டு நஸ்யமும் செய்விக்கலாம். பெருங்குரும்பையின் ஸ்வரஸத்தைத் தாம்ர பாத்திரத்தில் விட்டு, அதில் புஷ்பகாஸீஸத்தைப்[1] பத்து நாள் பாவனை செய்யவேண்டும்; அது பக்ஷ்ம சாதத்தில் அஞ்ஜநமிடுவதற்கு மிகச் சிறந்தது. 18—20.

**போதகியில் செய்ய வேண்டிய சிகித்ஸை** :—போதகி என்னும் வர்த்ம வியாதியில் லேகநம் செய்து, சுக்கு இந்துப்பு இவற்றைப் பிரதிஸாரணமாக உபயோகித்து, வெந்நீரால் இரெப்பையைக் கழுவி, கருங்காலி-துவரை-முருங்கை இவற்றையாவது, மஞ்சள்-மாமஞ்சள் த்ரிபலை-அதிமதுரம் இவற்றையாவது ஜலத்திற் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி, அக் கஷாயத்தில் தேன் கலந்து லேகநம் செய்யலாம்.—21, 21½.

**கபோத்க்லிஷ்ட வர்த்மாவின் சிகித்ஸை** :—கபோத்க்லிஷ்ட வர்த்மாவில் லேகநம் செய்யவும்; பிறகு இந்துப்பு, அன்னபேதி, மனச்சிலை, திப்பிலி, இரஸாஞ்ஜநம் இவற்றை மிக்க மிருது சூர்ணமாக்கி, அதைத் தேனிற் குழைத்துப் பிரதிஸாரணம் செய்யவும்; வமநம், அஞ்ஜநங்கள், நஸ்யங்கள் முதலியதையும், கபஹரமான மற்றச் சிகித்ஸையையும் செய்வது நலம்.—22, 23.

**லகணத்திற்கு சிகித்ஸை** :—லகண ரோகத்திலும் கபோத்க்லிஷ்ட வர்த்மாவுக்குக் கூறிய சிகித்ஸையையே செய்யலாம்; அதனுல் அது தீராவிடில் அப் பாகத்தைச் சுடவேண்டும்.—23½.

**குகூணகத்தில் தாத்ரிக்குச் செய்யவேண்டிய சிகித்ஸை** :—குகூணக வியாதியில் (1) கருங்காலி, த்ரிபலா, வேப்பிலை இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்தைக் குழந்தைக்குப் பாலூட்டும் தாத்ரி[2] பானம் செய்து, திப்பிலி-அதிமதுரம்-கடுகு-இந்துப்பு இவற்றின் சூர்ணத்தை யுட்கொண்டு வமநம் செய்துகொள்ள வேண்டும். (2) கடுக்காய், திப்பிலி, திராக்ஷை இவற்

1. புஷ்பகாஸீஸம்—வெண் மஞ்சள் நிறமான அன்னபேதி. முற்றிலும் மஞ்சள் நிறமான அன்னபேதி யென்றும் சிலர்.

2. தாத்ரி—குழந்தைக்கு முலையூட்டி வளர்க்கும் செவிலித் தாய். முலைகொடுப்பவர்கள் செவிலித்தாயாக இருந்தாலும், தாயாரா யிருந்தாலும் இவ்விதம் செய்துகொள்ள வேண்டுமென்று கருத்து.

றின் கஷாயத்தை விரேசநமாவதற்காகவும் உட்கொள்ள வேண்டும். (3) கோரைக்கிழங்கு, மஞ்சள், மரமஞ்சள், திப்பிலி இவற்றின் கல்கத்தினால் தாத்ரியின் ஸ்தனங்களில் லேபநம் செய்யவும்; பிறகு கடுகையும் நெய்யையும் தழலிலிட்டு, அப் புகையினால் ஸ்தனங்களுக்குத் தூபமிடவேண்டும். (4) அவ்வாறு தாத்ரி சுத்தமான பிறகு பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, திராக்ஷை, சீந்தில், த்ரிபலை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தை அவளுக்குப் பருகக் கொடுக்க வேண்டும். 24—26½.

**குகூணகத்தில் சிசுவுக்குச் செய்யவேண்டிய சிகித்ஸைகள் :-** (1) சிசுவின் இமைப்பையை லேகநம் செய்து, அல்லது அட்டையைப் பிரயோகித்து இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும்; பிறகு நெல்லி, வேலை, நாவல் இவற்றின் இலைகளைக் கொண்டு காய்ச்சிய கஷாயத்தினால் கண்ணில் லேகநம் செய்யவேண்டும். (2) பெரும்பாலும் பாலையும் நெய்யையு முண்டுவருவதால் இளங் குழந்தைகளுக்கு வியாதிகள் கபதோஷத்தினாலேயே உண்டாகின்றன; ஆகையால் அவர்களுக்கு எல்லா வியாதிகளிலும் பெரும்பாலும் வமந சிகித்ஸையே சிறந்தது. (3) பாலை மாத்திரம் உணவாகப் பருகும் சிசுவுக்கு இந்துப்பு, திப்பிலி, நாயுருவி விதை, நெய், முலைப்பால், தேன் இவற்றையும், (4) பால் அன்னம் இரண்டையும் உண்ணும் குழந்தைக்கு தேன் கலந்த வசம்புப் பொடியையும், (5) அன்னத்தையே உணவாகக் கொள்ளும் பாலருக்கு அதிமதுரத்துடன் மதநபலத்தையும் பெரும்பாலும் எல்லா ரோகங்களிலும், முக்கியமாக குகூணகத்திலும் வமநத்திற்காகக் கொடுக்கலாம். (6) சீய்க்காய் ஸ்வரஸத்தில் அல்லது கஷாயத்தில் பக்குவம் செய்த க்ருதத்தை உபயசோதந முறையாகக்[1] குழந்தைக்குக் கொடுக்கலாம். (7) மஞ்சள், மரமஞ்சள், வெள்ளிலோத்தி, அதிமதுரம், கடுகரோகிணி, வேப்பங் கொழுந்து இவற்றையும் மிருதுவான செப்புப் பொடியையும் சேர்த்து அரைத்து, வர்த்தி செய்தாவது, (8) பஸ்மமாகச் செய்த அயத்தைப் பால் தேன் இவற்றில் குழைத்தாவது குகூணகத்தில் குழந்தையின் கண்ணில் இடலாம். (9) ஏலரிசி, வெள்ளுள்ளி, தேற்றாங் கொட்டை, சங்கு, மிளகு, நாய்த் துளஸி, சிறுதேக்கு இவற்றை ஸாரை யென்னும் மதுவைச் சேர்த்து அரைத்து வர்த்தியாகச் செய்து குகூணகம், போதகி இவற்றில் கண்ணுக்கு இடலாம். 27—33½.

**பக்ஷ்மரோதத்தில் சஸ்திர சிகித்ஸை முதலியது:—**(1) பக்ஷ்மரோதமென்கிற வர்த்மரோகத்தில் உரோமங்கள் மிகவும் வளர்ந்திருக்கையில் முதலில் சோதநம் செய்து, பிறகு புருவத்திற்குக்

1. உபயசோதநம்—மேலாகச் செய்யப்படும் வமநம், கீழாகச் செய்யப்படும் விரேசநம் ஆகிய இரண்டுக்கும் சேர்ந்த பொதுப் பெயர்.

கீழே இரண்டு மடங்கு இடமும், இமைக்கு அருகில் ஒரு பங்கு இடமும் விட்டு நெடுகவும் யவதானியத்திற்குச் சம அளவு யவத்தைப் போலவே சேதநம் செய்து, உடனே ஈரத்துணியினால் இரத்தத்தை மெதுவாகத் துடைத்து வரவும்; இரத்தப் பெருக்குக் குறைந்ததும் வளைவான ஊசியினால் இடையிடையே பயறு அளவான இடம் விட்டுத் தைக்கவும்; பிறகு நெற்றியில் ஒரு துணியைப் பட்டயம்போலக் கட்டி, அதில் அத் தையல் நூலை தளர்த்தித் தைத்து வைக்கவேண்டும்; நேத்திரத்தின்மீது தேனும் நெய்யும் கலந்து பூசிய கவலிகையைப்[1] போடவேண்டும்; இதில் கட்டு கட்டக்கூடாது. வலி யெடுத்தால் ந்யக்ரோதாதி கஷாயத்தில் பாலையும் கூட்டி அதைக்கொண்டு லேகநம் செய்யவும். ஐந்தாம் நாள் தையல் நூலைப் பிரித்தெடுத்துவிட்டு, கைரிக மென்கிற காவியின் தூளை விரணத்தின்மீது தூவவும். தீக்ஷ்ணமான நஸ்யம், அஞ்ஜநம் முதலியதையும் பிரயோகிக்கலாம். (2) அவ்விதம் செய்து வியாதி தீராவிடில், வர்த்மரோகம் தோன்றியுள்ள இரெப்பையின் பாகத்தைப் பிதுக்கி, அதிகமாய் வளர்ந்துள்ள இமையை ஸந்தம்சயந்திரத்தினால் இழுத்துக்கொண்டு, அதற்கு ஆதாரமாயுள்ள விடத்தைப் பழுக்கக் காய்ச்சிய ஊசி முனையினால் சுட்டுவிடவும். (3) வெளிப்புறத்து அலஜியை பேதநம் செய்து க்ஷாரத்தினாலும் அக்கினியினாலும் சுடவும். (4) அர்புதத்தை நன்றாகச் சேதநம் செய்த பிறகு சுடவேண்டும். 34-41.

---

## பத்தாம் அத்தியாயம்.

### ஸந்தி-ஸிதா-ஸிதரோக விஞ்ஞாநம்.

இனி ஸந்தி-ஸிதா-ஸிதரோக விஞ்ஞாநம்[2] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

**ஜலஸ்ராவம்**:—பிரகோபமடைந்த வாயு ஜலவஹ நாடிகளிற்[3] பிரவேசித்து, வர்த்ம-சுக்லஸந்தியிலிருந்தும் கருவிழியிலிருந்தும் துர்நீரை வடியச்செய்ய, நேத்திரத்தில் வலி, சிவப்பு, வீக்கம் இவை உண்டாம். இது 'ஜலஸ்ராவம்' எனப்படும்.—1, $1\frac{1}{2}$.

---

1. கவலிகை—முதற் புத்தகம் பார்க்க.

2. ஸந்திகள், வெண்மடல், கருவிழி இவற்றைப்பற்றிய ரோகங்களை விளக்கும் அத்தியாயம் என்று பொருள். [இமையும் இரெப்பையும் சேருமிடம் பக்ஷ்ம வர்த்மஸந்தி. இரெப்பையின் மாம்ஸ பாகமும் வெண்மடலும் சேருமிடம் வர்த்ம-சுக்லஸந்தி. வெண்மண்டலமும் கருவிழியும் சேருமிடம் சுக்ல-கிருஷ்ணஸந்தி. கருவிழியும் கண்மணி (பாபா) யும் சேருமிடம் கிருஷ்ண-த்ருஷ்டிஸந்தி. கன்னத்தின் பாரிசமும் கண் குவளையும் சேருமிடம் கநீநிகாஸந்தி. இவை கண்ணில் உள்ள ஸந்திகள்.]

3. கண்ணீரைப் பெருக்கும் குழாய்கள்.

**கபஸ்ராவம்** :—சிலேஷ்மதோஷத்தால் 'கபஸ்ராவம்' என்னும் வியாதி யுண்டாம்; இதில் கண்ணிலிருந்து வெண்மையாகவும், பிசுபிசுப்பாகவும், அதிகமாகவும் நீர் வடியும்.—2.

**உபநாஹம்** :—திருஷ்டிஸந்தியில் கபதோஷத்தினாலேயே கூரிய முனையுள்ளதாய் சவர்நீர்க்குமிழி போன்று பெரிய கிரந்தியொன்று பெரிதும் வேரூன்றி வளரும்; அது கிளம்பிய இடத்துக்குச் சமான நிறமுள்ளதாகவும், ஸ்நிக்த்தமாகவும், மிருதுவாகவும், பிசுபிசுப்பாகவும், பெரிதாகவும், பழுக்காததாகவும் தோற்றும்; அதிக அரிப்புண்டுபண்ணும்; நோவொன்றுமிராது. இது 'உபநாஹம்' எனப்படும்.—3, 3½.

**இரக்தஸ்ராவம்** :—இரக்ததோஷத்தினால் 'இரக்தஸ்ராவம்' என்கிற வியாதி யுண்டாகிறது; இதில் வெளியாகும் கண்ணீர் சிவப்பாகவும், அதிக சூடாகவும் இருக்கும்—4.

**பர்வணி** :— வர்த்மஸந்தியில் 'பர்வணி' என்கிற கட்டியொன்று வெண்மடலில் உண்டாகும்; அது அழற்சியையும் நோவையும் கொடுக்கும்; நிறத்தில் சிவப்பாகவும், உருவத்தில் பயறு போன்றும் உடைந்தால் இரக்தமும் பெருகும்.—5.

**பூயஸ்ராவம்** :—'பூயஸ்ராவம்' என்கிற வியாதியில் இரக்தம், சர்மம், மாம்ஸ தாது இவை மிக்க அழன்று விடுவதால் தோஷங்களும் இரக்தமும் கூடிக் கோளாறடைந்து, வர்த்மஸந்தியிலிருந்தும் அடிக்கடியும் சீழை வடியச் செய்கின்றன[1].—6.

**பூயாலஸம்** :—கநீநிகாஸந்தி யென்கிற குவளையில் வீக்கம், பலமான உறுத்தல் இவற்றுடன் சிறிய விரணம் தோன்றி, விம்மிப் பருத்து வேதனையோடு சீழையும் பெருக்கும்; இதற்குப் 'பூயாலஸம்' என்று பெயர்.—7.

**அலஜி** :—கருவிழியின் ஸந்தி பாகத்தில் 'அலஜி' என்னும் ரோகம் தோன்றுகிறது; அது வீக்கம், வலி, குத்தல், அழற்சி இவற்றை யுண்டுபண்ணும்.—7½.

**கிருமிக்கிரந்தி** :—கடைக்கண்ணிலாவது, கருவிழியிலாவது தோன்றும் 'கிருமிக்கிரந்தி' என்னும் ரோகத்தில் தினவு, அழற்சி, இரெப்பையில் குத்தல், கிருமி இவை காணும்; சீழும் பெருகும்.—8½.

**நேத்திரஸ்ராவாதிகளில் ஸாத்யாஸாத்யங்கள்** :— (1) உபநாஹம், கிருமிக்கிரந்தி, பூயாலஸம், பர்வணி இவற்றைச் சஸ்திரங்களால் சிகித்ஸிக்க வேண்டும். (2) நான்கு வித ஸ்ராவங்களும், அலஜியும் அஸாத்யங்களாம்.—9½.

---

1. ஜலஸ்ராவம், கபஸ்ராவம், இரக்தஸ்ராவம், பூயஸ்ராவம் இந்நான்கும் நேத்திரஸந்திகளி லுண்டாகும் "ஸ்ராவசதுஷ்டயம்" எனப்படும்.

சுக்லிகா :—பித்த தோஷமானது வெண்மடலில் கறுப்பாகவும் வெண்கறுவலாகவும் பசுமையாகவுமுள்ள புள்ளிகளை யுண்டு பண்ணும்; பார்க்கப்படுவதெல்லாம் அழுக்கடைந்த கண்ணுடியைப் போலாவது முழு வெளுப்பாகவாவது தோன்றும்; குத்தலும் அழற்சியும் உண்டாம்; பேதி, நாவறட்சி, ஜ்வரம் இவையும் காணும்; இவ்வியாதி 'சுக்லிகா' எனப்படுகிறது.—10, 11.

சுக்லார்மம் :—வெண்மண்டலத்தில் கபதோஷக்கோளாறுல் 'சுக்லார்மம்' என்கிற ரோகம் உண்டாகும்; அது வெண்மண்டலத்தின் மட்டத்துக்குச் சமமாகப் பரவி, வெண்மையாகக் காணப்படும்; வெகு மெதுவாக இது வளரும்.—$11\frac{1}{2}$.

பலாஸக்கிரதிதம் :—நோவுண்டுபண்ணுத மற்றொரு மிருதுவான வீக்கம் அது உண்டாகுமிடத்திற்குச் சமான நிறமுள்ளதாய், அளவில் விரிவாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், உருவத்தில் நீர்த்துளியைப் போன்றும் தோன்றும்; இது 'பலாஸக்கிரதிதம்' என்று[1] வழங்கப்படும்.—$12\frac{1}{2}$.

பிஷ்டகம் :—பிஷ்டமென்கிற மாவைப் போன்று வெண்மையான சில பிந்துக்கள் ஒருவாறு மேலெழுந்து காண்பதுண்டு; இவ்வியாதியை 'பிஷ்டகம்' என்று கூறுவர்.—13.

ஸிரோத்பாதம் :—வெண்மடல் சிவந்த கொடி கொடியான நாடிகளால் வியாபிக்கப்பட்டு, அதிக வேதனையைப் பெற்று அழற்சியடையும்; இதில் வீக்கமாவது, கண்ணீர்ப் பெருக்காவது, வேறு கசிவாவது உண்டாவதில்லை; இரத்த தோஷத்திஞலான இவ்வியாதி 'ஸிரோத்பாதம்' எனப்படும்.—14.

ஸிராஹர்ஷம் :— ஸிரோத்பாதம் உபேக்ஷிக்கப்படுமாஞல் அச்சிவந்த கொடிகள் மேன்மேலும் வளர்ந்து, கண்ணீர்ப்பெருக்குமுண்டாய் 'ஸிராஹர்ஷம்' என்னும் ரோகம் உண்டாம்; அதஞல் கண் திறக்கக் கூடாமல் கூச்சமடையும்.—15.

ஸிராஜாலம் :—வெண்மண்டலத்தில் ஸிரைகளென்கிற இரத்தநாளங்களின் வலை மிகுதியாகத் தோன்றி, சிவப்பாகவும், நெருக்கமாகவும், பருத்துயர்ந்தும் பரவியிருக்கும்; இந்த வியாதிக்கு 'ஸிராஜாலம்' என்று பெயர்.—$15\frac{1}{2}$.

சோணிதார்மம் :—சுக்லமண்டலத்திலேயே 'சோணிதார்மம்' என்னும்[2] வியாதி யுண்டாகிறது; அது மாம்ஸவளர்ச்சியிஞலுண்டாவது; அது ஸமமாகப் பரவியும், வழுமுண்டதாகவும், நிறத்தில் செந்தாமரைக்குச் சமானமாகவும் இருக்கும்.—16.

---

1. பலாஸக்கிரதிதம் — கபதோஷத்திஞலான கிரந்தி போன்ற வியாதி யெனப் பொருள். இது வெண் மண்டலத்தைப்பற்றி யுண்டாகிறது.

2. சோணிதார்மம்—இரக்தார்மம் என்று வழங்கப்படும்.

**அர்ஜுனம் :**—வெண்மடலில் வலியற்றதாய், வழுழுண்டு, முயல் ரத்தம் போன்று சிவப்பாகத் தோன்றும் புள்ளிக்கு 'அர்ஜுனம்' எனப் பெயர்.—16½.

**பிரஸ்தார்யர்மம் :**—மூன்று தோஷங்களுடையவும், இரத்தத்தினுடையவும் கோளாறால் 'பிரஸ்தார்யர்மம்' என்னும் வியாதி வெண்மடலில் மிருதுவாகவும், சிக்கிரத்திற் பரவுவதாகவும், வலியுண்டுபண்ணுமலும் விருத்தியாகக் கூடிய மாம்ஸவளர்ச்சியாம்; அது நிறத்தில் கறுஞ்சிவப்பா யிருக்கும்.—17¼.

**ஸ்நாவார்மம் :**—கடினமான ஸ்நாயுவைப் போன்ற வளர்ச்சியை 'ஸ்நாவார்மம்' எனக் கூறுவர்.—17½.

**அதிமாம் ஸார்மம் :**—ஒருவாறு வெளிறிய இரத்தக் கட்டி போன்றதாய், அல்லது வெண்கருவல் நிறமுடையதாய் பருத்தும் விசாலமுமான மாம்ஸ வளர்ச்சியானது 'அதிமாம்ஸார்மம்' என்று வழங்கப்படும்.—18¼.

**ஸிராபிடகைகள் :**—கருவிழிக்கு அருகில் ஸிரைகளால் சூழப்பட்டு கடுகு போன்றவைகளாய் கொப்புளங்கள் உண்டாம்; அவை அழற்சியையும் உறுத்தலையும் அதிகமுண்டுபண்ணும், அவற்றிற்கு 'ஸிராபிடகைகள்' என்று பெயர்.—19.

**சுக்லிகா முதலான நேத்திரவியாதிகளில் சஸ்திர-ஔஷத ஸாத்யாதிகள் :**—(1) சுக்லிகா, ஸிராஹர்ஷம், ஸிரோத்பாதம், பிஷ்டகம், கிருமிக்கிரந்தி, அர்ஜுனம் என்கிற ஆறு வியாதிகளையும் ஔஷதங்களால் சிகித்ஸிக்கவேண்டும். (2) மற்ற ஏழும் சஸ்திர ஸாத்யங்களாம். இவைகளையும் முதிர்ச்சியடையா திருந்தால் ஔஷதங்களாலேயே பரிஹரிக்கலாம். (3) ஐந்து விதமாகக் கூறப்பட்ட அர்மங்களைச் சேதநம் செய்யவேண்டும். (4) அவையே கருவிழியைப்பற்றி யிருந்தாலும், மாம்ஸ-ஸ்நாயு-ஸிரைகள் இவற்றால் சூழப்பட்டிருந்தாலும், பெருத்த தோல் முளையைப்போல எழும்பிப் பருத்திருந்தாலும், திருஷ்டி பாகத்தைப்பற்றியவையாலும் அஸாத்யமாகும்.—20, 21½.

**க்ஷதசுக்ரம் :**—(1) பித்தமானது கருவிழியிலாவது திருஷ்டி பாகத்திலாவது சர்மத்தைச்[1] சிதைத்து, குத்தலும் கண்ணீர்ப் பெருக்கும் சிவப்புமுள்ளதான சுக்ரம் என்கிற ஒருவித பூவை உண்டாக்கும்; அதனால் கருவிழி சிறிது பள்ளம் விழுந்ததாய் கனிந்த நாவற்பழம் போன்றதாய்விடும்; 'க்ஷதசுக்ரம்' எனப்படும் இது கஷ்டஸாத்யமான வியாதி. (2) இரண்டாம் படலம்

---

1. சர்மமென்று கண்ணின் முதற்படலம் கூறப்படுவதாய் அறிக. [கண்ணில் நான்கு படலங்கள் உண்டு. இரஸ-ரக்த தாதுக்களை ஆச்ரயித்தது முதற்படலம்; மாம்ஸ தாதுவைப் பற்றியது இரண்டாம் படலம்; மூன்றும் படலம் மேதோதாதுவைப் பற்றியது. நான்காவது காலகாஸ்தி யென்னும் ஒரு கடின தாதுவைப் பற்றியது.]

சிதைவுற்று இவ்வியாதி கண்டால் அது யாப்யமாம்; அதில் குத்தல் முதலியது அதிசமாயிருக்கும்; ஊசியினால் கருவிழி குத்தப்பட்டது போன்று காணும். (3) மூன்றும் படலம் சேதமடைந்தால் விரணங்கள் அதைச் சூழ்ந்திருக்கும்; அது அஸாத்தியமாகும். 22—24½.

சுக்த சுக்ரகம்:—கபதோஷத்தாலான 'சுக்த சுக்ரகம்' என்னும் பூவிழுதல் சங்கு போலே வெண்மையானது; அதிக வலியுண்டுபண்ணுவதில்லை; எளிதில் தீர்க்கக் கூடியது.—25.

அஜகா :—இரக்த தோஷத்தினால் பருமனிலும் கருநிறத்திலும் ஆட்டுப்பிழுக்கை போல் 'அஜகா' என்கிற வியாதி யுண்டாகிறது; இதிலிருந்து இளஞ்சிவப்பும் பிசுபிசுப்புமுள்ள கண்ணீர் பெருகும்; சிறிது சிவந்த கொப்புளங்களால் சூழப்பட்டுமிருக்கும்; வலி கடுமையா யுண்டாம்; இது அஸாத்ய வியாதி.—26.

ஸிரா சுக்ரம்:—மூன்று தோஷங்களாலும், இரத்த தோஷத்தினாலும் 'ஸிரா சுக்ரம்' என்னும் ரோகம் கருவிழியில் உண்டாகிறது; இதனால் ஸிரைகள் சிவந்து போய் குத்தல், அழற்சி, சிவப்பு இவைகளை யுண்டுபண்ண கண் மிக்க வேதனை யடையும்; இதிலிருந்து திடீரென்று கண்ணீர் பெருகும்; அந்த நீர் ஒரு ஸமயம் உஷ்ணமாகவும், ஒரு ஸமயம் குளிர்ந்தும், ஒரு ஸமயம் தெளிவாகவும், ஒரு ஸமயம் தடிப்பாகவும் இருக்கும்; இது அஸாத்திய வியாதியாம்.—27, 27½.

பாகாத்யயம் :—இரத்தம், மூன்று தோஷங்கள். இவற்றின் கோளாறால் திடீரென்று கருவிழி வெண்மையாக மாறும்; சிறு கடலைப் பருப்பின் அளவில் அவ்விடம் வெளிறிய மேகத்தினால் மறைக்கப்பட்டது போன்றதாய் தோன்றும்; வலி, சிவப்பு, அழற்சி, வீக்கம் இவை கடும் துன்பம் விளைவிக்கும். கண்ணைப் பொங்கச் செய்து மிகத் துன்பமளிக்கும் இச் சுக்ரம் 'பாகாத்யயம்' எனப்படும் அஸாத்திய வியாதியாம் —28, 29½.

சுக்ரவியாதிகளில் மற்றும் அஸாத்யமானவை :—சுக்ரமென்கிற வியாதியில் உட்புறமாய் லிங்கநாசம் உண்டானாலும், அல்லது உட்புறமாய் ஒருவாறு கருமையாகவோ சிறிது சிவப்பாகவோ திருஷ்டி பாகம் மாறினாலும், அல்லது அந்தப் பாகம் அதிகமாய் முன்னுக்குப் பிதுங்கி வளர்ந்தோ அமிதமாய் உள்ளுக்கு ஆழ்ந்தோ இருந்தாலும், கண்ணீரைப் பெருக்கும் புரையோடும் துவாரங்களாலும் புண்களாலும் சூழப்பட்டிருந்தாலும், மிக நாட்பட்டதானாலும், நடுவில் காடு முரடா யிருந்தாலும், மத்தியில் அறுபட்டிருந்தாலும் அவ்வித சுக்ரம் யாவும் அஸாத்யமாம். இவ்விதம் கிருஷ்ணபாகத்தில் ஸாத்யங்களாகவும் அஸாத்யங்களாகவும் பிரிக்கப்பட்டு ஐந்துவித ரோகங்கள் மொழியப்பட்டன.—30, 31½.

## பதின்ோராம் அத்தியாயம்.

## ஸந்தி-ஸிதா-ஸிதரோகப் பிரதிஷேதம்.

இனி இவ்வத்தியாயத்தில் ஸந்தி-ஸிதா-ஸிதரோகப் பிரதிஷேதம்[1] என்னும் விஷயம் விளக்கப்படுகிறது:—

உபநாஹ வியாதிக்கு சிகித்ஸை:—'உபநாஹம்' என்னும் வியாதியை வைத்தியன் முதலில் ஸ்வேதநம் செய்வித்து, வ்ரீஹிமுகமென்னும் சஸ்திரத்தினால் கீண்டு, மண்டலாக்ரம் என்பதால் நெடுகக் கீறி, அதன் பிறகு திப்பிலி, தேன், இந்துப்பு இவற்றைக் கொண்டு பிரதிஸாரணம் செய்து,[2] பிறகு முன் போலவே பந்தநம் செய்யவும்[3]. பேப்புடல், நெல்லிக்கனி இவற்றின் கஷாயத்தினால் பின்னர் ஆச்சியோதநமும் செய்யவேண்டும்.—1, 2.

பர்வணி சிகித்ஸை:—'பர்வணி' யென்பதை வெளிப்புறத்துச் சந்தியின் மூன்றாவது பாகத்தில் படிசபந்திரத்தினால் பற்றிக்கொண்டு, அதைப் பாதியில் வ்ருத்தி பத்திரம் என்னும் சஸ்திரத்தினால் அறுத்து விடவேண்டும்; அப்படிக்கில்லையேல் கண்ணீர் அதிகமாய் வடியும்; இதில் செய்யப்படும் சிகித்ஸாமுறை அர்மத்திற்குச் செய்வது[4] போலவே.—3, 3½.

பூயாலஸ சிகித்ஸை:—'பூயாலஸம்' என்னும் வியாதியில் முதலில் ஸிராவ்யதை செய்யவேண்டும். பிறகு உபநாஹம் என்னும் ஒற்றடமிடவேண்டும். மேலும் அக்ஷிபாகம் அல்லது நேத்திர பாகமென்னும் ரோகத்திற் கூறுகிறபடி எல்லாச் சிகித்ஸையையும் முறைப்படி நிறைவேற்ற வேண்டும். இந்துப்பு, சுக்கு, அன்னபேதி, அயம், செம்பு இவற்றை வெகு மிருதுவாகச் சூர்ணம் செய்து, அவற்றைச் சூர்ணாஞ்ஜநமாகப்[5] பிரயோகிக்கலாம். அல்லது அச் சூர்ணங்களையே தேனிற் கலந்து இரஸக்ரியையாகச் செய்தாவது அஞ்ஜநமிடலாம்.—4, 5½.

---

1. முன் அத்தியாயத்தில் நேத்திர ஸந்திகள், வெண்மண்டலம், கருவிழி ஆகியவற்றைப் பற்றி யுண்டாவதாகக் கூறிய வியாதிகளுக்குக் கிரமமாக இங்கே சிகித்ஸைகள் கூறப்படுகின்றன.

2. பிரதிஸாரணம் 9-ம் அத்தியாயம் ஆரம்பத்திற் பார்க்க.

3. 'வர்த்மாவை லேகநம் செய்யு முறை'' யென்று 9-ம் அத்தியாயத்திற் கூறியுள்ள விஷயத்தினடியில் விவரிக்கப்பட்டுள்ள முறை.

4. அர்மத்திற் கூறப்படும் முறை:—''நன்றாகச் சேதநம் செய்து, தேன்-த்ரிகடு-இந்துப்பு இவற்றால் பிரதிஸாரணம் செய்வித்து, சூடான நெய்யைக் கண்மீது ஊற்றி, பிறகு தேன் நெய் இவற்றையும் பூசி, பந்தநம் செய்யவேண்டும். மூன்றாம் நாள் கட்டை அவிழ்த்து புங்கவிதையால் தயார் செய்த கிருதத்தினால் ஆச்சியோதநம் செய்யவேண்டும்.''

5. சூர்ணாஞ்ஜநம் — முதற்பாகம் பார்க்க.

கிருமிக்கிரந்திசிகித்ஸை:—'கிருமிக் கிரந்தி' யென்னும் வியாதியில் முதலில் சாணத்தினல் ஸ்வேதநம் செய்வித்து, சஸ்திரத்தினல் சேதநம் செய்து, லேகநமும் செய்வித்து, த்ரிபலே, தேன், அன்னபேதி, இந்துப்பு ஆகியவற்றைக் கொண்டு பிரதிஸாரணம் செய்யவேண்டும்.—6½.

சுக்லிகா, பலாஸக்கிரதிதம், பிஷ்டகம் இவற்றின் சிகித்ஸை:—(1) "சுக்லிகா" என்னும் வியாதியில் பித்தாபிஷ்யந்தத்திற்குச் செய்வதுபோலவே சிகித்ஸை செய்யவேண்டும். (2) "பலாஸக்கிரதிதம்" என்னும் வியாதியிலும், (3) "பிஷ்டகம்" என்னும் ரோகத்திலும் கபாபிஷ்யந்தத்திற்குச் செய்யும் சிகித்ஸைகள் அவசியமானவையாம்; ஆனல் ஸிராவ்யதை மாத்திரம் இதில் தகாது.—7½.

த்ரிகட்வாத்யாஞ்ஜநம், ஜாத்யாதிவர்த்தி:—(1) த்ரிகடு, சிறுதேக்கு இவற்றை கொம்மட்டிமாதளேயின் ஸ்வரஸத்தினல் ஆட்டி, கண்ணில் அஞ்ஜநமிடலாம். (2) ஜாதி மல்லிகை மொக்கு, இந்துப்பு, தேவதாரு, சுக்கு இவற்றை காஞ்ஜிகத்தினல் ஆட்டி வர்த்தி செய்யவும். இதை அஞ்ஜநமிட்டால் கண் வீக்கம், அரிப்பு இவை தீரும்.—8, 9.

ஸிரோத்பாதாதிகளுக்கு சிகித்ஸை:—(1) ஸிரோத்பாதம், ஸிராஹர்ஷம், ஸிராஜாலம், அர்ஜுநம் இவற்றிற்கு ரக்தாபிஷ்யந்தத்திற்குச் செய்யும் சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும். (2) விசேஷசிகித்ஸைகள்:— ஸிரோத்பாதமென்னும் வியாதியில் விசேஷமாக நெய், தேன் இவற்றை அஞ்ஜநமிடவேண்டும். ஸிராஹர்ஷத்தில் இரஸாஞ்ஜநத்தைத் தேனில் மிக்க மிருதுவாகத் தேய்த்து, அதைக்கொண்டு அஞ்ஜநமிடலாம். அர்ஜுனத்தில் சர்க்கரை, மோரின் தெளிவு, தேன இவற்ருல் ஆச்சியோதநம் செய்வது நலம். படிக்காரம், குங்குமம், சங்கு இவற்ருலான ஸ்படிகாத்யஞ்ஜநத்தைத் தேனிற் குழைத்து உபயோகிக்கலாம். அல்லது ஸௌவீராஞ்ஜநத்தையாவது தேனிற் குழைத்து இடலாம். சங்கையாவது, கடல் நுரையையாவது சர்க்கரையோடு கலந்து உபயோகிக்கலாம். 10—12.

அர்ம சிகித்ஸை:—ஐந்து விதமான அர்மங்கள் முன்பு கூறப்பட்டன வல்லவா?[1] அவற்றுள் மெல்லியதாகவும், புகைபடிந்தது போல மங்கலாகவும், சிவப்பாகவும், அல்லது தயிர்போன்றதாகவும் உள்ள அர்மத்தை சுக்ரத்தைப் போல் சிகித்ஸிக்கவேண்டும்.—13.

---

1. சுக்லார்மம், சோணிதார்மம், ப்ரஸ்தார்யர்மம், ஸ்நாவார்மம், அதிமாம்ஸார்மம் என்பவை ஐந்து அர்மங்கள்.

அர்மரோகத்திற்கான சஸ்திரசிகித்ஸை:—பிணியாளியை மல்லாந்து படுக்கச் செய்து, கோளாறடைந்த நேத்திரத்திற்கு ஸ்வேதநம் செய்யவும். பிறகு கொடிமாதுளைச் சாற்றிற் சிறிது இந்துப்பைக் கூட்டிக் குழைத்து, அஞ்ஜநத்தைப் போல் பிரயோகித்து, கண்ணை மூடச் செய்து, விரல்களால் மெதுவாகத் தேய்க்கவும். கண் இவ்வாறு அழற்சியுறத் தூண்டப்படவே அர்மாவிலுள்ள மாம்ஸ வளர்ச்சி பருத்து அசையும். உடனே பிணியாளியைத் தலை அசையாது கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அதினும் ஜாக்கிரதையாக வர்த்மாக்களையும் பலமாகப் பற்றிக்கொண்டு, கன்னத்தின் பக்கமாகப் பார்க்கச் செய்யவும். அப்பொழுது அர்மாவானது தடித்துப் பருத்துவர, நாசியின் பக்கமாயுள்ள குவளையின் அருகில் மடிப்பு ஏற்படும். அவ்வாறு மடிப்புண்டான விடத்தில் அர்மாவை படிசம் என்னும் ஆயுதத்தினாலாவது, ஊசியால் குத்திச் செலுத்திய நூலாலாவது, முசிண்டியினாலாவது பற்றிக் கொண்டு, குவளையின் பக்கமாக அர்மாவைச் சிறிது இழுத்து, அதில் நாலில் ஒரு பாகத்தை விட்டு விட்டு, மற்றதை மண்டலாக்ரம் என்கிற சஸ்திரத்தினால் அறுத்துப் போடவும்; குவளையின் பக்கத்திலுள்ள அச்ருவாஹிநி என்கிற கண்ணீர் வடியும் நாடிகளில் சஸ்திரம் படாதபடி அவற்றைக் காக்க வேண்டும்.; குவளை தாக்கப்பட்டால் கண்ணீர் அச்ருநாடியின் மூலமாய் நேத்திரத்தினுள் வீழ்ந்து தொந்தரவளிக்கும். இவ்விதம் சஸ்திரத்தைப் பிரயோகம் செய்ததும் தேனை நேத்திரத்தினுள் விடவும். பிறகு குவளையின் பக்கமாகப் பார்க்கச் செய்து, மற்றொரு புறத்தில் அர்மா பருத்து வந்ததும் கன்னத்தின் பக்கமாக அதை இழுத்துச் சேதிக்கவேண்டும். 14—19.

அர்மச் சேதத்தில் பிந்திய உபசாரம்:—நன்றாகச் சேதநம் செய்தபிறகு (1) இந்துப்பு, த்ரிகடு இவற்றைத் தேனிற் குழைத்து, அக்கல்கத்தைச் சிறிது அறுத்த விடத்திற் செலுத்தி, தோஷத்தை வடியச் செய்யவும். (2) சிறிது சூடான நெய்யை அதன் மேல் ஊற்றவேண்டும். (3) பிறகு தேனும் நெய்யும் கலந்து தடவி, முறைப்படி கட்டு கட்டி விடவும். (4) அப்பால் மூன்றாம் நாள் அல்லது நான்காம் நாள் கட்டை அவிழ்த்து, புங்கம் விதையைச் சேர்த்துக் காய்ச்சிய பாலாலாவது, மஞ்சள், மரமஞ்சள், வெள்ளிலோத்தி, பேய்ப்புடல், அதிமதுரம், பலாசவித்து, மருதோன்றிக் கொழுந்து ஆகியவற்றைச் சேர்த்துக்காய்ச்சி, தேனும் கூட்டிய பாலாலாவது லேகநம் செய்யவேண்டும். (5) பிறகு ஏழாம் நாள் முற்றிலும் கட்டை அவிழ்த்துப் போடவேண்டும். 20—22.

முறை தவறிய அர்மச்சேதத்திற்குப் பரிஹாரம்:—அர்மதோஷம் ஒழுங்காக அறுக்கப்பட்டிருந்தால் பிறகு கண் சுகமடையும். அரை குறையாக அறுத்தாலும் மிதமிஞ்சி யறுத்தாலும்

காணக்கூடிய நோய்களில் முந்தியதை ஸேசநம் அஞ்ஜநம் முதலியவற்றில் லேகந குணமுள்ளவைகளாலும், பிந்தியதை பிருஹ்மண குணமுள்ள அவ்வௌஷதங்களாலும் பரிஹரிக்கவேண்டும்.—23.

ஸிதாத்யஞ்ஜநம்:—சர்க்கரை, மநச்சிலை, பத்மகம், உத்தாமணி, இந்துப்பு, சுக்கு இவை வகைக்கு அரை கர்ஷப்பிரமாணம்; இரஸாஞ்ஜநம் அரைப்பலம் எடை; இவற்றை ஒன்றாகத் தேன் விட்டு ஆட்டி யெடுத்து அஞ்ஜநமாக உபயோகிக்கவும். இது கபதோஷத்தினாலான திமிரரோகம், பில்லம், சுக்லார்மம், நேத்திர சோஷம் ஆகியவற்றைப் பரிஹரிக்கும்.—24, 24½.

நிமியின் பலத்ரயாஞ்ஜநம்:—த்ரிபலைகளில் ஏதேனும் ஒன்றின் மேல்தோலை உடைத்தெடுத்து, சூர்ணம்செய்து, அதைத் தண்ணீர்விட்டு அரைத்துக் கல்கமாகச் செய்து, ஒரு சட்டியில் எடுத்து, அதன் வாயை அகலால் மூடி எரிக்கவும்; பிறகு அதை எடுத்துச் சூர்ணம் செய்து, மற்ற இரண்டு காய்களின் கஷாயங்களில் தனித் தனியே பாவனை செய்து, உலர்த்தி யெடுத்து, அதில் இரு மடங்கு இந்துப்பைக் கூட்டி, நன்றாக அரைத்தெடுக்கவும். இவ்வாறாக த்ரிபலையைச் சேர்ந்த ஒவ்வொரு காயையும் தனித் தனியாக அஞ்ஜநமாகச் செய்து உபயோகிக்க, ஆக இம்மூன்றும்[1] சிறந்த லேகநௌஷதமாகும்[2] என்று நிமி என்னும் முனிவர் கூறுகிறார். 25—27.

ஸிராஜாலத்தில் அஸாத்திய நிலைமைக்குச் சிகித்ஸை:—ஸிராஜாலம என்கிற வெண்மடலைச் சேர்ந்த வியாதியில் ஸிரைகளென்கிற இரத்தநாடிகள் கடினமாகப்போய், லேகநௌஷதங்களால் நிவ்ருத்திக்கக் கூடாதவைகளாய்விட்டால், அந்த ஸிராவியாதியையும், நேத்திரபிடகைகளையும் அர்மரோகத்தைப் போல் சிகித்ஸிக்கவேண்டும்.—28.

சுக்ரங்களில் செய்யத்தகுந்த சிகித்ஸைகள்:—சுக்ரம் என்னும் நேத்திர ரோகங்களில் அந்தந்த தோஷத்தை அனுஸரித்து த்ரிபலாக்ருதத்தையும், திக்தகக்ருதத்தையும் ஸ்நிக்த்தமாகவோ ரூக்ஷமாகவோ இருக்குமாறு பக்குவம் செய்து உபயோகிக்கவும்;

---

1. தான்றிக்காய்த்தோலைச் சூர்ணம் செய்து, பஸ்மமாக்கி, நெல்லிக்காய், கடுக்காய் இவற்றின் கஷாயங்களில் தனித்தனியே பாவனை செய்தெடுக்கவும். அப்படியே நெல்லிக்காய்த்தோலின் சூர்ணத்தை மற்ற இரண்டு காய்களின் கஷாயங்களிலும் பாவனை செய்தெடுக்கலாம். அவ்விதமே கடுக்காய்த்தோலை மற்ற இரண்டு காய்களின் கஷாயங்களிலும் பாவனை செய்தெடுக்கலாம். இவ்விதம் இம்மூன்றும் மூன்று பிரத்தியேக அஞ்ஜநங்களாகும்.

2. லேகநௌஷதம் — நேத்திரதோஷங்களைக் கரைத்து வெளிப்படுத்தும் ஔஷதம்.

சிரஸ்ஸில் இரக்தமோக்ஷணம் செய்யலாம். விரேசநம் ஸேசநம் என்கிற மருந்துகளை ஊற்றும் முறை முதலியவற்றையும் நிறைவேற்றலாம் எனப்படுகிறது.—29.

க்ஷதசுக்ரத்திற்கான சிகித்ஸைகள் :—சுக்ரம் என்கிற வியாதியில் (1) சிவதைவேர் கஷாயத்தில் மூன்றுமுறை காய்ச்சியெடுத்த கிருதத்தைப் பருகலாம். (2) கண்ணிலிருந்து ஸிராவ்யதை மூலமாகவாது, (3) அட்டைகளைப்பிரயோகித்தாவது இரத்தத்தை வெளிப்படுத்தலாம். (4) நைதல்மலர், காகோலி, திராக்ஷை, அதிமதுரம், நிலப்பனங்கிழங்கு இவற்றையும் சர்க்கரையையும் கூட்டி பக்குவம் செய்த பாலையாவது கண்ணின்மேல் விடலாம். (5) அல்லது அச்சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தையாவது கண்மேல் விடலாம். (6) கண்ணில் சிவப்பு, நீர்வடிதல், வலி இவைதணிந்த பிறகு லேகநாஞ்ஜநம் இடுவது நலம்.—30, 31½.

ஜாத்யாதிவர்த்தி :—ஜாதிமல்லிகைமொக்கு, சொம்பரக்கு, கைரிகம் என்னும் காவி, சந்தனம் இவற்றை ஆட்டியெடுத்து, வர்த்திகளாகச் செய்யவும்; இவ்வர்த்தியைக் கண்ணில் இட்டால் பித்த-ரக்தத்தைத் தணித்து, நேத்திரத்திற்குத் தெளிவைத் தரும்; க்ஷதசுக்ரத்தையும் தீர்க்கும்.—32½.

தந்தவர்த்தி :—யானை, பன்றி, ஒட்டகம், பசு, குதிரை, கழுதை இவற்றில் ஏதேனும் ஒன்றின் பல்லையும், சங்கு-நல்முத்து-கடல்நுரை இவற்றையும், அவ்வனைத்திற்கும் நாலிலொரு பங்கு மிளகையும் கூட்டி வர்த்திசெய்யவும்; இது தந்தவர்த்தியெனப்படும்; நேத்திரத்திற் பெரிதும் பாவியுள்ள க்ஷதசுக்ர வியாதியை இது தீர்க்கவல்லது.—33, 34.

தமாலபத்ராதிவர்த்தி :—பச்சிலை, பசுவின் பல், சங்கு, கடல் நுரை, கழுதையின் எலும்பு, செப்புத்தூள் இவற்றைக் கோமூத்திரம்விட்டு அரைத்து வர்த்தியாகச் செய்து உபயோகிக்க எல்லாச் சுக்ரரோகமும் தீரும்.—35.

இரத்நாத்யஞ்ஜநம் :—நவரத்தினங்கள், யானை முதலியவற்றின் தந்தங்கள், பசு முதலியவற்றின் கொம்புகள், த்ரிகடு, சிற்றேலம், புங்கம்விதை, வெள்ளுள்ளி, விரணசோதநமான பிரம்மதண்டு முதலிய சரக்குகள் இவற்றை நன்றாக நீர்விட்டரைத்து அஞ்ஜநமாகப் பக்குவம் செய்யவும். இது விரணமுள்ள சுக்ரம், விரணமில்லாத சுக்ரம், வெகு ஆழமாயுள்ள சுக்ரம் ஆகிய எல்லாச் சுக்ரங்களையும் தீர்க்கவல்லது.—36, 36½.

நிம்நசுக்ரம் முதலியவற்றை மேலுக்குயர்த்துதல் :—(1) ஸ்நேஹபாநம், நஸ்யம், இரஸாஞ்ஜநம் இவற்றின பிரயோகங்களால் ஆழ்ந்துள்ள சுக்ரத்தை மேலுக்கு உயர்த்தலாம். (2) வலியுடன் கூடிய சுக்ரத்தைத் தர்ப்பண சிகித்ஸையினாலும், (3) வலியற்ற சுக்ரத்தைப்புடபாகசிகித்ஸையினாலும் நிவ்ருத்திசெய்யலாம்.—37½.

சுத்தசுக்ர சிகித்ஸை :—(1) சுத்தமான சுக்ரத்தில் மஞ்சள், நன்னாரிவேர், உதியன்பட்டை இவற்றின் கஷாயத்தை நேத்திரத்தில் மெதுவாக ஊற்றலாம். (2) அல்லது உதியன்பட்டையை இடித்துப் பொட்டலமாகத் துணியிற் சுற்றி, அதை உஷ்ணஜலத்தில் தோய்த்து நேத்திரத்தின்மேல் விடலாம்.—38½.

மஹாநீலகுளிகை :—கண்டங்கத்தரிவேர், அதிமதுரம், செப்புப்பொடி, இந்துப்பு, சுக்கு இவற்றை நெல்லிக்காய்ச் சாற்றால் அரைத்து, அக்கல்கத்தை ஒரு தாம்ரபாத்திரத்தின்மேல் பூசவும்; பிறகு வாற்கோதுமை, நெல்லியிலை இவற்றை நெய்யிற் கலந்து அக்கினியிலிட்டு, அதிலிருந்து கிளம்பும் புகையினால் அப்பாத்திரத்தின்மேல் பலமுறை தூபமிடவும்; அப்பால் அக்கல்கத்தை வழித்தெடுத்துத் தேனும் சிறிது ஜலமும் சேர்த்து மீண்டும் ஆட்டியெடுத்துக் குளிகைகளாகச் செய்யவும். இவற்றை "மஹாநீலகுளிகைகள்" என்பார்கள். இவை சுத்த சுக்ரங்களைத் தீர்ப்பதிற் சிறந்த மாத்திரைகளாம். 39—41.

பலமான கனத்த சுக்ரத்திற்குச் சிகித்ஸைகள் :—சுக்ரரோகம் நிலைத்தும் கடினமாகவும் ஏற்பட்டிருந்தால் (1) பிணியாளிக்கு அநேக முறை இரக்தமோக்ஷணம் செய்யலாம். (2) சிரோவிரேசநமும், குடலைச் சுத்தம் செய்யும் காயவிரேசநமும் செய்யலாம். (3) பலமுறை புடபாகப் பிரயோகமும் பண்ணலாம். (4) மிளகு, திப்பிலி, காட்டுவாகைக்காய், இந்துப்பு இவற்றைக் கொண்டு கண்புரையைத் தேய்க்கலாம். (5) இந்துப்பை த்ரிபலாகஷாயத்தில் பாவனை செய்தெடுத்து அதனாலாவது சுக்ரத்தைத் தேய்க்கலாம். (6) பின்வரும் இரண்டுவித அஞ்ஜந முறைகளில் ஒன்றையாவது பிரயோகிக்கலாம். (அ) சங்கு, இலந்தங் கொட்டை, தெற்றாங் கொட்டை, திராக்ஷை, அதிமதுரம், தேன் இவற்றை ஒருமிக்க அரைத்து செய்யப்படுவது சங்காஞ்ஜநம். (ஆ) யானைத்தந்தம், கடல்நுரை, காட்டுவாகைப்பூ இவற்றைக் கள் விட்டு அரைத்துச் செய்யப்படுவது தந்தாஞ்ஜநம். இவற்றுள் ஒன்றை முற் குறிப்பிட்டவாறு உபயோகிக்கலாம். 42—44½.

சுக்ரஹர்ஷணாஞ்ஜநம் :—நெல்லிக் கனியின் ஸ்வரஸத்திலும், எலுமிச்சம்பழ ஸ்வரஸத்திலும், யானைத் திப்பிலியின் க்ஷாரத்தைப் பாவனை செய்தெடுத்து, நன்றாக உலர்த்திச் சூர்ணாஞ்ஜநமாக உபயோகிக்க, இது சுக்ரத்தை ஹர்ஷணம்[1] செய்யும்.—45½.

சுக்ரஹர்ஷணத்திற்கான வேறு முறைகள் :—(1) உமிநீக்கிய பயறை மாவாக அரைத்து, அதில் சங்குப் பொடியையும் தேனை

1. சுக்ரஹர்ஷணம்—சுக்ரம் என்றால் கண்ணில் பூவிழுதல் என்று வழங்கப்படும் நேத்திர வியாதி; ஹர்ஷணம் என்றால் அந்தப் பூவை மலரச் செய்தல்; என்றால் ஆழ்ந்துள்ள சுக்ரத்தை மலர்ந்து மேலெழச் செய்தல் எனக் கருத்து.

யுங் கூட்டி, அஞ்ஜநமாய் உபயோகிக்கலாம். (2) இலுப்பைப் பூவின் ஸ்வரஸத்தையும் தேனையுங்கூட்டி அவ்விதம் உபயோகிக் கலாம். (3) தான்றிக்காயின் பருப்பையாவது தேனிற் குழைத்து அஞ்ஜநமிடலாம்.—46½.

கோதந்தாதிவர்த்தி :—பசு, கழுதை, குதிரை, ஒட்டகம் இவற்றின் பற்கள், சங்கு, கடல்நுரை இவற்றை மருதம்பட் டைக் கஷாயத்தினால் ஆட்டியெடுத்து வர்த்திசெய்து உபயோகிக் கலாம். இது சுக்ரஹர்ஷணம் செய்யுங் குணமுடையது.—47½.

மேலெழுந்துள்ள சுக்ரத்தை விலக்குதல் முதலியது :—(1) உயர்ந்து மேலெழுந்திருக்கும் சுக்ரத்தையும், சல்யம் உள்ளடங் கிய சுக்ரத்தையும் உரோமம் முதலியதால் அறுத்து விலக்கவும். (2) ஸிரைகளைப்பற்றிய சுக்ரம் த்ருஷ்டிபாகத்தைத் தாக்கிக் கெடுக்காமலிருந்தால் அதற்கு விரணசுக்ரத்திற்குச் செய்வது போன்ற சிகித்ஸை ஏற்றதாம்.—48½.

அஞ்ஜநவர்த்தி :—முல்லைப்பூ, அதிமதுரம், காகோலி, கண் டங்கத்தரி, அயப்பொடி, மரமஞ்சள், இரஸாஞ்ஜநம் இவற்றைச் செம்மறியாட்டுப் பாலால் ஆட்டியெடுத்து, இக்கல்கத்தை நெய் யிற் கலந்த யவதானியங்களாலும், நெல்லி யிலைகளாலும் மாற்றி மாற்றித் தூபமிட்டு வர்த்திசெய்து அஞ்ஜநமாக உபயோகிப்பது நலம்.—49, 50.

அஜகா சிகித்ஸை :—(1) அஜகையென்னும் வியாதிக்கும் ஸிராசுக்ரம் முதலியதற்குச் செய்த சிகித்ஸைகளைச் செய்தும், அது குணமடையாவிட்டால் அர்மரோகத்திற்குச் செய்யுமாறு சஸ்திரசிகித்ஸை செய்யவேண்டும். (2) அஸாத்ய நிலைமையி லுள்ள அஜகாரோகத்திலும், அதேவிதமான வேறு சுக்ரரோகத் திலும் கோரத்தன்மையைப் போக்கி, வேதனையையும் தணியச் செய்வதற்காக ஸ்நேஹபானம் செய்தல், இரக்தமோக்ஷணம் பண்ணுதல் முதலிய உபாயங்களால் மேலெழுந்த சுக்ரத்தை ஆழ்த்துவதற்காகச் செய்யக்கூடிய பரிஹாரமுறைகளைப் பிர யோகிக்கலாம்.—51, 52.

கரபாஸ்த்திசூர்ணஞ்ஜநம் :— தேங்காய் ஓடு, சேராங் கொட்டை, பனங்கொட்டை, மூங்கிற் குருத்து இவற்றை எரித் துச் சாம்பலாக்கவும்; அச்சாம்பலைத் தண்ணீரில் கரைத்து வடிக் கட்டவும்; அந்த நீரில் ஒட்டகத்தின் எலும்புப் பொடியைக் கொண்டுவந்து பாவனை செய்யவும். இது அஸாத்யமெனப்படுகிற சுக்ரரோகங்களில் ஏற்பட்டுள்ள நிறமாறுபாட்டை நிவ்ருத்தி செய்யும்; சிகித்ஸைக்கு வசப்படுபவற்றில் இதையே குளிர்ச்சி யாகக் கண்களில் பிரயோகித்து அக் கோளாறைத் தீர்க்கலாம். —53, 54.

**அஜகாவுக்கு சஸ்திர சிகித்ஸை :**—அஜகா என்கிற வளர்ச்சியில் பக்கவாட்டில் ஊசியினால் குத்தி, வைத்தியன் வலையில் தன் பெருவிரலைத் தோய்த்து ஸ்நிக்த்தமாக்கிக் கொண்டு, அவ் விரலால் நாற்புறமும் ஒரே சீராக அழுத்தி, அதிலடங்கிய நீரை நன்றாக வடியச் செய்யவும். உலர்த்திப் பொடிமாதிரியாகச் செய்த பசுவின் மாம்ஸத்தை அந்த த்வாரத்தில் அழுத்திவைத்து மேலே கட்டு கட்டவும். பிறகு ஏழு நாட்களில் விரணம் ஆறிவிடும்; அப்பொழுது கருவிழியின் பாகம் காய்ப்பு முதலியது இல்லாமல் மேடுபள்ளமின்றி ஸமமாகவும் ஆரோக்கிய நிலைமைக்கேற்ற பலம் பெற்றதாகவும் ஆகும். அவ்வித குணமேற்பட்டதும் ஸ்நேஹாஞ்ஜநம்[1] பிரயோகிக்க வேண்டும்; க்ஷீரகிருதத்தினால்[2] நஸ்யமும் இடவேண்டும். இவ்வளவு செய்தும் மீண்டும் காய்ப்பு போன்ற பிதுக்கம் கண்ணில் உண்டானால் கண்புரையில் அதிக ஆழமான வடு விழாதபடி வெகு திறமையாக மறுபடி சஸ்திர சிகித்ஸை செய்யவேண்டும். 55—57½.

**சுக்ரரோகங்களில் கிருதாஞ்ஜநப் பிரயோகங்கள் :**—அந்தந்த உபயோகங்களுக்கு ஏற்ற முறைப்படி பக்குவம் செய்யப்பட்ட கிருதத்தைச் சுக்ரரோகங்களில் தினந்தோறும் பானத்திற்கும், மர்சநஸ்யமிடுவதற்கும்[3] உபயோகித்து வந்தாலும், அவ்விதமே தினந்தோறும் தீக்ஷ்ணாஞ்ஜநத்தைக்[4] கண்ணுக்குள் பிரயோகித்தாலும் கண்பார்வை பலம் பெற்று அப்பால் எக்குறைவையும் அடைவதில்லை.—58.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

### திருஷ்டிரோக விஞ்ஞானம்.

இனி **திருஷ்டிரோக விஞ்ஞானம்**[5] என்னும் அத்தியாயம் விரித்துரைக்கப்படும் :—

---

1. ஸ்நேஹாஞ்ஜநம் — ஸ்நிக்த்தகுணமுள்ள சரக்குகளால் செய்யப்படும் அஞ்ஜநம். இது ம்ருத்வஞ்ஜநம் என்றும் கூறப்படும்.

2. க்ஷீரக்ருதம் — பாலைக்காய்ச்சிக் குழப்பி, அதிலிருந்து கிரஹிக்கப்படும் நெய்.

3. மர்சநஸ்யம் — முதற் புத்தகம் பார்க்க.

4. தீக்ஷ்ணாஞ்ஜநம் — லேகநாஞ்ஜநம் என்றும் இது கூறப்படுவதுண்டு. இது உப்புகள், க்ஷாரங்கள் முதலியவற்றால் செய்யப்படும்.

5. திருஷ்டி—விழியின் மத்தியிலுள்ள 'பாபா' என்னும் பாகம்; அவ்வவயவத்தைப்பற்றி யுண்டாகும் வியாதி 'திருஷ்டி ரோகம்' எனப்படும்; அந்த ரோகங்களை அறிவிக்க உபயோகமான அத்தியாயம்.

**முதற் படலக் கோளாறு** :—வாதாதி தோஷங்கள் பார்வை நரம்பைப் பற்றியவையா யிருந்து, முதற் படலத்திலும்[1] ஸம்பந்தப்பட்டால் விளக்கமாயுள்ள உருவமும் திடீரென்று விளக்கமற்றதாகக் கண்ணுக்குத் தோன்றும்.—1.

**இரண்டாம் படலக் கோளாறு** :—தோஷம் இரண்டாம் படலத்தைப் பற்றியதானால் எதிரில் ஏதுமில்லாம லிருந்தும் ஏதோ நிற்பதுபோலத் தோற்றும்; அருகில் உள்ள வஸ்துவைப் பெரு முயற்சி கொண்டு பார்க்க வேண்டியதாகும்; தூரத்திலுள்ளதையும், நுட்பமானதையும் காணமாட்டான்; மேலும் சில ஸமயம் தூரத்தி லிருப்பது அருகிலிருப்பதாகவும், அருகி லிருப்பது தூரத்திலிருப்பதாகவும் நிலை மாறித் தோற்றும்; தோஷம் நடு நேத்திர மண்டலத்தைப் பற்றி யிருப்பதால் ஏதோ வட்டங்கள் போன்ற பிம்பங்கள் எதிரில் தோன்றும்; திருஷ்டியின் மத்தியில் இருந்தால் ஒரு வஸ்து இரண்டாகவும், தோஷம் பலவாறு பிரிந்திருந்தால் ஒரு வஸ்துவைப் பலவாகவும் பார்ப்பான்; தோஷம் திருஷ்டி பாகத்தை ஆழமாகத் தாக்கி யிருந்தால் சிறியது பெரிதாகவும், பெரியது சிறிதாகவும் வித்தியாசப்பட்டுப் புலப்படும்; திருஷ்டிக்கு அடிப்புறமாகத் தோஷம் பற்றி யிருந்தால் அருகிலிருக்கும் பொருளும், மேற்புறமாகப் பற்றி யிருந்தால் தூரத்திலுள்ள பொருளும், பக்கவாட்டில் பற்றி யிருந்தால் பக்கத்திலுள்ள பொருளும் பார்வைக்குப் புலப்பட மாட்டாது. இவ்வியாதி **திமிரம்**[2] என்று வழங்கப்படும். 2—5.

**மூன்றும் படலக் கோளாறு** :—தோஷம் மூன்றும் படலத்தைப் பற்றியதானால் அது **காசம்** என்கிற ரோகமாகப் போகின்

---

1. படலம்—புரை அல்லது புறணி. [நேத்திரத்தில் நான்கு படலங்கள் என்கிற புறணிகள் அமைந்திருக்கின்றன. முதற் படலத்தை வெளிப் படலம் என்று அருணதத்தன் எழுதுகிறார்; ஆனால் அதற்கு ஆதாரம் அவர் கூறவில்லை. மாதவ நிதாநம் மதுகோச வியாக்யாநத்தில் எல்லாவற்றிற்கும் உட்புறமாய் அமைந்துள்ள புறணிதான் முதற் படலம் என்றும், அதை வெளிப் படலமென்று கூறுவது பிசகென்றும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது ]

2. தோஷம் முதற் படலத்தைப்பற்றி வியாதி யுண்டாக்கும் நிலைமையிலிருந்தே இக் கோளாறுக்குத் 'திமிரம்' என்று பெயர் என்பதாக ஸர்வாங்க ஸுந்தரி வியாக்யாநம். ஆனால் மூல வாக்கியத்தையும், மாதவ நிதாநாதி இதாக் கிரந்தங்களில் விவரித்துள்ள விஷயங்களையும் பரிசீலனை செய்தால், நான்காம் படலத்தையும் தோஷம் தாக்கினபிறகுதான் திமிரம் என்னும் வியாதிநிலைமை ஏற்படுவதாக விளங்குகிறது. திமிரம் என்றால் இருள்; பார்வை முற்றிலும் இழக்கப் படுவதைக் குறிக்கும் லிங்கநாசம் என்பதற்கும் திமிரம் என்பதற்கும் ஆகவே பேதமில்லையென்றும் விளங்குகிறது.

றது[1]; இதில் மேற் பார்வைதான் தெரியும்; கீழ்ப் பார்வை தெரிய மாட்டாது; நேத்திரம் மெல்லிய வஸ்திரத்தினால் மறைக்கப்பட்டதுபோல் உணரப்படும்; எந்த தோஷம் பிரபலமாயிருந்து நோயுண்டாகின்றதோ அந்த தோஷத்திற்கு ஏற்ற நிறத்தையும் திருஷ்டி அடைகின்றது; திருஷ்டிக்குள்ள பார்வைச் சக்தியும் கிரமமாக இழக்கப்பட்டு வரும்.—6, 6½.

நான்காம் படலக் கோளாறு :—மூன்றும் படலம் கோளாறடைந்த பிறகும் அது உபேக்ஷிக்கப்பட்டால், தோஷமானது லிங்கநாசம்[2] என்னும் வியாதியை யுண்டுபண்ணி, த்ருஷ்டி மண்டலத்தை முற்றிலும் மறைத்துப் போடும்.—7½

வாத திமிரம் :—(1) அவற்றுள் திமிரரோகம் வாததோஷத்தினால் உண்டானால் பொருட்களை அப்பிணியாளி வக்கிரமாயிருப்பவை போலப் பார்ப்பான்; மேலும் அவை சஞ்சலமாகவும், அழுக்கடைந்தனவாகவும், மற்றொரு ஸமயம் தெளிவாயிருப்பதாகவும் காண்பான்; அடிக்கடியும் ஜாலங்களைப்போலவும், மயிரிழைகளைப் போலவும், கொசுக்களைப் போலவும், கிரணங்களைப்போலவும் உள்ள உருவங்கள் தென்படும். (2) இந் நிலைமை உபேக்ஷிக்கப் படுமானால் திருஷ்டியிலுள்ள கோளாறு காசமாக முதிர்ந்துவிடும்; அப்பொழுது கண் சிறிது சிவக்கும்; எதிரில் வருபவருடைய முகம் நாசியற்றது போலத் தோற்றும்; சந்திரன், தீபம் முதலியவை ஒன்றாயிருக்கையிலும் அநேகம்போல் புலப்படும்; கோணலாயிருப்பதும் நேராயிருப்பதுபோலக் காணப்படும். (3) காசரோகம் முதிர்ந்தால் கண்ணில் தும்பு தூசுகளும் தூமமும் படிந்ததுபோலச் செய்யும்; பிறகு சென்னிறம் அதிகப்படும்; திருஷ்டிபாகம் விரிவடையும் அல்லது குறுகிப் போம். கண்பார்வை முற்றிலும் இழக்கப்படும். இது "லிங்கநாசம்" என்கிற வியாதியாம். (4) பிறகு வாததோஷம் கண்ணிலுள்ள நரம்புகளைச் சுருக்கிவிட, நேத்திரமண்டலம் உள்ளே ஆழ்ந்துவிடும்; இந்த வியாதிநிலைமை கம்பீரத்ருக் அல்லது கம்பீர திருஷ்டி எனப்படும். 8—12.

பித்த திமிரம் :—(1) பித்ததோஷத்தினால் உண்டாகும் திமிர ரோகத்தில் மின்னல், மின்மினிப்பூச்சி, வேறுவித ஒளிகள், மயிலிறகின் மினுக்கம், காடையிறகின் மினுக்கம் ஆக இவை போன்ற ஒளிகளையும், பெரும்பாலும் நீலநிறத் தோற்றத்தை

---

1. லிங்கநாசமே காசம் அல்லது நீலிகாகாசம் எனப் படுவதாக மாதவகரன்.

2. லிங்கம் என்றால் உருவம்; அதன் தோற்றம் இழக்கப்படுவது லிங்க நாசம். [திமிரம், லிங்க நாசம், காசம் என்று வழங்கப்படும் இவ் வியாதிகள் ஆங்கிலத்தில் 'காடராக்ட்' என்கிற வியாதியின் பலவேறு நிலைமைகளாகக் கருதப்படுகின்றன.]

யும் ஒன்றுமில்லாத ஆகாயத்திற் காண்பான். (2) காசரோகத்தில் திருஷ்டியின் பாகம் காசம்போல் நீலநிறத்தைப் பெற்று, அவ் விதமே எதிரில் இருப்பவையும் நீலமாகத் தோற்றும். மேலும் சூர்ய-சந்திரர்களுக்குச் சுற்றிலும் பெரிதா யேற்படும் பரிவேஷங் கள் என்கிற மண்டலங்கள், அக்னி, வேறு தேஜோமயமான கிரணங்கள், இந்திர தனுஸ் ஆகியவற்றைப் போன்ற உருவங்களும் கண்ணிற் புலப்படும். (3) அன்றியும் லிங்கநாசத்தினால் நேத் திரம் வண்டுபோல் கருநிறமாகவும், பார்வையற்றதாகவும், ஸ்நிக்த் தமாகவும் மாறும்; பித்ததோஷத்தினால் கோளாறடைந்த இந்த திருஷ்டிவிகாரத்தில் திருஷ்டிபாகம் குறுகி, பார்வையும் குறுக லாகும்; ஆகவே இது ஹ்ரஸ்வத்ருஷ்டி என்றும் வழங்கப் படும். (4) மேலும் பித்ததோஷம் அதிகமாக முதிர்ந்து, கண் பார்வையும் பசுமை நிறமாக மாறினால் அது பித்த விதக்த்த த்ருஷ்டி எனப்படும். 13—15½.

சிலேஷ்ம திமிரம்:—(1) கபதோஷத்தினாலுண்டான திமிர ரோகத்தில் பார்க்கப்படுவதை யெல்லாம் சங்கு, ஆம்பல்மலர், சந்திரன், குருக்கத்திப்பூ இவற்றால் பரப்பப்பட்டது போல வும், பெரும்பாலும் ஸ்நிக்த்தமாகவும், வெண்மையாகவும் பிணி யாளி காண்பான். (2) காசதோஷத்தில் சந்திரன், சூரியன், தீவர்த்தி முதலிய ஒளிகள் பிரகாசமற்றவைகளாகத் தோன் றும். (3) லிங்கநாசத்தில் திருஷ்டிபாகம் வெண்ணிறமாக மாறும். இதில் கபதோஷம் திரண்டு உருவெடுத்து திருஷ்டியைப் பற்றிய தாய் ஸ்நிக்த்தமாயிருந்துகொண்டு பார்வையைப் போக்கிவிடும்; கபத்தினாலான இவ்விகாரம் ஒரு பிந்து ரூபமாய், தாமரை யிலை யில் விழுந்துள்ள நீர்த்துளிபோல் சஞ்சலமாயிருக்கும்; இவ் வெளிறிய பிந்துவானது உஷ்ணம் படுகையில் சுருங்கி, நிழலில் பரவி விசாலமாகும்; இவ்வெண்மையானது சங்கு, குருக்கத்திப் பூ, சந்திரன், ஆம்பல் பூ, ஸ்படிகம் இவற்றைப் போல் காணப் படும். 16—19½.

இரத்த திமிரம்:—(1) இரத்ததோஷத்தினால் உண்டாகும் திமிரத்தில் அப்பிணியாளி எதையும் செந்நிறமா யிருப்பது போலவும் இருளடைந்தது போலவும் காண்பான். (2) இக்காச ரோகத்தினால் திருஷ்டிபாகம் செந்நிறமாகவும் கறுப்பாகவும் ஆவதுடன், பார்க்கப்படுவதும் அதே நிறமாயிருப்பது போலவே தோற்றும். (3) லிங்கநாசத்திலும் நேத்திரம் இதே வகையில் கோளாறடைந்து, பிரகாசமிழந்து பார்வை யழிந்ததாகவும் ஆகும்.—20, 21.

ஸம்ஸர்க்க - ஸந்நிபாத திமிரங்கள்:—(1) ஸம்ஸர்க்கங்கள் என்கிற இரண்டிரண்டு தோஷங்களாலாகிற திமிரரோகங்களி லும், ஸந்நிபாத திமிரத்திலும் முற்கூறிய வாதாதி தோஷங்களுக்

குக் கூறிய இலக்ஷணங்களே கலந்துண்டாகும் என்றறிக. ஸம்ஸர்க்க - ஸந்நிபாதங்களாலுண்டாகும் அத் திமிரவியாதிகளில் பார்வை திடீரென்று குழப்பங்கொண்டதாகவும், ஒவ்வொரு ஸமயம் விளக்கமாகவும் இருக்கும். (2) திமிரத்தினாலான மற்ற இரண்டுவிதமான காசம்-லிங்கநாசம் என்னும் நோய்களிலும் திருஷ்டியில் பலவகைப்பட்ட நிறம் தோன்றும்.—22, 22½.

நகுலாந்த்யம் :—நேத்திரத்தில் மூன்று தோஷங்களும் விருத்தியடைந்து கீரிப்பிள்ளையின் கண்ணைப்போல் பளபளப்பாகத் தோன்றுமானால், நகுலாந்த்யம் எனப்படும் ; அதில் பகலில் பார்வையில் பலவித நிறங்கள் தோன்றும் ; இரவில் கண் தெரியாது.—23½.

தோஷாந்த்யம் :—தோஷாந்த்யம்[1] என்கிற மற்றொரு வியாதியிலும் இரவிற் கண் தெரியாது ; ஏனெனில் சூரியன் மேற்றிசையிற் சாய்ந்ததும் நேத்திரத்தில் தோஷங்கள் சேர்ந்து ஸ்தம்பித்துப்போய் கண்பார்வையை மறைக்கின்றன ; பிறகு சூரியனுடைய கிரணங்கள் பரவும்போது அவற்றின் பரிசத்தினால் நேத்திரப் பார்வையை மறைத்திருந்த தோஷங்கள் விலகிப் போய் பகற்பொழுதில் மீண்டும் பார்க்கும் சக்தி ஏற்பட்டுவிடுகின்றது.—24, 25.

உஷ்ணவிதக்த்த திருஷ்டி [2] :—ஒருவன் உஷ்ணத்தினால் மிகத் தாபமடைந்து, உடனே திடீரெனக் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்வானானால், அப்பொழுது அவனது தேஹச் சூடானது ஸந்நிபாததோஷங்களாலும், இரத்த தோஷத்தினாலும் மேல் நோக்கித் தள்ளப்பட்டு நேத்திரக் கோளாறை யுண்டுபண்ணும் ; இதில் வெண்மடல் கலங்கியிருக்கும் ; தாபமும் அழற்சியும் நேத்திரத்தில் உண்டாகும் ; பகலில் பார்வை மழுங்கிக் கலக்கமாயிருக்கும் ; இரவில் இக்கோளாறுகளிலும் கண் தெரியாது ; இவ்வியாதி "உஷ்ண விதக்த்த திருஷ்டி" எனப்படும்.—26, 27½.

அம்ல விதக்த்த திருஷ்டி :—அமிதமான அம்லரச முள்ள உணவுகளைப் புஜிப்பதால் மூன்று தோஷங்களும் இரத்தமும் திருஷ்டியிற் சேர்ந்து, அழுக்கும் அரிப்பும் அதிகரித்து நேத்திரம் கலங்கிவிடும் ; அவ்விதமான கண்ணோய் அம்ல-விதக்த்த திருஷ்டி எனப்படும்.—28½.

தூமர திருஷ்டி :—துயரம், ஜ்வரம், தலைநோய் இவற்றால் தவித்தவனுக்கு வாதாதி தோஷங்கள் விகாரமடைந்து, கண்ணில்

---

1. தோஷாந்த்யம்—தோஷா என்றால் இரவு ; ஆந்த்யம் என்றால் கண் தெரியாமை ; இரவிற் கண் தெரியாமை ; இதை இராத்ரியாந்த்யம் என்று மாதவகரர் முதலியவர் வழங்குகிறார்கள்.

2. உஷ்ணவிதக்த்த திருஷ்டி என்பதே மாதவநிதானாதிகளில் பித்தவிதக்த்த த்ருஷ்டி என்று கூறப்படுகிறது.

புகைபடிந்தாற் போன்ற கோளாறை யுண்டுபண்ணும்; பார்வையும் தூமம்படிந்தாற்போ லிருக்கும்; இக் கோளாறு தூமரம்[1] எனப்படும்.—29½.

ஔபஸர்கிகலிங்கநாசம்:—பலக்குறைவான மனிதன் திடரென்று அற்புதமாகவும், ஆதித்தன் முதலிய அதிப் பிரகாசமாகவும் உள்ள உருவத்தைப் பார்ப்பதால் கண்ணைப் பற்றிய வாதம் முதலிய தோஷங்கள் கண்ணிலுள்ள தேஜோகுணத்தை வறளச் செய்து, திருஷ்டிக்குச் சுபாவமான பார்க்கும் சக்தியைப் போக்கி, அதை அசைவற்றதாகவும் வைடூர்யமணி நிறமாகவும் செய்துவிடும்; ஆகிலும் கண் பார்வை இயற்கை நிலைமையிலிருப்பது போலவும், வலி முதலியதற்றதாசவும் இருக்கும்; இந்த லிங்கநாச நோய் ஔபஸர்கிக லிங்கநாசம்[2] எனப்படும். 30—32.

திருஷ்டிரோகங்களில் ஸாத்யாஸாத்யாதிகள்:—(1) கபத்தினலான லிங்கநாசத்தைத் தவிர்த்து மற்ற ஆறு லிங்கநாசங்களையும், கம்பீரதிருஷ்டியையும், ஹ்ருஸ்வ திருஷ்டியையும் அஸாத்யங்கள் என்று விட்டுவிடவேண்டும். (2) ஆறுவகையான காசரோகங்களும், நகுலாந்த்யமும் ஆக இவ்வேழும் யாப்யங்களாம். (3) மற்றப் பன்னிரண்டு திருஷ்டி ரோகங்களும் எளிதில் சிகித்ஸிக்கக் கூடியன. ஆக இவ்வாறு திருஷ்டிபாகத்தில் இருபத்தேழு வியாதிகள் விவரிக்கப்பட்டன.—33, 34.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்.
## திமிரப்பிரதிஷேதம்

இனி திமிரப்பிரதிஷேதம்[3] என்னும் அத்தியாயம் விவரிக்கப் படுகின்றது:—

திமிரத்தை உபேக்ஷிப்பதாலாகும் தீமை:— திமிரம் என்னும் வியாதி காசமாகவும், பிறகு காசம் உபேக்ஷிக்கப்பட்டால் முழு குருட்டுத்தனமும் நேரிடும்; ஆகவே நேத்திரரோகங்களுக்குள் கொடியதான திமிரம் என்னும் ரோகத்திற்குச் சீக்கிரம் பரிஹாரம் செய்யவேண்டும்.—1.

ஜீவந்தீ க்ருதம்:—ஜீவந்தி என்கிற ஒஷதி நூறுபலமெடை; அதை ஒரு திரோணம் ஜலத்திற் சேர்த்துக் காய்ச்சி, அதைக் கால் பாகமாக வற்றச்செய்து வடிக்கட்டி, அக்கஷாயத்தில் அதற்கு

1. தூமரம் என்பது "தூமதர்சி" என்று மாதவகராதிகள்.

2. ஔபஸர்கிக லிங்கநாசம்—ஆகந்துக ஹேதுவால் உண்டாகும் லிங்கநாச ரோகம்.

3. முன் அத்தியாயத்திற் கூறியுள்ள திமிரரோகத்தைப் பரிஹரிப்பதற்கான முறைகளைக் கூறும் அத்தியாயம்.

இரண்டு பங்கு பாலும், ஒரு படி நெய்யும் சேர்த்துக் காய்ச்ச வேண்டும். பிறகு வறள்தாமரை, காகோலி, திப்பிலி, வெள்ளிலோத்தி, இந்துப்பு, சதகுப்பி, அதிமதுரம், திராக்ஷை, சர்க்கரை, மரமஞ்சள், த்ரிபலை இவற்றை வகைக்குக் கால்பலம் எடுத்து இடித்துக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சி வடிக்கட்டவும். இந்த கிருதத்தை இரவில் பானம் செய்யவும்; இது திமிரரோகத்தைப் போக்குவதிற் சிறந்தது.—2, 3½.

திராக்ஷாதி கிருதம்:— திராக்ஷை, சந்தனம், மஞ்ஜிஷ்டி, காகோலி, தண்ணீர்விட்டாங்கிழங்கு, மேதா, நாமக்கரும்பு, அதிமதுரம், நெய்தல் இவற்றை வகைக்குக் கால் பலம் வீதம் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் ஒரு படி புராணகிருதம் கூட்டி, அதற்குச் சமம் பாலும் சேர்த்துக் காய்ச்சி வடிக்கட்டியெடுக்கவும். இது காசம், திமிரம், சிவந்த இரத்தக்கோடுகள், தலைவலி இவைகளைத் தீர்க்கும்.—4, 5½.

படோலாதி கிருதம்:—பேய்ப்புடல், வேம்பு, கடுகரோஹிணி, மரமஞ்சள், வெட்டிவேர், த்ரிபலை, ஆடாதோடை, காஞ்சொறி, கொன்றை, பர்ப்பாடகம் இவை வகைக்கு ஒரு பலம், நெல்லிக்காய் பதினாறு பலம்; இவற்றை ஒரு திரோணம் ஜலத்தில் சேர்த்து, ஆடகப்பிரமாணமாகும்படி சுண்டக் காய்ச்சி, ஒரு பிரஸ்த்தம் நெய் அக்கஷாயத்திற் சேர்த்து பக்குவம் செய்யவும்; பிறகு கோரைக்கிழங்கு, நிலவேம்பு, அதிமதுரம், வெட்பாலை, வெட்டிவேர், சந்தனம், திப்பிலி இவற்றைக் கல்கமாகச்சேர்த்து நன்கு பக்குவமானதும் வடிக்கட்டி எடுக்கவும். இந்த கிருதம் நாசி, செவி, முகம் இவற்றிலுண்டாகும் வியாதிகளைத் தீர்க்கக் கூடியது; முக்கியமாய் நேத்திரத்திலுண்டாகும் சுக்ரதோஷம், திமிரம், இராக்கண், உஷ்ணம்லம், தாபம் இவற்றில் மிகவும் உபயோகமானது. 6—9½.

த்ரிபலா கிருதம்:—எட்டு பலம் த்ரிபலையை உடைத்து, ஓர் ஆடகம் ஜலத்திற் சேர்த்து, நான்கில் ஒரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி, வடிக்கட்டி, அதில் அதற்குச் சம அளவு பால் கூட்டி, அரைப்படி நெய் சேர்த்து, ஒரு பலம் த்ரிபலையையே கல்கமாகக் கூட்டிக் காய்ச்சவும்; அதில் சிறிது சர்க்கரையாவது தேனாவது கலந்து திமிரரோகமுள்ளவன் உட்கொள்ளலாம்; அந்த கிருதத்தைச் சிறிது திரிபலா கஷாயத்துடன் கலந்தும் பருகலாம்.—11, 11½.

மஹாதிரிபலா கிருதம்:— அதிமதுரம், காகோலி, க்ஷீரகாகோலி, கண்டங்கத்தரி, திப்பிலி, சீந்தில், கருநைதல், சர்க்கரை, திராக்ஷை ஆக இவை வகைக்குக் கால் பலம்; இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, இக்கஷாயத்தில் ஒரு பிரஸ்த்தம் நெய் கூட்டிக் காய்ச்சவும். பிறகு வெள்ளாட்டுப்பால் நெய்க்குச் சம அளவாகக் கூட்டிப் பக்குவம் செய்யவும்; அவ்விதமே ஸம அளவான த்ரி

பலாகஷாயத்திலும், ஆடாதோடை ஸ்வரஸத்திலும், கரிசலாங் கண்ணிச் சாற்றிலும் தனித்தனியே இந்த கிருதத்தைப் பக்குவம் செய்யவும். **மஹாத்ரைபலம்** என்கிற இவ்வௌஷதம் திருஷ்டி ரோகங்களை நிவ்ருத்தி செய்வதிற் சிறந்தது.—12, $13\frac{1}{2}$.

**நிமி கூறிய திரிபலாயோகம்:**—திரிபலை, அதிமதுரம் இவற்றின் சூர்ணத்தைத் தேனிற் குழைத்து இரவில் உட்கொண்டு, முற் கூறிய திரிபலா கிருதத்தையும் உட்கொள்ளவும்; ஒரு மாஸ காலம் இவ்விதம் இம்மருந்தைச் சாப்பிட்டுக் கொண்டு, ஹிதமான ஆஹாரங்களையும் உண்ணவேண்டும்; பருகுவதற்கு நெல்லிக் கனியை ஊறவைத்த ஜலமும் உபயோகிக்க வேண்டும்; இவ் விதம் செய்ய கண்பார்வை கருடனுடைய பார்வைபோல் மிகக் கூர்மையாகும்; என்றிவ்வாறு மஹாமஹிமை பொருந்திய நிமி முனிவர் மொழிந் தருளினர்.—14, $15\frac{1}{2}$.

**திமிரஹர திரிபலா யோகம்:**—நிம்பிளை, அயம், பொன், அதிமதுரம், சர்க்கரை இவற்றில் கிடைக்கக்கூடியவைகளைக் கிரஹித்து, அனைத்துக்கும் சமமாகத் திரிபலையையும் சேர்த்து, இடித்து இக் கலவைச் சூர்ணத்திற் போதுமான அளவு நெய்யும் தேனும் கூட்டி அரைத்தெடுக்கவும். இது திமிரரோகத்தைப் போக்கு வதிற் சிறந்த ஔஷதம்.—$16\frac{1}{2}$.

**திமிரஹரமான வேறு திரிபலாயோகங்கள்:**—(1) திமிர ரோகமுள்ளவன் திரிபலா கஷாயத்தில் நெய் சேர்த்து உபயோகிக் கலாம். (2) பணியாரங்கள், பருப்பு, மாப்பண்டம் இவற்றில் எத்துடனாகிலும் திரிபலா சூர்ணத்தைக் கலந்து உட்கொண்டு வரலாம். (3) தேனும் சர்க்கரையும் சேர்த்த பாயஸத்தில் திரி பலாசூர்ணமும் சிறிது கலந்து காலைவேளையில் உட்கொள்ளலாம். (4) ஆஹாரத்திற்கு முன்பு கடுக்காயையாவது, திராக்ஷையை யாவது தனித் தனியே சர்க்கரையோடாவது தேனுடனாவது எப் பொழுதும் திமிரரோகத்தினால் வருந்துபவன் உபயோகிக்க லாம். 17—19.

**சூர்ணாஞ்ஜனங்கள்:**—(1) ஸ்ரோதோஞ்ஜநம்[1] அறுபத்து நாலு பாகம், சுத்திசெய்த தாம்ரம், அயம், வெள்ளி, பொன் இவை[2] வகைக்கு ஒரு பாகம்; இவற்றை அந்தமூஷையில்[3] போட்டு, நெருப்பில் வைத்து நன்றாக ஊதவேண்டும்; பிறகு

---

1. ஸ்ரோதாஞ்ஜநம் — முதற்பாகம் பார்க்க.

2. தாம்ரம், அயம், வெள்ளி, பொன் இவற்றின் சுத்தி முறைகளைப் பற்றிச் சார்ங்கதர ஸம்ஹிதையிலாவது, இரஸரத்தினஸமுச்சயத்திலாவது விவரம் காண்க.

3. அந்தமூஷை — உலோகங்களைக் காய்ச்சி உருக்குவதற்குத் தட்டான்கள் உபயோகிக்கும் நீண்ட மண் சிமிழ். இதன் மற்ற விவரங்களை இரஸரத்தினஸமுச்சயத்திற் பார்க்கவும்.

அதைச் சிலையில் ஊற்றிப் பொடிசெய்து, அப்பால் அச் சூர்ணத்தை மதுராஸாதிவர்க்கங்களிற் கூறிய[1] பதார்த்தங்களின் கஷாயங்களில் தனித்தனியே ஏழு முறை காய்ச்சிக் காய்ச்சிச் சேர்த்தெடுக்கவும்; பிறகு வைடூர்யம், நல்முத்து, சங்கு இவற்றின் சூர்ணமும் மூன்று பாகங்கள் கூட்டி, ஒருமிக்க அவற்றை அரைத்து வைத்துக் கொள்ளவும். சூர்ணாஞ்ஜநம் எனப்படுகிற இவ்வௌஷதம் எல்லாத் திமிரரோகங்களையும் தீர்க்கவல்லது. (2) ஜடாமாம்ஸி, த்ரிஜாதகம், அயப்பொடி, குங்குமப்பூ, கருநெய்தல், கடுக்காய், மயில்துத்தம், பால்துத்தம், சங்கு, கடல்நுரை, மிளகு, ஸௌவீராஞ்ஜநம், திப்பிலி, அதிமதுரம் இவற்றை அச்விநீ நக்ஷத்திரத்தில் நன்றாகச் சூர்ணம் செய்து மைபோல் இழைத்து வைத்துக்கொண்டு, இரண்டு கண்களுக்கும் மைதீட்டுவதுபோல் இட்டுவரலாம். இந்த மாம்ஸ்யாதி சூர்ணாஞ்ஜநத்தினால் திமிரம், அர்மம், சிவப்பாகக் கண்களில் கொடிகள் படர்ந்துள்ள கோளாறு, அரிப்பு, கண்காய்ப்பு இவை முதலிய திருஷ்டி தோஷங்களைத் தீர்க்கலாம். (3) மிளகு, இந்துப்பு இவை வகைக்கு இரண்டு பாகம், திப்பிலி, கடல்நுரை இவ்விரண்டும் வகைக்கு இரண்டு பாகம், ஸௌவீராஞ்ஜநம் ஒன்பது பாகம் ஆக இவற்றைச் சித்திராநக்ஷத்திரத்தில் மைபோலச் சூர்ணம் செய்து உபயோகிக்கக் கபஸம்பந்தமான நேத்திர வியாதி தீரும். இது ஸௌவீராதி சூர்ணாஞ்ஜநம் எனப்படும். 20—25.

விதேஹாஞ்ஜநம்:—திராக்ஷை, தாமரைத்தண்டு இவற்றின் ஸ்வரஸங்களிலும், பாலிலும், மதுவிலும், கொழுப்பிலும், காங்கோதகத்திலும் ஸ்ரோதோஞ்ஜநத்தைத் தனித் தனியே ஏழு முறை ஊறவைத்து உலர்த்தி, அதைச் சூர்ணம்செய்து ஒரு சங்கில் எடுத்து வைத்துக்கொள்ளவும். எல்லா நேத்திரரோகங்களிலும் கண் பார்வையைத் தெளியச் செய்ய இது மிகவும் சிறந்த சூர்ணாஞ்ஜநம்; இது விதேஹராஜன் கூறிய முறை.—26, 27.

பாஸ்கரசூர்ணாஞ்ஜநங்கள்:— (1) துத்தத்தை இலந்தங்கட்டையினால் எரித்தெடுத்து, அதை முன் அஞ்ஜநத்திற்குக் கூறிய விதமே ஆட்டுப் பாலிலும், நெய்யிலும், தேனிலும் கிரமமாக ஊறவைத்தெடுத்து உலர்த்திக் கொள்ளவும். பிறகு இத்துத்தம் இரண்டு பலம், ஸ்வர்ணமாக்ஷிகம், மிளகு, ஸ்ரோதோஞ்ஜனம், கடுகரோகிணி, நதம், இந்துப்பு, வெள்ளிலோத்தி, மநச்சிலை, கடுக்காய், திப்பிலி, ஏலம், இரஸாஞ்ஜநம், கடல்நுரை ஆக இவை வகைக்குக் கால் பலம், அதிமதுரம் ஒரு பலம் இவற்றை ஒரு பெரிய மூசையில் அடைத்து, ஊதி யெரித்துச் சூர்ணம்

---

1 மதுராஸவர்க்கம், திக்தரஸவர்க்கம், கடுரஸவர்க்கம், கஷாயரஸவர்க்கம், அம்லரஸவர்க்கம், இலவணரஸவர்க்கம் என்று ஆறு இரஸவர்க்கங்கள் ஸூத்திரஸ்தாநத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

செய்யவும். 'பாஸ்கர சூர்ணம்' எனப்படும் இவ்வஞ்ஜநம் நன்கு உபயோகிக்கப்பட்டு வந்தால் காசம், அர்மம், இராக்கண், இரக்த ராஜி இவற்றையும், முக்கியமாகத் திமிரரோகத்தையும், இருளைச் சூரியன்போல் எளிதிற் போக்கிவிடும். (2) நாகம் முப்பது பாகம், கந்தகம் ஐந்து பாகம், செம்பும் வெள்ளியும் வகைக்கு இரண்டு பாகம், வங்கம் ஒரு பாகம், இரஸாஞ்ஜநம் மூன்று பாகம் இவற்றை அந்த மூஷையிலிட்டு, அக்னியில் எரித்துப் பக்குவம் செய்து, நிர்மலமான அஞ்ஜநமாகச் செய்து உபயோகிக்க, மற்றொரு பாஸ்கரன்போல் திமிரம்என்னும் வியாதியாகிற இருட்டை இந்த "பாஸ்கராஞ்ஜநம்" அகற்றும். 28—32.

திருஷ்டிப்ரஸாதக துத்தாஞ்ஜநம் :— துத்தத்தை எரித்தெரித்துப் பசு மூத்திரத்திலும், சாணச் சாற்றிலும், காடியிலும், முலைப் பாலிலும், நெய்யிலும், ஸர்ப்ப விஷத்திலும், தேனிலும் தோய்த்துத் தோய்த்தெடுத்து, நேத்திரத்தில் அஞ்ஜநமாக உபயோகிக்கக் கண் பார்வை கருடன் பார்வை போல் வெகு கூர்மையாகும்.—33.

திமிராதிஹர ஸீஸ சலாகை :—காரீயத்தை உருக்கி த்ரிபலா கஷாயம், கையாந்தகரைச் சாறு, ஸர்ப்ப விஷம், நெய், வெள்ளாட்டுப் பால், அதிமதுரக் கஷாயம் இவற்றில் தனித்தனியே எவ்வேழு முறை ஊற்றி யெடுக்கவும்; இவ்விதம் அச் சத்துக்களை யெல்லாம் உறிஞ்சு அந்த ஈயத்தைச் சலாகையாகச் செய்து, அதை எதேனும் அஞ்ஜநம் தடவியோ அஞ்ஜநமின்றியோ நேத்திரத்தில் தீட்டலாம்; இது திமிரம், அர்மம், நேத்திரஸ்ராவம், பிளிச்சை சேறுதல், பில்வம், தினவு, திமிர்த்துப் போதல் ஆகிய கோளாறுகளைத் தீர்க்கவல்லது.—34, 35.

இரஸேந்திராஞ்ஜநம் :—பாதரஸமும் நாகமும் ஸமயெடை; அவ்விரண்டுக்கும் ஸமயெடை இரஸாஞ்ஜநம், சிறிது கற்பூரம் ஆக இவற்றைச் சேர்த்து இழைத்துச் செய்யப்படும் அஞ்ஜநம் திமிரத்தைப் போக்கும்.—36.

க்ருத்ராஞ்ஜநம் :—உதயகாலத்துச் சூரியன்போல் பிரகாசமான முகத்தையுடையதும், ஏற்ற வயதில் இறந்ததுமான கழுகின் முகத்தை அறுத்து, எரித்தெடுத்து ஸம அளவு ஸ்ரோதோஞ்ஜநமும் நெய்யும் கூட்டி அரைத்து, நேத்திரத்திலிட கழுகின் பார்வையைப்போல் பலமான கண் பார்வை ஏற்படும்.—37.

கிருஷ்ணஸர்ப்பவிஷாத்யஞ்ஜநங்கள் :—(1) ஸ்ரோதோஞ்ஜநத்தை நெய்யிற் கலந்து, கிருஷ்ணஸர்ப்பத்தின் அறுத்தெடுத்த முகத்தினுள் அடைத்து, தகுந்த மூசையினுள் அதை வைத்துப் புகையாதபடி எரித்தெடுத்து, ஜடாமாம்ஸியும் சிறிது இலவங்கப்பத்திரியும் கூட்டி இழைத்துக் கொள்ளவும். இந்த அஞ்ஜநம் கருவிழி விரிந்திருந்தாலும் அதை ஒழுங்காக்கிக் கண்

ணைக் காக்கும். (2) ஒரு பாற்குடத்தில் ஒரு இறந்த கருநாகத்தையும், நான்கு தேளையும் போட்டு மூடியிட்டு, மூன்று வாரங்கள் வரையில் அதைப் பதனழியுமாறு வைத்திருந்து, அப்பால் அதைக் கடைந்து, அதிலிருந்துவரும் வெண்ணெயைக் கோழிக்குக் கொடுத்து அதைப் போஷிப்பித்து, அது இடும் மலத்தைக் கொண்டு அஞ்ஜநமிட, குருடனும் நன்கு பார்வையைப் பெறுவான். (3) கருநாகத்தின் கொழுப்புடன் சங்கையும், தேற்றாங் கொட்டையையும், ஸௌவீராஞ்ஜநத்தையும் கூட்டி இரஸக்ரியை பக்குவம் செய்து, அஞ்ஜநமாக உபயோகிக்க அந்தகர்களுக்கும் சீக்கிரம் கண்பார்வை யுண்டாகும். 38—41.

அப்ரதிஸாராஞ்ஜநம் :—பத்து மிளகுகள், ஸ்வர்ணமாக்ஷிகம் அரைக்கால் பலம், துத்தம் ஒரு பலம், அதிமதுரம் அரைக்கால் பலம் இவற்றைப் பாலில் ஊறவைத்து உலர்த்தி, அப்பால் எரித்தெடுக்கவும்; 'அப்ரதிஸாரம்' எனப்படும் இந்த அஞ்ஜநம் திமிரரோகத்தில் உபயோகிக்கச் சிறந்த ஔஷதம்.—42.

திமிரஹர குளிகை :—தான்றிக்காய், மிளகு, நெல்லிக்கனியின் தோல், துத்தம், அதிமதுரம் இவற்றைத் தண்ணீர்விட்டு அரைத்து, குளிகைகளாகச் செய்து, நிழலில் உலர்த்தி யெடுக்கவும். இது திமிரநோயைச் சீக்கிரம் போக்கும்.—43.

ஷண்மாக்ஷிகயோகம் :—மிளகு ஒரு பங்கு, நெல்லிக்கனி இரண்டு பங்கு, தாமரைப்பூ மூன்று பங்கு, துத்தம் நாலு பங்கு, இரஸாஞ்ஜநம் ஐந்து பங்கு, ஸ்வர்ணமாக்ஷிகம் ஆறு பங்கு இவற்றின் கூட்டு ஔஷதம் "ஷண்மாக்ஷிகயோகம்" எனப்படும்; இது திமிரம், அர்மம், கண்ணிற் பிளிச்சை சேருதல், காசம், கண் அரிப்பு இவற்றைத் தீர்க்கும்.—44.

ஸர்வ நேத்திர ரோகஹர சூர்ணாஞ்ஜநம் :—இரத்தினங்கள், வெள்ளி, படிகம், பொன், ஸ்ரோதோஞ்ஜநம், தாம்ரம், அயம், சங்கு, சந்தனம், செங்காவி ஆகியவற்றை நன்றாகச் சூர்ணம் செய்து, அஞ்ஜநம்போல் உபயோகிக்க எல்லா நேத்திரவியாதிகளும் தீரும்.—45.

நேத்திரத்திற்குபலந்தரும்நஸ்யம்:—நல்லெண்ணெய், தான்றியெண்ணெய், இவ்விரண்டையும் கையாந்தகரைச் சாற்றிலும் கருஞ்சாலிப் பட்டைக் கஷாயத்திலும் கூட்டி, இரும்புப் பாத்திரத்தில் அனைத்தையும் சேர்த்துக் காய்ச்சி யெடுக்கவும். இதை நஸ்யமாகப் பிரயோகிக்கக் கண்பார்வை பலப்படும்.—46.

நேத்திர ரோகங்களுக்குப் போதுவான சிகித்ஸைகளின் ஸங்கிரஹம் :—ஒவ்வொரு நேத்திரரோகியையும் அவனவனது தோஷக் கோளாறுகளை அனுஸரித்து ஸ்நேஹ சிகித்ஸை, இரத்தமோக்ஷணம், விரேசநம், நஸ்யம், அஞ்ஜநங்கள், சிரோவஸ்தி, வஸ்திகள், தர்ப்பணம், லேபநங்கள், ஸேகங்கள் ஆகிய பல சிகித்ஸா

முறைகளைக் கொண்டு உசிதப்படி உபசரிக்கவேண்டும். இது வரையில் அனைத்துக்கும் பொதுவான சிகித்ஸைகள் கூறப்பட்டன; இனி ஒவ்வொரு தோஷத்திற்கும் தனித் தனியான சிகித்ஸைகள் கூறப்படும்.—47, 47½.

## வாத திமிர சிகித்ஸை.

தசமூலக்ருதமும் விரேசநமும்:—(1) தசமூல கஷாயத்தில் நாலு மடங்கு பால் கூட்டி, த்ரிபலையைக் கல்கமாகச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்து பருகவும். (2) பிறகு த்ரிபலை, பஞ்சமூலம் இவற்றின் கஷாயத்தில் பால் கூட்டி, ஆமணக்கெண்ணெயைக் காய்ச்சி விரேசநம் பிரயோகிக்க வேண்டும்.—48, 49½.

நஸ்யத்திற்கு ஜீவந்த்யாதிதைலம்:—நூறு பலம் ஜீவந்தியை ஸமூலமாய் ஒரு த்ரோணம் நீரிற் சேர்த்து, எட்டில் ஒருபாகமாகச் சுண்டும்படிக் காய்ச்சவும்; அதில் ஒரு பிரஸ்த்தம் எண்ணெயும் அதே அளவு பாலும் கூட்டி, சிற்றுமுட்டி, பேராமுட்டி, குறிஞ்சிவேர், ஜீவந்திவேர், தண்ணீர்விட்டான்கிழங்கு இவற்றை வகைக்கு ஒரு பலமும், அதிமதுரம் நாலு பலமும் கல்கமாகச் செய்து ஓர் இரும்புப்பாத்திரத்தில் காய்ச்சவும். இதை ஒரு மாஸகாலம் இரும்புப்பாத்திரத்திலேயே வைத்திருந்து வடிக்கட்டி, நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். இது வாத-பித்த தோஷங்களால் கழுத்துக்கு மேற்பாகங்களில் உண்டாகும் வியாதிகளைப் போக்கவல்லது; முக்கியமாய் நேத்திரரோகங்களைத் தீர்க்கும். தலைமயிர், முகம், கழுத்து, தோள் இவற்றிற்குப் புஷ்டியையும், அழகையும், காந்தியையும் தரும். 50—53.

நஸ்யத்திற்கு ச்வேதைரண்டாதிதைலம்:—வெண்ணுமணக்குவேர், கண்டங்கத்தரிக்காய், மரமஞ்சள், வசம்பு, நதம், சதகுப்பி, பில்வவேர் இவற்றின் கஷாயத்தில் பாலும் எண்ணெயும் சேர்த்துப் பக்குவம் செய்யவும். இதை நஸ்யமிட தோளுக்கு மேலுள்ள அவயவங்களைப் பற்றிய ஸகல வாதரோகங்களும், சிலேஷ்மரோகங்களும் தீரும்.—54, 54½.

வஸைகளாலான அஞ்ஜநங்கள்:—புலியின் கொழுப்பையாவது, பன்றிக்கொழுப்பையாவது, கழுகின் கொழுப்பையாவது, கோழியின் கொழுப்பையாவது அதிமதுரத்துடன் கூட்டித் தனித் தனியே அஞ்ஜநமிடுவதால் நற்குணமுண்டாம்.—55½.

ஸ்ரோதோஞ்ஜநப்பிரத்யஞ்ஜநம்:—ஸ்ரோதோஞ்ஜநத்தைக் காய்ச்சி மாம்ஸரஸத்திலும், பாலிலும், நெய்யிலும் முறையே தோய்த்தெடுத்து, முன்போல் பிரத்யஞ்ஜநமாக[1] உபயோகிக்கலாம். இது திமிரரோகத்தைப் போக்குவதில் நிகரற்றது.—56½.

---

1. பிரத்யஞ்ஜநம்—நேத்திரத்திற்குத் தெளிவையும் அலங்காரத்தையும் உண்டுபண்ணுவதற்காகக் கண்களில் வழக்கமாக மை தீட்டுதல்.

**வாதநேத்திரரோகங்களில் தர்ப்பணசிகித்ஸைகள்** :—முற்கூறிய வகைகளில் நேத்திரரோகம் தணியாவிட்டால், பிறகு தர்ப்பணசிகித்ஸை செய்யவேண்டும். (1) சதகுப்பி, கோஷ்டம், வெட்டிவேர், காகோலி, க்ஷீரகாகோலி, அதிமதுரம், வரள் தாமரை, ஸரளதேவதாரு, திப்பிலி, தேவதாரு இவற்றின் கஷாயத்தில் நெய் ஊற்றி, அதற்கு எட்டுமடங்கு பால் சேர்த்துப் பக்குவம்செய்த கிருதம் சிறந்த தர்ப்பணௌஷதமாகும். (2) கறுப்புமானுடைய கொழுப்பைப் பாலில் சேர்த்துக் காய்ச்சி, துடுப்பினுல் நன்ருகக் குழப்பி, அதிலிருந்து ஸத்துவம்போன்ற தைலத்தை யெடுத்து, அதிமதுரம்-குருவேர்-சந்தனம் இவற்றின் கஷாயத்தில் அந்தச் சத்தைப் பக்குவம் செய்துபயோகிக்க முன்போலவே தர்ப்பணௌஷதமாகும். (3) சென்னாய், முள்ளம் பன்றி, உடும்பு, கள்ளிக்காக்கை, தித்திரியென்னும் பக்ஷி, மயில் இவற்றின் கொழுப்புகளையும் தனித் தனியே முற்கூறியவகையில் பக்குவம்செய்து தர்ப்பணமாக உபயோகிக்கலாம். 57—60½.

**வாததிமிரத்திற்கான வேறு சிகித்ஸைகள்**:—கண்பார்வைக்குத் தெளிவுண்டுபண்ணும் பிரஸாதநசிகித்ஸை, ஸ்நேஹந சிகித்ஸை, புடபாக சிகித்ஸை இவற்றையும் பிரயோகிக்கலாம். வாதபீநஸரோகத்திற்குச் செய்வதுபோல் இதில் நிரூஹவஸ்தியையும், அநுவாஸநவஸ்தியையும் செய்யலாம்.—61, 61½.

## பித்த திமிர சிகித்ஸை.

**பித்த திமிரத்தில் ஸிராவ்யதை முதலிய சிகித்ஸைகள்** :—(1) பித்தத்தினுல் உண்டாகும் திமிரரோகத்தில் ஜீவநீய கணச் சரக்குகள், த்ரிபலை இவற்றின் கஷாயத்திற் பக்குவம் செய்த கிருதத்தைப் பானம் செய்வித்து, நோயாளி ஸ்நிக்த்தமானதும் ஸிராவ்யதை செய்யவேண்டும். (2) சர்க்கரை, ஏலரிசி, சிவதை இவற்றின் சூர்ணத்தைத் தேனிற் குழைத்துக் கொடுத்து விரேசநம் செய்விக்கவும். (3) நேத்திரத்திலும், முகத்திலும், சிரஸ்ஸிலும் மிகவும் குளிர்ச்சியான திரவ வஸ்துக்களை ஊற்றியும், லேபநம் செய்தும் உபசரிக்கலாம்.—62, 63½.

**பித்த திமிரத்தில் சாரிபாதி வர்த்தி முதலியன**:—(1) நன்னாரி வேர், பத்மகாஷ்டம், வெட்டிவேர், கோரைக் கிழங்கு, வெள்ளிலோத்தி, சந்தனம் இவற்றை அரைத்து, வர்த்தி செய்து அஞ்ஜநமாக உபயோகிப்பதால் சிறந்த குணம் உண்டாகும். (2) இலவங்கப் பத்திரி, கருநெய்தல், சிறுநாகப்பூ, பச்சைக் கர்ப்பூரம், அதிமதுரம், பொற்காவிக்கல் இவற்றை இடித்து, மைபோல அரைத்து முன்போல் செய்து உபயோகிக்கவும். (3) ஸௌவீராஞ்ஜநம் ஐந்து பங்கு, துத்தம் ஐந்து பங்கு, கர்க்காடகச்ருங்கி மூன்று பங்கு, நெல்லிக்கனி மூன்று பங்கு, படிக்காரம் ஒரு பங்கு, பச்சைக் கர்ப்பூரம் ஒரு பங்கு இவற்றை அஞ்ஜநமாகச்

செய்து உபயோகிக்க திமிரம் தீரும். (4) ஜீவநீயச் சரக்குகள், வெண்தாமரை இவற்றைக் கஷாயம் காய்ச்சி, பால் கூட்டி, இதில் கிருதம் பக்குவம் செய்து உட்கொள்ளலாம். 64—66½.

## கபதிமிர சிகித்ஸை

கபதிமிரத்தில் கிருதபாநாதிகள்:—(1) சிந்தில், த்ரிபலை, திப்பிலி இவற்றின் கஷாயத்தில் பக்குவம் செய்த கிருதத்தைப் பானம் செய்வித்து, (2) ஸிராவ்யதை செய்யவேண்டும். (3) பிறகு கழுகு, கடுக்காய், சுக்கு, திப்பிலி, நேபாளம், சிவதை இவற்றின் கஷாயத்தை விரேசநம் செய்விக்கவும்.—67, 68.

ஹ்ரீபேராதி நஸ்ய தைலம்:—வெட்டிவேர், தேவதாரு, மரமஞ்சள், மஞ்சள், திப்பிலி இவற்றைக் கல்கமாகச் செய்து, தசமூல கஷாயத்தில் பாலும் எண்ணெயும் சேர்த்துப் பக்குவம் செய்யவும். இந்த தைலம் நஸ்யமிட உபயோகமானது.—69.

விமலாதிவர்த்திகள்:—(1) சங்கு, ஞாழல், நேபாளம், த்ரிகடு, த்ரிபலை இவற்றைக்கொண்டு செய்யப்படும் வர்த்திக்கு **விமலா** என்று பெயர்; இது நேத்திரத்தைத் தெளிவாக்கும். (2) அயப்பொடி, த்ரிகடு, இந்துப்பு, த்ரிபலை, ஸ்ரோதோஞ்ஜநம் இவற்றால் செய்யப்படும் வர்த்தி **கோகிலா** எனப்படும்; இதுவும் கண்பார்வையைத் தெளிவாக்கும். (3) முயல், பசு, கழுதை, சிங்கம், ஒட்டகம் இவற்றின் பற்கள், அவற்றுள் ஏதேனும் ஒன்றின் நெற்றி எலும்பு, வெள்ளைப்பசுவின் வால்மயிர்கள், மிளகு, சங்கு, சந்தனம், கடல் நுரை இவற்றின் சூர்ணத்தை முலைப்பாலும் வெள்ளாட்டுப் பாலும் விட்டு அரைத்து வர்த்தி செய்யவும். இதற்குத் **தந்தாதி வர்த்தி** எனப் பெயர்; இது திமிரம், சுக்ரம் இவற்றைப் போக்க வல்லது.—70, 71½.

## இரக்ததிமிர சிகித்ஸை.

இரக்ததிமிரத்தில் சீதோபசாராதிகள்:—(1) இரத்ததிமிரத்தில பித்ததிமிரத்திற்குச் செய்ததுபோன்ற சிகித்ஸைகளைச் செய்தால் நற்பயன் உண்டாம். (2) பரிசிப்பதிலும் வீர்யத்திலும் சீதளமாயுள்ள ஔஷதங்களால் கண்பார்வையைத் தெளியச் செய்யலாம். (2) திராக்ஷாதி கல்கலேபம்: திராக்ஷை, குருவேர், வெள்ளிலோத்தி, அதிமதுரம், சங்கு, செம்புப்பொடி, வெட்டிவேர், தாமரைப்பூ, பத்மகாஷ்டம், கருநெய்தல் இவற்றை ஆட்டுப் பால் விட்டு அரைத்துக் கண்ணைச்சுற்றிலும் லேபநம் செய்ய இரத்ததோஷத்தினலான திமிரம் எளிதில் தீரும்.—72, 73.

## ஸந்நிபாதாதி திமிர சிகித்ஸை.

ஸம்ஸர்க்க ஸந்நிபாத திமிரங்களின் சிகித்ஸை:—இரண்டிரண்டு தோஷங்களால் உண்டாகும் திமிரரோகங்களிலும், மூன்று

தோஷங்களாலான திமிரத்திலும் முன்பு அந்தந்த தோஷத்திற்குக் கூறிய சிகித்ஸா முறைகளையே உசிதப்படி கூட்டிப் பிரயோகிக்க வேண்டும்.—73½.

மதூகாதி நஸ்யதைலமும் முகலேபமும் :—(1) இலுப்பைப்பூ, வாய்விடங்கம், மிளகு, தேவதாரு இவற்றின் கஷாயத்தில் பாலும் எண்ணெயுங் கூட்டி பக்குவம் செய்த தைலத்தை நஸ்யமாகப் பிரயோகிக்கலாம். (2) இலுப்பைப்பூ முதலிய சரக்குகளையே பால் சேர்த்து அரைத்து முகத்தில் லேபநமாகவும் உபயோகிக்கலாம்.—74½.

நதாதி நஸ்யதைலமும் சிரோவஸ்தியும் :—(1) நதம் என்னும் கந்தத் திரவ்யம், கருநெய்தல், நன்னாரி, அதிமதூரம், ஆரை இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த தைலம் நஸ்யமாகப் பிரயோகிக்கத் தகுந்தது. (2) அத்தைலத்தையே சிரோவஸ்தி பிரயோகிக்கவும் உபயோகிக்கலாம்.—75½.

உசீரக்வாதமும் அஞ்ஜநமும் :—(1) வெட்டிவேர்க்கஷாயத்தில் திப்பிலியையும் இந்துப்பையும் பொடித்துச் சேர்த்து உட்கொள்ளலாம். (2) அதே கஷாயத்தில் நெய் சேர்த்துக் காய்ச்சி, அது தோய்ந்து வருகையில் தேனையுங் கூட்டிக் கலந்து, நன்கு ஆறிய பிறகு, ஸந்நிபாத திமிரத்தில் அது அஞ்ஜநமாகப் பிரயோகிக்கத் தகுந்தது.—76, 77.

ஸந்நிபாத திமிரத்தில் அஸ்தியஞ்ஜநம் :—இரவில் வெளியில் திரியும் பிராணிகளுடைய எலும்புகளை ஸ்ரோதோஞ்ஜநம் கூட்டி, ஓடும் தண்ணீரில் ஆழ்த்தி ஒரு மாஸகாலம் அல்லது இருபது நாட்கள் ஊறவைக்கவும். பிறகு எடுத்து உலர்த்தி, ஆடுதீண்டாப் பாளையின் புஷ்பங்களையும் அதிமதூரத்தையும் கலந்து இடித்துச் சூர்ணம் செய்யவும். ஸந்நிபாததிமிரத்தில் உபயோகிக்க இது சிறந்த அஞ்ஜநம்.—78, 79½.

காசரோக சிகித்ஸை :— (1) காசரோகத்திலும் ஸிராவ்யதையைத் தவிர்த்து மற்ற இச் சிகித்ஸை அனைத்தும் செய்யத்தகுந்ததே. நேத்திரத்தில் ஸிராவ்யதையில் உபயோகிக்கப்படும் யந்திரத்தினால் தோஷங்கள் அழுத்தப்படுமானால் கண்ணைக் குருடாக்கி விடும்; ஆகவே இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டியது. அவசியமானால் அட்டைகளைப் பிரயோகிக்கலாம். (2) வெல்லம், கடல் நுரை, இரஸாஞ்ஜநம், திப்பிலி, மிளகு, கும்குமப்பூ, இவற்றில் தேன் சேர்த்து செய்யப்படும் குடாதிரஸக்ரியை என்னும் இதை அஞ்ஜநமிட காசநோய் தீரும்.—80, 81½.

நகுலாந்த்ய சிகித்ஸை :—மூன்று தோஷங்களாலும் உண்டாகிற நகுலாந்த்யம் என்கிற நேத்திரரோகத்தில் திமிரரோகத்திற்குக் கூறியுள்ள சிகித்ஸை ஏற்றதாம்.—82.

**நிசாந்த்ய சிகித்ஸைகள் :—** (1) நெய், தேன், பசுஞ்சாணச் சாறு இவற்றைக் காய்ச்சி, அதில் நிபிலை, காவி, தாளிஸபத்திரி இவற்றை நன்கு சூர்ணம் செய்து கலந்து, இரஸக்ரியையாகப் பக்குவம் செய்து இராக்கண் வியாதியில் அஞ்ஜநமிடுவது நலம். (2) மிளகைத் தயிரில் இழைத்து இராக்கண் பிணியில் அஞ்ஜநமிடுவது மிகச் சிறந்த சிகித்ஸை. (3) நொச்சியிலை, கருநைதல், பொன், காவி, தாமரைப்பூவின் தாதுகள் இவற்றைப் பசுஞ்சாணச்சாற்றால் அரைத்து வர்த்தி செய்யவும். கரஞ்ஜாதி வர்த்தியெனப்படும் இவ்வர்த்தி நிசாந்த்யம் என்னும் வியாதியைத் தீர்க்கவல்லது. (4) அரேணுகம், திப்பிலி, ஸ்ரோதோஞ்ஜனம், இந்துப்பு இவற்றை வெள்ளாட்டுச் சிறுநீரால் ஆட்டி வர்த்தி செய்து உபயோகிப்பதும் நல்லது. (5) தேள்கொடுக்குக் காய், த்ரிகடு, த்ரிபலை, தாளகம், மநச்சிலை, கடல்நுரை இவற்றை ஆட்டுப் பாலால் ஆட்டி வர்த்திசெய்து இராக்கண் வியாதியில் உபயோகிக்க அனுகூலமானது. (6) சில திப்பிலிகளைக் கல்லீரலுக்குள் மறைத்து வைத்து, அவற்றை எரிக்காமல் பக்குவம் செய்து உலர்த்தியெடுத்து, அஞ்ஜநமிடுவதுபோல் தேனிற் குழைத்து நேத்திரத்தில் உபயோகிக்க இராக்கண் தீரும். (7) எருமையினுடைய கல்லீரலையும் மண்ணீரலையும் தைலத்திலும் நெய்யிலும் பொரித்துண்ணலாம். (8) பாலைக்கீரையின் தளிர்களை நெய்யிற்பொரித்துப் புஜிக்கலாம். (9) முல்லைத்தளிர், ஆமணக்கந்தளிர், வெண்ணொச்சியிலை, இளம் அறுகம்புல் இவற்றையும் நெய்யில் பொரித்துண்ணலாம். (10) அகத்தியிலையை நெய்யிற் பொரித்து, அந்த நெய்யையும் பானம்செய்வது நலம். 83—89.

**தூமராதி நேத்திர ரோகங்களுக்குச் சிகித்ஸை :—**(1) தூமரம், அம்லபித்தம், உஷ்ண விதக்த திருஷ்டி இவற்றில் புராணக்ருதத்தினால் ஸ்நேஹம் செய்து, சீதவீர்யமான ஔஷதங்களால் விரேசநம் செய்வித்து, பரிசிப்பதிலும் வீர்யத்திலும் சீதளமாயுள்ள லேபநங்களால் மேலே நாற்புறமும் லேபநமும் செய்யலாம். (2) பசுஞ்சாணச் சாறு, பசுவின் பால், பசுநெய் இவற்றால் பக்குவம் செய்த அஞ்ஜநமும் இதிற் சிறந்தது. (3) பொன், காவி, தாளிஸப்பத்திரி இவற்றின் சூர்ணம் சேர்த்துப் பக்குவம் செய்த இரஸக் கிரியையும் இதில் உபயோகிக்க நல்ல ஔஷதம். (4) மேதா, வெள்ளிலோத்தி, அறுகு, மஞ்ஜிஷ்டி, மாமஞ்சள், அதிமதுரம் இவற்றின் கஷாயத்தில் ஸம அளவு பால் சேர்த்து, பாலுக்கு எட்டில் ஒரு பங்கு நெய்யும் எண்ணெயுங் கூட்டிக் காய்ச்சியெடுத்து நஸ்யமிடவும்; இது மேதாதி நஸ்யம் எனப்படும். (5) பாலைக் கடைந்தெடுக்கப்படும் நெய்யைத் தர்ப்பணௌஷதமாய் உபயோகிக்கலாம். (6) இச்சிகித்ஸைகளால் வியாதி நிவ்ருத்தியாகாவிட்டால் ஸிராவ்யதை செய்யலாம். 90—$92\frac{1}{2}$.

போலித் திமிரரோகத்திற்குக் காரண - சிகித்ஸைகள் :—(1) *மனக்கவலை, அபிகாதம், பயம், துயரம், ரூக்ஷத்தன்மை, நெருக்கமான ஆஸனத்தில் உட்கார்ந்திருத்தல்; விரேசநம், நஸ்யம், வமநம், புடபாகம் இவற்றை ஒழுங்கீனமாகப் பிரயோகித்தல், வயிற்றில் உணவு அழன்று ஜீர்ணமாகாமல் அதிகமாக வாந்தியாதல், பசி-தாஹங்களை அடக்கிக்கொண்டிருத்தல், நேத்திரரோகத்திலிருந்து நிவ்ருத்தியாகும் நிலைமை இவற்றாலும் மனிதன் திமிர ரோகியைப்போன்ற பார்வை யுடையவனாவான். (2) அதில் அந்தந்த காரணங்களையும் தோஷங்களையும் கவனித்து அததற்கு ஏற்ற சிகித்ஸையைச் செய்யவேண்டும். 93—95.*

வேறு காரணங்களாலான கண்கோளாறும் சிகித்ஸையும் :— *ஸூர்யக் கிரஹணம், ஜ்வலிக்கும் அக்னி, மின்னல் முதலியவற்றைப் பார்ப்பதால் கண்பார்வையிற் கெடுதியடைந்தவனுக்கு ஸ்நிக்த்தமாகவும் சீதளமாகவும் உள்ள ஸந்தர்ப்பண சிகித்ஸையையும், பொன்னை நெய்யிற்குழைத்து அஞ்ஜநமாகவும் பிரயோகிக்கலாம்.—96.*

நேத்திரப்பாதுகாப்பின் இன்றியமையாமை :—*நன்கு உயிர் வாழ விருப்பமுள்ளவளவும் மனிதர் கண்களைப் பாதுகாப்பதில் எப்பொழுதும் முயன்றிருக்கவேண்டும். ஏனெனில் கண் இல்லையேல் இராப்பக லிரண்டிற்கும் பேதமறிய முடியாது. அந்தகர்களாயுள்ள மனிதருக்குச் செல்வமிருந்தும் இவ்வுலகம் உபயோகமற்றுப் பாழ்த்துவிட்டதாய்விடுமல்லவா ?—97.*

நேத்திரத்தைப் பிணிகளிலிருந்து காக்க நிமிமுனி கூறிய உபாயங்கள் :—(1) *த்ரிபலையை உபயோகிப்பது, இரத்த-மோக்ஷணம், வமந-விரேசநாதிகளால் தேஹத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்ளல், மனக்கவலை யொழிந்து ஸந்தோஷித்திருத்தல், அஞ்ஜநமிடுதல், நஸ்ய சிகித்ஸை, பக்ஷிமாம்ஸங்களைப் புஜித்தல், பாதங்களை நிர்மலமாக வைத்துக்கொள்ளுதல், க்ருதபாநம் செய்தல் ஆகிய இவையே கண்களைப் பாதுகாக்க எப்பொழுதும் ஏற்றவை. (2) மேலும் இதமல்லாத உணவை எப்பொழுதும் விலக்க வேண்டும். மிகப் பிரகாசமான உருவத்தையும், மிகவும் நிலையற்று அசையும் உருவத்தையும், மிக்க ஸூக்ஷ்மமான உருவத்தையும் பார்க்கக் கூடாது. நிமி யென்னும் முனிவரால் மனிதருடைய நேத்திரத்தைப் பாதுகாப்பதற்காக இச் சிறந்த முறைகள் மொழியப்பட்டன.—98, 99.*

# பதினான்காம் அத்தியாயம்.

## லிங்கநாசப் பிரதிஷேதம்.

இனி லிங்கநாசப் பிரதிஷேதம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

**லிங்கநாசத்தில் ஸாத்யாஸாத்யங்கள் :**—(1) கபதோஷத்தினால் உண்டான லிங்கநாசம் நன்றாகத் திரண்டு முதிர்ந்த பிறகு, முழுப் பார்வையும் மறைந்து போன நிலைமையில் அதை எற்ற கருவியால் குத்திப் பரிஹரிக்கலாம். (2) ஆவர்த்தகி முதலிய ஆறு உபத்திரவங்களுடன் கூடிய கபலிங்கநாசம் சிகித்ஸைக்கு வசப்படாததாம்.—1.

**முதிர்வடையாத லிங்கநாசத்திற்குச் சிகித்ஸை செய்வதாலாகும் கேடு :**— அந்த லிங்கநாசம் பூர்ணமாக முதிர்ந்து விருத்தியாகாமலிருக்கையில் திரட்சியாக ஆகாமல் ஒழுங்கீனமாயிருக்கும்; மெல்லியதாகவும், தயிர் அல்லது பாலாடைபோல் கெட்டிப்படாததாகவும் இருக்கும்; சலாகையினால் அழுத்தித் தள்ளினாலும் அது மீண்டும் மேலெழுந்து நிற்கும்; அப்படிச்செய்வதால் கடும் வேதனையைத் தந்து, மீண்டும் கண்பார்வையை மறைத்துவிடும்; பிறகு கபத்தை விருத்திசெய்யும் பதார்த்தங்களால் சீக்கிரத்தில் அந்த லிங்கநாசம் முற்றிலும் திருஷ்டியில் திரண்டுவிடுவதோடு, காலவளவில் அது வேறு உபத்திரவங்களாலும் நன்கு நிரம்பிவிடும்.—2, 3.

**கபஜலிங்கநாசமும் அதன் பேதங்களும:**—கபதோஷம் சுயம் வெண்மையாகையால் அத்தோஷத்தாலுண்டாகும் லிங்கநாசமும் வெளுப்பாயிருக்கும்; அத்துடன் வேறு தோஷமும் சேர்ந்து திருஷ்டியைத் தாக்கினால், அந்த லிங்கநாசத்தில் ஒருவாறு நீல நிறமும் தோன்றும்; ஆகவே அந்த வியாதிக்குப் பொதுவாக **நீலிகா** என்றும் பெயர். அதில் (1) **ஆவர்த்தகி** என்பது ஒருவகை லிங்கநாசம்; அது நீர்ச்சுழிபோல் அசையும்; நிறத்தில் வெண் சிவப்பு மேலிட்டிருக்கும். (2) ஒரு துளி எருக்கம்பால் விழுந்து திரண்டு தடித்திருப்பதுபோல் மிகவும் கனத்துக் காணப்படுவது **சர்க்கரை** எனப்படும். (3) நெல்லிலுள்ள சுணைமுட்களைப்போன்ற கொடிகள் திருஷ்டிபாகத்தில் பாவியிருந்தால் அது **இராஜீமதி** எனக் கூறப்படும். (4) ஒழுங்கீனமாக அறுக்கப்பட்டும், எரிக்கப்பட்டும் இருப்பதுபோன்ற திருஷ்டியில் விகாரங்கள் தோன்றுவதோடு, வலியும் அதிகம் ஏற்பட்டால் அது **சிந்நாம்சுகா**

---

1. லிங்கநாசம்—பார்வைக்கு ஆதாரமாய் ஒளி ஊடுருவக்கூடிய திருஷ்டியின் சக்தி **லிங்கம்** எனப்படும். அவ்வித பார்வைச் சக்தியை அழிக்கும் நேத்திரக் கோளாறு லிங்கநாசம். அந்தக் கோளாறுக்குப் பரிஹார முறைகளைக் கூறுவது லிங்கநாசப் பிரதிஷேதம் எனப்படுகிறது.

என்று வழங்கப்படும். (5) திருஷ்டிபாகம் வெண்கலநிறமாய், நீரில் விழுந்த எண்ணெய்த்துளிபோன்ற உருவமுள்ளதா யிருந்தால் அந்த நோய் **சந்திரகி** எனப்படும். (6) திருஷ்டிபாகம் நிறத்திற் பல வர்ணங்களைப் பெற்று, குடை போன்ற உருவமுள்ளதாயிருந்தால் அத்தகைய நீலிகாரோகம் **சத்ரகி** எனப்படும். 4—7.

நீலிகையில் சலாகை யிடத் தகாத நிலைமைகள் :—ஸிரமோக்ஷணத்துக்குத் தகாதவர்களுக்கும், நாவறட்சி, பீநஸம், காஸம், அஜீர்ணம், பயம், வாந்தி, சிரோவேதனை, காதுநோய், கண்வலி இவற்றால் வருந்துபவருக்கும் நீலிகை என்கிற லிங்கக் கோளாறைச் சலாகையினால் குத்தக் கூடாது.—8.

நீலிகையில் சலாகை யிடும் முறை :—இனி லிங்கநாசத்தில் சலாகை யிடுவதற்குக் காலம் ஸாதாரணமா யிருக்கவேண்டும்.[1] சிகித்ஸை செய்யுமிடம் நல்ல வெளிச்சமுள்ளதா யிருக்க வேண்டும். சிகித்ஸை செய்துகொள்ளவேண்டியவன் சுத்தமாகவும், உண்டு பசி தீர்ந்தவனாகவும் இருத்தல் அவசியம். வைத்தியன் முழங்காலுயரம் ஆஸனத்தில் அமர்ந்து, பிணியாளியை அசையாதுட்காரச் செய்து, வாயால் ஊதி நேத்திரத்தைக் கசியச் செய்து, பெருவிரலால் மெதுவாகக் கண்ணைப் பிசைந்து, அதனால் உள்ளடங்கிய தோஷம் திருஷ்டியில் மேலே வந்து தோன்ற, சிரஸ் அசையாது பற்றிக்கொள்ளப்பட்டு ரோகி தன் நாசியையே நோக்கியவாறு இருக்க, கருவிழியிற் படாமல் அதற்கு அரை அங்குலம் தூரத்தில், கடைக் கண்ணுக்குக் கால் அங்குலம் உட்புறமாய் சலாகை யிடவேண்டும் ; வைத்தியன் சலாகையைச் சிறுவிரல் நடுவிரல் பெருவிரல் இவற்றால் கெட்டியாகப் பற்றிக் கொண்டு, திருஷ்டிபாகத்தில் உட்புறமாய் மத்தியில் அமைந்துள்ள **தைவச்சித்ரம்** என்கிற பிம்பக்கிராஹபாகத்திற்கு நேராய் நீலிகையைக் கடைவதுபோல் அழுத்தித் தள்ளவேண்டும். பிணியாளியின் இடது கண்ணில் வைத்தியன் தன் வலது கரத்தினாலும், வலது கண்ணில் இடது கரத்தினாலும் சலாகை யிடவேண்டியது முறை. 9—12½.

சலாகையை நன்கு பிரயோகித்ததன் குறிகளும் பிறகு செய்ய வேண்டிய உபசாரங்களும் —(1) லிங்கதோஷம் நன்கு சலாகையினால் குத்தித் தள்ளபபட்டிருந்தால் உடனே ஒருவகை சப்தம் உணரப்படும் ; வலியில்லாமல் சிறுதுளி நீர் வெளிப்படும். (2) சலாகையை உள்ளே வைத்திருந்தபடியே நோயாளிக்கு நல்வார்த்தை கூறியவண்ணம், உடனே முலைப்பாலால் நேத்திரத்தை நனைக்க வேண்டும். பிறகு சலாகையின் முனையினால் நேத்திரகோளத்தை

1. ஸாதாரண காலம்—முதற் பாகம் பார்க்க.

மெதுவாக வலியுண்டாகாதவாறுத் தள்ளி, நேத்திரமண்டலத்திற் சேர்ந்துள்ள கபதோஷத்தை நாசியின் உட்புறமாகத் தள்ள வேண்டும்; திருஷ்டிமண்டலத்திலிருந்து நாசியிலுள் சேர்ந்துள்ள சிலேஷ்மதோஷத்தை நாசியிலிருந்து சிந்தித் தள்ளவேண்டும். உருவங்கள் கண்களில் நன்கு புலப்படுவதாகத் தெரிந்தால், மெதுவாகச் சலாகையை வெளியில் எடுத்து விடவும். நேத்திரத்திற்குள் தோஷம் ஓரிடத்தில் நிலைத்திருந்தாலும் சரி, சலித்துக் கொண்டிருந்தாலும் சரி வெளிப்புறத்தில் ஸ்வேதனம் செய்து, நெய்யில் நனைத்து பிசுவைப் பிரயோகித்து, நேத்திரத்தின்மேல் பந்தநமிட்டு, நோயாளியைப் படுக்கவிடவேண்டும்; சலாகையிடப் பெற்ற நேத்திரத்தின் பக்கமாயிராமல் மற்றொரு பாரிசமாகப் படுக்கவேண்டும்; இரண்டு நேத்திரங்களிலும் சலாகையிடப் பட்டால் நிமிர்ந்து படுக்கவேண்டும். பெருங்காற்று அடிக்காத அறையில் ஏற்ற சயனத்தில், தலையிலும் பாதங்களிலும் க்ருதத்தை அப்யங்கம் செய்துகொண்டு, பத்தியாஹாராதிகளைப் புஜித்துக்கொண்டு அமர்ந்திருக்கவேண்டும். 13—17½.

நேத்திரத்தில் சலாகையிட்டபிறகு விலக்கவேண்டியவை:- கண்ணில் இவ்விதம் சலாகை பிரயோகித்த பிறகு தும்மல், இருமல், தேக்கெரிவு, காறித்துப்புவது, தண்ணீர் அருந்துவது, கவிழ்ந்து சயனித்தல், ஸ்நாநம் செய்தல், பற்களைத்தேய்த்தல், கடினமான பதார்த்தங்களைமெல்லுதல் இவற்றை ஏழு நாட்களளவும் செய்யக்கூடாது. ஸ்நேஹபானம் செய்தவனுக்கு ஏற்ற மற்ற நியமங்களையும்[1] இப்பிணியாளி அனுஸரிக்கவேண்டும்.—18, 19.

நேத்திரத்தில் சலாகை யிட்டவனுக்குப் பத்தியாதி முறைகள்:—(1) சக்திக்கியன்றவளவு லங்கநம் செய்விப்பது நலம். (2) வலியிருந்தால் சிறிது சூடான நெய்யை மேலே விடலாம். (3) த்ரிகடுகம், நெல்லிக்கனி, நெய் இவற்றைக் கூட்டி திரவமாக வாட்ய மண்டத்தை[2] உட்கொள்ளலாம். அல்லது விலேபியையாவது பருகலாம். (4) மூன்று நாட்களுக்குப் பிறகு, கட்டை அவிழ்த்து, வாதஹரமான கஷாயங்களால் நேத்திரத்தின் மேல் ஸேகம் செய்த பிறகு, பழையபடி பந்தநம் இடவேண்டும். (5) பிறகு ஏழாம் நாள் கடைசியாகக் கட்டை அவிழ்த்து விடவேண்டும். (6) நேத்திர தோஷம் முற்றிலும் நீங்கி நேத்திரத்திற்கு நன்கு பலம் வரும் வரையில் முற்கூறிய நியமங்களைப் பின் பற்றுவதுடன், ஸூக்ஷ்மமான உருவங்களையும், மிகப் பிரகாசமான வஸ்துக்களையும் திடீரென்று பார்க்கக் கூடாது. 20—22.

---

1. இது விஷயமாய் முதற் பாகத்தில் 'ஸ்நேஹபானத்தில் உபசாரக்கிரமம்' என்பதைப் (171-ம் பக்கம்) பார்க்க.

2. வாட்ய மண்டம்—இப் புத்தகத்தில் 13-ம் பக்கம் பார்க்க.

நேத்திரத்தில் சலாகை யிட்டுக்கொண்டவனுக்கு அபத்தியாதிகளால் உண்டாகக்கூடிய கேடுதிகளும் சிகித்ஸையும் :—(1) அபத்தியத்தினாலும், நேத்திரத்தில் சலாகையை ஒழுங்கீனமாகப் பிரயோகிப்பதனாலும் நேத்திரத்தில் வீக்கமும், வலியும், சென்னிறம் முதலியவைகளும், அதிமந்தமும் உண்டாவதியல்பு. (2) அவற்றை அதற்கேற்றவாறு சிகித்ஸிக்கவேண்டும். (3) தூர்வாதி முகலேபம் :—அறுகம்புல், வாற்கோதுமை, காவி, நன்னாரி இவற்றைக் கல்கமாகச் செய்து, நெய்கூட்டிக் குழைத்து, முகத்திற் பூசிக்கொள்ள நேத்திரத்திலுண்டான வலியும் சிவப்பும் தணியும். (4) திலாதிமுகலேபம் :—அவ்விதமே எள், கடுகு, க்ஷீரகாகோலி, நன்னாரி, அறுகம்புல், மஞ்ஜிஷ்டி, அதிமதுரம் இவற்றைச் சூர்ணம் செய்து, கொடிமாதுளைச் சாற்றையும், வெள்ளாட்டுப் பாலையும் விட்டு அரைத்தெடுத்துக் கொதிக்க வைத்து, இளஞ்சூடாக முகத்தில் லேபநம் செய்ய முற்கூறிய கோளாறுகளில் நற்குணம் உண்டாகும். (5) ஆச்சியோதநக்ஷீரம் :வெள்ளிலோத்திப்பட்டை, இந்துப்பு, திராக்ஷை, அதிமதுரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டுப்பாலை நேத்திரத்தின்மீது ஆச்சியோதநமாகப்[1] பிரயோகிக்க, கண்வலியும் சென்னிறமும் தீரும். (6) மதுகாதி க்ருதம் :—அதிமதுரம், கருநைதல், கோஷ்டம், திராக்ஷை, கொம்பரக்கு, சர்க்கரை இவற்றை வாதஹர குணமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்த பாலிற் சேர்த்துக் காய்ச்சவும்; இந்தப் பால் நாலு பங்குக்கு ஒரு பங்கு நெய் கூட்டி, பத்மகாதி கணச் சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சி எல்லாவித சிகித்ஸைகளிலும் உபயோகிக்கலாம். (7) வலி, சிவப்பு இவை தணியாவிட்டால் ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்வித்து, அப்பால் ஸிராவ்யதை செய்வது நலம். (8) பிறகு அதிமந்தத்திற்குக் கூறிய சிகித்ஸையையும் செய்யவும். (9) சலாகை யிட்ட பாகம் ஆறிய பிறகு மிருதுவான அஞ்ஜநத்தை யிட்டு வரலாம். 23—29.

ஆடகமூலாதிவர்த்தி :—துவரையின் வேர், மிளகு, தாளகம், இரஸாஞ்ஜநம் இவற்றின் சூர்ணத்தை வெல்லம் கூட்டி அரைத்து, வர்த்தி செய்து வைத்துக்கொண்டு, காங்கோதகம் விட்டு உரைத்து, சலாகையினாற் குத்திய நேத்திரத்தில் அஞ்ஜநமிடலாம்.—30.

கண்பார்வையைத் தெளியச்செய்யும் பிண்டாஞ்ஜநங்கள் :—(1) ஜாதிமல்லிகைப்பூ, காட்டுவாகைப்பூ, ஆடுதீண்டாப்பாளைப்பூ, வைதூர்யக்கல், நல்முத்து இவற்றை வெள்ளாட்டுப்பால் விட்டு நன்கு அரைத்து, இக்கல்கத்தை வெகு மெல்லிய செப்புத்தகட்டின்மேல் பூசி, மீண்டும் ஏழு நாட்களுக்குப் பிறகு பாலைவிட்டு அதை அரைத்து, நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். பிண்

1. ஆச்சியோதநம்—முதற்பாகம் பார்க்க.

டாஞ்ஜநம் எனப்படுகிற இவ்வௌஷதம் சலாசையால் குத்தி சிகித்஧ை செய்யப்பட்ட திருஷ்டிக்குத் தெளிவையும் பலத்தை யும் விருத்தி செய்யும். (2) ஸ்ரோதோஞ்ஜநம், பவளம், மநச் சிலை, கடல்நுரை, தீக்ஷ்ணலோஹம் இவற்றை முன்போலவே ஆட்டுப்பால் விட்டு அரைத்து, பிண்டாஞ்ஜநம் செய்து உபயோ கிக்க முன் பிண்டாஞ்ஜநத்துக்குக் கூறியுள்ள குணங்களே உண் டாகும்.—31, 32.

---

## பதினைந்தாம் அத்தியாயம்.

## ஸர்வாக்ஷிரோகவிஞ்ஞாநம்.

இனி ஸர்வாக்ஷிரோகவிஞ்ஞாநம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

**வாதாபிஷ்யந்தம்:**—அபிஷ்யந்தம் என்னும் கண்ணோய் வாதத்தினால் உண்டானால் நாசி விம்மிக்கொள்ளும்; வீக்கம் சொற் பமாயிருக்கும் ; கன்னம், நேத்திரம், புருவம், நெற்றிக்கட்டு இவற்றில் குத்தல், துடிப்பு, இடித்தல் போன்ற வலி யுண் டாம் ; மேலும் இந்நோய்கள் அடிக்கடியும் தோன்றித் தணியும் ; கண் ஈரப்பசையற்றும், பிளிச்சையற்றும் இருக்கும் ; ஒருக்கால் கண்ணீர் ஏற்பட்டால் மிகச் சொற்பமாகவும் குளிர்ந்தும் இருக் கும் ; கண்ணை மூடித் திறப்பது மிகத் தொந்தரவளிக்கும் ; கண் களின்மேல் ஏதோ ஜந்துக்கள் ஊருவதுபோலவும், கண் விம்மி யிருப்பதுபோலவும் தோற்றும் ; ஸூக்ஷ்ம சல்யங்கள் உள்ளே சேர்ந்திருப்பது போலத் தொந்தரவேற்படும். ஸ்நிக்த்தமும் உஷ் ணமுமான உபசாராதிகளால் உபசயம் உண்டாம்.—1, $2\frac{3}{4}$.

**வாதாபிஷ்யந்த உபத்திரவங்கள் :**— (1) அந்த அபிஷ்யந்தத் திற்கு ஏற்ற சிகித்஧ை செய்யப்படாமற்போனால் **அதிமந்தம்** என்னும் நோய் அதனால் உண்டாகும்; அதில் செவிகளில் சப்தம் தோன்றும் ; தலைச்சுற்றல் உண்டாம் ; நெற்றி, நேத்திரம், புருவம் இவற்றில் அரணிக்கட்டையிட்டு கடைவது போன்ற வேதனை யுண்டாம். (2) அதிமந்தம் ஏற்றவாறு பராமரிக்கப்படாமற் போனால் **ஹதாதிமந்தம்** என்னும் நோய் ஸம்பவிக்கும் ; இதில் வேதனைகள் பலவிதமா யுண்டாகும் ; திருஷ்டிபாகத்தில் விரண மும் தோன்றி நேத்திரம் நஷ்டமாகும். (3) மந்யா,[2] கண், கன் னம் இப்பாகங்களில் வேதனையளித்துக் கொண்டிருந்த வாயு வேறிடங்களில் கடும் வேதனையைத் தந்து, கண்ணைப் பிளிச்சை

---

1. நேத்திரகோளத்தில் எல்லாப்பாகங்களையும் பற்றி யுண்டாகும் வியாதிகளை விவரிக்கும் அத்தியாயம் என்று பொருள்.

2. மந்யா — முதற்பாகம் பார்க்க.

அற்றதாகவும், சென்னிறமும் வீக்கமும் அற்றதாகவும் செய்து, கண்ணீரை வடித்து சுருங்கச் செய்யும்; அது **அந்யதோவாதம்** எனப்படும். (4) அதே விகாரங்களைப் பெற்றிருப்பதுடன் கண் வக்கிரமாகவும் சிறுத்தும்போனால் அது **வாதவிபர்யயம்** என்று கூறப்படும். 3—7.

**பித்தாபிஷ்யந்தம்** :—(1) கண் புகைவது போல் அழற்சியுறும்; வீக்கமும், ரெப்பைக்கு வெளியே கருநிறமும் தோன்றும்; உள்ளே பசை சேரும்; கண்ணீர் பசுமையாகவும் உஷ்ணமாகவும் இருக்கும்; கண்ணில் சிவப்பும், பசுமை நிறப் பார்வையும் ஏற்படும்; க்ஷாரம் ஏதாவது தெளிக்கப்பட்டால் தோன்றுவது போன்ற விரணம் நேத்திரத்திற் காணும்; இக் குறிகளையுடைய வியாதிக்குப் பித்தாபிஷ்யந்தம் என்று பெயர். (2) **பித்தாதிமந்தம்** :—இந்த அதிமந்தத்தில் நேத்திரம் நெருப்புப் பொறிகள் உள்ளே பரவியது போலவும், யக்ருத்தின் பிண்டம் போன்றதாகவும் காணப்படும்.—8, $9\frac{1}{4}$.

**கபாபிஷ்யந்தம்** :—(1) சிலேஷ்ம தோஷத்தினாலான அபிஷ்யந்தத்தில் கண் திமிர்த்தும் வீக்கம் பலமாகவும் இருக்கும்; அரிப்புண்டாம்; நித்திரை யற்று, உணவிலும் வெறுப்புண்டாகும்; கண்ணீர் தடித்தும் அமிதமாகவும், ஸ்நிக்தமாகவும், வெண்மையாகவும், பிசுபிசுப்பாகவும், பிளிச்சையுள்ளதாகவும் வெளியாம். (2) **கபாதிமந்தத்தில்** கருவிழி ஆழ்ந்தும், வெண்மடல் உயர்ந்தும் இருக்கக் காணப்படும்; நாசியிலிருந்து நீர் வடியும்; நாசி விம்மிக்கொண்டிருக்கும்; கண்ணில் தும்பு தூசுகள் நிரம்பியதுபோன்ற உணர்ச்சி யுண்டாம்.—10, $11\frac{1}{2}$.

**இரக்தாபிஷ்யந்தம்** :—(1) இரக்தாபிஷ்யந்தத்தில் கண்ணீர் சென்னிறமாயிருக்கும்; பிளிச்சையும் அவ்விதமாயிருக்கும்; சென்னிறக் கோடுகள் கண்ணில் படர்ந்திருக்கும்; வெண்ணிற வட்டங்கள்[1] கண் முன்னிலையில் தோன்றும்; மேலும் பித்தாபிஷ்யந்தக் குறிகளும் காணப்படும். (2) **இரக்தாதிமந்தத்தில்** நேத்திரமண்டலத்தின் ஓரங்கள் மிகச் சிவந்தும், கண் பிடுங்கப்படுவதுபோன்ற வலியுள்ளதாகவும் இருக்கும். பொதுவாகவே கண் செம்பருத்திப்பூவின் நிறத்தைப் பெறும்; பிறகு பரிசிப்பதையும் தாங்காதபடி வெப்பங்கொண்டு வருந்தும்; கருவிழியானது உதிரத்தில் சிறிது அமிழ்ந்துள்ள வேப்பம்பழம் போலவும், நெருப்புப் பொறிக்குத் துல்யமான நிறமுள்ளதாகவும் காணப்படும்.—13, 14.

**அதிமந்தங்களின் பொதுக்குறிகள்** :—எல்லா அதிமந்தங்களுமே அந்தந்த தோஷத்தினாலான அபிஷ்யந்தத்திற்குரிய

1. "இரக்தமண்டலதர்சநம்" (சென்னிற வட்டங்கள் தோன்றும்) என்று அஷ்டாங்க ஸங்கிரஹம்.

இலக்ஷணங்களுள்ளதா யிருப்பதுடன், அவற்றினும் அதிக வேதனையைத் தருவது வழக்கம். கன்னம், பற்கள், தவடை, மண்டை இவற்றில் விசேஷ வலியை யுண்டுபண்ணும்.—15.

சுஷ்காக்ஷிபாகம் :—வாத - பித்தங்களால் கண் மிகப் பீடிக்கப்படும் ; கண்ணில் கரகர வென்கிற வேதனையும், குத்தலும், பிளக்கப்படுவது போன்ற வலியும், ஏதோ தூசி யிருப்பதுபோன்ற உணர்ச்சியும் ஏற்படும். இரெப்பையும், பொதுவாகக் கண்ணும் ரூக்ஷமாகவும், கடும் வேதனை யடைந்தனவாகவும் இருக்கும் ; கண்ணை மூடுவதும் திறப்பதும் மிகக் கஷ்டமாகும் ; கண் கோணலாகக் குறுகும் ; வறண்டுபோம் ; குளிர்ச்சியில் விருப்பம் உண்டாம் ; குத்தலும் வேக்காடும் காணும் ; இவ்வியாதி சுஷ்காக்ஷிபாகம் என்று கூறப்படும்.—16, $16\frac{3}{4}$.

ஸசோபம் :—(1) மூன்று தோஷங்களாலும், இரத்தக் கோளாறுலும் ஸசோபம் என்கிற நேத்திரவியாதி தோன்றும் ; அதில் வீக்கம், அதிக வலி, அழற்சி, அதிக நீர்வடிதல் முதலிய கோளாறுகள் காணும்; வெண்மடல் பழுத்த அத்திப் பழம் போன்று தோன்றும் ; கண்ணீர் அடிக்கடியும் உஷ்ணமாகவும், தெளிவாகவும், பிசுபிசுப்புள்ளதாகவும் பலவாறுக இருக்கும். அக்ஷிபாகத்திற்குள்ள வேறு குறிகளோடு சொற்ப வீக்கமும், வேக்காடும் தோன்றியுள்ள நேத்திரரோகம் அல்பசோபம் எனப்படும். 17—19.

அக்ஷிபாகாத்யயம் :—கண்வீக்கம், அதிக காகரப்பு, கலங்கிய கண்ணீர் வடிதல், கருவிழி கபத்தினல் மூடப்பட்டிருத்தல், வெண்மடல் பிளிச்சையும் சென்னிறமும் பெற்றிருத்தல், அழற்சி, பார்வை மறைக்கப்படுதல், நிலையற்ற அநேக வகையான வேதனைகள் இவ்விகாரங்களோடு கூடிய நேத்திர வியாதி "அக்ஷிபாகாத்யயம்" எனப்படும்.—20, $20\frac{1}{2}$.

அம்லோஷிதம் :—பித்ததோஷமும் இரத்த தோஷமும் அதிகரித்துப்போன தோஷங்களால் ஆஹாரரஸத்தை அம்லமாக்கி, அத்தோஷம் சிரைகளின் மூலமாய் நேத்திரத்திற்கு ஏறிப்போய், நேத்திரத்தைக் கருஞ்சிவப்பாகச் செய்யும் ; வீக்கமும், அழற்சியும், வேக்காடும், நீர்வடிதலும் அதிகமாகத் தோன்றும் ; பார்வை மழுக்கங்கொள்ளும்; இது "அம்லோஷிதம்"[1] எனப்படும்.-21,$22\frac{1}{4}$.

ஸர்வாக்ஷிரோகங்களில் அஸாத்யமானவை :—இவ்விதம் நேத்திரத்தில் எல்லாப் பாகங்களையும் பற்றிய பதினறு வியாதிகள் கூறப்பட்டன ; இவற்றுள் ஹதாதிமந்தம், அக்ஷிபாகாத்யயம் இவ்விரண்டையும் சிகித்சைக்கு வசப்படாதவை யென்று விலக்கி விடவேண்டும்.—23.

1. "அம்லோஷிதம்" என்பதே "அம்லாத்யுஷிதம்" எனப்படும்.

**தகாத சிகித்ஸையினால் அதிமந்தங்களில் அபாயம் உண்டாதல்:**—*முறை தவறான சிகித்ஸையினால் வாததோஷத்தினாலான அதிமந்தம் ஐந்து நாட்களிலும், கபதோஷத்தினாலான அதிமந்தம் ஏழு நாட்களிலும், இரத்ததோஷத்தினாலான அதிமந்தம் மூன்று நாட்களிலும், பித்தாதிமந்தம் உடனேயும் கண்பார்வையை அழித்துப்போடும்.*—24.

---

## பதினாறும் அத்தியாயம்.

## ஸர்வாக்ஷிரோகப் பிரதிஷேதம்.

இனி ஸர்வாக்ஷிரோகப் பிரதிஷேதம்[1] *என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது* :—

**அபிஷ்யந்தங்களுக்குப் பூர்வரூப நிலைமையிலேயே சிகித்ஸை அவசியம்** :—*வாதப் பிரகோபத்தினாலான அபிஷ்யந்தத்தைத் தவிர்த்து மற்றெல்லா அபிஷ்யந்தங்களுக்கும் பூர்வரூபக்குறிகள் தோன்றும்போதே தீக்ஷ்ணமான கண்டூஷங்கள், நஸ்யங்கள், லங்கநம் ஆகிய சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்.*—1.

**அபிஷ்யந்தத்தில் பிடாலகமுறைகள்** :—*அழற்சி, கபாதிகளால் பூசப்பட்டதுபோன்ற உணர்ச்சி, சிவப்பு, நீர்வடிதல், வீக்கம் இவற்றைத் தணிப்பதற்குப் பொதுவாக பிடாலகம்*[2] *பிரயோகிக்கப்பட வேண்டும். (1) எல்லா அபிஷ்யந்தங்களிலுமே இலவங்கப்பத்திரி, ஏலரிசி, மிளகு, பொன், காவி, இரஸாஞ்ஜநம், அதிமதுரம், நதம், சந்தனம், இந்துப்பு இவற்றின் கல்கத்தினால் பிடாலகம் பிரயோகிக்கலாம். (2) இந்துப்பு, சுக்கு, நிமிளை இவற்றை நெய் ஆடையினால் வறுத்து வாதாபிஷ்யந்தத்தில் பிடாலகம் போடலாம்; அல்லது வெள்ளிலோத்திப்பட்டையை நெய்யிற் பொரித்து அவ்விதம் பிரயோகிக்கலாம். (3) ஜடாமாம்ஸி, பத்மகம், காகோலி, அதிமதுரம் இவற்றின் கல்கத்தினால் பித்த-ரக்தங்களாலான அபிஷ்யந்தத்தில் பிடாலகம் பிரயோகிக்கலாம். (4) மநச்சிலை, ஞாழல், தேன் இவற்றின் கல்கத்தினால் கபதோஷத்தாலான அபிஷ்யந்தத்தில் பிடாலகம் பிரயோகிக்கலாம். (5) ஸந்நிபாதாபிஷ்யந்தத்தில் முற்கூறிய எல்லா முறைகளைக்கொண்டும் பிடாலகப் பிரயோகம் செய்யலாம்.* 2—4½.

**நேத்திரகோப சிகித்ஸை** :—*(1) வெண்மிளகு ஒரு பாகம், மநச்சிலை நான்கு பாகம், வெள்ளிலோத்திப்பட்டைப் பதினாறு*

---

1. *நேத்திரத்தில் எல்லாப் பாகங்களையும்பற்றி யுண்டாகும் வியாதிகளுக்குப் பரிஹார முறைகளைக் கூறும் அத்தியாயம்.*

2. *பிடாலகம் — நேத்திரத்தைச் சுற்றிலும் இடப்படும் கனத்த லேபநமுறை.*

பாகம், இவற்றைச் சூர்ணம் செய்து, வஸ்திரத்திற் கட்டி, நேத்திரம் வலியும் வீக்கமும் அடைந்தவுடனே அவகுண்டநமாகப்[1] பிரயோகிக்கலாம். (2) காட்டுக்கொள்ளை ஒரு வஸ்திரத்திற் கட்டி நீரிற்போட்டுச் சமைக்கவும்; நன்ருக ஆவியில் வெந்த பிறகு, அவற்றின் உமிகளை நகங்களால் விலக்கிவிட்டு, உலர்த்தி நன்கு சூர்ணம் செய்யவும்; **அரண்யகுளுத்தசூர்ணம்** என்கிற இதை இராவிற் கண்ணில் ஒரு முறை தூவினுல் உடனே நேத்திரகோபம்[2] தீரும். (3) சதகுப்பி, கடுக்காய், துத்தம், அதிமதுரம், வெள்ளிலோத்திப்பட்டை இவற்றை மிகவும் நுண்மையாகப் பொடித்து, ஒரு வஸ்திரத்தில் தளரக் கட்டி, அதைச் செப்புப்பாத்திரத்தில் காஞ்ஜிகத்தில் அமிழ்த்தி வைத்து எடுத்து, நேத்திரத்தின்மேல் **பொட்டலிகையாகக்** கட்டவும்[3]; இது நேத்திரத்திலுண்டாம் பல விதமான நோயையும் தீர்க்கவல்லது. (4) ஒரு பலம் மாமஞ்சளை இடித்துப் பதினறு பலம் ஜலத்திற் சேர்த்து, எட்டில் ஒரு பாகமாகச் சுண்டக் காய்ச்சி வடிக்கட்டிய கஷாயத்தில் தேன் கூட்டி, ஸந்நிபாததோஷத்தினுலான நேத்திரகோபத்தில் கண்மேல் **ஸேகம்** செய்யலாம். (5) முருங்கைக்கொழுந்தின் ஸ்வரஸத்தில் சிறிது தேன் கூட்டி நேத்திரத்தில் விட்டால், வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம் ஆகிய எத்தோஷங்களால் உண்டாகும் பலவித நேத்திரவியாதியும் எளிதில் தீரும். 5—9.

**வாதாபிஷ்யந்தசிகித்ஸை** :—(1) இளசான ஆமணக்கிலையையும், அதன் வேரையும் இடித்து, வெள்ளாட்டுப் பாலில் சமைத்து, **உருபூகாதி க்ஷீரம்** என்னும் இதை வாதாபிஷ்யந்தத்தில் உபயோகிக்க உடனே அதை நிவ்ருத்தி செய்யும். (2) அவ்விதமே உஷ்ணமான மாவால் ஒற்றடம் கொடுப்பதாலும் குணமுண்டாம். (3) பில்வ வேர், ஆமணக்கு வேர், கண்டங்கத்தரி, செம்முருக்கம்பட்டை இவற்றைக் கஷாயமிடவும். இந்த **பில்வாதி கஷாயத்தை** நேத்திரத்தில் ஆச்சியோதநமாக[4] வாதாபிஷ்யந்தத்திற் பிரயோகிக்கலாம். (4) வெட்டிவேர், நந்தியாவர்த்தம், வேளை, ஆமணக்கு, லவங்கப்பட்டை இவற்றை ஜலத்திலும் பாலிலும் சேர்த்துச் சமைக்கவும். **ஹ்ரீபேராதி ஆச்சியோதநம்** என்னும் இவ்வெளஷதம் நேத்திரத்தில் உண்டாம் எவ்வித வலியையும் தீர்க்கும். 10—12.

---

1. அவகுண்டநம் — வஸ்திரத்தில் ஒளஷதத்தை வைத்து மடித்து, சூடாகவோ, குளிர்ச்சியாகவோ நேத்திரத்தின்மீது அதை மறைத்தாற்போல் வைத்துக் கட்டும் முறை.

2. நேத்திரகோபம் — கண் பொங்கி வீங்கும் வியாதி; கண்ணோய்.

3. பொட்டலிகை — வலிமுதலியதுள்ள இடங்களில் சில வஸ்துக்களைக் கல்கமாகச் செய்து, உஷ்ணமாக வைத்துக் கட்டும் முறை.

4. ஆச்சியோதநம் — முதற் பாகம் பார்க்க.

பித்தாபிஷ்யந்த-இரத்தாபிஷ்யந்தங்களுக்குச் சிகித்ஸை :— (1) மஞ்ஜிஷ்டி, மரமஞ்சள், கொம்பரக்கு, திராக்ஷை, இரண்டு அதிமதுரங்கள்[1], கருநைதல் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்தில் சர்க்கரை கூட்டி, குளிர்ந்தபிறகு நேத்திரத்தின்மீது ஊற்றவும்; இது இரக்த-பித்தங்களாலான அபிஷ்யந்தத்தைப் போக்கும். (2) சிறு கோரைக்கிழங்கு, அதிமதுரம் இவ்விரண்டையும் சூர்ணம் செய்து, வஸ்திரத்தில் தளரக் கட்டி, திவ்ய ஜலத்தில் அதை அமிழ்த்தி வைக்கவும்; இந்த ஹிமம் இரக்த-பித்ததோஷங்களாலான அபிஷ்யந்தத்தில் உபயோகிக்க அனுகூலமானது. (3) குடமல்லிகை, அதிமதுரம், மஞ்சள் இவற்றை முலைப்பாலிலாவது, ஆட்டுப்பாலிலாவது ஆட்டி, சிறிது சர்க்கரையும் சேர்த்து நேத்திரத்தில் பொட்டலிசையாகப் பிரயோகிக்க, இது அழற்சி, வலி, சிவப்பு, கண்ணீர் இவற்றைத் தீர்க்கும். (4) வெள்ளிலோத்தி, அதிமதுரம் இவ்விரண்டையும் நெய்யிற் பொரித்து, நன்கு சூர்ணம் செய்து, வஸ்திரத்தில் அச் சூர்ணத்தைக் கட்டி, அதை முலைப்பாலில் நன்றாகக் கசக்கவும். இந்தப் பாலை நேத்திரத்தில் விட பித்த-ரக்தங்களாலான அபிஷ்யந்தங்கள் தீரும். 13—16.

கபாபிஷ்யந்த-ஸந்நிபாதாபிஷ்யந்தங்களுக்கு சிகித்ஸை :— (1) சிலேஷ்ம தோஷத்தினால் உண்டாகும் அபிஷ்யந்தத்தில் சுக்கு, த்ரிபலை, வேப்பு, ஆடாதோடை, வெள்ளிலோத்தி இவற்றின் கஷாயத்தை இளஞ்சூடாக ஆச்சியோதநம் செய்வது நலம். (2) முற்கூறிய அபிஷ்யந்தசிகித்ஸைகளை யுக்தப்படி மிச்ரமாக்கி ஸந்நிபாதாபிஷ்யந்தத்தில் பிரயோகிக்கலாம்.—17.

வாதாபிஷ்யந்தாதிகளுக்கு ஏற்ற வேறு சில சிகித்ஸைகள்:— (1) வாத ஸம்பந்தமான அபிஷ்யந்தத்தில் புராண க்ருதமும், (2) பித்தாபிஷ்யந்தத்தில் சர்க்கரை கூட்டிய க்ருதமும், (3) கபாபிஷ்யந்தத்தில் த்ரிகடுவைச் சேர்த்துப் பக்குவம் செய்த யவக்ஷாரம் கூட்டிய க்ருதமும் பானம் செய்யத் தகுந்ததாம். பிறகு இரக்தமோக்ஷணம் செய்து, மீண்டும் ஸ்நேஹசிகித்ஸையால் பிணியாளியை ஸ்நிக்த்தமாக்கி, விரேசநம் செய்யவேண்டும். (4) தலைவலி இருந்தால் ஆநூபமாம்ஸங்களால் செய்த வேஸவாரத்தை உஷ்ணமாக நெற்றியில் லேபநம் செய்யவேண்டும். (5) அழற்சியிருந்தால் அவ்வேஸவாரத்தில் பாலும் நெய்யும் கூட்டிக் குளிரச் செய்து லேபநம் செய்யவும். (6) திமிரப்பிரதிஷேதாத்யாயத்திற் கூறியுள்ள சிகித்ஸைகளையும் இங்கு அததற்கு உசிதப்படி பிரயோகிக்கலாம். 18—20.

---

1. இரண்டு அதிமதுரங்கள் — நிலத்தில் உண்டாவது ஒன்று, நீரில் உண்டாவது மற்றொன்று. இவ்விரண்டுக்கும் த்வியஷ்டி அல்லது மதுயஷ்டித்வயம் என்று பெயர்.

அதிமந்தங்களுக்குச் சிகித்ஸை:—(1) அபிஷ்யந்தங்களுக்குக் கூறிய அச் சிகித்ஸைகள் அனைத்தும் மந்தம் முதலிய நேத்திர வியாதிகளிலும் சிறந்ததே. (2) அதில் தணியாவிட்டால் புருவங்களுக்கு மேற்புறத்தில் தாஹசிகித்ஸை செய்யலாம். (3) வெண்ணெய் நீக்கிய தயிரை வெள்ளியின்மீது பூசவும்; அது கறுத்துப் போய் உலர்ந்த பிறகு, மஸ்துவைச் சேர்த்து ஆட்டி, வர்த்தி செய்யவும்; ரூப்யவர்த்தி எனப்படும் இது வாததோஷத்தினாலான நேத்திர ரோகத்தைத் தீர்க்கும். (4) மல்லிகை முதலிய மலர்களின் மொட்டுகள், சங்கு, த்ரிபலை, அதிமதுரம், சிற்றுமுட்டி, இவற்றைத் திவ்யோதகத்தினால் ஆட்டி வர்த்தி செய்யவும்; ஸுமனோவர்த்தி எனப்படும் இது பித்தத்தினாலும் இரத்தத்தினாலும் உண்டாகும் நேத்திர ரோகங்களைப் போக்கும். (5) இந்துப்பு, த்ரிபலை, த்ரிகடு, சங்கின் உட்புறச் சுழி, கடல் நுரை, கல்லூருவி, ஸர்ஜரஸம் இவற்றாலான ஸைந்தவாதி வர்த்தி எனப்படும் ஔஷதம் சிலேஷ்ம தோஷத்தினால் உண்டாகும் நேத்திர ரோகங்களைப் பரிஹரிக்கும். 21—24.

பாசுபத யோகம் :—வறள் தாமரை, அதிமதுரம், மரமஞ்சள் இவை எட்டு பலம்; இவற்றை ஒரு திரோணம் ஜலத்திற் காய்ச்சி வடிகட்டவும்; இக் கஷாயத்தை மீண்டும் காய்ச்சிக் குழம்பாகப் பக்குவமானதும், அதில் பத்துப் பலம் புஷ்பாஞ்ஜநத்தையும், கால் பலம் மிளகையும் நன்கு பொடித்துக் கலக்கவும். இதை வர்த்தியாகவோ அல்லது உலர்த்தி சூர்ணம் செய்தோ நேத்திரத்திலிட எல்லா அபிஷ்யந்தங்களும் தீரும். சிவப்பு, வலி, கரகரப்பு இவற்றை உபயோகித்த சீக்கிரத்தில் போக்கி, கண் பார்வையையும் தெளிவாக்கும். "பாசுபத யோகம்" எனப்படும் இது வைத்தியர்களுக்கு மிக்க அபூர்வமான ஔஷதமாம். 25-27.

சுஷ்காக்ஷிபாகசிகித்ஸை :—சுஷ்காக்ஷிபாக வியாதியில் (1) க்ருதபானம் செய்யலாம். (2) நேத்திரங்களுக்கு ஜீவநீயச் சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தினால் தர்ப்பணம் பிரயோகிக்கலாம். (3) அணுதைலத்தினால் நஸ்யமும் இடலாம். (4) இந்துப்பு சேர்த்த பாலை இளஞ்சூடாகக் கண்ணில் ஊற்றுவதும் நலம். (5) சுக்கை முலைப்பாலில் இழைத்து, அதில் சிறிது நெய்யுங் கூட்டி அஞ்ஜநமாக இடலாம். (6) ஆனூபப் பிராணியின் தேஹத்திலிருந்து எடுத்த கொழுப்புடன் சிறிது இந்துப்பையும் சுக்கையும் கூட்டி அஞ்ஜநமிடலாம். (7) மயிர்களை நெய் சேர்த்துக் கண்ணாடியின்மீது நன்றாகத் தேய்த்து, அதை இரண்டு மட்க்குகளுக்கிடையில் வைத்து நெய்விட்டுக் குழைத்து, எரித்து மையாக்கி, ஓர் இரும்புப் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும். இது நேத்திரங்களில் அஞ்ஜநமாக இடுவதற்கு மிகச் சிறந்த ஔஷதமாம். 28—30½.

ஸசோப-அல்பசோபங்களுக்குச் சிகித்ஸை :—ஸசோபம், அல்ப சோபம் என்னும் நேத்திர வியாதிகளில் (1) பிணியாளிக்கு ஸ்நேஹோபசாரங்களைச் செய்து, ஸிராவியதை செய்யவேண்டும். (2) மீண்டும் திராக்ஷையின் கஷாயத்திலாவது, கடுக்காயின் கஷாயத்திலாவது, சிவதைவேர் கஷாயத்திலாவது நெய் சேர்த்து ஸ்நிக்த்தமாகச் செய்து அவற்றால் விரேசநமாவது செய்விக்கலாம். (3) வெள்ளிலோத்திப் பட்டையை நெய்யில் வறுத்து, நன்கு சூர்ணம் செய்து, அதை வஸ்திரத்தில் கட்டி, உஷ்ண ஜலத்திற் பிசைந்து, அந்த ஜலத்தினால் ஸேசம் செய்யவும்; இது வலியைப் போக்குவதிற் சிறந்தது. (4) மரமஞ்சளையும் வறள் தாமரையையும் கஷாயம் காய்ச்சி, அதை ஆச்சியோதநமாகப் பிரயோகிப்பதும் நலம். (5) கரகரவென்கிற அரிப்பு, சிவப்பு, கண்ணீர், வலி இவற்றைப் பரிஹரிப்பதற்குப் பின்வரும் ஸந்தாவ முறைகளையும்[1] பிரயோகிக்கலாம். 31—33½.

நேத்ரஸந்தாவ முறைகள் :—(1) தாம்ரத்தைப் பசு மூத்திரம் விட்டு உரைத்து, அதை ஓர் இரும்புப் பாத்திரத்தில் வைத்து, நெய்யும் சிறிது கூட்டி, நன்றாகப் புகையும்படியாக எரிக்கவும். இந்த தாம்ராஞ்ஜநத்தை நேத்திரத்தில் இட வேதனை தீரும். (2) அல்லது தயிரின் மேலாடையை எடுத்து, அதில் செம்பை நன்றாகத் தேய்க்கவும்; அதில் திப்பிலியையும் இந்துப்பையும் இழைத்துக் கண்ணிலிடுவது மிகவும் நலம். (3) செப்புப் பாத்திரத்தில் சங்கை முலைப்பால் விட்டுத் தேய்த்து, வன்னியிலைகளையும் யவதானியங்களையும் நெய்யில் நனைத்து, இவற்றை எரித்து அதைத் தூபமிட்டு வைத்துக்கொள்ளவும். ஸந்தாவம் என்னும் இந்த அஞ்ஜநம் நேத்திரத்திலிட சரகரப்பையும், மிகக் கடுமையான வேதனையையும் சீக்கிரத்தில் தீர்க்கும். (4) இரும்புப் பாத்திரத்தில் அத்திப் பழத்தை முலைப்பால் ஊற்றித் தேய்த்து, அதை நெய்யில் நனைத்த வன்னி யிலைகளை எரித்துத் தூபமிட்டு, இந்த உதும்பராஞ்ஜநத்தைக் கண்ணில் இட, அழற்சி, வலி, சிவப்பு, கண்ணீர், கூச்சம் இவை நிவ்ருத்தியாகும். (5) செப்புச் சம்புடத்தில் முருங்கைத் தளிரின் ஸ்வரஸத்தை நன்றாக இழைத்துத் தேய்த்து, நெய்விட்டு எரியும் நெருப்பின் தூமத்தினால் தூபமிட்டு, இந்த சிக்ருஸ்வரஸாஞ்ஜநத்தை எடுத்துக் கண்ணில் விட்டால் வீக்கம், அரிப்பு, நீர்வடிதல், வலி இவை தீரும். (6) மண்ணோட்டுத் துண்டை எள் ஊறிய ஜலம் விட்டு வெண்கலப் பாத்திரத்தில் தேய்த்து, நெய்யில் தோய்த்த வேப்பிலைகளை எரித்துத் தூபமிட்டு எடுத்த ம்ருத்கபாலாஞ்ஜநத்தை நேத்திரத்தி

1. ஸந்தாவம்—கண்ணில் அரிப்பு, வலி, சிவப்பு முதலிய தொந்தரவுகளைத் தீர்க்கக்கூடிய சிகித்ஸை அல்லது அஞ்ஜநம் முதலிய ஔஷதம்.

விட கண்ணிலுண்டான கரகரப்பு, வலி, கண்ணீர், சிவப்பு இவை நிவாரணமாகும். (7) இவ்விதம் ஸந்தாவ மருந்துகளால் கண்ணில் மையிட்டு, ஔஷதமிட்ட வேதனை நிவ்ருத்தியான பின்பு, முலைப் பாலால் ஆச்சியோதநம் செய்யவேண்டும்; இவ்விதம் ஸந்தா வாச்சியோதநங்களை மூன்று முறை பிரயோகிக்கலாம்; அதற்கு மேல் செய்யக்கூடாது. 34—39.

தாளீஸபத்ராதி குளிகை :—தாளிசப்பத்திரி, திப்பிலி, நதம், அயததூள், இரஸாஞ்ஜநம், ஜாதி மல்லிகை மொக்கு, அன்ன பேதி, இந்துப்பு இவற்றைப் பசுமூத்திரம் விட்டு அரைத்து, அக்கல்கத்தைச் செப்புத் தகட்டின்மேல் பூசி, ஏழு நாட்கள் வைத்திருந்து, மீண்டும் அதே மூத்திரத்தினால் அதை ஆட்டி குளிகைகள் செய்து, நிழலில் உலர்த்தி யெடுக்கவும்; இக் குளிகையை முலைப்பாலில் இழைத்து நேத்திரத்திலிட, கரகரப்பு, கண்ணீர் வடிதல், வீக்கம், தினவு இவை தீரும்.—40, 41½.

வியாக்ரீத்வகாத்யஞ்ஜநம் :—கண்டங்கத்தரித் தோல், அதிமதுரம், செம்புத்தூள் இவற்றை ஆட்டுப்பால் விட்டு அரைத்து, வன்னி யிலையையும் நெல்லி யிலையையும் நெய்யால் நனைத்து எரித்துத் தூபமிடவும். இது வீக்கத்தையும் வலியையும் போக்கும்.—42½.

அம்லோஷித சிகித்ஸை :—பித்தாபிஷ்யந்தத்திற்கு ஏற்ற பரிஹார முறையையே அம்லோஷிதம் என்னும் வியாதியிலும் பிரயோகிக்கலாம்.—43.

பில்லங்கள் :—கபோத்க்லிஷ்டம், பித்தோத்க்லிஷ்டம், இரக்தோத்க்லிஷ்டம், ஸந்நிபாதோத்க்லிஷ்டம், குகூணகம், பக்ஷ்மரோதம், சுஷ்காக்ஷிபாகம், பூயாலஸம், பிஸம், போதகி, அம்லோஷிதம், அல்பசோபம், வாதாபிஷ்யந்த - வாதாதிமந்தங்களைத் தவிர்த்து மற்ற அபிஷ்யந்த - அதிமந்தங்கள் இப்பதினெட்டு நேத்திரவியாதிகளுக்கும் "பில்லங்கள்" என்று பெயர்; இவை நீடித்த காலம் தொடரும்; இவற்றிற்குத் தனித்தனியே கூறப்பட்டது போக பிரத்தியேகமாக இன்னும் சிகித்ஸைகள் கூறப்படும்.—44, 45½.

பில்ல சிகித்ஸை :—(1) இனி பில்லநேத்திரரோகிக்கு நேத்திரவியாதிகள் நீண்ட காலம் தொந்தரவளிப்பவைகளாய் விட்டால் ஸாமாந்யமாக ஸ்நேஹசிகித்ஸை செய்து, வமநம் செய்வித்து, ஸிராவ்யதை செய்து இரத்தத்தை வெளிப்படுத்தி, விரேசநமும் செய்வித்து, இமைப்பையின் உட்புறத்தைச் சுத்தமாகும் வரையில் நன்கு கீறித் தேய்க்கவேண்டும். (2) மயில் துத்தம் ஒரு பலம், வெள்ளை மிளகு இருபது, இவற்றை முப்பது பலம் காடிவிட்டு அரைத்துத் தாம்ரபாத்திரத்தில் வைத்துக் கொண்டு கண்ணில் இடவும். துத்தாஞ்ஜநம் எனப்படும் இவ்

வௌஷதம் பலவருடங்களாயுள்ள பில்லரோகங்களையும் பில்லமல்லாதனவாகச் செய்யும்; இதை நேத்திரத்தில் இடுவதால் உபதேஹம் என்கிற கண்ணில் ஏதோ பூசப்பட்டதுபோன்ற உணர்ச்சியையும், தினவையும், வீக்கத்தையும் இது நிவ்ருத்தி செய்யும். (3) புங்கம்வித்து, துளஸி, ஜாதிமல்லிகை மொக்குகள் இவற்றை இடித்துக் கஷாயமிட்டு, அதை வடிக்கட்டி, அதை மீண்டும் காய்ச்சி இரஸக்ரியையாகப் பக்குவம் செய்யவும்; கரஞ்ஜபீஜாத்யஞ்ஜநம் எனப்படுகிற இந்த ஔஷதம் பில்லத்திற்கு ஏற்றது; இமை மயிர்களையும் வளரச் செய்யும். (4) இரஸாஞ்ஜநம், சாம்பிராணி, புஷ்பாஞ்ஜநம், மநச்சிலை, கடல்நுரை, இந்துப்பு, காவி, மிளகு இவற்றைத் தேன்விட்டு அரைத்து அஞ்ஜநமாகச் செய்து உபயோகிக்கவும். இரஸாஞ்ஜநாத்யஞ்ஜநம் என்கிற இது கண்பிளிச்சை, அரிப்பு இவற்றைப் பரிஹரிக்க உயர்ந்த ஔஷதம். (5) கிரந்திதகரத்தைக் கடுக்காய்க் கஷாயத்தில் நன்றுகக் கலந்து அரைந்து உபயோகித்தால் பில்லம் தீரும். (6) தேவதாருவை இழைத்தெடுத்த கல்கத்தைச் செம்மறியாட்டு மூத்திரத்தில் பாவனை செய்து, சிறிது ஸ்நேஹங் கலந்துபயோகிப்பதும் நலம். (7) இந்துப்பு, த்ரிபலை, திப்பிலி, கடுகரோஹிணி, சங்கின் உட்புறச்சுழி, செப்புத்தூள் இவற்றை வர்த்தியாகச் செய்யவும். ஸைந்தவாதிவர்த்தி எனப்படும் இது, பில்லம், சுக்ரம் இவற்றைப் போக்கும். (8) புஷ்பகாஸீஸப் பொடியை[1]த் துளஸிஸ்வரஸத்தில் பாவனை செய்து, தாம்ரபாத்திரத்தில் பத்து நாட்கள் வைத்திருந்து உபயோகிக்கவும். புஷ்பகாஸீஸாஞ்ஜநம் என்கிற இது பில்லம், இமைமயிர் உதிர்தல் இவற்றைப் பரிஹரிக்கும். (9) ஹரிதாளம் ஒரு பாகம், ஸௌவீராஞ்ஜநம் ஒரு பாகம், மிக்க நுண்மையான தாம்ரப்பொடி அவ்விரண்டுக்கும் ஸமபாகம்; இவற்றின் கூட்டாலான ஹரிதாளாதிசூர்ணஞ்ஜநம் ஒரு சலாகை நேத்திரத்திற் பிரயோகித்ததும் பில்லரோகங்களில் இமைமயிர்களை நன்கு வளரச்செய்யும். (10) பருத்திக்கொட்டையிலிருந்தெடுத்த நெய்மாதிரியான ஸத்தை, கொம்பாக்கு-கருநொச்சி-கையாந்தகரை-மரமஞ்சள் இவற்றின் கஷாயத்தில் ஏழு முறை பாவனை செய்து, அந்த நெய்யை ஊற்றி தீபம் எரித்து, அத் தீயிலிருந்து எழும் மையைப் பில்லவியாதியில் விரணம் முதலியது ஆறுவதற்காக உபயோகிக்கலாம். 46—57.

பில்லரோகங்களில் சில விசேஷ சிகித்ஸைகள் :—பில்லரோகங்களால் பிடிக்கப்படுபவனுக்கு இமைப்பையின் உட்புறத்தைப் பல முறையும் இறுகத் தேய்க்கவேண்டும்; அங்ஙனமே அடிக்கடி இரத்தமோக்ஷணம் செய்யலாம்; மீண்டும் மீண்டும் விரேசநம் செய்யலாம்; தினந்தோறும் ஆச்சியோதநமும் செய்ய

1. புஷ்பகாஸீஸம் — முதற்பாகம் பார்க்க.

லாம் ; நஸ்யகர்மமும், தூமபாநமும் செய்பலாம் ; இவ்வளவுக்கும் பூயாலஸம் தணியாவிடில் ஸூக்ஷ்மசலாகையைக் கொண்டு உட்புறத்தில் தாஹசிகித்ஸை செய்யலாம்.—58, 59.

நேத்திரரோகங்களின் தொகை:—இவ்வாறு தொண்ணூற்று நாலு நேத்திரவியாதிகள், அவற்றின் காரணங்கள், குறிகள், சிகித்ஸைகள் ஆகியவற்றுடன் பரஸ்பரம் குழப்பமில்லாமல் விளங்க முற்றிலும் விவரிக்கப்பட்டன.—60.

நேத்திரங்களை ஆரோக்கியமாகக் காக்கும் முறைகள் :— ஆரோக்கியசாலியா யிருப்பவனும் எப்பொழுதுமே கண்களைச் சுகநிலைமையில் வைப்பதிற் கருத்துள்ளவனும் ஒழுங்காக நடந்து வரவேண்டும். அதாவது — வாற்கோதுமை, கோதுமை, சம்பா, கார், கோத்ரவம் இவற்றைப் பழகியவைகளாய் உபயோகிக்க வேண்டும் ; கபஹாரமாகவும் பித்தஹாரமாகவும் உள்ள பயறு முதலியவற்றைத் தாராளமாக நெய் கூட்டிப் புஜிக்க வேண்டும் ; இதேவிதமாகக் காய் கிழங்கு கீரைகளையும், ஜாங்கலமாம்ஸத்தையும், மாதளையையும், சர்க்கரையையும், இந்துப்பையும், த்ரிபலையையும், திராக்ஷையையும் உட்கொள்ளலாம் ; பருகுவதற்குத் திவ்யோதகம்[1] சிறந்தது ; வெளியிற் செல்லும்போது கையிற் குடையோடும், பாதரக்ஷையோடும் செல்ல வேண்டும் ; முறைப்படி வமந-விரேசநாதி சோதந சிகித்ஸைகளையும் செய்துகொள்ளவேண்டும் ; வேகங்களை அடக்கும் வழக்கமும், அஜீர்ணமும், அதிபோஜனமும் விலக்கப்பட வேண்டும் ; மேலும் மனத்துயரம், சினம், பகலில் நித்திரையுறுதல், இரவில் தூக்கமின்றி கண் விழித்தல் ஆகியவற்றையும், காந்தலும் பொருமலும் தரக்கூடிய இந்த்ரியசேஷ்டைகளையும், உணவுகளையும், ஒளஷதங்களையுங் கூட பரிஹரிக்க வேண்டும். 61—64½.

பாதங்களைப் பராமரிப்பது நேத்திராரோக்கியத்திற்கு நன்மையானது :—(1) பாதத்தின் மத்தியில் இரண்டு பெரிய நாடி நரம்புத் தொகுதிகள் உண்டு ; அவை மேலே பல கிளைகளாக நேத்திரத்திற் சென்று பரவியுள ; ஆகவே பாதங்களில் அப்யங்கம் செய்வது, நலங்குப்பொடி போன்ற உத்வர்த்தநங்கள் இடுவது, லேபநங்களைப் பிரயோகிப்பது முதலியவற்றின் மூலமாய் குணங்கள் கண்களைச் சேர்ந்து அவற்றைப் பலப்படுத்தும். (2) அந்த நாடி நரம்புகள் தோஷங்கள், உஷ்ணம், அடி தாக்குதல் முதலிய துன்பங்களால் கோளாறடைந்து, அவற்றாலான தோஷங்களை நேத்திரங்களிற் கொண்டு சேர்க்கும் ; ஆகையால் திருஷ்டிக்கு அநுகூலமாகப் பாதரக்ஷைகளைத் தரிப்பதும், பாதங்களில் அப்யங்கம் செய்வதும், அவற்றைப் பரிசுத்தமாக வைப்பதும் அவசியமாம்.—65, 66.

---

1. திவ்யோதகம் — நாபஸ ஜலம் அல்லது காங்கோதகம்.

# பதினேழாம் அத்தியாயம்.

## கர்ணரோக விஞ்ஞானீயம்.

இனி கர்ணரோக விஞ்ஞானீயம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

வாதாதி தோஷங்களால் ஏற்படும் கர்ணசூலங்கள்[2] :—(1) பிரதிச்யாயம், நீர்விளையாடல், செவியைக் குச்சி முதலியதால் குடைவது, மிக்க பலமான அல்லது மிக்க மிருதுவான சப்தத்தைக் கேட்பது, மற்றும் இவ்விதமான பிரகோபத்திற்கு ஹேதுவாயுள்ள முகாந்தரங்கள் முதலியவற்றால் வாததோஷம் பிரகோபமடைந்து, செவியிலுள்ள ஸிரைகளைப் பற்றியதாய், செவிக்குழியினுள் வேகம் பெற்று குத்தலுண்டுபண்ணும் ; மேலும் அர்த்தாவபேதகம், சப்தம் கேட்கமுடியாது மந்தித்துப் போதல், குளிரை விரும்பாமை, உட்புறத்தில் உண்டான விரணம் மிக்க மெள்ளப் பக்குவமடைதல், பக்குவமானதும் சொற்பம் நிணநீரைப் பெருக்குதல், செவி சப்தம் முதலியதை உணராது சூனியமாயிருப்பதாகத் தோற்றுதல், திடீரென ஏதோ காதுக்குள் ஓடியுலாவுவது போன்ற உணர்ச்சி இவ்விகாரங்கள் உண்டாகும். (2) பித்ததோஷம் பிரகோபமடைந்துண்டாகும் கர்ணசூலையில் தாபம், எரித்தல், குளிர்ச்சியில் விருப்பம், வீக்கம், ஜ்வரம், சீக்கிரம் விரணம் பக்குவமடைதல், நன்கு பக்குவமானதும் பசுமையான நிணநீர்க்கசிவு இவை ஏற்படும் ; காதிலிருந்து வழியும் இந்தக் கசிவு படும் இடமெல்லாம் விரணம் ஏற்பட்டுப் பொங்கிவிடும். (3) கபதோஷம் பிரகோபித்துக் காணும் கர்ணசூலையில் தலைபாரம், மோவாய்க்கட்டையிலும் கழுத்திலும் ஸ்தம்பித்தல் அல்லது பருத்திருப்பது போன்ற உணர்ச்சி, அதிக வலியின்மை, தினவு, வீக்கம், உஷ்ணத்தில் விருப்பம், பக்குவமடைந்த விரணத்திலிருந்து வெண்மையான தடித்த நீர் கசிதல் இவ்விகாரங்கள் காணப்படும். (4) அபிகாதம் முதலியதால் இரத்தம் கோளாறடைந்து காதுக்குள் குத்தலையும், பித்தக் கோளாறுலான கர்ணரோகத்திற்குச் சமானமான வலியையும், அல்லது சிறிது அதிக விகாரங்களையும் உண்டுபண்ணும். (5) ஸந்நிபாத தோஷத்தினால் உண்டாகும் கர்ணசூலையில் காதில் வீக்கமும், ஜ்வரமும், கடுமையான வலியும் காணும் ; உஷ்ணத்திலும் குளிர்ச்சியிலும் மாறி மாறி விருப்பம் உண்டாம் ; துர்நீர்க் கசிவும், திமிர்ப்பும் தோன்றும் ; விரணம் பக்குவமானதும் வெண்மையாகவும், கறுப்பாகவும், தடிப்பாகவுமுள்ள சீழ் காதிலிருந்து வழியும். 1—8.

---

1. கர்ணரோக விஞ்ஞானீயம்—காதில் உண்டாகும் வியாதிகளின் நிலைமைகளை அறிவிக்கும் அத்தியாயம்.

2. கர்ணசூலம்— காதுவலி அல்லது காதுகுத்தல்.

கர்ணநாதம் :—வாததோஷம் சப்தத்தைச் செலுத்தும் நாடியைப் பற்றியதாயிருந்தால், அகாரணமாகவே பலவேறு விதமான நாதங்களைப் பிணியாளி செவியுறுவான்; அவ்வியாதியைக் "கர்ணநாதம்" என்பார்கள்.—9.

பாதிர்யம் :—வாயுவானது கபத்தினால் அநுஸரிக்கப்பட்டிருந்தாலும், கர்ணநாதம் சிகித்ஸிக்கப்படாது உபேக்ஷிக்கப்பட்டாலும், உரத்துக்கூவினாலன்றி சப்தம் காதில் நன்கு விழுவதில்லை; கிரமமாக அந்நிலைமை "செவிட்டுத்தனத்தை" உண்டுபண்ணும்; அது "பாதிர்யம்" எனப்படும்—10.

பிரதீநாஹம் :—வாததோஷத்தினால் கபம் சோஷிப்பிக்கப்பட்டால், அக் கபம் செவிக்குள் உள்ள ஸ்ரோதஸ் அல்லது நுண்ணிய குழலுக்குள் பூசப்பட்டது போல் பற்றிக்கொண்டு, வலியையும் குருத்தன்மையையும், அடைப்பையும் உண்டுபண்ணும்; அதற்குப் "பிரதீநாஹம்" என்று பெயர்.—11.

கண்டு-சோபங்கள் :—கபதோஷத்தினால் செவிக்குள் தினவும், வீக்கமும் நிலைத்துப் போய் தொந்தரவளிக்கும்; இவ்விரண்டும் முறையே "கர்ண கண்டு" என்றும், "கர்ண சோபம்" என்றும் கருதப்படும்.—$11\frac{1}{2}$.

பூதிகர்ணகம் :—கபதோஷம் பித்தத்தினால் காதுக்குள் காந்தலை யடைந்து, கனமாகவும் துர்நாற்றமுள்ளதுமான அதிக துர்நீர்க்கசிவை யுண்டுபண்ணும்; இதனால் வலிப்பது முண்டு, வலியில்லாமலிருப்பது முண்டு; இது "பூதிகர்ணகம்" ஆம்.—$12\frac{1}{2}$.

கிருமிகர்ணகம்:—வாதாதிதோஷங்களால் தூஷிப்பிக்கப்பட்ட செவியைக் கிருமிகள் அரித்தழிக்கவே, மாம்ஸம்-இரத்தம் இவற்றிலிருந்து கசியும் நிணநீர் மிகக் கடும் வேதனையைத் தரும். அது "கிருமி கர்ணகம்" எனப்படும்.—$13\frac{1}{2}$.

கர்ணவித்ரதி :—காதைத் துரும்பு முதலியதால் தோண்டிக் குடைவதால் உட்புறம் குத்தப்பட்டு விரணம் ஏற்பட, அதனால் முன் கூறியுள்ள குறிகளுள்ளதாய்[1] வித்ரதி ஏற்படும்; இதற்குக் "கர்ணவித்ரதி" எனப் பெயர்.—$14\frac{1}{4}$.

கர்ணசோபம் - கர்ணார்சஸ் - கர்ணார்புதம் :—முன்னால் வித்ரதிக்குக் கூறியுள்ள மற்றக் குறிகளை லக்ஷணமாகப் பெற்ற காது வீக்கம் "கர்ணசோபம்" எனப்படும்.[2] "கர்ணார்சஸ்ஸும்", "கர்ணார்புதமும்" வர்த்மரோகத்திற் கூறியுள்ள அர்புதம் அர்சஸ் இவற்றைப் போன்ற[3] குறிகளுள்ளவைகளாயிருக்கும்; இம்மூன்

---

1. நிதானஸ்த்தானத்தில் வித்ரதிநிதானம் பார்க்க.
2. வித்ரதியில் காணும் சீழ் முதலியவை இதில் காணப்படா.
3. இந்த ஸ்த்தானத்தில் 8-ம் அத்தியாயம் பார்க்க.

றிலும் வலியும், சீழ்வடிதலும், செவிட்டுத்தனமும் பின்பு ஏற்பட்டுச் செவியைப் பாதிக்கும்.—15.

கூசிகர்ணகம் :—சஷ்குலி[1] யென்னும் வெளிக்காது சிசு கர்ப்பத்திலிருக்கையிலேயே வாயுவினால் உட்புறமாய் சுருக்கங் கொண்டு விகாரமடையும்; இது "கூசிகர்ணகம்" எனப்படும்.-15½.

கர்ணபிப்பலி :—சஷ்குலியென்னும் வெளிக்காதில் உட்புறமாய் திப்பிலி அளவுள்ளதாய் ஒன்று அல்லது பல முளைகள் ஸ்திரமாய் ஏற்படுவதுண்டு; அதில் வலி இராது; "பிப்பலி" என்று இதன் பெயர்.—16¼.

விதாரிகா :—ஸந்நிபாததோஷத்தினால் காதில் "விதாரிகா" என்னும் வியாதி உண்டாகும்; இதில் வீக்கம் காதுக்குச் சமநிறமாகவும், திமிதமாகவும் எழும்பும்; இதை உபேக்ஷித்தால் வீக்கம் பழுத்துக் கடுகெண்ணெய்போன்ற கசிவு அதிலிருந்து வெளிப்படும்; விரணம் மிகத் தாமதித்து ஆறி, பிறகு இதனால் வெளிக்காது நிலையாக உட்புறமாகச் சுருங்கிவிடும்.—17, 18.

பாலிசோஷம்-தந்த்ரிகா :—(1) வாயுவானது ஸிரைகளைப் பற்றிக் கோளாறடைந்து பாலி என்கிற வெளிக்காதைச் சுஷ்கிக்கச் செய்யும்; அக்கோளாறு "பாலிசோஷம்" என்று வழங்கப்படும். (2) வாதக்கோளாறால் பாலியானது தந்திக் கம்பியைப்போல் அவ்வளவு மெல்லியதாகவும், கடினமாகவும் மாறுமானால் அது "தந்த்ரி" எனப்படும்.—19.

பரிபோடம் :—மிகவும் மிருதுவான பாலியின் அடிப்புறம் வெகு காலம் உபேக்ஷிக்கப்பட்டு த்வாரமிட்டு வெகு துரிதமாக வளர்க்கப்பட்டால், அவ்விடம் வீக்கத்தையும் வலியையும் பெற்று, மிகச் சிவந்து வெடித்துப் போம்; வாததோஷத்தால் ஏற்படும் இக்கோளாறு "பரிபோடம்" எனப்படும்.—20, 20¼.

உத்பாதம் :—கர்ணபாலியின் அடிப்புறத்தில் கனமான ஆபரணம் முதலியவற்றின் பாரத்தினால் கருஞ்சிவப்பான வீக்கம் உண்டாகும்; பித்த-ரக்தங்களின் பிரகோபத்தாலான அதில் வலியும், அழற்சியும், வேக்காடும் தோன்றும்; வெடிப்பு, கொப்புளங்கள், சிவப்பு, எரித்தல், துர்நீர்க்கசிவு இவைகளும் காணும்; இவ்வியாதியை "உத்பாதம்" என்பர்.—21, 21¼.

உந்மந்தம் :—பாலியில் வாத - கபங்களின் கோளாறால் முற்றிலும் பரவியதாய் வலியற்றதாய் நிலையான வீக்கம் தோன்றும்; இது திமிதமாகவும், காதுக்குச் சமநிறமாகவும், தினவுள்ளதாகவும் இருக்கும். இது "உந்மந்தம்" என்றும், "கல்லிரம்" என்றும் வழங்கப்படும்.—22½.

---

1. சஷ்குலி — செவிக்குழிக்கு வெளியில் இலைபோல் விரிந்திருக்கும் அவயவம். இதற்கே பாலி அல்லது கர்ணபாலி என்றும் பெயர்.

துக்கவர்த்தநம் :—முறை தவறாகக் குத்தியும் வளர்க்கவும் பட்ட காதில் தினவும், தாபமும், வேக்காடும், வலியும் உள்ள தாய் வீக்கம் உண்டாகும்; ஸந்நிபாததோஷத்தினால் உண்டாகும் இதற்கு "துக்கவர்த்தநம்" என்று பெயர்.—23½.

லேஹி :—கபதோஷம், இரத்ததோஷம், கிருமிகள் இவற்றால் பாலியில் ஸூக்ஷ்மமான கொப்புளங்கள் கிளம்பும்; அவற்றில் தினவும், துர்நீர்க்கசிவும், வேதனையும் அதிகமாயிருக்கும்; இவை தகுந்த சிகித்ஸையில்லாமல் உபேக்ஷிக்கப்பட்டால் பாலி பாகத்தைத் தின்று அழித்துவிடும்.—24½.

கர்ணரோகங்களில் ஸாத்யாஸாத்யங்கள் :—இவற்றுள் (1) பிப்பலி, ஸந்நிபாத கர்ணரோகம், விதாரிகா, கூசிகர்ணகம் இந் நான்கும் அஸாத்யங்கள். (2) தந்த்ரிகை ஒன்று யாப்யம். (3) மற்றவை சிகித்ஸிக்கத் தகுந்தவை. இவ்வாறு இருபத்தைந்து கர்ணரோகங்கள் பகுத்துக் கூறப்பட்டன.—25, 26.

---

## பதினெட்டாம் அத்தியாயம்.

### கர்ணரோகப் பிரதிஷேதம்.

இனி கர்ணரோகப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

வாதகர்ணசூல சிகித்ஸை :-வாததோஷத்தினால் உண்டாகும் கர்ணசூலையில் (1) பிணியாளிக்கு மாம்ஸரஸம் கொடுத்து, இரவில் காதுக்கு ஸ்வேதம் செய்வித்து, வாதஹரச்சரக்குகளால் பக்குவம் செய்த க்ருதத்தைச் செவியினுள் நிரப்பலாம். (2) அரசு, பில்வம், எருக்கு, ஆமணக்கு, சரக்கொன்றை இவற்றின் இலைகளைத் தனித் தனியே எடுத்து, இந்துப்பு தூவி, எண்ணெயும் தடவி புடபாக முறையில் வெதுப்பி, இரஸம் பிழிந்து, அதை இளஞ்சூடாகக் காதினுள் ஊற்றலாம்; இவ்விதமே முள்ளங்கி ரஸத்தையும் ஊற்றலாம். (3) மஹாஸ்நேஹத்தை[1] வாதஹரமான ஔஷத வர்க்கத்திலும்[2], அம்லங்களிலும்[3], மூத்திரங்களிலும்[4] பக்குவம் செய்து உபயோகிக்க, இது மிகக் கடுமையான காதுவலியையும் எளிதில் தீர்க்கும். (4) மஹாபஞ்சமூலங்களில் ஏதேனும் ஒன்றின் கட்டையில் பட்டுத்துணியைச் சுற்றி, எண்ணெயில் தோய்த்து, எரிக்க, அச் சுடரிலிருந்து விழும் பஞ்சமூலவர்த்தி ஸ்நேஹம் என்னும்

---

1. மஹாஸ்நேஹம் — முதற்பாகம் பார்க்க.
2. வாதஹர ஔஷதச்சரக்குகள் — முதற்பாகம் பார்க்க.
3. அம்லங்கள் — எலுமிச்சை, மாதளை, கொடிமாதளை முதலியன.
4. மூத்திரங்கள் — கோமூத்திரம் முதலியன.

தைலம் காதுவலியை உடனே நிவ்ருத்தி செய்யும். (5) இதேவிதமாக தேவதாரு, கோஷ்டம், ஸரளதேவதாரு இவற்றின் கட்டையைக்கொண்டு வர்த்திஸ்நேஹம் இறக்கியும் உபயோகிக்கலாம். (6) வாதரோகத்திலும், பிரதிச்யாயத்திலும் விதிக்கப்பட்டுள்ள சிகித்ஸைகளும் இதில் அனுகூலமானவை. (7) சிரஸ்நானம் செய்வதும், பகலிற்கூட குளிர்ந்த நீர் பருகுவதும் விலக்கத்தகுந்தவையாம். 1—6.

பித்தகர்ண சூலசிகித்ஸை:—பித்ததோஷத்தாலான கர்ண சூலையில் (1) சர்க்கரை கலந்த க்ருதத்தைக்கொண்டு பிணியாளியை ஸ்நிக்த்தமாக்கி, பிறகு விரேசநம் செய்விக்கவும். (2) திராக்ஷை, அதிமதுரம் இவற்றின் கஷாயத்திற் பக்குவம்செய்த முலைப்பாலைக் கர்ணபூரணமாகப் பிரயோகிப்பதும் நலம். (3) ஒரு படி அதிமதுரக்கஷாயத்தில் இரண்டு படி பால் சேர்த்து, அதிமதுரம்-அறுகு-குருவேர் - வெட்டிவேர் - காகோலி, வெள்ளிலோத்தி, ஜீவகம், தாமரைக்கொடி, தாமரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, நன்னாரி இவற்றைக் கல்கமாக இடித்துச் சேர்த்து, இதில் அரைச்சேர் நல்லெண்ணெய் கூட்டிப் பக்குவம் செய்யவும். மதுயஷ்டீதைலம் எனப்படுகிற இது நஸ்யம் இடுவது, கர்ணபூரணம், அப்யஞ்ஜநம் இப்பிரயோகங்களால் கர்ணசூலம், அழற்சி, தாபம் இவற்றைப் பரிஹரிக்கும். (4) வெறும் தேனை அவ்விதம் பிரயோகித்தாலும் நலமுண்டு. (5) முற்கூறிய அதிமதுரம் முதலிய சரக்குகளின் கஷாயத்தில் நெய் கூட்டிப் பக்குவம் செய்து, அந்த நெய்யைக் காதுக்குச் சுற்றிலும் தேய்த்து லேபநமும் செய்யலாம். 7—10.

கபகர்ணசூல சிகித்ஸை:—(1) சிலேஷ்மதோஷத்தினலுண்டான கர்ணசூலையில் தப்பிலி சேர்த்துச் செய்த க்ருதத்தினல் பிணியாளியை ஸ்நிக்த்தமாகச் செய்து வமநம் செய்விக்கவேண்டும். (2) கபஹரமான பதார்த்தங்களால் தூமபாநமும், நஸ்யமும், கண்டூஷதாரணமும் செய்யலாம். (3) வெள்ளுள்ளி, இஞ்சி, முருங்கை, துளஸி, முள்ளங்கி, வாழை இவற்றின் தனித்தனி ஸ்வரஸத்தை இளஞ்சூடாகக் காதில் ஊற்றலாம். (4) எருக்கம்பூ மொட்டுகளைக் காடிவிட்டு அரைத்து, அதில் தைலமும் ஊற்றி, உப்பையும் கூட்டி, இரண்டாகப் பிளந்த கள்ளித்தண்டுக்குள் அக்கல்கத்தை வைத்து, கள்ளியிலைகளால் மூடி, புடபாகமுறையில் வெதுப்பி யெடுத்துப் பிழிந்து, அந்த இரஸத்தைக் கர்ணபூரணமாகப் பிரயோகிக்கக் காதுவலி தீரும். (5) கொடிமாதுளை ரஸத்தையாவது, (6) விளாங்கனிரஸத்தையாவது, (7) காடியையாவது கர்ணபூரணமாக விட்டு, அதன்மேல் கடல்நுரைப்பொடியைத் தூவலாம். (8) வெள்ளாடு, செம்மறியாடு இவற்றின் சிறுநீரில் மூங்கிலின் மேல்தோலை இடித்துப்போட்டு, அதில் தைலம் சேர்த்துக் காய்ச்சி, அதைக் கர்ணபூரணமாய் உபயோகிக்கலாம்.

(9) காயம், வெள்ளிலோத்தி, சுக்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கடுகெண்ணெயையாவது அவ்விதம் செய்யலாம். 11—15½.

இரத்தஜகர்ணசூல சிகித்ஸை :— இரத்ததோஷத்தினாலான காதுவலியில் (1) பித்தகர்ணசூலக்கான சிகித்ஸைகளைச் செய்யலாம். (2) மேலும் சீக்கிரம் ஸிராமோக்ஷணமும் செய்ய வேண்டும்.—16.

பக்வகர்ண சோதைக்கு சிகித்ஸை :—காதிலுண்டான வீக்கம் பக்குவ நிலைமையடைந்ததும், சீழும் வெளிப்பட்டுக்கொண்டிருந்தால் (1) தூமபானமும், கண்டூஷதாரணமும், நஸ்யகர்மமும் செய்யவேண்டும். (2) நாடியென்கிற குழாயைச் செவியினுள் வைத்துச் சீழ்வடியுமாறு செய்யலாம். மேலும் சீழ் முதலியது சேர்ந்துள்ள விரணத்தைச் சுத்தமாக்கக்கூடிய வேறு எச் சிகித்ஸையையும் செய்வது நலம். (3) காதினுள் ஒட்டிக்கொண்டுள்ள அழுக்கைத் தினத்திற்கு இரு முறை பிசுவர்த்திகளால் துடைத்துச் சுத்தம் செய்து, தூபமிட்டு, நல்ல தேனை உள்ளே விடவும். (4) ஸாரஸாதிகணக்கஷாயத்தில் சர்க்கரை சேர்த்துச் செய்த பாணிதத்தைச் செவியினுள் விட்டு, பிசுவர்த்தியால் செவியை அடைத்து மூடவும்; ஸாரஸாதிகணச்சூர்ணத்தையாவது உள்ளே தூவலாம். இம்முறை கர்ணசூலையையும், காதில் சீர்வடிவதையும், காதின் குருத்வத்தையும் பரிஹரிக்கும். 17—19½.

ப்ரியங்க்வாதிதைலம் :—ஞாழல், அதிமதூரம், வட்டத்திருப்பி, சிறுநாகப்பூ, நைதல், மல்லிகை, மஞ்ஜிஷ்டி, வெள்ளிலோத்தி, கொம்பரக்கு இவற்றைக் கல்கமாகச் சேர்த்து, விளாம்பழக்கஷாயத்தில் தைலம் பக்குவம் செய்து, காதில் விடுவதால் சீழ்வடிதல் சீக்கிரம் நிவ்ருத்தியாகும்.—20, 21.

கர்ணநாதசிகித்ஸை :—(1) காதிரைத்தலுக்கும், செவிட்டுத்தனத்துக்கும் வாதகர்ணசூலக்குக் கூறிய சிகித்ஸையைச் செய்யலாம். (2) இதில் கபத்தின் ஸம்பந்தமும் இருந்தால், முதலில் வமநம் முதலியதைப் பிரயோகித்து கபத்தைப் பரிஹரிக்கவேண்டும். (3) ஆமணக்கிலை, முருங்கையிலை, மாவலிங்கஇலை, முள்ளங்கியிலை இவற்றின் ஸ்வரஸம் நான்கு பங்கு, பால் எட்டு பங்கு, நல்லெண்ணெய் ஒரு பங்கு கூட்டி, அதில் அதிமதூரம், க்ஷீரகாகோலி இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்து, கர்ணநாதம், செவிட்டுத்தனம், காதுவலி இவற்றிற்கு ஏரண்டாதி தைலம் என்கிற இதை நஸ்யமாகவும், அப்யங்கம் செய்யவும், கர்ணபூர்ணமாகவும் உபயோகிக்கலாம். (4) அதிவிடயம், காயம், ஜடாமாம்ஸி, லவங்கப்பட்டை, ஸர்ஜக்ஷாரம், மிளகு இவற்றின் கஷாயத்தில் ஸூக்தமும் சேர்த்துத் தைலம் பக்குவம் செய்து செவியில் விட காதுவலி, சீழ்வடிதல், கர்ணநாதம் இவை தீரும். (5) காதிரைத்தலில் கடுகெண்ணெயும் அனுகூலமானது. 22-25½.

க்ஷாரதைலம் :—உலர்ந்த முள்ளங்கியை எரித்தெடுத்த க்ஷாரம், காயம், சுக்கு, சதகுப்பி, வசம்பு, கோஷ்டம், முருங்கை, இரஸாஞ்ஜநம், ஸௌவர்ச்ச லவணம், யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், பூனீறு, இந்துப்பு, பூர்ஜபத்திரம், கிரந்திதகரம், பிடாலலவணம், கோரைக்கிழங்கு இவற்றை அனைத்துக்கும் நான்கு மடங்கு அளவான மதுஸூக்தத்தில்[1] கூட்டி, அதே அளவு கொடிமாதளை ஸ்வரஸமும் வாழைத்தண்டுரஸமும் சேர்த்து, இவற்றில் தைலம் பக்குவம் செய்து, கர்ணபூரணமாகப் பிரயோகிக்கலாம். "க்ஷார தைலம்" என்கிற இவ்வௌஷதம் காதில் அரிப்பு, சீழ்வடிதல், செவிட்டுத்தனம், பூதிகர்ணம், காதுவலி, காதில் கிருமிகள் சேருதல் இவற்றைத் தீர்க்கும். முகரோகங்களிலும் தந்தரோகங்களிலுங்கூட இது மிக்க உபயோகமானது. 26—29½.

கர்ணஸ்வாப-சோபாதிகளில் சிகித்ஸை :—(1) காதுகள் திமிர்த்தார்ப் போலுள்ள கர்ணஸ்வாபக் கோளாறில் காதின் பக்கமாக இரத்தமோக்ஷணம் பண்ணவேண்டும். (2) காதில் வீக்கமும், சீழ்வடிதலும் இருந்தால், துர்நீர்க்கசிவு சொற்பமாயிருந்தாலும் வமநம் செய்விக்க வேண்டும்.—30½.

செவிட்டுத்தனத்தில் அஸாத்யமானது :—பாலர்களுக்கும், வயது முதிர்ந்தவர்களுக்கும் காணும் பாதிர்யம் என்கிற செவிட்டுத்தனமும், நெடு நாட்களாயுள்ள செவிட்டுத் தனமும் சிகித்ஸைக்கு வசப்படாதவையாம்.—31.

பிரதீநாஹ சிகித்ஸை :—(1) பிரதீநாஹம் என்னும் வியாதியில் ஸ்நேஹ-ஸ்வேத முறைகளால் செவியின் உட்புறத்தை ஊறவைத்து, உலர்ந்த மலங்கள் நன்றாகக் கசிந்த பிறகு, கர்ணசோதந சலாகையினால் காதை நன்றாகச் சுத்தம் செய்யவும். உடனே ஸூக்தம், இந்துப்பு, தேன், கொடிமாதளைரஸம் இவற்றுள் ஏதேனும் ஒன்றுடன் கூட்டிய தைலத்தைச் செவியினுள் விடலாம். (2) சோதநம் செய்வதால் செவியினுட்புறம் ரூக்ஷமாகப் போனால், நெய்யின் மேற்புறத்திலுள்ள ஏட்டைக் காதினுள் விடலாம்.—32, 33.

கர்ணமல கர்ணஸ்ராவாதிகளுக்குச் சிகித்ஸை :—(1) காதினுள் மலம் நிரம்பியிருந்தாலும் முற்கூறிய பிரதீநாஹ சிகித்ஸையையே செய்யலாம். (2) தினவு அதிகமாயிருந்தால் கபஹரமான சிகித்ஸையும், (3) கர்ணசோபையிருந்தால் அவ்விதமே கபஹர சிகித்ஸையும், நஸ்யம் முதலியவற்றின் பிரயோகமும் ஏற்றவையாம். இதில் கனமாகவும் உஷ்ணமாகவும் உள்ள லேபநமும் உபயோகமாம்.—34.

---

1. மதுஸூக்தம் — தேன் சேர்த்துச் செய்யப்படும் ஸூக்தம். (ஸூக்தம். முதற்பாகம் பார்க்க.)

கிருமிகர்ணரோக சிகித்ஸை —(1) பூதி கர்ணம், கிருமி கர்ணம் இவைகளில் கர்ணஸ்ராவத்திற்குக் கூறிய சிகித்ஸையும், (2) கிருமிகர்ணத்திற்கு முக்கியமாகக் கடுகெண்ணெயினால் கர்ண பூரணமும் செய்யலாம்.—35.

கர்ணவித்ரதி முதலியவற்றிற்குச் சிகித்ஸை :—(1) கர்ணவித்ரதியில் முதலில் வமநம் செய்து, பிறகு வித்ரதிக்குக் கூறியுள்ள சிகித்ஸையைச் செய்யவேண்டும். (2) காதின் உட்புறத்தில் சலாகை முதலியது குத்துவதாலான விரணத்தினால் உண்டான வித்ரதியில் பித்தகர்ணசூல சிகித்ஸை ஏற்றதாகும். (3) கர்ணார்சஸ், கர்ணார்புதம் இவற்றில் நாஸார்புதம், நாஸார்சஸ் இவற்றிற்குச் செய்யப்படுவது போன்ற சிகித்ஸை ஏற்றதாம். (4) பக்குவமாகாத கர்ணவிதாரிகா என்னும் வியாதிக்கு அது எந்த தோஷத்தினால் உண்டாகிறதோ அதை அநுஸரித்தும், கர்ண வித்ரதிக்கு ஏற்றதுமான சிகித்ஸையைச் செய்ய வேண்டும்.—36, 37.

பாலி சோஷாதிகளின் சிகித்ஸை :—(1) பாலிசோஷ ரோகத்தில் வாதகர்ண சூலைக்கேற்ற நஸ்யமும், லேபநமும், ஸ்வேதமும் பிரயோகிக்கலாம். (2) ஸ்வேதம் செய்த பிறகு பாலி யென்கிற வெளிக்காதை சாரப்பருப்பு, அதிமதுரம், அலரி, வாற்கோதுமை இவற்றுடன் எள்ளைக் கூட்டித் தேய்த்து வரவும்; இது செவிக்குப் புஷ்டி தரும். மேலும் தினந்தோறும் அப்யங்கமும் செய்து வரலாம். (3) தண்ணீர்விட்டாங் கிழங்கு, அமுக்கிருங் கிழங்கு, க்ஷீரகாகோலி, ஆமணக்குவிதை இவற்றின் கஷாயத்தில் பால் கூட்டித் தைலம் பக்குவம் செய்து பாலி சோஷத்திற்கு உபயோகிக்க. அவ்வவயவம் புஷ்டியடையும். (4) பாலில் ஜீவநீயகணச் சரக்குகளைக் கல்கமாகச் சேர்த்து, இவற்றை ஆநூபமாம்ஸ கஷாயத்திற் கூட்டி, அதில் தைலம் பக்குவம் செய்து, வெளிக் காதில் தேய்க்கவும்; இது பாலி யென்னும் அவயவத்தைப் போஷித்து வளர்க்கும். (5) வெளிக்காதில் மிகவும் மெலிந்துள்ள பாகத்தை அறுத்துப் போட்டுவிட்டு, மற்றப் பாகத்தைச் சேர்த்துக் கட்டி போஷிக்கச் செய்யலாம். (6) இவ்விதமாகவே தந்த்ரிகையிலும், பரிபோடத்திலும் சிகித்ஸை செய்ய வேண்டும். 38—42.

உத்பாத சிகித்ஸை :—உத்பாதம் என்கிற வியாதியில் (1) சீதள அட்டைகளை விட்டு இரத்தத்தை வெளிப்படுத்திய பிறகு, சீதளமான ஔஷதங்களால் மேலே லேபநம் செய்யலாம். (2) நாவல் துளிர், மாந்துளிர், சிற்றுமுட்டி, அதிமதுரம், வெள்ளிலோத்தித் துளிர், எள்ளிலை, நைதல், காடி, மஞ்ஜிஷ்டி, கடம்பு, நன்னாரி இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தைக் கொண்டு அப்யஞ்ஜநம் செய்யலாம். (3) விஸர்ப்பத்திற்குக் கூறுகிற க்ருதங்களையும் உபயோகிக்கலாம்.—43, 44.

உன்மந்த சிகித்ஸை :—(1) உடும்பு, நண்டு இவற்றின் கொழுப்பு, பனங்குருத்து, அமுக்கிருங்கிழங்கு, எருக்கு, வாலுழுவை, எள், இந்துப்பு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தைக் கொண்டு அப்யஞ்ஜநம் செய்யலாம். (2) கருந்துளஸி, கலப்பைக் கிழங்கு இவற்றைக் கூட்டி பக்குவம் செய்த தைலத்தை தீக்ஷ்ணநஸ்யமாகப் பிரயோகிக்கலாம்.—45, 45½.

துக்கவர்த்தந சிகித்ஸை: —(1) வேளையிலை, நாவலிலை, மாவிலை இவற்றின் கஷாயத்தினுல் துர்வித்தக் கோளாறில்[1] பாலிபாகத்தை நன்ருகக் கழுவி, தைலத்தை நன்கு பூசி, அதிமதூரம்-மஞ்ஜிஷ்டி-வறள்தாமரை-மஞ்சள் இவற்றின் மிக்க நுண்மையான சூர்ணத்தைக் காதின் மேல் தூவவேண்டும். (2) கொம்பரக்கும் வாய்விடங்கமும் சேர்த்துப் பக்குவம் செய்த தைலமும் அப்யஞ்ஜநம் செய்ய உபயோகமானது.—46, 47½.

லேஹி சிகித்ஸை:—(1) பரிலேஹி வியாதியில்[2] பசுஞ்சாண உருண்டையைச் சூடாக்கி அதனுல் காதின்மேல் பலமுறை ஒற்றடம் கொடுக்கலாம். (2) வாய்விடங்கத்தின் மிருதுவான சூர்ணத்தைப் பெண் ஆட்டின் மூத்திரத்தினுல் கல்கமாகக் கலக்கி மேலே பூசலாம். (3) வெட்பாலரிசி, இங்குணப்பட்டை, புங்கம் வித்து, கொன்றைப்பட்டை இவற்றின் கல்கத்தையாவது பெண் ஆட்டு மூத்திரத்தினுல் கல்கமாக்கிப் பிரயோகிக்கலாம். (4) அல்லது முற்கூறிய வெட்பாலரிசி முதலியவற்றின் கல்கத்தையும், வேப்பிலை-மிளகு-மருக்களாம் பழம் இவற்றின் கஷாயத்தையும் சேர்த்துத் தைலம் பக்குவம் செய்து அப்யஞ்ஜநமாகவாவது பிரயோகிக்கலாம். 48—50.

கர்ணச்சேத சிகித்ஸை :—(1) வியாதியினுல் காது அறுபட்டுப் போனுல் அவ்விடத்தைச் சுத்தம் செய்து, அறுந்துபோன முனைகளை இழுத்துச் சேர்த்து, அவ்விடத்திற்கு ஏற்ற பந்தநத்தை முறைப்படி பிரயோகிக்கவும். (2) ஆகந்துக காரணத்தினுல் அறுபட்டுப்போன செவியையும் சுத்தம் பண்ணிச் சேர்த்துக் கட்டவேண்டும்.—51.

கர்ணவேதந முறை :—தலைமயிர்முனையைத் தலை அசையாதபடி எதேனும ஒன்றில் கட்டிவிட்டு, சேதந-பேதநங்களைச் செய்து,[3] அவ்விதம் சஸ்திரமிட்ட பாகத்தில் உள்ள ஸந்தி

---

1. துர்வித்தம்—காதை முறை தவருகக் குத்துவதால் பாலியில் ஏற்படும் வியாதி துர்வித்தம் என்றும், துக்கவர்த்தநம் என்றும் கூறப்படும்.

2. பாலிபாகத்தைத் தின்று அழிக்கும் வியாதிக்கு லேஹி என்றும், பரிலேஹி யென்றும் பெயர்.

3. சேதந - பேதநம் என்பதால் காது தாறுமாருகச் சஸ்திர சிகித்ஸையில் சேர்ந்திருப்பதை மீண்டும் அறுத்து, ஒழுங்காகச் செய்யும் முறை கூறப்படுகிறது.

பாகத்தை மேடு பள்ளமில்லாமல் ஒழுங்காய் அமைத்து, நெய்யும் தேனும் கூட்டி அவ்விடத்தில் தடவி, சோணிதாஸ்த்தாபக குணமுள்ள சூர்ணங்களை[1] மேலே தூவி, பிசுப்லோதம் என்கிற பஞ்சுத்துணிபால் அவ்விடத்தை மூடி, அதன்மேல் நூலைக்கொண்டு அதிக அழுத்தமாகவுமில்லாது அதிக தளரவுமில்லாது கட்டி, விரணத்திற்கு உசிதமான உபசாரமுறையை ஏழு நாட்கள் நடத்த வேண்டும்; பிறகு காய்ச்சாத தைலத்தை மேலே ஊற்றி மெதுவாக அப்பிசுவை விலக்கிப்போடவேண்டும். 52—54.

**கர்ணவர்த்தந முறை**:—(1) விரணம் நன்கு ஆறிய பிறகு உரோமமும் முளைத்து, ஸந்திபாகம் ஒன்றுகூடி, அவயவம் கறுடு கட்டாது ஒழுங்காக நல்ல நிறத்தையும் பெற்ற பிறகு, குத்திய காதை மெதுவாக வளர்க்கவேண்டும். (2) ஜலசூகாதி க்ருதம்: வேலம்பாசி, காஞ்சொறி, மஞ்சள், மரமஞ்சள், கண்டங்கத்தரி, முள்ளுக் கண்டங்கத்தரி, அமுக்கிருங் கிழங்கு, சிற்றுமுட்டி, யானைத்திப்பிலி, வெண்கடுகு, பீர்க்கம் வேர், அலரிவேர், எருக்கம் வேர், ஏழிலம்பாலைவேர், இயற்கையில் இறந்த மூஞ்சூறு-குளவிக்கூடு-துரிஞ்சில்-அட்டை, வெங்காயம் இவற்றைக் கல்கமாகச் சேர்த்து யானை-குதிரை இவற்றின் சிறுநீரில் நல்லெண்ணெயுடன் எருமைநெய் கூட்டிக் காய்ச்சி கரபாகமாக இறக்கவும்; இதை அப்யங்கத்திற்கு உபயோகிப்பதால் காது நன்றாகவளரும். 55—58½.

**நாஸாஸந்தாந முறை**:—(1) நாசி சிதைந்து போனவனுக்கு வாலிப வயதினனாயிருந்தால், சோதந சிகித்ஸையைச் செய்து, பிறகு பின்வரும் முறைப்படி அதைச் சரிப்படுத்தவேண்டும்; ஏதேனும் இலையை எடுத்து, நாசியின்மேல் வைத்து, அதன் அறுந்த இடத்திற்குச் சமமாக அந்த இலையைக் கத்தரித்து, அதை நாசிக்குக்கீழே கன்னத்தில் வைத்து, அளந்து அதே அளவாக மெல்லிய சர்மத்தைக் கன்னத்திலிருந்து உரித்து, அச்கன்னத்தில் உரித்த இடம் கேடுறாதவண்ணம் காப்பாற்றிக்கொண்டே, அவ்விதம் உரித்த சர்மத்தைத் திருப்பி நாசியின் சிதைந்தவிடத்தில் படியவைத்து, நாசியுடன் ஸீவநி என்கிற நரம்பைக்கொண்டு ஒழுங்காகத் தைத்துவிடவும்; கன்னத்திலும் பந்தநமிட்டு அந்த விரணத்தையும் ஆற்றவேண்டும். பிறகு நாசித்வாரங்களுள் இரண்டு குழல்களை விட்டு, ச்வாஸம் நன்கு நடைபெறுவதற்காக நன்கு ஊதி நாசித்வாரங்களை ஒழுங்கு படுத்த வேண்டும். அப்பால் பக்குவம் செய்த வெறும் தைலத்தை மேலே தடவி, சந்தனம், அதிமதுரம், ஸௌவீராஞ்ஜநம் இவற்றையாவது, இரத்தப்பெருக்கைத் தடுக்குங் குணமுடைய வேறு சரக்கு

1. சோணிதாஸ்த்தாபநம் — தேஹத்திலிருந்து இரத்தம் வெளிவருவதைத் தடுக்குங் குணம். இரத்த குணத்தைப் பலப்படுத்துவது என்றுங் கூறுவர்.

களையாவது மிக்க மிருதுவாகச் சூர்ணம் செய்து அவ்விடங்களில் தூவவேண்டும். அதன் பிறகு தேனும் நெய்யுங் கலந்து குழைத்து, (1) அதில் தடவி பந்தனமிட்டு, ஸ்நேஹவிதியிற் கூறிய பத்யோபசாரங்களைச் செய்யவும். வேறு தொந்தரவு ஏற்பட்டதாகத் தெரிந்தால், அந்நிலைமையில் ஸத்யோவிரணத்திற்கு ஏற்ற பரிஹாரமுறையைச் செய்யவேண்டும். நாசிக்குப் பக்கத்தில் மாம்ஸம் அதிகமாக வளர்ந்துவிட்டால், அதை அறுத்துத் தள்ளிவிட்டு, மேலே சர்மத்தை மூடி முன்போல் தைத்துவிடவும்; பள்ளம் விழுந்த இடத்தை வளரச் செய்யவும்; பிறகு அவ்விடத்தை வெகு மிருதுவாயிருக்கும்படியாகச் சீர்திருத்தவும் வேண்டும். (2) நாசி தானுகவே உடனே அறுந்திருந்தால், அதிலும் அறுந்த பாகத்தை அதற்குற்ற இடத்தில் அமைத்து முன்போலவே பரிஹாரம் செய்யவேண்டும். 59—65½.

ஓஷ்டஸந்தாந முறை:—ஒருவனுக்கு உதடு எக்காரணத்தினலாவது அறுந்துபோயிருந்தால், அதிலும் நாசி த்வாரங்களில் குழல் செலுத்துவதைத் தவிர்த்து மற்றச் சந்தாந முறைச் சிகித்ஸை முதலியதை யெல்லாம் நாசிக்குச் செய்தவிதமாகவே செய்யவேண்டும்.—66.

---

## பத்தொன்பதாம் அத்தியாயம்.

### நாஸாரோக விஞ்ஞாநம்.

இனி நாஸாரோக விஞ்ஞாநம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்:—

பிரதிச்யாயம்:—(1) பனி, பெருங்காற்று, புழுதி இவை நாசியினுள் புகுவது, நீண்டநேரம் பிரஸங்கம் செய்வது, அதிகமாய் நித்திரையுறுவது, மிகக் கண் விழிப்பது, மிகத் தாழ்வான அல்லது மிக்க உயரமான தலையணைகளை யுபயோகிப்பது, புதிய ஜலங்களைப் பருகுவது, மிதமிஞ்சி நீரைப் பருகுவது, நீரில் மிக்க விளையாடுவது, அதிகமாய் வாந்தியாவது, கண்ணீரை அடக்குவது இவை முதலியவற்றால் வாதம் மேலோங்கிய தோஷங்கள் நாசியினுள் அடைந்து உறைந்துபோய் பிரதிச்யாயம் என்னும்[2] வியாதியை உண்டுபண்ணும். இவ்வியாதி விருத்தியாளுல் க்ஷயத்தையுண்டுபண்ணும். (2) அவற்றுள் வாததோஷத்தினலான பிர

---

1. நாசியைப்பற்றிய வியாதி ஸ்வரூபங்களை விளக்கும் அத்தியாயம்.
2. பீநஸம் என்பதும் பிரதிச்யாயத்தைச் சேர்ந்ததாக வாக்படரின் கருத்து. ஆனால் இவ்விரண்டும் வெவ்வேறென்று இதா நூலாசிரியர்களால் கூறப்படுகிறது. நாசியிலுண்டாகும் பிரதிச்யாயாதி எல்லா நோய்களுக்கும் பீநஸம் என்பது பொதுப்பெயரொன்றும் கூறுவதுண்டு.

திச்யாயத்தில் வாய் உலர்ந்துவிடும். அடிக்கடியும் தும்மல் உண்டாம்; மூக்கில் அடைப்பும் குடைத்தலும் காணும்; பற்கள், கன்னம், சிரஸ் இவற்றில் வேதனையுண்டாகும்; புருவங்களைச் சுற்றிலும் பூச்சிகள் ஊருவதுபோன்ற உணர்ச்சி ஏற்படும்; குரல் சம்மிப்போம்; இம் மூக்கடைப்பு சிடித்து முதிர்ந்து கசியும்; நாசியிலிருந்து தெளிவான குளிர்ந்த சளி ஒழுகும். (3) பித்ததோஷத்தினாலான பிரதிச்யாயத்தில் நாவறட்சி, ஜ்வரம், நாசியில் கட்டி வடித்தல், தலைசுற்றல், மூக்கின் முனையில் சூக்ஷுமும் உஷ்ணமுமான விரணம் உண்டாதல், சிவந்தும் பசுமைபாகவும் சளி ஒழுகுதல் ஆகியவை குறிகளாம். (4) சிலேஷ்ம தோஷத்தினாலான பிரதிச்யாயத்தில் இருமல், அரோசகம், ச்வாஸம், வாந்தி, உடல் பாரமாதல், வாயில் ஒருவித இனிய சுவை, தினவு, ஸ்நிக்த்தமாகவும்-வெளுத்தும்-உறைந்துமுள்ள சளியின் ஒழுக்கு இவை தோன்றும். (5) ஸந்நிபாதத்தாலான பிரதிச்யாயத்தில் மூன்று தோஷங்களின் குறிகளும் தோன்றி, திடீரென வியாதி விருத்தியாவதும் தணிவதுமாயிருக்கும். (6) இரத்ததோஷத்தினாலான பிரதிச்யாயத்தில் இரத்தமானது விகாரமடைந்து நாசியினுட்புறமாயுள்ள ஸிரைகளிற் சேர்ந்து, பிரதிச்யாயத்தை யுண்டுபண்ணும்; இதில் மார்புக்குள் சப்தவுணர்ச்சி குறைந்து திமிதமாயிருக்கும்; கண்கள் சிவக்கும்; மூச்சுக்காற்று துர்வாஸனையுள்ளதாகும்; செவி, நேத்திரம், நாசி இவற்றில் அரிப்புண்டாம்; பித்தப்பிரதிச்யாயத்திற்குக் கூறிய மற்றக் குறிகளும் காணப்படும். (7) துஷ்டப் பிரதிச்யாயம்: முற்கூறிய எல்லாப் பிரதிச்யாயங்களுமே சிகித்ஸிக்கப்படாது விடப்பட்டால் துஷ்டப் பிரதிச்யாயமாகப் போம்; அப்பொழுது முற்கூறிய உபத்திரவங்கள் அதிகப்படுவதால் இவ்வியாதி எல்லாப் புலன்களிலும் தாபத்தை யுண்டுபண்ணும்; அக்னிமாந்தியம், ஜ்வரம், ச்வாஸம், காஸம், மார்பில் வலி, விலாப்பக்கவலி இவையும் தோன்றும்; இது திடீரென்று பலவாறு விருத்தியடைந்து முகத்தில் துர்நாற்றத்தையும் வீக்கத்தையும் விளைவிக்கும்; நாசியினுள் துர்நீர்க்கசிவையும், வறட்சியையும், அடைப்பையும்-அடைப்பின்மையையும் மாற்றி மாற்றி யுண்டாக்கும். நாசியிலிருந்து வெளுப்பாகவும் சிவப்பாகவும் உறைந்துமுள்ள சிலேஷ்மம் சீழைப்போல் கசியும்; இதில் நீண்டும், வழவழப்பாகவும், வெண்மையாகவும், ஸூக்ஷ்மமாகவும் பலவாறுயுள்ள கிருமிகளும் உண்டாய் நெளியும். (8) இப்பிரதிச்யாயங்களில் தேஹத்திற்கு இலாகவம், தும்மல் தணிவடைதல், தோய்ந்து பசுமையாகச் சளி வருதல், சுவை யுணர்வதிலும் வாஸனை யறிவதிலும் சக்தியுண்டாதல் ஆகியவை பக்குவப் பிரதிச்யாயக் குறிகளாம். 1—13.

**ப்ருசகக்ஷவம்** :— தீக்ஷ்ணமான வாஸனைகளை முகருவது, சூரிய கிரணத்தை நாசியிற் புகச் செய்வது, நூல் துரும்பு முதலி

யதை நாசியில் விடுவது இவற்ருலாவது, வாதத்தைப் பிரகோபிக்கச் செய்யும் வேறு காரணங்களாலாவது நாசியினுள் உள்ள முருந்தெலும்பு தாக்கப்பட, அதனுல் தூண்டப்பட்ட வாயு நாசியில் தடைபட்டு ச்ருங்காடகம் என்கிற பாகத்தை[1] அடைந்து, மீண்டும் வெளியில் பலமான சப்தத்துடன் திரும்பவே தும்மல் ஏற்படுகிறது; இது கடுமையா யிருக்குமானுல் ப்ருசக்ஷவம் எனப்படும்.—14, 15.

**நாஸிகா சோஷம்** :—வாயுவானது நாசித்வாரங்களையும், கபத்தையும் சோஷிப்பிக்கும்; நாசியினுள் சுணைகள் நிறைந்த மாதிரி உணர்ச்சி யுண்டாம்; மூச்சு விடுவதற்கும் மிகக் கஷ்டமா யிருக்கும்; ஆகவே இவ்வியாதி **நாஸிகா சோஷம்** என்று கூறப்படுகிறது.—$16\frac{1}{4}$.

**நாஸாநாஹம்** :—வாயுவானது கபத்தினுல் தடுக்கப்பட்டு, நாசி முற்றிலும் நிரம்பி ஊதப்பட்டதுபோல் ஆனுல் அது **நாஸாநாஹம்**[2] எனப்படும்; இதில் மூச்சு விடுவதும் வாங்குவதும் தடையுறுவதால் நாசித்வாரங்கள் மிகவும் அடைக்கப்பட்டவை போலாகும்.—17, $17\frac{1}{2}$.

**கிராணபாகம்** :—நாசியின் த்வாரங்களைப் பித்தம் மிகவும் அழலச் செய்து, அங்குள்ள மிருது சர்மத்தையும் மாம்ஸத்தையும் மிகவும் எரித்து வலியையும் உண்டுபண்ணும்; இவ் வியாதி **கிராணபாகம்**[3] எனப்படும்.—$18\frac{1}{4}$.

**நாஸா ஸ்ராவம்** :—சிலேஷ்ம தோஷத்தினுல் **ஸ்ராவம்** என்னும் வியாதி நாசியில் உண்டாகிறது; இதில் நாசியிலிருந்து வெளியாகும் தோஷம் தெளிவாகத் தண்ணீர் மாதிரியாய் எப்பொழுதும் ஊறும்; இது இரவில் அதிகமாகும்.—19.

**அபீநஸம்** :—நாசியினுள் சிலேஷ்மதோஷம் அதிகரித்து, உட்புறமுள்ள ஸ்ரோதோமார்க்கங்களை அடைத்து, குர் குர் என்னும் ச்வாஸத்துடன், பீநஸத்தினும் அதிக வேதனை தருவதான **அபீநஸம்** என்னும் வியாதியை யுண்டுபண்ணும்; இவ்வியாதியால் ஆட்டுக்கு ஒழுகுவதுபோல் எப்பொழுதுமே நாசி சளி நிறைந்து ஒழுகிக்கொண் டிருக்கும்; இச்சளியானது மிகப் பிசுபிசுப்பும் பசுமை நிறமும் தடிப்பும் உள்ளதாய்ப் பக்குவமடைந்து வெளியாகும்.—20, 21.

**நாஸா தீப்தி** :—கோளாறடைந்த இரத்தத்தினுல் நாசி எரிக்கப்பட்டதுபோல், வெளியிலாவது உள்ளேயாவது பரிசிப்பதை

---

1. ச்ருங்காடகம்—முதற்பாகம் பார்க்க.

2. நாஸாநாஹம்—நாசியின் விம்மல்.

3. கிராண பாகம்—இதுவே நாஸா பாகம் எனப்படும். (நாசியின் வேக்காடு.)

யும் தாங்க வியலாததாய் விடும்; மூச்சு விடும்போது புகைவது போன்ற அழன்ற உணர்ச்சியும் உண்டாம்; நாசியை எரிப்பது போன்ற இவ் வியாதி தீப்தி எனப்படும்.—22.

**பூதிநாஸம்** :—வாயினுள் தவடைகளுக்கு அடியில் தொண்டைப் பக்கமாய் அழுக்குகள் சேர்ந்து பதனழிந்து, முகத்திலிருந்தும் நாசியிலிருந்தும் வாயுவும் கபமும் துர்வாஸனையுடன் வெளியாகும்; இதைப் **பூதிநாஸம்** எனக் கூறுவர்.—23.

**பூய-ரக்தம்** :—ஸந்நிபாத தோஷத்தினலாவது, அடி படுவதாலாவது நாசியிலிருந்து சீழும் இரத்தமும் கலந்து வெளியாகும்; இது சிரஸ்ஸில் அழற்சியையும், வலியையும் உண்டுபண்ணும். இவ் வியாதிக்குப் **பூய-ரக்தம்** எனப் பெயர்.—24.

**நாஸாபுடகம்** :—பிரகோபமடைந்த வாயுவானது நாசியினுள் பித்த-கபங்களால் தகைந்து மூடப்பட்டு, கபத்தைச் சோஷிப்பிக்க, அது புறணிபோல் உலர்ந்து நிற்கும்; இவ் வியாதி **புடகம்** எனப்படும்.—25

**நாஸார்சஸ்-அர்புதங்கள்** :—நாசியிலுண்டாகும் அர்சஸ் என்கிற முளைகளையும், அர்புதம் என்கிற கழலைகளையும் அவற்றிற்குக் காரணமான தோஷங்களின் தன்மைகளைக்கொண்டும், இலக்ஷணங்களைக்கொண்டும் அவற்றின் பல வேறு நிலைமைகளைப் பகுத்தறிய வேண்டும். இவ் வியாதிகள் அனைத்திலுமே கஷ்டமான ச்வாஸமும், பீநஸமும், அடிக்கடித் தும்மலும், மூக்கடைப்பு உள்ளவனைப் போன்று பேசுவதும், நாசியில் துர்நாற்றமும், சிரோவேதனையும் காணும்.—26, 26½.

**நாஸாரோகங்களில் ஸாத்யாஸாத்யங்கள்** :—முற்கூறிய இப் பதினெட்டு நாஸா ரோகங்களில் 'துஷ்டபீநஸம்' என்பது மாத்திரம் தன்மையில் யாப்யமானது.—27.

---

## இருபதாம் அத்தியாயம்.

### நாஸாரோகப் பிரதிஷேதம்.

இனி **நாஸாரோகப் பிரதிஷேதம்**[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

**நாஸாரோகங்களுக்குப் போது சிகித்ஸை** :—(1) எல்லாப் பீநஸங்களிலும் முதலிற் செய்யவேண்டியது முகத்திற் காற்று வீசாத அறையில் பிணியாளி வஸிக்கவேண்டியதேயாம். (2) பிறகு ஸ்நேஹநம், ஸ்வேதநம், வமநம், தூமபாநம், கண்டூஷதாரணம் இவற்றை யுக்தப்படிச் செய்யவேண்டும். (3) கனமாகவும்

---

1. நாசியிலுண்டாகும் வியாதிகளைப் பரிஹரிக்கும் முறைகளை விளக்கும் அத்தியாயம்.

உஷ்ணந் தருவதுமான வஸ்திரம் தரிக்கவேண்டும். (4) சிரஸ்ஸை மிகவும் கனமான வஸ்திராதிகளால் சுற்றிக் கட்டவேண்டும். (5) உணவு திரவமல்லாமலும், இலகுவாகவும், அம்லமும் இலவணமும் உள்ளதாகவும், ஸ்நிக்த்தமாகவும், சூடாகவும் இருத்தல் வேண்டும்; ஜாங்கல மாம்ஸம், வெல்லம், பால், கடலை, த்ரிகடு இவை உணவில் விசேஷமா யிருக்கவேண்டும்; வாற்கோதுமை, கோதுமை இவைகளையும் தயிர்-மாதுளைரஸம் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்து விசேஷமாய் உட்கொள்ளலாம்; இளம் முள்ளங்கியைக் கூழ்போல் செய்தும், அல்லது கொள்ளை அவ் விதம் செய்தும் பருகுவது நலம். (6) தசமூலம் சேர்த்துக் காய்ச்சிய ஜலத்தை இளஞ்சூடாகவும், நன்றாகப் பழகிய வாருணியென்னும் மதுவையும் பருகலாம். (7) கச்சோரம், தழுதாழை, வசம்பு, ஓமம், கருஞ்ஜீரகம் இவற்றை முகரலாம். 1—4.

**வியோஷாதி வடகம்:**—த்ரிகடு, தாளிஸபத்திரி, சவ்யம், புளி, புளிவஞ்சி, சித்திரமூலம், ஜீரகம் இவை வகைக்கு இரண்டு பலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஏலரிசி இவை வகைக்குக் கால்பலம், இவற்றைச் சூர்ணம் செய்து, ஐம்பது பலம் வெல்லத்தைப் பாகுவைத்து, அதில் சேர்த்துக் கலந்து சிறு குளிகைகளாகச் செய்து உபயோகிக்க, பீநஸம், ச்வாஸம், காஸம் இவற்றைத் தீர்க்கும்; நாக்குக்கு நற்சுவையையும், தொண்டையில் நல்ல ஸ்வரத்தையும் விருத்தி செய்யும். 5-6½.

**பீநஸத்தில் சதாஹ்வாதி தூமம்:**—(1) சதகுப்பி, இலவங்கப்பட்டை, சற்றுமுட்டிவேர், மகாளைவேர், ஆமணக்கன்வேர், பில்வவேர், சரக்கொன்றைப்புளி இவற்றை இடித்துப்போட்டு, அதில் கொழுப்பு, நெய், மருக்களாம்பழம் இவற்றையுங் கூட்டி மல்லகஸம்புடத்தில் எரித்து[1], அதிலிருந்து எழும் தூமத்தை உறிஞ்சலாம். (2) அல்லது ஏதாவது மாப்பண்டங்களை நெய்யிற் கலந்து மல்லகஸம்புடத்திலிட்டும் தூமம் பிடிக்கலாம்.—7, 8.

**பீநஸத்தில் பத்தியம்:**—ஸ்நாநம், வியஸநப்படுதல், கோபம், நெடுநேரம படுத்திருத்தல், குளிர்ந்த ஜலத்தின் உபயோகம் இவை கூடாது.—8½.

**வாதப்பிரதிச்யாய சிகித்ஸை:**— வாததோஷத்தினலான பிரதிச்யாயத்தில் (1) வாதஹரகுணமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்த கிருதத்தையாவது, (2) பஞ்சலவணங்களைச் சேர்த்துச் செய்த கிருதத்தையாவது, (3) விதார்யாதிகணச் சரக்கு

1. மல்லகஸம்புடம் — ஒரு மண் அகலில் தூமபானத்திற்கான வஸ்துக்களை வைத்து, எரித்துவிட்டு, அதன்மேல் மற்றோர் அகலைக் கவிழ்த்து மூடி, சீலைமண் செய்து, மேல் அகலில் சிறு த்வாரம் செய்து, அதிலிருந்துவரும் தூமத்தை உட்கொள்வது முறை. இவ்விதமான அகல்களின் ஸம்புடம் மல்லக ஸம்புடமாம்.

களால் பக்குவம் செய்த கிருதத்தையாவது பருகலாம். (4) ஸ்வேதம், நஸ்யம் முதலிய பிரயோகங்களையும், (5) அர்தித சிகித்ஸையிற் கூறிய சிகித்ஸையையும்[1] செய்யலாம்.—9, 10.

**பித்த-ரக்தப்பிரதிச்யாயங்களின் சிகித்ஸை** :— பித்தத்தினாலும், இரத்தத்தினாலும் உண்டாகிற பிரதிச்யாயங்களில் (1) மதுரத்திரவ்யங்களைச் சேர்த்துப் பக்குவம் செய்த கிருதத்தைப் பருகலாம். (2) சீதவீர்யமான பதார்த்தங்களால் பரிஷேகங்களையும், பிரதேஹங்களையும்[2] குளிர்ந்தவைகளாகப் பிரயோகிக்கலாம்.—11.

**நாவநதைலம்** :— வெண்கருங்காலிப் பட்டை, த்ரிபலை, சிவதை, பெருங்குமிழன், அதிமதுரம், பில்வம் இவற்றைப் பாலில் சேர்த்து, பாலுக்குப் பத்தில் ஒரு பங்கு எண்ணெய் கூட்டி, மஞ்சளும் சேர்த்துக் காய்ச்சியெடுத்து நஸ்யமாய் உபயோகிக்கவும்.—12.

**சிலேஷ்மப் பிரதிச்யாய சிகித்ஸை** :—கபத்தினாலுண்டாகும் பிரதிச்யாயத்தில் (1) லங்கநம் செய்யவும். (2) வெண் கடுகுகளால் சிரஸ்ஸில் லேபநம் செய்யவும். (3) நெய்யும் க்ஷாரமும் கூட்டி யுட்கொண்டு வமநம் செய்யவும். (4) உப்பு, த்ரிகடு, வாய்விடங்கம், வெட்பாலை, ஜீரகம் இவற்றை ஆட்டுமூத்திரம் விட்டரைத்து, அதனால் வமநம் செய்விக்கலாம்.—13, 13½.

**ஸந்நிபாதப் பிரதிச்யாய சிகித்ஸை** :—காரமாகவும், தீக்ஷ்ணமாகவுமுள்ள கிருதங்களை நஸ்யமாகப் பிரயோகித்தும், அவ்வித ஔஷதங்களைக் கபளக்கிரஹங்களாகச் செய்தும் ஸந்நிபாதப் பிரதிச்யாயத்தைத் தீர்க்கவேண்டும்.—14.

**துஷ்டபீநஸ சிகித்ஸை** :— (1) இராஜயக்ஷ்மசிகித்ஸையையும், கிருமிஹரமான சிகித்ஸையையும் உபசாந்தியாகச் செய்து, துஷ்ட பீநஸத்தில் காலம் தள்ள வேண்டும். (2) **வியோஷாதி வர்த்தி** : த்ரிகடு, ஆமணக்கன் வேர், வாய்விடங்கம், மரமஞ்சள், திப்பிலி, கோஷ்டம், இங்குணப்பட்டை, கத்தரி விதை, சிவதை, வெண்கடுகு, மத்ஸியம், அரணிமரத்தின் புஷ்பங்கள், பெருஞ் ஜீரகம், முருங்கைவிதை இவற்றின் சூர்ணத்தைக் குதிரையின் சாணச்சாறுனும், சிறுநீராலும், யானையின் சிறுநீராலும் ஒருமிக்க ஆட்டி, ஒரு வெண்பட்டுத்துண்டில் அக்கல்கத்தைத் தடவி, வர்த்தியாகச் சுருட்டி உலர்த்தி, வாயினாலும் நாசியினாலும் அவ்வர்த்தியின் தூமத்தை உட்கொள்ளலாம். 15—17.

---

1. வாதவியாதி சிகித்ஸையில் 42, 42½ இந்த ச்லோகங்களின் மொழிபெயர்ப்பைப் பார்க்க.

2. **பரிஷேகம்** — ஸேகம். கஷாயாதிகளை நோவுள்ளவிடங்களில் ஊற்றுவது. **பிரதேஹம்** — வியாதிஹர ஔஷதங்களை மேலே தேய்ப்பது.

**நாஸாபுடக சிகித்ஸை** :—தும்மலிலும், புடகம் என்கிற நாஸாபுடகத்திலும் தீக்ஷ்ணமான ஔஷதங்களை நாசியினுள் ஊதிச் செலுத்தவேண்டும். சுக்கு, கோஷ்டம், திப்பிலி, வாய்விடங்கம், திராக்ஷை இவற்றைக் கஷாயமிட்டு, அதில் அதே சாக்குகளைக் கல்கமாகவும் சேர்த்துத் தைலமாவது கிருதமாவது பக்குவம் செய்து நஸ்யமாக உபயோகிக்கத் தும்மலும், கிராணபாகமும் தீரும்.—18, 18½.

**நாஸாசோஷ-நாஸாநாஹ சிகித்ஸைகள்** :— (1) நாஸாசோஷத்தில் பலாதைலத்தைப் பானம் முதலியதற்காக உபயோகிக்கலாம். மாம்ஸரஸத்துடன் உணவுண்ணலாம். ஸ்நிக்த்தமான தூமமும், அவ்விதமான ஸ்வேதமும் செய்யலாம். (2) இதே சிகித்ஸா முறைதான் நாஸாநாஹத்திற்கும் ஏற்றது.—19½.

**நாஸாபாகாதிகளுக்குச் சிகித்ஸை**:—(1) நாஸாபாகத்திலும், (2) நாஸா தீப்தியிலும் பித்தஹரமான நஸ்யாதி சிகித்ஸையும், (3) நாஸாஸ்ராவத்தில் தீக்ஷ்ணமான நஸ்யாதி சிகித்ஸையும் செய்ய வேண்டும். (4) பூதிநஸ்யத்திலும், (5) அபீநஸத்திலும் கபபீநஸத்திற்குச் செய்ததுபோன்ற சிகித்ஸையைச் செய்யலாம். (1) இவற்றில் வமநம் நிறைவேற்றிய பிறகு கொம்பரக்கு, புங்கு, மிளகு, வாய்விடங்கம், காயம், திப்பிலி, வெல்லம் இவற்றை இடித்து, செம்மறியாட்டுச்சிறுநீர்விட்டு ஆட்டி வடிகட்டி, இந்த திரவத்தைக்கொண்டு நஸ்யமிடவேண்டும். இது **லாக்ஷாதி நஸ்யம்** எனப்படும். (2) முருங்கைவிதை, கண்டங்கத்தரிவிதை, நேபாளம், த்ரிகடு, இந்துப்பு, வாய்விடங்கம், துளஸி இவற்றால் தைலம் பக்குவம் செய்யவும்; **சிக்ருவாதி நஸ்யம்** என்கிற இத்தைலம் நாஸாபாகாதிகளில் மிக்க நன்மை செய்யும். 20—22½.

**பூய-ரக்த சிகித்ஸை** :— (1) பூயரக்தவியாதியின் ஆரம்பதசையில் இரக்தபீநஸத்திற்குச் செய்வது போன்ற சிகித்ஸையைச் செய்யலாம். (2) அது மிகவும் முதிர்ந்து விருத்தியாயிருந்தால் நாடீவிரணத்திற்குச் செய்வதுபோன்ற சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—23¼.

**நாஸார்சஸ் முதலியவற்றின் சிகித்ஸை** :— (1) நாஸார்சஸ்ஸிலும், நாஸார்புதத்திலும் அவற்றை முதலிற் சுடவேண்டும். (2) நேபாளம், சிவதை, இந்துப்பு, மநச்சிலை, உப்பு, சித்திரமூலம் இவற்றைக் கல்கமாக்கி, வர்த்தி செய்து, நெய்யும் தேனும் அதிற் பூசி, நாசியினுள் அவ்வர்த்தியைச் செலுத்தவும். (3) இதில் முற்கூறிய 'சிக்ருவாதி நஸ்யம்' என்னும் ஔஷதத்தையும் உபயோகிக்கலாம். (4) பூதிநஸ்யரோகியும் அதை உபயோகிக்கலாம்.—24, 25.

## இருபத்தோராம் அத்தியாயம்.

### முகரோக விஞ்ஞானம்.

இனி முகரோக விஞ்ஞானம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துக் கூறப்படும் :—

முகவியாதிகளுக்குப் பொதுக்காரணங்கள் :— மத்ஸியம் எருமைமாட்டின் இறைச்சி, பன்றி யிறைச்சி, பக்குவமாகாத அல்லது சமைக்காத முள்ளங்கி, அவ்விதமான உளுந்து, துவரம் பருப்பு, தயிர், பால், சுக்தம், கருப்பஞ்சாறு, கற்கண்டு இவைகளை உண்டு, தலை குப்புறப் படுத்தும், பல்துலக்காமலும் இருப்பவனுக்கும், அவசியமானபோது தூமபானம், வமனம், கண்டூஷதாரணம், ஸிராவ்யதை இவற்றைச் செய்து கொள்ளாதவனுக்கும், முகத்தினுள் கபப் பிரதானமான தோஷங்கள் பிரகோபமடைந்து பல வியாதிகளை யுண்டுபண்ணும்.—1, 2½.

உதடுகளைப்பற்றிய வியாதிகள்[2] :—(1) முகவியாதிகளுள் கண்டௌஷ்டம் என்று உதட்டைப்பற்றி உண்டாகும் வியாதியில், உதடானது வாத தோஷத்தின் அதிகரிப்பால் இரண்டாகப் பிளவுறும். (2) வாததோஷத்தினாலேயே உண்டாகும் ஓஷ்டகோபம் என்னும் கோளாறில் உதடுகள் தடித்துப்போய், அதிக வேதனையுண்டுபண்ணும்; பிளக்கப்படுபவை போலவும், பிறிடப்படுபவை போலவும் கடும் உணர்ச்சியுண்டாம்; கடினமாகவும், கறுப்பாகவும், பரிசிப்பதற்கு நயப்பின்றி கடுமையான உணர்ச்சியுள்ளவையாகவும் இருக்கும். (3) பித்ததோஷத்தினாலான ஓஷ்டகோபத்தில் உதடுகள் காரம் முதலிய தீக்ஷ்ணமான உணர்ச்சிகளைத் தாங்கமாட்டா; அவை பசுமை நிறமாகவும், கடுகு மாதிரியான கொப்புளங்கள் நிறைந்தவையாகவும், அதிக கசிவுள்ளவையாகவும், சீக்கிரத்திற் பக்குவமடைபவையாகவும் இருக்கும். (4) கபதோஷத்தினாலான ஓஷ்டகோபத்தில் உதடுகள் குளிர்ச்சியைத் தாங்கமாட்டா; அவை குருவாகவும், வீங்கியும், வெண்மையான கொப்புளங்கள் நிரம்பியவையாகவும் இருக்கும். (5) ஸந்நிபாத தோஷத்தினாலான ஓஷ்டகோபத்தில் உதடுகள் பல நிறங்கொள்ளும்; பிசுபிசுப்பும் துர்காற்றமுமுள்ள கசிவுள்ளவையாகவும், திடீரென்று வாடுவதும் வீங்குவதும் வலியெடுப்பதுமான நிலையுள்ளவையாகவும் இருக்கும்; இந்த ஓஷ்டகோபம் பக்குவமடையும் வகையும் காலமும் நிலையற்றதாயிருக்கும். (6) மிகுந்த இரத்ததோஷத்தினால் உண்டான ஓஷ்டகோபத்தில் உதடுகள் இரத்த நிறமாகவும்,

1. வாய், பற்கள், நாக்கு, தொண்டை முதலியவற்றில் உண்டாகும் வியாதி விஷயங்களை அறிவிக்கும் அத்தியாயம். (முகம்-வாய்.)

2. உதடுகளைப் பற்றிய வியாதிகள் ஓஷ்டரோகங்கள் எனப்படும். (ஓஷ்டம்-உதடு அல்லது மேலுதடு. அதரம்-கீழுதடு.)

இரத்தக்கசிவுள்ளவையாகவும் இருக்கும். (7) இதில் இரத்தம் க்ஷீணமடைந்தால் பேரீச்சங்காயுருவமாக உதடுகளில் அர்புதமுண்டாம். (8) மாம்ஸதாதுவின் கோளாருல் உண்டாகும் ஓஷ்டரோகத்தில் அவ்வவயவம் மாம்ஸபிண்டம் போன்றதாய், அதில் கிரமமாகக் கிருமிகளும் உண்டாகத் தொடங்கும். (9) மேதோதோஷக்கோளாருலான ஓஷ்டரோகத்தில் உதடுகள் வீங்கி தைலம்போன்ற கசிவுடன் மிருதுவாகவும் ஆகும். (10) அடிதாக்குவதாலுண்டாகும் கோளாறில் உதடுகள் பிளவுறும்; அல்லது அடிக்கடியும் வெடித்துப்போகும்; மீண்டும் கறடுகள்கட்டும்; அரிப்பும் அவற்றில் ஏற்படும். (11) வாத - கபங்களின் கோளாருல் உதட்டில் நீர்க்குமிழ்போல் வீக்கம் ஏற்படும்; அது ஜலார்புதம் எனப்படும். 3—10.

**கண்டாலஜி**:—கன்னத்தின்மேல் அசைவற்றதான கடினமான வீக்கம் ஒன்றுண்டாகும்; அதில் அழற்சியும் ஜ்வரமும் தோன்றும்; இதற்கு **கண்டாலஜி** எனப் பெயர்.—$10\frac{1}{2}$.

**தந்தவியாதிகள்** :—(1) வாததோஷத்தினுல் தாக்கப்பட்ட பற்கள் உஷ்ணத்தை இதமாகத் தாங்கக்கூடியனவாகவும், குளிர்ச்சியான வஸ்துக்கள் படுவதால் அதிக நோவுள்ளவையாகவும், வலியினுல் பிளக்கப்படுபவைபோலவும் இருக்கும்; இந்தப் பல்நோய் **சீததந்தம்** என்றும், **தாளநம்** என்றும் கூறப்படும். (2) புளிப்பு உண்பதனுலேயே **தந்தஹர்ஷம்** என்னும் நோய் காண்கிறது; இதில் காற்றையும், புளிப்பையும், குளிர்ச்சியான உணவையும் பற்கள் தாங்கமாட்டா; அவை வலியுள்ளவைகளாய் அசைந்து விழுபவைபோல் உணரப்படும். (3) **தந்தபேதம்** என்னும் வியாதியில் பற்கள் குத்தலையும், இடிக்கப்படுவது போன்ற அல்லது பிளக்கப்படுவது போன்ற வலியையும் பெறும். (4) பற்கள் மிகவும் ஆடிப்போய் மெல்லும்போது அதிக வலியைக் கொடுத்தால் அது **தந்தசாலம்**[1] எனப்படும். (5) பற்கள் மிகக் கறடுகட்டி மிக்க நீண்டு வளர்ந்துவந்தால் அது **கராளதந்தம்** எனப்படும். (6) பற்கள் ஒன்றன்மேலொன்றுக அதிகமாக முளைத்தால் அது **அதிதந்தம்** என்றும், **வர்த்தநம்** என்றும் கூறப்படும்; இப்பற்கள் முளைக்கும் போது அதிக நோவுண்டாய், நன்ருக முளைத்தபிறகு அந்நோவு தணிந்துவிடும். (7) பற்கள் நன்கு துலக்கப்படாமையால் சேரும் அழுக்கு அல்லது கபம் வாயுவினுல் வறட்டப்பட்டு, பற்களில் துர்நாற்றம் உண்டுபண்ணிக்கொண்டு கெட்டியாகப் போகும்; அவ்விதச் செதிள்கள் **தந்தசர்க்கரா** எனப்படுகிறது.[2] (8) அந்த தந்தசர்க்கரா உபேக்ஷிக்கப்பட்டால், அதுவே பற்களின் கபாலம் போன்ற பாகங்களைச் சிதைத்துத் தள்ளும்;

---

1. தந்தசாலம் — சலதந்தம் என்றும் கூறுவர்; பல் ஆடிப்போதல்.
2. தந்தசர்க்கரா — பற்களில் காரை கட்டுதல்.

அதற்கு **கபாலிகா** எனப் பெயர். (9) இரத்தம், பித்தம், வாயு இத்தோஷங்களால் விகாரமடைந்த பற்கள் ஒருவாறு கருநிறம் பெறுகின்றன; அப் பல்நோய் **ச்யாவதந்தம்** எனப்படும். (10) பல்லின் வேர்ப்பாகத்தில் எல்லாத்தோஷங்களும், விசேஷமாக வாயுவும் கோளாறையுண்டுபண்ணி, பல்லின் உட்புறத்து மஜ்ஜை என்கிற சோற்றைச் சோஷிப்பித்து, அதனுள் த்வாரம் உண்டு பண்ணும்; அந்த த்வாரத்தில் உணவும் மற்றும் அழுக்குகளும் அடைபட்டு அழுகிப்போக, அதில் நுண்ணிய கிருமிகள் உற்பத்தியாம்; அதனால் கடும்வேதனையுண்டாய், திடீரென்று தானே தணிவதுமுண்டு; பலமான வலிப்புடன் கருநிறத்தையும் பெற்று பல் அசைந்தாடும்; சீழும் இரத்தமும் அதிகமாகக் கசியும்; அந்த நோய் **கிருமிதந்தம்** எனக் கூறப்படும். 11—12½.

**தந்த மூலங்களைப் பற்றிய வியாதிகள்**[1] :—(1) சிலேஷ்ம தோஷ-ரக்த தோஷங்களால் தந்தமாம்ஸங்கள் என்கிற பல்லீறுகள் துர்நாற்றமடைந்து, காரணம் தெரியாமலே அவற்றில் இரத்தப் பெருக்குண்டாம்; அவை மிக்க மிருதுவாகவும், தளர்ச்சியுடன் கருநிறமாகவும் மாறி சிதைந்து விழும்; இவ்வியாதிக்குச் **சீதாதம்** எனப் பெயர். (2) பித்த-ரக்ததோஷங்களால் பல்லீறு வேக்காடடைய **உபகுசம்** என்னும் நோய் உண்டாகும்; இதில் தந்தமாம்ஸங்கள் அழன்று, செந்நிறமாகப் போய், வீக்கங் கொள்ளும்; அதனால் அரிப்பு உண்டாய் இரத்தம் பெருகும்; இரத்தம் வெளியாகாது உள்ளடங்கி யிருந்தால் பல்லீறுகள் ஊதிப் பருத்துக் காணும்; பற்கள் ஆட்டங் கொண்டு, சொற்ப வலியையும் உண்டுபண்ணும்; வாயும் துர்நாற்றமடையும். (3) இரண்டு அல்லது மூன்று பற்களின் ஈறுகளில் கபதோஷ-ரக்த தோஷங்களால் இலந்தங்கொட்டையைப் போன்று கனமான வீக்கம் உண்டாகும்; **தந்தபுப்புடம்** எனப்படுகிற இது கடும் வேதனையைத் தந்து, சீக்கிரத்தில் பக்குவமடையும். (4) மூன்று தோஷங்களாலும், இரத்ததோஷத்தினாலும் தந்தமாம்ஸத்தில் உள்ளும் புறமும் வியாபித்த கனமான வீக்கம் உண்டாகும்; வலியும் அழற்சியும் அதிகமாயிருக்கும; **தந்தவித்ரதி** எனப்படுகிற இது உடைந்தால் சீழும் இரத்தமும் வெளியாகும். (5) பற்களின் வேர்களில் பித்தமும் இரத்ததோஷமும் சேர்ந்து, மாம்ஸத்தையும் சிதைத்து, ஒரு வகை வீக்கமுண்டுபண்ணும்; வலியையும், சொள்ளு நீரையும் அதிகப்படுத்தும் இந் நோய்க்கு **ஸௌஷிரம்** என்று பெயர். (6) ஸந்நிபாத தோஷத்தாலான **மஹாஸௌஷிரம்** என்னும் நோயில் ஜ்வரமுண்டாம்; சீழும் இரத்தமும் பெருகும்; பல்லீறுகளை இந்நோய் சிதைத்துத் தள்ளும். (7) கப தோஷத்தினால் கடைவாய்ப்பற்களில், மூளைபடித்தாற் போல்

1. தந்த மூலங்கள்—பல்லீறுகளும் பற்களின் வேர்களும்.

ஒரு வித வீக்கம் உண்டாகும் ; இது மோவாய்க் கட்டை, செவி இவற்றில் வலியுண்டுபண்ணும் ; உணவை மென்று விழுங்குவ தற்கும் இயலாமற்போகும் ; அவ்வியாதி **அதிமாம்ஸகம்** எனப் படும். (8) தந்த மாம்ஸங்கள் குச்சி முதலியவற்றால் தேய்த்துச் சிதைக்கப்படவே, கடுமையான வேதனை யேற்பட்டு, பற்களும் ஆட்டங்கொண்டு **விதர்ப்பம்** என்னும் வியாதி யுண்டாகும் ; இது தாக்கப்படுவதாலான அபிகாதஜ வியாதி. (9) தந்தமாம் ஸங்களைப் பற்றிய சிகித்ஸைகளால் தீர்க்கக் கூடிய வியாதிகளை ஒருவன் உபேக்ஷித்தால், அவனது பற்களிலிருந்து தோஷம் வெளிப்படாமலே உள்ளே தங்கிப்போய், ஸூக்ஷ்மமாகப் புரை யோடச் செய்யும் ; அந்த த்வாரத்திலிருந்து அடிக்கடியும் சீழ் பெருகும் ; அங்குள்ள சர்மத்தையும், மாம்ஸபாகத்தையும், எலும்பையும் பிளப்பதுபோல் வலியுண்டுபண்ணும் ; **தந்தமூல கதி** எனப்படும் இவ்வியாதி வாத-பித்த-கப-ஸந்நிபாத-இரத்தங் களின் பிரத்தியேகக் கோளாறுக்கு ஏற்றவாறு மீண்டும் ஐந்து விதப்படும்;[1] அவற்றிற்கு முற்கூறியவாறே குறிகளாம். 20-30½.

**நாக்கைப்பற்றிய வியாதிகள்** [2] :—(1) நாக்கு தேக்கமரத்திலை போல் சுற சுறப்பாகவும், உணர்ச்சியற்றதாகவும், வெடிப்புகளுள் ளதாகவும் இருந்தால் அது வாத தோஷத்தினால் உண்டான **ஜிஹ்வாகண்டகமாகும்.** (2) நாக்கு தாபமடைந்தும், எரித்தலைப் பெற் றும், சிவந்த மாம்ஸ முளைகளடர்ந்தும் இருந்தால் அது பித்த தோஷத்தினால் கோளாறடைந்ததாம். (3) கபதோஷக் கோ ளாறைப் பெற்ற நாக்கு இலவமுட்கள் போன்ற முளைகளடர்ந்த தாய், கனத்துப்போகும். (4) கப-பித்தங்களின் கோளாறைப் பெற்ற நாக்கின் கீழ்ப்புறத்தில் ஒரு வகை வீக்கம் மேலெழுந்து உண்டாகும் ; அது நாக்கை அசைக்கக் கூடாமற் செய்யும் ; பழுத்துப் பக்குவமடைகையில் மத்ஸிய நாற்ற முண்டுபண்ணி, மாம்ஸத்தையும் சிதைவுறச் செய்யும் ; அந்த நோய் **அலஸம்** எனப்படும். (5) நாக்கின் கீழ்ப்புறத்தில் அதற்குப் பந்தரூப மாய் அமைந்துள்ள விடத்தில் நுனி நாக்கு போன்றதாய் கப-பித்த-ரத்தங்களின் தோஷங்களால் ஒரு வித வீக்கம் உண்டா கும் ; முளைகளோடும், சொள்ளு நீரோடும், அழற்சியோடும், விறைப்போடும், சுறசுறப்போடும், வலிப்பு - அரிப்புகளோடும்

1. *தந்தமூலகதி*—பற்களின் வேர்களில் த்வாரம் ஏற்பட்டுக் காணும் தந்தநாடி என்கிற வியாதி. இது வாதஜம், பித்தஜம், கபஜம், ஸந்நிபாதஜம், இரக்தஜம் என்று ஐந்து வகைப்படும். ஆகவே தந்தமாம் ஸத்தைப் பற்றிய நோய்கள் முற் கூறிய 8 விதங்களுடன் சேர்ந்து ஆக **13-விதங்களாம்.**

2. நாக்கைப் பற்றிய வியாதிகள் — ஜிஹ்வாரோகங்கள் எனப் படும். (ஜிஹ்வா-நாக்கு.)

கூடியதான அந்த வியாதி அதிஜிஹ்வம் எனப்படும்; பேசுவதற்கும் உண்பதற்கும் அது தடை யுண்டுபண்ணும். (6) அதேவிதமாக நாக்குக்கு மேற்புறத்தில் உண்டாகும் வீக்கம் உபஜிஹ்வம் எனப்படும். 31—35.

தவடையின் உட்புறங்களைப் பற்றிய வியாதிகள்[1] :—(1) தவடையின் உட்புற மாம்ஸதாது வாயுவினால் விகாரமடைந்தால் கடினமாகவும் வலியுண்டுபண்ணுபவையுமான அநேகம் சிறு சிறு கட்டிகள் கனத்தவைகளாய் புறப்படும்; அவற்றிலிருந்து நீர் மிகக் கசியும்; அவற்றைத் தாலுபிடகைகள் என்பார்கள். (2) தவடையின் மூல பாகத்தில் கபம்-இரத்தம் இவற்றின் தோஷத்தினால் மத்ஸியத்தின் வஸ்தி போன்றதாய் மிருதுவாகவும் தொங்கியுங்கொண்டுள்ள பிசுபிசுப்புடன் கூடிய வீக்கம் உண்டாகும்; இதனால் உட்கொள்ளப்படும் உணவு நாசியின் மூலமாய் வெளியாகும்; தொண்டை அடைக்கப்படும்; நாவறட்சியும் இருமலும் வாந்தியும் உண்டாகும்; இதற்கு களசுண்டி அல்லது சுண்டிகா என்றுபெயர். (3) தவடையினுள் மத்தியபாகத்தில் மாம்ஸதாது திரண்டுவிடும்; அதனால் வலிபிராது; இது தாலுஸம்ஹதி அல்லது தாலுஸங்காதம் எனப்படும். (4) அவ்விதமே தவடையின் மத்தியில் இரத்ததோஷத்தினால் தாமரைப்பூபோன்றதாய் உண்டாகும் ஒருவகை வீக்கம் அர்புதம் என்று கூறப்படும். (5) கப தோஷக்கோளாறால் வலியுண்டுபண்ணுமலே ஆமையுருவங்கொண்ட வீக்கம் தவடையில் உண்டாம்; கச்சபம் என்னும் இவ் வியாதி மிக மெதுவாகத்தான் பருத்துப் பழுக்கும். (6) கப தோஷம், மேதஸ் என்கிற கொழுப்பு இவற்றின் காரணமாக தவடையின் உள்ளே இலந்தங்கொட்டையுருவில் ஸ்திரமாகவும், வலியில்லாததாயும் ஏற்படும் நோய் புப்புடம் எனப்படும். (7) பித்த தோஷத்தினால் உள் தவடை வேக்காடடைந்து, அதிக வலியுண்டுபண்ணியவாறு, சீழ்வடிக்கும் புண்ணாக ஆகும்; அதை தாலுபாகம் என்பார்கள். (8) தவடையின் உட்புறம் வாத-பித்த தோஷங்களால் வறட்சியடையும்; இதில் ஜ்வரமும், ஆயாஸமும் உண்டாகும்; இதற்குத் தாலுசோஷம் என்று பெயர். 36—40½.

தொண்டையைப்பற்றிய வியாதிகள் :—[2] (1) தொண்டையினுள் நாக்கின் அடிப்புறத்தைப்பற்றி மாம்ஸமுளைகள் சில கடும் வலியை யுண்டுபண்ணிக்கொண்டு தோன்றும்; தொண்டையின் த்வாரத்தை அவை அடைக்கும்; துரிதமாக இவ்வியாதி வளர்ந்து, சீக்கிரத்தில் உயிருக்குத் தீங்கு விளைவிக்கும்; இது ரோஹிணி எனப்படும். "வாததோஷத்தினால்" உண்டாகும் ரோஹிணியில்

---

1. தவடையின் உட்புற வியாதிகள் — தாலுரோகங்கள் எனப்படும். (தாலு-உள் தவடை.)

2. தொண்டை வியாதிகள் களரோகங்கள் எனப்படும்.

தொண்டையும் முகமும் உலர்ந்துவிடும்; மோவாய்க்கட்டையின் மேற்புறத்திலும், காதுகளிலும் வலியுண்டாம். "பித்தத்தினல்" உண்டாகும் ரோஹிணியில் ஜ்வரம், தொண்டையில் அழற்சி, நாவறட்சி, மூர்ச்சை, தொண்டையில் புகைவது போன்ற உணர்ச்சி, துரிதமாய் உண்டாய் துரிதமாகப் பக்குவமடைதல், தொண்டையில் அதிக சிவப்பு, கழுத்தைப் பரிசித்தால் தாங்க முடியாத வலி, இக்குறிகள் தோன்றும். "கபதோஷத்தினுலான" ரோஹிணியில் தொண்டையில் பிசுபிசுப்பும், வெண்ணிறமும் அதிகமாயிருக்கும். "இரத்ததோஷத்தினுலான" ரோஹிணியில் கொப்புளங்கள் நிறைந்திருக்கும்; சிவந்த நெருப்புத்தழலைப் போலவும், காதில் வலியுண்டுபண்ணுவதாகவும், மற்றும் பித்த ரோஹிணிக்குள்ள குறிகளுள்ளதாகவும் இவ்வியாதி காணப்படும். "ஸந்நிபாதரோஹிணி" வெகு ஆழமாகப்பற்றித் தோன்றி, முற்கூறிய எல்லா ரோஹிணி வியாதிகளின் குறிகளையும் பெற்றிருக்கும். (2) மூன்று தோஷங்களும், விசேஷமாக கபமும் பிரகோபமடைந்து தொண்டையில் இலந்தங்கொட்டையைப் போன்று கிரந்திரூபமாய் உயர்ந்து பருத்த வீக்கத்தை யுண்டுபண்ணும்; தொண்டையில் சுணைமுட்களைப்போன்று தொந்தரவைக்கொடுத்துக்கொண்டு உண்டாகும் இவ்வியாதிக்கு சாலூகம் என்று பெயர். இது தொண்டையின் த்வாரத்தை அடைக்கும். (3) தொண்டையினுள் ஒரு பாரிசத்தில் திரண்டு உயர்ந்துண்டாகும் வீக்கம் ப்ருந்தம் எனப்படும். இது தாப ஜ்வரத்தை உண்டுபண்ணும். (4) தொண்டையில் மோவாய்க் கட்டையின் பூட்டில் பருத்திக்காயைப் போன்றதாய் கடினமாக ஒரு வகை வீக்கம் காணும்; அங்க பிசுபிசுப்புள்ளதாய், சொற்ப வலியுண்டுபண்ணும் இதற்கு துண்டிகேரிகா என்று பெயர். (5) தொண்டையின் உட்புறத்தையும் வெளிப்புறத்தையும் வியாபித்துக்கொண்டு மிகவும் கோரமான வீக்கம் தோன்றுவதுண்டு; தொண்டைத் துவாரத்தில் அது அடைப்பானைப் போன்றிருக்கும்; இதில் சிரஸ்ஸில் பாரமும், தேஹத்தில் திமிரும், சொள்ளுநீர்ப் பெருக்கும், ஜ்வரமும் உண்டாகும்; இதை களைளகம் என்பார்கள். (6) களைளகம் போலவே மற்றொரு வகை வீக்கம் நீண்டும் உயர்ந்தும் தோன்றும்; அதிக நோவிராது; இதை வலயம் என்பர். (7) மூன்று தோஷங்களுடைய கோளாறுல் தொண்டையில் ஒன்று அல்லது அநேகம் முளை உண்டாகும்; அதிக நோவுண்டுபண்ணுவதில்லை; ச்வாஸவேலையும் உணவுண்பதும் கஷ்டமாயிருக்கும்; இவ்வீக்கத்தில் அடி பருத்திருக்கும்; இது களாயுகம் எனப்படும். (8) மிகத் திரண்ட மாம்ஸச் சதைகளடர்ந்து, கடும் வலியையும் ஜ்வரத்தையும் தலைவலியையும் உண்டுபண்ணுவதாய் தொண்டையில் வர்த்திரூபமான சதை வளர்ச்சி யேற்படும்; இடியைப்போல் கடும் வேதனையைத் தருவதால் இது சதக்நி

என்று வழங்கப்படும். (9) தொண்டையில் முற்றிலும் வியாபித்து, வெகு சீக்கிரத்தில் உற்பத்தியாய் வளர்ந்து பக்குவமடைந்து, அதிவேதனையைத் தந்துகொண்டு ஏற்படும் வீக்கம் களவித்ரதி எனப்படும்; இதில் சவர் நாற்றத்துடன் சீழ்போன்ற நீர் கசியும். (10) நாக்கின் அடிப்பாகத்தில் தொண்டையின்மேல் எல்லாத் தோஷங்களும் பிரகோபித்து, எளிதில் பக்குவமடையாத ஒருவித வீக்கத்தை உண்டுபண்ணும்; இதில் வேவிராது; வீக்கம் சென்னிறமாகவும், அசைவற்றதாகவும் ஏற்பட்டிருக்கும்: இது களார்புதம் எனப் படுகிறது. (11) வாதம், கபம், மேதஸ் என்கிற கொழுப்பு இவற்றின் தோஷங்களால் கழுத்தின் வெளிப்புறத்தில் களகண்டம் என்கிற வியாதி உண்டாம்; காலக்கிரமத்தில் இது வளர்ந்து, பொதுவாக வலியற்றதாய், பீஜகோசம் போல் கழுத்தில் தொங்கும். அவற்றுள் "வாததோஷத்தாலான களகண்டம்" கறுப்பாகவாவது சிவப்பாகவாவது வளரும்; அதன்மேல் கருநிறக் கோடுகள் படர்ந்திருக்கும்; குத்தல் வலி அதிகமா யிருக்கும்; வளர வளர இது தவடையினுள்ளும் தொண்டையிலும் வறட்சியையும், வாயில் அரோசகத்தையும் உண்டுபண்ணும். "சிலேஷ்மதோஷத்தாலான களகண்டம்" அசைவற்றதாகவும், சரீரத்திற்குச் சமநிறமாகவும், தினவுள்ளதாகவும், குருவாகவும், பரிசிப்பதற்குக் குளிர்ச்சியாகவுமிருக்கும்; இது விருத்தியானால் தவடையிலும் தொண்டையிலும் பிசுபிசுப்பையும், வாயில் இனிப்பையும் தரும். "மேதோவிருத்தியாலான களகண்டம்" சிலேஷ்மகளகண்டத்தின் குறிகளுள்ளதாயிருப்பதுடன், தேஹம் பருத்து இளைப்பதற்கேற்ப இதுவும் பருத்துக் குறையும்; இது முதிர்ந்தால் தொண்டையில் ஒரு வகைச் சப்தத்தையும், தொண்டைக்குரலில் குறைவையும் உண்டுபண்ணும். (12) கபம் ச்வாஸமார்க்கத்தை அடைத்து தொண்டை வறட்சியுற்று, குரல் பெரிதும் மாறிப்போய், பிணியாளி மிக்க வருந்துவான்; இதில் ச்வாஸம் மிகத் தடையுறும்; வாததோஷத்தினாலான இவ்வியாதி[1] ஸ்வரக்நம் அல்லது ஸ்வரபங்கம் எனப்படும். 41—57.

வாயைப்பற்றிய வியாதிகள்:[2]—(1) வாததோஷமானது வாயினுள் எல்லாப் பாகங்களையும்பற்றி விரணங்களை உண்டுபண்ணும்;

---

1. களரோகங்கள் 18-விதம். [வாதரோஹிணி, பித்தரோஹிணி, கபரோஹிணி, இரத்தரோஹிணி, ஸந்நிபாதரோஹிணி, சாலூகம், ப்ருந்தம், துண்டிகேரிகா, கஸௌகம், வலயம், களாயுகம், சதக்நி, களவித்ரதி, களார்புதம் வாதகளகண்டம், கபகளகண்டம், மேதோகளகண்டம், ஸ்வரக்நம், என்பவையாம்.]

2. இவை ஆஸ்யரோகங்கள் என்றும், வக்த்ரரோகங்கள் என்றும், முகரோகங்கள் என்றும் கூறப்படும்.

அவை வாயினுள் ஒரு புறத்திலிருந்து மற்றப் புறங்களிலும் பரவும்; சிவந்தும் பசையற்றுமிருக்கும்; உதடுகள் மிகச் சிவந்து தோலுரியும்; நாக்குத் தடித்தும், வெடித்தும், முட்களடர்ந்தது போலவும், குளிர்ச்சியான வஸ்துவைத் தாங்காததாகவும் ஆகும்; வாயைத் திறப்பது கஷ்டமாகும். இதை முகபாகம் என்று கூறுவர். (2) குதமார்க்கத்தில் ஆர்சஸ், குல்மம், கபதோஷம் முதலியவை சேர்ந்து அடைபட்டு வாயுவைத் தகைய, அது மேல் நோக்கிக் கிளம்பி வாயில் துர்நாற்ற முண்டுபண்ணும்; அதற்கு ஊர்த்வகதம் என்று பெயர். (3) "பித்தத்தினலான முகபாகத்தில்" சூடும் எரித்தலும் காணும்; வாய் கசப்பாகும். க்ஷாரம் தடவிய காயப்புண்களைப் போன்ற கடும் விரணங்கள் உண்டாம். (4) "இரத்தத்தினலான முகபாகத்திலும்" பித்தக் கோளாறுலான பாகத்திற்கேற்ற குறிகளே காணும். (5) "கபத்தினலான முகபாகத்தில்" வாய் இனிக்கும், தினவுகொள்ளும், விரணங்கள் பிசுபிசுப்பாக ஏற்படும். (6) கபதோஷம் தவடையின் உட்புறத்தைப் பற்றுவதால் வெண்கறுப்பாய் அர்புதம் கிளம்பும்: உடைத்தாலும், அறுத்தாலும், நசுக்கினாலும் அது மீண்டும் வளரும். (7) இரத்தமும் மூன்று தோஷங்களும் சேர்ந்து உண்டாகும் முகபாகம் எல்லாத்தோஷங்களுடைய குறிகளையும் பெற்றிருக்கும். (8) பற்குச்சிமுதலியதைக் கொண்டு பல் முதலியதைச் சுத்தம்செய்துகொள்ளாதவனுடைய வாய் துர்நாற்றமடையும்; அதைப் பூதிவக்த்ரம் என்பர். 58—63½.

முகரோகங்களின் ஸங்க்யை:—உதட்டைபற்றிப் பதினொன்றும், கண்டத்தைப்பற்றி ஒன்றும், பற்களிற் பத்தும், தந்தமூலங்களிற் பதின்மூன்றும், நாக்கில் ஆறும், உள்தவடையில் எட்டும், தொண்டையிற் பதினெட்டும், வாயினுள் பொதுவாக எட்டும் ஆக முகத்தில் எழுபத்தைந்து நோய்கள் கிரமமாக விவரிக்கப்பட்டன.—64, 65½.

முகரோகங்களில் ஸாத்யாஸாத்யங்கள்:— அவற்றுள் (1) கராளம் என்கிற தந்தவியாதி, மாம்ஸதுஷ்டமான உதடு, இரத்த துஷ்டமான உதடு, ஜலார்புதத்தைத் தவிர மற்ற அர்புதங்கள், கச்சபம், தாலுபிடகா, களௌகம், மஹாஸுஷிரம், ஸ்வரக்நம், ஊர்த்வகதம், ச்யாவதந்தம், சதக்நி, வலயம், அலஸம், தந்தநாடி, ஸந்நிபாதஜ ஓஷ்டகோபம், இரக்தரோஹிணி, ஸந்நிபாதஜ ரோஹிணி, பிளந்த நிலைமையிலுள்ள தந்தபேதம், பக்வமான உபஜிஹ்வா, களகண்டம், ஸ்வரபங்கம், ஒரு வருஷத்திற்கு மேலான க்ருச்சிரோச்சுவாஸம் இவை அஸாத்ய வியாதிகள். (2) தந்தஹர்ஷமும், தந்தபேதமும் யாப்யங்கள். (3) மற்றவைகளைச் சஸ்திரங்களாலும், ஔஷதங்களாலும் பரிஹரிக்கலாம். 66—69.

## இருபத்திரண்டாம் அத்தியாயம்.

## முகரோகப் பிரதிஷேதம்.

இனி முகரோகப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம் [1] விவரித்துக் கூறப்படும் :—

### ஓஷ்டரோக சிகித்ஸைகள்.

கண்டௌஷ்ட சிகித்ஸை :—(1) கண்டௌஷ்டம் என்கிற கோளாறில் பிளந்துள்ள ஓரங்களைக் கீறிவிட்டு, அவற்றைச் சேர்த்துத் தைத்து, அப்பால் விரணத்திற்குச் செய்வதுபோன்ற சிகித்ஸை செய்யவேண்டும். (2) மதுயஷ்ட்யாதி தைலம் : அதிமதுரம், வாலுழுவை, வெள்ளிலோத்திப் பட்டை, ச்ராவணி, நன்னாரி, நைதல், பேய்ப்புடல், மணித்தக்காளி இவற்றைக் கல்கமாகச் சேர்த்துக் காய்ச்சிய அப்யஞ்ஜநோபயோகமான தைலத்தை மேலே தடவலாம். (3) வாதஹரவர்க்கத்திலடங்கிய சரக்குகளையும், மதுரத்திரவ்யவர்க்கத்தைச் சேர்ந்த பதார்த்தங்களையும் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தை நஸ்யமாகப் பிரயோகிக்கலாம்.—1, 2.

ஓஷ்டகோப சிகித்ஸை :—(1) சாம்பிராணி, தேன்மெழுகு, வெண்குங்கிலியம், தேவதாருசூர்ணம் இவற்றைச் சேர்த்து மஹாஸ்நேஹம் பக்குவம் செய்து, "வாததோஷத்தாலான ஓஷ்டகோபத்தில்" மேலே பிரயோகம் செய்யலாம். (2) அதிமதுர சூர்ணம் சேர்த்துக் காய்ச்சிய அந்த ஸ்நேஹத்தை மேலே பூசலாம். (3) நாடீஸ்வேதத்தினாலும், பாலிற் சமைத்த ஆமணக்கிலைகளாலும் உதட்டுக்கு ஒற்றடம் அல்லது வேது கொடுக்கலாம். (4) இப்பிணியாளிக்கு கண்டௌஷ்டத்திற்குக் கூறிய நஸ்யத்தையும், (5) மூர்த்ததர்ப்பணம் என்கிற சிகித்ஸையையும் செய்யலாம். (6) "பித்தத்தினாலான ஓஷ்டகோபத்திலும்" "அபிகாதத்தினாலான ஓஷ்டகோபத்திலும்" அட்டைகளைப் பிரயோகிக்கவேண்டும். (7) வெள்ளிலோத்திப்பட்டை, சாம்பிராணி, தேன், அதிமதுரம் இவற்றைக் கல்கமாகச் செய்து மேலே தடவலாம். (8) சீந்தில், அதிமதுரம், வர்த்தங்கி இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த கிருதம் அப்யஞ்ஜநத்திற்கு உபயோகமானது. (9) மேலும் பித்தோஷ்ட-அபிகாதஜோஷ்டக் கோளாறுகளிரண்டுக்கும் பித்தவித்ரதிக்குக் கூறியுள்ள சிகித்ஸையையும் [2] செய்யலாம். (10) "இரத்த தோஷத்தாலான ஓஷ்டகோபத்திலும்" பித்த தோஷத்திற்கான அதே சிகித்ஸாக்கிரமம் ஏற்றதாம். (11) "கபதோஷத்தாலான ஓஷ்டகோபத்தில்" முதலில்

1. முன் அத்தியாயத்தில் விவரித்துள்ள ரோகங்களுக்குப் பரிஹாராதி முறைகளை விளக்கும் அத்தியாயம்.

2. பித்தவித்ரதி சிகித்ஸை—சிகித்ஸாஸ்த்தானம் 13-ம் அத்தியாயம்.

இரக்த மோக்ஷணம் செய்து, பிறகு வட்டத்திருப்பி, யவக்ஷாரம், த்ரிகடு, தேன் இவற்றைக் கூட்டி அரைத்து மேலே தடவலாம். (12) சிலேஷ்ம தோஷஹரமான தூமபானம், நஸ்யம், கண்டூஷ முறை ஆகியவற்றையும் பிரயோகிக்கலாம். (13) "மேதோ தோஷத்தாலான ஓஷ்டரோகத்தில்" முதலில் ஸ்வேதநம் செய்து, பிறகு அதை உடைத்து, கொழுப்பு ஸம்பந்தமான தோஷமற்ற தாகச் செய்து, அதைச் சுட்டு விடலாம். (14) பிறகு ஞாழல், வெள்ளிலோத்தி, த்ரிபலை, தேன் இவற்றை அரைத்து மேலே பூசலாம். 3—9.

ஜலார்புத சிகித்ஸை :—(1) ஜலார்புதக் கோளாறில் அதை உடைத்து, நன்ருகச் சுத்தம் செய்து, தீக்ஷ்ணமான திப்பிலி -மிளகு முதலியதைத் தேனில் இழைத்து மேலே தேய்க்கலாம். (2) வியாதி மிக்க ஆழ்ந்திருந்தாலும், மிகவும் விருத்தியடைந் திருந்தாலும் க்ஷாரத்தினுலாவது அக்னியினுலாவது அதைச் சுட்டுப் பரிஹரிக்கலாம்.—10.

கண்டாலஜி சிகித்ஸை :—கண்டாலஜி வியாதியில் ஆம நிலைமை - பக்குவநிலைமைகளைப் பரிசிலனை செய்து, அதற்குச் சோதை அல்லது சோபத்திற்குச் செய்வது போன்ற பரிஹாரத் தைச்[1] செய்யவேண்டும்.—$10\frac{1}{2}$.

## தந்தவியாதி சிகித்ஸைகள்.

சீததந்த சிகித்ஸை :—(1) சீததந்தத்தில் முதலில் ஸ்வேதநம் செய்து, பிறகு பல்லீறைக் கீறி, சூடான தைலத்தினுல் அவ்வி டத்தைச் சுடலாம். (2) கோரைக் கிழங்கு, இந்துப்பு, மாதளம் பட்டை, த்ரிபலை, இரஸாஞ்ஜநம், ஞாழல், நாவற் கொட்டை, சுக்கு இவற்றைத் தேன் விட்டு அரைத்து மேலே தேய்க்கலாம். (3) பாலுள்ள மரங்களின் பட்டைகளைக் கஷாயமிட்டு, அக் கஷா யத்தினுல் கவளக் கிரஹமும் செய்யலாம். (4) அணுதைலத்தி னுல் நஸ்யப் பிரயோகமும் செய்பலாம். 11—$12\frac{1}{2}$.

தந்தஹர்ஷ தந்தபேதசிகித்ஸைகள் :—(1) தந்தஹர்ஷம், தந்தபேதம் என்கற கோளாறுகளில் வாதஹரமான எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம். (2) எள், அதிமதுரம் இவற் றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைக்கொண்டு கண்டூஷதாரணம் செய்யலாம்.—$13\frac{1}{2}$.

தந்தசால சிகித்ஸை :—தந்தசலநத்தில் (1) தச மூல கஷா யத்தில் ஏதேனும் ஸ்நேஹம் கூட்டி கண்டூஷ தாரணம் செய்ய லாம். (2) துத்தம், வெள்ளிலோத்தி, திப்பிலி, த்ரிபலை, வத்தங் கம், இந்துப்பு இவற்றைப் பொடி செய்து தேய்க்கலாம். (3)

1. சோதை (ச்வயது) — சிகித்ஸாஸ்த்தாநம் 17-ம் அத்தியாயம்.

மேலும் அந்தந்த நிலைமைகளுக் கேற்றவாறு நஸ்யம், அன்னம், கவளக்கிரஹம் முதலியவற்றை ஸ்நிக்த்தமாக உபயோகிக் கலாம்.—14, 15.

அதிதந்த சிகித்ஸை :— அதிதந்தத்தில் (1) க்ஷாரத்தை மேலே தடவிய பிறகு பல் சிதைவுற்றுப் போகும்; அப்பொழுது அதைக் கிருமி தந்தத்தைப்போல் பெயர்த்தெடுத்து, அதற்குச் செய்வது போன்ற மற்ற உபசாரங்களையும் செய்யலாம். (2) பற்களிலிருந்து பிறகு வடியும் இரத்தம் நிற்காவிடில், அதைச் சுட்டுவிட்டு, விரணத்திற்குச் செய்வது போன்ற பரிஹாரங்களைச் செய்யவேண்டும்.—16, 16½.

தந்தசர்க்கரா சிகித்ஸை :—(1) பல்லீறுகளுக்குச் சிதை வுண்டுபண்ணாமல், பற்களிலிருந்து தந்தலேகநத்தினால் செதில்க ளைச் சுறண்டி யெடுக்க வேண்டும். (2) யவக்ஷாராதிகளைச் சூர் ணம் செய்து, தேன் கூட்டி அதனால் பற்களைத் தேய்க்க லாம்.—17½.

கபாலிகா சிகித்ஸை :—(1) கபாலிகா என்னும் கோளாறி லும் தந்தசர்க்கரைக்குச் செய்தது போன்ற சிகித்ஸையையே செய்யவேண்டும். (2) தந்தஹர்ஷசிகித்ஸையையும் செய்ய லாம்.—18.

கிருமிதந்த சிகித்ஸை :—(1) பல் கெட்டுப் போய் கிருமியுண் டாயிருந்தால், அது ஆட்டங் கொள்ளாமலிருக்கையில் முதலில் ஸ்வேத சிகித்ஸை செய்து, கிருமி முதலிய தோஷங்களை வெளிப் படுத்துங் குணமுள்ள ஔஷதப் பிரயோகங்களாலும், (2) ஆட் டங்கொண்டிருந்தால் அவ்வித ஆட்டத்தைப் போக்கக் கூடிய ஸ்நிக்த்தமான லேபநங்கள், கண்டூஷதாரணம், நஸ்யம், ஆஹாரம் இவைகளாலும் அதற்குப் பரிஹாரம் செய்ய வேண்டும். (3) புரையோடும் பல்லில் அதன் த்வாரத்தினுள் வெல்லத்தையாவது, தேன் மெழுகையாவது அடைத்து, அவ்விடத்தைச் சுடவேண் டும். (4) எழிலம்பாலை, எருக்கு இவற்றின் பாலை அந்தத் துவா ரத்தினுள் விடுவதால் கிருமிகளாலான வலி நீங்கும். (5) காயம், சிறுதேக்கு, அன்னபேதி, ஸர்ஜக்ஷாரம், கோஷ்டம், விடங்கம் இவற்றை இடித்துச் செய்த ஹிங்க்வாதி சூர்ணம் என்பதை வஸ் திரத்தில் கட்டி, பற்களில் வைத்து அழுத்த வலி எளிதில் நிவ் ருத்தியாம். (6) காயம் முதலிய இச்சரக்குகளாலேயே பக்குவம் செய்த தைலத்தையாவது, (7) ஆமணக்கு, கண்டங்கத்தரி, கத்தரி, நிலக்கடம்பு இவற்றின் கஷாயங்களில் பக்குவம் செய்த தைலத்தையாவது கண்டூஷங்களாக உபயோகிக்கலாம். 19—22.

பற்களை எடுத்து விடுதல் :—(1) முற்கூறிய பலவேறு வித மான எச் சிகித்ஸா முறைகளாலும் வலி தணியாமல் மிகவும் வேதனை யுண்டுபண்ணும் பல் ஆட்டங் கொள்ளாது திடமா

யிருந்தபோதிலும், அதை முதலில் வேரிலிருந்து ஆட்டி, அப்பால் சிறிய ஸந்தம்சயந்திரத்தினுலாவது தந்த நிர்க்காதம் என்னும் யந்திரத்தினுலாவது பிடுங்கி யெடுத்துவிட வேண்டும். (2) பிறகு அதிமதுரத் தூள் கலந்த தைலத்தை கண்டூஷமாக உபயோகிக்கலாம். (3) பிறகு நிலப்பனங்கிழங்கு, அதிமதுரம், கோரைக் கிழங்கு, கர்க்காடகசிருங்கி இவற்றின் கஷாயத்தில் பத்துப் பங்கு பால் கூட்டி, அதில் பக்குவம் செய்த விதார்யாதி தைலம் என்பதை நஸ்யமாகப் பிரயோகிக்கவும். (3) இளைத்தவர், பலஹீனர், கிழவர், வாத ரோகத்தினுல் பீடிக்கப் படுபவர் இவர்களுடைய பல்லையும் எடுக்கக் கூடாது; எவருக்கும் கடைவாய்ப் பல்லையும் பிடுங்கக் கூடாது; அது பிடுங்கப்பட்டால் அதிக உபத்திரவம் உண்டுபண்ணும். (4) இவர்களுக்குக் கூடப் பற்களை எடுக்க நேரிட்ட பிறகு, ஸ்நிக்த்தமாகவும், மதுரமாகவும், குளிர்ச்சியாகவு முள்ள சிகித்ஸா கிரமம் அனுகூலமானது. 23—26½.

## தந்தமூல வியாதிகளுக்குச் சிகித்ஸைகள்.

**சீதாத சிகித்ஸை** :—சீதாதம் என்னும் பல்லீறு வியாதியில் கெட்டுப்போன இரத்தத்தைக் கீறி வெளிப்படுத்திய பிறகு (1) கோரைக் கிழங்கு, மருதம் பட்டை, த்ரிபலை, ஞாழல், இரஸாஞ்ஜநம், சுக்கு இவற்றின் சூர்ணத்தைத் தேனிற் குழைத்து மேலே பூசலாம். (2) அவற்றின் கஷாயத்தையே கபளக் கிரஹமாகவும் உபயோகிக்கலாம். (3) மதுர ரஸமுள்ள வஸ்துக்களால் பக்குவம் செய்த தைலத்தை நஸ்யமாகப் பிரயோகிக்கலாம்.—27, 28.

**உபகுச சிகித்ஸை** :—(1) உபகுசமென்னும் வியாதியில் வெந்நீரை வாயில் வைத்துக்கொண்டு பல்லீறின் சதைகளுக்கு ஸ்வேதநம் செய்யலாம். (2) பிறகு மண்டலாக்ரம் என்னும் கருவியாலாவது, தேக்கயிலை அல்லது பாரிஜாத யிலைகளாலாவது அடிக்கடியும் தேய்த்துக் கீறவும்; பிறகு கொம்பாக்கு, ஞாழல், வர்த்தங்கம், இந்துப்பு, த்ரிபலை, காவிக்கல் இவற்றை நெய்யின் ஏட்டிலாவது தேனிலாவது கலந்து, உருக்கிக் குழம்பாக்கி மேலே தடவலாம். (3) அல்லது கோஷ்டம், சுக்கு, மிளகு, அதிமதுரம், இரஸாஞ்ஜநம் இவற்றின் கஷாயத்தில் நெய்யின் ஆடையைக் காய்ச்சி யெடுத்து, இளஞ்சூடாக அதையாவது மேலே பிரதிஸாரணமாக உபயோகிக்கலாம். (4) தைலத்தையாவது கபளக் கிரஹமாக உபயோகிக்கலாம். (5) மதுரத் திரவ்யங்களால் பக்குவம் செய்யப்பட்ட கிருதத்தைக் கபளக் கிரஹமாகவும், நஸ்யமாகவும் பிரயோகிக்கலாம். 29—31.

**தந்த புப்புட சிகித்ஸை** :—தந்த புப்புடக வியாதியில் ஸ்வேதநம் செய்து, அதை உடைத்தாவது, அறுத்தாவது, கீறியாவது தோஷத்தை வெளிப்படுத்திய பிறகு, அதிமதுரம், ஸர்ஜக்ஷாரம், சுக்கு, இந்துப்பு இவற்ருல் பிரதிஸாரணம் செய்யவேண்டும்.-32½,

தந்த வித்ரதி சிகித்ஸை :—(1) தந்தவித்ரதியில் க்ஷாரமாகவும், தீக்ஷ்ண மாசவும், உஷ்ணமாகவும், ருக்ஷமாகவும் உள்ள கஷாயம் முதலியதால் கவளக் கிரஹமும் லேபமும் செய்யலாம். (2) கடுகரோகிணி, கோஷ்டம், தேள் கொடுக்குப் பூண்டு, யவதானியத்தின் சுணை இவற்றின் சூர்ணத்தினல் அவ்விடத்தைத் தேய்க்கலாம். (3) சீதவீர்யமான சரக்குகளால் அது பக்குவமாவதைப் பரிபாலித்து வரலாம். (4) வித்ரதி பக்குவமான பிறகு அதை உடைத்துவிட வேண்டும். (5) ஆழமாகப் பரவிப் புறப்பட்டிருந்தால் அதைச் சுட்டுவிடவேண்டும்.—33, 34.

ஸுஷிர சிகித்ஸை :—(1) ஸுஷிரத்தில் சேதநம் செய்தும், கிறியும் விட்டு, (2) வெள்ளிலோத்தி, கோரைக் கிழங்கு, ஜடாமாம்ஸி, த்ரிபலை, இரஸாஞ்ஜநம், வர்த்தகங்கம், பலாசம் வித்து, சிறுதேக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, தேன் கூட்டிப் பிரதிஸாரணம் செய்யலாம் (3) அச் சரக்குகளின் கஷாயங்களாலேயே கண்டூஷமும் பண்ணலாம். (4) அதிமதுரம், வெள்ளிலோத்தி, நைதல், அறுகு, நன்னரி, அகில், சந்தனம், காவி, சர்க்கரை, நாமக் கரும்புரஸம் இவற்றால் பக்குவம் செய்யப்பட்ட தைலத்தை நஸ்யமாகப் பிரயோகிக்கலாம்.—35, 36½.

அதிமாம்ஸக சிகித்ஸை :—(1) அதிமாம்ஸகக்கோளாறில் அதை அறுத்துவிட்டு, (2) வசம்பு, வாலுழுவை, வட்டத் திருப்பி, ஸர்ஜக்ஷாரம், யவதானியச் சுணை இவற்றின் சூர்ணத்தைத் தேனிற் குழைத்துப் பிரதிஸாரணம் செய்யலாம். (3) பேய்ப்புடல், வேம்பு, த்ரிபலை இவற்றின் கஷாயத்தைக் கவளமாகவும் உபயோகிப்பது நலம்.—37, 38.

விதர்ப்ப சிகித்ஸை :—விதர்ப்பவியாதியில் மண்டலாக்ரம் என்னும் கருவியால் பல்லீறுகளைக் கிறி சுத்தம் செய்யவேண்டும். (2) பிறகு க்ஷாரப் பிரயோகமும், (3) அதன்பிறகு சீதளமான நஸ்ய-கண்டூஷாதிப் பிரயோகங்களும் செய்யவேண்டும்.—39.

தந்தநாடி சிகித்ஸை :—(1) தேஹத்தை வமந விரேசநங்களாலும், சிரஸ்ஸை நஸ்யாதிகளாலும் சுத்தி செய்துவிட்டு, பிற பல்லில் ஏற்பட்டுள்ள தந்த மூலகதி என்கிற புரையை, அங்குள பல்லை யெடுத்துவிட்டுச் சுட்டுவிட வேண்டும். (2) வக்கிரம போகும் நாடி யென்கிற புரையையும், அநேகம் த்வாரங்களு புரையையும் மருக்காளம்பழச் சூர்ணத்தினாலாவது, வெல்லத் லாவது நிரப்பி, (3) ஜாதிக்காய், மருக்காரை, வேங்கை, ( முருக்கை இவற்றின் சூர்ணத்தினல் பல்லைத் துலக்கலாம். பாலுள்ள மரங்களின் பட்டைகளுடைய கஷாயத்தினல் க டூஷம் செய்யலாம். (5) அக்கஷாயத்தில் பக்குவம் செ தைலத்தை நஸ்யமாகவும் உபயோகிக்கலாம்.—40, 41½.

## ஜிஹ்வா ரோக சிகித்ஸைகள்.

ஜிஹ்வாகண்டக சிகித்ஸை :—(1) நாக்கில் வாத தோஷத்தினால் உண்டாகும் கண்டக ரோகத்தில் வாத ஸம்பந்தமான ஓஷ்டகோபத்திற்குக் கூறிய சிகித்ஸையைச் செய்யலாம்; (2) பித்த கண்டகத்தில் முதலில் நன்றாகச் சுரண்டி, துஷ்ட இரத்தத்தை வெளிப்படுத்தி விட்டு, பிரதிஸாரணம், கண்டூஷம், நஸ்ய விதி இவைகளை மதுரத் திரவியங்களால் செய்வது இதம். (3) சிலேஷ்மதோஷத்தினாலான ஜிஹ்வாகண்டகத்தில் கடுகு, திரிகடு முதலிய தீக்ஷ்ண வஸ்துக்களால் அவ்விதமே பிரதிஸாரண-கண்டூஷாதிகளைச் செய்யலாம்.—42, 43½.

அலஸ சிகித்ஸை :—ஜிஹ்வாலஸம் என்கிற நாக்கிலுண்டாகும் இவ்வியாதியின் ஆரம்பதசையிலும் ஜிஹ்வாகண்டகத்திற்குக் கூறியவிதமாய் தீக்ஷ்ணௌஷதாதிகளால் பிரதிஸாரணாதிசிகித்ஸைகளைச் செய்யவேண்டும்; ஆனால் இதில் சஸ்திரத்தினால் நாக்கைப் பரிசிக்கவுங் கூடாது.—44.

அதிஜிஹ்வ சிகித்ஸை :—(1) அதிஜிஹ்வ ரோகத்தில் படிசயந்திரத்தினால் நாக்கை உயர்த்தி இழுத்து, மண்டலாக்ரம் என்கிற சஸ்திரத்தினால் அறுத்துவிடவும். (2) பிறகு தீக்ஷ்ணமாகவும் உஷ்ணமாகவுமுள்ள ஔஷதங்களால் தேய்ப்பது, பிரதிஸாரணப் பிரயோகம் முதலிய வேலைகளைச் செய்யவேண்டும்.—45.

உபஜிஹ்வ சிகித்ஸை :—உபஜிஹ்வா உண்டாயிருக்கிற பாகத்தைப் பிடித்து, அதிலுள்ள துஷ்டரக்தத்தை வெளிப்படுத்திவிட்டு, யவக்ஷாரத்தினால் அதைத்தேய்க்கவேண்டும்.-45½.

## தாலுரோக சிகித்ஸைகள்.

சுண்டிகா சிகித்ஸை :—(1) கபஹரமான நஸ்யம், கண்டூஷம், கர்ஷணம் என்கிற தேய்ப்பு இவற்றால் சுண்டிகா என்கிற தவடை வியாதியைப் பரிஹரிக்கலாம். (2) சுண்டிகை யென்பது முதிர்ந்து விட்டால், நாக்கின் முன்புறத்தில் ஒருவாறு வெள்ளரி விதைகளைப் போன்று பரவிய கறுத்த வளர்ச்சிகள் தென்படும்; அதை படிசம் முதலிய கருவிகளால் பிடித்து இழுத்து, அதிக உட்புறத்திலும் அல்லாமல் அதிக முனையிலும் அல்லாமல் சிறிது நடுவில் மண்டலாக்கிரம் என்னும் கருவியினால் அறுக்கவேண்டும்; இவ்விதம் சஸ்திரம் பிரயோகிக்கையில் இரத்தம் அமிதமாக வெளியானால் பிராணபாயமும், மிகக் குறைவாக வெளியானால் வியாதியின் விருத்தியும் ஏற்படும். சுண்டிகை முறைப்படி சேதிக்கப்பட்ட பிறகு (3) மிளகு, அதிவிடயம், வட்டத் திருப்பி, வசம்பு, கோஷ்டம், வேங்கை இவற்றின் பொடியுடன் உப்பும் தேனும் கூட்டி, அதனால் அவ்விடத்தைத் தேய்க்கலாம். (4) பிறகு கடுகரோகிணி, அதிவிடயம், வட்டத்திருப்பி, வேம்பு, சிற்றரத்தை,

வசம்பு இவற்றின் கஷாயங்களால் கவளக்கிரஹம் செய்ய லாம். 46—49½.

தாலுஸம்ஹதி முதலியவற்றின் சிகித்ஸை :—தாலுஸம்ஹதி யிலும், தாலுபுப்புடத்திலும், கச்சபத்திலும் கண்டிகைக்குச் செய்தது போலவே அவற்றைக் கீறி, மற்றப் பரிஹாரமுறைகளையும் அவ்விதமே செய்யவேண்டும்.—50.

தாலுபாக சிகித்ஸை :— (1) தாலுபாகவியாதி பக்குவமாகாமலிருக்கையில் அன்னபேதி, இரஸாஞ்ஜநம், தேன் இவற்றைக் குழைத்து அவ்விடத்தைத் தேய்க்கலாம். பிறகு சீதளமாகவும், துவர்ப்பாகவும், மதுரமாகவும் உள்ள ஔஷதங்களால் கவளக்கிரஹம் செய்யலாம். (2) பக்குவமடைந்த தாலுபாகத்தில், அது எட்டுக்காற்பூச்சிபோல் வெடித்துத் தோன்றுகையில், தீக்ஷ்ணமாயும் உஷ்ணமாயுமுள்ள ஔஷதங்களால் பிரதிஸாரணம் செய்து, பிறகு ஆடாதோடை, வேம்பு, பேய்ப்புடல் முதலிய கைப்புள்ள ஔஷதங்களைக் கவளக்கிரஹமாக உபயோகிக்கலாம்.—51, 52.

தாலுசோஷ சிகித்ஸை:—தாலுசோஷ வியாதியில் நாவறட்சி யில்லாத பிணியாளிக்கு (1) திப்பிலி, சுக்கு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கிருதத்தை ஆஹாரம் உட்கொண்டபிறகு பருகக் கொடுக்கலாம். (2) பிறகு அம்லமாயுள்ள ஔஷதங்களால் கண்டூஷதாரணம் செய்யலாம். (3) ஸ்நிக்த்தமான ஜாங்கலமாம்ஸங்களையும் கொடுக்கலாம். (4) பாலிலிருந்து எடுத்த நெய்யை நஸ்யமாக உபயோகிக்கலாம்.—53, 53½.

## களரோக சிகித்ஸைகள்.

தொண்டைவியாதிகளுக்குப் பொதுசிகித்ஸை:—தொண்டையைப் பற்றிய வியாதிகளில் (1) இரக்தமோக்ஷணம் செய்யலாம். (2) தீக்ஷ்ணகுணமுள்ள ஔஷதங்களால் நஸ்யாதிகளையும் பிரயோகிக்கலாம். (3) மரமஞ்சள், லவங்கப்பட்டை, வேம்பு, இரஸாஞ்ஜநம், வாலுழுவை இவற்றின் கஷாயத்தைப் பானம் செய்யலாம். (4) அல்லது கடுக்காயைக் கஷாயமிட்டு, அதில் தேன் சேர்த்தும் பருகலாம். (5) த்ரிபலை, த்ரிகடு, யவக்ஷாரம், மரமஞ்சள், கண்டங்கத்தரி, இரஸாஞ்ஜநம், வட்டத்திருப்பி, வாலுழுவை, வேம்பு, சுக்தம் இவற்றைப் பசுமூத்திரத்திற் காய்ச்சி, அக் கஷாயத்தைக் கவளக் கிரஹமாய் உபயோகிக்கலாம்; அல்லது அச்சரக்குகளையே மாத்திரைகளாகச் செய்து உட்கொள்ளலாம்; அல்லது அவற்றைக் குழம்பு போலப் பக்குவம் செய்து, பிரதிஸாரணமாகவும் உபயோகிக்கலாம். (6) நீர்வஞ்சி, குன்றிமணி, கோரைக்கிழங்கு, தேவதாரு, சுக்கு, வசம்பு, நேபாளம், பெருங்குரும்பை இவற்றை நீர் விட்டு ஆட்டிக் கொதிக்க வைத்து, மேலே சிறிது சூடாக லேபநம் செய்ய வலியும் வீக்கமும் தீரும். 54—57½.

**ரோஹிணி சிகித்ஸை:**—(1) வாததோஷத்தினால் உண்டான ரோஹிணிக்கு ஸ்வேதநம் செய்து, உடனே அங்குலி சஸ்திரத்தினாலாவது, இந்துப்பில் நகத்தைத் தோய்த்து அதனாலாவது அதைக் கீறவேண்டும். பிறகு பஞ்சமூலகஷாயத்தினால் கவளக்கிரஹம் செய்வதும், தைலத்தை கண்டூஷமாக உபயோகிப்பதும், நஸ்யமிடுவதும் அவசியம். (2) பித்ததோஷத்தினாலான ரோஹிணியிலிருந்து இரக்தமோக்ஷணம் செய்து, ஞாழல், சர்க்கரை, தேன் இவற்றைக் கூட்டி இதனால் அவ்விடத்தைத் தேய்க்கவேண்டும். வெள்ளிலோத்தி, வர்த்தங்கம் இவற்றால் கஷாயம் காய்ச்சி, அதனால் கவளக்கிரஹம் செய்யலாம்; அல்லது திராக்ஷை, ஈஞ்சு இவற்றின் கஷாயமும் கவளக்கிரஹத்திற்கு ஏற்றதே. (3) இரத்ததோஷத்தினாலான ரோஹிணி அஸாத்யவியாதி யென்பதைக் கூறிவிட்டே, அதற்கும் பித்த ரோஹிணிக்கு ஏற்ற சிகித்ஸையையே செய்யவேண்டும். (4) சிலேஷ்மதோஷத்தினாலான ரோஹிணியின்மேல் கடுரஸவர்க்கச் சாக்குகளையும் ஒட்டடைக்கரியையும் சேர்த்துக் குழம்பாகச் செய்து, பிரதிஸாரணமாக உபயோகிக்கலாம். நாயுருவி, மருக்காரை, வெண்வசம்பு, நேபாளம், வாய்விடங்கம், இந்துப்பு இவற்றைச் சேர்த்துப் பக்குவம்செய்த தைலம் நஸ்யமிடுவதற்கும், கண்டூஷம் செய்வதற்கும் சிறந்ததாம். 58—62½.

**ப்ருந்த-சாலூகாதிகளின் சிகித்ஸை:**—ப்ருந்தம், சாலூகம், துண்டிகேரி, கலாயு இவற்றிற்கும் ரோஹிணிக்குச் செய்வது போன்ற சிகித்ஸைகளையே செய்யவேண்டும்.—63.

**களவித்ரதி சிகித்ஸை:**—தொண்டையிலுண்டாகும் வித்ரதியில் முதலில் துஷ்டரக்தத்தை வெளிப்படுத்திவிட்டு, திரிபலை, மூங்கிலுப்பு, இரஸாஞ்ஜநம், காவி, வெள்ளிலோத்தி, இந்துப்பு, வர்த்தங்கம், திப்பிலி இவற்றின் சூர்ணத்தினால் அவ்விடத்தைத் தேய்க்கலாம்; அல்லது அவற்றின் கஷாயத்தினால் கண்டூஷம் செய்யலாம்.—64.

**களகண்ட சிகித்ஸை:**—(1) வாததோஷத்தாலான களகண்டத்தில் முதலில் ஸ்வேதநமும், பிறகு இரக்தமோக்ஷணமும் செய்யவேண்டும். எள், குஸும்பாவிதை, ஆளிவிதை, முறளம் வித்து, சணல்வித்து இவைகளை வேகவைத்து ஒற்றடம் கொடுக்கலாம். மேலும் முருங்கை, வெள்ளிலோத்தி, தழுதாழை, யானைத்திப்பிலி, சாறடை, தக்கோலம், சீந்தில், எருக்கம்வேர், மருக்காரையின் புஷ்பம், சிவதை இவற்றைக் கள்ளாவது காடியாவது விட்டு அரைத்து, அடிக்கடியும் மேலே லேபநம் செய்யலாம். சீந்தில், வேம்பு, வெட்பாலை, செருப்படை, சிற்றாமுட்டி, பேராமுட்டி, திப்பிலி, தேவதாரு இவற்றால் தைலம் பக்குவம் செய்து பருக உபயோகிக்கலாம். (2) கபதோஷத்தாலான களகண்டத்

திலும் அதே சிகித்ஸை செய்யவேண்டியதுடன், ஸ்வேதநமும், பற்றுப்போட்டு வாடச்செய்வதும் பலமாகச் செய்யப்படவேண்டும். ஆடுதீண்டாப்பாளை, அதிவிடயம், சீர்த்திப்பிலி, வேலிப்பருத்தி, குன்றிமணி, சுரை, முருக்கை இவற்றைச் சூர்ணம் செய்து, திரவமான பலாசக்ஷாரத்தினால் ஆட்டியெடுத்து மேலே லேபநம் செய்யலாம். ஹடக்ஷாரத்தைப்[1] பசுமூத்திரத்திற் கொதிக்கவைத்துப் பக்குவம் செய்து, அதைப் பருகவும்; அதைப் பருகிவரும்போது வாகு தானியத்தை உணவாகக் கொள்ளவேண்டும். வத்ஸகாதிகணச் சரக்குகளால் பக்குவம் செய்த தைலத்தையாவது பஞ்சலவணம் கூட்டிப் பருகலாம். கபஹரமான தூமபானம், அவ்வித வமநம், நஸ்யம், முதலியவைகளையும் உபயோகிக்கலாம். (3) மேதோதோஷத்தாலான களகண்டத்தில் ஸிராமோக்ஷணம் செய்து, கபஹரமான சிகித்ஸா கிரமத்தையும் நிறைவேற்றலாம். அஸநாதிகணச் சரக்குகளின் சூர்ணத்தையும் அதிகாலையில் கோமூத்திரத்துடன் உட்கொள்ளலாம். (4) களகண்டங்கள் இச்சிகித்ஸைகளால் தீராவிட்டால், அவைகளை யெல்லாம் அறுத்து அப்பால் விரணோபசாரங்களைச் செய்யலாம். 65—72½.

முகரோகங்களுக்குச் சிகித்ஸைகள்.[2]

முகபாக சிகித்ஸை :—த்ரிபலை, வட்டத்திருப்பி, திராக்ஷை இவற்றைக் கஷாயமிட்டு, அக்கஷாயங்களில் தேன் கூட்டி "முகதாவநங்களாக"[3] உபயோகிக்கலாம். ஜாதிபத்திரித் துளிர்களையாவது, ஸாரஸாதி கணச் சரக்குகளையாவது மென்று உமிழ்ந்து விடலாம். (2) வாத தோஷத்தினாலான முகபாகத்தில் திப்பிலி, இந்துப்பு, ஏலம் இவற்றால் பிரதிஸாரணம் செய்யலாம். வாதஹரச் சரக்குகளால் பக்குவம்செய்த தைலம் நஸ்யமாகவும், கவளக்கிரஹமாகவும் உபயோகிக்க ஹிதமானது. (3) பித்தஜமுகபாகத்திலும், (4) இரக்தஜமுகபாகத்திலும் இரக்த - பித்தஹர சிகித்ஸைகள் ஏற்றவை. (5) கபஜமுகபாகத்தில் சிலேஷ்மஹர சிகித்ஸை அனுகூலமானது. கடினமாகவும் நிலைத்துமுள்ள முகபாக ஸம்பந்தமான கொப்புளங்களை இலைகளாலாவது, நரம்புகளாலாவது கீறி வழித்து விடலாம். (6) ஸந்நிபாதத்தில் எந்தெந்த தோஷம் மேலோங்கி யிருக்கிறதோ அதற்கு ஏற்றவாறு சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். 73—76½.

---

1 ஹடக்ஷாரம் — சைவலக்ஷாரம். (வேலம்பாசியை எரித்து எடுக்கும் க்ஷாரம்.)

2. முகரோகங்கள் என்று இங்கு வாயைப்பற்றிய நோய்கள் குறிக்கப்படுகின்றன.

3. முகதாவநம் — வாயையும் தொண்டையையும் கழுவிக் கொப்பளிப்பதற்கு உபயோகிக்கும் திரவௌஷதம்.

பகந்தர சிகித்ஸைக்குப் பிறகு பரிஹரிக்க வேண்டியவை :—பகந்தரம் நிவ்ருத்தியான பிறகு குதிரையின்மீது சவாரி செய்தல், வேகரோதம் செய்தல், மதுபானம், புணர்ச்சி, அஜீர்ண போஜனம், அஸாத்மிய போஜனம், பலவகையான ஸாஹஸ க்ருத்யங்கள் ஆகியவற்றை ஒரு வருஷ காலமாவது, அல்லது சிறிது அதினும் அதிக காலமாவது விலக்கிவிடவேண்டும்.—44.

---

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்.

### கிரந்த்யர்புத-ச்லீபதாதி நிதாநம்.

இனி கிரந்த்-யர்புத-ச்லீபதாபசீ-நாடீவிஞ்ஞாநம் என்னும் அத்தியாயம் விவரித்துரைக்கப்படும் :—

### கிரந்தி நிதாநம்.

கிரந்தியும் அதன் பேதங்களும் :—(1) தோஷங்கள் கபத்தைப் பிரதாநமாகக்கொண்டு மேதோதாது, மாம்ஸதாது, இரத்த தாது இவற்றைப் பற்றியவைகளாய், உருட்சியாகவும் உயரமாகவும் உள்ள வீக்கத்தை உண்டுபண்ணும்; முடிச்சு மாதிரியாக ஏற்படுவதால் இது கிரந்தி எனக் கருதப்படுகிறது. (2) இது மூன்று தோஷங்களாலும், இரத்தத்தினாலும், மாம்ஸத்தினாலும், மேதஸ்ஸினாலும், அஸ்த்தியினாலும், ஸிரையினாலும், விரணத்தினாலும் ஆக ஒன்பது விதமாக உற்பத்தியாகும்.—1, 1½.

வாதக் கிரந்தி :—அவற்றுள் வாததோஷத்தினாலான கிரந்தியில் இசிவும், குத்தலும், இடிக்கப்படுவது போன்ற வேதனையும், திடீரென்று குறைவது-பருப்பது என்கிற நிலைமைகளும் ஏற்படும்; இந்தக் கிரந்தி வெண்மையாகவும், ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் மாறுவதாகவும், மிருதுவாகவும், வஸ்தியைப்போல் ஊதிப் பருத்ததாகவும் இருப்பதுடன், உடைந்தால் தெளிவான இரத்தமும் அதிலிருந்து வெளிப்படும்.—2, 3.

பித்தக் கிரந்தி :—பித்ததோஷத்தினால் உண்டாகும் கிரந்தி அழற்சி யுண்டுபண்ணும்; நிறத்தில் செந்நிறமாய் அல்லது மஞ்சள் நிறமாயிருக்கும்; சீக்கிரம் பக்குவமாய் பழுக்கும் : உடைந்தால் உஷ்ணமான இரத்தம் வெளிபாகும்.—3¾.

சிலேஷ்மக் கிரந்தி :— கபதோஷத்தினாலான கிரந்தி வலியுண்டுபண்ணாததாகவும், கனமாகவும், குளிர்ந்தும், சர்மத்திற்குச் சமான நிறமுள்ளதாகவும், தினவுள்ளதாகவும் இருக்கும்; இதிலிருந்து கெட்டியாகச் சீழ் வெளிப்படும்.—4½.

இரத்தக் கிரந்தி :—வாதாதி தோஷங்களால் இரத்தம் கெட்டுப்போயிருக்கையில், இரத்ததோஷத்தினால் கிரந்தி யுண்டாகும் ; இதில் கிருமிகள் ஏராளமாகச் சூக்ஷ்மமாய் சேர்ந்திருக்கும் ; இது ஸிரைகளையும் மாம்ஸதாதுவையும் பற்றி யுண்டாகும். இவ்வீக்கத்தில் உணர்ச்சி மிகக் குறைந்திருக்கும் ; பித்த தோஷக்குறிகளும் தோன்றும்.—5½.

மாம்ஸக் கிரந்தி :—மாம்ஸதாதுவை விருத்தி செய்யக்கூடிய ஆஹாரங்களால் மாம்ஸம் தோஷமடைந்து, கிரந்திரோகம் ஏற்படும் ; அந்தக் கிரந்தி ஸ்நிக்த்தமாகவும், பெரிதாகவும், கடினமாகவும், ஸிரைகள் அடர்ந்ததாகவும் காணப்படும் ; இதில் மற்றக் கபதோஷக் குறிகளும் தோன்றும்.—6½.

மேதோக் கிரந்தி :—மேதஸ் என்கிற கொழுப்பை அதிகரிக்கச் செய்யும் உணவுகளால் மிக்க விருத்தியடைந்த மேதோதாதுவை வாயுவானது மாம்ஸத்திலாவது சர்மத்திலாவது செலுத்தி மிகவும் ஸ்நிக்த்தமான கிரந்தியை யுண்டுபண்ணும் ; அது மிருதுவாயிருக்கும் ; அசைந்தாடும் ; சிலேஷ்மக்கிரந்திக்குச் சமானமான மற்ற லக்ஷணங்களையும் பெற்றிருக்கும் ; தேஹம் இளைத்தாலும் பருத்தாலும் அதை அனுஸரித்து இக்கிரந்தியும் முறையே சிறியதாகவும் பெரியதாகவும் ஆகும் ; இது உடைந்தால் கனமாகவும் வெண் கருவலாகவுமுள்ள கொழுப்பு போன்ற தோஷம் வெளிப்படும்.—7, 8½.

அஸ்த்திக் கிரந்தி :—எலும்பு முறிவதாலும், எலும்பில் அடிபடுவதாலும் அதில் மேடு-பள்ளமான உருண்டையான வீக்கம் போன்ற அதைப்பு ஏற்படும் ; அது "அஸ்த்திக் கிரந்தி" எனப்படும்.—9¼.

ஸிராக் கிரந்தி :—விசேஷமாக நடந்துச் செல்லுபவன் அதிதுரிதமாகத் தண்ணீரில் மிகுதியாக மூழ்குவதாலாவது, வியாயாமத்தினாலாவது மிகக் களைத்துப் போக, அதனால் ஸிரைகளின் தொகுதியையும் இரத்தத்தையும் வாயுவானது ஒருமிக்க அழுத்திச் சுருக்கிக் கோணல் கோணலாகச் சுற்றிச் சுஷ்கிக்கவும் செய்யும் ; அதனால் துடிப்பில்லாததும், வலியற்றதுமான கிரந்தி யுண்டாகும் ; இது "ஸிராக்கிரந்தி" எனப்படுகிறது.—10, 11.

விரணக் கிரந்தி :— ஒரு விரணம் ஆறாமலிருக்கும்போதாவது ஆறிவரும்போதாவது மதுராம்ல-லவணாதி எல்லா ரஸங்களையும் உட்கொண்டாலும், விரணம் ஆறி உலராமலிருக்கையிலே அதற்கு அவசியமான பந்தநம் இடாமலிருந்தாலும், அல்லது அவயவம் ஏதேனும் கல் முதலியதால் அடிக்கப்பட்டாலும் அவ்விடங்களிற் சேர்ந்துள்ள துஷ்ட ரத்தம் வெளிப்படாமற் போக, அந்த இரத்தத்தை வாயு சோஷிக்கச் செய்து, அந்த விரணத்தை

முடிச்சுள்ளதாகச் செய்ய, அதில் அழற்சியும், தினவும் அதிகமாய் உண்டாகும்; இது 'விரணக் கிரந்தி' எனப்படுகிறது.—12, 13.

**கிரந்திகளில் ஸாத்யாஸாத்யங்கள் :—**(1) வாதாதி தோஷங்களால் உண்டாகும் மூன்று கிரந்திகளும், இரத்தக் கிரந்தியும், மேதோக் கிரந்தியும் எளிதில் சிகித்ஸையினால் நிவ்ருத்தி செய்யக் கூடியன. (2) பருமனாகவும், உரப்பாகவும் உள்ளக் கிரந்திகளும், மர்மங்கள்-கழுத்து-வயிறு இவற்றில் உண்டாகும் கிரந்திகளும் அஸாத்யங்களாம்.—13¾.

## அர்புத நிதானம்.

**அர்புதங்கள் ஆறு :—**அர்புதம்[1] என்பது உருவத்தில் கிரந்தியைக்காட்டிலும் பெரிது; அது வாத-பித்த-கபங்களால் தனித் தனியே மூன்றும், இரத்த-மாம்ஸ-மேதஸ்ஸுகளால் தனித் தனியே மூன்றும் ஆக ஆறு விதமாம்; கொழுப்பும், கபமும் அதிகரித்ததாகையாலும், அதிக கடினமாயிருப்பதாலும் இது பழுத்துப் பக்குவமாவதில்லை.—14, 15.

**சோணிதார்புதம் :—**தோஷமானது ஸிரைகளிலுள்ள இரத்தத்தை அழுத்திச் சுஷ்கிக்கச் செய்து சமைக்கச் செய்யும்; அது முடிச்சுபோல் உருண்டும் கசிவுடன் கூடியதுமான மாம்ஸ பிண்டமாகும்; அதில் மாம்ஸமுளைகள் மிகப் பரவியிருக்கும்; இது சீக்கிரத்தில் பருத்து விருத்தியாகும்; இதிலிருந்து எப்பொழுதும் கெட்டுப்போன இரத்தம் மிகுதியாகப் பெருகும்; இது ஆகவே "சோணிதார்புதம்" எனப்படுகிறது.—16, 17.

**அர்புதத்தில் ஸாத்யாஸாத்யங்கள் :—** அவற்றுள் இரத்தத்தினாலும், மாம்ஸத்தினாலும் உண்டாகும் அர்புதங்கள் இரண்டும் அஸாத்யங்கள்; மற்ற அர்புதங்கள் ஸுகஸாத்யங்களாம்.—17½.

## ச்லீபத நிதானம்

**ச்லீபத ஸம்ப்ராப்தி :—**கபத்தைப் பிரதானமாகக் கொண்ட தோஷங்கள் வங்க்ஷணம் என்கிற துடையிடுக்கில் ஆரம்பித்துத் துடை முதலிய மற்றக் கீழ்ப் பாசம் நோக்கி இறங்கி, மாம்ஸதாதுவையும் இரத்தத்தையும் பற்றிக்கொண்டு, காலக்கிரமத்தில் பாதங்களில் இறங்கி நின்று, அவற்றில் மெள்ள மெள்ள கனமான பெரிய வீக்கத்தை உண்டுபண்ணும்; அது "ச்லீபதம்" எனக்[2] கூறப்படுகிறது.—18, 19.

**வாதாதிகளால் உண்டாகும் ச்லீபதங்கள் :—** (1) வாத தோஷத்தாலான ச்லீபதத்தில் சர்மம் பலவாறு வெடித்திருக்கும்.

---

1. அர்புதம் — புரைகுழல் அல்லது ஒருவகைச் சிலந்தி.

2. ச்லீபதம்—யானைக்கால். சிலையைப் போல் கை-கால்கள் இவ்வியாதியில் விகாரமடைவதால் இதற்கு "ச்லீபதம்" எனப் பெயர் வந்தது.

அது நிறத்திற் கறுப்பாகவும், அகல்மாத்ரக வலி யுண்டுபண்ணுவதாகவும், உரப்பாகவும், ரூக்ஷமாகவும் இருக்கும். (2) பித்த தோஷங் காரணமான ச்லீபதத்தில் அழற்சியும் ஜ்வரமும் அதிகரிப்பதுடன், வீக்கம் பசுமையா யிருக்கும். (3) சிலேஷ்ம தோஷத்தாலான ச்லீபத்தில் வீக்கம் ஸ்நிக்த்தமாகவும், அதிக வலி யில்லாததாகவும், மாம்ஸமுளைகளடர்ந்ததாகவும், மிகப் பெரிதாகவும் இருக்கும்.—20, 20½.

**ச்லீபதத்தில் அஸாத்யங்கள் :—** மிகப் பெரிதாகவும், மிக்க துர்நீரைப் பெருக்குவதாகவும், வருஷக்கணக்காகத் தொந்தர வளிப்பதாயுமுள்ள ச்லீபதரோகம் சிகித்ஸைக்கு வசப்படாததாம்.—21.

**ச்லீபதமுண்டாகக்கூடிய அவயவங்களும் தேசங்களும் :—** (1) பாதத்தில் உண்டாகும் விதமாகவே கைகளிலும், நாசியிலும், உதடுகளிலும், காதுகளிலுங் கூட ச்லீபதம் உண்டாகும் என்று சிலர். (2) இவ்வியாதி ஆநூபதேசத்தில் மிகப் பெருமிதமாக உற்பத்தியாகிறது.—22.

## அபசீ நிதானம்

**அபசியும் கண்டமாலையும் :—** மேதஸ் என்கிற கொழுப்பைப் பற்றி விருத்தியான தோஷங்கள் கழுத்து, மந்யா என்கிற பாகம், அக்ஷமென்கிற கழுத்துக்கும் தோளுக்கும் இடையிலுள்ள பாகம், அக்குள், துடையிடுக்கு இவ்வவயவங்களிற் பரவி, நெல்லிக்கனிகளின் அளவாகவும் கத்தரிக்காய் அளவாகவும் அநேகம் கண்டங்கள் என்கிற பெருங் கிரந்திபோன்ற வீக்கங்களை உண்டு பண்ணும் ; அவை சர்மத்தின் நிறமாகவே தோன்றுவதுடன் கடினமாகவும், ஸ்நிக்த்தமாகவும், ஆழ்ந்த பாகங்களைப் பற்றியவையாகவும் இருக்கும் ; அவை பழுத்துப் பக்குவமாக நெடுநாட்கள் செல்லும் ; இவற்றில் வேறு சில கண்டங்கள் சொற்ப வலியைத் தருபவை ; சீக்கிரமும் பக்குவமடைவதுண்டு ; வேறு சில வகையான கண்டங்கள் அதிக அரிப்புள்ளவைகளாய் துர்நீர்க் கசிவையும் பெற்றிருக்கும் ; இவை உற்பத்தியாவதும், உற்பத்தியானவை நிவ்ருத்தியாய் புதிய வேறு கண்டங்கள் மீண்டும் கிளம்புவதுமாய் நீண்டகாலம் இவ்விதம் தொடர்ந்து தொந்தர வளிக்குந் தன்மையன ; அறுகம்புல்லைப் போல அழிவதும் கிளம்புவதுமாய் மாறி மாறி யேற்படும் இவ்வியாதி **கண்டமாலா** என்றும், **அபசீ** என்றும்[1] வழங்கப்படுகிறது. 23—25.

1. கண்டமாலா—கண்டம் என்றால் கிரந்தி போன்ற வீக்கம் ; அவ்வீக்கங்கள் வரிசையாகப் பல மாலைபோல் கிளம்புவதால் "கண்டமாலா" எனப்படுகிறது. அபசீ — ஒன்றன்மேலொன்று கிளம்புவதும் மறைவதுமா யிருப்பதால் இப்பெயர்.

**அபசியில் அஸாத்ய நிலைமை** :—அவற்றுள் ஜ்வரம், வாந்தி, விலாப்பக்கவேதனை, காஸம், பீநஸம் ஆகிய உபத்திரவங்களைப் பெற்ற கண்டமாலை அல்லது அபசி அஸாத்யரோகமாகும்.—25½.

## நாடீ நிதாநம்.

**நாடீவிரண ஸம்ப்ராப்தி** :—சோபம் என்கிற வீக்கம் அல்லது கட்டி நன்றாகப் பக்குவமான பிறகு, அதை உடைக்காமல் விட்டு விடுவதாலும், விரணம் ஏற்பட்டிருக்கையில் அபத்யாஹாராதிகளை உபயோகிப்பதாலும் சீழானது மாம்ஸம் முதலிய தாதுக்களில் நீண்ட ஆழம் பரவியோடி, நீண்ட த்வாரத்தை உண்டுபண்ணுகின்றது ; அந்த த்வாரம் வெகு தூரம் புரையோடுவதால் கதி என்றும், சீழ் முதலிய தூர்நீரைக் குழலைப் போல் சொரிவதால் நாடி யென்றும் இது வழங்கப்படுகின்றது. ஆனால் ஒரு புரையோடும் த்வாரமே வளைவாகச் சென்றால் அது 'நாடி' என்றும், அதுவே பல வழியில் த்வாரங்களாகப் புரையோடும் விரணமாக இருந்தால் அது 'கதி' என்றும் கூறப்படுவதாய் வேறு சில ஆசிரியர்களது கொள்கை.—26, 27½.

**நாடீவிரணம் ஐந்து விதம்** :—அந்த நாடீவிரணம் மூன்று தோஷங்களாலும் தனித் தனி ஒவ்வொன்று, ஸந்நிபாதத்தினால் ஒன்று, சல்யம் உட்புகுந்திருப்பதால் ஒன்று ஆக ஐந்து காரணங்களால் உண்டாகும். (1) வாததோஷத்தாலான நாடி வலியுள்ளதாகவும், நுண்ணிய முகமுள்ளதாகவும், ஒருவாறு கருநிறமாகவும், நுரைபோன்ற தூர்நீரை வெளிப்படுத்துவதாகவும் இருக்கும்; இதிலிருந்து இரவில் அதிகமாகச் சீழ் வடியும். (2) பித்ததோஷத்தாலான நாடியினால் நாவறட்சியும், ஜ்வரமும், அழற்சியும் ஏற்படும் ; அதிலிருந்து வடியும் சீழ் பசுமையாகவும், துர்நாற்றமுள்ளதாகவும் இருக்கும்; இதிலிருந்து பகலில் அமிதமாகச் சீழ் வடியும். (3) கபதோஷத்தாலான நாடியில் கனமாகவும், பிசுபிசுப்பாகவும் சீழ் வடியும் ; நாடியில் அரிப்புண்டாகும் ; அது கடினமாகவும் இருக்கும் ; இதிலிருந்து இரவில் அதிக சீழ்வடியும். (4) ஸந்நிபாத தோஷத்தாலான நாடியில் மூன்று தோஷங்களுடைய குறிகளும் சேர்ந்து காணும் ; இது அஸாத்ய நாடீவிரணம். 28—30¼.

**சல்யம் உள்ளடங்கிய நாடீ விரணம்** :— ஒரு விரணத்தில் சல்யம்[1] உள்ளே தங்கியிருந்து, அது வெளிப்படுத்தப்படாமலிருந்தால், அச்சல்யம் நாடி என்கிற புரையை உண்டுபண்ணும் ; அதனால் நாடியிலிருந்து நுரைத்துக்கொண்டு சொற்பம் சொற்பமாய் இரத்தங்கலந்த சீழ் வலியுடன் உஷ்ணமாகத் தொடர்ந்து வெளிப்படும்.—31.

---

1. சல்யம் — முதற்பாகம் பார்க்க.

## மூப்பதாம் அத்தியாயம்.

### கிரந்த்யர்புத-ச்லீபதாதிப் பிரதிஷேதம்.

இனி கிரந்த்யர்புத-ச்லீபதாபசீ-நாடீப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம் விவரித்துரைக்கப்படும்:—

ஆமக்கிரந்தி சிகித்ஸை:—(1) ஆமக்கிரந்திகள் என்கிற பக்குவமாகாத கிரந்திகளில் சோபைக்குச் செய்வது போன்ற சிகித்ஸை யுக்தமாம். (2) கண்டக்கத்தரி, சித்திரமூலம், பாடை, பாரமுள்ளி, திப்பிலி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய ம்ருதத்தை கிரந்தியின்மேல் ஊற்றலாம்; அப்பிணியாளிக்குச் சோதநசிகித்ஸை அவசியமானால், தீக்ஷ்ணமான வமந-விரேசநாதிகள் செய்து வைத்து, அப்பால் அத்தைலத்தை மேலே லேபநம் செய்வது நலம். (3) கிரந்திக்கு அநேக முறை ஸ்வேதநம் செய்வித்து, அதை அடிக்கடியும் தேய்த்து மர்த்தநம் செய்யலாம். (4) இந்த முறை வாததோஷத்தாலான கிரந்தியில் விசேஷ உபயோகமானது. (5) பித்தத்தினாலும், இரத்தத்தினாலும் உண்டான கிரந்தியில் அட்டைகளைப் பிரயோகிப்பதும், எல்லா விதமான குளிர்ந்த சிகித்ஸைகளைச் செய்வதும் நலம். (6) கபதோஷத்தாலான கிரந்தியில் வாதக்கிரந்தி சிகித்ஸை ஏற்றதாம். (7) இவ்விதமெல்லாம் செய்தும் அந்தக் கிரந்தி பக்குவமாகாமற்போனால் அதை அடியோடு அறுத்துவிட்டு, அதிலிருந்து இரத்தம் முற்றிலும் பெருகி நின்றுபோனபிறகு, அதை நன்றாக மிச்சமின்றி சுட்டுவிடவேண்டும்; கிரந்தியிற் சிறிது பாகம் மிச்சமிருந்த போதிலும் அது மீண்டும் கிளைத்து வளருவது நிச்சயம். 1—4.

மாம்ஸக்கிரந்தி முதலியவைகளுக்குச் சிகித்ஸை:— (1) மாம்ஸக்கிரந்தியையும், (2) சிராக்கிரந்தியையும் இவ்விதமே சஸ்திரத்தினால் அறுக்கவேண்டும். (3) மேதோதோஷத்தினாலுண்டான கிரந்தியிலும் அச்சிகித்ஸையையே செய்யலாம். அல்லது வஸ்திரத்தில் எள்ளை அரைத்துப் பூசி, அத்துணியை இரண்டு மடிப்பாக மடித்துக் கிரந்தியை அதனால் மறைத்து, சூடாக்கிய ஓட்டுப்பாளம் முதலியவற்றால் அழுத்தித் தேய்க்கலாம். அல்லது கிரந்தியைச் சஸ்திரத்தினால் அறுத்து, அதில் தங்கியுள்ள மேதோதோஷத்தைப் பற்றற எடுத்து விட்டுச் சுட்டு விடலாம். (4) சிராக்கிரந்தி உண்டாய் வெகு காலங்களாகாததா யிருந்தால், அப்பிணியாளி மருதோன்றி யிட்டுக் காய்ச்சிய தைலத்தைப் பானம் செய்யலாம். வாதஹரமான ஔஷதங்களால் உபநாஹஸ்வேதமும், வஸ்திசிகித்ஸையும், ஸிராமோக்ஷணமும் செய்யலாம். 5—7.

அர்புத சிகித்ஸை:—அர்புதத்திற்குக் கிரந்திக்குச் செய்வது போன்ற சிகித்ஸையையே செய்யலாம்; மேலும் எங்கெங்குக் கிரந்

திக்கு எவ்விவ்விதமோ அவ்வவ்வித சிகித்ஸை செய்யப்படுகிறதோ அவ்வவ்வித சிகித்ஸையையே அந்தந்த அர்புதத்திற்கும் இன்னும் பலமாகச் செய்யலாம்.—7½.

ச்லீபத சிகித்ஸை :—(1) வாதத்தினால் உண்டாகும் ச்லீபதத்தில் ஸ்நேஹஸ்வேதசிகித்ஸை, ஸ்வேதசிகித்ஸை, உபநாஹஸ்வேதம் முதலியவைகளைச் செய்த பிறகு, குதிகாலுக்கு மேற்புறமாய் இரண்டங்குலத்தில் ஸிராவியதை செய்யலாம்; பிறகு அவனுக்குப் பசுமூத்திரத்தில் ஆமணக்கெண்ணெயைக் கலக்கிக் கொடுத்து, மாம்ஸமும் உண்ணக் கொடுக்கலாம்; இவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு சுக்குப் போட்டுக் காய்ச்சிய பாலுடன் தான்னியத்தாலான அன்னத்தைச் சுக்கு சேர்த்துக் காய்ச்சிய பாலுடன் கலந்துண்ணலாம். அவ்விதம் பாலில் சிவதை வேரைப் போட்டுக் காய்ச்சி அந்தப் பாலையும் பருகலாம்; இச்சிகித்ஸைகளால் வியாதி தணியா விடில், அக்னியினால் சுடலாம்; குதிகாலுக்குக் கீழே இரத்தமோக்ஷணமும் செய்யலாம். (2) பித்தத்தினால் உண்டாகும் ச்லீபதத்தில் பித்தஹரமான எல்லாச் சிகித்ஸையையும் செய்யவேண்டும். (3) ஸிலேஷ்மதோஷத்தால் ச்லீபதத்தில் காலின் பெரு விரலில் ஸிராவியதை செய்து, ரஸ ஸம்யோகதுமையாலான அன்னத்தை உண்ணலாம். கஷாய ரஸ முள்ள கஷாயங்களைத் தேன் கூட்டிப் பருகலாம். கடுக்காய்களை வர்த்தமானமுறையில்[1] உண்ணலாம். கடுகு, கத்தரிவேர் இவற்றை அரைத்தாவது, காஞ்சொறியை அரைத்தாவது மேலே லேபநம் செய்யலாம். 8—12.

அபசீ சிகித்ஸை :—(1) அபசியில் முதலில் ஊர்த்வ சோதநம், அதச்சோதநம்[2] இவற்றைச் செய்ய வேண்டும். (2) பிறகு கோஷாதகீ, எலிச் செவிப் பூண்டு, சிவதை, பேய்ப் பீர்க்கு, தேவதாளி இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்த க்ருதத்தைப் பருகலாம். (3) கபம், மேதஸ் இவற்றைப் போக்குங் குணமுடைய தூமபாநமும், கண்டூஷதாரணமும், நஸ்யமும உபயோகிக்கத் தகுந்தவை. (4) ஸிரையைக் கீறி இரக்தமோக்ஷணம் செய்யலாம். (5) பசுமூத்திரத்துடன் இரஸாஞ்ஜநத்தையும் பருகலாம்.—13, 14.

பக்வா பக்வ அபசீ சிகித்ஸைகள் :—(1) பழுத்துப் பக்குவமாகாத அபசீ எனனும் க்ரந்திவீக்கங்களின்மேல் ஈச்வரமூலி, இந்துப்பு, சுக்கு இவற்றைக் கல்கமாய் அரைத்து லேபநம் செய்யலாம். (2) கடிநமான வீக்கங்களுக்கு உப்புப் பொட்டலிகையி

1. முதல் நாள் ஒரு கடுக்காய், இரண்டாம் நாள் இரண்டு, மூன்றாம் நாள் மூன்று என்ற முறையில் கிரமமாக ஒவ்வொன்றாய் அதிகப்படுத்தி உபயோகிக்கும் வகை வர்த்தமாந முறையாம். கடுக்காய்களை அவ்விதம் உபயோகிப்பது வர்த்தமாந-ஹரீதகீ எனப்படும்.

2. ஊர்த்வ சோதநம்—வமநம். அதச் சோதநம்—விரேசநம்.

னால் ஸ்வேதநம் செய்து, அவற்றை மேலே தேய்க்கலாம். (3) வன்னிமரவித்து, முள்ளங்கி, முருக்க விதை, வாற்கோதுமை, கடுகு இவற்றைப் புளித்த மோர் விட்டு அரைத்து லேபநம் செய்ய, கிரந்தி, கண்டமாலை ஆகிய வீக்கங்கள் கரையும். (4) அபசிக் கிரந்திகள் பக்குவ மடையுந் தருணத்திலிருந்தால் அப்பிணியாளிக்கு இரக்தமோக்ஷணம் செய்து, பித்தஹரமாகவும் கபஹரமாகவும் உள்ள ஔஷதங்களால் பிறகு பரிஹாரம் செய்யவேண்டும். (5) பக்குவமாகாத அபசிக் கிரந்திகளை மாத்திரம் அறுத்து, க்ஷாரங்களாலும் அக்னியினாலும் அவற்றைச் சுட்டுப் பரிஹரிக்க வேண்டும்.[1] 15—17.

**கண்டமாலாஹர தைலம்** :—வெண் குன்றிமணி, காஞ்சொறிவிதை, புங்கம்வித்து, நொச்சி, தேவதாரிவித்து, பெரும்பூசுணி, தும்மட்டி, பீர்க்கு, வட்டத்திருப்பி இவை வகைக்கு அரைப் பலம், வத்ஸநாபி கால் பலம், இவற்றைக் கல்கமாக்கி, பதினாறு பலம் புங்க யெண்ணெயை ஓர் ஆடகமளவான கருநொச்சி யிலைச் சாற்றில் காய்ச்சிப் பக்குவம் செய்யவும். இத் தைலத்தைப் பாநம் செய்யவும், அப்யங்கம் பண்ணவும், நஸ்யமாகப் பிரயோகிக்கவும் உபயோகித்தால், சீழ் வடிந்துகொண்டு நெடு நாட்களாகத் தொடரும் அஸாத்யமெனக் கருதப்படும் கண்டமாலையும் தீரும். 18—20.

**லாங்கல்யாதி தைலம்** :—கலப்பைக் கிழங்கு கல்கம் கால் பங்கு, தைலம் ஒரு பங்கு, கருநொச்சி யிலைச் சாறு நாலு பங்கு; இவற்றைக் கூட்டிக் காய்ச்சிப் பக்குவம் செய்து, நஸ்யம் முதலிய முறையிற் பிரயோகிக்க அபசிரோகம் தீரும்.—21.

**சந்தநாதி தைலம்** :—சந்தனம், தேவதாரு, மிளகு, மஞ்சள், மரமஞ்சள், சுவதை, கோரைக்கிழங்கு, மனச்சில், காஸகம், விழல், தும்மட்டிக்காய், அலரி இவை வகைக்கு ஒவ்வொரு பலம், வத்ஸநாபி அரைப் பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, பசுமூத்திரம் விட்டு அரைக்கவும். பிறகு வல்லாரையின் ஸ்வரஸம், எருக்கம் பால், பசுஞ்சாணச் சாறு இவற்றையும் ஒன்று கூட்டி, கடுகெண்ணெய் ஒரு படி சேர்த்துத் தைலம் காய்ச்சவும். இதைப் பானம் செய்வது, லேபநம் செய்வது முதலியதற்கு உபயோகிக்க, குஷ்டம், கெட்டுப்போன நாடீவிரணம், அபசி இவை தீரும். 22—24.

1. இதனடியில் வரும் விஷயம் வேறு சில புஸ்தகங்களிற் காணப்படும் ஒன்றரை ச்லோகங்களின் மொழி பெயர்ப்பு:—"வெப்பிலைகளையும், வெட்டிச் சிதைத்த சேராங்கொட்டைகளையும், சங்கையும் ஒருமிக்க அரைத்து, ஒரு அகலில் வைத்து, மேலே மற்றோர் அகலால் மூடி, அச்சம்புடத்தில் அதை எரித்தெடுத்து, செம்மறியாட்டுச் சிறுநீரால் அரைக்கவும்; இது கண்டமாலைகளின் மேல் பிரயோகிப்பதற்கு உபயோகமான லேபநம்."

வசாதி தைலம் :—வசம்பு, கடுக்காய், கொம்பரக்கு, கடுக ரோஹிணி, சந்தனம் இவற்றைச் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தைப் பானம் செய்ய, அது அபசியைப் பற்றறப் போக்கும்.—25.

சரபுங்காதி லேபம் :— கொள்ளுக்காய்வேளையின் வேரை அரிசி கழுவிய நீரால் அரைத்து, லேபமாகப் பிரயோகித்தாலும், நஸ்யமாக இட்டாலும் அபசி, கெட்டுப்போன அரும்ஷிகா, விஷப்புண், கிருமிகள் ஆகியவை நிவ்ருத்தியாம்.—26.

உத்தமாருண்யாதிதைலம்:—உத்தாமணிவேர், மூக்கறட்டை வேர், மருதோன்றி வேர், வெள்ளிலோத்தி, கடுக்காய், அதிமதுரம், சதகுப்பி, கண்டங்கத்தரி, முதியார்கூந்தல் இவற்றின் கல்கத்தையும், பாலையும், பாலுக்குச் சம பாகம் எண்ணெயுங் கூட்டிப் பக்குவம் செய்யவும்; இது நஸ்யமிடவும், அப்யங்கம் பண்ணவும் சிறந்த தைலம்.—27, 27½.

கோகுராதி லேபநங்கள் :—(1) பசுவின் குளம்பு, வெள்ளாட்டின் குளம்பு, செம்மறியாட்டின் குளம்பு இவற்றை எரித்து, கடுகெண்ணெய் கூட்டிக் குழைத்து மேலே லேபநம் செய்யலாம். (2) அல்லது தானே இறந்த கருநாகத்தையாவது காகத்தையாவது எரித்தெடுத்த கரியை வாதுமை யெண்ணெய் ஊற்றிக் குழைத்து லேபநம் செய்யலாம்.—28½.

அபசீ ச்லீபதாதிகளில் சஸ்திர-தாஹ சிகித்ஸைகள் :—முற்கூறிய சிகித்ஸைகளால் அபசீ முதலிய கிரந்திகள் தீராவிடில் (1) வியாதியுண்டாயுள்ள இடத்திற்கு எதிர்ப் பாரிசத்தில் முழங்காலுக்குக் கீழேயாவது, வஸ்தி யென்கிற மூத்திராசயத்திற்கு மேலேயாவது, அதற்குக் கீழ்ப்புறமாகவாவது சஸ்திரத்தினால் கீண்டு, அங்குள்ள மேதஸ் என்கிற தோஷம் நிரம்பிய மேதோகிரந்தியை வெளிப்படுத்தி, அக்னியினால் சுட்டுவிடலாம். (2) பிணியாளியை நிற்கச் செய்து, பாதத்திற்கு மேலேயும், அதே அளவில் குதிகாலுக்கு மேலும் சஸ்திரத்தினால் கீண்டு, அவ்விடங்களுக்கு மேலுள்ள கிரந்திகளை எடுத்துவிட வேண்டும் என்று நிமி பகவான் கூறுகிறார். (3) வியாதி யுண்டான பக்கத்திற்கு எதிர்ப் பக்கத்துக் காலில் மேலிருந்து குதிகால் நோக்கிப் பன்னிரண்டு அங்குலமும், இந்திரவஸ்தி யென்னும் மர்மத்தையும் விட்டுவிட்டுச் சஸ்திரத்தினால் கீறி, மத்ஸியாண்டங்கள் போன்றுள்ள கிரந்திஜாலங்களை இழுத்து வெளிப்படுத்திவிட வேண்டும் என்று ஸுச்ருதர் கூறுகிறார்.[1] (4) பிணியாளி வைத்தியனுக்கு எதிரில், தன் நாசிமுனை வைத்தியன் முகத்திற்கு நேர் ரேகையில் இருக்குமாறு நிற்க, அவனது காதுமுனையிலிருந்து

1. ஜாலங்களை வெளிப்படுத்திய பிறகு அவ்விடத்தைச் சுடவேண்டும் என்றும் ஸுச்ருதர்.

குதிகால் வரையில் நன்கு உயரத்தை அளந்தெடுத்து, அந்த
நீளத்தை எட்டாகப் பங்கிட்டு, அந்த எட்டில் ஒரு பாகத்தைக்
குதிகாலுக்கு மேலே, இந்திரவஸ்தி மர்மத்தைவிட்டு ஒரு தான்
றிக்காயளவு கிரந்தியை அறுத்தெடுக்கலாம் என்றும் வேறு சில
ஆசிரியர் கூறுவர். 29—32.

நாடீவிரண சிகித்ஸை :—(1) வாததோஷத்தாலுண்டான
நாடிக்கு உபநாஹஸ்வேதம் செய்து, தோஷம் நன்கு வெளிப்படு
மாறு அதைக் கீறி, நாயுருவிவிதைகளையும் இந்துப்பையும்
சேர்த்துத் தைலம்விட்டு அரைத்து, அதன்மேல் பூசலாம். (2)
பித்ததோஷத்தாலான நாடியையும் அவ்விதமே செய்து, அதற்கு
மேல் எள், மஞ்ஜிஷ்டி, விஷமூங்கிலிலை, கல்லுருவி இவற்றை
அரைத்து லேபநம் செய்யலாம். (3) சிலேஷ்ம தோஷத்தாலான
நாடிக்கு எள், கொபிசந்தனம், சிவதைவேர், வேப்பிலை, இந்
துப்பு இவற்றை அரைத்து லேபநம் செய்யலாம். (4) சல்யம்
உள்ளடங்கிய நாடீவிரணத்திற்கும் அவ்விதமே சஸ்திர சிகித்ஸை
செய்து, நன்றாகச் சல்யம் முதலிய தோஷங்களை வெளிப்படுத்
திய பிறகு, எள்ளைத் தேனும் நெய்யும் விட்டு அரைத்து மேலே
லேபநம் செய்யலாம்.—33, 34½.

சஸ்திரப்பிரயோகத்திற்குத் தகாத நாடீவிரணத்திற்குச்
சிகித்ஸை :—(1) சஸ்திரத்தினால் அறுக்கக்கூடாத நாடீவிரணத்
தின் முகத்தை மாத்திரம் கீண்டு, அதன்மூலமாய் ஏஷணியென்
னும் கருவியைப் புரையோடும் த்வாரத்தினூடே ஆழமாகச்
செலுத்தித் துழாவி, உள்ளடங்கிய சீழ் முதலியதை வடியச்
செய்து, க்ஷாரத்தில் ஊறிய நூற்சிலும்பையென்னும் வர்த்தியை
உட்செலுத்தி, அடிக்கடியும் துழாவ வேண்டும். (2) மேலும்
துஷ்டவிரணம், நுண்ணிய முகமுள்ள விரணம், ஆழமான விரணம்
இவை முதலியவற்றில் உபயோகிக்கக்கூடிய வர்த்திகளும், தைலங்
களும் நாடீவிரணங்களிலும் உபயோகிக்கச் சிறந்தவையாம். (3)
சிற்றுமணக்கங்காயை அரைத்து மேலே லேபநம் செய்ய நாடீ
விரணம் நன்கு நிவ்ருத்தியாகும். 35—37.

பூகபலாதிவர்த்தி :—கமுகு, லவங்கப்பட்டை, இந்துப்பு,
கொம்பரக்கு, ஆமணக்கிலை இவற்றை முலைப்பாலாலும், கள்ளிப்
பாலாலும், எருக்கம்பாலாலும் தனித் தனியே ஆட்டி யெடுத்து,
இக்கல்கத்தை வர்த்தியாகச் செய்து, நாடீவிரணத்திற் பிரயோ
கிக்க, அவ்விரணம் எளிதில் நிவ்ருத்தியாம்.—38.

நாடீவிரணத்திற்கு உபயோகமான சரக்குகள் :—கடலுப்பு,
ஸௌவர்ச்சலவணம், இந்துப்பு, நன்றாகப் பழுத்த கமுகு, ஒட்
டைக் கரி, காட்டுமொந்தளிர், கருங்காலித்தளிர், மரமஞ்சள்,
மஞ்சள், ஜாதிக்காய் இவற்றைக் கல்கமாகவோ, அப்பங்கம் செய்
யும் தைலமாகவோ, சூர்ணமாகவோ, வர்த்தியாகவோ செய்

...க்க, நாடீவிரணமானது பிணியாளியினிடம் நாடி நிற்க ...மல், சபல சித்தர்களிடம் சபலத்தன்மையதான செல்வம் ... ரிதில் மறைந்துவிடும்.—39, 40.

---

## முப்பத்தோராம் அத்தியாயம்.

### க்ஷுத்ரரோக விஞ்ஞாநம்.

இனி க்ஷுத்ரரோக விஞ்ஞாநம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துரைக்கப்படும்:—

**அஜகல்லிகா** :— பாலர்களுக்குக் கப-வாததோஷங்களின் கோபத்தால் பயறு போன்றதாய் ஸ்நிக்த்தமாகவும், சர்மத்திற்குச் சம...மாகவும், வலியற்றதாகவும் முடிச்சுபோலத் தோன்றும் ...க்கு 'அஜகல்லிகா' எனப் பெயர்.—1.

**யவப்ரக்யா**:—வாத-கபதோஷங்களின் கோபத்தால் மாம்ஸத்தைப்பற்றி வாற்கோதுமை யுருவமாகத் தோன்றுவது 'யவப்ரக்யா' எனப்படும்; இது பரிசிப்பதற்குக் கெட்டியாகவும் இருக்கும்.—1½.

**கச்சபி** :—ஐந்தாறு கிரந்திகள் முகம் இல்லாதவைகளாய் ...யைப்போல் வட்டமாய் உண்டாகும்; அவற்றில் சிறு...மா யிருக்கும்; கெட்டியாகவும் உயர்ந்தும் கிளம்பும்; ... விக்கம் ஆமையைப் போன்றிருப்பதால் 'கச்சபி' எனப் ...றது.—2½.

**பநஸிகா** :—காதுக்கு மேற்புறமாகவாவது சுற்றிலுமாவது ...யும் கடும் வலியுண்டுபண்ணிக் கொண்டும் உண்டாகும் ...க் கிழங்கு போன்ற உருவமுள்ள இவ்விரணம் 'பநஸிகா' ...ப் கூறப்படும்.—3¼.

**பாஷாணகர்தபம்** :— சொற்ப நோவுண்டுபண்ணுவதும், ...முடமான வீக்கம் மோவாய்க் கட்டையின் பூட்டிற்கு அருகில் ...த-சிலேஷ்மதோஷங்களின் கோபத்தால் தோன்றும்; இதற்கு 'பாஷாண கர்தபம்' என்று பெயர்.—4.

**முகதூஷிகா** :— வாலிபவயதினரின் முகத்தில் இலவ முட் ...ப் போன்ற சிறு சிறு கட்டிகள் உண்டாகும்; அவை அதிக

---

1. க்ஷுத்ரரோகங்கள் என்றால் சில்லரை வியாதிகள். காரண-லக்ஷணங்களால் சொற்பமாகத் தோன்றும் நோய்கள் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன. ஆனால் இவற்றில் சில கொடிய வியாதிகளும் உண்டு. ஆகவே அக்னிரோஹிணி, வல்மீகம் முதலியவற்றின் கடுந்தன்மையைக் கருதி அவற்றிற்கும் க்ஷுத்ரரோகங்கள் என்னும் பெயர் கொடிய விலங்குகளுக்கு க்ஷுத்ரமிருகங்கள் என்பது போலப் பொருந்தும்.

வலி யுண்டுபண்ணும்; கெட்டியாகவும், உள்ளே மேதோதாது
அடங்கியனவாகவும் உள்ள இவை வாத-கபதோஷங்களால்
உற்பத்தியாம்; இவற்றை 'முகதூஷிகைகள்' என்பர்.—5.

பத்மகண்டகம் :— வாத - சிலேஷ்மங்களின் கோளாறால்
தேஹம் எல்லாம், தாமரைப் பூவில் முட்கள் அடர்ந்துண்டாவது
போல் முளைகள் ஏற்பட்டுப் பரவும்; அவை வலியற்றவையாக
வும், வெண்மையாகவும் இருக்கும்; இம் முளைகளைப் 'பத்ம கண்
டகங்கள்' என்று வழங்குவர்.—6.

விவ்ருதா :— பித்ததோஷத்தினால் பழுத்த அத்திப் பழம்
போன்று உருண்ட வடிவமாய் உண்டாகிற கட்டி 'விவ்ருதா'
எனப் படுகிறது; இது வாய் திறந்ததா யிருப்பதால் இதற்கு
இப் பெயர்; இதனால் கடும் ஜ்வரமுண்டாகும்.—7.

மஸூரிகா :—சரீரத்தில் வெளியிலும், வாயினுள்ளேயும்
அதிக தாபத்தையும் ஜ்வரத்தையும் வலியையும் உண்டு பண்ணிக்
கொண்டு கடலைகளைப்போன்ற கட்டிகள் தோன்றுவதுண்டு; நிற
மும் கடலைகளைப் போன்றிருக்கும்; பரிசிப்பதற்குக் கெட்டி
யாகவும் உள்ள இவற்றிற்கு 'மஸூரிகைகள்' எனப் பெயர்.—8.

விஸ்ஃபோடம் :—மஸூரிகைகளிலும் அதிக ஜ்வரதாப
வுண்டு பண்ணும் கொப்புளங்கள் 'விஸ்ஃபோடம்' எனப்படும்;
இவை கடும் வேதனையளிப்பவையாம்.—8½.

வித்தா :—வாத-பித்தக் கோளாறால் அநேகம் கொப்புளங்க
ளால் சூழப்பட்டுத் தாமரைக் கொட்டையைப் போல் உண்டா
கும் கட்டி 'வித்தா' எனப்படும்.—9¼.

கர்தபி :—வாத-பித்தக் கோளாறால் 'கர்தபி' என்னும் கட்டி
யுண்டாகும்; அது வட்டமாகவும், அகன்று உயர்ந்தும், சிவந்த
கொப்புளங்களால் சூழப்பட்டும் இருக்கும்.—10.

கக்ஷா :— (1) பெரும்பாலும் அக்குளுக்குச் சமீபப் பிர
தேசங்களில் வாததோஷக் கோளாறால் உண்டாகும் விரணம்
'கக்ஷா' எனப்படுகிறது. (2) பித்ததோஷத்தினால் அதே இடத்
தில் பொரி பொரியாய் கெட்டியாகக் காணும் விரணமும் கக்ஷா
எனப்படும்.—11.

கந்தா :—கக்ஷாவைப் போலவே அதினும் பெரிதாக உண்
டாகும் ஒற்றைக் கட்டிக்கு 'கந்தா' என்று[1] பெயர்.—11½.

ராஜிகா :—உஷ்ணம் அதிகரித்து வியர்வை மேலிட்ட
தேஹத்தில் வலியுடன்கூடிய கெட்டியான கட்டிகள் கிளம்பும்;
அவை உருவத்திலும் நிறத்திலும் கடுகைப் போன்றிருக்கு
மாகையால் 'இராஜிகா' என்று வழங்கப்படும்.—12½.

1. 'கந்தமாலா' என்றும் கூறப்படும்.

**ஜாலகர்தபம்** :—தோஷங்கள் பித்தத்தைப் பிரதானமாகக் கொண்டு மந்தமாய் பிரகோபித்து ஒரு வகை வீக்கத்தை யுண்டுபண்ணும்; அது உடலெங்கும் பரவும்; பக்குவமாவதில்லை; [illegible]ாகவும் சிவந்து முண்டாகும் அவ்வீக்கம் ஜ்வரத்தையும் உண்டுபண்ணும். இது 'ஜாலகர்தபம்' எனப்படும்.—13½.

**அக்னிரோஹிணி** :— பித்தத்தை உபரியாகக்கொண்ட தோஷங்கள் பிரகோபமடைந்து, ஜ்வரத்துடன் கொப்புளங்களை அக்குளின் பக்கங்களில் உண்டுபண்ணும்; இவை மாம்ஸத்தையும் வி[illegible] செய்யும்; தன்மையில் அக்னிபோன்றதால் இதற்கு 'அக்னி ரோஹிணி' எனப் பெயர்; இது ஐந்து நாட்களிலாவது, ஏழு நாட்களிலாவது, பதினைந்து நாட்களிலாவது உயிரைப் போக்கிவிடும்.—14, 15.

**இரிவேல்லிகா** :—தோளுக்கு மேற்புறமாயுள்ள அவயவங்களில் வட்டமாகக் கட்டியொன் றுண்டாகும்; மூன்று தோஷங்களுடைய குறிகளும் இதில் தோன்றும்; இதற்கு 'இரிவேல்லிகா' எனப் பெயர்.—15½.

**விதாரி** :— அக்குளிலாவது துடை யிடுக்கிலாவது நிலப் பனங்கிழங்குபோல் உண்டாகும் கடினமான பிளவை 'விதாரி' என்று கூறப்படும்.—16.

**சர்க்கரார்புதம்** :— மேதோதோஷம், வாத-சிலேஷ்மங்கள் இவை ஸ்நாயு, மாம்ஸம், ஸிரை இவைகளைப் பற்றிக்கொண்டு [illegible]கைக் கிரந்தியை உண்டுபண்ணும்; இது உடைந்தால் சவர் [illegible]மான தூர்நீரையும் நெய் போன்ற நீரையும் வெளிப் படுத்தும்; இவற்றுள் வாததோஷம் மிக்க மேலிட்டு, மாம்ஸதாது [illegible] சுஷ்கமாக்கி, கட்டிக் கட்டியான சர்க்கரை யென்னும் சிறு மணற் கற்களைப்போன்ற உருவங்களை யுண்டுபண்ண, அதிலிருந்து துர்நாற்றமும், சவர் நீரடங்கியதும், பல நிறமுமான இரத்தம் அத்தோஷங்களால் வெளிப்படுத்தப் படும்; இதைச் 'சர்க்கரார் புதம்' என்றறிக.—17, 18.

**வல்மீகம்** :—ஸந்நிபாததோஷத்தினால் காத்திலும், பாதத்திலும், ஸந்திபாகங்களிலும், ஊர்த்வஜத்ருவிலும் கிரந்தி உருவத்தில் சிலந்தியானது புற்று போன்றதாகக் கிளம்பிப் பரவும், வல்மீகம் என்கிற புற்றுக்கு இருப்பதுபோலவே அநேகம் சிறிய முகங்கள் இதற்கு ஏற்படும்; இதில் வலியும், அழற்சியும், அரிப்பும், தூர்நீர்க்கசிவும் மிகுதியாயிருக்கும், ஆகவே இதற்கு 'வல்மீகம்' என்று பெயர்.—19, 20.

**கதரம்** :—கூரிய பருக்காங்கற்களை மிதிப்பதாலும், முள் முதலியவை தைப்பதாலும் பாதத்தில் சிறு முளை போன்றதாய் கிரந்தி மேலுக்குக் கிளம்பி யிருக்கும்; அது 'கதரம்' எனப் படும்.—21.

ருத்த குதம் :—வேகங்களை அடக்குவதால் அபானன் என்கிற வாயுவானது அபானம் என்கிற குதமார்க்கத்தைப் பற்றிய த்வாரத்தின் கீழ்ப்புறத்தையும் உட்புறத்தையும் மிகச் சிறியதாகச் செய்துவிடும்; இப்பிணியாளிக்கு அதன் பிறகு மலம் வெளி வருவதில் மிகச் சங்கடம் ஏற்படுகிறது; ஆகையால் இவ்வியாதி 'ருத்தகுதம்' எனக் கருதப்படுகிறது.—22, 22½.

சிப்பம் :—பித்தமும் வாதமும் சேர்ந்தடைந்து நகமாம்ஸத்தில் வேக்காட்டை யுண்டுபண்ணும்; இதில் வலியும், தேஹத்தில் ஜ்வரமும் காணும்; இதற்குச் 'சிப்பம்' எனப் பெயர். இதையே அக்ஷதரோகம் என்றும், உபநகம் என்றும் கூட மொழிவதுண்டு.—23½.

குநகம் :—அடி தாக்குவதால் நகமானது கருமையாகவும், கடினமாகவும், ரூக்ஷமாகவும் ஆகும்; இதை 'குநகம்' என்பார்கள்.—24.

அலஸம் :—அழுகிப்போயுள்ள சேற்றின் ஸம்பந்தத்தினுல் கால் விரல்களின் இடைகளில் திணவும், நீர்க்கசிவும் ஏற்படும்; அவ்வித விரணத்தை 'அலஸம்' என்பார்கள்.—24½.

திலகாலகம் :—எள்ளைப்போல் தேஹத்திற் பல இடங்களிற் கறுப்பாகச் சர்மத்தோடு சர்மமாகத் தோன்றும் வேதனையற்ற பருக்களுக்குத் 'திலகாலங்கள்' என்று பெயர்—25½.

மாஷம் :—அதே திலகாலகங்கள் சர்மத்திற்கு மேலாகக் கிளம்பித் தோன்றினுல் அவற்றை 'மாஷம்' என்பார்கள்.[1]—25½.

சர்மகீலம் :—மாஷங்களைவிட இன்னும் அதிகமாக மேலெழுந்து வெண்மையும் கருவலுமாகத் தோன்றும் முளைகளைப் போன்ற வளர்ச்சிகள் 'சர்மகிலம்' எனப்படும்.—26.

ஜதுமணி :—சர்மகீலம் போலவே தோன்றும் பெரிய பரு தேஹத்துடன் ஏற்பட்டுள்ள பிறவிக்கிரந்தி; நிறத்திற் சிவப்பானது; இது 'ஜதுமணி' எனப்படுகிறது.—26½.

லாஞ்சநம் :—கறுப்பாகவாவது வெளுப்பாகவாவது சர்மத்தோடு சர்மமாய் தேஹத்துடன் ஏற்பட்ட வட்டமான தழும்பு 'லாஞ்சநம்' எனப்படும்.—27.

வியங்கம் :—(1) சோகம், சோபம் முதலியவற்றுல் பிரகோபமடைந்த வாத - பித்தங்களால் முகத்தில் மெல்லியதாகவும், கறுப்பாகவும், வட்டமாகவும் உண்டாகும் தழும்புக்கு 'வியங்கம்' என்றும், முகத்தைத் தவிர வேறிடங்களில் உண்டாகும் அவ்விதத் தழும்புக்கு நீலிகா என்றும் பெயர். (2) அந்த வியங்கம் கடுமையாகவும், கடினமாகவும், கறுப்பாகவும் இருந்தால் அது வாததோஷத்தினுல் உண்டானதாகவும், (3) சிறிது கறுப்பாகவும்,

1. இது 'மஷகம்' என்றும் கூறப்படும்.

சிவந்த ஓரங்களுள்ளதாகவும் ஏற்பட்டிருந்தால் அது பித்த தோஷத்தால் ஆனதாகவும், (4) அரிப்பும்-வெண்மையான ஓரங்களுள்ளதாயிருந்தால் கபதோஷத்தினால் உண்டானதாகவும், (5) இளஞ்சிவப்பும்-மிகச் சிவந்த ஓரங்களும்-வறண்டும்-நமைச்சலும் உள்ளதாயிருந்தால் இரத்ததோஷத்தினால் ஏற்பட்டதாகவும் அறியவும். 28—29½.

**பிரஸுப்தி** :—வாயுவினால் தூண்டித் தள்ளப்பட்ட சிலேஷ்ம தோஷமானது சர்மத்தை அடைந்து, கிரமமாக வறண்டுபோகும்; அதனால் சர்மம் வெளிறிப்போய் கிரமமாய் உணர்ச்சியையும் இழக்கும்; கசிவற்றதாகவும் சொற்ப அரிப்புள்ளதாகவும் ஏற்பட்டுள்ள இது உணர்ச்சியின்மையை உண்டுபண்ணுவதால் 'பிரஸுப்தி' என்று வழங்கப்படும்.—30, 31.

**உத்கோடம்** :—வமனௌஷதம் போதியவளவு பிரயோகிக்கப்படாமையால் வமநம் நன்கு ஏற்படாமல், குமட்டலுண்டாய் பித்தம் - கபம் - அபக்குவமான உணவு இவை வெளிவராமல் தேஹத்திலேயே தடுக்கப்பட்டுப் போக, அதனால் அதிக நமைச்சலுண்டாக்குபவையான அநேகம் தழும்புகள் சென்னிறமாகத் தோன்றும்; அக் கோளாறு 'உத்கோடம்' எனப்படும். அதுவே நீடித்து தேஹத்தில் இருந்துவிட்டால்[1] **கோடம்** என்று வழங்கப்படும்.—32, 32½.

**க்ஷுத்ரரோகமுடிவுரை** :—இவ்விதமாக முப்பத்தாறு க்ஷுத்ர ரோகங்கள் அவ்வவற்றிற்குள்ள பேதங்களுடன் இங்கு விவரிக்கப் பட்டன.—33.

---

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்.

### க்ஷுத்ரரோகப் பிரதிஷேதம்.

இனி க்ஷுத்ர ரோகப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

**அஜகல்லிகா சிகித்ஸை** :—அஜகல்லிகை பக்குவமாகாமலிருக்கையிலேயே அதிலிருந்து அட்டைகளைக் கொண்டு இரத்தத்தை வடியச் செய்யவும்.—½.

**யவப்பிரக்கியா முதலியவற்றிற்குச் சிகித்ஸை** :—(1) முதலில் யவப் பிரக்யா என்னும் பருவுக்கு ஸ்வேதநம் செய்வித்து, அது கரைவதற்காக மரமஞ்சள், கோஷ்டம், மநச்சிலை இவற்றை அரைத்து மேலே பூசலாம். (2) இவ்விதமாகவே **பாஷாண கர்த**

1. "நீடித்து இருந்துவிட்டால்" என்பதற்குப் பதிலாக "ஜ்வரம்-வாந்தி முதலிய உபத்திரவங்கள் தொடரப் பட்டால்" என்றும் சில வியாக்யாநங்கள் பொருள் கூறுகின்றன.

பம் வரையிலுமுள்ள மற்றவைகளுக்கும் சிகித்ஸை செய்யவேண்டியது முறை. (3) அஜகல்லிகை உட்பட இந்த்ரவ்ருத் [illegible] பக்குவமாகும் வரையிலும், அதற்குப் பிறகும் வ்ரணங்களுக்குச் செய்யும் பொதுவான பரிஹாரங்களையே செய்யவேண்டும்.—1, 2.

முகதூஷிகா சிகித்ஸை :—(1) வெள்ளிலோத்திப் பட்டை, கொத்துமல்லி விதை, வசம்பு இவற்றை அரைத்து முகதூஷிகைக்கு மேலே லேபநம் செய்யலாம். (2) ஆலங்கொழுந்துகளையும், தேங்காய் வழுவல்களையும் சேர்த்து அரைத்தாவது லேபநம் செய்யலாம். (3) இவற்றால் தீராவிடில் வமநமும், நஸ்ய ப்ரயோகமும், நெற்றியில் ஸிராவ்யதையுங்கூடச் செய்யலாம்.—3, 3½.

பத்மகண்டக சிகித்ஸை :—பத்மகண்டகத்தில் (1) வேப்பிலைக் கஷாயத்தைப் பருகி வமநம் செய்யவேண்டும். (2) [illegible] வேப்பங்கஷாயத்திற் பக்குவம் செய்த க்ருதத்தைத் தேனை கூட்டிப் பருகலாம். (3) வேப்பிலை, கொன்றையிலை இவற்றை அரைத்தேனும் மேலே லேபநம் செய்யலாம்.—4½.

விவ்ருதாதிகளுக்குச் சிகித்ஸை :—(1) விவ்ருதா முதல் ஜாலகர்தபம் வரையிலுமுள்ள க்ஷுத்ர ரோகங்களுக்கும், இரிவெல்லிகைக்கும் பித்த விஸர்ப்பத்திற்கேற்ற சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்.[1] (2) அக்நிரோஹிணி அஸாத்யமென்று அதைப் பரிஹரித்து விடவேண்டும்.—5.

ஜாலகர்தபத்திற்கு விசேஷ சிகித்ஸை :—ஜாலகர்தபத்திற்கு விசேஷ லங்கநமும், இரக்த மோக்ஷணமும், பிறகு ரூக்ஷண சிகித்ஸையும், வமந-விரேசநாதி தேஹ சோதநங்களும், நெல்லிக்கனி முதலியவைகளைக்கொண்டு குளிர்ச்சியான பூச்சுகளும் எப்பொழுதும் பிரயோகிக்கத் தகுந்தவையாம்.—6.

விதாரிகா சிகித்ஸை :—விதாரிகா என்பதில் இரக்தமோக்ஷணம் செய்த பிறகு, சிலேஷ்மக்கிரந்திக்குச் செய்வதுபோன்ற சிகித்ஸையைச்[2] செய்யவேண்டும்.—6½.

சர்க்கரார்புத சிகித்ஸை :—மேதோதோஷத்தாலான அர்புதத்திற்கு ஏற்ற சிகித்ஸையைச் சர்க்கரார்புதத்தில் விசேஷமாகச் செய்யவேண்டும்.—7.

வல்மீக சிகித்ஸை :—(1) மிகவும் முதிர்ந்துபோனதும், அநேகம் த்வாரங்களைப் பெற்றதும், அதிக வீக்கமுள்ளதும், மர்மத்தைப் பற்றியுண்டானதும், கைகளிலாவது பாதங்களிலாவது கிளம்பியதுமான வல்மீகம் அஸாத்யமென்று விலக்கிவிடவேண்டும். (2) வேறுவித வல்மீகத்தில் சோதநசிகித்ஸை செய்து, இரக்த மோக்ஷணமும் பண்ணி, சரக் கொன்றை, சீந்தில், கருஞ்

1. சிகித்ஸா ஸ்த்தாநம் 18-ம் அத்தியாயம் பார்க்க.
2. இந்த ஸ்த்தாநத்தின் 30-ம் அத்தியாயம் பார்க்க.

சிவதை வேர், வெண்சிவதை வேர், நேபாளம், இறைச்சி, வாற்கோதுமை மா இவற்றை உப்பு சேர்த்து அரைத்து மேலே லேபனம் செய்யவும். (3) பழுத்துவிட்ட பின்பு கெட்டுப்போன மாம்ஸங்களையும், மற்ற மலினங்களையும் விலக்கிப் புரையோடும் எல்லா த்வாரங்களையும் ஏஷணி முதலிய கருவிகளைப் பிரயோகித்து நன்றாகச் சுத்தம் செய்யவேண்டும்; பிறகு க்ஷாரத்தினாலாவது, அக்னியினாலாவது சுட்டுச் சுத்தம் செய்யவேண்டும். 8—10.

**கதர சிகித்ஸை** :—கதரம் என்பதைச் சஸ்திரத்தினால் அடியோடு அறுத்து விட்டு, நன்றாகக் காய்ச்சிய ஏதேனும் ஸ்நேஹ பதார்த்தத்தினால் அவ்விடத்தைச் சுட்டு விட வேண்டும்.—10½.

**ருத்தகுத சிகித்ஸை** :—ருத்தகுதம் என்னும் கோளாறில் நிருத்தமணிக்குச் செய்வது போன்ற [1] சிகித்ஸையைச் செய்ய வேண்டும்.—11.

**சிப்ப சிகித்ஸை முதலியன** :—(1) சிப்பத்தில் முதலில் விரேசனாதி சோதன சிகித்ஸையினால் உஷ்ணத்தைத் தணியச் செய்து விட்டு, பிறகு சஸ்திரப் பிரயோகத்தினால் அதைப் பரிஹரிக்க வேண்டும். (2) குநகம் என்னும் கோளாறிலும் இச் சிகித்ஸையே செய்யத் தகுந்தது.—11¾.

**அலஸ சிகித்ஸை** :— அலஸம் என்கிற விரணத்தில் பாதங்களைக் காடியினால் நனைத்து, அன்னபேதி, பேய்ப்புடல், கோரோசனை, எள், வேப்பிலை இவற்றை அரைத்து மேலே லேபநம் செய்யவேண்டும்.—12¾.

**திலகாலக-மாஷங்களின் சிகித்ஸை** :—(1) திலகாலகங்களையும், (2) மாஷங்களையும் சூரியகிரணங்களாலாவது, க்ஷாரத்தினாலாவது, அக்னியினாலாவது சுடவேண்டும்.—13½.

**சர்மகீல-ஜதுமணிகளின் சிகித்ஸை** :—சர்மகீலம்-ஜதுமணி என்னும் இவைகளை முதலில் சஸ்திரத்தினால் அறுத்து விட்டு, பிறகு திலகாலகத்திற்குச் செய்தது போன்ற சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—14.

**லாஞ்சநாதிகளுக்குச் சிகித்ஸை** :—லாஞ்சநம், வியங்கம், நீலிகா என்கிற மூன்றுக்கும் அவை உண்டாயுள்ள இடத்திற்குச் சுற்றுச் சமீபத்தில் ஸிராவியதை செய்யவேண்டும். பிறகு பாலுள்ள மரங்களின் பட்டைகளையும், மொக்குகளையும் பால் விட்டு அரைத்து மேலே பூசவேண்டும்.—15.

**வியங்க சிகித்ஸை** :—(1) வியங்கங்களில் மருதம்பட்டையையாவது, மஞ்ஜிஷ்டியையாவது தேன் கூட்டி அரைத்து மேலே பூசலாம். (2) வெள்ளைக் குதிரையின் குளம்பை எரித்து, அங்

---

1. நிருத்தமணி சிகித்ஸை—அடுத்த 34-ம் அத்தியாயம் பார்க்க.

தக் கரியை வெண்ணெய் கூட்டிக் கலந்தாவது மேலே பூசலாம். (3) செஞ்சந்தனம், மஞ்ஜிஷ்டி, கோஷ்டம், வெள்ளிலோத்தி, ஞாழல், ஆலம் மொட்டுகள், கடலை இவைகளால் செய்யப்படும் லேபநமும் வியங்கங்களையும் போக்கும்; முகத்திற்குக் காந்தியையும் தரும். (4) ஜீரகம், கருஞ்ஜீரகம், கறுப்பான எள், [illegible] இவற்றைப் பால் விட்டு அரைத்து முகத்தில் லேபநம் செய்ய வியங்கங்களையும், லாஞ்சநத்தையும் போக்கி, முகத்தைச் சந்திர பிம்பம் போல் பளிமையுள்ளதாகச் செய்யலாம். 16—18.

முகத்தை மரு முதலியதைப் போக்கித் தெளிவாக்கும் லேபநங்கள் :—(1) கடலைகளை வறுத்து, உமி நீக்கிப் பாலில் அரைத்து, நெய்யும் தேனும் விட்டுக் கலக்கி முகலேபநமாக உபயோகிக்கலாம். (2) கூர்மையான இலவம் முட்களைப் பாலில் அரைத்தாவது பூசலாம். (3) இலந்தங்கொட்டையையும், வெல்லத்தையும், முயல் இரத்தத்தையும் தேனையும் விட்டு அரைத்தும் பூசலாம். (4) கோஷ்டத்தைச் சொடி மாதளையினுள் ஏழு நாட்கள் அடக்கம் செய்திருந்து, அப்பால் அதைத் தேன் விட்டு அரைத்து முகத்திற் பூசலாம். (5) இலவம் வேரைச் செம்மறியாட்டுப் பால் விட்டு அரைத்துத் தேன் விட்டுக் கலந்தும் பூசலாம். (6) பசுவின் எலும்பையும், இலவம் வேரையும் இடித்து நெய்யும் தேனும் கூட்டியாவது முகத்தில் லேபநம் செய்யலாம். (7) நாவல்துளிர், மாந்துளிர், மஞ்சள், மரமஞ்சள், புதிய வெல்லம், குழம்பான மோர் இவற்றை ஒன்றாக அரைத்து லேபநம் செய்தாலும், (8) வெள்ளிலோத்திப் பட்டையை அதன் சாற்றால் அரைத்து லேபநம் செய்தாலும் முகத்திற்கு இயற்கை நிறமுண்டாகும். (9) கருநெய்தலின் இதழ், கிரந்திதகரம், ஞாழல், கருஞ்சந்தனம், இலந்தங்கொட்டை இவற்றின் கல்கத்தை முகத்தில் தேய்த்தால், முகத்தைத் தாமரை மலருக்குச் சமானமாகச் செய்யும். (10) முற் கூறிய சரக்குகளையே கல்கமாகச் செய்து, அதிமதுர கஷாயத்தில் அவ்விதமே வெவ்வேறு தைலங்களைப் பக்குவம் செய்து, அந்தந்த தோஷத்திற்கும், பருவங்களுக்கும் ஏற்றவாறு அவற்றை உபயோகிக்கலாம். 19—24.

யவா திரஸக்ரியை :—வாற்கோதுமை, மட்டிப்பால், வெள்ளிலோத்தி, வெட்டிவேர், சந்தனம், தேன், நெய், வெல்லம் இவற்றைக் கோமயத்திற் கூட்டிக் காய்ச்சவும்; கரண்டியில் தேன் பதத்தில் ஒட்டும் வரையில் காய்ச்சியெடுத்து, அதனால் அப்யங்கம் செய்ய, இது சீக்கிரத்தில் நீலிகா, வியங்கம், முகதூஷிகை என்கிற பரு இவற்றைப் போக்கும்; முகத்தைத் தாமரைப் பூவைப்போல் அழகாகச் செய்யும்; பாதங்களில் உபயோகித்தாலும் இது அவற்றையும் தாமரைமலர்களைப்போல் அழகுபடுத்தும்.—25, 26.

குங்குமாதி நஸ்யதைலம் :—கேஸரி என்கிற குங்குமப்பூ, [illegible] டி-வேர், கருஞ்சந்தனம், கொம்பரக்கு, அதிமதுரம், சந் [illegible]ம், இளசான ஆலம்விழுதுகள், கொட்டிச்சாந்து, தாமரை [illegible] மெல்லிய இதழ்கள், கருநெய்தல், மஞ்ஜிஷ்டி இவை [illegible]க்கு ஒரு பலம்; இவற்றை ஓர் ஆடகம் ஜலத்திற் சேர்த்து, கால் பங்கு வற்றும்படியாகக் காய்ச்சவும்; பிறகு அரக்கு, [illegible]ங்கி, மஞ்ஜிஷ்டி, அதிமதுரம், கேஸரி இவற்றை வகைக் [illegible] கால் பலம் வீதம் கல்கமாக இடித்துச் சேர்த்து, ஒரு குட [illegible] எண்ணெயும், அதற்கு இரு மடங்கு பாலும் கூட்டிக் [illegible]வும். இதை நஸ்யமாக உபயோகித்து வந்தால் நீலிகா, [illegible]த்தல், வியங்கம், சர்மம் கருங்குதல், திலகாலகம், தூஷிகா [illegible] கோளாறுகள் நிவாரணமாகும்; முகத்திற்குப் புஷ்டியும் [illegible]தியும் இதனால் விருத்தியாகும். 27—30.

மஞ்ஜிஷ்டாதி லேபம் :—மஞ்ஜிஷ்டி, வெள்ளிலோத்தி, [illegible], கொம்பரக்கு, மஞ்சள், மரமஞ்சள், மநச்சிலை, ஹரி [illegible]ம், குங்குமப்பூ, கோஷ்டம், கோரோசனை, காவி, ஆலம் [illegible]பு, சந்தனம், செஞ்சந்தனம், கருஞ்சந்தனம், பாதரஸம், [illegible]ங்கம், சூரப்புன்னைப்பட்டை, தாமரைவித்து, தாமரை [illegible]ம், தேன்மெழுகு, அத்தம், பத்மகாதிகணச்சரக்குகள், [illegible]ழுப்பு, நெய், மஜ்ஜா என்கிற எலும்புச்சோறு, பால், [illegible]ள்ள மரங்களின் கஷாயம் இவற்றை ஒரு பாத்திரத்திற் [illegible]த்து, அக்னியில் ஏற்றிக் காய்ச்சி, மெழுகு பதத்தில் எடுக் [illegible]ம்; இதை மேலே லேபநம் செய்ய வியங்கம் நீலிகா முத [illegible]வை நிவ்ருத்தியாவதோடு, முகம் சந்திரபிம்பம் போன்று [illegible]ரிவையும் பெறும்.—31, 32.

மஞ்ஜிஷ்டாதி நஸ்யம் :—முற்கூறிய சரக்குகளையே [illegible]யாந்தகரைச் சாறு, பால், தண்ணீர் இவற்றால் ஆட்டி, அதன் [illegible]ழிந்தெடுத்தச் சாற்றையும் முற்கூறிய நோய்களில் நஸ்யமிட [illegible]ம்.—32½.

பிரஸுப்தி சிகித்ஸை :—பிரஸுப்தி யென்னும் கோளா [illegible]ல் வாதகுஷ்டத்திற்குக் கூறிய சிகித்ஸையைச் செய்வதுடன், அக்னியினால் அவ்விடத்தைச் சுடுவதும் நலம்.—33.

உத்கோட சிகித்ஸை :—(1) உத்கோடத்தில் கபஹரமா [illegible]ம் பித்தஹரமாகவும் கூறியுள்ள சிகித்ஸைகளையும், (2) [illegible]கோடத்தில் குஷ்டஹரமான எல்லாச் சிகித்ஸைகளையும் செய்யலாம்.—33½.

---

# முப்பத்து மூன்றும் அத்தியாயம்.

## குஹ்யரோக விஞ்ஞானம்.

இனி குஹ்யரோகவிஞ்ஞானீயம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துக் கூறப்படும் :—

குஹ்யரோக காரணங்கள் :—ஸ்திரீகளுடன் புணர்ச்சியை நிறுத்தி நெடுநாட்களான பின்பு மீண்டும் திடீரென்று புணர்ச்சி செய்வது, தோஷங்கள் சேர்ந்துள்ளதும்-அநேகருடைய ஸம்பந்தம் பெற்றதும்-மலினமாயுள்ளதும்-மிகச்சிறிய த்வாரமுடையதும்-இரஜஸ் என்கிற மாதவிடாய்த்தீட்டைப் பெற்றதுமான யோனியுடைய ஸ்த்ரீயுடன் புணர்வது, அன்னியயோனியிலும் - இச்சையில்லாதவளிடமும்-சேரத்தகாதவளிடமும் பதிவ்ரதைப்பிரவர்த்தவளிடமும் சேருவது, விஷக்கலப்புள்ள துஷ்டரோகம் லிங்கம் முதலியதை அலம்புவது, புணர்ச்சிக்குப் பிறகு முக்கியமாய் ஸ்நானம் செய்வது அல்லது புணர்ச்சிக்குப் பிறகு முற்றிலும் ஈரத் ஜலத்திலை அலம்பாமல் இருந்துவிடுவது, லிங்கத்தைப் பெரிதாகச் செய்யக் கருதி தீக்ஷ்ணமான களிம்பு முதலியவைகளை அதன் மேல் தேய்ப்பது, முஷ்டி-பல்-நகம் இவற்றால் தாக்கப்படுவது, விஷம் ஸம்பந்திப்பது, வலியவே சுக்ரத்தை வெளிவிடுவது, வேகதாரணம் செய்வது, நீண்ட கடினமான வஸ்திரத்தால் தாக்கப்படுவது ஆகிய காரணங்களால் யோனியில் அல்லது லிங்கத்தில் தோஷங்கள் விகாரமடைந்து, உபதம்சம் முதலிய இருபத்து மூன்றுவித வியாதிகள் உண்டாகும். 1—$4\frac{1}{4}$.

### லிங்க ரோகங்கள்.

உபதம்சம் :— குஹ்யரோகங்களுள் 'உபதம்சம்' என்பது மூன்று தோஷங்களால் மூன்றும், இரத்த தோஷத்திலை ஒன்றும், ஸந்நிபாதத்திலை ஒன்றும் ஆக ஐந்து விதங்களாம். அவற்றுள் (1) வாத தோஷத்திலுண்டாகும் உபதம்சத்திலை லிங்கம் வீங்கிப் போய் பலவகை வேதனைகளுண்டாகும் ; அது விம்மிக் கொள்ளும் ; அதன் சர்மமும் வெடித்துப்போம். (2) பித்த தோஷத்தாலான உபதம்சத்தில் அவ்வவயவம் வீங்கிப்போய், பழுத்த அத்திப்பழம் போன்றதாகும்; ஜ்வரமும் கடுமையாயிருக்கும். (3) சிலேஷ்மதோஷத்தாலான உபதம்சத்தில் லிங்கம் கடினமாகவும், ஸ்நிக்த்தமாகவும், அரிப்புள்ளதாகவும், குளிர்ச்சியாகவும், பருத்துக் கனமாகவும் ஆய்விடும். (4) இரத்த தோஷத்தாலான உபதம்சத்தில் அவ்வவயவத்தின் மேல் கருநிறமான கொப்புளங்கள் உண்டாய், இரத்தப் பெருக்கும் கண்டு, ஜ்வரமும் தோன்றும். (5) மூன்று தோஷங்களாலும் உண்டாகிற உபதம்சத்தில் ...

1. ஆண்குறி-பெண்குறிகளும், அவற்றைச் சார்ந்த மற்றப் பாகங்களும் குஹ்யங்கள்; அவற்றைப்பற்றிய வியாதிகளை விளக்கும் அத்தியாயம்.

த்தில் மூன்று தோஷங்களுடைய லக்ஷணங்களும் தோன்றுவதோடு, பீஜங்களில் வீக்கமும், கடுமையான வலியும், சீக்கிரத்தில் பழுத்து வெடித்துக் கிருமிகளும் உண்டாம். இவற்றுள் இரத்தத்தினாலான உபதம்சம் யாப்யம்; ஸந்நிபாதோபதம்சம் ரோகியைப் போக்கிவிடும். 5—8½.

**லிங்கார்சஸ்** :—லிங்கம் அல்லது யோனி என்னும் குஹ்ய ஸ்தானம், இரத்தம், மாம்ஸதாது இவற்றைப் பற்றியுள்ள தோஷங்கள் பிரகோபமடைந்து, லிங்கத்தின் உட்புறத்திலாவது வெளிப்புறத்திலாவது அதிக தினவை யுண்டுபண்ணும் மாம்ஸ முளைகள் தோன்றும்: அவை பிசுபிசுப்பான துஷ்ட ரத்தத்தைக் கசியச் செய்யும். இவ்விதமாகவே ஸ்திரீகளுக்கு யோனியிலும் உண்டாகும்; ஆனால் அந்த முளைகள் குடைபோலக் கிளம்பி யிருக்கும். 'லிங்கார்சஸ்' அல்லது 'யோனியர்சஸ்' எனப்படும் இவை உபேக்ஷிக்கப்பட்டால், லிங்கத்திலுண்டானால் புருஷத் தன்மையையும், யோனியில் உண்டானால் மாதவிடாயையும் அழித்துவிடும். 9—10½.

**ஸர்ஷபிகா** :—குஹ்யத்தின் வெளியிலாவது உள்ளேயாவது கபதோஷை-ரக்ததோஷங்களால் நிறத்திலும் உருவத்திலும் கடுகைப்போன்ற கட்டிகள் கனமாய் உண்டாகும்; அக் கட்டிகள் 'ஸர்ஷபிகைகள்' எனப்படும்.—11½.

**அவமந்தம்** :—லிங்கத்தின் மத்தியிலும் அநேகம் நீண்ட பிடகைகள் என்னும் கட்டிகள் உண்டாய் பிளவுறும்; சிலேஷ்ம தோஷத்தினாலும், இரத்ததோஷத்தினாலும் உண்டாகிற அவமந்தம் என்னும் இது உரோமங்களைச் சிலிர்க்கச் செய்து கடும் வேதனையைத் தரும்.—12½.

**கும்பிகா** :—இரத்த தோஷ - பித்ததோஷங்களால் உண்டாவது 'கும்பிகா' என்னும் வீக்கம்; நாவற்கொட்டையைப் போன்றதாய் இது வெகு துரிதமாக உண்டாய் வளரும்.—13.

**அலஜி** :—குஹ்யத்தில் 'அலஜி' என்னும் பிளவை தோன்றும்; அது லக்ஷணத்தினால் பிரமேஹநிதானத்திற் கூறியுள்ள அலஜி என்னும்[1] பிடகையைப் போன்றதாம்.—13¼.

**உத்தமா** :—இரத்ததோஷத்தினாலும் பித்ததோஷத்தினாலும் உளுந்து அல்லது பயறு போன்றதாய் உண்டாகும் பிடகை 'உத்தமா' என்று வழங்கப்படும்.—13¾.

**புஷ்கரிகா** :—தாமரைப்பூவின் இடையிலுள்ள கர்ணிகை யென்கிற காயில் சிறு சிறு குமிழ்கள் காணுவதுபோல் லிங்கத்தில் ஒரு பிடகை யென்கிற கட்டியில் அநேகம் சிறு சிறு

---

1. நிதானஸ்த்தானம் 10-ம் அத்தியாயம் பார்க்க.

கொப்புளங்கள் கிளம்பிப் பரவி யிருக்கும்; ஆகவே அது ‘புஷ்கரிகா’ எனப்படும்—14½.

ஸம்வியூடபிடகா :—கைகளால் லிங்கம் [illegible] பிசைந்து தேய்க்கப்படுவதால் அதில் ஒருவகை பிடகை யுண்டாகும். அது ‘ஸம்வியூடபிடகா’ எனக் கூறப்படும்.[1]—15.

ம்ருதிதம் :—வஸ்திரத்தினால் தேய்க்கப்பட்டும், வேறு வகையில அரைக்கப்பட்டும் வாயு பிரகோபித்து லிங்கத்தில் உண்டாகும் தினவுடன் கூடிய கோளாறு ‘ம்ருதிதம்’ எனப் படும்.—15½.

அஷ்டீலிகா :—வாததோஷத்தினால் லிங்கத்தில் மேடுபள்ள மாகவும், கடினமாகவும், வளைவாகவும் உண்டாகும் லிங்கம் ‘அஷ்டீலிகா’ என்று மொழியப்படும்.—16.

நிவ்ருத்தம் :—தேய்ப்பது முதலியதால் விகாரப்பட்ட வாயு பிரகோபமடைந்து, லிங்கத்தின் மேல்சர்மத்தை மடக்கித் திருப்பிவிடும்; அதில் வலியும் அழற்சியும் உண்டாம்; சிலருக்கு அது பழுத்துப் பக்குவமுமடையும்; உருண்டையாகச் சேர்ந்த அச்சர்மம் கெட்டிப்பட்டு கிரந்தியைப்போல் மணி என்கிற முனைக்குக் கீழே தொங்கும்; கபதோஷமும் இதில் சேரும்; அரிப்பும் கடினத்தன்மையும் ஏற்படும்; இதற்கு ‘நிவ்ருத்தம்’ என்று பெயர்.—17, 18.

அவபாடிகா :—லிங்கத்தில் சர்மம் வெடித்துப்போகும்; அது பிறகு ஒன்று கூடி ஆறுவது அரிது; அவ்விதக் கோளாறு ‘அவபாடிகா’ எனப்படுகிறது.—18½.

நிருத்தமணி :—வாததோஷத்தினால் லிங்கத்தின் முனையில் சர்மம் விகாரமடைந்து, அச்சர்மம் மணி என்கிற கொண்டையில் ஒட்டிக்கொண்டு, த்வாரத்தை அடைப்பதால், மூத்திரம் மெல்லிய தாரையாக வெளியாகும்; ஆனால் வேதனை ஏற்படாது; சர்மம் சுருங்கி மடியவும் மணி மலரவும் வகையில்லாமற் போகும்; இதை ‘நிருத்தமணி’ என்பர்.—19, 20.

கிரந்திதம் :—கபதோஷத்தினால் லிங்கமானது சூகங்கள் என்கிற சுணைமுட்களால் நிரம்பியதுபோல் ஆய்விடும்; இது கிரந்தி போன்றிருப்பதால் ‘கிரந்திதம்’ எனப்படுகிறது.—20½.

ஸ்பர்சஹானி :—சூகதோஷத்தினால் இரத்தம் விகாரமடைய, அதனால் லிங்கத்திற்குப் பரிசவுணர்ச்சி குறைந்துபோம்; ஆகவே இக்கோளாறுக்கு ‘ஸ்பர்சஹானி’ எனப் பெயர்.—21.

சதபோநகம் :—லிங்கம் வாததோஷ-இரத்ததோஷம் காரணமாய் நுண்ணிய முகமுள்ள த்வாரங்களால் எங்கும் வியாபிக்கப் படும் அவ்வியாதியை ‘சதபோநகம்’ என்றறிக.—22.

---

1. இது ஸம்மூடபிடகா என்றும் கூறப்படும்.

**த்வக்பாகம்** :—பித்த தோஷத்தினுலும் இரத்த தோஷத்தினுலும் லிங்கத்தின் சர்மம் அழன்று சமைக்கப்பட்டது போல் ஆகும்; எரித்தலும் ஜ்வரமுங்கூடக் காணும்; இதை 'த்வக்பாகம்' என்று கூறுவர்.—22½.

**மாம்ஸ பாகம்** :— ஸந்நிபாததோஷத்தினுல் லிங்கத்தில் மாம்ஸதாது எரிந்து சிதைந்துவரும்; இதில் ஸகலவிதமான வேதனைகளும் உண்டாம்; இதற்கு 'மாம்ஸபாகம்' என்று பெயர்.—23.

**இரக்தார்புதம்** :—சிறிது சிவந்தும் கருநிறமாகவும் உள்ள கொப்புளங்களால் லிங்கம் பீடிக்கப்பட்டு, கடும் வேதனை உண்டாகும்; அதை 'இரக்தார்புதம்' என்றறிக.—24.

**மாம்ஸார்புதாதிகள்** :—லிங்கத்தில் உண்டாகும் 'மாம்ஸார்புதம்,' 'வித்ரதி' இவற்றின் இலக்ஷணங்கள் முன்பு கூறியவற்றின் லக்ஷணங்களைப் போன்றவையே; [1] அவ்விரண்டும் ஸந்நிபாதத்தினுல் உண்டாகுபவை.—24½.

**திலகாலகம்**: —ஸந்நிபாத தோஷத்தினுல் லிங்கத்தின் எல்லாப் பக்கங்களிலும் சதை கருநிறமாகப் போய், பழுத்துச் சிதைந்து விடும்; இவ் வியாதியைத் 'திலகாலகம்' என்பர்.—25½.

**லிங்கத்தைப் பற்றிய வியாதிகளில் ஸாத்யாஸாத்யங்கள்** :—மாம்ஸார்புதம், மாம்ஸபாகம், வித்ரதி, திலகாலகம் ஆகிய நான்கும் அஸாத்யமானவை யென்று அவற்றை விலக்கி விட வேண்டும். மற்றவைகளுக்குச் சீக்கிரம் சிகித்ஸை செய்ய வேண்டும்.—26½.

## யோனி ரோகங்கள்.

**யோனிரோகங்கள் இருபது** :— கெட்டுப்போன உணவு முதலியவற்றின் உபயோகத்தினுல் யோனியில் இருபது வகையான நோய்கள் உண்டாகும்.—27.

**வாதிகயோனி** :—அவயவங்களை மேடு பள்ளமான இடங்களில் வைத்துப் படுப்பது, அதிகமாகப் புணர்வது, ஆர்த்தவம் கெட்டுப் போவது, ஆகாத பண்டங்களை உபயோகிப்பது, பெற்றோரிடமிருந்து பீஜதோஷம் பற்றுவது, தைவக்கோளாறு ஆகிய காரணங்களால் யோனியில் வாயு பிரகோபமடைந்து வலி, குடைத்தல், இசிவு, உணர்ச்சியின்மை, எறும்பு ஊருவது போன்ற உணர்ச்சி, விறைப்பு, கடினத்தன்மை, ஒரு வகைச் சப்தம் ஆகிய குறிகளை யுண்டுபண்ணும்; மேலும் அந்த ஸ்திரீக்கு ஆர்த்தவமானது நுரைத்தும், சிவந்தும், கருநிறமாகவும், தடிப்பில்லாது சொற்பமாகவும், ரூக்ஷமாகவும் வெளியாகும்; துடையிடுக்கு முதலியதில் தளர்வும், வலியும், கிரமமாக குல்மமும் இதனுல் ஏற்

1. க்ரந்த்யர்புதாதி விஜ்ஞாநம் என்னும் அத்யாயம் பார்க்க.

படும்; மேலும் வாதாதி தோஷஸம்பந்தமான [illegible] றுகளும் இதில் தோன்றும்; இவ் வியாதி [illegible] 'வாதயோநி' எனக் கருதப்படுகிறது. 25—[illegible].

அதிசரண யோநி :—அவ்விதவாதிகயோநிக் [illegible] கும் போதே அதிகப் புணர்ச்சி பெற்பட்டால் [illegible] உண்டாகும்; அக்கோளாறு 'அதிசரணு' [illegible].—31.

பிராக்சரண யோநி :—மிக்க இளம் பெண்ணுக்குப் புணர்ச்சி யினுல் பிருஷ்டபாகம், கால், தொடை, தொடை [illegible] றில் வலியை யுண்டுபண்ணிபவாறு வாயு [illegible], யோநியைத் தூஷிப்பிக்கும்; இக்கோளாறு 'பிராக்சரணு' [illegible] படுகிறது.—32.

உதாவ்ருத்த யோநி :—வாதாதி வேகங்களை [illegible] அவயவங்களை ஒழுங்கினமாகத் திருப்புவதால் வாயு [illegible] மடைந்து, யோநியில் உதாவர்த்த [illegible] நிலைமையை உண்[illegible]; அப்பொழுது யோநியிலிருந்து ஆர்த்தவமானது [illegible] மிகத் தொந்தரவுடனும், மேல் [illegible] போல் சொற்பமாகவும் கசியும். இக் கோளாறு '[illegible] யோநி' என்று கூறப்படும்.—33, 33½.

ஜாதக்ந யோநி :—வாயுவானது கர்ப்பத்தில் [illegible] மையை உண்டு பண்ணி, அதனுல் கர்ப்பத்தில் விகாரமடைந்த ஆர்த்தவத்திலிருந்து ஜனிக்கும் சிசுவைப் பிறக்கும்போதெல்லாம் நசிக்கச் செய்கிறது; அது 'ஜாதக்ந யோநி' என்று வழங்கப் படும்.—34.

அந்தர்முக யோநி :—அமிதமாகப் புஜித்த ஸ்திரீ ஒழுங்கின மாகச் சயனித்துப் புணர்ந்தால், யோநி த்வாரத்திலுள்ள வாயு அவ்வுணவினுல் நெருக்கப்பட்டு, யோநிமுகத்தை வக்ரமாக்கி, அருகிலுள்ள அஸ்தியையும் மாம்ஸத்தையும் ஒடுக்கிக் கடுமை யாக வலிக்கச் செய்யும்: இக் கோளாறை 'அந்தர்முகயோநி' என்பர்.—35, 35½.

ஸூசிமுக யோநி :—கர்ப்பம் தரிக்கையில் ஸ்திரீ வாதத்தை விருத்தி செய்யக்கூடிய ஆஹாரங்களை அதிகமாயுபயோகிப்பதால் வாயு பிரகோபித்து, கர்ப்பத்திலுள்ள பெண் சிசுவின் யோநியை நுண்ணிய த்வாரமுள்ளதாகச் செய்யும்; இக் கோளாறு 'ஸூசி முகயோநி' எனப்படும்.—36½.

சுஷ்கயோநி :—பருவகாலத்தில் வேகங்களை அடக்குவதால் வாயு விகாரமடைந்து, மல-மூத்திரங்களை அடைத்துப்போடும்; அது யோநியையும் வறளச்செய்யும்; இது அதிக வேதனையைத் தரும்; இதற்கு 'சுஷ்கயோநி' எனப் பெயர்.—37½.

வாமினீயோநி :—கர்ப்பாசயத்திற் சேர்ந்துள்ள சுக்ரத்தை அதிலிருந்து வாயுவானது ஆறு அல்லது ஏழு நாட்களில் வெளியில் கக்கச் செய்யும்; அந்நிலைமையில் வலியிருந்தாலும் இருக்கும், இல்லாமலுமிருக்கும்; இதை 'வாமினீ யோநி' என்பர்.—$38\frac{1}{2}$.

ஷண்டயோநி :—பெண் சிசு கர்ப்பத்திலிருக்கையில் தாயின் யோநி வாத தோஷத்தினால் பீடிக்கப்பட, அதனால் பீஜதோஷம் சிசுவுக்கு ஏற்பட்டு, அப்படிப் பிறக்கும் பெண் ஆண்பிள்ளையிடம் வெறுப்புள்ளதாகவும், ஸ்தனமற்றதாகவும் ஆய்விடும்; அது 'ஷண்ட யோநி' எனப்படும்; இதற்குச் சிகித்ஸை அஸாத்யம்.—$39\frac{1}{2}$.

மஹாயோநி :—விகாரமடைந்த வாததோஷம் யோநி முகத்திலும் கர்ப்பாசயத்திலும் பலமாக அழுந்திச் சென்று, யோநியை அகன்றதாகவும், இடம் விட்டு நழுவியதாகவும், தளர்ந்த மாம்ஸபேசிகளுள்ளதாகவும் செய்யும்; வாதிக யோநியைப் போல் இது மிக்க வேதனையளிக்கும்; அதிக வலியுண்டு பண்ணும். இதற்கு 'மஹாயோநி' எனப் பெயர். 40—41.

பைத்திக யோநி :—தான் பிரகோபித்துக் கோளாறடைவதற்கேற்ற காரணங்களால் பித்தம் விகாரமடைந்து, யோநியைப் பற்றிக் கொண்டு அவ்வவயவத்தில் அழற்சியையும், சமைக்கப்படுவது போன்ற உணர்ச்சியையும், துர்நாற்றத்தையும் உண்டு பண்ணும்; ஜ்வரமும் தோன்றும்; ஆர்த்தவமும் அதிக சூடாகவும், அதிக துர்நாற்றமுள்ளதாகவும், நீல நிறமும், மஞ்சள் நிறமும், கருநிறமும் உள்ளதாகவும் இருக்கும்; இக் கோளாறுக்குப் 'பைத்திக யோநி' என்று பெயர்.—42, $42\frac{1}{4}$.

ரக்த யோநி :—எப்பொழுதும் யோநியிலிருந்து அமிதமாக இரக்தம் பெருகிக்கொண் டிருந்தால் அது 'ரக்த யோநி' எனப்படும்.—43.

ச்லேஷ்மிக யோநி :— அபிஷ்யந்தி என்னும் குணமுள்ள வஸ்து முதலியவற்றால் பிரகோப மடைந்த கபதோஷம் யோநியைக் குளிர்ச்சியாகவும், அரிப்புள்ளதாகவும், வெளிறிய பசையுள்ளதாகவும், சிலேஷ்மம் போன்ற அழுக்கின் பெருக்குள்ளதாகவும் செய்யும்; ஆனால் இதில் வலி யேற்படாது; இவ் வியாதியை 'ச்லேஷ்மிக யோநி' எனக் கூறுவர்.—44, $44\frac{1}{4}$.

லோஹிதக்ஷய யோநி :—வாத-பித்த தோஷங்களால் இரஜஸ் என்கிற ஆர்த்தவ தாது க்ஷீணமடைகின்றது; அழற்சியும், இளைப்பும், நிற மாறுபாடும் தேஹத்தில் ஏற்படும்; இது 'லோஹிதக்ஷய யோநி' எனப்படும்.—45.

பரிப்லுத யோநி :— பித்ததோஷம் அதிகரித்த ஸ்திரீ புருஷனுடன் சேர்ந்திருக்கையில் தும்மல்-ஏப்பம் முதலியதை அடக்குவதால் வாயுவும் பிரகோபித்து, பித்தத்துடன் சேர்ந்து

யோநியை விகாரப் படுத்தும்; அதனால் அவ்வவயவம் வீக்கங் கொண்டு, பரிசிப்பதைத் தாங்காததாய்க் கடும் வேதனை யளிக்கும்; அதிலிருந்து கறுப்பாகவும் பசுமையாகவும் இரக்தம் கசியும்; மூத்திரவஸ்தியிலும் உதரத்திலும் பாரம் ஏற்படும்; இக்கோளாறு அதிஸாரத்தையும் அரோசகத்தையும் உண்டு பண்ணும்; பிருஷ்டபாகத்திலும் தொடையிடுக்குகளிலும் குத்தல் வலியுண்டாம்; ஜ்வரமும் ஏற்படும்; இதை 'பரிப்லுத யோநி' என்பர்.—46, 47½.

உபப்லுத யோநி :—வாத-சிலேஷ்ம ரோகங்களின் ஸம்பந்தத்தை மிகுதியாகப் பெற்ற யோநியிலிருந்து வெண்மையாய்ப் பிசுபிசுப்புள்ள அழுக்கு மிகக் கசியும்; இந்த வியாதி 'உபப்லுத யோநி' எனப்படும்.—48¼.

விப்லுத யோநி :—நன்கு சுத்தம் செய்யாமையால் நமைச்சலுண்டாய், நுண்ணிய கிருமிகளும் யோநியில் ஏற்படும்; அதிக நமைச்சல் ஏற்படுவதாலேயே புணர்ச்சியிலும் அதிகப் பிரியம் உண்டாகும்; அவ்வித நோய் 'விப்லுத யோநி' எனக் கூறப்படும்.—49.

கர்ணிநீ யோநி :—அகாலத்தில் தனது நீரை ஸ்ரவிக்கச் செய்வதால், வாயுவானது சிலேஷ்ம தோஷத்துடனும் இரக்தத்துடனும் கூடி விருத்தியாய் யோநியில் தாமரைத் தாதுபோன்ற கர்ணிகையை உண்டுபண்ணும்; அக்கர்ணிகை ஆர்த்தவ மார்க்கத்தைத் தடுத்துவிடும்; இதைக் 'கர்ணிநீ' என்பர்.—50¼.

ஸாந்நிபாதிக யோநி :— யோநியையும், கருப்பையையும் பற்றி விருத்தியான மூன்று தோஷங்களாலும் யோநி மிகக் கோளாறடையும்; இதில் ஒவ்வொரு தோஷத்தின் குறிகளும் ஏற்பட்டு விசேஷ உபத்திரவம் உண்டாகும்; இக்கோளாறு 'ஸாந்நிபாதிக யோநி' எனப்படும்.—51.

யோநிரோகங்களால் ஏற்படும் உபத்திரவங்கள் :—இவ்விதம் யோநி ரோகங்கள் விவரிக்கப் பட்டன. இவற்றால் ஸ்த்ரீயானவள் சுக்ரத்தைக் கருப்பையில் ஏற்றுக்கொள்ள முடியாதவளாவாள்; ஆகவே கர்ப்பம் தரிக்கவியலாமற் போகும்; அஸ்ருக்தாம் அல்லது பிரதாம், அர்சஸ், குல்மம் முதலிய வேறு கொடிய வியாதிகளுக்கும் அவை காரணமாகின்றன; வாததோஷாதிகளால் வேறு வகை பாதைகளும் காணும்.—52, 52½.

# முப்பத்துநான்காம் அத்தியாயம்.

## குஹ்யரோகப் பிரதிஷேதம்.

இனி குஹ்யரோகப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம் விவரித்துரைக்கப்படும் :—

### லிங்கவியாதி சிகித்ஸைகள்.

உபதம்சசிகித்ஸை :— (1) உபதம்சம் புதிதாக உண்டாயிருந்தால், அப்பொழுது லிங்கத்தின் மத்தியில் ஸிராவியதை செய்யவேண்டும். பிறகு சீதளமான சோதந சிகித்ஸையைச் செய்யவேண்டும் ; அதிலும் முக்கியமாய் விரேசநரூபமான சோதநம் செய்வது நலம். (2) அது பழுத்துப் பக்குவமான பிறகு சஸ்திரத்திஞல் கீறி தோஷத்தைச் சுத்தம் செய்து, எள்ளை அரைத்து நெய்யும் தேனுங்கூட்டி மேலே லேபநம் செய்யவேண்டும்.—1, 1½.

உபதம்சஹரகஷாயமும் தைலமும் :— (1) நாவல் - மா-ஜாதிமல்லிகை-கடம்பு-வெண்முருங்கை - வாலுழுவை இவற்றின் மொக்குகளையும், யானைவணங்கி - இலந்தை - பில்வம்-முருக்கை-வெள்ளிலோத்தி - பாலுள்ள வேறு விருக்ஷங்கள் இவற்றின் பட்டைகளையும், த்ரிபலையையும் ஜலத்தில் இடித்துப் போட்டுக் காய்ச்சவும் ; இக் கஷாயத்திஞல் உபதம்ச விரணத்தைக் கழுவலாம். (2) அதே சரக்குகளாலான கஷாயத்தில் பக்குவம் செய்த தைலத்தை உபதம்சங்களை ஆற்றுவதற்காக மேலே பிரயோகிக்கலாம்.—2, 3½.

உபதம்சஹர லேபங்கள் :—(1) துத்தம், காவி, வெள்ளிலோத்தி, ஏலரிசி, மநச்சிலை, தாளகம், இரஸாஞ்ஜநம், அரேணுகம், புஷ்பகாஸீஸம், கோபிசந்தனம், இந்துப்பு, த்ரிபலா இவற்றை மிகவும் மிருதுவான சூர்ணமாகச் செய்து, தேன் கூட்டிக் குழைத்து மேலே தடவிஞல் உபதம்ச விரணம் தீரும். (2) வறையோட்டில் த்ரிபலையை வறுத்துக் கருக்கி, அதை நெய் விட்டுக் குழைத்து லேபநம் செய்ய, அது நல்ல ரோபணமாக வேலை செய்யும்.—4, 5½.

உபதம்சசிகித்ஸையில் எச்சரிக்கை :—(1) முற்கூறியவை உபதம்சத்திற்குச் சாதாரண சிகித்ஸைகளாகும் ; ஒவ்வொரு தோஷ ஸம்பந்தமான உபதம்சத்திலும் சோபைகளுக்குச் செய்வது போன்ற பரிஹாரம் ஏற்றதாகும். (2) உபதம்ச விரணம் முழுவதும் பழுத்து அவயவத்திற் புரையோடுமாறு அஜாக்கிரதையா யிருந்துவிடக்கூடாது ; இவ்வவயவத்தின் ஸ்நாயுக்களும், ஸிரைகளும், மாம்ஸங்களும் பழுத்துச் சிதைவுற்ருல் லிங்கமே பெரும்பாலும் முற்றிலும் கெட்டுப்போய் விடும்.—6, 7.

லிங்கார்சஸ்ஸுக்குச் சிகித்ஸை :—லிங்கத்திலுண்டாகும் அர்சஸ்ஸுகளை அறுத்துச் சுட்டுவிட்டு, உபதம்சத்திற்கான மற்றச் சிகித்ஸைகளையும் செய்யலாம்.—$7\frac{1}{2}$.

ஸர்ஷபிகா அவமந்தங்களுக்குச் சிகித்ஸை :—(1) ஸர்ஷபிகா என்பதைச் சஸ்திரத்தினல் கீறி, நாவற்பட்டை முதலிய துவர்ப்பான சரக்குகளை நுண்ணிய சூர்ணமாகச் செய்து, அந்த விரணத்தின்மேல் தூவலாம். அதே சரக்குகளைச் சேர்த்து அப்யஞ்ஜந தைலம் பக்குவம் செய்து, தேய்த்துபயோகிக்க அது விரணரோபணமாகும். (2) இதே சிகித்ஸை அவமந்தத்திற்கும் ஏற்றதே; ஆனல் இரண்டிலும் இரக்தமோக்ஷணம் செய்ய வேண்டும்.—8, 9.

அலஜீ-கும்பிகா சிகித்ஸைகள் :—(1) கும்பிகா என்பதைப் பழுத்த பிறகு அறுத்து இரத்தத்தை வெளிப்படுத்தி, விரணத்தைச் சுத்தி செய்த பிறகு செம்மரம், த்ரிபலை, வெள்ளிலோத்தி இவற்றை அரைத்து லேபநம் செய்யலாம்; அச்சரக்குகளைச் சேர்த்துப் பக்குவம் செய்த தைலத்தையும் விரணரோபணமாக உபயோகிக்கலாம். (2) அலஜியிலும் இரக்தமோக்ஷணம் செய்து, அதன் பிறகு கும்பிகாவுக்குச் செய்யும் சிகித்ஸையையே செய்யலாம்.—10, $10\frac{1}{2}$.

உத்தமா சிகித்ஸை :—உத்தமா என்னும் பிடகையை படிசம் என்னும் சஸ்திரத்தினல் கீறி, தோஷத்தை வெளிப்படுத்தி, துவர்ப்பான சரக்குகளுடைய கல்கங்களையும், சூர்ணங்களையும் தேன் கூட்டி மேலே உபயோகிக்கலாம்.—$11\frac{1}{2}$.

புஷ்கராதிகளுக்குச் சிகித்ஸை :—(1) புஷ்கரிகா, (2) ஸம்வியூடபிடகா, (3) த்வக்பாகம், (4) ஸ்பர்சஹாநி இவைகளுக்குப் பித்த விஸர்ப்பத்திற்குக் கூறியுள்ள சிகித்ஸா முறை ஏற்றதாம்.—$12\frac{3}{4}$.

ம்ருதித சிகித்ஸை :—ம்ருதிதம் என்கிற விரணத்தின் மேல் பலாதைலத்தை[1] இளஞ்சூடாக ஊற்றலாம்; மதுரரஸமுள்ள பதார்த்தங்களை வேகவைத்து அதனல் ஒற்றடம் கொடுக்கலாம்.—13.

அஷ்டீலிகா சிகித்ஸை :—அஷ்டீலிகையில் முதலில் இரக்தமோக்ஷணம் செய்து, பிறகு சிலேஷ்மக் கிரந்திக்குச்[2] செய்வது போன்ற சிகித்ஸையைச் செய்யலாம்.—$13\frac{1}{2}$.

நிவ்ருத்த - அவபாடிகைகளின் சிகித்ஸை :— நிவ்ருத்தம் என்பதை நெய்யைத் தேய்த்து ஸ்வேதநம் செய்யவும்; பிறகு

---

1. பலாதைலம்—பிறகு வரும் 42, 43-ம் ஸ்லோகங்களின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

2. சிலேஷ்மக் கிரந்தி சிகித்ஸை 30-ம் அத்தியாயம் பார்க்க.

மிகவும் ஸ்நிக்த்தமான வஸ்திராதிகளால் மூன்று நாட்களாவது, ஐந்து நாட்களாவது பந்தநம் செய்து வைத்து, அப்பால் ஸால்வணஸ்வேதம் முதலியதால் மீண்டும் ஒற்றடம் செய்து வைத்து, பிறகு லிங்கத்தின் மணியை மெதுவாக அழுத்திக் கொண்டு, ஸ்நிக்த்தமான சர்மத்தை இழுத்துச் சரியான நிலைமைக்குக் கொண்டு வரவேண்டும்; மணி உட்புகுந்த பிறகு மீண்டும் உபநாஹஸ்வேதம் செய்துவைத்து, அடிக்கடியும் ஸ்நிக்த்தமான போஜனத்தை எடுத்துக் கொள்வது இதிற் சிறந்த குணம் செய்யும். (2) அவபாடிகா என்பதற்கும் இதே சிகித்ஸாமுறை தான் உபயோகமானது. 14—16½.

நிருத்தமணிசிகித்ஸை:—இரண்டு முனையிலும் த்வாரமுள்ள ஒரு குழாயை எடுத்து, அதில் அரக்கைப் பூசி, ஸ்நேஹத்தைத் தடவி, லிங்கத்தின் த்வாரத்தினுள் சிறிது செலுத்தி, வாதஹரதைலங்களை நாடியின் மூலமாக ஊற்றவும்; இவ்விதம் செய்கையில் மூன்று நாட்களுக்கு ஒரு முறை மேன்மேலும் பருமனுயுள்ள நாடிகளைச் செலுத்த வேண்டும்; இவ்விதம் செய்து லிங்கத்தின் த்வாரம் திறக்காது அடைபட்டிருந்தால் நிபுணனை சஸ்திர சிகித்ஸைகளைக்கொண்டு சஸ்திரத்தினுல் அதை அறுத்துவிட வேண்டும்; அப்படிச் செய்கையில் ஸேவநியைச் சஸ்திரம் தாக்காதபடி கவனிக்கவேண்டும்; பிறகு ஸத்யோவிரணங்களுக்கு ஏற்ற பரிஹாரமுறையைச் செய்ய வேண்டும். 17—19.

கிரதித சிகித்ஸை:—கிரதிதம் என்பதில் நாடீஸ்வேதம்[1] செய்வித்து, ஸ்நிக்த்தமாகவும் உஷ்ணமாகவும் உள்ள பந்தநங்களை அப்பால் பிரயோகிக்கவேண்டும்.—19½.

சதபோநக சிகித்ஸை:—சதபோநகத்தைச் சஸ்திரத்தினுல் கிறிவிட்டு, துவர்ப்பான சரக்குகளைச் சூர்ணம் செய்து, அச்சூர்ணத்தைத் தேனிற் குழைத்துப் பூசலாம்.—20.

இரக்தார்புதா சிகித்ஸை:—இரக்தார்புதம் என்பதற்கு இரக்தவித்ரதிக்குச் செய்வது போன்ற சிகித்ஸையைச் செய்ய வேண்டும்.—20½.

---

1. நாடீஸ்வேதம் — ஒரு பாண்டத்தில் வாதஹராதி குணமுள்ள சரக்குகளைப் போட்டு, அதில் போதியவளவு தண்ணீரோ வேறு திரவமோ ஊற்றிக் கொதிக்கச் செய்யவும்; கொதிக்கும்போது பாண்டத்தின் வாய் ஆவி வெளிச்செல்லாதபடி மூடிச் சீலை செய்யப்பட்டிருக்க வேண்டும்; பாண்டத்தின் பக்கவாட்டில், கழுத்துக்குக் கீழ்ப்புறமாய் ஒரு சிறிய த்வாரம் செய்யப்பட்டு, அதில் யானைத்துதிக்கையைப் போன்ற நாலைந்து முழம் நீளமுள்ள வளையக்கூடிய குழாயைப் பொருத்தி, அதன் மூலமாகப் பாண்டத்திலிருந்து ஆவி வரும்படியாகச் செய்து, அந்த ஆவியை அவசியமான அவயவத்தின்மீது பிரயோகிக்க வேண்டும். இந்த முறை நாடீஸ்வேதம் எனப்படும்.

லிங்கத்தைப் பற்றிய விரணங்களுக்குப் போது சிகித்ஸை :— ஆண் குறியைப்பற்றி யுண்டாகும் எல்லா விரணங்களிலும், அதற்கேற்றவாறு மற்ற விரணங்களுக்கு ஏற்ற பரிஹார முறைகளைச் செய்யலாம்—21.

## யோநி வியாதி சிகித்ஸைகள்.

வாதஜ யோநி ரோகங்களுக்குச் சிகித்ஸை :—(1) யோநிவியாபத் என்கிற யோநி ஸம்பந்தமான வியாதிகளில் பெரும்பாலும் வாதஹரமான சிகித்ஸை சிறந்தது ; அதிலும் வாததோஷத்தால் உண்டான யோநிரோகங்களில் ஸ்நேஹசிகித்ஸை, ஸ்வேத சிகித்ஸை, வஸ்தி சிகித்ஸை முதலியவை விசேஷமாய் உபயோகமானவை. ஏனெனில் பெண்பாலருக்கு யோநியானது பெரும்பாலும் வாததோஷத்தினாலன்றி விகாரமடைவதில்லை ; ஆகையால் அவ்வாதத்தை முதலிற் போக்கிவிட்டு, மற்றத் தோஷத்திற்குப் பிறகு சிகித்ஸை செய்யவேண்டும். (2) அவ்வித ஸ்த்ரீயை பலா தைலத்தையாவது, மிச்ரகஸ்நேஹத்தையாவது, ஸுகுமார க்ருதத்தையாவது பருகச் செய்யலாம். (3) ஸ்த்தாநம் விட்டு ஒழுங்கீனமாகப் புரண்டுள்ள யோநியை[1] ஸ்நேஹ- ஸ்வேத சிகித்ஸைகளைச் செய்து ஒழுங்காக அமைத்து விடலாம். (4) வக்கிரமாக மாறியுள்ளதைக் கையினால் உயர்த்தித் தள்ளிச் சரிப்படுத்தலாம். (5) மிகவும் அகன்றுபோனதைத் தைத்துச் சரிப்படுத்தலாம். (6) கீழே நழுவி வந்துள்ளதை அதன் ஸ்த்தாநத்திற்கு உள்ளே தள்ளி அமர்த்தலாம். (7) தலை கீழாகப் பிறழ்ந்துள்ளதை மீண்டும் நிமிர்த்தி வைக்கலாம் ; ஏனெனில் இடம் விட்டுப் புரண்டுள்ள யோநியானது ஸ்த்ரீகளுக்குச் சல்யம் போல் மிகத் தொந்தரவளிக்கும். (8) மிருதுவான வமநாதி சிகித்ஸைகளாலும் ஸ்த்ரீக்குச் சிகித்ஸை செய்ய வேண்டும். நன்றாக எல்லாப் புறங்களிலும் சுத்தியடைந்த பிறகுதான் வஸ்தி, அப்யங்கம், பரிஷேகம், லேபநம், பிசு முதலிய மற்றச் சிகித்ஸா கிரமங்களையும் செய்யலாம். 22—27.

காச்மர்யாதி க்ருதம் :—குமிழன், த்ரிபலை, திராக்ஷை, ஊசித்தகரை, மஞ்சள், மரமஞ்சள், சீந்தில், மருதோன்றி, தண்ணீர்விட்டான் கிழங்கு, முருக்கை, சாறணை, ஈஞ்சு இவற்றை வகைக்குக் கால் பலம் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் க்ருதம் காய்ச்சவும் ; இதைப் பருக யோநி ஸம்பந்தமான வாதவிகாரங்கள் தீரும் ; கர்ப்போற்பத்தி செய்வதிலும் இது சிறந்ததாகும்.—28, 29.

யோநி ரோகஹரமான சில முறைகள் :—(1) வசம்பு, சிற்றேலம், ஜீரகம், திப்பிலி, ஆடாதோடை, இந்துப்பு, ஓமம், யவக்ஷார

1. இந்தப் பிரகரணத்தில் யோநி என்கிற மொழி யோநியையும், முக்கியமாக கர்ப்பாசயத்தையும் குறிப்பதாகக் கருதவேண்டும்.

ரம், சித்திரமூலம், சர்க்கரை இவற்றைச் சூரணம் செய்து, அன்னம் ஊறிய நீர்விட்டு அரைத்து, அப்பால் போதிய நெய் சேர்த்து வறுத்தெடுத்துக் கொள்ளவும். இதை உண்டுவந்தால் யோநி சூலை, பக்க சூலை, இருதய ரோகம், குல்மம், அர்சஸ் இவை நிவ்ருத்தியாம். (2) ஆடாதோடை, கொடி மாதுளை வேர், நவ மல்லிகை வேர் இவற்றை உப்புச் சேர்த்த மத்யங்களோடாவது, திப்பிலி, சிற்றேலம் இவற்றின் சூர்ணத்துடனாவது உபயோகிக்க லாம். (3) அரத்தை, நெறிஞ்சில், ஆடாதோடை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பால் வலியைப் போக்கவல்லது. (4) சீந்தில், த்ரிபலா, நேபாளம் இவற்றின் கஷாயம் பரிஷேகம் என்கிற ஸேகத்திற்கு உபயோகமானது. (5) கிரந்திதகரம், கத்திரி, கோஷ்டம், இந்துப்பு, தேவதாரு இவற்றைச் சேர்த்துப் பக்கு வம் செய்த தைலத்தில் பிசுவர்த்தியைத் தோய்த்து, அதை யோநியில் அடக்கி வைத்திருந்தால், அதில் ஏற்படும் வலி நிவ்ருத்தியாகும். 30—34.

**பித்தஜ யோநி ரோகங்களுக்குச் சிகித்ஸை:**—பித்த தோஷத் தாலான யோநி ரோகங்களுக்குப் பரிஷேகங்களும், அப்யங்கங் களும், பிசுக்களும் சீதளமாகவும், பித்த ஹரமாகவும் பிரயோகிக் கப்பட வேண்டும்; ஸ்நேஹநம் செய்வதற்காக க்ருதங்களையும் உபயோகிக்க வேண்டும்.—35.

**சதாவரீ க்ருதம்:**— நானூறு பலம் தண்ணீர்விட்டாங் கிழங்கை இடித்துச் சாறு பிழிந்து, அதற்குச் சமமாகப் பால் கூட்டி, ஓர் ஆடகமளவு நெய்யை அதிற் சேர்த்துக் காய்ச்ச வும்; பிறகு ஜீவநீயச்சரக்குகள், தண்ணீர்விட்டாங்கிழங்கு, திராக்ஷை, பேரீச்சு, சாரப்பருப்பு இவை வகைக்குக் கால் பலம், அதிமதுரம் இரண்டு பலம் இவற்றைக் கல்கமாக இடித்துச் சேர்த் துப் பக்குவம் செய்யவும்; இது ஆறிய பிறகு திப்பிலி எட்டு பலம் பொடித்துப் போடவும்; எட்டு பலம் தேனும், பத்து பலம் சர்க்கரையும் கூட்டிக் கலக்கவும். இதைக் கால் பலம் அள வில் உட்கொண்டு வர, யோநி தோஷம், இரத்த தோஷம், சுக்ர தோஷம் இவை நிவ்ருத்தியாவதுடன், இதற்கு வ்ருஷ்யம், பும்ஸ வநம் என்னும் ஆண் பிள்ளையை உண்டுபண்ணும் குணம் ஆகிய வையும் உண்டு. மேலும் க்ஷத காஸம், க்ஷயம், இரக்த-பித்தம், காஸம், ச்வாஸரோகம், ஹலீமகம், காமாலை, வாத-ரக்தம், விஸர்ப்பம், ஹ்ருத் கிரஹம் என்கிற இருதய வேதனை, கழுத்துப் பிடிப்பு, அபஸ்மாரம், அர்திதம், அந்தராயாம-பஹிராயாமங்கள், உந்மாதம் ஆகியவைகளும் இதனால் தீரும். இவ்விதமாகவே ஜீவநீயச் சரக்குகள் முதலியவற்றால் பாலையும் க்ருதத்தையும் தனித்தனியே பக்குவம் செய்து உபயோகிக்க, அவை கர்ப்பத்தை உண்டுபண்ணவும், பித்த ஸம்பந்தமான ரோகங்களைப் பரிஹரிக்க வும் ஹிதமானவையாம். 36—41.

பலா தைலம் அல்லது பலா க்ருதம் :—இரண்டு திரோணம் சிற்றாமுட்டிக் கஷாயத்தில் ஓர் ஆடகம் தைலமாவது க்ருதமாவது சேர்த்து, அதில் ஸ்நேஹத்திற்கு நாலு மடங்கு பால் கூட்டி, திப்பிலி, வெண் மணித்தக்காளி, ஜீவந்தி, க்ஷீரகாகோலி, மல்லிகை, வீரா, ருத்தி, ஜீரகம், பாலைக் கீரைவேர், சிராவணி, காட்டுப் பயறு, காட்டு ஜீரகம், காட்டுளுந்து, சர்க்கரை இவற்றைக் கல்கமாகவும் சேர்த்துக் காய்ச்சி யெடுக்கவும்; இதைப் பாநம் செய்வதால் வாத-பித்த ரோகங்கள் திருவதுடன், இது ஸ்த்ரீயைக் கருத் தரிக்கவும் செய்யும்.—42, 43½.

ரக்தயோநி சிகித்ஸை :— இரக்தயோநி என்னும் கோளாறிற் கசியும் இரத்தத்தின் நிறங்களிலுள்ள பேதங்களை உற்று நோக்கி, அதில் எந்தெந்த தோஷம் ஸம்பந்தித்திருப்பதாகத் தெரிகிறதோ அததற்கேற்றவாறு இரத்தத்தை நிறுத்துவதற்கான ஔஷதத்தைப் பிரயோகிக்க வேண்டும்.—44½.

புஷ்யாநுக சூர்ணம் :—வட்டத்திருப்பி, நாவற்கொட்டை, மாங்கொட்டை, கல்லுருவி, இரஸாஞ்ஜநம், மாசக்காய், இலவம் பிசின், மஞ்ஜிஷ்டி, வெட்பாலைப் பட்டை, குங்குமப்பூ, பில்வம், அதிவிடயம், வெள்ளிலோத்தி, கோரைக் கிழங்கு, காவி, சுக்கு, இலுப்பைப்பூ, காட்டு மா, செஞ்சந்தனம், கடற்பாலை, பெருவாகை, வாலுழுவை, நன்னாரி, காட்டாத்திப்பூ, அதிமதுரம், மருதை இவற்றைப் புஷ்ய நக்ஷத்திரத்திற் கிரஹிக்க வேண்டும்; பிறகு மிருதுவாக இவற்றைச் சூர்ணம் செய்து, தேனிற் குழைத்து உட்கொண்டு, அநுபானமாக அரிசி கழுவிய நீரைப் பருக வேண்டும். இரக்தார்சஸ்ஸிலும், இரக்தாதிஸாரத்திலும், இரத்தப் பெருக்குள்ள மற்ற நோய்களிலும் இது உபயோகமுள்ளது; பாலர்களுக்குக் கிருமிகளால் காணும் எந்த தோஷங்களுண்டோ அவற்றையும் இது போக்கும்; மேலும் யோநி தோஷத்தையும், கறுப்பாகவும்-வெளுப்பாகவும்-சாம்பல் நிறமாக வும் வெளியாகும் ஆர்த்தவதோஷத்தையும் இது தீர்க்க வல்லது; ஆத்திரேயர் புகழ்ந்து கூறிய இதற்குப் 'புஷ்யாநுக சூர்ணம்' எனப் பெயர். 45—49½.

கபஜயோநி ரோகங்களுக்குச் சிகித்ஸை:—ஸ்லேஷ்ம தோஷத்தினால் யோநி தூஷிக்கப்பட்டிருந்தால், அதில் ரூக்ஷமாகவும் உஷ்ணமாகவும் உள்ள எல்லா ஔஷதமும் உபயோகமானது.-50.

தாதக்யாதி தைலம் :— காட்டாத்திப்பூ, நெல்லியிலை, ஸ்ரோதோஞ்ஜநம், அதிமதுரம், நெய்தல், நாவற் ஸுர்மா என்கிற கொட்டை, மாங்கொட்டை, அன்னபேதி, வெள்ளிலோத்தி, கடற்பாலை, செம்மரம், கோபி சந்தனம், மாதுளம் பட்டை, அத்திக்காய் இவற்றை வகைக்குக் கால் பலம் கல்கமாக இடித்துச் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் எண்ணெயும், அதற்கு இரு மடங்கு

வெள்ளாட்டு மூத்திரமும் பாலும் கூட்டிக் காய்ச்சவும்; இது அப்யங்கம் செய்யவும், வஸ்தி செய்யவும், பிசுவர்த்தியில் கூட்டிப் பிரயோகிக்கவும் உபயோகமானது. யோநியானது வீங்கியிருந்தாலும், புரண்டு மேலெழுந்திருந்தாலும், திமிதமா யிருந்தாலும், பிசுபிசுப்பாகக் கசிந்துகொண் டிருந்தாலும், விப்லுதமா யிருந்தாலும், உபப்லுதமா யிருந்தாலும், வெடிப்புள்ளதா யிருந்தாலும், நோவுள்ளதா யிருந்தாலும் இத் தைலம் அவற்றில் உபயோகிக்கத் தகுந்தது. 51—53½.

யோநிரோகங்களுக்குப் பொதுவான சில முறைகள் :—(1) வாற்கோதுமை அன்னம், (2) அபயாரிஷ்டம்,[1] (3) சீது என்கிற மது, (4) தைலங்கள் இவற்றையும், (5) திப்பிலி-அயப்பொடி-கடுக்காய் இவற்ருலான சூர்ணங்களைத் தேனுடன் குழைத்தும் யோநிரோகங்களில் உபயோகிக்கலாம். மேலும் (6) அன்னபேதி-த்ரிபலை-படிக்காரம்-மாங்கொட்டை-நாவற்கொட்டை-காட்டாத்திப்பூ இவற்றின் சூர்ணமும் தேனுடன் கலந்து உட்கொள்ளப்பட்டால் யோநியில் பிசுபிசுப்பான அழுக்குகளை விலக்கிச் சுத்தமாக்கும். (7) பலாசம்பட்டை, காட்டாத்திப்பூ, நாவற்பட்டை, மஞ்ஜிஷ்டி, இலவம்பிசின் இவற்றின் சூர்ணம் துர்நாற்றமும் பிசுபிசுப்பும் துர்நீர்க் கசிவும் உள்ள யோநிரோகத்தில் ஸ்தம்பநமாக[2] உபயோகிக்கக்கூடியது. (8) அவ்விதமே[3] ஆரக்வதாதி கணச் சரக்குகளின் கஷாயமும் பரிஷேகம் செய்வதற்கு உபயோகமானது. (9) திமிர்த்துத் தடித்திருக்கும் யோநிக்கும், கடினத்தன்மையடைந்த யோநிக்கும் மிருதுத்தன்மை யுண்டுபண்ணக்கூடிய சிகித்ஸை செய்யப்படவேண்டும்; அதற்கு வேஸவாரத்தையும், கிருஸராவையும், பாயஸத்தையும் அவ்வவயவத்திற் பிரயோகித்துத் தரிக்கச் செய்யவேண்டும். (10) யோநி துர்நாற்ற மடைந்திருந்தால் அதற்கு ஸர்வகந்தச்சரக்குகளாலான கஷாயமாவது, தைலமாவது, கல்கமாவது, சூர்ணமாவது பிரயோகிக்கப்படின் அவ்வித துர்க்கந்தாதிகள் நீங்கும். (11) சிலேஷ்ம ரோகங்களால் யோநி பீடிக்கப்படுகையில் பெரும்பாலும் கடுரஸமுள்ள வஸ்துக்களால் பக்குவம் செய்த கஷாயங்களாலும், கோமூத்திராதிகளாலும் உத்தரவஸ்தி முதலியவற்றைப் பிரயோகிப்பது அனுகூலம். (12) பித்ததோஷத்தாலுண்டான யோநிரோகத்தில் அதிமதுரமும் பாலும் கலந்த வஸ்தியாதிகளும், (13) வாததோஷத்தாலுண்டான யோநிரோகத்தில் தைலம் - புளிப்பான

1. அபயாரிஷ்டம் — சிகித்ஸா ஸ்தாநத்தில் அர்சஸ் சிகித்ஸை பார்க்க.

2. ஸ்தம்பநம் — இரத்தம் முதலியவற்றின் பெருக்கை நிறுத்துங் குணம்.

3. அவ்விதமே என்ருல் ஸ்தம்பநம் செய்யத்தக்க என்று பொருள்.

சாக்குகள் இவற்றுலான வஸ்தியாதிகளும் பிரயோகிக்கத் தகுந்தவையாம். (14) ஸந்நிபாததோஷத்தினுல் யோநி விகாரமடைந்தால் அதில் ஒவ்வொரு தனித்தோஷத்திற்கும் ஏற்ற ஸாதாரண சிகித்ஸையை ஒருமிக்கச் சேர்த்துச் செய்யவேண்டும். 54—60½.

குஹ்யரோகம் நீங்கியதால் ஏற்படும் விசேஷ பலன் :—இவ்வாறு முற்கூறிய சிகித்ஸைகளால் யோநி முதலியவை சுத்தமாய்விட்ட பிறகு, ஸ்த்ரீகளுடைய பிராக்ருத பீஜம்[1] என்கிற ஆர்த்தவதாது தோஷமற்றிருந்தால், புருடாது தோஷமற்ற பீஜதாதுவின் ஸம்பந்தமும் ஏற்பட்டால் அவர்கள் கருத்தரிப்பார்கள்.—61½.

புருடனுடைய சுக்ர சுத்தி :—புருடனுடைய சுக்ரம் என்கிற இந்த்ரியத்தையும், முதலில் அவனுக்கும் பஞ்சகர்மங்களைக் கொண்டு சுத்தி செய்வித்த பிறகு பரிசோதிக்க வேண்டும்; அதில் காணப்படும் நிறங்களைக் கொண்டு எந்த தோஷங்களால் அது விகாரமடைந்திருக்கின்றதென்பதைத் தெரிந்துகொண்டு[2] அந்த தோஷத்திற்குப் பரிஹாரமாயுள்ள ஔஷதாதிகளால் சிகித்ஸித்து அதைச் சுத்திசெய்ய வேண்டும்.—62½.

பலக்ருதம் :—மஞ்ஜிஷ்டி, கோஷ்டம், கிரந்திதகரம், த்ரிபலை, சர்க்கரை, வசம்பு, மஞ்சள், மரமஞ்சள், அதிமதுரம், மேதா, ஜீரகம், கடுகரோஹிணி, க்ஷீரகாகோலி, காயம், காகோலி, அமுக்கருங்கிழங்கு, தண்ணீர்விட்டாங்கிழங்கு இவற்றை வகைக்குக் கால் பலம் எடுத்துக் கல்கமாகச் செய்து, ஒரு பிரஸ்த்தம் நெய் கூட்டி, அதற்கு நாலு மடங்கு பால் சேர்த்துப் பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் எல்லாவிதமான யோநிதோஷங்களிலும், சுக்ரதோஷங்களிலும் மிகச் சிறந்தது; இது ஆயுஷ்யம், புஷ்டிகரம், மேத்யம், பும்ஸவநம்[3] என்கிற குணங்களில் மிகவும் பிரசஸ்தமானது. 'பலஸர்ப்பிஸ்' என்று பிரஸித்தமான இந்த க்ருதம் ருதுஸமயத்தில் பருகப்பட்டால் கர்ப்பம் தரிக்கச் செய்யும். கர்ப்பத்தில் சிசு இறந்துபோனுல் அக்கோளாற்றையும் தீர்க்கும்; கர்ப்பிணிகளுக்கு இது நல்ல பலம் தரும்; பாலர்களுக்கும் தேஹத்தை வளரச் செய்யவும், பலத்தை விருத்தி செய்யவும் வெகு உபயோகமானது. 63—67.

---

1. ஸ்த்ரீகளின் பிராக்ருத பீஜம் — ருதுகாலங்களில் கருப்பையில் வந்து சேரும் ஸத்ரீகளின் பீஜதாது.

2. சுக்ரதோஷங்களின் விவரங்களைச் சாரீர ஸ்த்தானம் 1·ம் அத்தியாயத்திற் பார்க்க.

3. பும்ஸவநம் — கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கு ஆண்மையை அதிகரிக்கச் செய்யுங் குணம்.

## முப்பத்தைந்தாம் அத்தியாயம்.

## விஷப் பிரதிஷேதம்.

இனி விஷப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துரைக்கப்படும்:—

விஷத்தின் புராண வரலாறு:—பூர்வம் தேவர்களும் அஸுரர்களும் சேர்ந்து அமுதத்திற்காகக் கடலைக் கடையும் போது, அமுதம் உற்பத்தியாவதற்கு முன்பு கோரரூபமுள்ள புருடன் ஒருவன் கிளம்பினான்; அவன் தேஜோமயமாகவும், நான்கு கோரப் பற்களுடையவனாகவும், பொன்னிறமான உரோமங்களுள்ளவனாகவும், நெருப்பு போன்ற நேத்திரமுடையவனாகவும் காணப்பட்டான்; உலகம் அவனைக் கண்டு வியந்து பயந்து விட்டது; ஆகவே அவனுக்கு விஷம்[2] எனப் பெயர் வழங்கப் பட்டது; அவனைப் பிரம்மதேவன் கண்டு ஹூங்காரம் செய்து விரட்டியதும், அவன் தனது மாய ரூபத்தை விட்டு விட்டு, ஸ்தாவரங்களிலும் ஜங்கமங்களிலும் தன் விஷமத் தன்மையைப் பிரித்துச் சேர்த்துவிட்டு மறைந்தான். 1—3.

விஷம் இரண்டு விதம்:—(1) ஸ்த்தாவரவிஷம் என்பதில் அமித வீர்யமுள்ளது கிழங்குகளில் அடங்கியது. அவை காலகூடம், இந்திராயுதம், வத்ஸநாபம், ச்ருங்ககம், ஹாலாஹலம் முதலியவை. (2) மிகக் கடுமையான ஜங்கமவிஷம் என்பது ஸர்ப்பங்கள், சிலந்திகள் முதலிய பிராணிகளின் கோரப்பற்களுக்கு அடியில் அடங்கி யிருக்கிறது. (1) இந்த ஸ்த்தாவர விஷமும் ஜங்கமவிஷமும் ஒரு மிக்க அக்ருத்ரிமவிஷம் என்றும், (2) பலவேறு ஔஷதங்களைச் சேர்ப்பதால் செயற்கை முறையில் உண்டுபண்ணப்படுவது க்ருத்ரிமவிஷம் அல்லது கரவிஷம் என்றும் வழங்கப்படும். சரக்குகள் சில ஒன்றோடொன்று சேர்க்கை வசத்தால் இவ்விதம் விஷந்தன்மையைப் பெற்று, உடனேயாவது, சில காலம் கழித்தாவது, வெகு நீடித்த காலம் சென்றாவது உயிரை மாய்க்கும்; அல்லது சோகை, பாண்டு, மஹோதரம், அர்சஸ், உந்மாதம் முதலிய வியாதிகளையாவது உண்டு பண்ணும். 4—6.

விஷத்தின் பத்துப் பொது குணங்கள்:—(1) தீக்ஷ்ணம், உஷ்ணம், ரூக்ஷம், விசதம், வியவாயி, ஆசுகாரி, லகு, விகாஸி, ஸூக்ஷ்மம், அபாகி என்பவை விஷத்தின் பொதுவான குணங்

1. பலவேறு விஷங்களைப்பற்றியும், அவற்றால் ஏற்படும் தீங்குகளைப்பற்றியும், அவற்றிற்கு ஏற்ற பரிஹாரமுறைகளைப் பற்றியும் உள்ள விஷயங்களை விவரிக்கும் அத்தியாயம்.

2. விஷம்—இது விஷாதம் என்னும் மொழியின் திரிபு. விஷாதம் — என்றால் துன்பம் விளைவிக்கும் கொடியகுணம் உள்ளதென்கிற பொருளில் 'விஷம்' என்னும் சொல் வழங்கப்படுகிறது.

களாம்; அது அவ்யக்தரஸமுள்ளது. (2) தீக்ஷ்ணம் முதலிய குணங்களுடன் கூடிய இவ்விஷம் வாத-பித்தங்களையே பிரதானமாக விருத்தி செய்யக் கூடியதாயிருப்பதால், ஓஜோதாதுவுக்குத் தன்மையில் நேர் எதிரிடையானது; ஆகவே மனிதரின் உயிரை உடனே மாய்க்கக் கூடியது[1].—7, 8½.

விஷம் தேஹத்தை அழிக்கும் வகை:—விஷமானது தேஹத்தினுட் சென்று முதன் முதல் இரத்தத்துக்குக் கேடு விளைவிக்கும்; அதற்குப் பிறகு வாத-பித்த-கபங்களையும், அவற்றிற்காதாரமான ஆசயங்களையும் ஏக காலத்தில் துஷிப்பிக்கின்றது; அதன் பிறகு இருதயத்தைப் போய் விகாரப்படுத்தி, அப்பால் உடலின் அழிவுக்குக் காரணமாகிறது.—9, 10.

ஸ்த்தாவரவிஷத்தின் ஏழு வேகங்களும் குறிகளும்:—(1) ஸ்த்தாவர விஷம் உபயோகிக்கப்பட்டால் அதன் முதல் வேகத்தில் நாக்குக் கறுப்பாகவும், தடித்தும்போம்; மூர்ச்சையுண்டாம்; நடுக்கம் அல்லது பயமும் சோர்வும் காணும்; வாந்தியேற்படும். (2) இரண்டாம் வேகத்தில் நடுக்கம், வியர்வை, அழற்சி, தொண்டையில் வேதனை இவைகளுண்டாவதுடன், அவ்விஷம் ஆமாசயத்தை அடைந்து, இருதயத்திலும் வேதனை யுண்டுபண்ணும். (3) மூன்றும் வேகத்தில் தவடையின் உட்புறம் உலர்ந்துவிடும்; ஆமாசயத்தில் அதிக வலியுண்டாம்; கண்கள் பலக்குறைவாகவும், பசுமையாகவும், வீக்கமுள்ளதாகவும் ஆய்விடும்; இவ்வேகத்திலேயே பக்வாசயமடைந்து குத்தல், விக்கல், இருமல், குடலிரைத்தல் ஆகிய கோளாறுகளும் தோன்றும். (4) நான்காம் வேகத்தில் தலையில் பாரம் அதிகரிக்கும். (5) ஐந்தாம் வேகத்தில் வாயில் சிலேஷ்மம் கசியும்; தேஹம் சருநிறங் கொள்ளும்; பூட்டுகள் தோறும் கடுப்பு வலியுண்டாம்; எல்லாத் தோஷங்களும் பிரகோபிக்கும்; பக்வாசயத்தில் வேதனையும் ஏற்படும். (6) ஆறும் வேகத்தில் ஞாபகம் இழக்கப்பட்டு, மிகவும் அதிகமாக அதிஸாரமுண்டாம். (7) ஏழாம் வேகத்தில் தோள்களும், பிருஷ்டபாகமும், இடுப்பும் நிற்கமாட்டாமல் ஒடிந்து விழுந்து மரணமும் ஏற்படும். 11—16.

விஷவேகங்கள் ஏற்படுகையில் சிகித்ஸைகள்:—(1) முதல் விஷவேகத்தில் முதலில் வமநம் செய்விக்கவேண்டும்; பிறகு குளிர்ந்த ஜலத்தினால் பிணியாளியை நனைத்து, உடனே விஷஹரமான அகதௌஷதத்தை[2] நெய்யிலும் தேனிலும் கலந்து

---

1. தீக்ஷ்ணம், விசதம், வியவாயி முதலியவற்றின் விவரங்களையும், ஓஜஸ்ஸின் குணவிசேஷங்களையும் பற்றி முதற்பாகம் 424-ம் பக்கம் பார்க்க.

2. அகதௌஷதம்—பிறகு கூறப்படும் விஷஹரமான ஔஷத முறைகள். (விஷஹர ஔஷதம் அகதம் எனப்படும்.)

உட்கொள்ளக் கொடுக்கவேண்டும். (2) இரண்டாம் வேகத்தில் முன்போலவே வமநம் செய்வித்து, விரேசநமும் செய்வித்து அப்பால் அகதௌஷதம் என்கிற விஷஹர ஔஷதத்தை உட்கொள்ளக் கொடுக்கவேண்டும். (3) மூன்றும் வேகத்தில் அகதௌஷதம் உட்கொள்ளக் கொடுத்து, நஸ்யப் பிரயோகமும், அஞ்ஜமிடுவதும் ஹிதமாம். (4) நான்காம் வேகத்தில் அகதௌஷதத்தை ஸ்நேஹத்துடன் கூட்டி, அடிக்கடியும் கொடுக்கவேண்டும். (5) ஐந்தாம் வேகத்தில் அதிமதுரக் கஷாயத்துடனும், தேனுடனும் அகதம் கூட்டிக் கொடுக்கவேண்டும். (6) ஆறும் வேகத்தில் அதிஸாரத்திற்குச் செய்வது போன்ற சிகித்ஸையைச் செய்யவேண்டும். (7) ஏழாம் வேகத்தில் அவபீடகம் என்னும் க்ருதபான முறை [1] உபயோகிப்பதும், சிரஸ்ஸில் காகபதம் செய்வதும், இரத்தத்துடன் சதையை அறுத்தெடுப்பதும் நலம். 17—20.

அகத யவாகூ :— (1) பேய்ப்பீர்க்கு, ஓமம், வட்டத்திருப்பி, சூரியகாந்தி, சீந்தில், கடுக்காய், நறுவிலி, காட்டுவாகை, நாயுருவி, மஞ்சள், மரமஞ்சள், ஆலம்விழுது, சாறடை, வெள்ளைச் சாறடை, த்ரிகடு, கத்திரி, கண்டங்கத்திரி, நன்னாரி, சீமைநன்னாரி, சிற்றுமுட்டி இவற்றின் கஷாயத்தில் யவாகூ என்கிற வாற்கோதுமைக் கஞ்சியைக் காய்ச்சி, நெய்யும் தேனும் கூட்டி, முதலிற் செய்யவேண்டிய வமநாதி சிகித்ஸைகளைச் செய்த பிறகு, ஒரு வேகத்திற்கும் மற்றொரு வேகத்திற்கும் இடையில் உட்கொள்ளக் கொடுக்கவேண்டும்; இந்த யவாகூ எல்லா விஷங்களையும் பரிஹரிக்கவல்லது. (2) இவ்விதமே இலுப்பைப்பூ, அதிமதுரம், தாமரைப் பூந்தாது, சந்தனம் இவற்றின் கஷாயத்திலும் யவாகூ பக்குவம் செய்து கொடுக்கலாம். 21—23.

அகதோத்தமமும் சந்திரோதயசாந்தியும் :—ஸௌவீராஞ்ஜநம், கிரந்திதகரம், கோஷ்டம், அரிதாளம், மநச்சிலை, ஞாழல், த்ரிகடு, தொட்டாற்சிணுங்கி, நாகப்பூ, நாககேஸரம், அரேணுகம், அதிமதுரம், ஜடாமாம்ஸி, கோரோசனை, மணித்தக்காளி, சந்தனம், சாம்பிராணி, சதகுப்பி, குங்குமப்பூ, சிற்றுமுட்டி, பச்சிலை, தாளிசப்பத்திரி, பூர்ஜம், வெட்டிவேர், மஞ்சள், மரமஞ்சள் இவற்றை உபவாஸத்துடனுள்ள ஒரு கன்னிகை வெள்ளையுடை யுடுத்துக்கொண்டு, புஷ்யநக்ஷத்திரத்தன்று, அந்தணரை ஆராதித்துவிட்டுத் தேனிற் கலக்கி வைக்கவும். வைத்தியனும் சுத்தமாகவும் நியமத்துடன் இருந்து கொண்டும் பின்வரும் மந்திரத்தை ஓதவேணும் :— "நம:

1. அவபீடகம்—ஸூத்திர ஸ்த்தாநத்தில் ரோகாநுத்பாதநீயாத்தியாயத்திற் குறிக்கப்படும் க்ருதபாநமுறை. (முதற்பாகம் 34-ம் பக்கம் பார்க்க.)

புருஷஸிஹ்மாய நமோ நாராயணாய ச. யதாஹம் நாபிஜாநாதி ரணே க்ருஷ்ண பராஜயம். ஏதேந ஸத்யவாக்யேந அகதோமே ப்ரஸித்யது. நமோ வைடூர்யமாதே ஹுலுஹுலு ரக்ஷ மாம் ஸர்வ விஷேப்ய:. கௌரி காந்தாரி சாண்டாலி மாதங்கி ஸ்வாஹா." என்கிற மந்திரத்தை வைத்தியன் ஓதியவாறிருக்க, அக்கன்னிகை அவ்வௌஷதத்தைக் கலந்து வரவேண்டும். பிறகு பின்வரும் இரண்டாம் மந்திரமும் ஓதப்படவேண்டும். "ஓம் ஹரிமாயி ஸ்வாஹா. அசேஷவிஷவேதாளக்ரஹகார்மணபாப்மஸு. மாரக வ்யாதி துர்ப்பிக்ஷ யுத்தாசநிபயேஷு ச. பாந-நஸ்யாஞ்ஜந லேப மணிபந்தாதியோஜித:. ஏஷ சந்த்ரோதயோ நாம சாந்தி: ஸ்வஸ்த்யயநம் பரம்."[1] 24—32.

தூஷீவிஷமும் அதனுலுண்டாகும் துர்க்குணங்களும் :—(1) ஒரு விஷமானது மிகப் பழையதாகப்போய்விட்டாலும், விஷஹரமான ஓஷதிகளால் அதன் வீர்யம் அடிபட்டுப்போனாலும், காட்டுத்தீ - வாயு - வெயில் இவற்றால் வறண்டு விட்டாலும், இயற்கையிலேயே அதற்குள்ள பலமான குணங்கள் அற்றுப் போயிருந்தாலும் அது 'தூஷீவிஷம்' என்று வழங்கப்படுகிறது. (2) மிக்க வீர்யத்திற் குன்றிப்போவதால் இதன் விஷத் தன்மை உணரப்படுவதில்லை ; இது தேஹத்திற் பற்றிய பிறகு, சிலேஷ்மதோஷத்தினுல் ஆவரணம் செய்யப்பட்டுப்போவதால் அநேக வருஷங்களளவும் தேஹத்தினுள் ஊறிப்போய், அதன் குணம் தொடரும் ; இவ்விஷத்தினுல் பிடிக்கப்படுபவனுடைய மலம் பேதியைப்போல் உடைந்தும் நிறத்தில் மாறுபட்டும் வெளியாகும் ; இரத்தம் விகாரமடைந்து அதைப்பற்றிய நோய் களும் காணும் ; நாவறட்சியாலும் அரோசகத்தாலும் அவன் வருந்தநேரிடும் ; பிறகு மூர்ச்சையுண்டாம் ; வாந்தியுண்டாம் ; தழுதழுத்துப் பேசுவான் ; பிரமிப்பான் ; தூஷீவிஷம் மூதலி

1. "நம: புருஷஸிஹ்மாய" முதலிய முதல் மந்திரமும் "ஓம் ஹரி மாயி" முதலிய இரண்டாம் மந்திரமும் அப்படியே உச்சரிக்கப்பட வேண்டியவைகளாகையால், அவற்றிற்கு மொழிபெயர்ப்பு எழுதப்பட வில்லை. இரண்டாம் மந்திரத்தின் கடைசியிலுள்ள இரண்டொரு ச்லோகங்களுக்கு மாத்திரம் பொருள் பின்வருமாறு : "அகதோத்தமம் என்கிற முற்கூறிய அகதௌஷதம் மாரகம் என்கிற மஹாமாரி முதலிய பெருவாரி வியாதிகளிலும், தேசத்திற் பஞ்சம் ஸம்பவிக்கையிலும், போர் நிகழ்ச்சிகளிலும், இடி முதலிய ஸங்கடங்கள் நேரிடுகையிலும் பாநம்-நஸ்யம்-அஞ்ஜநம்-லேபநம்-மணி-பந்தநங்கள் இடுவது முதலிய பிரயோகங்களால் நன்மை செய்யக்கூடியது. இந்த அகௌஷதம் முற் கூறிய சாந்திமந்திரத்துடன் உபயோகிக்கப்பட வேண்டும். இது மிகச் சிறந்த பலன் தரக்கூடிய சந்திரோதயம் என்னும் சாந்திமுறையாம்."

யதின் ஸம்பந்தத்தைப் பெற்ற[1] உதாரோகலக்ஷணங்களும் இப் பிணியாளியினிடம் தோன்றலாம். (3) இந்த விஷம் ஆமாசயத்தில் தங்கியிருந்தால் ரோகி கப-வாத தோஷங்களாலான ரோகங்களுள்ளவனுகவும், பக்வாசயத்தில் தங்கியிருந்தால் வாத - பித்த தோஷங்களின் ஸம்பந்தமான ரோகங்களுள்ளவனுகவும் காணப் படுவான். (4) அம்மனிதன் உடல் சோர்ந்து, உரோமங்களுதிர்ந்தவனுய், இறகொழிந்த பறவையைப்போல் பரிதாபகரமான நிலைமையைப் பெறுவான். (5) அல்லது அவ்விஷம் இரஸாதி தாதுக்களில் தங்கினுல் தாதுக்களின் தோஷங்களால் காண்கிற விசித்திரமான கோளாறுகள் தோன்றும். (6) விஷமானது கீழ்க்காற்று, அஜீர்ணம், குளிர், மேகம், பகற்பொழுதில் தூங்குதல், அஹிதமான உணவுகளைப் புஜித்தல் ஆகிய காரணங்களால் கெட்டுப்போய் தாதுக்களையும் தூஷிக்கச் செய்வதால் இது 'தூஷீவிஷம்' எனக் கருதப்படுகிறது. 33—37.

தூஷீ விஷ சிகித்ஸை :—தூஷீ விஷத்தினுல் பீடிக்கப் படுபவனுக்கு வமந-விரேசநங்களால் சோதநம் செய்வித்து, நன்கு ஸ்வேதநமும் செய்வித்து, அடியிற் கூறப்படும் 'தூஷீ விஷாரி' என்கிற அகதௌஷதத்தைத் தேனிற் குழைத்துக் கொடுக்க வேண்டும்.—38.

தூஷீ விஷாரி :—திப்பிலி, தமநகம், ஜடாமாம்ஸி, வெள்ளிலோத்தி, ஏலரிசி, பெருவாகை, கிரந்தி தகரம், கோஷ்டம், அதிமதுரம், சந்தனம், காவி இவற்றைச் சூர்ணம் செய்யவும். 'தூஷீ விஷாரி' என்று இம் முறைக்குப் பெயர்; ஆனுல் இது இதர விஷ தோஷங்களிலும் உபயோகிக்கக் கூடியதே.—39, 39½.

விஷம் தீட்டிய கருவியால் குத்தியதன் லக்ஷணங்களும் சிகித்ஸையும் :—(1) விஷம் திட்டிய ஆயுதத்தால் குத்தப்பட்டால், அம் மனிதன் அடிக்கடியும் தவிப்பான்; கருநிறம் பெறுவான்; எளிதில் துன்பத்திற்குள்ளாவான்; அவனது தேஹம் பூச்சிப் புழுக்களால் மொய்க்கப் பட்டதுபோல் அதிக நமைச்சலையும் அழற்சியையும் அடையும்; இடுப்பு, பிருஷ்டபாகம், சிரஸ், தோள், பூட்டுகள் இவை வேதனை யுறும்; கறுத்து துஷ்டமான இரத்தம் பெருகும்; நாவறட்சியும், மூர்ச்சையும், ஜ்வரமும் உண்டாகும்; இதனுல் கண் கலங்கிப் போய், வாந்தி யுண்டாய், ச்வாஸ-காஸங்களும் வெகு சீக்கிரத்தில் ஏற்படும்; அடியுண்ட விடத்தில் விரணமானது ஓரங்களில் ஒருவாறு சிவந்தும், பசுமை நிறமடைந்து மிருக்கும்; அதன் மத்திய பாகம் கருநிறமாகும்; வலியும் கடுமையா யிருக்கும்; உடனே மாம்ஸம் கறுப்பாக மாறி, அழற்சியையும் சமைக்கப்படுவதுபோன்ற வேதனையை

1. தூஷீவிஷஸம்பந்தம் பெற்றது ஸந்நிபாதோதரம். (நிதாந ஸ்தாநத்தில் உதரநிதாநம் பார்க்க.)

யும் உண்டுபண்ணும்; அச்சதை பிசுபிசுப்பான துர்நீர்க் கசிவுடன் அடிக்கடியும் சிதைந்து விடும். (2) இவ்விதமான தாக்குதல்கள் மர்மங்களிற் படாம லிருந்தால் உடனே 'ஹ்ருதயாவரணம்' என்னும் சிகித்ஸையைச் செய்ய வேண்டும்.[1] பிறகு சல்யமாயுள்ள அவ்விஷக்கருவியை இழுத்து வெளிப்படுத்தி, நெருப்பிற் காய்ச்சிய உலோஹத்தினல் அந்த விரணத்தைச் சுட்டுவிடுவது மேலாகும். அல்லது நீரடிமுத்து, வெள்வசம்பு, ஆட்லாங் கொடிப்பட்டை, செவ்வெள்ளிக்கொடி, காட்டுவாகை, முட்பாளை இவற்றை எரித்தெடுக்கப்படும் க்ஷாரத்தினல் பிரதிஸாரணம் செய்து, பெருவாகை, அதிவிடயம், கண்டங்கத்திரிவேர் இவற்றை அரைத்து மேலே லேபநம் செய்யவேண்டும். பூச்சிக்கடிகளுக்கு ஏற்ற சிகித்ஸையையும்[2] அந்தந்த நிலைமைகளுக்கேற்றவாறு இப்பிணியாளிக்குச் செய்யலாம். இதனல் ஏற்படும் விரணத்தில் மாம்ஸம் சீழ்க்கொண்டு விகாரமடைந்தால், அதில் பித்த விஸர்ப்பத்திற்குச் செய்வதுபோன்ற சிகித்ஸையைச்[3] செய்யலாம். 40—47½.

**கரவிஷம்:**—(1) ஸ்த்ரீகள் தம் கணவனுக்கு அவனை வசப்படுத்துவதற்காகவும், பிரபுவுக்கு அருகிலிருந்து உபசரிப்பவர்கள் அப் பிரபுக்களின் பகைவர்களால் தூண்டப்பட்டு அவனுயிரைப் போக்குவதற்காகவும் உணவுகளுடன் கரம் என்னும் விஷத்தைக் கூட்டிக் கொடுத்துவிடுவதுண்டு. (2) அநேகவகையான பிராணிகளுடைய மலங்கள், ஒன்றோடொன்று சேருவதால் விஷகுண

---

1. ஹ்ருதயாவரணம்—இருதயத்தில் விஷம் பரவாமலும் அதற்குக் கெடுதி யேற்படாமலும் இருப்பதற்கேற்றக் க்ருதபாந முறை முதலியவை இப் பரிபாஷையால் குறிக்கப்படுகின்றன. ஆலம்பாயநர் என்பவர் இவ்விஷயமாய்க் கூறுவதாவது:—"சரீரமெங்கும் பரவியுள்ள விரைகள் என்கிற எல்லா இரத்தக் குழாய்களும் இருதயத்தை நோக்கி ஓடுகின்றன. இக் குழாய்களின் மூலமாக இரத்தத்துடன் விஷமானது இருதயத்திற் சென்று அதைத் தாக்காதபடி நிர்வாபணௌஷதமாக உபயோகமாகக் கூடிய சிறந்த பிராணதாரண மருந்து க்ருதமே. அதை விஷப் பற்றுகளில் அகதௌஷதம் கூட்டி யுட்கொள்வது அவசியம். அவ்வித க்ருதபாநம் 'ஹ்ருதயாவரணம்' எனப்படும். அவ்விதமே அகதௌஷதங்களுடன் போஜனபதார்த்தங்களையும் தின்பண்டங்களையுங் கூடக் கூட்டி யுட்கொள்வதும் ஹ்ருதயாவரணமாம்."

2. "கீடதஷ்ட சிகித்ஸாஞ் ச" (பூச்சிக்கடிகளுக்கு ஏற்ற சிகித்ஸையையும்) என்கிற அஷ்டாங்க ஹ்ருதயபாடம் அச்சுப் பிழையா யிருக்கலாம் என்று தோன்றுகிறது. வேறு சில நூல்களிலும், அஷ்டாங்க ஸங்கிரஹத்திலும் உள்ள "பீத-தஷ்ட சிகித்ஸாஞ் ச" (விஷபாநம் செய்தவனுக்கும், விஷக்கடி ஏற்பட்டவனுக்கும் ஏற்ற சிகித்ஸையையும்) என்கிற பாடம் நன்று.

3. சிகித்ஸா ஸ்த்தாநம் 18-ம் அத்தியாயம் பார்க்க.

பும், கார்ப்பும், கசப்புமான உணவுகளாலும் தணியச் செய்ய வேண்டும். (3) பித்த ஸம்பந்தமான விஷத்தை மிருது விரேசநங்களாலும், மிகக் குளிர்ச்சியான பரிஷேகம்-பிரதேஹம் என்கிற சிகித்ஸா முறைகளாலும், துவர்ப்பும்·கைப்பும்·மதுரமுமான நெய் கலந்த உணவுகளாலும் பரிஹரிக்க வேண்டும். (4) வாத ஸம்பந்தமான விஷத்தை இனிப்பும் - ஸ்நிக்த்தமும் - அம்லரஸமும் - இலவணரஸமும் உள்ள பதார்த்தங்கள் கூட்டிய போஜனங்களாலே தேஹபோஷணையைச் செய்துகொள்ளவேண்டும். (5) நெய் கூட்டாமல் விரேசநம் உபயோகிப்பதிற் பிரயோஜநமில்லை; அவ்விதமேதான் லேபநமும், உணவுகளும், உட்கொள்ளும் ஔஷதமும் நெய் கலக்காமல் உபயோகிக்கத் தகுந்தவையல்ல. 65—68½.

உத்தமமான விஷ ஹரௌஷதம் :—எல்லா விஷங்களிலும், எல்லா நிலைமைகளிலும் க்ருதத்திற்கு ஒப்பான வேறு ஔஷதம் ஏதும் கிடையாது; அதிலும் வாத தோஷம் பிரபலமா யிருக்கையில் அது மிகச் சிறந்தது.—69½.

விஷப் பற்றில் ஸாத்யாஸாத்ய நிலைமைகள் :—(1) விஷப் சிலேஷ்மாசயத்தைப்பற்றி யிருக்கையில் அதை எளிதிற் பரிஹரிக்கலாம். (2) அது பித்தாசயத்தைப் பற்றி யிருந்தால் பெரு முயற்சி செய்து அதற்குப் பரிஹாரம் செய்ய நேரிடும். (3) அதுவே வாதாசயத்தைப் பற்றிவிட்டால் பெரும்பாலும் கஷ்ட ஸாத்யமாகவாவது அஸாத்யமாகவாவது ஆய்விடும்.—70½.

---

## முப்பத்தாறும் அத்தியாயம்.

## ஸர்ப்பவிஷப் பிரதிஷேதம்.

இனி ஸர்ப்ப விஷப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துக் கூறப்படும் :—

ஸர்ப்பங்கள் பொதுவாக மூன்று விதம் :—தர்வீகரங்கள் என்றும், மண்டலிகள் என்றும், ராஜிமான்கள் என்றும் பாம்புகள் சுருக்கமாக மூன்று வகைப்படும் : அவை உற்பத்தியாகும் இனங்களின் வேறுபாடுகளை அனுஸரித்து இன்னும் விஸ்தாரமாக அவற்றில் அநேக பேதங்கள் உண்டு; அவற்றைப்பற்றி விஸ்தாரமாகக் கூறுவதிற் பயனில்லையாகையால் இங்கு அவற்றை விவரித் துரைக்கவில்லை.—1, 1½.

---

1. பலவேறு பாம்பு ஜாதிகளின் விஷப் பற்றுலான கோளாறுகளையும், அவற்றிற்குப் பரிஹார முறைகளையும் விவரிக்கும் அத்தியாயம். ஸர்ப்பம் என்பது பாம்புகளின் பொதுப் பெயர்.

**ஸர்ப்ப விஷங்களின் போதக் குணங்களும் பிரகோப காலங்களும் :**—(1) தர்வீகர ஸர்ப்பங்களின் விஷம் மிக்க ரூக்ஷ குணமும் கடுரஸமும் உடையது; வாதத்தைப் பிரகோபிக்கச் செய்யும். (2) மண்டலி ஸர்ப்பங்களின் விஷம் உஷ்ண வீர்யத்திலும், அம்ல ரஸத்திலும் விசேஷித்தது; பித்தத்தைப் பிரகோபிக்கச் செய்யும். (3) ராஜிமந்தங்கள் என்னும் ஸர்ப்பங்களின் விஷம் சீத வீர்யத்திலும் மதுரரஸத்திலும் விசேஷித்தது; சிலேஷ்ம தோஷத்தைப் பிரகோபிக்கச் செய்யும். (4) தர்வீகரங்கள், மண்டலிகள், ராஜீமந்தங்கள் என்கிற இச் சர்ப்பங்கள் முறையே இளம் பருவத்திலும், மத்திய வயதிலும், முதுமையிலும் அவனதன் விஷத்தின் கொடுமையை மேன்மேலும் அதிகரிப்பிக்கும்; மேலும் அவை மாரி காலத்திலும், குளிர் காலத்திலும், கோடை காலத்திலும் முறையே வலுப்பட்டுப் பிரகோப மடையும். (5) விஷஜாதிகளாயுள்ள கலப்பு ஜாதியான ஸர்ப்பங்களின் விஷங்கள் ருது ஸந்திகளில் பிரகோபமடையும்.—2, 3½.

**தர்வீகராதி ஸர்ப்பங்கள் :**—(1) சிரஸில் சக்கரம், கலப்பை, குடை, ஸ்வஸ்திகம், அங்குசம் என்கிற மாவட்டிக் குறிகளைப் பெற்று, படமுள்ளவைகளாய் மிகத் துரிதமாகச் செல்லுந் தன்மையுமுள்ள ஸர்ப்பங்கள் **தர்வீகரங்கள்** எனக் கருதப்படுகின்றன. (2) படமில்லாதவையும் பலவகையான வட்டக் கோடுகளால் சூழப்பெற்ற தேஹ முடையவையும், மிக்க நீண்டவையும், மிக்க மெதுவாகச் செல்லுபவையுமான ஸர்ப்பங்களே **போகிகள்** என்றறியவும். (3) பலவேறு நிறமாய் குறுக்கிலும் நெடுக்கிலும் ஓடும் கோடுகள் நிறைந்த உடலைப் பெற்று ஸ்நிக்தமாயுள்ள ஸர்ப்பங்கள் **ராஜீமந்தங்கள்** எனப்படும். (4) கோதா என்கிற பல்லியினத்தில் உண்டான நாற்காலுள்ள ஊரும் ஜந்து **கௌதேரம்** எனப்படுகிறது; இது விஷத்தில் தர்வீகர ஸர்ப்பத்திற்குச் சமானமானது.[1] விஜாதிகளான கலப்பு ஜாதி ஸர்ப்பங்கள் என்பவை இம் மூன்றுவித ஸர்ப்பங்களின் சேர்க்கையாலுண்டாகும் பலவேறு பாம்பு இனங்களேயாம்; அவை வெவ்வேறு ஸர்ப்பங்களின் கலப்பாலான மிச்ர லக்ஷணங்களையும் பெற்றிருக்கும்; அவை பெரும்பாலும் ஸந்நிபாத தோஷங்களைப் பிரகோபிக்கச் செய்யும். 4—7½.

**ஸர்ப்பங்கள் கடிப்பதன் காரணங்கள் :**—(1) இரைக்காகவாவது, பயத்தினலாவது, காலால் மிதிப்பதாலாவது, விஷம் மிதமிஞ்சி ஆசயத்திற் சேர்ந்துவிடுவதாலாவது, கோபத்தினலாவது, தீச்செயலை ஒருவன் செய்வதாலாவது, பகையினலாவது, தேவர்-முனிவர்-யமன் ஆகியவர்களின் ஏவலாலாவது ஸர்ப்பங்கள்

1. தர்வீகர ஸர்ப்பமும் கோதா என்னும் பல்லியும் சேர்ந்துண்டாகும் கொடிய விஷமுள்ள கலப்பு ஜாதி ஜந்து என்று சிலர்.

மனிதரைக் கடித்து விடுகின்றன; இக்காரணங்களுள் முந்திய தினும் பிந்தியது விஷத்தன்மையை முறையே மேன்மேலும் அதிகமாகக் காட்டும். (2) குறிக்கப்பட்ட ஸர்ப்பத்தின் ஜாதியையும், அது கடித்ததன் காரணத்தையும் நன்கறிந்து, அததற்கேற்ற வகையில் சிகித்ஸையைச் செய்ய வேண்டும். (3) விஜாதீய ஸர்ப்பம் என்கிற கலப்பு ஜாதிப் பாம்பு வழிகளிற் குறுக்கே படுத்திருக்கும். 8—10.

**விஷக்கடியிலுள்ள பேதங்கள் :**—(1) தேஹத்தில் ஸர்ப்பத்தின் லாலா என்கிற உமிழ் நீரின் கசிவு மாத்திரம் காணப்பட்டு, கோரப்பல் கடித்த எக் குறியும் காணப்படாவிடில் அதை **துண்டாஹதம்** எனக் கூறுவர். (2) ஒரு கோரப் பல்லாவது இரண்டு பற்களாவது தேஹத்தில் அழுந்தி இரத்தக் கசிவு மாத்திரம் ஏற்படாமலிருந்தால் அதற்கு **வியாலீடம்** எனப் பெயர். (3) இரத்தம் புறப்படுமாறு இரண்டு பற்கள் புதைந்திருந்தால் அது **வியாலுப்தம்** எனப்படும். (4) மூன்று பற்கள் அழுந்தி, சதை அறுபட்டு அப் பற்களின் வாயிலிருந்து இரத்தம் தொடர்ந்து பெருகினால் அதை **தம்ஷ்ட்ரகம்** என்பர். (5) அதே விதமாக நான்கு பற்கள் இரக்தம் வருமாறு அழுந்தி யிருந்தால் அது **தஷ்டநிபீடிதம்** எனக் கூறப்படும். இவற்றுள் முதலிற் குறித்த இரண்டும் விஷமற்றவை; இறுதியிற் குறிக்கப்பட்டது அஸாத்யமாம். 11—13½.

**ஸர்ப்பவிஷம் தேஹத்திற் பரவுதல் :**—ஸர்ப்பத்தின் விஷமானது இரத்தத்திற் கலக்காமல் தேஹத்திற் கெடுதி விளைவிப்பதில்லை; ஆனால் விஷம் தேஹத்தினுள் ஓர் அணுப் பிரமாணம் இரத்தத்திற் கலந்துவிட்டபோதிலும் அது தண்ணீரில் வீழ்ந்த தைலபிந்துவைப்போல் உடலெங்கும் பரவி விருத்தியாகும்.-14½.

**ஸர்ப்பாங்காபிஹதம் :**— எளிதிற் பயந்துவிடும் சுபாவமுள்ளவனுடைய தேஹத்தை ஸர்ப்பம் பரிசிப்பதால் பயம் ஏற்பட்டு, வாயு பிரகோபமடைந்து, ஒவ்வொரு ஸமயம் வீக்கத்தையுண்டுபண்ணும்; அவ்விதக் கோளாறை 'ஸர்ப்பாங்காபிஹதம்' எனக்[1] கூறுவோம்.—15½.

**சங்கா விஷம் :**—காரிருளில் ஏதேனும் ஒன்றால் கடிக்கப்பட, அதைச் சர்ப்பம் கடித்ததாகப் பிரமித்து எண்ணிக் கொண்டவனுக்கு விஷப்பற்று ஏற்பட்டாற்போன்ற நிலையுண்டாய், ஜ்வரமும், வாந்தியும், மூர்ச்சையும், தாபமும் காணும்; அல்லது சோர்வும், மயக்கமும், அதிஸாரமுமாவது உண்டாகும்; இக்கோளாறு 'சங்கா விஷம்'[2] எனக் கூறப்படும்.—16, 17.

---

1. ஸர்ப்பத்தின் உடலால் தாக்கப்பட்டதாலான கோளாறு.

2. சங்கை—ஸந்தேஹம்; ஸர்ப்பம் தீண்டியதென்கிற ஸந்தேஹத்தினால் காணும் விகாரம் சங்காவிஷக் கோளாறு.

**விஷக்கடியும் நிர்விஷக்கடியும் :—** (1) ஸர்ப்பம் கடித்த விடத்தில் விஷம் சேர்ந்திருந்தால் அவ்விடத்தில் தினவும், வீக்கமும், வலியும் ஏற்படும் ; அவ்விடம் சிறிது கிரந்தி மாதிரி புடைத்துக் கொண்டு அழற்சியைப் பெறும். (2) இக் குறிகளில் எதுவும் இல்லாமலிருந்தால் அது நிர்விஷக்கடியாம்.—18.

**தர்வீகர ஸர்ப்பத்தின் விஷவேகங்கள் :—** தர்விகரம் என் கிற ஸர்ப்பம் கடித்தால், (1) அவ்விஷம் தேஹத்திற் பற்றியதும் ஏற்படும் முதல் வேகத்தில் விகாரமடைந்த இரத்தம் பெருகிக் கொண்டிருக்கும் ; அதனால் வாய் முதலியவற்றிற் கறுநிறமும், பூச்சிகள் ஊருவதுபோன்ற உணர்ச்சியும் தோன்றும். (2) அதன் இரண்டாம் வேகத்தில் தேஹமெங்கும் கிரந்திகள் காணும். (3) மூன்றும் வேகத்தில் தலை கனக்கும் ; உடலில் ஒரு வகை நாற்றமும், கடித்த விடத்தில் கசிவும் தோன்றும். (4) நான்காம் வேகத்தில் வாயில் விசேஷமாக நீரூறுதலும், வாந்தியும், பூட்டு களில் தளர்ச்சியும், தேஹத்திமிரும் உண்டாகும். (5) ஐந்தாம் வேகத்தில் கணுக்கள்தோறும் பிளக்கப்படுவது போன்ற வேத ளையும், தாபமும், விக்கலும் காணும். (6) ஆறும் வேகத்தில் இரு தயத்தில் வேதனையும், உடலிற் கனமும், மூர்ச்சையும், தேஹம் சமைக்கப்படுவது போன்ற உணர்ச்சியும், அதிஸாரமும் உண் டாகும். (7) ஏழாம் வேகத்தில் விஷம் சுக்ரத்தைப் பற்றி விடும்; தோள்களும்-பிருஷ்டபாகமும்-இடுப்பும் ஒடிந்துவிட்டாற் போல் வீழ்ந்துவிடும் ; தேஹத்தில் எல்லா அசைவுகளும் ஒழிந்து விடும். 19—22.

**மண்டலி ஸர்ப்பத்தின் விஷவேகங்கள் :—** மண்டலி என் னும் ஸர்ப்பத்தினுல் கடிக்கப்பட்டால் அதில் (1) முதல் வேகத் தில் இரத்தம் கெட்டுப்போய் பசுமை நிறமடையும் ; அதனால் தேஹமெங்கும் பசுமை நிறம் பரவும் ; அழற்சி யேற்படும். (2) இரண்டாம் வேகத்தில் உடல் வீங்கும். (3) மூன்றும் வேகத் திற் கடித்த விடத்திற் கசிவு ஏற்படும் ; தேஹம் வியர்க்கும் ; நாவறட்சியுண்டாம். (4) நான்காம் வேகத்தில் பிணியாளி ஜ்வ ரத்தினுல் வருந்துவான். (5) ஐந்தாம் வேகத்தில் உடலெங் கும் தாபம் பரவிவிடும். (6) ஆறுவதிலும், (7) ஏழாவதிலும் தர்வீகர விஷவேகங்களைப் போன்ற குறிகளே காணும்.—23, 24.

**ராஜிமான் ஸர்ப்பத்தின் விஷவேகங்கள் :—** இராஜிமந்தங் கள் என்னும் ஸர்ப்பங்களால் கடிக்கப்பட்டால் அதில் (1) முதல் வேகத்தில் இரத்தம் கெட்டுப்போய், வெண்ணிறமடையும் ; அதனால் அவயவங்கள் யாவும் பாண்டு நிறமடையும். (2) இரண் டாம் வேகத்தில் அக் குறியுடன் தேஹம் கனத்துப் போம். (3) மூன்றும் வேகத்தில் கடித்த விடத்திற் கசிவும், நாசி-வாய்- நேத்திரம் இவற்றில் துர்நீர் ஒழுக்கும் உண்டாகும். (4) நான்

காம் வேகத்தில் சிரோபாரமும், மந்யா என்கிற பாகத்திற் பிடிப்பும் தோன்றும். (5) ஐந்தாம் வேகத்தில் தேஹம் நிற்கமாட்டாது ஒடிந்துவிழும்; ஜ்வரமும், பிறகு சீதளமும் தோன்றும். (6) மற்ற இரண்டு வேகங்களிலும் தர்வீகர விஷவேகக்குறிகளே காணும் என்றறிக.—25, 26½.

விஷவேகங்களில் ஸாத்யாஸாத்யங்கள் :—முற்கூறிய ஸர்ப்பக் கடிகளில் முதல் ஐந்து வேகங்களிலும் சிகித்ஸை செய்யலாம். மற்ற இரண்டு வேகங்கள் தோன்றிய பிறகு சிகித்ஸை செய்ய வியலாது.—27.

விஷங்களில் அற்பவீர்யமான ஸர்ப்பங்கள் :—தண்ணீர் கலந்து விளாவப்பட்ட விஷத்தைப் பெற்றவை, புணர்ச்சியினால் க்ஷீணவீர்யமானவை, பயந்தவை, கீரியினால் விரட்டித்தள்ளப் பட்டவை, குளிர் - காற்று - வெய்யில் - நோய் - பசி - தாஹம் - களைப்பு இவற்றால் பீடிக்கப்பட்டவை, வெகு சீக்கிரத்தில் தேசம் விட்டு வேறு தேசம் மாறியவை, விஷம் கக்கியவை, தோலுரித்தவை, தர்ப்பை - மூலிகைகள் - முட்கள் ஆகியவை அடர்ந்த அடவியில் உலாவுபவை, தேவர்கள் வஸிக்கும் பிரதேசத்திலிருப்பவை ஆகிய இத்தகைய ஸர்ப்பங்கள் விஷவீர்யத்திற் குன்றியவையாம்.—28, 29½.

விஷக்கடி முதலியதில் அஸாத்யமானவை :— (1) மயானம், கட்டைகளின் அடுக்கு அல்லது சிதை, பௌத்தர்களின் ஆலயம் இவை முதலிய பிரதேசங்களிலும், பஞ்சமி திதியிலும், சுக்ல கிருஷ்ணபக்ஷங்களின் ஸந்தியிலும், அஷ்டமி - நவமி திதிகளின் ஸந்தியாகாலங்களிலும், நடு நிசியிலும், நடுப்பகலிலும், பரணி - கிருத்திகை - மகம் - ஆயில்யம் - விசாகம் - பூரம் - மூலம் இந்த நக்ஷத்திரங்களிலும், நைருதம் என்கிற ஸந்தியோதய முகூர்த்தத்திலும் விஷக்கடி ஏற்பட்டால் அது அஸாத்யமாகும். (2) அவ்விதமே மர்மஸ்தானங்களில் கடி ஏற்பட்டாலும், கடித்தவுடனே முகமும் கண்களும் வெளிறிவிட்டாலும், தலையிலுள்ள உரோமங்கள் உதிர்ந்தாலும்,நாக்குத் தடித்துத்தடையுண்டாலும், அடிக்கடியும் மூர்ச்சையுண்டானாலும், ச்வாஸம் மிகக் குளிர்ந்திருந்தாலும் அவ்வித விஷக்கடியிலிருந்து மனிதன் மீளமாட்டான். (3) விஷக்கடி ஏற்பட்ட சீக்கிரத்தில் அம்மனிதனுக்கு விக்கல், ச்வாஸம், வாந்தி, காஸம், இருதயத்தில் வலி இவை ஒரே ஸமயத்தில் உண்டானால் அவனும் பிழைக்கமாட்டான். (4) விஷம் உட்கொண்டவனும், விஷக்கடி யுண்டவனும், விஷந் தீட்டிய ஆயுதங்களால் குத்தப்பட்டவனும் நுரை நுரையாக வாந்தி செய்தாலும், பிரஞ்ஞையற்றுப் போனாலும், பாதங்கள் - கைகள் - முகம் இவை கருநிறங்கொண்டாலும், நாசி வளைந்து சுருங்கிவிட்டாலும், அவயவங்கள் சோர்ந்து விழுந்தாலும்,

தேஹம் கசிந்தாலும், பூட்டுகள் தளர்ந்துவிட்டாலும் அவனுக்குப் பிராணபாயம் நேர்ந்துவிட்டதாய் அறிக. (5) தேஹத்தில் விஷம் பரவியவனுக்கு தீக்ஷ்ணமான நஸ்யங்களைப் பிரயோகித்தும் பிரஞ்ஞை வாராமற்போனாலும், விரணம் உண்டுபண்ணி அவ்விரணத்திலிருந்து இரத்தம் வெளிவாராமற்போனாலும், சம்பினால் ஓங்கியடிக்க அதனால் தேஹத்தில் தழும்பு ஏற்படாமற்போனாலும் அவன் நமனிடம் செல்வது நிச்சயம். 30—36½.

விஷப்பற்றில் காலவிளம்பம் தகாது:— (1) முற்கூறிய நிலைமைகள் ஏற்படுமுன்பே, நெருப்புப்பற்றிய வீட்டிற்குச் செய்வதுபோல் பிராணன் தொண்டையில் வந்து துடிக்கும் போது கூட, வெகு துரிதமாக விஷத்தைத் தணித்துவிடும் உபாயங்களைச் செய்யவேண்டும். (2) விஷக்கடியுண்டவனுக்கு விஷமானது கடியுண்டவிடத்தில் நூறு மாத்திராகாலம் தங்கி, உடனே உதிரம் முதலிய தாதுக்களை விகாரப்படுத்தியவாறு அவற்றிற் பரவியோடும். (3) அவ்விதம் நேரிடுவதற்குள்ளாகவே கடியுண்ட விடத்தைக் கொந்தி அறுப்பது முதலிய விஷஹர சிகித்ஸையைச் சீக்கிரம் செய்யவேண்டும்; அப்படியானால்தான் விஷமானது விஷக்கொடியைப்போல் தேஹத்தினுள் வளர்ந்து பரவமாட்டாது. 37—39½.

விஷக்கடியில் உடனே செய்யவேண்டிய சிகித்ஸைகள்:— (1) ஸர்ப்பம் கடித்த க்ஷணத்திலேயே அதைப்பே துரிதமாகக் கடியுண்டவன் கடித்துப் போடவேண்டும். (2) அல்லது ஒட்டாங்குச்சையாவது, தரையையாவது தாமதமின்றிப் பற்களால் விண்டெடுத்து, உமிழ்நீரையுங் கூட்டிக் கடித்தவிடத்தில் பூசலாம். (3) அல்லது காதுக் குறும்பியையாவது எடுத்து அவ்விடத்திற் பூசலாம். (4) கடித்தவிடத்திற்கு நான்கு அங்குலம் மேலே பட்டுத்துணிகளாலாவது, சம்பளிக் கயிற்றாலாவது மந்திரமறிந்தவன், ஸித்தமந்திரங்களை உச்சரித்தவாறு கட்டுகள் கட்டலாம். இப்படிச் செய்வதால் அணைகோலிக் கட்டுவதால் ஓடும் தண்ணீர் தடையுற்று நிற்பதுபோல விஷம் ஓடிப் பரவாது நின்றுவிடும். பந்தநங்களால் அழுத்தப்பட்டு ஸிரைகள் என்கிற இரத்தக் குழாய்களிலும் இரத்தம் மேலே ஓடமுடியாதபடி தடுக்கப்பட்டுப் போம். (5) பிறகு மர்மஸந்திகளைத் தவிர்த்த மற்ற விடங்களிற் கடிவாயைக் கீறி நன்றாக அழுத்தி, அங்கிருந்து இரத்தத்தை வெளிப்படுத்தி விடவேண்டும். அதனால் வித்தின் அழிவால் முளை முற்றிலுங் கிளம்பாததுபோல் விஷவேகம் மேலெழாமல் நின்றுவிடும். (6) மண்டலி ஸர்ப்பங்களின் விஷம் மிகவும் பித்தத்தை விருத்திசெய்யக்கூடியதாகையால், அதைத் தவிர்த்து மற்றவை கடித்தவிடத்தை உடனே பழுக்கக் காய்ச்சிய பொன், இரும்பு முதலியவற்றாலாவது, கொள்ளிக்கட்டையி

ளலாவது சுட்டுவிட வேண்டும். அக்னியினுல் எதைத்தான் ஒரு நொடியில் பஸ்மமாகச் செய்துவிட முடியாது? (7) அல்லது வைத்தியன் புழுதி, சாம்பல், அகதம் என்கிற விஷஹாமருந்து, உலர்ந்த பசுஞ்சாணம் இவற்றில் எதையேனும் வாயில் போட்டுக் கொண்டு, முன்பு கட்டு கட்டிய இடங்களுக்கு இடையிலேயே, அதிலும் சதைபருத்த இடத்தில் சஸ்திரத்தினுல் அறுத்து இரத்தத்தை உறிஞ்சலாம்; கடித்த விடத்திலும் அதைச்சார்ந்த மற்றவிடங்களிலும் அகதௌஷதங்களால் தயாரான மருந்துகளை அடிக்கடியும் பூசலாம்; அல்லது சந்தனமும் வெட்டிவேரும் அரைத்துக் கலந்த தண்ணீரையாவது மேலே ஸேகம் செய்யலாம். 40—47½.

விஷம் தேஹத்திற் பரவிய பிறகு செய்யவேண்டிய சிகித்ஸை:—(1) ஸர்ப்பவிஷம் தேஹத்திற் பரவிப் போனபிறகு ஸிராவியதை செய்து இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும்; அதுதான் அந்நிலைமையில் மிகச் சிறந்த சிகித்ஸையாம்; இரத்தம் போதியவளவு வெளிப்படுத்தப்பட்டுப்போனுல் விஷம் முற்றிலும் வெளிப்பட்டுவிடும். (2) விஷத்துடன் கூடிய இரத்தம் துர்நாற்றமுள்ளதா யிருக்கும்; அக்னியிலிட்டால் சடசட என்கிற சப்தமுண்டாகும். (3) இரத்தம் தோஷமுள்ளதா யிருந்தால் எவ்விதம் இருக்குமென்பதையும், சுத்தமாயிருந்தால் எவ்விதம் இருக்குமென்பதையும் முன் கூறியிருக்கும் விஷயங்களைக் கொண்டறியலாம்.[1] (4) கீறி இரத்தம் வெளிப்படுத்தவேண்டிய ஸிரைகள் புலப்படாவிட்டால், ச்ருங்கயந்திரப் பிரயோகத்தையும், அட்டைகளையுங் கொண்டு இரக்தமோக்ஷணம் செய்யலாம். (5) அவ்விதம் வெளிப்படுத்தப்பட்டு மிச்சமுள்ள அசுத்தரக்தம் விஷச்சூட்டினுல் மீண்டும் ஸ்ரவித்துக்கொண்டிருந்தால், மிகக் குளிர்ச்சியான லேபநங்களையும், ஸேகங்களையும் பலமுறையும் பிரயோகித்து, பெருகும் இரத்தத்தை ஸ்தம்பநம் செய்யவேண்டும். (6) விஷவேகத்தினுல் இரத்தம் உறைந்துவிட்டால் மூர்ச்சை, வெறி, இருதயத்தின் படபடப்பு ஆகிய கோளாறுகள் தோன்றும்; அவற்றைக் குளிர்ச்சியான உபசாரங்களால் தீர்க்க வேண்டும்; மயிர்ச்சிலிர்க்கை உண்டாகும்வரையில் விசிறிக் குளிரச் செய்யலாம். இரத்தம் பெருக ஆரம்பித்ததும் விஷவேகம் உடனே தணிய ஆரம்பிக்கும். 48—52½.

விஷத்தில் இருதய ரக்ஷணம்:—(1) விஷமானது தீக்ஷ்ண வீர்யமுடையதாகையால் இருதயத்திற்குக் கேட்டை யுண்டுபண்ணும்; ஆகவே அதைப் பரிபாலிப்பதன் பொருட்டு க்ருதத்தையாவது, க்ருதம்-தேன் இவற்றைக் கலந்தாவது, விஷ ஹா

1. ஸூத்திரஸ்த்தாநம் ஸிராவியதவிதி 27-ம் அத்தியாயம் பார்க்க.

மருந்தை நெய்யிற் கலக்கியாவது உட்கொள்ளலாம்; இவ்வாறு ஹ்ருதயாவரணம் என்கிற இருதயத்திற்குப் பலமுண்டாய் விஷ வேகத்தைத் தடுக்கும் சிகித்ஸையைச் செய்தால் இருதயத்தில் சிலேஷ்மதாது விருத்தியாகிறது. (2) பிறகு குருத்வமும், வாயில் நீரூறுதலும், குமட்டலும் ஏற்பட்டால், அந்நிலைமையில் காடி, கொள்ளுக்கஞ்சி, தைலம், மது முதலியவற்றைத் தவிர்த்து வேறு வமநம் செய்விக்கும் குணமுள்ள திரவ பதார்த்தங்களைத் தாராளமாக உட்கொள்ளச் செய்து வாந்தியை உண்டுபண்ண வேண்டும்; அப்படிச் செய்வதால் விஷம் தேஹத்திற் பாவ மாட்டாது. 53—55½.

ஸர்ப்ப விஷங்களுக்கு விசேஷ சிகித்ஸை :—கடித்த ஸர்ப்பம், பிணியாளியின் தோஷம், பிரக்ருதி, கடித்த இடம், விஷ வேகம் இவற்றின் வெவ்வேறு பேதங்களையும் நுட்பமாகப் பரிசீலனை செய்து விசேஷ சிகித்ஸையும் செய்யலாம்.—56½.

தர்வீகர விஷசிகித்ஸை :—தர்வீகர ஸர்ப்பம் கடித்தால் (1) ஆவாரையின் வேர், விஷ்ணுக் கிராந்தி வேர், வெள் வசம்பு இவற்றை ஜலம் விட்டு அரைத்துப் பாநம் செய்யலாம். (2) கோஷ்டத்தைத் தேனிற் குழைத்து நஸ்யமாகவும் பிரயோகிக்கலாம்.—57½.

கிருஷ்ணஸர்ப்பவிஷ சிகித்ஸை :— கிருஷ்ணஸர்ப்பம் என்னும் பாம்பு கடித்தால் (1) இரக்தமோக்ஷணம் செய்து, (2) குன்றிமணி, ஈச்வர மூலி இவற்றையாவது, தீக்ஷ்ண வீர்யமுள்ள வேர் ஸம்பந்தமான விஷச் சரக்கையாவது அரைத்துக் கடித்த வாயில் லேபநம் செய்யலாம். (3) தேன், மஞ்ஜிஷ்டி, ஒட்டடைக் கரி இவற்றை நெய்யிற் கூட்டிப் பருகலாம்.-58, 59.

ராஜீமான் முதலிய ஸர்ப்ப விஷங்களுக்கு அகதௌஷதம்:— அம்மாம் பச்சரிசி, குமிழன், நாயுருவி, விஷ்ணுக் கிராந்தி, கொடி மாதுளை, வெள் வசம்பு, நறுவிலி இவற்றைச் சேர்த்துப் பானம் செய்யவும், நஸ்யம் பிரயோகிக்கவும், அஞ்ஜநமிடவும் ஏற்ற ஔஷதங்கள் பக்குவம் செய்து, படமுள்ள தர்வீகரங்களுடையவும், இராஜீமான்கள் என்னும் ஸர்ப்பங்களுடையவும் கொடிய விஷத்தைப் போக்க அகதமாக உபயோகிக்கலாம்.—60, 60½.

மண்டலி விஷத்திற்கு அகதௌஷதங்கள் :—(1) போரத்தை, திராக்ஷை, வெள் வசம்பு, யானைவணங்கி இவை ஸம பாகம், துளஸியிலை, விளாம்பட்டை, பில்வப்பட்டை, மாதுளம்பட்டை இவை அவற்றினும் அரைப்பாகம், இவற்றைச் சூர்ணமாக அல்லது கல்கமாகச் செய்து மண்டலிஸர்ப்ப விஷத்திற்குத் தேனிற் குழைத்து விசேஷமாக அகதமாய் உபயோகிப்பது

நலம். (2) பஞ்சவல்கலம்,[1] த்ரிபலை, அதிமதுரம், சிறுநாகப்பூ, சிற்றேலம், ஜீவகம், ருஷபகம், வெட்டிவேர், வெள்வசம்பு, வறள்தாமரை, நெய்தல் இவற்றின் கூட்டாலாகிய லேபநமான அகதௌஷதத்திற்கு ஹிமவான் என்று பெயர்;[2] இது மண்டலி ஸர்ப்ப விஷத்தையும், சோகை, விஸர்ப்பம், கொப்புளம், ஜ்வரம், தாபம் இவற்றையும் தீர்க்கவல்லது. (3) குமிழன், ஆலம் மொக்குகள், ஜீவகம், ருஷபகம், வெள்வசம்பு, மஞ்ஜிஷ்டி, அதிமதுரம் இவற்றின் கஷாயத்தை மண்டலி ஸர்ப்பத்தினால் கடியுண்டவன் பருகலாம். 61—65.

அஷ்டாங்க அகதம் :—மூங்கிற்பட்டை, மூங்கிலரிசி, கடுகரோஹிணி, பாதிரிவித்து, சுக்கு, காட்டுவாகைவித்து, காட்டுக்கோதுமை வேர், வசம்பு இவற்றின் கூட்டு 'அஷ்டாங்காகதம்' எனப்படும்; இதைப் பசுமூத்திரம் விட்டு அரைத்துப் பூச மண்டலி விஷம் தீரும்.—66, 66½.

ராஜீமத் விஷத்திற்கு அகதம் (இரண்டாவது) :—கடுகரோஹிணி, அதிவிடயம், கோஷ்டம், ஒட்டடைக்கரி, அரேணுகம், த்ரிகடு, கிரந்திதகரம் இவற்றின் கல்கத்தைத் தேனிற்குழைத்துபயோகிக்க இராஜீமான் என்னும் ஸர்ப்பங்களின் விஷம் நீங்கி விடும்.—67½.

காண்டசித்ராஸர்ப்பவிஷ சிகித்ஸை :— காண்டசித்ரா[3] என்கிற ஸர்ப்பத்தினால் கடிக்கப்பட்டால் (1) கடித்தவிடத்தை இரண்டு யாமகாலம் பூமியிற் புதைத்துவைத்து, அப்பால் எடுத்து, கடித்தவிடத்தைக் கீறி தானியம் விளைகிற இடத்து மண்ணையும் நெய்யையும் கலந்து அவ்விடத்திற் பூசலாம். (2) புராணக்ருதத்தில் த்ரிபலா சூர்ணம் கூட்டிப் பருகலாம். (3) அதற்கு முன்பு புஜித்த உணவு ஜீர்ணமானதும் விரேசநம் செய்வித்து, பருப்புச் சேர்த்து பக்குவம் செய்த வாற்கோதுமை யன்னத்தைப் புஜிக்கலாம்.—68, 69½.

ஸார்வகார்மிக-அகதம் :— அலரிப்பூ, எருக்கன்வேர், சலப்பைக் கிழங்கு, திப்பிலி, வட்டத்திருப்பி, மிளகு இவற்றை இடித்து, அன்னம் ஊறிய ஜலத்தினால் அறைத்து லேபநமாய் உபயோகிக்கலாம்; 'ஸார்வ கார்மிகம்' என்கிற இந்த அகதௌ

---

1. பஞ்சவல்கலம்—அத்தி, அரசு, ஆல், பூவரசு, வஞ்சி இவ்வைந்தின் பட்டைகளின் கூட்டுப்பெயர். இவ்வைந்தும் பஞ்சவேதஸம் என்றும் கூறப்படும்

2. மிகக் குளிர்ச்சி பொருந்தியதாகையால் இதற்கு 'ஹிமவான்' எனப் பெயர்.

3. காண்டசித்ரா — கட்டுவிரியன் என்னும் பாம்பு. [மரக்கிளைகளில் மறைந்துள்ள பச்சைப்பாம்பு என்றும் சிலர்.]

ஷதம் வியந்தரஸர்ப்பங்கள் என்கிற கலப்புஜாதிப் பாம்புகள் கடித்ததாலான விஷங்களைப் பரிஹரிக்க உபயோகமானது.-70, 71.

பாந-நஸ்யோபயோகமான அகதங்கள் :—(1) காட்டுவாகைப் பூவின் சாற்றில் மிளகையும், சர்க்கரையையும் சேர்த்துப் பாவனை செய்தெடுத்துச் சூர்ணம் செய்து, ஜலத்துடன் பருகவும் நஸ்யமிடவும் உபயோகிக்கலாம். இது எல்லாப் பாம்புகளின் கடிகளிலும் உபயோகமான அகதம். (2) கிரந்திதகரம், கோஷ்டம் இவை வகைக்கு இரண்டு பலமளவு சூர்ணம் செய்து, நெய்யும் தேனும் நான்கு பலம் கூட்டி யுட்கொள்ள தக்ஷகன்போன்ற கொடிய ஸர்ப்ப விஷமும் நீங்கி ஸௌகமேற்படும்.—72, 73.

தர்வீகரஸர்ப்பங்களின் விஷவேகங்களில் சிகித்ஸை:—தர்வீகர ஸர்ப்பங்களின் விஷத்தினாலான (1) முதல் வேகத்தில் முதலில் இரக்தமோக்ஷணம் செய்து, ஏதேனும் தகுந்த அகதௌஷதத்தைத் தேனிலும் நெய்யிலும் கலக்கித் தாமதம் செய்யாமற் பருகவேண்டும். (2) இரண்டாம் வேகத்தில் வமநம் செய்வித்து, அவ்விதமே அகதௌஷதத்தை உட்கொள்ளவேண்டும். (3) மூன்றும் வேகத்தில் விஷஹரௌஷதங்களால் அஞ்ஜநமும் நஸ்யமும் பிரயோகிக்கலாம். (4) நான்காம் வேகத்தில் வமநம் செய்தபிறகு முற்கூறிய யவாகூ என்னும்[1] கஞ்சியைப் பருகலாம். (5) ஐந்தாவது, (6) ஆறுவது வேகங்களில் மிகக் குளிர்ச்சி பொருந்திய விஷஹர ஔஷதங்களால் அடிக்கடியும் ஸேகம் செய்து, லேபநமும் செய்து, தீக்ஷ்ணௌஷதங்களால் வமநம் செய்வித்து, விஷஹரபதார்த்தங்களால் பக்குவம் செய்த கஞ்கியையும் பருகச் செய்யலாம். (7) ஏழாம் வேகத்தில் தீக்ஷ்ணமான அகதௌஷதத்தை அஞ்ஜநமாகவும், நஸ்யமாகவும் உபயோகித்து, சிரஸ்ஸில் சஸ்திரத்தினால் குறுக்கும் நெடுக்குமாகக் காகபதம் என்னும் முறையில் ஆழமாகக் கீறி, இரத்தங்கலந்த மாம்ஸத்தையாவது சர்மத்தையாவது அழுத்திவைக்கலாம். 74—78.

மண்டலிஸர்ப்பங்களின் விஷவேகங்களில் சிகித்ஸை :—மண்டலிஸர்ப்பங்களின் மூன்றும் வேகத்தில் வமநம் செய்வித்து, பேயா என்கிற கஞ்சியைப் பருகச் செய்யலாம். ஆறும் வேகத்தில் தீக்ஷ்ணமாயில்லாத அகதௌஷதத்தையாவது, பத்மகாதி கணத்தையாவது உபயோகிக்கலாம்.[2]—79.

ராஜிலஸர்ப்பங்களின் விஷவேகங்களிற் சிகித்ஸை :—இராஜிமான்கள் என்னும் ஸர்ப்பங்கள் கடித்தால் அதன் முதல் வேகத்தில் ஆழமாகக் கீறி, அலாபு கடிகையைப் பிரயோகித்து,

1. முந்திய 35-ம் அத்தியாயத்தில் 21, 22-ம் ச்லோகங்களின் மொழிபெயர்ப்பிற் கூறியுள்ள முறையைப் பார்க்க.

2. மண்டலி ஸர்ப்பத்தின் மற்ற விஷ வேகங்களுக்கும் தர்வீகர விஷ வேகங்களுக்குக் கூறிய சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும்.

இரக்தமோக்ஷணம் செய்யலாம். பிறகு முன்போலவே அகதௌஷதம் உட்கொள்ளலாம். ஆறாம் வேகத்தில் தீக்ஷ்ணமான அஞ்ஜநமும், அவபீடநஸ்யமும் பிரயோகிக்கலாம். இங்கு மொழியப்படாத மற்ற வேகங்களில் தர்வீகர ஸர்ப்பத்தின் விஷவேகங்களுக்கு மொழியப்பட்டுள்ள வகையில் சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்.—80, 81.

கர்ப்பிணி முதலியவர்களுக்கு ஏற்ற விஷ சிகித்ஸை :—கருத் தரிப்பவள், பாலர், வயது சென்றவர் இவர்களுக்கு மிருதுவான அகதௌஷதங்களை உபயோகிக்க வேண்டும்; இவர்களுக்கு ஸிராவியதை செய்யக் கூடாது.—81½.

வஜ்ர அகதம் :—லவங்கப் பட்டை, மகச்சிலை, மஞ்சள், மரமஞ்சள், கிரந்திதகரம், பாதரஸம், புலியுகிர், பச்சிலை, நாகசேஸரம் இவற்றைச் சூர்ணம் செய்து, அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ள, மிகச் சிறந்த குணமுள்ள 'வஜ்ரம்' என்கிற இவ்வௌஷதம், அஸுரர்களை இந்திரனது வஜ்ராயுதம்போல் ஸகல விஷங்களையும் தீர்க்கவல்லது.—82, 83.

பில்வமூலாதி அகதம் :—பில்வ வேர், துளஸிக் கதிர், புங்கங்காய், கிரந்தி தகரம், தேவதாரு, த்ரிபலை, த்ரிகடு, மஞ்சள், மரமஞ்சள் இவற்றைச் சூர்ணம் செய்து, செம்மறியாட்டுச் சிறுநீர் சேர்த்து மிக்க மிருதுவாக ஆட்டி யெடுத்து அஞ்ஜநமாகவும், நஸ்யமாகவும் பிரயோகித்தும், பானம் செய்தும், ஸர்ப்பங்கள்-சிலந்தி-மூஞ்சூறு-தேள்-முதலியவற்றின் விஷக்கடிகளாலும், விஷஸூசியினாலும், அஜீர்ணத்தினாலும், கரவிஷத்தினாலும், ஜ்வரத்தினாலும் வருந்துபவர்களையும், பூதங்களால் விரட்டப்பட்டவர்களையும் ஸுகப்படுத்தலாம்.—84, 85.

கடிவாயில் மிச்சமுள்ள விஷத்தைப் பரிஹரித்தல் :—கடிவாயிற் சிறிது தங்கியுள்ள விஷத்தையும் அவ்விடத்தில் லேபநம் முதலியவற்றைச் செய்து பற்றறச் செய்யவேண்டும் ; சொற்பம் மிச்சமுள்ள விஷங்கூட மீண்டும் தன் வேகங்களைக் காட்டக்கூடும், அல்லது தூஷீவிஷமாகவாவது மாறக்கூடும்.—86.

விஷம் நீங்கிய பிறகு தோஷஹர சிகித்ஸை :—தேஹத்திற் பற்றிய விஷம் முற்றிலும் நிவ்ருத்தியான பிறகு (1) பிரகோபமடையும் வாயுவுக்கு வாதஹரமான ஸ்நேஹ சிகித்ஸை முதலியவற்றால் பரிஹாரம் செய்யவேண்டும் ; ஆனால் தைலம், மது, கொள், புளி இவை மாத்திரம் உபயோகிக்கத் தக்கவையல்ல. (2) பித்ததோஷத்தைப் பித்த ஜ்வரத்தைப் பரிஹரிப்பதற்கேற்ற கஷாயங்கள், ஸ்நேஹங்கள், வஸ்திகள் இவற்றால் சமநம் செய்யவேண்டும். (3) கபதோஷத்தை ஆரக்வதாதி கஷாயாதிகளைத் தேனுடன் உட்கொண்டு பரிஹரிக்கலாம்.—87, 88.

சங்காவிஷ - ஸர்ப்பாங்காபிஹதக் கோளாறுகளுக்குச் சிகித்ஸை :—வெள்வசம்பு, சதுர்ஜாதம், திராக்ஷை, க்ஷீரகாகோலி, அதிமதுரம் இவற்றைச் சூர்ணம் செய்து, தேனிற் கலக்கிப் பானம் செய்வதும், மந்திரம் ஓதி புனிதமாக்கிய ஜலத்தினுல் பிரோக்ஷணம் செய்வதும், நல்மொழிகளால் தேறுதல் கூறிக் களிப்பூட்டுவதும் ஸர்ப்பத்தின் உடல் தாக்கியதாலான கோளாறிலும் ஏற்ற பரிஹாரங்களாம்.—89, 89½.

தேஹத்தில் அணியக்கூடிய விஷஹர வஸ்துக்கள் :—மாணிக்கம், மரகதம், வஜ்ரம், யானைத்தந்தத்திலிருந்தெடுத்த முத்து, வைடூர்யம், கர்த்தபமணி யென்னும் தூம நிறமுள்ள இரத்தினம், இரத்தின புஷ்பி என்னும் மூலிகை, விஷ மூஷிகை என்னும் மூலிகை,[1] இமாலயத்திலுண்டான ஆட்லாங்கொடி, வெள்ளைச் சாறணை, தும்பை, வெண் காக்கட்டான், வல்லாரை, நாகத்தின் சிரஸ்ஸிலிருந்தெடுத்த இரத்தினம், விஷகுணமுள்ள வீர்யம் நிரம்பிய வேறு சரக்குகள் ஆகியவற்றைத் தேஹத்தில் விஷம் பற்றுமலிருக்கவும், பற்றிய விஷம் தணியவும் செய்ய உடம்பில் தரித்துக்கொண்டிருக்கலாம். 90—92.

ஸர்ப்பம் தீண்டாமலிருக்க முன் ஜாக்கிரதை :—இராக்காலங்களில் வெளியிற் செல்லும்போது கையிற் குடை யேந்தியும், சப்தமுண்டாக்கத் தகுந்த தடியைத் தாங்கியும் செல்லுவது சிறந்த ஏற்பாடாம்; ஸர்ப்பங்கள் அக் குடை நிழலைக் கண்டும், தடியோசையைக் கேட்டும் ஒழிந்தோடிப் போகும்.—93.

---

## முப்பத்தேழாம் அத்தியாயம்.

## கீட-லூதாதி விஷப் பிரதிஷேதம்.

இனி கீட லூதாதி விஷப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[2] விவரித் துரைக்கப்படும் :—

### கீடங்களின் விஷம்.

கீடங்கள் நான்கு விதம் :—கீடங்கள் என்னும் விஷ ஜந்துக்கள் ஸர்ப்பங்களுடைய மலம், மூத்திரம், சுக்ரம், முட்டைகள், அவற்றின் அழுகிப்போன அவயவங்கள் ஆகியவற்றிலிருந்து உண்டாய், தனித் தனியே மூன்று தோஷங்களால் மூன்றும்,

---

1. விஷமுஷ்டி என்றும் பாடமுண்டு. அப்பொழுது எட்டிக் கொட்டை எனப் பொருள்.

2. கீடங்கள்—குளவி, தேள் முதலியவை; லூதா—சிலந்தி முதலியது; இவை தீண்டுவதா லுண்டாகும் விஷக் கோளாறுகளுக்குப் பரிஹாராதிகளைக் கூறும் அத்தியாயம்.

மாகவும், வெண்மையான வயிற்றுப் பக்கங்களுள்ளனவாகவும் இருக்கும். (4) மத்திம விஷத்தேள்கள் வயிற்றுப் பக்கத்தில் தாமநிறமுடையவை ; அவற்றின் வாலில் மூன்று மணிகளே இருக்கும் ; கபிலம், சிவப்பு, மஞ்சள், வெளுப்பு, கறுப்பு இவற்றின் கலப்பு, இரத்தம் ஆகிய நிறங்களில் எதையாவது, அல்லது பலவேறு நிறத்தையாவது அவை பெற்றிருக்கும். (5) மஹா விஷத்தேள்கள்[1] பார்வைக்கு நெருப்பைப்போன்றிருக்கும் ; இரண்டொரு மணிகளே வாலில் அவற்றிற்கு உண்டு ; சிவப்பாகவும், கறுப்பாகவும், வெண்மையாகவும் அவற்றின் வயிற்றுப் பாகம் காணப்படும். (6) அவற்றுள் மஹாவிஷத்தேள்கள் கொட்டிய குறிகளாவன : நாக்கு வீங்கிப் போம் ; உடல் நிமிர்ந்து விடும் ; அவன் ஜ்வரத்தினால் வருந்துவான் ; உடம்பிலுள்ள ஒவ்வொரு த்வாரத்திலிருந்தும் கருநிறமான இரத்தம் கசியும் ; இந்த்ரியங்களுக்குள்ள உணர்ச்சிகள் இழக்கப்படும் ; வியர்க்கும் ; மூர்ச்சை யுண்டாம் ; வாய் வறளும் ; நா தழுதழுக்கும் ; வேதனைகள் வருத்தும் ; மாம்ஸம் சிதைவுறும் ; பெரும்பாலும் அவன் உயிர் துறப்பான். 6—12.

உச்சிடிங்க விஷம் :—உச்சிடிங்கம்[2] என்கிற செய்யான் பெரும்பாலும் வாயால் கடிப்பது வழக்கம் ; அவ் விஷம் எளிதில் சிகித்ஸிக்கக் கூடிய தேள்விஷத்தினும் அதிக வேதனையைத் தரும் ; அதனால் லிங்கம் தடித்துக் கொள்ளும் ; மயிர்ச்சிலிர்க்கை யுண்டாம் ; அக் கடியானது குளிர்ந்த ஜலம் ஊற்றினாற்போல் தேஹ மனைத்தையும் ஈரக் கசிவால் நனைத்துவிடும் ; இச் செய்யான் உஷ்ட்ரதூமம் என்றும், இரவில் உலாவுவதால் ராத்ரிகம் என்றும் கூறப்படும்.—13, 14.

கீடாதி விஷங்களின் விசேஷத்தன்மைகள் :—(1) கீடங்கள் என்கிற ஜந்துக்களின் விஷங்கள் பெரும்பாலும் வாத-பித்த தோஷம் மேலிட்டவைகளாகவும், (2) கணபம் என்கிற கம்பளிப் பூச்சி-சுண்டெலி இவற்றின் விஷங்கள் ச்லேஷ்மதோஷம் மேலிட்டவையாகவும், (3) வ்ருச்சிகங்கள் என்கிற தேள்கள்-உஷ்ட்ரதூமம் இவற்றின் விஷங்கள் பெரும்பாலும் வாததோஷம் மேலிட்டவையாகவும் இருக்கும்.—15.

விஷங்களில் வாதாதி தோஷக்குறிகளும் அவற்றிற்குப் பொது சிகித்ஸைகளும் :—(1) விஷக்கடிகளில் எந்தெந்த தோஷத்தின் குறிகள் மேலோங்கித் தோன்றுகின்றனவோ, அந்தந்த தோஷத்திற்கு எதிரிடையான குணமுள்ள ஔஷதங்களால் அதற்குச் சிகித்ஸை செய்யவேண்டும். (2) வாதவிஷத்தில் இருதய

1. மஹா விஷத்தேள்—இது நண்டுவாய்க்காலி அல்லது நண்டுத் தெறுக்கால் என்றும் வழங்கப்படுகிறது.

2. உச்சிடிங்கம்—கரும் பூரான் என்று சிலர்.

வேதனை, மேல்மூச்சு, மூச்சடைப்பு, நரம்புகளின் இசிவு, எலும்புப் பூட்டுகளில் வேதனை, தலைச்சுற்றல், கால் ஆட்டுச் சதையில் இசிவு, உடற் கறுத்தல் ஆகிய குறிகள் தோன்றும். (3) பித்த விஷத்தில் பிரஞ்ஞை இழக்கப்படும்; ச்வாஸம் சூடாகும்; இருதயம் அழலும்; வாய் கசக்கும்; சதைகள் சிதைவுறும்; சிவப்பாகவும் பசுமையாகவும் வீக்கம் காணும். (4) சிலேஷ்ம விஷத்தில் வாந்தியாகும்; அரோசகம் உண்டாம்; இருதயம் வேதனையுறும்; வாயில் நீரூறும்; குமட்டலுண்டாகும்; பீநஸம் காணும்; சைத்தியம் அதிகரிக்கும்; வாய் இனிக்கும். (5) இவற்றுள் வாதவிஷத்தில் விரணத்தின்மேல் தைலத்தைத் தடவி, பிண்ணுக்கையும் பூசவேண்டும்; பிறகு சூடான அன்னத்தினலும், காடியினலும் ஸ்வேதநமும் செய்யலாம்; ப்ருஹ்மண சிகித்ஸையும் செய்வது நலம். (6) பித்த விஷத்தில் மிகவும் சீதளமான வஸ்துக்களால் ஸேகமும், பிரதேஹம் என்கிற லேபநங்களும் பிரயோகிக்க வேண்டும். (7) சிலேஷ்ம விஷத்தில் குமட்டலையும் வாந்தியையும் உண்டாக்கும் ஔஷதங்களைக் கொடுத்தும், ஸ்வேதநம் செய்தும் சிகித்ஸிக்கவேண்டும். இவ்வாறு மூன்றுவிதமான கீடவிஷங்களுக்கும் மூன்றுவிதமான பரிஹாரமுறைகளைச் செய்யலாம். இவற்றிற்குப் பெரும்பாலும் சிறிது சூடான ஸ்வேதங்களையும், லேபநங்களையும், பரிஷேகங்களையும் பிரயோகிக்கலாம்; ஆனல் மூர்ச்சையடைந்தவனுக்கும், கடிவாயில் சமைக்கப்பட்ட வேதனையுள்ளவனுக்கும், விஷக்கடியில் அழுகியுள்ள விரணமுள்ளவனுக்கும் இந்த ஸ்வேதாதி சிகித்ஸைகள் தகா. 16—22½.

**காச்யபதூபம்**:—(1) வெண்கடுகு, மனிதரின் தலைமயிர், பழைய வெல்லம் இவற்றைக் கூட்டி, அக்னியிலிட்டுப் புகைபோடுவது எல்லா விஷக்கடிகளிலும் சிறந்த பயன் தரும் என்று காச்யபர் மொழிந்திருக்கிறார்.—23½.

**விஷஹரமான போது சிகித்ஸை**:—(1) விஷஹரமான எல்லாச் சிகித்ஸையையும், ஸகல சோதந சிகித்ஸைகளையும் நிறைவேற்றுவதுடன், கொடிய விஷமுள்ள தேள் முதலிய கீடங்களின் கடிகளில் பாம்புக்கடிகளுக்குக் கூறிய மற்றச் சிகித்ஸைகளையும் செய்யலாம். (2) சிவதைவேரும், அம்மாம்பச்சரிசியும் ஸமபாகமாகச் சூர்ணம் செய்து, நெய்யுடன் பருகினல், வாயுவின் வேகங்களால் கைலாஸகிரி எப்படியானல் அசைக்கப்படாதோ, அவ்வாறு கீடவிஷங்களால் தேஹம் அசைவுறுவதில்லை. (3) சோதந சிகித்ஸை செய்தபிறகு பாலுள்ள மரங்களின் பட்டையை அரைத்து, மேலே லேபநம் செய்ய கீடவிஷம் தீரும். (4) நல் முத்தை அரைத்துச் செய்யும் லேபநமானது வீக்கம், குத்தல், அழற்சி, ஜ்வரம் இவற்றைப் போக்கும். 24—26½.

**தசாங்க அகதம் :**—வசம்பு, காயம், வாய்விடங்கம், இந்துப்பு, யானைத்திப்பிலி, வட்டத்திருப்பி, அதிவிடயம், த்ரிகடு இவற்றைக் கஷாயம் செய்து பானம்பண்ண, எல்லாக் கீடவிஷமும் தீரும்; இது காச்யபர் செய்த "தசாங்காகதம்" எனப்படும்.-27,28.

**தேள் விஷத்திற்குச் சிகித்ஸைகள் :**—(1) தேள் கொட்டியவுடனே சக்ரதைலத்தினால் அவ்விடத்தில் ஸேகம் செய்யவும். (2) அல்லது வேறு தைலத்தை நிலப்பனங்கிழங்கின் கஷாயத்திற் காய்ச்சி, இளஞ்சூடாகவும் மேலே ஊற்றலாம். (3) இந்துப்பு கலந்த நெய்யையாவது அடிக்கடியும் மேலே ஊற்றலாம். (4) இளஞ்சூடான கஞ்சியையாவது பாலும் உப்பும் கலந்து இளஞ்சூடாக மேலே ஊற்றலாம். (5) பொடித்த ஜீரகத்தையும் இந்துப்பையும் கூட்டி, நெய்யில் வறுத்து மேலே ஒற்றடம் கொடுக்கலாம். (6) கடிவாயின் பக்கமாகச் சுற்றிலும் நன்கு ஸ்வேதநம் செய்து, சஸ்திரத்தினாற் கீண்டு, மஞ்சள்-இந்துப்பு-த்ரிகடு-காட்டுவாகைப்பூ-அதன் காய் இவற்றைச் சூர்ணம்செய்து மேலே தூவலாம். (7) துளஸிப்பூங்கதிரைக் கொடிமாதுளையின் சாற்றினாலும், பசுமூத்திரத்தினாலும் அரைத்துக் காய்ச்சிச் சிறிது சூடாகவே லேபநம் செய்வது இதமாம். (8) அவ்விதமே பக்குவம் செய்த பிண்ணாக்காவது, பசுஞ்சாணமாவது லேபநம் செய்ய உபயோகமானவை. (9) தேனும் நெய்யுங் கூட்டிய க்ருதமாவது, (10) தாராளமாகச் சர்க்கரை கலந்த பாலாவது பருகத் தகுந்தனவாம். (11) மாடப்புறாவின் மலம், கடுக்காய், கிரந்திதகரம், சுக்கு இவற்றைக் கொடிமாதுளையின் சாற்றினால் அரைத்து லேபநம் செய்ய, வ்ருச்சிக விஷத்திற்கு அது சிறந்த அகதமாகும். (12) வேலம் பாசியையும், ஒட்டகப்பல்லையும் அரைத்து லேபநம் செய்தாலும் தேள்விஷம் தீரும். (13) காயம், அரிதாளம் இவற்றைக் கொடிமாதுளைச் சாற்றில் அரைத்து, குளிகை செய்து, அதை இழைத்து மேலே லேபநம் செய்தாலும், அஞ்ஜநமிட்டாலும் விருச்சிக விஷம் நிவ்ருத்தியாம். (14) புங்கு, மருதை, நறுவிலி, குன்றிமணி, வெட்பாலை, காட்டுவாகை இவற்றின் புஷ்பங்களை மோரின் தெளிவுநீரை விட்டு அரைத்துக் கடித்த இடத்தில் லேபநம் செய்வதும் நலம். (15) கொடிய விஷவேதனையினால் மூர்ச்சித்தும், பெருமூச்செறிந்தும், பிதற்றிக்கொண்டும் வருந்துபவனுக்குக் கடுக்காய், மஞ்சள், திப்பிலி, மஞ்ஜிஷ்டி, அதிவிடயம், மிளகு, சுரைப்பிஞ்சு இவற்றைக் கத்திரியிலைச் சாற்றால் அரைத்து கடிவாயில் லேபநம் செய்யலாம். (16) உக்கிரமாயுள்ள எந்தத் தேள்[1] கொட்டியபோதிலும் தயி

---

1. "உக்ராலிவிஷே" என்கிற மூலத்திலுள்ள மொழிக்குக் கொடியவண்டு அல்லது குளவியின் விஷம் என்றும் பொருள் கூறுவதுண்டு. இங்கு 20-22-ம்ஔஷதமுறைகளும் இவ்விதமே குளவிவிஷத்திற் கேற்றவையாம்.

ளையும் நெய்யையும் பருகச் செய்யலாம். (17) விராவ்யத்தை யும் செய்யலாம். (18) வமநம், அஞ்ஜநம், நஸ்யம் இவற்றையும் பிரயோகிக்கலாம். (19) உஷ்ணமாகவும், ஸ்நிக்தமாகவும், அம்லமாகவும், மதுரமாகவும் உள்ள வாதஹரமுள்ள உணவும் அருந்தத் தக்கது. (20) சுக்கு, மாடப்புறாவின் மலம், அரிதாளம், இந்துப்பு இவற்றைக் கொடிமாதுளைச் சாற்றால் அரைத்து லேபநம் செய்யலாம். இந்த அகதம் தேள் வகுப்பைச் சேர்ந்த எந்தப் பூச்சியின் விஷத்தையும் துரிதமாய் நீக்கவல்லது. (21) வ்ருச்சிகத்தினால் கொட்டப்பட்டவர்களுக்குக் கடைசியாக விஷம் பிரவும் பரிந் தொந்தரவளித்தால், கடித்தவிடத்தில் விஷத்தினாலேயே லேபநம் செய்யலாம். உச்சிடிங்க விஷத்திலும் இதே முறை ஏற்றதாகும். (22) நாய்க்குடை யென்னும் காளான், விழுவின் வேர் இவற்றை நறுவிலிச் சாற்றால் அரைத்துக் குளிகை செய்து, இமைத்து மேலே தடவவும்; இது தேள்விஷத்தைப் போக்குவதிற் சிறந்தது. 29—42.

கீடங்களனைத்தின் விஷங்களுக்கும் பொதுசிகித்ஸை :—(1) காட்டுவாகைப்பூவை எருக்கம்பாலில் மூன்று முறை பாவனை செய்தெடுத்து, திப்பிலிப் பொடியையும் கலந்து உட்கொள்ளலாம். இந்த அகதம் கீடங்கள், ஸர்ப்பங்கள், சிலந்திகள், சுண்டெலி, தேள் இவற்றின் விஷங்களை நீக்கும். (2) காட்டுவாகைப் பூ, புங்கம்விதை, காச்மீரம் என்கிற கேஸரி, கோஷ்டம், மநச்சிலை இவற்றின் கூட்டுச்சூர்ணம் தேன், ராத்ரிகம் இவற்றின் விஷங்களைப் பறித்துப் போக்கவல்ல அகதம் என்று ஜிநதேவனால் மொழியப் படுகிறது.—43, 44.

## லூதா விஷம்

லூதா என்னும் சிலந்தி:— லூதா என்கிற சிலந்திகள் கீடங்களைக்காட்டிலும் மிகக் கொடியவை; அவை பதினாறுவிதம் எனச் சிலரும், இருபத்தெட்டு விதமென்று வேறு சிலரும், இன்னும் அவை எண்ணிக்கையிற் பெருகுகின்றன என்று மற்றும் சிலரும் கூறுகிறார்கள்; ஸூரிய கிரணங்களைச் சார்ந்து தோன்றும் இவை ஆயிரக்கணக்கானவை யெனக் கூறுவர் ஒரு சாரார். ஆனால் அநேக உபத்திரவமளிக்கும் தன்மையுள்ள விஷஸ்வரூபமான சிலந்தி ஒன்றேயாம். அதன் ரூபங்கள் பலவாறுயிருப்பதால், உருவங்களைக்கொண்டு அதற்குப் பெயரிடுவது எளிதல்ல; அது ஓரிடத்தைச் சார்ந்து நிலைத்திருப்பதுமில்லை; ஆகவே தோஷங்களைக்கொண்டு அதன் தன்மைகள் அடியிற் கூறப்படுகின்றன. ஒவ்வொரு தனித் தோஷத்தின் குணமுள்ள சிலந்திகளின் விஷங்கள் சஷ்டஸாத்தியமாகவும், ஸந்நிபாததோஷ ஸம்பந்தமான சிலந்தியின் விஷம் அஸாத்தியமாகவும் ஆகும். 45—47½.

வாதாதி தோஷகுணங்களைப் பெற்ற சிலந்திக் கடிகள் :—(1) பித்ததோஷ ஸம்பந்தமான **பைத்திகலூதா** என்னும் சிலந்திகடித்தால் தாபமும், நாவறட்சியும், கொப்புளமும், ஜ்வரமும், மயக்கமும் காணும் ; கடித்தவிடத்திலுள்ள கொப்புளம் அதிகச் சூடாகவும், சிவப்பும்-மஞ்சளும் கலந்த நிறமுள்ளதாகவும், நீர்ப் பசையின் கசிவுள்ளதாகவும், திராக்ஷைக்கனி போன்றதாகவும் இருக்கும். (2) கபதோஷ ஸம்பந்தமான **ச்லேஷ்மிகலூதா** என்கிற சிலந்தியின் கடியானது கடினமாகவும், வெண்மையாகவும், ஈச்சம் பழம் போன்றதாகவும் இருக்கும் ; அவ்விஷம் அதிக நித்திரையையும், குளிர் ஜ்வரத்தையும், இருமலையும், அதிக அரிப்பையும் உண்டுபண்ணும். (3) வாத தோஷ ஸம்பந்தமான **வாதிகலூதா** என்பதின் கடி கடும் வலியுள்ளதாகவும், கருநிறமாகவும், கணுக்கள் தோறும் வலியுண்டுபண்ணுவதாகவும், ஜ்வரத்துடன் கூடியதாகவும் இருக்கும். இவ்விதமாகத் தோஷங்களுடைய குறிகளைக் கண்டு அச்சிலந்திகளின் ஸ்வரூபங்களைப் பகுத்தறிய வேண்டும். (4) மூன்று தோஷங்களின் ஸம்பந்தமுள்ள **ஸாந்நிபாதிகலூதா** என்பதின் கடி அஸாத்யமான கோளாறையுண்டுபண்ணும் : இதில் இருதயம் பாதிக்கப்பட்டு மயக்கமும், விக்கலும், தலைவலியும் காணும் ; வீக்கம் தோன்றி, வெண்மையாகவும், பசுமையாகவும், சிவப்பாகவும் கொப்புளங்களும் வெடிக்கும் ; உடல் நடுங்கும் ; வாந்தியுண்டாம் ; தாபமும், நாவறட்சியும், திருஷ்டிநாசமும், நாசிக் கோணலும் தோன்றும் ; உதடுகளும், வாயும், பற்களும் கருநிறமாகும் ; பிருஷ்டபாகமும் கழுத்தும் நிற்கமாட்டாது துவண்டு விழும் ; கடியிலிருந்து கனிந்த நாவற் பழநிறமுள்ளதாய் இரத்தம் கசியும். இங்கு கூறிய எல்லாச் சிலந்திகளும் பெரும்பாலும் ஸந்நிபாத தோஷ ஸம்பந்தமுள்ளவையே; ஆயினும் பைத்திகலூதாதி பேதங்கள் அந்தந்த தோஷத்தின் ஆதிக்யத்தைக் கருதி பகுக்கப்படுகின்றன. 48—53½.

லூதாவிஷத்தன்மையில் மூன்று விதம்:—லூதாவின் கடி உபேக்ஷிக்கப்படுமானால் அவ்விஷம் தீக்ஷ்ணம், மத்திமம், அவரம் என மூவகை நிலைமைகளைப் பெறும் ; அவை முறையே ஏழு நாட்களிலும், பத்து நாட்களிலும், பதினைந்து நாட்களிலும் ஆயுளைப் போக்கும்.—54½.

லூதாவிஷக்குறிகள் :—எல்லாச் சிலந்திக் கடியும் தத்ருமண்டலம் என்கிற வட்டமான படைபோன்றதாயிருக்கும் ; வெளுப்பாகவாவது, கறுப்பாகவாவது, சிவப்பாகவாவது, பசுமையாகவாவது, வெண்கறுப்பாகவாவது தோன்றி சர்மத்திற்கு மேல் உயர்ந்து பரிசிக்க மிருதுவாகத் தோன்றும் ; இது நடுவில் கறுப்பாகவும், அல்லது வெண் கறுப்பாகவும், ஓரங்களிற் சுற்றிலும் ஜாலங்கள் போன்ற பொரிகளால் சூழப்பட்டதாகவும் இருக்கு

விஸர்ப்பமும் வீக்கமும் அதிக வேதனையும் உண்டாகும்; ஜ்வரம், சீக்கிரத்தில் பக்குவமாகுந் தன்மை, நீர்க்கசிவு, சர்மப் பிளவு இவைகளும் உண்டாகும்; இந்தக் கடிவிரணத்திலிருந்து கசியும் துர்நீர் எந்த அவயவத்திற் பட்டபோதிலும் அவ்விடத்திலும் அவ்வித விரணமுண்டாம். 55—57½.

லூதா விஷத்தை வெளிவிடும் வழி:—(1) சிலந்தியானது ச்வாஸம், கோரப்பல், மலம், மூத்திரம், சுக்ரம், உமிழ்நீர், நகம், ஆர்த்தவம் ஆக இவ்வெட்டு மார்க்கங்களால் தன் விஷத்தை வெளியிடுவது வழக்கம்; அவற்றிலும் முக்கியமாய் வாயால்தான் விஷத்தைக் கக்கும். (2) சிலந்தியானது நாபியின் மேற்புறமாகவும், கீடங்கள் மேற்புறமாகவும் கீழ்ப்புறமாகவும் கடிப்பது வழக்கம்; அவ் விஷம் பற்றிய வஸ்திரம் முதலியது தேஹத்திற் பட்டாலும் கெடுதியை உண்டுபண்ணும்.—58, 59.

லூதா விஷக் கடியின் ஆரம்பம் முதற் காணும் குறிகள்:—(1) சிலந்தி விஷக்கடியில் அரை நாள் வரையில் அது கடித்த எக் குறியும் காண்பதில்லை. அதன் பிறகு முதல் தினத்தில் ஊசியாற் குத்தப்பட்டது போன்ற குறி காணும்; அதன் நிறம் விளங்காத வகையில் ஏற்பட்டு, அக் கடி தோன்றுவதும் மறைவதுமாயிருந்து, சிறிது அரிப்பும் வலியும் உள்ளதாயிருக்கும். (2) இரண்டாம் நாள் ஓரங்களில் அவ்வீக்கம் உயர்ந்து காண்பதுடன், சிறு சிறு கொப்புளங்களால் சூழப்பட்டிருக்கும்; விளக்கமாக ஏதேனும் நிறம் தோன்றி, மத்தியில் சிறிது தாழ்ந்து, தினவுள்ளதாய், கிரந்தியைப் போன்றதாகக் காணப்படும். (3) மூன்றாம் நாள் ஜ்வரம் காணும்; மயிர்ச் சிலிர்க்கும்; அகலைப் போன்று வட்டமான சென்னிற மண்டலம் தோன்றி, குத்தலுண்டாம்; அங்கு மயிர்க் கால்களிலிருந்து நீர் கசியும். (4) நான்காம் நாள் வீக்கம் பெரிதாகும்; தாபத்தையும், ச்வாஸத்தையும், தலைச் சுற்றலையும் உண்டுபண்ணும். (5) ஐந்தாம் நாள் விஷம் பலமாக விருத்தியடைய, அதனுல் பலவிதமான கோளாறுகளும் தோன்றும். (6) ஆறும் நாள் அவ் விஷம் மர்மங்களிலும் பரவி, (7) ஏழாம் நாள் உயிரைப் போக்கும். இவை தீக்ஷ்ணமான லூதா விஷத்தின் குறிகள்; இங்ஙனமே மத்திம-ஹீன விஷங்களின் குணங்களையும் கண்டறிக. (8) இவ் விஷம் பிறகு இருபத்தொரு நாட்களில் முற்றிலும் தானே தணிந்துவிடும். 60—65½.

சிலந்திக் கடியில் இரக்தமோக்ஷணம்:—லூதா என்னும் சிலந்தியினுல் கடிக்கப்பட்டால், உடனே கடிவாயைச் சுற்றிலும் சஸ்திரத்தினுல் கீறி இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும். பிறகு ஜாம்பவோஷ்டம் முதலிய யந்திரத்தினுல் சுட்டுவிடவும் வேண்டும்.—66¾.

லூதா தம்சங்களில் தாஹச் சேதங்களுக்குத் தகாதவர்கள்:— பித்தம் மேலோங்கிய லூதாவிஷத்தில் கடிவாயைச் சுடக் கூடாது. மேலும் கடின தேஹ முள்ளவனுக்கும், மயிர்ச் சிலிர்க்கை யேற்பட்டிருப்பவனுக்கும் தாஹசிகித்ஸையும், அறுக்கும் சிகித்ஸையும் தகா; கடி மர்மஸ்த்தாநம், பூட்டுகள் முதலியவற்றைப்பற்றி யிருந்தாலும், எல்லாப் பாகங்களிலும் பரவி யிருந்தாலும் அச் சிகித்ஸைகளைச் செய்யக்கூடாது.—67½.

லூதாவிஷத்திற்கேற்ற சிகித்ஸைகள் :— (1) சிலந்தி கடித்த விடத்தை முதலில் சுட்டுவிட்டு, அகதௌஷதங்களைத் தேனோடும், இந்துப்போடும் கலந்து, அதை லேபநமாக உபயோகிக்கலாம். (2) அதன்பிறகு பாலுள்ள மரங்களின் கஷாயங்களை மிகக் குளிரச் செய்து மேலே ஊற்றலாம். (3) கடிவாய்க்கு நாற்புறமிருந்தும் ச்ருங்கம் முதலியவற்றாலாவது, ஸிரையின் மூலமாகவாவது இரத்தத்தை வெளிப்படுத்தலாம். (4) பிறகு அரசு-நறுவிலி-தான்றிக்காய் இவற்றின் குளிர்ச்சி பொருந்திய கஷாயாதிகளால் பரிஷேகங்களையும், லேபநங்களையும் செய்யலாம். (5) ஞாழல், மஞ்சள், மாமஞ்சள், தேன், நெய் இவற்றைச் சேர்த்து செய்யப்படும் லேபநாதி ஔஷதம் **பத்மக அகதம்** எனப்படும்; இதுவே ஸகல லூதாவிஷங்களுக்கும், கீடவிஷங்களுக்கும் ஏற்ற மற்றொரு **ஸார்வகார்மிக அகதம்** எனக் கூறப்படும். (6) மஞ்சள், மாமஞ்சள், வர்த்தங்கி, மஞ்ஜிஷ்டி, கிரந்திதகரம், நாககேஸரம் இவற்றைத் தேனும் நெய்யுங் கூட்டி உபயோகிக்கலாம்; **சம்பகாகதம்** எனப்படும் இது முந்தியதைவிட அதிக குணந் தரக் கூடியது. (7) பசுஞ்சாணச் சாறு, சர்க்கரை, நெய், தேன் இவற்றைக் கூட்டிச் செய்யப்படும் லேபநமும் முந்தியதைப் போலவே குணம் செய்யும். (8) நாயுருவி, மநச்சிலை, அரிதாளம், மாமஞ்சள், தமநம், காவி, கிரந்திதகரம், ஏலக்காய், கோஷ்டம், மிளகு, அதிமதுரம் இவற்றைச் சூர்ணம் செய்து, நெய்யும் தேனுங்கூட்டிக் குழைத்து லேபநம் செய்யலாம்; இது **மந்தராகதம்** என்று கூறப்படும். (9) கிரந்திதகரம், வெள்ளிலோத்தி, வசம்பு, கடுகரோஹிணி, வட்டத்திருப்பி, ஏலம், இலவங்கப் பத்திரி, கேஸரி இவற்றாலான லேபநம் **கந்த மாதந-அகதம்** என்று மொழியப்படும். (10) அதிக தோஷப்பற்றுள்ள விஷக்கோளாறுகளில் விஷஹரமான ஔஷதங்களைக் கொண்டு சோதந சிகித்ஸை செய்யவேண்டும். (11) கபம் அதிகரித்துள்ள லூதாவிஷத்தில் அதிமதுரம், மருக்காரை, ஏறழிஞ்சில், பேய்ப்பீர்க்கு, ஆவாரை, இவற்றின் சூர்ணத்தை சிலேஷ்ம தோஷம் விருத்தியான விஷ தோஷத்தில் த்ரிபலா கஷாயத்துடன் உட்கொண்டு, அவ் விஷத்தைத் துரிதமாக வாந்தி செய்துவிட வேண்டும். (12) காட்டு வாகையின் இலை - பட்டை - வேர் - காய் இவைகளை ஏறழிஞ்சில்

வேருடன் சூர்ணம் செய்து, த்ரிபலை - கருஞ்சாறணை - சிவதை இவை முதலியவற்றின் கஷாயத்துடன் அதைப் பருகச்செய்து விரேசநம் செய்விக்கலாம். 68—76½.

**விஷ விரணத்திலிருந்து கர்ணிகாபாதநம் :—** (1) அழற்சி, வீக்கம் முதலியவை நிவ்ருத்தியான பிறகு, கடித்தவாயி லுண்டான கர்ணிகை யென்கிற முளையை விழச் செய்ய வேண்டும். (2) குசும்ப புஷ்பம், பசுவின் பல், பிரம்மதண்டுப் பால், புறாவின் மலம், சிவதை, இந்துப்பு, நேபாளம் இவற்றை அரைத்து மேலே லேபநம் செய்வதால் விஷப் புண்ணிலுள்ள முளையை உதிரச் செய்யலாம். (3) பேய்த்தும்மட்டிவேரை மூங்கில் நரம்பில் அரைத்துத் தடவி, அதனால் தேய்த்தாலும் முளை விழுந்துவிடும். (4) இந்துப்பு, கோஷ்டம், நேபாளம், கடுகரோஹிணி, கள்ளி, பேய்ப் பீர்க்கன் வேர், கடைந்தெடுத்த கிண்வம் என்கிற சாராயச் சத்து இவற்றை அரைத்துத் தடவினாலும் அதே குணம் செய்யும். (5) கர்ணிகையை வீழ்த்தும்போதே விஷஹரமான ஔஷதங்களால் பிணியாளிக்கு ப்ருஹ்மணசிகித்ஸையையும் செய்ய வேண்டும். 77—80.

**விஷ சிகித்ஸையில் ஸ்நேஹப் பிரயோகம் :—** விஷப் பற்று ஏற்பட்டிருக்கையில் செய்ய வேண்டிய ஸ்நேஹ சிகித்ஸைகளி லெல்லாம் அவற்றை தைலத்தாலன்றி க்ருதத்தினாலேயே செய்ய வேண்டும்; புற்களின் குவியல் அதிற் பற்றிய அக்னியைப்போல் தைலம் விஷத்தை விருத்தி செய்துவிடும்.—81.

**பித்தாதி தோஷங்கள் மேலிட்ட லூதா விஷங்களுக்கு ஏற்ற ஔஷதங்கள் :—** (1) வெட்டிவேர், கொய்யா, நன்னாரி, கோரைக் கிழங்கு, வன்னிமரம், சந்தனம், வாகை, வேலம்பாசி, கருநெய்தல், கிரந்திதகரம், அதிமதுரம், இலைவங்கப்பட்டை, ஈச்வரமூலி, கொட்டிச்சாந்து, மருக்காரையின் உட்சதை ஆகியவை ஒரு முறை. (2) மஞ்சள், கோரைக்கிழங்கு, விஷ்ணுக்கிராந்தி, திப்பிலி, சுக்கு, மோடி, சித்திரமூலம், மாவலிங்கை, அகில், பில்வம், பாதிரி, வேம்பு, கடுக்காய், நஞ்சறுப்பான் பூண்டு, நாககேஸரம் ஆகியவை மற்றொரு முறை. (3) பில்வம், சந்தனம், கிரந்திதகரம், நெய்தல், சுக்கு, திப்பிலி, நீர்க்கடம்பு, நீர்வஞ்சி, கோஷ்டம், புளி, சக்கரவர்த்திக்கீரை, பாதிரி, கண்டுபாரங்கி, ஆவாரை, மருக்காரை, மஞ்சள் ஆகியவற்றின் கூட்டு மூன்றாம் யோகம். இம் மூன்று ஔஷதமுறைகளும் முறையே பித்ததோஷமும், ச்லேஷ்மதோஷமும், வாததோஷமும் மேலிட்ட மூன்றுவித லூதாவிஷங்களை, ஒழுங்கான நடக்கையுள்ளவர் முறை தவறிய மூடர்களைப் போல் ஒழித்துப் போடவல்ல சிறந்த அகதௌஷதங்களாம். இவற்றைக் கஷாயாதிகளாகப் பக்குவம் செய்து

பாநம் செய்யவும், நஸ்யமிடவும், லேபநம் பண்ணவும், பரிஷேக மாகப் பிரயோகிக்கவும் உபயோகிக்கலாம். 82—85.

ஸர்வலூதா விஷஹர யோகம் :—வெள்ளிலோத்தி, வெட்டிவேர், கொட்டிச்சாந்து, தாமரையிலுள்ள புஷ்பத்தூள், கருஞ்சந்தனம், செஞ்சந்தனம், காட்டுமல்லிகை, கள்ளி, தாமரைக்கொடி இவை கஷாயாதிகளாகப் பக்குவம் செய்வது முதலிய எந்த முறைகளில் உபயோகிக்கப்பட்ட போதிலும் எல்லா லூதாவிஷங்களையும் நீக்கும்.—86.

---

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்.

## மூஷிகாளர்க்க விஷப் பிரதிஷேதம்.

இனி மூஷிகாளர்க்க விஷப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துரைக்கப்படும் :—

மூஷிகங்கள் பதினெட்டு விதம் :—லாலநம், சபலம், புத்திரம், ஹஸிரம், சிக்கிரம், அஜிரம், கஷாயதந்தம், குலகம், கோகிலம், கபிலம், அஸிதம், அருணம், சபலம், ச்வேதம், கபோதம், பலிதோந்துரம், சுசுந்தரம், ரஸாலம் என்று மூஷிகங்கள் என்னும் எலிகளின் ஜாதி பதினெட்டு விதம்.—1, 2.

மூஷிகவிஷத்தாலுண்டாகும் விகாரங்கள் :— முற்கூறிய எலிவகைகளின் சுக்ரம் தேஹத்தில் விழுந்தாலும், அல்லது அவற்றின் சுக்ரம் படிந்த அவயவங்கள் மனித தேஹத்திற் பட்டாலும், அவ்வித சுக்ரவிஷம் பற்றிய இடம் தூஷிக்கப்பட்டு, வெளிறிப்போம் ; கிரந்திகளும், வீக்கமும், அழுகுதலும், மண்டலரூபமான படைகளும் அவ்வவயவங்களில் தோன்றும் ; தலைச்சுற்றல், அரோசகம், குளிர்ஜ்வரம், அவயவங்களில் அதிக வேதனை, நடுக்கம், கணுக்கள்தோறும் வலி, மயிர்ச்சிலிர்க்கை, கடிவாயில் தூர்நீரூறுதல், மூர்ச்சை இக்குறிகள் உண்டாவதுடன், சிலேஷ்மதோஷம் மிகவும் உரைந்து பெருங்கட்டிகளாகப் போய், சிறிய எலிக்குஞ்சுகளைப் போன்ற தோஷங்களை நீடித்த காலம் கக்குவான் ; அத்துடன் நாவறட்சியும் தொடரும். 3—5.

ஆகுவிஷம்[2] :—ஆகு என்கிற பெருச்சாளியின் விஷம் வியவாயி ; அவ்விஷக்கடி கஷ்டஸாத்யமானது ; அடிக்கடியும் தேஹத்தில் விருத்தியாய் தூர்க்குணத்தைக் காட்டும்.—5½.

---

1. மூஷிகங்கள்—எலி ஜாதிகள் ; அளர்க்கம்—வெறிநாய் ; இவற்றின் விஷக்கடிகளையும், அவற்றிற்குப் பரிஹாரமுறைகளையும் விளக்கும் அத்தியாயம்.

2. ஆகுவிஷம் — பெருச்சாளி விஷம்.

மூஷிகாதி விஷக் கடிகளில் அஸாத்யங்கள் :—(i) மூர்ச்சை, தேஹவீக்கம், கருநிறமாகத் தேஹம் மாறுதல், கடிவாயிலிருந்து துர்நீர்க்கசிவு, சப்தம் கேளாமை, ஜ்வரம், சிரோபாரம், உமிழ் நீர் அதிகமாய் ஊறுதல், வாந்தி இவை எலிக்கடிவிஷத்தின் அஸாத்யக் குறிகளாம். (2) மூத்திரவஸ்தி வீங்கிப் போதல், உதடுகள் கறுத்தல், பெருச்சாளிகள் போன்ற கிரந்திகள் தேஹமெங்கும் தோன்றுதல், மூஞ்சுறுவின் நாற்றம் உடலிலுண்டாதல் ஆகிய இக் குறிகளுள்ள பெருச்சாளி விஷக்கடியுள்ளவனுக்குச் சிகித்ஸை செய்வதிற் பயனில்லை. 6—7½.

அளர்க்கம் அல்லது வெறி நாய் :—தோஷங்கள் நாயின் உடலிற் பிரகோபித்து, கபதோஷத்தை மேலாகக் கொண்டு, ஸம்ஞாவஹநாடிகள் என்கிற உணர்ச்சி நரம்புகளிற் பரவி, அதற்குள்ள ஸாதாரண அறிவைப் போக்கி, தாதுக்களில் மிகக் கடுமையான குழப்பத்தை உண்டுபண்ணும்; அந்தப் பிராணியின் வாயிலிருந்து உமிழ்நீர் பெருகிக்கொண்டிருக்கும்; கண்பார்வை யிழந்து, செவியும் செவிடாகும்; எங்கும் ஓடியலையும்; வால்-வாய் தோள்-தலை இவை தளர்ந்து சரிந்திருக்கும்; முகம் துயரமுற்றுத் தொங்கிக் கிடக்கும்; இவை நாயின் அளர்க்க விஷக் குறிகள். 8—9½.

வெறிநாய் விஷக்கடி :—(1) அவ்வித நாயால் கடிக்கப்பட்டால் கடிவாய் திமிர்த்திருக்கும்; கருநிறமான இரத்தம் அதிலிருந்து கசியும்; பிறகு சிரஸ்ஸிலும் இருதயத்திலும் வேதனை காணும்; ஜ்வரமும், விறைப்பும், நாவறட்சியும், மூர்ச்சையும் உண்டாகும். (2) இதே விதமாகக் கோரப்பற்களால் தாக்குமியல்புடைய வேறு விலங்குகளின் கடிவிஷங்களும் இருக்குமென்றறிக.—10, 11.

விஷக்கடிகளில் ஸவிஷ நிர்விஷக்குறிகள் :—(1) விஷப் பிராணிகளால் கடிக்கப்பட்டு விஷம் அவயவத்திற் பற்றியிருந்தால் அரிப்பு, குத்தல், நிறமாறுபாடு, உணர்ச்சியின்மை, துர்நீர் வடிதல், ஜ்வரம், தலைச் சுற்றல், அழற்சி, கடிவாயில் சிவப்பு, பழுத்துப் பக்குவமாதல், சதை பதனழிந்து அழுகுதல், கிரந்திகள், சதை முதலியவை சுருங்கல், கடிவாய் வெடித்தல், கொப்புளங்கள், கர்ணிகைகள் என்கிற சிறுசிறு முளைகள், மண்டலங்கள் என்கிற தழும்புகள் ஆகிய குறிகள் தோன்றும். (2) கடித்தும் விஷப்பற்றில்லாமலிருந்தால் இக்குறிகள் காணப்படா.—12, 13.

வெறி கொண்ட விலங்குகள் கடித்தால் காணும் விசேஷக் குறிகள் :—(1) வெறிகொண்ட எந்தப் பிராணி கடிக்கின்றதோ அப் பிராணி கத்துவதுபோலவே மனிதன் கத்திக் கொண்டு உயிரிழப்பான்; திடீரென்று கண்ணாடிகள், தண்ணீர் இவை முதலியவற்றில் அந்தப் பிராணியின் சாயையே அவனுக்குத் தோன்றும். (2) வெறிகொண்ட விலங்கால் கடிக்கப்படாமலே அவ்விலங்கின்

குரலைக் கேட்டும், பரிசித்தும், அவற்றைப் பார்த்தும் மனம் பதறி, நீரைக் காணும்போது ஒருவன் மிகப் பயந்தானானல் அவ்விதக் கோளாறு **ஜலஸந்திராஸம்** என்று கூறப்படும்; அதுவும் அஸாத்யமாம்.—14, 15.

## மூஷிகாதி விஷங்களுக்குச் சிகித்ஸை.

**ஆகுவிஷ சிகித்ஸை** :—(1) பெருச்சாளி கடித்த கூடிய சீக்கிரத்தில் கடித்தவிடத்தை உலோஹக் கம்பியைக் காய்ச்சிச் சுட்டுப் போடவேண்டும்; அல்லது கண்ணாடித்துண்டினாலாவது சுடவேண்டும்; இல்லையேல் அக்கடி கடும் வேதனையளித்துக் கர்ணிகை யென்னும் முளைகளை யுண்டுபண்ணும். (2) அவ்விதம் சுடப்பட்ட கடிவாயைக் கீறி இரத்தத்தை வடியச் செய்துவிட்டு, காட்டுவாகைப்பூ, மஞ்சள், கிரந்திதகரம், குங்குமப்பூ, சீந்திற் கொடி இவற்றை அரைத்து அதன்மேல் லேபநம் செய்ய வேண்டும் (3) ஒட்டடைக்கரி, மஞ்ஜிஷ்டி, மஞ்சள், இந்துப்பு இவற்றை அரைத்து லேபநம் செய்யப் பெருச்சாளிவிஷம் நீங்குவதோடு, கர்ணிகை யேற்பட்டிருந்தால் அதுவும் உதிர்ந்துவிடும். (4) பிறகு அவ்விடத்தைக் காடிமுதலியவற்றால் கழுவி, (5) கண்டுபாரங்கி, வெண்குன்றிமணி, பில்வவேர், சீந்தில் இவற்றையும், விஷஹாரமும் சோபஹாரமுமான வேறு சரக்குகளையும் லேபநமாக அரைத்து மேலே பூசலாம். (6) சீக்கிரத்தில் ஸிராவியதை செய்து இரத்தத்தையாவது வெளிப்படுத்தலாம். (7) கருஞ்சாறடைக் கஷாயத்தையாவது, (8) முருங்கைக் கஷாயத்தையாவது, (9) ஏறழிஞ்சில் கஷாயத்தையாவது உட்கொண்டு வாந்தி செய்யலாம். (10) பேய்ச்சுரைக்காய், முருங்கைக் காய், தேவதாளிக் காய், மருக்காரை இவற்றைச் சூர்ணம் செய்து, தயிருடன் உட்கொண்டு விஷத்தைக் கக்கி விடலாம்.—16—21.

**உந்துரவிஷ சிகித்ஸை** :— (1) வசம்பு, மருக்காரை, கோரைக் கிழங்கு, கோஷ்டம் இவற்றைச் சூர்ணம் செய்து, கோமூத்திரத்தினால் அரைத்து முன் முறையிற் கூறியபடி தயிருடன் உட்கொள்ள ஸகல உந்துரஜாதி விஷமும்[1] தீரும். (2) வெண் சிவதை, கருஞ்சிவதை, த்ரிபலை இவற்றின் கல்கமும் விரேசனத்திற்காக உபயோகிக்கக் கூடியதாம். (3) த்ரிகடுவை மிக நுண்மையாகப் பொடி செய்து, கோமயத்திற் குழைத்து அஞ்ஜந மிடுவதும் நலம். (4) விளாம்பழத்தையும், கோமயத்தையும் ஒன்றாக அரைத்து, அதில் தேன் கூட்டிப் பருகலாம். (5) அம்மாம் பச்சரிசிவேரைக் கொண்டு பக்குவம் செய்த க்ருதத்தைப் பானம் செய்யலாம். (6) மஞ்சள், மரமஞ்சள், குன்றிமணி, மஞ்

1. உந்துரம்—சுண்டெலி, மூஞ்சூறு முதலியவற்றிற்கு இது பொதுப் பெயராக இங்கு கருதப்படுகிறது.

எடுத்து வைக்கவும். இதில் எந்த அளவு உட்கொண்டால் ஒரு வேளை உணவை எடுத்துக்கொள்ளுவதற்குத் தடை யுண்டாகாத வாறு அது ஜீர்ணமாகுமோ அது இவ்வௌஷதம் உட்கொள்வதற்கான அளவாகும். இவ்வௌஷதம் ஜீர்ணமானதும் காரரிசியன்னத்தைப் பாலிற் கலந்து புஜிப்பது நலம். பிரம்மதேவனால் கூறப்பட்ட மிகப் பிரசஸ்தமான இந்த இரஸாயநத்தைப் பருகி வைகாநஸர்களும், வாலகில்யர்களும், வேறு வேறு அத்தகைய முனிவர்களும் மேன்மையுற்றனர்; சோம்பல்-களைப்பு-சோர்வு-கிழத்தனம் முதலியவை நீங்கி, சர்மம் முதலியது சுருக்கங் கொள்ளல்-வியாதி இவை நீங்கியவர்களாய், மிகச் சிறந்த மேதை யென்னும் ஞானம்-ஞாபகசக்தி-தேஹ-மநோபலம் இவற்றையும் பெற்று, நீண்ட ஆயுளையும் இதனால் பெறலாம். 15—23.

அபயாமலக ரஸாயநம்:—எக்கெடுதலுமில்லாது பொறுக்கி யெடுத்த ஆயிரம் கடுக்காய்களையும், ஆயிரம் நெல்லிக்காய்களையும், ஆயிரம் திப்பிலிகளையும் இளம் பலாசமரத்தை யெரித்தெடுத்த திரவக்ஷாரம் அடங்கிய ஒரு பாத்திரத்திற் கொட்டிக் கலக்கி, அந்த க்ஷாரம் அனைத்தும் ஊறிய பிறகு நிழலிலுலர்த்தி, விதை நீக்கிச் சூர்ணம் செய்து, அதற்குக் கால் பங்கு சர்க்கரையும், நான்கு மடங்கு தேனும் நெய்யுங் கூட்டி, நெய்வைத்துப் பழகிய பாத்திரத்தில் அனைத்தையும் சேர்த்து, பூமியில் ஆறு மாஸகாலம் புதைத்து வைத்து எடுக்கவும். இதை நாள்தோறும் ஜாடராக்னியின் பலத்திற்கேற்றவளவு முற்பகலில் உட்கொண்டு, உசிதமான பத்தியாஹாரத்துடன் இருந்து வரவேண்டும். இவ்விதம் அவ்வனைத்தையும் புஜித்தபிறகு வியாதியின்றியே கிழத்தனம் பெறுமலே, தேஹபலம், தேஹபுஷ்டி, ஞாபகசக்தி, விசேஷ புத்தி முதலியவற்றையும் பெற்று நூறுண்டளவும் இனிது ஜீவித்திருப்பான். 24—27.

ஆமலகரஸாயநம்:—(1) பொந்துகளற்றதாயும், பூச்சிகளால் அரிக்கப்படாததாயுமுள்ள பச்சைப் பலாச மரத்தின் முனையை வெட்டியெறிந்து, அவ் வெட்டிய முனையில் இரண்டு முழம் ஆழம் குழியாகச் சிதைத்தெடுத்து, புதிதாகப் பறித்துவந்த நெல்லிக் கனிகளை அதில் நிரப்பி விடவும்; பிறகு அந்த மரத்தை அடிமுதல் முனைவரையில் தர்ப்பைப் புரிகளால் சுற்றி, தாமரைக் குளத்துச் சேற்றை மேலே பூசி, அதைச் சுற்றிலும் காட்டு வறட்டிகளை அடுக்கிக் காற்று வீசாத ஸமயம் பார்த்து நன்றாக எரிக்கவும்; அவ்விதம் சமைக்கப்பட்ட அந்த நெல்லிக் கனிகளை யெடுத்து ஒரு பாண்டத்திலிட்டு, நெய்யும் தேனும் அதில் ஊற்றி, இரஸாயநோபயோகத்திற் பிரியமுள்ளவன் அவற்றைத் திருப்தி யுண்டாகும் வரையில் உண்டு, நன்றாகக் காய்ச்சிய பாலையும் போதுமளவு பருகவேண்டும்; இதையே ஒரு மாஸம் உணவாகவுங் கொள்ள வேண்டும். (2) இதை யுபயோகிக்கையில்

இரஸாயந விதிக்கு ஏற்றவாறு விலக்கவேண்டியவைகளை யெல்லாம் பெருமுயற்சி செய்து விலக்கி வைக்க வேண்டும்; மேலும் குளிர்ந்த நீரைக் கையால் பரிசிக்கவுங் கூடாது. இவ்விதம் உபயோகித்துக்கொண்டு பதினொரு நாட்கள் கழிந்ததும் உரோமங்களும், பற்களும், நகங்களும் உதிர்ந்துவிடும்; பிறகு சொற்ப நாட்களிலேயே அவன் அழகிய உருவம் பெற்று, யானைக்குச் சமமான பலம் பெற்று, ஸ்த்ரீகளிடம் தளராத சக்திவாய்ந்தவனாவான்; மதியிற் சிறந்து, பலத்திற் செழித்து, மனோதைரியத்திற் சிறப்புற்று, ஆயிரமாண்டுகள் உயிர்வாழக்கூடியவனாகவும் ஆவான். 28—32.

ச்யவநப் பிராசம்:—தசமூலம், சிற்றுமுட்டி, கோரைக்கிழங்கு, ஜீரகம், ருஷபகம், நெய்தல், நெரிப்பயறு, இடிகொள், திப்பிலி, கர்க்காடகச்ருங்கி, மேதா, கீழாநெல்லி, சிற்றேலம், ஜீவந்தி, அகில், திராக்ஷை, அல்லிக்கிழங்கு, சந்தனம், கிச்சிலிக்கிழங்கு, சாறடை, காகோலி, க்ஷீரகாகோலி, வெண்குன்றிமணி, சீந்தில், நிலப்பனங்கிழங்கு, ஆடாதோடைவேர் இவற்றை வகைக்கு ஒரு பலமாக ஒரு த்ரோணம் ஜலத்தில் இடித்துச் சேர்த்து, ஐந்நூறு நெல்லிக்கனிகளையும் அதிற் போட்டு, ஊற்றிய ஜலம் நாலில் ஒரு பாகம் வற்றுமளவும் காய்ச்சி, நெல்லிக்கனிகளை யெடுத்துக் கொட்டைகளை விலக்கி, அதைப் பன்னிரண்டு பலம் தைலத்திலும், பன்னிரண்டு பலம் நெய்யிலும் நன்கு வறுத்தெடுக்கவும்; ஐம்பது பலம் கற்கண்டைப் பாகுபதமாக்கி, அதில் வறுத்தெடுத்த நெல்லிக்கனிகளைச் சேர்த்து லேஹ்ய பாகத்திற் பக்குவம் செய்தெடுக்கவும்; அவ்விதம் பக்குவமானதும் ஸ்நேஹ பதார்த்தத்திற் பாதியளவு தேனும், நான்கு பலம் மூங்கிலுப்பும், இரண்டுபலம் திப்பிலிப் பொடியும், ஒரு பலம் பொடித்த சதுர்ஜாதமும் கூட்டிக் கொள்ளவும். இதை அவரவருக்கு ஏற்ற அளவில் முற்கூறிய குடியென்னும் சிறு வீட்டில் இருந்துகொண்டு, பத்யபோஜனம உண்டு உபயோகித்து வரவேண்டும். 'ச்யவநப்பிராசம்' என்கிற லேஹ்யத்தைக் கிழத்தனத்தினால் மிகத் தளர்ந்து சீர்குலைந்த தேஹமுள்ளவராயிருந்த ச்யவநர் என்னும் முனிவர் உட்கொண்டு, ஸ்த்ரீகளுடைய கண்களைப் பறிக்கக்கூடிய ஸுந்தர புருஷனாக ஆய்விட்டார். இது காஸம், ச்வாஸம், ஜ்வரம், க்ஷயம், இருதயரோகம், வாத-ரக்தம், மூத்திரதோஷங்கள், சுக்ரதோஷங்கள், அரோசகம் இவற்றைப் பரிஹரிக்கும்; பாலர், வயது முதிர்ந்தவர், க்ஷயத்தினால் க்ஷீணமானவர், இளைத்தவர் இவர்களுக்குத் தேஹத்தைச் செழுப்பிக்கும்; மேலும் முறைப்படி உபயோகித்து வந்தால் இது மதி, ஞாபகசக்தி, தேஹகாந்தி, ஆரோக்கியம், ஆயுள் இவற்றை விருத்திசெய்யும்; அபாநவாயுவை

வெளிப்படுத்தும்; ஸ்த்ரீகளிடம் அதிக விருப்ப முண்டுபண்ணும்; இந்த்ரியங்களுக்கு பலம் தரும், ஜாடராக்னியை விருத்தி செய்யும். 33—41.

த்ரிபலா ரஸாயநம்:—த்ரிபலையைச் சூர்ணம்செய்து, அதை அதிமதுரத்துடனாவது, மூங்கிலரிசியோடாவது, திப்பிலியோடாவது, இந்துப்புடனாவது, ஒவ்வொரு[1] லோஹத்துடனாவது, பொன்னுடனாவது, வசம்போடாவது, ஒன்றுசேர்த்துத் தேன் நெய்யோடாவது, சர்க்கரையோடாவது ஸம அளவாகக் கூட்டியுட்கொள்ள அது சிறந்த இரஸாயநமாகும்; ஸகல ரோகங்களையும் தீர்க்கும்; மேலான மதி, ஆயுள், ஞாபகசக்தி முதலியவைகளையும் விருத்திசெய்யும்—42, 43.

இரஸாயந சதுஷ்கம்:—(1) வல்லாரையின் ஸ்வரஸத்தை ஜாடராக்னி பலத்திற்கேற்றவாறு உட்கொள்ளலாம். (2) அதிமதுரசூர்ணத்தைப் பாலுடன் பருகலாம். (3) சீந்திற்கொடி ஸ்வரஸத்தையும் பானம் செய்யலாம். (4) சங்கங்குப்பியை வேர்-புஷ்பம் இவற்றுடன் கல்கமாகச் செய்து உண்ணலாம். இந்த இரஸாயநங்கள் ஆயுளை விருத்தி செய்யும்; வியாதிகளைத்தையும் தீர்க்கும்; தேஹபலம், ஜாடராக்னி, தேஹநிறம், குரல் இவற்றைப் பெருக்கும்; மேலான மதியைத் தரும்; இவற்றுள் சங்கங்குப்பி மேத்யம் என்னும் புத்தியை விருத்தி செய்யுங் குணத்தில் அனைத்திலும் சிறந்தது.—44, 45.

மேத்ய க்ருதம்:—தட்டைக்கோரை, கடுகரோஹிணி, க்ஷீரகாகோலி, அதிமதுரம், சந்தனம், நன்னாரி, வசம்பு, த்ரிபலை, த்ரிகடு, மஞ்சள், மரமஞ்சள், பேய்ப்புடல், இந்துப்பு இவற்றை நன்கு அரைத்து அதற்கு மூன்று மடங்கு சங்கங்குப்பிச் சாற்றையும், அவ்வளவு பாலையும் அத்துடன் சேர்த்து, ஒர் ஆடகமளவு நெய் கலந்து பக்குவம் செய்யவும். இதை உட்கொள்ளின் மூடனும் வாசாலகனாவான்; கேட்கும் விஷயங்களைத்தையும் மனதில் சாச்வதமாகத் தரிப்பான்; மிகவும் புத்திசாலியாகவும், ஆரோக்கியவானாகவும் இருப்பான்.—46, 47.

பஞ்சாரவிந்த ரஸாயநம்:—தாமரையின் தண்டு, கிழங்கு, பூவிதழ், பூந்தாது, விதை இவ்வைந்தையும் அரைத்துக்கொண்டு, மேலான ரோக்குகளையும் பாலையுங்கூட்டி, இதில் க்ருதம் பக்குவம் செய்யவும்; இது 'பஞ்சாரவிந்த க்ருதம்' என்று வழங்கப்படும். ஆண்மை, தேஹபலம், மதி இவை குன்றிப்போய் வருந்துபவர் இதைப் பருகலாம்.—48.

1. ஒவ்வொரு லோஹம் என்று வெள்ளி, செம்பு, பித்தளை, ஈயம், அயம் என்கிற பஞ்ச லோஹங்கள் குறிக்கப்படுகின்றன.

குவலய சதுஷ்க ரஸாயநம் :—கருநெய்தலுடைய தண்டு, கிழங்கு, இதழ், பூந்தாது இவற்றையும், பொன்ரேக்கையும் நெய்யிற் சேர்த்துக் காய்ச்சி பக்குவம் செய்யவும்; இதுவும் பஞ்சாரவிந்தத்தைப் போல் இரண்டாம் இரஸாயநௌஷதம்; 'குவலய சதுஷ்க ரஸாயநம்' எனப்படும் இது பசுக்களின் புஷ்டியையும் விருத்தி செய்யுமென்றால் மனிதருக்குக் குணம் செய்யுமென்பதிற் கூறவேண்டுமோ?—49.

பிராஹ்மீ ரஸாயநம் :—பிராமியிலை, வசம்பு, இந்துப்பு, சங்கங்குப்பி, கரிசிலாங்கண்ணி, சூரியகாந்தி, வாலுளுவை, திப்பிலி இவை ஒவ்வொன்றும் மூன்று பலம் பிரமாணம்; பொன் இரண்டு யவப் பிரமாணம், வத்ஸநாபி ஒரு யவப் பிரமாணம்; இவற்றைச் சூர்ணம்செய்து ஒருபலமளவு நெய் சேர்த்துக் குழைத்து உட்கொள்ளவும்; இது ஜீர்ணமான பிறகு நிரம்பவும் நெய் கலந்து தேனுங் கூட்டி போஜனம் செய்யவும். இதை ஒரு வருஷகாலம் உபயோகித்துவர புத்தியும், ஞாபகசக்தியும் அதிகமாகும்; கிழத்தனை ரூபமான நோய், சோம்பல், திமிர்ப்பு, சிரமம், சோர்வு இவை நீங்கி, சிறந்த தெளிவையும் சாந்தியையும் பெற்று நூறாண்டு ஜீவித்திருப்பான்; மேலும் குஷ்டம், ச்வித்ரம், குல்மம், விஷஜ்வரம், உன்மாதம் என்னும் பித்து, கரவிஷம், உதரரோகங்கள், அதர்வ மந்திரங்களோதி ஏற்படுத்திய ஏவல்கள், மிகவும் பலமான வாதரோகங்கள் ஆகியவை இந்த ரஸாயநத்தினால் தீரும். 50—53.

நாகபலா ரஸாயநம் :— சரத்கால ஆரம்பத்தில் புஷ்ய நக்ஷத்திரத்தன்று அச்வ மூலியின் வேரைப் பெயர்த்தெடுத்து, முறைப்படி அதைச் சூர்ணம் செய்துவைத்துக் கொண்டு, அதிற் கால் பலம் பாலுடனாவது, தேன்-நெய் இவற்றிற் குழைத்தாவது உட்கொள்ளலாம்; அன்னம் புஜிக்காமல் பாலையே பருகிக்கொண்டு வரவும்; இவ்விதம் ஒரு வருஷ காலம் செய்துவர, அம்மனிதன் சிறந்த பலம் பெற்று, நூறாண்டு ஜீவிப்பான்.—54, 55.

கோக்ஷுர ரஸாயநம் :—நன்கு முதிர்ந்து கனியும் நிலைமையிலுள்ள நெருஞ்சிலைச் சமூலமாகப் பெயர்த்தெடுத்து, நிழலில் உலர்த்தி, வெகு நுண்மையாகச் சூர்ணம் செய்து, நெரிஞ்சிற் செடியின் ஸ்வரஸத்திலேயே நன்கு பாவனை செய்து, அதை ஒரு பிரஸ்ருதமளவு பாலுடன் புஜிக்கலாம்; அவ்வௌஷதம் ஜீர்ணமான பின்பு சம்பா அன்னத்தைப் பாலுடன் உண்ணலாம்; இதை இரண்டு துலா பிரமாணம் வரையில் உபயோகித்த பிறகு சிறந்த வலிமையையும், அழகிய உருவத்தையும், நூறாண்டு நீண்ட ஆயுளையும் அவன் பெறுவான்; பசு மந்தையிலுள்ள மிக்க வலிவுள்ள ரிஷபம் போல் சிற்றின்பத்திலும் பெரும் பற்றுள்ளவனாய் பலப்படுவான்.—56, 57.

வாராஹீகந்தாதி ரஸாயநங்கள்:—(1) அப்பொழுதே பெயர்த்தெடுத்த பன்றி முகக்குரங் கிழங்கைச் சுத்தமாய்ப் பால் விட்டு அரைத்துச் சாப்பிடவும்; பிறகு பாலையே உணவாகக் கொள்ளவும்; ஒரு மாத காலம் அன்னத்தை விலக்கி மாம்ஸத்தையேயாவது, அல்லது வெறும் பால் கலந்த அன்னத்தையாவது புஜித்துவரலாம்; இவ்விதம் செய்து கிழத்தனத்தை வெல்லலாம். (2) அக் கிழங்கையே மிக்க நுண்மையாகச் சூர்ணித்து, அக் கிழங்கின் சாற்றிலேயே நன்றாக பாவனை செய்து, நெய்யுடனும் தேனுடனும் அதைக் கூட்டியுண்டு, அவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு க்ருதம் பருகலாம். (3) அந்தக் கிழங்கைப் போலவே நிலைப் பனங் கிழங்கு, சிற்றுமுட்டி, பேராமுட்டி, அதிமதுரம், மணித்தக்காளி, யானைத்திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், கோரைக் கிழங்கு, சீந்தில், சூர்யகாந்தி, சங்கங் குப்பி, அமுக்கிறாய்கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு இவைகளையும் இரஸாயநமாக உபயோகிக்கலாம்; இவை விசேஷ மதியையும், நீண்ட ஆயுளையும், தேஹபலத்தையும் வ்ருத்தி செய்யக் கூடியவை. (4) வேலிப் பருத்தியில் அதன் புஷ்பங்களுக்குள்ள பசுமை, வெண்மை, கருமை என்னும் நிறங்களைக் கொண்டு பலவகை உண்டு; இவற்றுள் முந்தியதினும் பிந்தியது முறையே குணத்திற் சிறந்ததாம்; இவற்றை முறைப்படி இரஸாயநமாய் உபயோகிக்கலாம். (5) வேலிப்பருத்தியின் வேரை நிழலிலுலர்த்தி, நன்கு சூர்ணம் செய்து, நெய்யிலாவது, தேன்-நெய் இவற்றிலாவது, பாலிலாவது, ஜலத்திலாவது கலந்து ஒரு மாதகாலம் உட்கொண்டு, பிரம்மசர்யவிரதத்துடன் இருந்து, ஹிதமாகப் போஜனம் செய்துகொண்டு வந்தால், அம்மனிதன் நோயற்றவனாய், மேதாவியாய், பலசாலியாய், கீர்த்தியான உருவமமைந்தவனாய், சிறந்த ஜாடராக்னியைப் பெற்றவனாய் நூறாண்டு இனிது வாழ்வான். (6) அந்த வேர் தைலத்துடன் உட்கொள்ளப்பட்டால் ஒரு மாஸ காலத்தில் மிகக் கடுமையான வாத ரோகங்களையும், (7) கோமூத்திரத்துடன் உட்கொள்ளப்பட்டால் குஷ்டம்-கிலாஸம் இவைகளையும், (8) மோருடன் உட்கொள்ளப்பட்டால் மூல முளைகளையும் பரிஹரிக்க வல்லது. 58—65.

பல்லாதக ரஸாயநங்கள் :—(1) நன்றாகத் திரண்டு முதிர்ந்துள்ள சேராங் கொட்டைகளைக் கோடை காலத்திற் கொண்டு வந்து, தானியக் களஞ்சியத்திற் புதைத்து வைத்து, ஹேமந்த ருதுவில் அவற்றை யெடுத்து, அவற்றில் எட்டு கொட்டைகளை எட்டு மடங்கு ஜலத்திற் போட்டுக் காய்ச்சி, எட்டிலொரு பங்கு வற்றியதும அதை வடிகட்டிக் கொள்ளவும்; மதுரமாகவும, ஸ்நிக்த்தமாகவும், சீதவீர்யமாகவும் உள்ள பதார்த்தங்களால் சரீரத்தைப் பக்குவம் செய்துகொண்டு, அக் கஷாயத்தை ஆற

வைத்து, பால் கூட்டிப் பருகவும். இக் கஷாயத்தில் நாளொன்றுக்கு ஒவ்வொரு சேங்கொட்டை வீதம் அதிகப்படியாகச் சேர்த்துக் காய்ச்சி, மூன்று வாரங்கள் தொடர்ந்து அதை உட்கொண்டு வரவும். அதன் பிறகு தினத்திற்கு மூன்று வீதம் நாற்பது சேங்கொட்டை வரையில் உயர்த்திக்கொண்டே கஷாயம் பக்குவம் செய்து உட்கொண்டு வரவும். அதை உயர்த்தியுபயோகித்த விதமாகவே கிரமமாகக் குறைத்தும் போட்டுக் கஷாயம் காய்ச்சியுட்கொண்டு வரவேண்டும். இவ்வாறாக எழுபத்தேழு நாட்களில் ஆயிரம் கொட்டைகள் உபயோகிக்கப்படவேண்டும். இதையுபயோகிக்கையில் பிரம்மசரிய விரதத்திலிருந்து கொண்டு, நெய் - பால் - சம்பா - காரரிசி ஆகியவற்றை யுண்ணவேண்டும். சேராங்கொட்டை யுபயோகத்தை நிறுத்திய பிறகு கூட அதைப்போல் மூன்று மடங்கு நாட்கள் வரையில் அதே பத்தியாஹாரம் உபயோகிக்கப் படவேண்டும். இதனால் அருமையான ரூபம் வாய்ந்து ஸ்திரீகளுடைய அகமகிழ்ச்சிக்கும் பாத்திரமாவார்கள்; விசேஷமாக ஜாடராக்னியும் விருத்தியடையும்; பிரமேஹம், கிருமிகள், குஷ்டம், அர்சஸ், மேதோரோகம் இவையும் நீங்கும். (2) சிறந்த சேராங்கொட்டைகளை நசுக்கி, அவற்றை பிஷ்டஸ்வேதநம் என்கிற பாத்திரத்தில் நிரப்பி,[1] பூமியிற் பள்ளம் தோண்டி அதிற் புதைத்துள்ள ஒரு பானையின்மேல் அப்பாத்திரத்தை வைத்து, மேலே அகலால் மூடி, களிமண்ணால் முற்றிலும் பூசி, நாற்புறமும் பசுஞ்சாண வறட்டியை முற்றிலும் பரப்பித் தீயிடவும்; அவ்விதம் செய்ய, அவ்வித்திலிருந்து ஸ்வரஸம் பானைக்குள் கசிந்து விழும்; அதை மறுநாள் பானையிலிருந்து எடுத்து வைத்துக் கொண்டு, அந்த ஸ்வரஸம் ஒரு பாகமும், அதில் எட்டிலொரு பங்கு தேனும், இரண்டு மடங்கு நெய்யும் கூட்டி, முற்கூறியவிதமாக அதே நியமத்துடன் உட்கொள்ளலாம்; இம்மனிதனுக்கு அதே குணங்களும் உண்டாகும். (3) நன்றாகப் பருத்துக் கனிந்துவிழும் சேராங்கொட்டைகளை ஓர் ஆடகமளவு கொண்டுவந்து, செங்கற்பொடியிற் கலந்து தேய்த்து, நீர் விட்டுக் கழுவி, நிழலிலுலர்த்தி, இடித்தெடுக்கவும்; அவற்றை ஒரு திரோணம் ஜலத்திற் சேர்த்து, நாலிலொரு பங்கு ஜலம் வற்றும்படியாகக் காய்ச்சி வடிகட்டி, குளிரச் செய்து, அதில் ஒரு திரோணம் பால் கூட்டி மீண்டும் காய்ச்சவும்; அது மறுபடி நாலிலொரு பங்காக வற்றியதும், அதற்குச் சம அளவு நெய் கூட்டி, அதிற் போதியவளவு சர்க்கரையுங் கலந்து, துடுப்பால் கிளறிக்கொண்டே பக்குவம்

1. பிஷ்டஸ்வேதநம் — அரிசிமா முதலியதை ஆவியிற் சமைப்பதற்கு ஏற்றவாறு சிறு த்வாரங்களுள்ள மூடியுடன் அமைக்கப்பெற்ற சட்டி. இது ஒருவகை ஸ்வேதந யந்திரம். (இட்டலி முதலியது செய்வதற்கு உபயோகமாகும் தட்டு அல்லது சட்டி போன்ற பாத்திரம்).

செய்யவும்; அவை யெல்லாம் அவ்விதம் ஊறுவதால் ஒன்று கலந்து பக்குவமான பிறகு, தானியக் களஞ்சியத்தினுள் ஒரு வாரம் அதை நன்றாகப் புதைத்து வைக்க வேண்டும். அமுத ஸத்திற்குத் துல்லியமா யிருப்பதால் அம்ருதப் பிராசம் என்று கூறப்படுகிற இந்த இரஸாயனத்தைக் காலையிற் புஜித்து, இதற்கு அநுபானமாகத் தண்ணீராயாவது, பாலையாவது, மாம்ஸரஸத்தையாவது பருக வேண்டும்; இதை யுட்கொள்ளும் மனிதன் ஞாபகசக்தி, விசேஷ புத்தி, தேஹ பலம், மனோதைர்யம் இவைகளுடன் கூடியவனாய், பொன்கிரணப் போன்ற தேஹ காந்தியைப் பெற்றவனாய் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வான். (4) முன்னூறு சேங்கொட்டைகளை ஒரு திரோணம் ஜலத்திற் சேர்த்து, அது ஓர் ஆடகமளவாக வற்றும்படியாகக் காய்ச்ச வேண்டும்; அக் கஷாயத்தில் ஓர் ஆடகமளவு தைலம் சேர்த்து, கடுகரோஹிணி, அதிவிடயம், நாபி, த்ரிபலை, மனச்சிலை, தாளகம் இவற்றைக் கல்கம் மாதிரியாகக் கூட்டிப் பக்குவம் செய்யவும்; இவ்விதம் பக்குவமான ரஸாயனம் எல்லாக் குஷ்டங்களையும் தீர்க்க வல்லது. (5) சேங்கொட்டையை நெல்லிக் காய்ச் சதை யுடனாவது, தயிரின் மேலாடையோடாவது, தைலத்துடனாவது, வெல்லத்துடனாவது, பாலுடனாவது, நெய்யுடனாவது, வாற்கோதுமை மாவுடனாவது, எள்ளுடனாவது, தேனுடனாவது, மாம்ஸத்துடனாவது, பருப்புடனாவது புஜித்து வரலாம். இது தேஹத்தைப் புஷ்டியுள்ளதாக்கும்; புத்தியை விருத்தி செய்வதிற் சிறந்தது; ஆயுளையும் வளரச் செய்யும். 66—80.

**சேராங்கோட்டையின் போது குணங்கள்:**— சேராங்கொட்டை தீக்ஷ்ணமான உஷ்ண வீர்யமுள்ளது; நெருப்புக்குச் சமானமாய், தேஹத்தைப் புண் படுத்தும்; அதையே முறை தவறாது உபயோகித்தால் அமுதம் போன்று குணம் செய்யும். ஜாடராக்னியை உத்தீபனம் செய்வதிற் சிறந்ததான சேங்கொட்டையால் எளிதில் தீர்க்கக் கூடாத சிலேஷ்ம தோஷ ஸம்பந்தமான வியாதியாவது, மலபந்தமாவது கிடையாது.—81, 82.

**வாதாதப சிகித்ஸையில் பத்தியம்:**—வாதாதபிகம் என்கிற முறையிலும் கொள், தயிர், ஸூக்தம் என்கிற காடி, தைலம் அப்யங்கம் செய்து சொள்ளுதல், அக்னியினிடம் இருத்தல் ஆகியவற்றை விசேஷமாகப் பரிஹரிக்க வேண்டும்.—83.

**துவரக தைல முறைகள்:**—(1) துவரகம் என்னும் விருக்ஷங்கள் மேற்குக் கடற்கரைகளில் உண்டாகின்றன; அவற்றின் இலை தழைகள் அக்கடலின் அலைகளால் அலைக்கப் பெற்று வீசும் காற்றால் ஆட்டி அசைக்கப்படுகின்றன. அவ்வித மரங்களிலிருந்து மாரிகால ஆரம்பத்தில் நன்றாகக் கனிந்த பழங்களைப் பறித்து, அவற்றின் வித்துகளை உடைத்தெடுத்து வெய்யிலில்

உலர்த்தி சூர்ணம் செய்யவும்; இச் சூர்ணத்தை எள்ளை ஆட்டுவது போல் ஆலையிலிட்டு ஆட்டியாவது, குசும்பாவித்தைப் போல் பெரும் பாண்டத்திற் கஷாயம் போல் காய்ச்சியாவது தைலம் எடுக்கவும்; அதை மீண்டும் ஒரு பாத்திரத்திலிட்டு, அதிலுள்ள நீர் முற்றிலும் வற்றும் வரையில் காய்ச்சி, அடுப்பிலிருந்து இறக்கி வறட்டிக் குழியினுள் பதினைந்து நாட்கள் வைத்திருந்து எடுக்கவும். பிறகு மனிதன் ஸ்நேஹ-ஸ்வேதங்களைச் செய்துகொண்டு, வமந-விரேசநாதிகளால் சோதந சிகித்ஸையையும் செய்துகொண்டு, சுபதினத்தில் விடியற் காலத்தில் இதில் கால் பலம் தைலம் பருக வேண்டும்; பிறகு நான்கு வேளை போஜனம் செய்த பிறகு மீண்டும் இதைப் பருகவேண்டும்; அவ்விதமாக இதை நான்கு நான்கு போஜனங்களுக்கு ஒரு முறையாக உபயோகித்து வர வேண்டும். அத் தைலம் உட்கொள்ள ஆரம்பிக்கையில் "மஜ்ஜா ஸார மஹாவீர்ய ஸர்வாந் தாதூந் விசோதய. சங்க-சக்ர-கதா பாணிஸ் த்வாமாஜ்ஞாபயதேச்யுத:" என்கிற [1] மந்திரமோதி, அத்தைலத்தைப் பரிசுத்தமாக்கவேண்டும். இப் பிரயோகத்தினால் அம் மனிதனுடலிலுள்ள தோஷங்கள் மேல்முகமாகவும், கீழ்முகமாகவும் அடிக்கடியும் வமந-விரேசநாதிரூபமாக வெளியாகும். பிறகு மாலையில் ஸ்நேஹமும் உப்பும் விலக்கிக் குளிர்ந்த கஞ்சியைப் பருகலாம். இவ்விதமாகத் தள்ளவேண்டிய அபத்தியங்களை விலக்கிவிட்டு, இத்தைலத்தை ஐந்து நாட்கள் பருகவேண்டும். பிறகு பதினைந்து நாட்கள் பயற்றங்கஞ்சியை உட்கொண்டு வரவும். இதனால் ஸகல குஷ்ட ரோகங்களும் நீங்கும். (2) அத்தைலத்தையே கருங்காலிப்பட்டைக் கஷாயத்தில் மூன்று மடங்களவில் முறைப்படி பக்குவம் செய்து, முன்போலவே பதினைந்து நாட்கள் வறட்டிகளுக்கடியில் வைத்திருந்து, முற்றிலும் நியமமாயிருந்துகொண்டு ஒரு மாஸகாலம் பருகலாம்; அதை உடலில் தேய்த்துக் கொள்ளலாம்; முன் கூறியபடி ஆஹார முறையையும் கவனித்துபயோகித்து, குஷ்ட ரோகமுள்ள மனிதனைச் சீக்கிரத்தில் ஸ்வஸ்தப் படுத்தலாம். (3) அந்தத் தைலத்தையே கருங்காலிக் கஷாயமில்லாமல் நெய்யிலும் தேனிலும் கலந்து பதினைந்து நாட்கள் உட்கொள்ளவும்; மாம்ஸரஸமே ஆஹாரமாய் உட்கொள்ளத்தகுந்தது; இந்த முறையானது மனிதனுக்கு இருநூறு வயது ஆயுளையும் தரக் கூடியது. (4) அதே தைலத்தை ஐம்பது நாட்களளவும் நஸ்யமாகப் பிரயோகித்து வந்தால், அம்மனிதனை அழகிய

---

1. இந்த மந்திரத்தின் பொருள்:—"மிகச் சிறந்த ஸாரமுள்ள வித்தே, விசேஷ வீர்யமுள்ள வித்தே, நீ எல்லாத் தாதுக்களையும் நன்கு சுத்தி செய்வாயாக; அவ்விதம் செய்யுமாறு சங்கு-சக்கரம்-கதை இவற்றை யேந்தி நிற்கும் திருமால் உன்றனுக்குக் கட்டளை யிடுகின்றார்."

உருவமுள்ளவனாகவும், மிகச் சிறந்த ஞாபக சக்தியுள்ளவனாகவும், மூன்னூறு வருடங்களளவான ஆயுளைப் பெற்றவனாகவும் அவ்வௌஷதம் செய்துவிடும். 84—95.

பிப்பலீ ரஸாயநங்கள் :—(1) இரஸாயந குணங்களைப் பெற விரும்புபவன் ஐந்து திப்பிலிகளையாவது, ஏழு திப்பிலிகளையாவது, எட்டு திப்பிலிகளையாவது, பத்து திப்பிலிகளையாவது தேன்-நெய் இவற்றுடன் ஒரு வருஷகாலம் தொடர்ந்துண்ணலாம். (2) இரஸாயநத்தில் விருப்பமுள்ளவன் பலாசக்ஷாரத்தில் பாவனை செய்து, நெய்யிற் பொரித்தெடுத்த திப்பிலிகளை மும்மூன்றாகப் போஜனத்திற்கு முன்பு மும்முறைகளில் தேன்-நெய் இவற்றுடன் உண்ணலாம். (3) ஒரு தினத்திற்குப் பத்துத் திப்பிலி வீதம் பத்து நாட்கள் வரையில் பத்துப் பத்து வீதம் அதிகப்படுத்திக் கொண்டே பாலுடன் உண்ணலாம்; அவ்விதமே க்ரமமாக அதனுபயோகத்தையும் குறைத்துக்கொண்டே வரவேண்டும். இவ்வௌஷதம் ஜீர்ணமான பிறகு சாரியென்னத்தைப் பாலுடனும், நெய்யுடனும் புஜிக்கவேண்டும். இவ்விதம் ஆயிரம் திப்பிலிகளைப் பிரயோகிப்பது ஒரு சிறந்த இரஸாயநமாகும்; இந்த முறை வர்த்தமாந பிப்பலி எனப்படும். இவற்றை நல்ல பலமுள்ளவர் அரைத்துக் கல்கமாகவும், மத்திம பலமுள்ளவர் கஷாயம் காய்ச்சியும் உட்கொள்ளவேண்டும். (4) இரண்டாயிரம் திப்பிலிகளை முன்போலவே செம்மறியாட்டுப் பாலுடன் உட்கொள்ளலாம். இம் முறைகளின்படி உபயோகிக்கப்படும் திப்பிலிகள் காஸம், ச்வாஸம், தொண்டை வியாதிகள், க்ஷயம், மேஹம், க்ரஹணி, அர்சஸ், பாண்டு, விஷமஜ்வரம், சோபம், வாந்தி, விக்கல், ப்லீஹரோகம், வாத-ரக்தம் இவைகளைத் தீர்க்கும். 96—102.

லோஹரஸாயநங்கள் :— (1) இரண்டு கர்ஷமளவு திப்பிலியை நீர் விட்டு அரைத்து, இரவில் இரும்புப் பாத்திரத்தில் அதைப் பூசி, காலையில் இரண்டு அஞ்ஜலியளவு சுத்த ஜலத்தினால் அதைக் கழுவி யெடுத்து இரஸாயநமாகப் பருகலாம்; இவ்வாறு ஒரு வருஷகாலம் உட்கொண்டு, இஷ்டமான உணவையும் பானத்தையும் உபயோகித்துக்கொண்டு, இஷ்டமான காரியங்களையும் செய்யலாம். (2) சுக்கு, வாய்விடங்கம், த்ரிபலை, சீந்தில், அதிமதுரம், மஞ்சள், சிற்றாமுட்டி, பேராமுட்டி, கோரைக்கிழங்கு, தேவதாரு, அகில், சித்திரமூலம், செங்கழுநீர், தாமரை, நெய்தல், கருங்காலி, குங்கிலியம், வேங்கை, வேலம் பிசின் இவைகளையும் தனித்தனியே திப்பிலியைப்போலவே இரும்புப் பாத்திரத்தில் அரைத்துப் பூசி உட்கொண்டுவர, வியாதியற்றவனாய், கிழத்தனம் பெறாதவனாய், நூறு வருஷங்களளவும் நீண்டாயுளையும் பெற்று வாழ்வான். (3) முற்கூறிய

இரஸாயநச் சரக்குகளை இரும்புப்பாத்திரத்திற் பூசி வைத்து,
இரண்டு அஞ்ஜலிப் பிரமாணம் பால்விட்டுக் கழுவி உட்
கொண்டு வந்தால் முற்கூறிய குணங்களை இன்னும் சிறப்பாகச்
செய்வதுடன், அதினும் இரண்டு மடங்காக ஆயுளையும் அது
விருத்தி செய்யும். 103—106.

ஸோமராஜீரஸாயநங்கள் :—(1) வேங்கை, கருங்காலி இவ
ற்றைக் கூழ்போல் பக்குவம் செய்து, அதில் கார்போகரிசியைப்
பாவனை செய்தெடுக்கவும்; அதை வேலிப்பருத்தி-கடுக்காய்
இவற்றின் சூர்ணத்துடனும், அயபஸ்மத்துடனும் கலந்து,
தேன் - நெய் இவற்றிற் குழைத்து ஒரு வருஷமளவும் உட்
கொண்டுவர, அம் மனிதன் கிழத்தனத்துக்குரிய துர்க்குணங்கள்
நீங்கியவனாவான்; இதை யுபயோகிக்கையில் முன்பு கூறிய
ஆஹாரங்களையே நியதமாகப் புஜித்து வரவேண்டும். (2) தேஹ
மெங்கும் கடுங் குஷ்டத்தினால் வருந்துபவன் கார்போகரிசியை
நியதமாக எள்ளுடன் ஒரு வருஷ காலம் புஜித்து வந்தால்,
அவன் தனது தேஹகாந்தியினால் பிறகு சந்திரனையும் வெல்லு
வான். (3) கார்போகரிசியை உமி நீக்கிச் சூர்ணம் செய்து,
பாலிற் சேர்த்துப் பக்குவமாகக் காய்ச்சி, அதைக் கடைந்து, அதி
லிருந்து வெண்ணெய் எடுத்து, அதைத் தேன் கூட்டி யுட்
கொள்ளவும்; அதே மோரை பிறகு அதற்கு அநுபானமாகவும்
பருக வேண்டும்; தேஹமெல்லாம் கொதறிப் போய், விரல்களும்
நாசியும் மிகச் சுருங்கிப் போய் விகாரமடைந்த குஷ்டரோகி
களும் பட்டுப்போன விருக்ஷங்கள் மீண்டும் புதிதாகத் தளிர்த்
துச் செழிப்பதுபோல், நன்கு குணம் பெறுவர். 107—110.

லசுந ரஸாயநங்கள் :— (1) சைத்தியத்தினாலும், வாதத்தி
னாலும், பனியினாலும், எரிப்புண்ணாலும் வாதை யடைந்த
தேஹமுடையவர்களுக்கும், அசைவற்றும்-ஒடிந்தும்-வளைந்தும்-
வலிப்பெடுத்தும் கோளாறடைந்த எலும்புகளைப் பெற்றவர்களுக்
கும், வாத ரோகங்களால் பீடிக்கப் பட்டவர்களுக்கும் லசுநம்
என்கிற வெள்ளுள்ளி வெகு உபயோகமானது; அதை ஔஷத
மாயுபயோகிக்கக் கூடிய முறை இனி விவரிக்கப் படும். (2) அமு
தத்தைக் கள்ளத்தனமாகப் பெற்று அருந்திய இராகுவின்
கழுத்து அறுக்கப்பட்டுப் போக, அப்பொழுது அவன் தொண்
டையிலிருந்து நிலத்தில் வீழ்ந்த அம்ருத ரஸத் துளிகள் ரஸோ
நங்கள் அல்லது லசுநங்கள் என்கிற வெள்ளுள்ளிகளாக மாறின;
இவ்வஸ்து அஸுரனுடைய உடலிலிருந்து உண்டானதால்
இதை அந்தணர் புஜிப்பதில்லை; இது அமுதத்திலிருந்து நேராக
உற்பத்தியானதால் இரஸாயநங்களுள் முதன்மையானது. இது
**ரஸோநத்தின் வரலாறு.** (3) வெள்ளுள்ளியைச் சீத காலங்களில்
ஸாதாரணமாய் உபயோகிக்கலாம். கபதோஷ மதிகரித்தவன்

வஸந்த ருதுவிலும், வாததோஷத்தால் வருந்துபவன் மாரி காலத்திலுங்கூட இதை யுபயோகிக்கலாம். க்ரீஷ்ம ருதுவுக்குக் கூறிய விதிகளின்படி நடந்துகொண்டு வந்தால் எல்லாக் காலத்திலுமே இதை யுபயோகித்து வரலாம். ஸ்நேஹ சிகித்ஸையையும், சோதந சிகித்ஸையையும் செய்துகொண்டு, சீதளமும்-மதுரமுமான பதார்த்தாதிகளால் ஸகல ஆசயங்களையும் ஸம்ஸ்காரம் செய்துகொண்டு, அப்பால் இதை யுபயோகிக்க ஆரம்பிக்கவேண்டும்; இச் சிகித்ஸை செய்து கொள்பவனுடைய வீட்டிலுள்ள பரிசாரகர்களும் வெள்ளுள்ளிகளைச் சிரஸிலும் செவிகளிலுங் கூடத் தரித்துத் திரிவது நலம். (4) இமாலயத்திலும், சகதேசத்திலும் உற்பத்தியாகும் இதன் கிழங்குகளை வஸந்த ருதுவின் இறுதியில் எடுத்துவந்து, மேற் புறணிகளைக் களைந்துவிட்டு, இரவில் மதிரை முதலிய மது இனங்களிற் போட்டு ஊறவைக்க வேண்டும்; விடியற் காலத்தில் அவற்றை யெடுத்து நசுக்கி, சுத்தமான வஸ்திரத்திற் போட்டுப் பிழிந்து ஸ்வரஸமெடுத்து, முறைப்படி பக்குவம் செய்து பழகிய மதிரையை மூன்று பங்கு அத்துடன் சேர்த்து உட்கொள்ளலாம். அல்லது ஸ்வரஸமெடுத்தவுடனே வேறு எந்த மதுவையாவது, தைலத்தையாவது, புளித்த நீர்மோரையாவது, காடியையாவது காலமறிந்து அளவாகக் கலந்து உட்கொள்ளலாம். அல்லது அவ்விதமே தைலம்-க்ருதம்-கொழுப்பு-மஜ்ஜை-பால்-மாம்ஸரஸம் இவற்றில் எதையாவது தனியாக அச் சாற்றுடன் கூட்டியும் உட்கொள்ளலாம். வியாதியின் தன்மைக்கேற்றவாறு அந்தந்த சரக்குகளின் கஷாயத்துடன் கலந்தாவது பருகலாம். அல்லது இதன் இரஸத்தை மாத்திரம் ஒரு வாய் கொண்டளவு தொண்டையும் அதற்கடியிலுள்ள அன்னவாஹிக் குழலும் சுத்தமாவதற்காக உட்கொள்ள வேண்டும். வேதனை யேற்பட்டால் அடிக்கடியும் ஸ்வேதநம் செய்வது நலம். வாந்தியாவது மூர்ச்சையாவது ஏற்பட்டால் அப்பொழுது முகத்தில் திடீரென்று குளிர்ந்த ஜலத்தைத் தெளிக்கலாம். பிறகு சோர்வு தணிந்ததும், ஓஜோ தாது பலப்பட்டதும் மிச்சமுள்ள இரஸத்தையும் பானம் செய்யலாம். விதாஹம் என்னும் காந்தல் நீங்குவதற்காக மிகவும் சீதளமான சந்தனப் பூச்சு முதலியதை அதிகமாய் உபயோகித்துக் கொண்டு, குளிர்ந்த ஜலத்தில் தோய்த்தெடுத்த முத்துக்களையும், கர்ப்பூர மாலைகளையும் தரிக்கலாம். மது முதலியவற்றுடன் சேர்த்து இச் சாற்றை ஒரு குடவம் அளவாகவும், தனியாக அதை மாத்திரம் அதிற் பாதியளவாகவும், அதன் உட்சதையைக் கல்கமாக அரைத்து ஒரு பலமளவாகவும் உபயோகிக்கலாம்; இதை அன்னத்துடன் கலந்தும், ஆஹாரத்திற்கு முன்பாகவும் உபயோகிக்க வேண்டும். (5) லசுந ரஸாயநத்திற்குப் பத்தியமாக சங்கு-குருக்கத்திப்பூ-சந்திரன் இவற்றைப்போல் வெண்மையாயுள்ள நன்று

கப் பழகிய சம்பா அன்னத்தை முன்பு புஜித்த உணவு ஜீர்ண
மான பிறகு கஞ்சி யினங்களோடாவது, பாலுடனாவது, ஜாங்கல
தேசத்து மிருகங்களின் மாம்ஸ ரஸங்களோடாவது உண்ணலாம்.
(6) அதை யுபயோகிக்கையில் ஒரு மதுவையே தண்ணீரிற்
கலந்து பருகலாம்; மதுபானம் செய்யும் வழக்கமில்லாதவன்
அன்னம் ஊறிய நீரையாவது, காஞ்சிகமென்னும் காடியையாவது,
தெளிவான கஞ்சியையாவது உட்கொள்ளலாம். (7) வெள்ளுள்
ளியைக் கல்கமாக்கி, நெய் வைத்துப் பழகிய பாத்திரத்தில் அதற்
குச் சமம் நெய் கூட்டித் துடுப்பால் கிளறி நசுக்கி, அதிலேயே
பத்து நாட்கள் வைத்திருந்து முன்போலவே உண்ணலாம்; அல்
லது வஸையுடன்[1] புஜிக்கலாம். (8) புராணிகள் உரித்தெடுத்த
வெள்ளுள்ளிகளைச் சூலத்திற் குத்திப் பக்குவம் செய்த இறைச்சி
களுக்குள் நிரம்பவும் அடைத்து, அவற்றை அநேகம் ஊறுகாய்
முதலியவற்றுடன் தாராளமாக உண்ணலாம். (9) அல்லது வெள்
ளுள்ளியுடன் நெய்-காடி இவற்றைக் கூட்டித் துவையலாக
அரைத்து வேண்டியவளவு இலகு குணமுள்ள சொற்ப அன்னத்
தோடு புஜிக்கலாம். (10) வெள்ளுள்ளியின் குணகுணங்கள்:
பித்தாவரணம், இரக்தாவரணம் இவற்றைத் தவிர்த்து மற்ற
எல்லா ஆவரண தோஷங்களாலும் சூழப்பட்ட வாத ரோகத்தி
லாவது, கேவல வாதத்திலாவது வெள்ளுள்ளியினும் மேலான
குணந் தரத்தக்க வேறு திரவ்யம் எதுவும் கிடையாது. தண்
ணீர்-வெல்லம்-பால் இவற்றில் விருப்பமுள்ளவனுக்கும், மாம்
ஸம்-மது-புளிப்பு இவற்றில் வெறுப்புள்ளவனுக்கும், அஜீர்ணத்
தைத் தாங்க வியலாதவனுக்கும் வெள்ளைப் பூண்டு உண்மையில்
தீங்கிழைக்கும். (11) வெள்ளுள்ளியை உபயோகித்து வந்த பிறகு
இறுதியில் பித்தம் பிரகோபிக்குமென்று அஞ்சி மிருது விரேசநம்
கடைசியில் உபயோகிக்க வேண்டும்; இவ்விதம் செய்வதால் இர
ஸாயந குணங்களைப் பரிபூர்ணமாகப் பெறுவான். 111—130.

சிலாஜதுரஸாயநங்கள்:—(1) கோடை காலத்தில் சூரிய
கிரணங்களால் மிகச் சூடாக்கப்பெற்ற பர்வதங்கள் பொன் முத
லிய ஷட்தாதுக்களின்[2] ஸத்துவமடங்கியதான அரக்குபோன்ற

---

1. மூலத்தில் "வஸயா ஸமம்" என்பதற்குப் பதிலாக "பயஸா ஸமம்" என்று வேறு பாடமுண்டு; அதற்குப் "பாலுடன் புஜிக்கலாம்" எனப் பொருள்.

2. ஷட்தாதுக்கள் — ஆறு தாதுப்பொருட்கள் அல்லது உலோ ஹங்கள்: பொன், வெள்ளி, செம்பு, பித்தளை, வங்கம், அயம் என்பவை. [ஆகவே ஸ்வர்ணசிலாஜது, ரஜதசிலாஜது, தாம்ரசிலாஜது, த்ரபு சிலாஜது, வங்கசிலாஜது, லோஹசிலாஜது என்று சிலாஜதுவிலும் அறுவகை உண்டு. வெள்ளி ஸம்பந்தமானது கர்ப்பூரசிலாஜது என் றும், லோஹஸம்பந்தமானது கோமூத்திரசிலாஜது என்றும் ஆக முக்கியமாக இரண்டுவகை சிலாஜது பிரஸித்தம்.]

ஒருவகைப் பிசினைக் கக்குவதுண்டு; அது சிலாஜது என்று வழங்கப்படுகிறது; எல்லாச் சிலாஜதுவுமே திக்தரஸமும் கடுரஸமும் உள்ளது; சிறிது உஷ்ணவீர்யமானது; கடுபாகம், சேதநம் என்னும் குணங்களையும் பெற்றது; எல்லாவற்றிலும் லோஹதாது ஸம்பந்தமான சிலாஜதுவே மிகச் சிறந்தது. இது கோமூத்திரவாஸனையைப் பெற்று, கருநிறமாய், குங்கிலியம் போன்றதாய், நறநறப்பற்றதாய், ஸ்நிக்த்தமாய், ம்ருதுவாய், குருகுணமுள்ளதாய், புளிப்பு-துவர்ப்பு இவற்றைத் தவிர்த்து மற்றச் சுவைகளுடையதாய் இருக்கும்; இந்த கோமூத்ர சிலாஜது என்பது சிரேஷ்டமானது. (2) சிலாஜது பாவனை: வியாதி, பிணியாளியின் நிலைமைகள், அவர்களுக்கு ஸாத்மியமான வஸ்துக்கள் இவற்றை நன்றாகக் கவனித்தறிந்து, சிலாஜதுவை உலோஹபாத்திரத்தில் பாவனை செய்து உபயோகிக்க வேண்டும். முதலில் வெறுந்தண்ணீரால் அதைக் கழுவியெடுத்து உலர்த்தி, அப்பால் பின்வருமாறு கஷாயங்களைக் கொண்டு பாவனை செய்யவேண்டும். சிலாஜதுவுக்குச் சம அளவு பாவனைக்கான கஷாயவஸ்துவை அதற்கு எட்டுமடங்கு ஜலத்திற் சேர்த்து, எட்டிலொருபங்காக மிகும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டவும்; அக்கஷாயத்தில் சிலாஜதுவைச் சேர்த்து, அக்கஷாய வஸ்துவுக்குச் சமமான சுவை இதற்குண்டாகும்படியாக பாவனை செய்து, உலர்த்தியெடுக்கவும். இவ்விதமாகவே ஏழுவிதமான வெவ்வேறு சரக்குகளால் பக்குவம்செய்த கஷாயத்தில் ஏழு முறை பாவனை செய்யவேண்டும். (3) பிறகு இரஸாயநமுபயோகித்துக் கொள்பவன் ஸ்நேஹமும் சோதநமும் செய்துகொண்டு, திக்த பதார்த்தங்களால் பக்குவம் செய்யப்பட்ட க்ருதத்தை மூன்று நாள் உட்கொண்டு[1], பின்னர் சிலாஜதுவை த்ரிபலாயூஷத்துடன் மூன்று நாட்களும், பேய்ப்புடல் யூஷத்துடன் மூன்று நாட்களும், அதிமதுரயூஷத்துடன் மூன்று நாட்களுமாக ஒன்பது நாட்கள் உபயோகிக்க வேண்டும். பிறகு காலமறிந்து அவனுக்கு ஏற்ற முறையிற் கீழ்வரும் மாத்திராமுறைப்படி பக்குவம் செய்த சிலாஜதுவைச் சுத்த நிலைமையில் உட்கொள்ளக் கொடுக்கவும்; இவ்விதம் பிரயோகிக்க சிலாஜது தேஹத்திற்கு மிகவும் பிரயோஜனமுள்ளதாகும்; அதற்குள்ள எல்லாக் குணங்களையும் அது செய்யும்; துரிதமா யுபயோகிப்பதா லேற்படக்கூடிய கெடுதியும் இதனால் ஏற்படாது. (4) சிலாஜதுவை ஒருவாரமும்,

---

1. சிலாஜதுவை உட்கொள்பவன் முதலில் க்ருதபாநாதிகளால் தேஹத்தை ஸ்நிக்த்தமாக்கிக்கொள்ளவேண்டியது முறை. "கவசம் தரித்தவன் பகைவரது ஆயுதத் தாக்கல்களை நன்கு தாங்கிக்கொள்ள அனுகூலம் ஏற்படுவதுபோல, ஸ்நேஹத்தினால் அதிகமாக ஸ்நிக்த்தமாகச் செய்துகொண்ட தேஹத்தில் சிலாஜது தீங்கிழைப்பதில்லை" என்று பிராசீன வைத்தியாசிரியர்கள் கூறுவர்.

மூன்று வாரங்களும், ஏழு வாரங்களும் உபயோகிக்கலாம்; அதை ஒரு கர்ஷமளவும், அரைப் பலமளவும், ஒரு பலமளவும் ஆக மூன்று அளவுகளில் உட்கொள்ளலாம்; இவை முறையே சிலாஜதுவின் ஹீந யோகமும், மத்ய யோகமும், உத்தம யோகமும் ஆகும்.[1] (5) முற்கூறியவாறு பாவநாதிகளால் பக்குவம் செய்யப்பட்ட சிலாஜதுவை, ஸ்நேஹாதிகளால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட தேஹத்தில், தாம்ரம்-அயம்-வெள்ளி-பொன் இவ்வனேத்தோடும் அல்லது தனித் தனியே ஒவ்வொன்ருேடும் கூட்டிப் பாலிற் கலக்கிப் பிரயோகிக்க இரஸாயந குணத்தை அது துரிதமாகக் காட்டும்; இதை யுபயோகித்து வருகையில் கொள், மணத்தக்காளி, மாடப்புரு இவைகளை எப்பொழுதுமே உபயோகிக்கக் கூடாது. (6) சிகித்ஸைக்கு வசப்படக் கூடிய ஸாத்யரோகமெதுவும் உலகில் சிலாஜதுவினுல் வலியத் தீர்க்கக் கூடாததாயிருப்பதில்லை. அது காலயோக - மாத்ரா யோகங்களை அநுஸரித்து முறை தவருது பிரயோகிக்கப் பட்டால், ஆரோக்கிய நிலைமையி லிருப்பவனுக்கும் விசேஷமான தேஹபலத்தை விருத்தி செய்யும். 131—143.

குடீப்ரவேச-வாதாதபிக சிகித்ஸைகளுக்கேற்றவர்கள் :—(1) எச் சிகித்ஸா முறைக்கும் ஈடு கொடுத்துத் தாங்க ஆயத்தமாயுள்ளவர்களுக்கும், ஸகல உபகரணங்களையும் பரிசாரகர்களையும் வைத்துக் கொள்ள ஸௌகர்யமுள்ளவர்களுக்கும் குடீப்ராவேசிகம் என்னும் சிகித்ஸை அநுகூலமானது. (2) அவ்விதமில்லாத மற்றவர்களுக்கு வாதாதபிகசிகித்ஸா முறையே அநுகூலமானதாம்.—144.

வாதாதபிக சிகித்ஸைக் கேற்ற முறைகள் :—இனி வாதாதபங்கள் என்கிற காற்று-வெயில் இவற்றைத் தாங்கி நின்று தேஹத்திற்கு இரஸாயந சிகித்ஸை செய்துகொள்ளக் கூடிய ஔஷத முறைகள் விஸ்தரித்துக் கூறப்படும். அவை ஸுலகமான உபசாரங்களா யிருப்பதுடன், சிகித்ஸையில் ஏதேனும் தவறுதல் நேர்ந்த போதிலும் தேஹத்திற்குத் தீங்கிழைப்பவையல்ல. (1) குளிர்ந்த ஜலம், பால், தேன், நெய் இவற்றில் தனித் தனியாக ஏதேனும் ஒன்றையாவது, ஏதேனும் இரண்டிரண்டை, அல்லது மும்மூன்றை, அல்லது நாலையும் ஒன்ருகவாவது கூட்டி ஆஹாரத்திற்கு முன்பாக உட்கொள்ள அது

1. ஒரு வாரம்-மூன்று வாரங்கள்-ஏழு வாரங்கள் என்கிற மூன்றும் முறையே ஹீந-மத்திம-உத்தமங்களான கால யோகங்கள் என்றும், ஒரு கர்ஷம்-அரைப் பலம்-ஒரு பலம் என்கிற மூன்றும் முறையே ஹீந-மத்திம-உத்தமங்களான மாத்ரா யோகங்கள் என்றும் ஆக இதில் இரு வகை யோகங்கள் என்றும் முறைகள் குறிப்பிடப் பட்டன.

வயஸ்-ஸ்த்தாபநமாகும்.[1] (2) கொட்டை நீக்கிய இரண்டு கடுக்காய்களை வெல்லத்துடனாவது, தேனுடனாவது, சுக்குடனாவது, திப்பிலியுடனாவது, இந்துப்புடனாவது கூட்டி எப்பொழுதும் மென்று வந்தால் அம் மனிதன் ஆரோக்கியமாக நூறாண்டு வாழ்வான். (3) வித்து நீக்கிய கடுக்காயை நெய்யிற் பொரித்தெடுத்து, அதைப் புஜித்து, அந்த நெய்யையும் பருகி வந்தால், நன்றியுள்ளவனுக்குச் செய்த ஒரு நன்மையைப்போல் அவனது சரீரத்தில் பலம் சிறிதும் குன்றாது நீடித்திருக்கும். (4) நெல்லிக் கனிச் சாறு, தேன், சர்க்கரை, நெய் இவற்றைக் கூட்டிப் பருகிக் கொண்டு, பத்யமான ஆஹாரங்களையும் புஜித்து வரும் மனிதருக்கு முறை தவறாகக் கற்ற நூல்களைப்போல் மூப்புக் கோளாறுகள் முற்றிலும் தீரும். (5) நெல்லிக் கனி, வாய்விடங்கம், வேங்கையின் உட்சத்து இவற்றைச் சூர்ணம் செய்து, அயமும் கலந்து, தைலம்-தேன்-நெய் இவற்றிற் கூட்டி யுட்கொள்பவனுக்கு இளமையின் அழகு அழியாது நிலை நிற்கும். (6) அயப் பொடி, வாய்விடங்கசூர்ணம், நெய், தேன் இவற்றை வேங்கை மரச் சிமிழில் ஒருமிக்கச் சேர்த்து வைத்து, ஒரு வருஷ காலம் கழித்து உட்கொண்டு வர பலம் பெற்று, கருநிற மயிர்களையும் அடைந்து நீண்ட காலம் ஜீவித்திருப்பான். (7) வாய்விடங்கம், சேங்கொட்டை, சுக்கு இவற்றைப் பொடித்து, நெய்-தேன் இவற்றிற் கலந்து உண்பவர் பிணிகளாகும் அலைகளடர்ந்த கிழத்தனமாகும் ஆற்றை அழகும் பலமுமாகும் ஓடத்தைப் பெற்றுக் கடந்து விடுவார்கள். (8) கருங்காலி, வேங்கை இவற்றின் பிசினைக் கூழாகப் பக்குவம் செய்து, பொடி செய்த த்ரிபலையைச் சேர்த்து, நெய்யும் தேனும் கூட்டி நியதமாகப் பருகி வரும் மனிதர் பிணியற்றுப் பிரியமாகப் பிழைத்து வருவார்களென்பதில் வியப்பொன்று மில்லை. (9) விரலால் தொட்டால் விரல் ரேகைகளின் முத்திரை அதில் விழக்கூடிய பக்குவமுள்ள வேங்கைப் பிசினை சர்க்கரை-தேன்-நெய்-த்ரிபலை இவற்றுடன் கூட்டி யுட்கொள்பவரிடம் கிழத்தனம் வருந்தி யழைத்தாலும் அணுகாது விலகிப் போகும். (10) அரைப் பலம் வெள்ளைச் சாறடையை அரைத்துப் பாலுடன் பருகலாம்; அவ்விதம் அரை மாஸமாவது, இரண்டு மாஸங்களாவது ஆறு மாஸங்களாவது, ஒரு வருஷமாவது உபயோகித்துவந்தால் கிழத்தனத்தால் தளர்ந்த தேஹமுடையவனும் மீண்டும் சிறந்த பலம் பெறுவான். (11) பெருங்குரும்பை, கண்டங்கத்தரி, பெருமல்லிகை, சிற்றாமுட்டி, வெட்டிவேர், வட்டத் திருப்பி, வேங்கை, நன்னாரி, கருஞ்சந்தனம், அகில், சந்தனம் இவற்றையும் வெள்ளைச் சாறடையைப் போலவே பக்குவம்

---

1. வயஸ்-ஸ்த்தாபநம் — கிழத்தனக்கோளாறுகள் தேஹத்தில் அணுகாது வாலிப வயதுக்குச் சமான குணங்களை உண்டாக்குவது.

செய்துபயோகிக்க, அவை தேஹத்திற்குப் புதிய யௌவன வயதுக்கேற்ற நிலைமையைத் தரும். (12) தண்ணீர் விட்டாங் கிழங்கைக் கஷாயமிட்டு, அதையே கல்கமாகவும் கூட்டி, அதில் க்ருதம் பக்குவம் செய்து, சர்க்கரை கூட்டிப் பருக, உயிர் வாழ்க்கையாகும் வழியிற் பிரயாணம் செய்பவர்களை வியாதிகளாகும் கள்ளர்கள் தாக்கி ஆரோக்கியமாகும் பொருளைக் கொள்ளையிட வியலாது. (13) அமுக்கிராங் கிழங்கைப் பாலுடனாவது, நெய்யோடாவது, தைலத்தோடாவது, இளஞ்சூடான ஜலத்துடனாவது அரை மாஸ காலம் உட்கொண்டு வந்தால், அது இளம் பயிருக்கு நல்ல மழைபோல் இளைத்த தேஹத்திற்குப் புஷ்டியைத் தரும். (14) கறுப்பாயுள்ள எள்ளை ஒரு பலமளவு தினந்தோறும் புஜித்துக் குளிர்ந்த ஜலத்தையும் அநுபானமா யுட்கொண்டு வர, சரீரத்திற்கு விசேஷ போஷணை யேற்பட்டு, இறக்கும் வரையில் பற்களும் கெட்டிப் படும். (15) நெறிஞ்சில், நெல்லி, சீந்தில் இவற்றின் சூர்ணத்தைத் தேன்-நெய் இவற்றைக் கூட்டிப் பருகும் மனிதன் வ்ருஷ்யம் என்கிற குணத்தைப் பெற்று, ஸ்திர தேஹியாய், தேஹ மனோ வியாதிகளில்லாமல், கருநிற மயிர்களையும் வளரப் பெற்று நூறாண்டு ஜீவித்திருப்பான். (16) கறுத்த எள்ளுடன் நெல்லிக் கனிகளையாவது, தான்றிக் காய்களையாவது, கடுக்காய்களையாவது சேர்த்து இடித்து உண்டுவரும் மனிதர் மயில்களைப் போன்று வெகு நேர்த்தியாகச் செழித்த தேஹமுள்ளவராவர். (17) சிலாஜது, தேன், வாய்விடங்கம், நெய், அயம், கடுக்காய், பாதரஸம், ஸ்வர்ணமாக்ஷிகம் இவற்றை யுண்டு வருபவனுடைய துர்ப்பலமான உடலும் பதினைந்து நாட்களில் பூர்ண சந்திரனைப்போல் செழித்து வளர்ந்து பலப்படும். (18) கரிசலாங்கண்ணிச் சாற்றை நாள்தோறும் ஒரு மாஸ காலம் பருகிக்கொண்டு, பாலும் அன்னமும் பத்தியமாகப் புஜித்து வந்தால், அம் மனிதர் தேஹபலமும், வீர்யமும் பெற்று நூறாண்டு ஜீவித்திருப்பர். (19) ஒரு மாஸ காலம் வசம்பை நெய்யுடனாவது, பாலுடனாவது, தைலத்துடனாவது புஜித்து வருபவர் அரக்கர் முதலியவர்களால் விரட்டக்கூடாதவராகவும், மேதாவிகளாகவும், விளக்கமாகப் பேசுந் திறமை யுள்ளவராகவும் ஆவர். (20) நெய்யில் வல்லாரையிலையை வறுத்து, அதையே அன்னமின்றி ஒரு மாஸ காலம் புஜித்து வந்தால், அவர்கள் வெகு தைரியசாலிகளாய், வாலிபத்தன்மை - தேஹ - வனப்பு- மற்றுமுள்ள சிறந்த குணங்கள்-இவற்றையும் பெற்று வெகு நீண்ட காலம் ஜீவித்திருப்பர். 145—165.

லாங்கல்யாதி குளிகை:—நீர்த்திப்பிலி, த்ரிபலை, அயப்பொடி இவற்றை ஐந்நூறு பலம் எடுத்து மிருது சூர்ணம் செய்து, கையாந்தகரைச் சாறுவிட்டு அரைத்து, முன்னூறு மாத்

திரைகளாக உருட்டி, நிழலிலுலர்த்தி எடுக்கவும்; முதலில் இதை வேளைக்கு அரைகுளிகை வீதம் சில நாள் புஜித்து, அப்பால் முழு முழு மாத்திரையாகப் புஜித்து வரவேண்டும். பிறகு விரேசநம் செய்துகொண்டு, க்ரமமாக மண்டம், பேயா, விலேபி, மாம்ஸரஸம் கலந்த அன்னம் இவற்றை நெய் கலந்து ஸ்நிக்த மாக்கி ஒரு மாஸம் நியதமாயிருந்து உபயோகிக்க வேண்டும். ஒரு மாஸத்திற்குப் பின் யதேச்சையாய் எல்லாவற்றையும் உப யோகித்து வரலாம்; ஆனால் ஒரு வருஷகாலம் அஜீர்ணத்திற்கு இடங்கொடாது ஊக்கத்துடன் அடிக்கடியும் முற்கூறிய மாத் திரையை உபயோகித்து வரலாம். இதனால் அஸாத்ய வியாதி யினால் வருந்துபவனும் பிணியற்றவனாவான்; வயது முதிர்ந் தவனும் நல்ல வாலிப மனிதனைப்போல் ஆண்மையைப் பெற்று விளங்குவான்; தேஹம் பருத்து, செவிகளும் நேத்திரங்கள் முதலியனவும் செழித்துப் பருத்து வாலிபனைப்போல் அவன் மாறி, ஐந்நூறு வருஷங்களும் ஜீவித்திருக்கலாம். 166—169.

நாரஸிம்ஹ க்ருதம்:—(1) கருங்காலிப் பட்டை, சித்திர மூலம், சிம்சபாவின் பட்டை, வேங்கைப் பட்டை, கடுக்காய், வாய்விடங்கம், தான்றிககாய், சோங்கொட்டை இவற்றை இடித்து, இவற்றைப் பதினெட்டு மடங்கு தண்ணீரிற் போட்டு, இரும்புத்துண்டுகளையும் சேர்த்து, இருப்புப் பாத் திரத்தில் வெய்யிலில் மூன்று நாட்கள் சூர்யபுடமாகக் காய்ச்சி, அடிக்கடியும் கிளறிக்கொண்டிருக்கவேண்டும். பிறகு அந்த அயத்துண்டுகளுடன் கஷாயத்தை அக்னியில் ஏற்றி, சிறு ஜ்வாலையில் எரித்துக் கஷாயம் நாலிலொரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி வடிக்கட்டவும். அவ்விதம் வடிக்கட்டிய கஷாயம் ஒரு பாகம், பால் ஒரு பாகம், கரிசலாங்கண்ணிச் சாறு இரண்டு பாகம், த்ரிபலா கஷாயம் மூன்று பாகம், புத்துருக்கு நெய் நான்கு பாகம் ஆக இவ்வனைத்தையும் ஒரு இரும்புப் பாத்திரத் தில் ஒன்றாகக் கூட்டிப் பக்குவம் செய்யவும். இதில் சுத்தமான கற்கண்டுகளையும், தேனையும் தனித் தனியே கூட்டியாவது அவை இல்லாமலேயாவது வேளைக்கு ஒருபலம் அளவாக உட்கொண்டு வரவும்; இதில் இஷ்டமான ஆஹார-விஹாரங்களைச் செய்து வரலாம். இதை ஒருமாஸம் பருகிவரும் மனிதன் சீரும் சிறப்பு முற்ற தேஹம் வாய்ந்து, நோயற்ற வாழ்வுடன், காட்டெருமைக் கடாபோன்ற வலிமையைப் பெற்று, குதிரைபோல் விரைந் தோடும் வன்மையுடையவனாவான்; சரீரம் தளர்வு நீங்கி திடப் படும்; தலைமயிர் வண்டுடல்போல் கருநிறங் கொள்ளும்; மது போல் மணம்பெற்ற முகமுடையவனாவான்; மங்கையர் பல ருடன் மகிழ்வுடன் சேரும் மேன்மையைப் பெறுவான்; வாக் கினும், மதியினும், விசேஷ மேதையினும் சிறப்புறுவான்; ஜாட

ராக்னியும் அவனுக்கு மிகவும் அதிகரிக்கும்; அக்னிஜ்வாலையிற் பழுக்கக் காய்ச்சிய பொன்னுக்கு நிகரான நிறம்பெற்ற தேஹமுள்ளவனாய் மானிடரிற் சிங்கம்போல் அவன் விளங்குவான். 'நாரஸிம்ஹக்ருதம்' என்கிற இதை யுட்கொள்ளும் மனிதனிடம், சக்ராயுதத்துடன் ஜ்வலிக்கும் நரஸிம்ஹமூர்த்தியினிடம் அஸுரர்களைப்போல் பிணிகள் அணுகமாட்டா. (2) விரேசநாதிகளால் குடலைச் சுத்தம் செய்துகொண்டு, இந்த க்ருதத்தில் கையாந்தகரை யிலைகளை வறுத்து, பத்தியமா யிருந்துகொண்டு புஜித்துவரலாம். இதற்கு வேங்கைப்பிசின் சேர்த்துக் காய்ச்சிய பாலையே அநுபாநமாகவும் உணவாகவும் கொள்ளவேண்டும். இதை ஒரு மாஸம் உபயோகித்து வந்தாலே நல்ல ஆரோக்கியவானாய், இரு நூறு வருஷம் ஜீவித்திருக்கலாம். ஞாபகசக்தியும் இந்த்ரிய பாடவமும் பெற்று, எவ்விஷயத்தையும் ஒரு முறை கூறிய போதிலும் கிரஹித்து மறக்கவே மாட்டான். (3) இதே முறையில் எவனொருவன் தைலத்தை யுட்கொள்கிறானோ, அவனும் அதே குணங்களைப் பெற்று, கருநிறமான உரோமங்களுள்ளவனாகவும் ஆவான். 170—177.

இரஸாயந முடிவுரை :—இந்த யுகத்திற்கு ஏற்றவைகளாயும், நற்பயனளிக்கக்கூடியவைகளாயுமுள்ள எளிதிற் செய்யக்கூடிய இரஸாயந முறைகள் இங்கு மொழியப்பட்டன. வேறு சில முறைகள் குணத்திற் சிறப்புற்றவையா யிருந்தபோதிலும், அவற்றிற்கான சரக்குகள் எளிதிற் கிடைக்கமாட்டாவாகையால், அவை இங்குரைக்கப் படவில்லை.—178.

இரஸாயநவிதியில் தவறுதலாலாகும் கேடுதிகளுக்குப் பரிஹாரம் :— இரஸாயநௌஷதங்களை உபயோகிக்கையில அம் முறைகளில் ஏதேனும் தவறுதல் ஏற்பட்டு, அதனால் நோய்கள் உண்டானால், அப்பொழுது இரஸாயநௌஷதத்தை விட்டு விட்டு, அந்தந்த வியாதிக்கேற்ற ஔஷதத்தை யுபயோகிக்க வேண்டும்.—179.

நித்யரஸாயநம் :—(1) ஸத்தியமே பேசுதல், கோபமின்மை, ஆத்மார்த்த விஷயங்களிலேயே நியதமாக இந்த்ரியங்களைப்பற்ற வைத்திருத்தல், சாந்தமான நிலைமை, திநசர்யாதி அத்தியாயங்களிற் கூறிய சிறப்பான ஒழுக்கங்களிற் கருத்தா யிருத்தல் ஆகியவை எப்பொழுதும் உபயோகமான சிறந்த இரஸாயநமாகையால் இவை 'நித்யரஸாயநங்கள்' எனப்படும். (2) மேலும் இக்குணங்களுடன் கூடிய ஒருவன் இரஸாயநௌஷதத்தை யுபயோகித்துவந்தால், இதர விஷயங்களில் மனதை நிவ்ருத்தி செய்தவனாய், தீர்க்காயுளைப் பெற்று, இவ்வுலகிலும் மேலுலகிலும் மகிழ்ச்சியுற்று வாழ்வான்.—180, 181.

**இரஸாயந பூர்த்திக்குச் சாதநங்கள்** :—சாஸ்திரத்தை அநுஸரித்துச் செய்யப்படும் சிகித்ஸை, நோக்கமறிந்து நடக்கும் பரிசாரகர்கள், கார்ய விஷயங்களில் தவறுதலடையாத புத்தி ஆகியவை இரஸாயநமுறையைப் பூர்த்தி செய்விக்கும் ஸாதநங்களாம்.—182.

---

## நாற்பதாம் அத்தியாயம்.

## வாஜீகரண விதி.

இனி **வாஜீகரணம்** என்னும் விஷயத்தைக்[1] கூறும் அத்தியாயம் விவரிக்கப் படுகின்றது :—

**வாஜீகரணமும் அதன் பயனும்** :—(1) புருடன் புணர்ச்சியிற் பற்றுள்ளவனாயின் 'வாஜீகரணம்' என்னும் சிகித்ஸையை விரும்பிச் செய்துகொள்ள வேண்டும். அம் முறையில்தான் மனக்களிப்பும், மேனிச் செழிப்பும், குணமுள்ள புத்திரப்பேறும் அடங்கியுள்ளன; அதுதான் ஸந்தாந விருத்தியை யுண்டுபண்ணி, உடனே மிகு மகிழ்ச்சியையும் தரக் கூடியது. (2) இதனால் குதிரையைப்போல் அதிக பலம் பெற்று, தட்டுத் தடையின்றியே மங்கையரிடம் சேரும் திறமை வாய்ந்தவனாகவும், பெண் மக்களுக்குப் பெரிதும் பிரியமானவனாகவும் மனிதன் ஆவதோடு, சதை பருத்துச் சரீரம் செழித்தவனாகவும் ஆகிறான்; அவ்வித குணந்தான் வாஜீகரணம் எனப்படுகிறது; இது உத்ஸாஹத்தையும் மிக்க விருத்தி செய்ய வல்லது. 1—3.

**பிரஹ்மசர்யமும்-வாஜீகரணமும்** :—(1) பிரஹ்மசர்யம் என்னும் ஒழுக்கந்தான் முறை வழுவாத தர்மமாகும்; அதுவே புகழைத் தரும்; ஆயுளை அதிகரிக்கச் செய்யும்; ஈருலகிலும் இன்பமளிக்கும் இரஸாயநம்; அதைத்தான் முற்றிலும் பரிசுத்தமான நல்லொழுக்கமாக நாம் அங்கீகரிப்போம். (2) ஆகிலும் ஸத்வ குணத்திற் குன்றியவனும், க்லேசாதிகளால் வருந்துபவனுமான சிற்றின்பப் பற்றுள்ளவனுடைய தேஹம் க்ஷீணித்துப் போவதைத் தடுத்து, அவன் போன்றவனைக் காப்பதற்காக வாஜீகரணம் என்னும் இவ்விஷயம் மொழியப் படுகின்றது.—4, 5.

**புணர்ச்சிக்கு ஏற்றவரும் காலமும்** :—திடசரீரம் பெற்று, நல்ல நடுப் பிராயத்தி லிருந்துகொண்டு, வாஜீகரண முறையைச் செய்துகொண்டு வருபவன் எல்லாப் பருவங்களிலும் தினந்தோறும் புணர்வது பாதகமாகாது.—6.

---

1. வாஜீகரணம் — குதிரையைப் போல் புணர்ச்சியிற் பலமான திறங் கொடுக்கும் சிகித்ஸை. வீர்யத்தில் வ்ருஷபம் போன்ற சக்தியுண்டு பண்ணுவதால் இது விருஷ்யம் என்றும் வழங்கப்படுகிறது.

வாஜீகரணத்திற்கு ஆரம்பத்திற் செய்யும் ஸம்ஸ்காரம் :—
வாஜீகரண யோகம் என்னும் முறையை அறிந்தவன் முதலில்
அச்சிகித்ஸையைச் செய்து கொள்பவனுக்கு ஸ்நேஹநம் செய்து,
சோதநமும் செய்வித்து, நிரூஹங்களையும் அநுவாஸநங்களையும்
நிறைவேற்றி, அதன் பிறகு நெய்-தைலம்-மாம்ஸரஸம்-பால்-
சர்க்கரை-தேன் இவற்றுடன் கூட்டிப் பிறகு கூறப்படும் சுக்ரத்
தையும்-ஸந்தாநத்தையும் விருத்தி செய்யக்கூடிய முறைகளைப்
பிரயோகிக்க வேண்டும். அம்மனிதன் பாலையும், மாம்ஸ ரஸத்
தையும் தாராளமாக உட்கொள்ளவும் வேண்டும்.—7, 8.

புத்திரப் பேறில்லாதவன் புனிதனல்ல :—(1) குளிர்ந்த
நிழல் தராது, துர்நாற்றம் வீசும் பூவைப் பெற்று, கனியற்றதாய்,
ஒரே கிளையுடன் கூடிய ஒரு மரம் எப்படி உபயோகமற்றதோ
அவ்விதமே புத்திரப்பேறில்லாதவனுமாவான். (2) ஒரு
குழந்தை தட்டுத் தடுமாறி நடந்துகொண்டு, நன்கு விளங்காத
வகையில் மழலைச் சொற் பேசிக்கொண்டு, உடலெல்லாம் புழுதி
யைப் பூசிக்கொண்டு, சொள்ளு நீரடங்கிய முகத்துடன் உள்ளத்
தைப் பறிக்குமாறு உலாவினால், பார்ப்பதற்கும் பரிசிப்பதற்கும்
அதற்குச் சமானமான இன்பம் வேறுண்டோ? அவ்வகைப் புத்
திரன் புகழையும், தர்மத்தையும், பெருமையையும், செல்வத்தை
யும், குலத்தையும் விருத்தி செய்வதாயிருந்தால் அதனால் ஏற்
படும் மேன்மையைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? 9—11.

வாஜீகரணத்திற்கு தேஹசுத்தி அவசியம் :— முற்கூறிய
முறைகளினால் சரீரத்தைச் சுத்தம் செய்வித்து, அவரவரது
சக்திக்கியன்றவாறு விருஷ்யயோகங்கள் என்கிற வாஜீகரண
முறைகளைப் பிரயோகிக்க வேண்டும்.—11½.

வ்ருஷ்யயோகங்கள் :— (1) நாமுல்-கரும்பு-வீமுல்-நிலப்
பனை - கண்டங்கத்திரி இவற்றின் வேர்களும், ஜீவகம் - ருஷ
பகம் - சிற்றாமுட்டி - மேதா - மஹாமேதா - காகோலி -
க்ஷீர காகோலி - மோர்மல்லி - தண்ணீர் விட்டான் - அமுக்கிறாங்
கிழங்கு - பேராமுட்டி - காஞ்சொறி - சாறணை - பெருஞ்சுரை -
பாலை-ஜீவந்தி-ருத்தி-சிற்றரத்தை-த்ரிகண்டகம்-அதிமதுரம்-சிறு
மல்லி இவையும் தனித்தனி மூன்று பலம்; ஓர் ஆடகமளவு
உளுந்து; இவற்றை இரண்டு த்ரோணம் ஜலத்தில் இடித்துச்
சேர்த்துக் காய்ச்சவும்; அக்கஷாயம் ஆடகமளவாக வற்றியதும்
வடிகட்டி, அதில் ஓர் ஆடகம் நெய் சேர்த்து, நிலப்பனங்
கிழங்கு-நெல்லிக்காய்-கரும்பு இவற்றின் சாறு ஒவ்வோர் ஆடக
மும், நெய்க்கு நாலு மடங்கு பாலும் சேர்த்து, பெருஞ்சுரை-
காஞ்சொறி - காகோலி-க்ஷீரகாகோலி-அதிமதுரம்-அத்திக் கனி-
திப்பிலி-திராக்ஷை-நிலப்பனங் கிழங்கு-பேரீச்சு-இலுப்பைப் பூ-

தண்ணீர் விட்டான் கிழங்கு இவற்றைப் பிரத்தியேகம் பிரஸ்த்த மளவாகச் சூர்ணம் செய்து சேர்க்க வேண்டும்; பிறகு சர்க்கரை நூறு பலமும், திப்பிலி ஒரு குடவமும், மிளகு ஒரு பிரகுஞ்ச மும், இலவங்கப் பட்டை-ஏலக்காய்-நாககேஸரம் இவை பிரத்தி யேகம் அரைப் பலமும் மிக்க மிருதுவாகச் சூர்ணம் செய்து, இரண்டு குடவமளவு தேனும் சேர்த்து, லேஹ்யம்போல் பக்குவம் செய்து, நாள்தோறும் இதில் ஒரு பலம் உட்கொண்டு வரவும்; மாம்ஸரஸமும் பாலும் உணவாகக் கொள்ளவேண்டும்; இதனால் குதிரையைப்போல் புணர்ந்து, காடை யென்னும் பற வையைப்போல் ஆனந்திப்பான். (2) நிலப்பனங் கிழங்கு, திப் பிலி, சம்பா அரிசி, சாரப்பருப்பு, நீர்முள்ளி, காஞ்சொறி இவற்றை வகைக்கு ஒரு குடவமளவு எடுத்து, சூர்ணம் செய்து, அவ்வளவு தேனும், ஐம்பது பலம் தேனும், அரைப் பிரஸ்த்தம் புத்துருக்கி நெய்யும் ஒன்றாகச் சேர்த்துக் கலக்கவும். நூற்றுக் கணக்கான ஸ்திரீகளை வீட்டில் வைத்துக் களிப்புற விரும்புபவன் இதைக் கால் பலமளவாக உட்கொண்டு வரலாம். (3) கோதுமை யைக் காஞ்சொறிக் கனிகளுடன் பாலில் சேர்த்துக் காய்ச்சி ஆற வைத்து உட்கொண்டாலும், (4) நெய் - தேன் இவற்றுடன் உளுந்தை உண்டு ச்ருஷ்டி க்ஷீரத்தை அநுபானமாக உட்கொண் டாலும், அவன் ஓரிரவெல்லாம் சோர்வுறாமலே அநேகம் ஸ்த்ரீ களைக் களைக்கச் செய்யும் சக்தியைப் பெறுவான். (5) செம்மறி யாட்டின் பீஜத்தைப் பாலிற் சேர்த்துக் காய்ச்சி, அதில் அடிக் கடியும் எள்ளைப் பாவனை செய்து, அவற்றைச் சர்க்கரையோடு உண்ணவும்; இதனால் அவன் நூறு ஸ்த்ரீகளிடம் புதியவனைப் போலவே களைக்காது சேர்ந்து ஸுகம் பெறுவான். (6) நிலப் பனங்கிழங்கின் சூர்ணத்தை அதன் ஸ்வரஸத்திலேயே பல முறை பாவனை செய்து, தேன்-நெய் இவற்றிற் கலந்து உட் கொண்டு வர, நூற்றுக் கணக்கான ஸ்த்ரீகளிடமும் சேர விருப்ப முண்டாம். (7) திப்பிலி, நெல்லிக்காய் இவற்றின் சூர்ணத்தை நெல்லிக் கனி ஸ்வரஸத்திலேயே நன்றாகப் பாவனை செய்து, சர்க்கரை-தேன்-நெய் இவற்றுடன் உட்கொண்டு, பாலை அநு பானமாகப் பருகினால் அவன் எண்பது வயது கிழவனானாலும் யுவபுருடனைப்போல் சிற்றின்பத்திற் பற்றுகொண்டு மிக்க மகிழ்வான். (8) அதிமதுர சூர்ணத்தில் ஒரு கர்ஷமளவு நெய்- தேன் இவற்றிற் கலந்துண்டு, அதற்குப் பாலை அநுபானமாகப் பருகினால் அவன் புணர்ச்சியில் எப்பொழுதும் ஊக்கத்துடன் விரைந்து முயல்வான். (9) சர்க்காடக ச்ருங்கியின் கல்கத்தைப் பாலில் கலந்து பருகிக்கொண்டு, சர்க்கரை-நெய்-பால் இவற்றுடன் அன்னம் புஜித்து வந்தால், அவன் ஸ்த்ரீகளிடம் ரிஷபம்போல் பிரவ்ருத்திப்பான். (10) ஒருவன் க்ஷீரகாகோலியைப் பாலில் சேர்த்துக் காய்ச்சி, அதைத் தேனும் நெய்யும் கலந்து புஜித்து,

அதற்கு அநுபானமாக பஷ்கயணா க்ஷீரத்தைப்[1] பருகி வந்தால் அவனுக்கு தாது க்ஷயம் ஏற்படாது. (11) காஞ்சொறி, நீர் முள்ளி இவற்றின் வித்துகளைச் சூர்ணம் செய்து, சர்க்கரையும் கூட்டி, தாரோஷ்ணம் என்கிற பாலுடன் உட்கொள்ள, அம் மனிதன் கழுதையைப்போல் கொழுத்துப் போவான். (12) இவ் விதமாகவே குன்றிமணி வேரின் சூர்ணத்தையும், (13) தண்ணீர் விட்டாங் கிழங்கின் சூர்ணத்தையும் உபயோகிக்கலாம். (14) சுத்த வஸ்திரத்தில் தயிரை வடிக்கட்டி, அதில் தங்கும் ஆடையைக் காரரிசி அன்னத்திற் கலந்து, சர்க்கரையும் கூட்டிப் புஜித்துவர, கிழவனும் குமரனாவான். (15) நெருஞ்சில், நீர்முள்ளி வித்து, உளுந்து, காஞ்சொறி விதை, தண்ணீர் விட்டாங் கிழங்கு இவற்றைச் சூர்ணம் செய்து, பாலுடன் உட்கொண்டுவர, வயது முதிர்ந்தவனும் நூற்றுக் கணக்கான ஸ்த்ரீகளிடம் சேர்ந்து மகிழ்வான். 12—34.

வ்ருஷ்யம் :—(1) மதுரமாகவும், ஸ்நிக்த்தமாகவும், ப்ருஹ் மணமாகவும், பலவர்த்தநமாகவும், மனதைக் களிப்பிப்பதாகவும் உள்ள ஸகலமும் 'வ்ருஷ்யம்' எனக் கூறப்படுகிறது. (2) ஆகை யால் இவ்விதமான திரவ்யங்களால் தேஹத்தைத் திடப்படுத்திக் கொண்டும், தன் தேஹ-மனோ பலங்களின் வேகத்தினால் தூண் டப்பட்டும், ஸ்த்ரீயின் குணங்களால் மனங் களித்தவனாய் மங் கையரிடம் சேரவேண்டும். (3) ஸகல இந்த்ரியங்களுக்கும் இன் பம் தருபவையும், தர்மமாகிற கற்பக விருக்ஷத்தின் மூலைக ளெனத் தகுந்தவையும், மன்மதனுடைய ஐந்து பாணங்களெனக் கூடியனவுமான சிறந்த விஷய ஸுகங்களென்னும் இன்பங்களை யும் அனுபவிக்கலாம். (4) இந்த்ரியங்களுக்குப் புலனாகும் அர்த் தங்கள்[2] என்னும் ஒவ்வொரு வெளி விஷயமும் தனித்தனியே மனதுக்கு மகிழ்ச்சியையும் ப்ரீதியையும் உண்டு பண்ணுவ தியல்பு ; அப்படி யிருக்க ஸ்த்ரீகளுடைய தேஹத்தில் ஒருமிக் கச் சேர்ந்திருக்கும் அவ்வனைத்தும் ஒன்றுகூடி அவ்வாறு இனிய குணந்தருமெனக் கூறவும் வேண்டுமோ ? 35—38.

வ்ருஷ்ய குணத்திற் சிறந்த ஸ்த்ரீ முதலியவர்கள் :—(1) எவ ளுடைய பெயரைக்கேட்ட மாத்திரத்திலே மனம் மிகக் குதூஹல மடைகின்றதோ, எவளைப் பார்த்தால் என்றைக்கு மடையாத

1. பஷ்கயணா க்ஷீரம் — கன்றை யீன்று வெகு நாட்களான பசு வின் பால்.

2. அர்த்தங்கள் — ஸங்கீதம் முதலிய ஒலி, சுகமான பரிசம், நேர்த் தியான தோற்றம் அல்லது தர்சநம், இனிய சுவை, நாசியைப் பறிக்கும் நறுமணம் ஆகியவை. இவையே விஷயங்கள் என்றும், இந்த்ரியார்த் தங்கள் என்றும் வழங்கப்படும்.

திருப்தியேற்படுகின்றதோ, எவள் மனைளனுடையமனங்கோணுத படி நடப்பதையே விரதமாகக்கொண்டு, அவனது புலன்களனைத்தையும் தன் வனப்பாகும் பாசத்தினல் வசமாக்கும் மேன்மையுடையவளோ, எவள் கலைகளாலும் - விலாஸங்களாலும் விளங்கும் அவயவங்களையும் இளவயதையுமே அணிகலமாகப்பெற்றிருக்கிருளோ, எவள் சுத்தமாகவும்-வெளியில் வெட்கத்துடனும்-ஏகாந்தத்தில் திமிரைக் காட்டியும் கணவனைக் கவர்ந்திழுப்பளோ, எவள் இன்புறப் பேசி கணவன் மனதுக்கு முற்றிலும் ஒற்றுமையாய் சயனத்திற் சேருகின்ருளோ அத்தகைய வனிதையே மனிதனுக்கு வ்ருஷ்ய குணம் தருவதிற் சிறந்தவளாவாள். (2) மேலும் காமசாஸ்திரத்தில் விதித்துள்ள தோஷமற்ற சிற்றின்ப முறையனைத்தையும், வைத்திய சாஸ்திர விதிகளுக்கு விரோதமில்லாத வகையில், தேசம்-காலம்-பலம்-சக்தி இவற்றை அனுஸரித்துச் செய்யலாம். (3) அல்லாமலும் அப்யஞ்ஜநம், உத்வர்த்தநம் என்கிற நறுமணப் பூச்சு, பரிஷேகம், ஸுகந்தங்கள், புஷ்ப மாலைகள், தளிர்கள், சிறந்த வஸ்திரம், ஆபரணம் ஆகியவற்றின் பலவேறு முறைகளும், ஸங்கீதம்-காவ்யம்-கதைகள் முதலியவற்றைத் திறம்பட மொழிந்திடும் தனக்குச் சமான குணமுள்ள நன்கு வசப்பட்ட நண்பர்களும், தன் மாளிகைக்கு அருகில் நிர்மிக்கப்பட்டு - தாமரைப்பூம்பொடிகளாலும் - மது வருந்தி மதங்கொண்ட பறவைகளாலும் சூழப்பட்டுள்ள நடவாபியும், நகரத்திற்கு அருகிலுள்ள கருநிறக் குன்றின் அடிவாரத்தில் அமைந்துள்ள அழகிய சோலைகளும், கண்ணைக் கவரும் வெவ்வேறு விருக்ஷத் தொகுதியும், செவியைக் களிப்பிக்கும் குயிலின் இனிய குரலோசையும், பருவ காலங்களின் தன்மைக்கேற்பச் சுகந்தரும் மணியணிகளின் பரிசமும், மனதை மகிழ்விக்கக் கூடிய பரிவாரத் திரளும், தாம்பூலமும், தெளிவான மதுவும், மனோஹரமான மனைவியும், மதியின் கதிரொளியால் துலங்கும் இரவும், மற்றும் மனதுக் கினிதான அந்தந்த விஷயமும் வாஜீகரமாகும் (4) மேலும் தாமரை யிதழைத் தாங்கும் மதுவானது மனைவியின் முக சமலத்தைப் போலவும், செவிக்கினிதாகத் தொனிக்கும் வீணையானது மனதுக்கினிய மழைட்டி போலவும், மலர்களின் திரளால் மனோஹரமாயுள்ள மஞ்சம் பூத்திரளைத் தலையால் தாங்கும் கொழுந்துகள் நிரம்பிய கொடிபோலவும் மனதை மகிழச் செய்வதால் இவையும் வாஜீகரங்களாம். (5) தேசத்திலாவது, தேஹத்திலாவது ஒருவித வருத்தமும் இருக்கலாகாது; திரவியங்களிலும் இந்த்ரிய விஷயங்களிலும் மனதுக்குச் சிறிதேனும் தடை யேற்படலாகாது; அருகிலுள்ள ஸகல விஷயங்களும், பொருட்களும் வாஜீகரங்களாய் அமைந்திருக்க வேண்டும்; ஆக இவை யெல்லாம் காமனுடைய விருப்பத்தை முற்றிலும் பூர்த்தி செய்விக்கு மியல்புடையன. 39—47.

சிகித்ஸா ஸங்கிரஹம் :—(1) ஜ்வரத்தில் சோரைக் கிழங்கும்- பர்ப்பாடகமும் சிறந்த ஔஷதங்களாம். (2) அவ்விதமே த்ருஷ்ணையில் நெருப்பிற் காய்ச்சிய மண்ணோட்டைப் போட்டு பக்குவம் செய்த ஜலமும், (3) சர்தியில் நெற்பொரியும், (4) வஸ்தி ரோகங்களில் சிலாஜதுவும், (5) மேஹ ரோகங்களில் நெல்லிக் கனி, மஞ்சள் இவையும், (6) பாண்டுவில் அயமும், (7) வாத கப ரோகங்களில் கடுக்காயும், (8) ப்லீஹ வியாதியில் திப்பிலியும், (9) உரக்ஷதத்தில் கொம்பரக்கும், (10) விஷத்தில் காட்டு வாகையும், (11) மேதோ ரோகத்திலும், வாத ரோகத்திலும் குங்கிலியமும் சிறந்தனவாம். (12) இரத்த-பித்தத்தில் ஆடாதோடையும், (13) அதிஸாரத்தில் வெட்பாலையும், (14) அர்சஸ்ஸில் சோரங் கொட்டையும், (15) கர விஷங்களில் பொன்னும். (16) ஸ்த்தாவர விஷங்களில் ஸ்வர்ணமாக்ஷிகமும், (17) கிருமி ரோகத்தில் வாய் விடங்கமும், (18) க்ஷயத்தில் ஸுரை யென்னும் மது-செம்மறி யாட்டுப் பால்-மாம்ஸம் இவையும், (19) நேத்திர ரோகங்களில் த்ரிபலையும், (20) வாத-ரக்த ரோகத்தில் சிந்திலும், (21) கிரஹணீ ரோகத்தில் மோரும், (22) குஷ்டங்களில் ஓதலைப் பிசின் அல்லது கதிரஸாரமும், (23) ஸகல ரோகங்களிலும் சிலாஜதுவும் உபயோகமானவையாம். (24) புராண க்ருதம் உங்மாதத்தையும், (25) மது சோகத்தையும், (26) பிரமி யிலை ஞாபக சக்தி யின்மையையும், (27) பால் நித்திரை யின்மையையும், (28) இரஸாலா பிரதிச்யாயத்தையும், (29) மாம்ஸம் கார்ச்யம் என்கிற இளைப்பையும், (30) உள்ளிப்பூண்டு வாதரோகத்தையும், (31) ஸ்வேத சிகித்ஸை தேஹம் திமிர்த்திருத்தலையும், (32) காசிலவம் பிசினைக் கொண்டு செய்யப்படும் நஸ்யம் தோள்-முதுகு-புயங்கள் இவற்றின் வலியையும், (33) வெண்ணெய்-கற்கண்டு இவற்றைக் கூட்டி ஆட்டிய ஒட்டகத்தின் மூத்திரமும் பாலும் உதர ரோகத்தையும், (34) நஸ்ய சிகித்ஸை சிரோ ரோகங்களையும், (35) இரக்தமோக்ஷணம் சொற்ப காலத்திற்குள் உண்டான வித்ரதியையும், (36) நஸ்யம் முகத்தினுள் உண்டாகும் வியாதிகளையும், (37) நஸ்யம்-அஞ்ஜநம்-தர்ப்பணம் இவை ஸகல நேத்திர ரோகங்களையும், (38) பாலும்-நெய்யும் கிழத்தனத்தையும், (39) குளிர்ந்த ஜலம்-குளிர்ந்த வாயு-நிழல் இவை மூர்ச்சையையும், (40) காடி-இஞ்சி இவற்றைச் சம அளவாகக் கூட்டி அரைத்துச் செய்த மாத்திரை அக்னி மாந்தியத்தையும், (41) ஸுரை, ஸ்நானம் இவை சிரமத்தையும் பரிஹரிக்கும். (42) வியாயாமம் தேஹ கஷ்டங்களைத் தாங்குவதிலும், தேஹத்தைத் திடப்படுத்துவதிலும் உபயோகமானது.

1. ஸகல ரோகங்களுக்கும் முக்கியமான ஔஷதங்களைப் பொறுக்கிக் கூறும் இவ் விஷயம் அக்ரிய ஸங்கிரஹம் என்றும் கூறப்படும். அக்ரியம் என்றால் முதன்மையானது. அவற்றின் சுருக்கம் 'அக்ரிய ஸங்கிரஹம்.'

(43) மூத்திர க்ருச்சிரத்தில் நெருஞ்சிலும், (44) காஸத்தில் கண்டங்கத்திரியும், (45) பார்ச்வ சூலையில் மோட்டுத் தாமரை வேரும், (46) வயஸ் ஸ்தாபநத்திற்கு நெல்லிக் கனி அல்லது திரிபலையும், (47) விரணத்தில் குங்கிலியமும் சிறந்தவையாம். (48) வஸ்தியானது வாத ரோகங்களையும், (49) விரேசனம் பித்த ரோகங்களையும், (50) வமனம் சிலேஷ்ம ரோகங்களையும், (51) தேன் கபத்தையும், (52) க்ருதம் பித்தத்தையும், (53) தைலம் வாயுவையும் பரிஹரிக்கும். இவ்வாறு ரோகங்களுக்குச் சிறந்தனவாகக் கூறப்படும் இவ்வௌஷதங்கள் அவ் வியாதிகளைத் தணிப்பதற்கு மிகவும் ஏற்றனவாம்; அவற்றைத் தேசகால-பலங்களைப் பகுத்தறிந்து ஏற்றவாறு பிரயோகிக்க வேண்டும். இவ்வாறு வியாதிகளுக்குக் கூறிய ஔஷதச் சுருக்கம் 'அக்ரிய ஸங்க்ரஹம்' எனப்படும். 48—58.

## கிரந்தத்தின் முடிவுரை.

**அக்னிவேசர் ஆத்ரேயரை நோக்கிப் பிரச்னை செய்தல் :—** அக்னிவேச முனிவர்[1] இவ்வாறாக ஆத்ரேயரிடமிருந்து சாஸ்திரார்த்த தத்துவத்தைத் தெரிந்துணர்ந்து, ஸ்வாரஸ்யமான விஷயங்களடங்கிய அவரது நன் மொழிகளாலும் போதுமாறு திருப்தியடையாது ஸந்தேஹத்தைக் கொண்டு, பேளர் முதலிய தன் ஸஹபாடிகளால் ஸம்மதிக்கப்பட்டு, பக்தியோடு தலைவணங்கி ஆத்ரேயரை[2] இவ்வாறு வினவலானார்: "ஸ்வாமி, சில ரோகிகள் தமக்கு ஹிதாஹிதங்களைத் தெரிந்துகொண்டும், சிகித்ஸைக்கு அவசியமான திரவியங்கள்-பரிசாரகர்கள் ஆகிய உபகரணங்களிற் குன்றாமலும், விசேஷ அனுபவமுள்ள சிறந்த வைத்தியர்களின் உபதேசத்தையே பின்பற்றுபவராகவும் இருக்கிறார்கள்; அப்படியுள்ளவர்களிற் சிலர் வியாதிகளிலிருந்து நீங்குவதையும், சிலர் வியாதியால் இறப்பதையும் நாம் பார்த்துவருகிறோம். அவற்றிற்கு மாறாக இருந்தும்[3] வேறு சிலர் இறந்தும் விடுகிறார்கள், சுகமுமடைகிறார்கள். ஆகையால் ஹிதாஹிதங்களைப் பகுத்தறிந்து நடப்பதன் பலன் நிச்சயமற்றதாயிருக்கின்றதே! இவ்விஷயத்தில் சாஸ்திரம் நமக்கு யாது கூறுகின்றது?" என்று அக்னிவேச

---

1. அக்னிவேசர் — சரகஸம்ஹிதையின் ஆசிரியர். [அக்னிவேசர் இயற்றிய ஸம்ஹிதையைச் சீர்திருத்திப் பிரசாரம் செய்தவர் சரகர்: ஆகவே அது 'சரகஸம்ஹிதை' என்றே வழங்கப்படுகிறது.]

2. ஆத்ரேயர்—புநர்வஸ்வாத்ரேயர் அல்லது புநர்வஸு என்றும் இவரை வழங்குவர்.

3. அவற்றிற்கு மாறாக என்றால்—ஹிதாஹிதங்களைத் தெரிந்துகொள்ளாமலும், திரவியாதி உபகரணங்களிற் குன்றியும், ஏற்ற வைத்தியனது உபதேசப்படி நடவாமலும் இருப்பவர்கள் கூட சுகமும் அடைகிறார்கள், இறந்தும் போகிறார்கள் என்பது கருத்து.

யைத் தலைமையாகக் கொண்ட சிஷ்யஸமூஹம் வினவ, அதற்குப் புநர்வஸு என்னும் ஆத்ரேய முனிவர் சாஸ்திர தத்துவ மனைத்தையும் மொழியலானார். 59—62.

ஆத்ரேயரின் மறுமொழி:—“பதினாறு அம்சங்களடங்கிய சிகித்ஸையின்றியே வியாதிக்ரஸ்தர்களிற் சிலர் குணமடைந்த போதிலுங் கூட சிகித்ஸையும் சிகித்ஸையின்மையும் பலனில் ஸமானமாகா. நோய்களாகும் சேற்றில் வீழ்ந்து அழுந்துபவருக்கு வைத்தியனது சிகித்ஸைதான் கைகொடுத்துத் தூக்கு முபாயமாகும். ஆனால் இறப்பவனானவருக்கும் ஔஷதத்தினாலேயே உயிர் நிலைத்துவிடாது. எல்லா வியாதிகளுமே உபாயங்களால்[1] நிவ்ருத்தியாகமாட்டா. ஆனால் உபாயங்களாலே நிவ்ருத்திக்கக் கூடிய நோய்கள் உபாயமின்றி தீரமாட்டா. ஏனெனில் ஒன்றுக்குக் காரணமல்லாதது அதற்கு அது எப்பொழுதும் காரணமாகாததேயாம். ஸகலோபாய ஸம்பத்தும் கூடியிருந்தும், அச்சிகித்ஸை உபயோகப்படாது மரணம் நேரிடுவதாகக் கூறப்பட்ட விஷயம் நன்றன்று; ஏனெனில் எது உபாயத்தினால் நிறைவேறக் கூடியதோ அது உபாயமற்றதாகாது. உபாயங்களனைத்தும் நன்கு அமைந்திருந்தும், பிணியாளி விவேகியாயிருந்தும் ஒருக்கால் துஷ்கர்மவசத்தால் அல்லது தைவக் கோளாறால் சிகித்ஸை பலிக்காமற் போனால் அது ஷோடச குணமமைந்த சிகித்ஸையாக மாட்டாது[2].” 63—67.

சிகித்ஸைகளின் தீர்மானமான பலன்கள்:—“அக்னி சிகித்ஸையெனப்படும் உஷ்ணப்பிரயோகங்கள் ஸ்வேதநம் என்னும் கார்யத்திலும், தண்ணீர் முதலியது ஸ்தம்பநம் முதலிய கார்யத்திலும் எவருக்குத்தான் ஸித்தி யுண்டாக்குவதில்லை? பால் ப்ரீணநம் என்னும் திருப்தியையும், காட்டுக்கோதுமை இளைப்பையும் எவருக்கு உண்டாக்குவதில்லை? உளுந்து, காஞ்சொறி முதலியவை எவருக்குத்தான் நிச்சயமாய் வ்ருஷ்ய குணத்தைத் தருவதில்லை? வாற்கோதுமையில் மலத்தை அதிகமாகத் தள்ளுவது - மூத்திரத்தை வெளிப் படுத்துவது என்னும் குணங்களுண்டென்பதில் என்ன ஸந்தேஹம்? விஷமானது மந்திர-தந்திரப் பிரயோகங்களின்றி எவருக்குத்தான் ஜீர்ணமாகும்? அக்னிஹோத்ரி முதலிய வியாதிகளில் பத்தியமாயிருப்பதைத்

1. உபாயங்கள்—சிகித்ஸைக்கு நான்கு பாதங்கள் என்று முதற் பாகம் 11-ம் பக்கத்திற் கூறிய அம்சங்கள்.

2. ஸூத்திர ஸ்த்தானம் முதல் அத்தியாயத்தில் கூறிய வைத்தியனுக்கும், ஔஷதத்திற்கும், பரிசாரகனுக்கும், ரோகிகளுக்கும் அவசியமான நாலு நாலு குணங்களின் தொகுதி ஷோடசகுணம் (பதினாறு அம்சங்கள்) எனப்படும். இவையே சதுஷ்பாதத்தின் ஒவ்வொரு பாதத்திற்குமுள்ள நாலு நாலு குணங்கள். (முதற்பாகம் 11-ம் பக்கம் பார்க்க).

தவிர்த்து எவன்தான் ஆரோக்கிய முள்ளவனாவான்? மேலும் ஒருவனுக்கு அகால மரணம் ஸகல ஸித்தாந்தங்களாலும் நிச்சயிக்கப்பட்டதா யிருந்தால், அதைப் பெருமுயற்சியாலும் வேறு எங்ஙனம் விலக்கக் கூடும்? சாஸ்திரத்திற் கூறிய விதம் தாஹம் முதலிய அக்னிதாபாதிகளில் சந்தனம் முதலியதின் பிரயோகமும், ஜ்வரத்தில் லங்கந - ப்ருத்மஞாதிகளின் சாஸ்திரப்படி பிரயோகமும் அநுபவஸித்தமாகப் பயன் தருவதும் தெரிந்த விஷயமே. ஆகையால் தேச - காலாதி நிலைமைகளை நன்கு ஆலோசித்து, சதுஷ்பாதகுணங்கள்[1] யாவும் பரிபூர்ணமாய் அமையப் பெற்றுப் பிரயோகிக்கப்படும் சிகித்ஸை வியாதிகளைத் தீர்க்கு மென்பதில் ஐயமில்லை. மிருத்யுவின் பாசக் கயிறுகள் போல் நிலைமெனத் தோன்றும் வியாதிகளை வலிய அறுத்துப் போடுவதற்கு இச் சிகித்ஸா சாஸ்திரமே ஏற்ற கருவியாம். மேலும் ரோகங்களால் விரட்டப்பட்டு மிகப் பயந்துள்ளவருக்கு இச் சாஸ்திரந்தான் ஸூத்திரம் என்கிற நூலின்றியே அமைக்கப்பெற்ற ரக்ஷா ஸூத்திரமாகும். இச் சாஸ்திரம் கடலைக் கடைவது முதலிய ஆயாஸமின்றியே உலகத்திற் பிரத்யக்ஷமாகக் கிடைத்துள்ள அமுதமாகும்; ஆனால் இது தகாத பாத்திரத்தில்[2] இருக்க நேர்ந்தால் உடனே விஷத் தன்மையைத்தான் பெறும்.'' 68—75.

மூடவைத்திய திரஸ்காரம்:—சாஸ்திரத்திற் கூறியுள்ள விஷய தத்துவங்களைப் பகுத்தறியாது, கேவலம் நூலைப் படிப்பதாக பாவனை செய்யும் மூடவைத்தியர்களைப் பிராணனைப் பறிக்கும் நமனது பாசக்கயிறுகளைப்போலெண்ணி நெடுந்தூரத்தில் விலக்கிப்போடவேண்டும்.—76.

ஸத்வைத்தியனைச் சிறப்பித்தல்:—நன்னெறி நாடியும், சீரிய வைத்திய நூல்களைக் கற்றும் புகழுண்ட வைத்தியர் நன்மை யுறுவாராக. ஸகல சிகித்ஸா முறைகளையும் அனுபவபூர்வகமாகப் பயின்று, உலகத்தோரது ஆரோக்கிய சுகத்திலேயே ஆவல் கொண்ட ஆர்ய வைத்தியர்கள் வாழ்க வாழ்க.—77.

இந்நூல் முழுப் பிராமணக் கிரந்தம்:—தந்திரம் என்கிற வைத்திய சாஸ்திரத்திற்கு அவசியமான குணங்களோடு கூடியது இக் கிரந்தம்; தந்திரங்களுக்குத் தகாத தோஷங்களற்றது; ஸகல சிகித்ஸா சாஸ்திரங்களையும் ஒருங்கே ஐயமறப் படித்து அமைக்கப்பட்டது; அபாரமான அக்கழுக்கற்ற அறிவினால் விளங்கிய ஆன்றோரான மாமுனிவர்களின் கொள்கைகளைத்

1. சதுஷ்பாதங்கள் — ஆயுஷ்காமீயாத்தியாயத்திற் கூறிய சிகித்ஸைக்கான நான்கு பாதங்கள்.

2. தகாத பாத்திரம் — வைத்தியத்தை முறைப்படி கற்காதவன். தகாத கலயம் என்றும் மற்றொரு பொருள்.

தழுவியது ; பெருங்கடல்போல் கம்பீரமான ஸங்கிரஹக்கிரந்
தத்திலடங்கிய[1] பொருட்களை எளிதி லறிவிக்கும் கருவியா
யமைந்தது. அஷ்டாங்க வைத்தியம்[2] என்கிற மாபெருங்கடலைக்
கடைந்து அடைந்த 'அஷ்டாங்க - ஸங்கிரஹம்' என்னும்
யாதோர் அமுதத்திரளுண்டோ, அதிலிருந்து தனித்துத்
தொகுத்த இக் கிரந்தம் சிறு முயற்சி யுள்ளோருக்குப் பெரும்
பயனளித்து அவர்களைத் திருப்தி செய்ய இவ்வாறு இயற்றப்
பட்டது. இந்நூல் சாஸ்த்ரீயக் கொள்கைகளைத் தழுவி ஏற்
பட்டிருப்பதாலும், பிரத்தியக்ஷமாகக் குறிப்பிட்ட பலனளிப்
பதா யிருப்பதாலும் மந்திரங்களைப்போல் முழு மனதுடன்
இதைக் கற்றுணர்ந் துபயோகிக்கலாம் ; இதில் எவ்வகையிலும்
ஐயமுற வேண்டாம். ஆகவே இதைப் படித்து, பொருட்களை
யுணர்ந்து, அவ்விதமே சிகித்ஸாதிகளைச் செய்வதால் நீண்ட
ஆயுளையும், ஆரோக்கியத்தையும், அறம்-பொருள்-இன்பங்களை
யும், புகழையும் அம்மனிதன் அடைவது திண்ணம். இதைப்
படித்தறிபவன் அஷ்டாங்க-ஸங்கிரஹத்தை அறிவதில் திறமை
பெறுவான் ; இதிற் கூறியுள்ளபடி சிகித்ஸாதி முறைகளை அனு
பவ பூர்வகமாகச் செய்யப் பழகிய வைத்தியன் வேறெவராலும்
அசைக்கத் தகாத அறிவிற் சிறந்தவனாக ஆவதுடன், விஸ்தார
மான வேறு வைத்திய நூல்களில் அபிமானம் வாய்ந்துள்ள மற்ற
வைத்தியர்களையும் தன் அறிவால் அசைக்கச் செய்வானென்
பதிலும் வியப்பொன்றுமில்லை. 78—82.

**இக்கிரந்தம் சரக - ஸுச்ருதாதிகளின் தொகுதி** :—ஒருவன்
சரகத்தை மாத்திரம் கற்று, ஸுச்ருதர் முதலானோரின் நூல்
களிலுள்ள வியாதி முதலியவற்றின் பெயர்களையும் அறியாதிருக்
கலாம் ; அல்லது சரகத்தை விட்டு, ஸுச்ருதாதிகள் மொழிந்த
முறைகளைச் சிறிது பயின்று மற்ற முறைகளை யறிய உழைக்காம
லிருக்கலாம் ; அவ்வித எளிய மனிதன் பிணியாளரிடம் யாது
செய்ய வல்லவனாவான் ?—83.

**இக்கிரந்தம் பொருமையற்றுப் பகுத்தறிவுடன் படிக்கத்
தகுந்தது**:--திடமான மூட நம்பிக்கையுள்ளவன் அபிமானத்திற்கு
வசப்பட்டு இச் சிறப்போங்கிய கிரந்தத்தையும் புறக்கணிக்க

1. "அஷ்டாங்க - ஸங்கிரஹம்" "என்னும் நூல். இதுவும் ஆசார்ய
வாக்படரால் இயற்றப்பட்டது. எட்டு அங்கங்களையும் வெகு விஸ்தார
மாகத் தொகுத்தியற்றிய அந்நூலிலிருந்து "அஷ்டாங்க ஹ்ருதயம்"
என்கிற இந்நூல் சுருக்கி இயற்றப்பட்டது எனக் கருத்து.

2. அஷ்டாங்க வைத்தியம் — ஆயுஷ்காமீயாத்தியாயத்திற் குறிக்
கப்பட்டுள்ள எட்டு அங்கங்கள் அடங்கிய சிகித்ஸா தந்திரம். (முதற்
பாகம் 2-ம் பக்கம் பார்க்க)

முயன்றால், அவன் ஆதிவைத்திய நூலைத்தான்[1] ஆயுள் காலமெல்லாம் மனம் சோராது பெருமுயற்சியுடன் படித்துக்கொள்ள வேண்டும். வமனனில் வாயு, பித்தம், கபம் இவற்றைத் தணிப்பதற்கு முறையே தைலம், க்ருதம், தேன் இவை வற்றை என்கிற இவ்விதவிஷயத்தைப் பிரம்மதேவன் கூறினாலென்ன, அவனிடமிருந்து தோன்றிய வேறொருவன் கூறினாலென்ன? மந்திரமல்லாத விஷயத்தில்[2] அதை மொழிந்திடுபவரின் வேற்றுமையினால் விசேஷ சக்தி மாறுபாடு முண்டாகுமோ? திரவியாதி குணங்களைப் பற்றிய விஷயங்களை வெவ்வேறு மனிதர் எடுத்துரைத்தபோதிலும், கூறுபவரின் வேற்றுமையினால் திரவியக் கூறுகளின் குணமும் வேறுபடுமோ? ஆகவே இந்நூலைப் படிப்பதிற் பொறாமை யொழித்து, மத்தியஸ்தக் கொள்கையைக் கைப்பற்றுவீராக. முனிவர்கள் மொழிந்த நூல்களிலேயே பற்றுத லிருப்பது பொருந்து மென்றால், சரக-ஸுச்ருதங்களைத் தவிர்த்து, அவ்வித முனிவர்களான பேளர் முதலானோரின் நூல்களை ஏன் எவரும் படிப்பதில்லை? ஆகவே ஸுபாஷிதமா யிருப்பதெதுவும்[3] கிரஹிக்கத் தக்கதே[4]. 84—87.

**அஷ்டாங்க ஹ்ருதயம் மங்களகரம்:**—ஹ்ருதயம் என்கிற இக்கிரந்தம் ஆயுர்வேத ஸம்பந்தமான அகில நூல்களாகும் ஆழ்கடலின் ஸாராம்சமான இருதயமெனத் தகுந்தது; ஆகவே இதைப் படித்தறிபவரா லுண்டாகும் நன்மையிலிருந்து உலகத்திற்கே மேலான மங்களமுண்டாகட்டும்.—88.

அஷ்டாங்க ஹ்ருதயம் முற்றிற்று.



1. ஆதிவைத்தியநூல்—பிரம்மதேவன் லக்ஷம் ச்லோகங்கள் அடங்கியதாய் இயற்றியதாகக் கூறப்படும் ஆயுர்வேதக் கிரந்தம்.

2. மந்திரங்கள் மாத்திரம் குருமார்களிடமிருந்து உபதேச மூலமாகக் கிரஹிக்கப் படவேண்டும் என்றும், மற்ற வைத்திய சாஸ்திராதிகளுக்கு அந்நியமமில்லை யென்றும் குறிக்கப்படுகிறது.

3. ஸுபாஷிதம்—பகுத்தறிவுடன் சாஸ்திரமுறை தவறாது பெரியோரால் இயற்றப்பட்ட நூல்.

4. சரக-ஸுக்ருத ஸம்ஹிதைகள் ஸுபாஷிதங்களாகையால் அவற்றை அனைவரும் படிக்கிறார்கள். சரக-ஸுச்ருதங்களைத் தொகுத்து இயற்றப்பட்ட அஷ்டாங்க ஹ்ருதயமும் ஸுபாஷிதமாகையால் இதை அஸூயையின்றி படிப்பது மிகப் பிரயோஜனகரமாம்.

# அஷ்டாங்க ஹ்ருதயம்

## சிகித்ஸா - கல்ப - உத்தர ஸ்தாநங்களுக்கு

# விஷய அகராதி

---

குறிப்பு:—ஒவ்வொரு விஷயத்திற்கும் எதிரிலுள்ள இலக்கங்கள் புஸ்தகத்தின் பக்கங்களைக் குறிக்கின்றன.

அ

## ஆ

இ

## உ

கௌ



க்



ச

தோ



த்



ந



நா

வீ



வெ



வே



வை



வ்

ஜ



ஜா



ஜி



ஜீ



ஜ்

ஸ்ரீ

ஸா

ஸி



ஸீ



ஸு



ஸூ



ஸே



ஸை



ஸோ



ஸௌ



ஸ்

ஹ



ஹி



ஹீ



ஹ்



க்ஷ



Printed at the 'Caxton Press', Madras — 1935.

ரூக்ஷபோஜநம் இவை எலும்பொடிந்தவனுக்கு ஆகாதவையாம். —34, 35½.

**கந்த தைலம்:**—முற்றிலும் கருநிறமாயுள்ள எள்ளைத் தும்பு தூசு இல்லாமல் எடுத்துத் திடமான வஸ்திரத்திற் கட்டி, ஓடும் தண்ணீரில் இரவில் அமர்த்தி வைத்துத் தினந்தோறும் பகலில் வெயிலில் உலர்த்தி யெடுக்கவும்; இவ்வாறு ஏழு நாட்கள் செய்து, அப்பால் அவ்விதமே பாலிலும், பிறகு அதிமதுரக் கஷாயத்திலும் எவ்வேழு நாட்கள் ஊறவைத்து உலர்த்தி யெடுக்கவும். மீண்டும் அவற்றைப் பாலில் பாவனை செய்து முன் போலவே மறுபடி நன்றாக உலர்த்தி யெடுத்து, உமி நீக்கி, மண் கலக்காது சுத்தமாக்கி நன்கு சூர்ணம் செய்யவும்; பிறகு குருவேர், வெட்டிவேர், மஞ்ஜிஷ்டி, புலியுகிர், ஜடாமாம்ஸி, சவுட்டுக்கோரைக்கிழங்கு, கோஷ்டம், சிற்றுமுட்டி, பேராமுட்டி, கொட்டிச்சாந்து, அகில், சந்தனம், குங்குமப்பூ, நன்னாரி, ஸாளதேவதாரு, சாம்பிராணி, தேவதாரு, பத்மகாதி கணச்சரக்குகள் இவற்றையும் சூர்ணம் செய்ய வேண்டும்; முற்கூறிய எள்ளுச் சூர்ணம் என்கிற தில சூர்ணத்தையும் இத்துடன் கூட்டவும்; பிறகு ஸர்வகந்தச் சரக்குகள்[1] சேர்த்துக் காய்ச்சிய பாலில் அச்சூர்ணம் அனைத்தையும் கூட்டி, அதை இயந்திரத்திலிட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கவும். அத்தைலத்தில் கல்மாப் பட்டை, அரத்தை, வாலுழுவை, அல்லிக் கிழங்கு, அகில், பச்சிலை, லவங்கப்பத்திரி, வெள்ளிலோத்தி இவைகளையும், முற்கூறிய குருவேர் முதலிய மற்றச் சரக்குகளையும், பாலில் ஊற வைத்த அறுகம் புற்களையும் கல்கமாக இடித்துச் சேர்த்து, பால் சேர்த்துக் காய்ச்சி யெடுக்கவும். "கந்த தைலம்" என்னும் இத் தைலம் அஸ்த்திகளைச் சேர்த்துத் திடப்படுத்த மிகச் சிறந்தது; மேலும் வாததோஷ-பித்த தோஷங்களாலான வியாதிகள் எவ்வவயவத்தைப் பற்றிப் பரவிய போதிலும் அவற்றையும் அந்தந்தப் பிரயோகமுறைகளில் இத் தைலத்தை உபயோகிக்க, அவ் வியாதிகளை எல்லாம் எளிதில் தீர்க்கக் கூடிய வீர்யமுள்ளது இவ் வௌஷதம். 36—41.

---

1. ஸர்வகந்தம் — சதுர்ஜாதம், கர்ப்பூரம், தக்கோலம், அகில், குங்குமம், லவங்கம் இவற்றின் கூட்டு.

ரூக்ஷபோஜநம் இவை எலும்பொடிந்தவனுக்கு ஆகாதவையாம்.
—34, 35½.

**கந்த தைலம்:**—முற்றிலும் கருநிறமாயுள்ள எள்ளைத் தும்பு தூசு இல்லாமல் எடுத்துத் திடமான வஸ்திரத்திற் கட்டி, ஓடும் தண்ணீரில் இரவில் அமர்த்தி வைத்துத் தினந்தோறும் பகலில் வெயிலில் உலர்த்தி யெடுக்கவும்; இவ்வாறு ஏழு நாட்கள் செய்து, அப்பால் அவ்விதமே பாலிலும், பிறகு அதிமதுரக் கஷாயத்திலும் எவ்வேழு நாட்கள் ஊறவைத்து உலர்த்தி யெடுக்கவும். மீண்டும் அவற்றைப் பாலில் பாவனை செய்து முன் போலவே மறுபடி நன்றாக உலர்த்தி யெடுத்து, உமி நீக்கி, மண் கலக்காது சுத்தமாக்கி நன்கு சூர்ணம் செய்யவும்; பிறகு குருவேர், வெட்டிவேர், மஞ்ஜிஷ்டி, புலியுகிர், ஜடாமாம்ஸி, சவுட்டுக்கோரைக்கிழங்கு, கோஷ்டம், சிற்றுமுட்டி, பேராமுட்டி, கொட்டிச்சாந்து, அகில், சந்தனம், குங்குமப்பூ, நன்னாரி, ஸாளதேவதாரு, சாம்பிராணி, தேவதாரு, பத்மகாதி கணச்சரக்குகள் இவற்றையும் சூர்ணம் செய்ய வேண்டும்; முற்கூறிய எள்ளுச் சூர்ணம் என்கிற தில சூர்ணத்தையும் இத்துடன் கூட்டவும்; பிறகு ஸர்வகந்தச் சரக்குகள்[1] சேர்த்துக் காய்ச்சிய பாலில் அச்சூர்ணம் அனைத்தையும் கூட்டி, அதை இயந்திரத்திலிட்டு ஆட்டி எண்ணெய் எடுக்கவும். அத்தைலத்தில் கல்மாப் பட்டை, அரத்தை, வாலுழுவை, அல்லிக் கிழங்கு, அகில், பச்சிலை, லவங்கப்பத்திரி, வெள்ளிலோத்தி இவைகளையும், முற்கூறிய குருவேர் முதலிய மற்றச் சரக்குகளையும், பாலில் ஊற வைத்த அறுகம் புற்களையும் கல்கமாக இடித்துச் சேர்த்து, பால் சேர்த்துக் காய்ச்சி யெடுக்கவும். "கந்த தைலம்" என்னும் இத் தைலம் அஸ்த்திகளைச் சேர்த்துத் திடப்படுத்த மிகச் சிறந்தது; மேலும் வாததோஷ-பித்த தோஷங்களாலான வியாதிகள் எவ்வவயவத்தைப் பற்றிப் பரவிய போதிலும் அவற்றையும் அந்தந்தப் பிரயோகமுறைகளில் இத் தைலத்தை உபயோகிக்க, அவ் வியாதிகளை எல்லாம் எளிதில் தீர்க்கக் கூடிய வீர்யமுள்ளது இவ் வௌஷதம். 36—41.

---

1. ஸர்வகந்தம் — சதுர்ஜாதம், கர்ப்பூரம், தக்கோலம், அகில், குங்குமம், லவங்கம் இவற்றின் கூட்டு.

## இருபத்தெட்டாம் அத்தியாயம்.

## பகந்தரப் பிரதிஷேதம்.

இனி பகந்தரப் பிரதிஷேதம் என்னும் அத்தியாயம்[1] விவரித்துக் கூறப்படும் :—

**பகந்தர நிதாநம் :—**(1) யானை - குதிரைகளின்மீது சவாரி செய்தல், கடினமான ஆஸனத்திலும் நிர்ப்பந்தமான முறையிலும் உட்காருதல், அர்சஸ்ஸுக்கான காரணங்களால் தாக்கப்படுதல், வேறு அவ்விதமான காரணங்கள், சான்றோர் வெறுத்த அதிஷ்டச் செயல்கள் அல்லது அதிருஷ்டமான பாபகாரியங்கள் ஆகியவற்றால் குதத்தில் ஓர் அங்குல ஆழத்திலோ, இரண்டு அங்குல ஆழத்திலோ, அல்லது சிறிது வெளிப்புறமாகவோ கெட்டுப்போன இரத்தத்தையும் மாம்ஸதாதுவையும் பற்றியதாய் முதலில் ஒருவகை பிடகையென்னும் கட்டி தோன்றி, அது அப்பால் பகந்தரமாக மாறிவிடும். இது வஸ்தி என்கிற மூத்திராசயத்திற்கும், மூத்திரம் வெளிவரும் மார்க்கத்திற்கும் அருகிலிருந்து கொண்டு, நெகிழ்ந்தசையுந் தன்மையது. (2) எவ்வித பகந்தரமும் ஏற்ற சிகித்ஸை செய்யப்படாது விடப்பட்டால் யோநி அல்லது ஆண்குறி, வஸ்தி, குதம் இவற்றில் பாவி அவற்றைப் பிளக்கச் செய்யும். அவை பிளவுறும்போது அநேகம் சிறிய த்வாரங்கள் ஏற்பட்டு, அவற்றின் வழியாக வாயுவும், மூத்திரமும், மலமும், சுக்ரமும் கிரமமாக வெளிப்படும். இப் பகந்தரம் வாத-பித்த-கபங்களால் தனித்தனியே மூன்றும், ஸம்யோக தோஷங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், ஆகந்துகாரணத்தினால் ஒன்றும் ஆக எட்டுக் காரணங்களால் எண்வகையாக உண்டாகும். 1—5.

**பகந்தரத்தின் இரண்டு நிலைமைகள் :—**(1) பழுத்துப் பக்குவமாகாத நிலைமையில் இதை **பிடகா** என்றும், (2) பழுத்துப்போனபிறகு **பகந்தரம்** என்றும் கூறுவர். அவற்றுள் எதற்கு மூலம் என்கிற அடிப்பாகம் மறைந்து ஆழமாகவும், பலமான வலி வேதனைகளுள்ளதாகவும், ஆறிக் குணமாவதுபோன்றிருந்து மீண்டும் கிளம்புந்தன்மையதாகவும் உள்ள பிடகா என்கிற கட்டி பகந்தரமாக மாறுமென்றும், அவ்விதமல்லாதது வெறும் பிடகையென்றும் அறியவும்.—6, 6½.

**வாதாதி தோஷங்களாலான பிடகைகள் :—**(1) அவற்றுள் **வாதபிடகை** கருஞ்சிவப்பாகவும், குத்தல்-பிளத்தல்-துடித்தல்-

---

1. பகம் என்றால் குதம், யோனி அல்லது ஆண்குறி முதலியவற்றின் பொதுப்பெயர்; அவற்றைப் பிளந்து விகாரமுண்டுபண்ணும் கட்டிக்கு "பகந்தரம்" எனப் பெயர்; அவ்வியாதியைப் பற்றியும், அதன் சிகித்ஸைகளைப் பற்றியும் விவரிக்கும் அத்தியாயம்.

வலி ஆகிய வேதனைகளுள்ளதாகவும் இருக்கும். (2) **பித்தபிடகை** ஒட்டைக் கழுத்துபோல் நீண்டும், சிவந்தும், சிறுத்தும், உஷ்ணமாகவும், ஜ்வரதாபத்துடன் கூடியும் இருக்கும். (3) **சிலேஷ்ம பிடகை** கெட்டியாகவும், ஸ்நிக்த்தமாகவும், அகன்ற அடிப்பாகமுடையதாகவும், வெண்மையாகவும், தினவுள்ளதாகவும் இருக்கும் (4) **வாத-பித்த பிடகை** கருஞ்சிவப்பாகவும், அழற்சியும் எரித்தலுமுள்ளதாகவும், கடும் வலியுள்ளதாகவும் இருக்கும். (5) **வாத-சிலேஷ்ம பிடகை** வெண்மையாகவும், சிறிது கருநிறமாகவும், மிக்க மெதுவாகப் பக்குவமடைவதாகவும் இருக்கும். (6) **ஸந்நிபாத பிடகை** காலின் பெருவிரலைப் போன்றதாய், அநேக விதமான வேதனைகளுண்டுபண்ணுவதாய், குந்தல்-அரோசகம்-நாவறட்சி-அழற்சி-ஜ்வரம்-வாந்தி ஆகிய உபத்திரவங்களால் பீடிக்கக்கூடியதாய் உண்டாகும். (7) இப்பிடகைகள் கவனக் குறைவினால் அலக்ஷியம் செய்யப்பட்டால் பக்குவமடைந்து விரணத் தன்மையை அடையும். 7—$10\frac{3}{4}$.

**பகந்தரங்கள் :**—(1) பகந்தரங்களுக்குள் வாதத்தினால் உண்டாவது அநேகம் நுண்ணிய முகங்களுடன் உடைந்து, கிரமமாகத் தெளிவான நுரைத்த துர்நீரைப் பெருக்கும்; பார்ப்பதற்கு இது சல்லடை போன்றிருப்பதால் **சதபோநகம்** என்கிற பெயருடையது. (2) பித்தத்தினாலான பகந்தரம் ஒட்டகக் கழுத்து போல் நீண்டுவளர்வதால் **உஷ்ட்ரக்ரீவம்** எனப்படும். (3) சிலேஷ்மஜ பகந்தரத்தில் பிசுபிசுப்பாகவும் அதிகமாகவும் சீழ் முதலியது வெளியாவதால் அது **பரிஸ்ராவி** எனக் கூறப்படும். (4) வாத-பித்த தோஷங்களால் உண்டாகும் பகந்தரம் குதத்தைச் சுற்றிலும் த்வார முண்டுபண்ணிக்கொண்டு, மதிட்சுவருக்குச் சுற்றிலும் அகழியைப்போல் உண்டாவதால் இது **பரிக்ஷேபி** எனப்படுகிறது. (5) வாத-சிலேஷ்மங்களால் உண்டாகும் பகந்தரம் குதத்தினுள் அந்த த்வாரத்தினூடே நேராகப் புடைவைத்துச் செல்லுவதால் அது **ருஜு** எனப்படுகிறது. (6) முன் கூறிய அர்சஸ்ஸைப் பற்றிக்கொண்டு கப-பித்தங்கள் பிரகோபமடைந்து, அந்த அர்சஸ்ஸின் அடிப்புறத்தில் தினவும் அழற்சியுமுள்ளதான வீக்கத்தை உண்டுபண்ணும்; அவ்வீக்கம் சீக்ரம் பழுத்து உடைந்து, மூலத்தின் அடியில் துர்நீர்க்கசிவை யுண்டுபண்ணும்; இதில் த்வாரங்கள் தோன்றி, அவற்றின் மூலமாய் துர்நீர் எப்பொழுதும் கசியும்; இது மூலத்தைப்பற்றி யுண்டாவதால் **அர்சோபகந்தரம்** எனப்படும். (7) ஸந்நிபாத தோஷத்தினால் ஏற்படும் பகந்தரம் நத்தைச்சுழி போன்ற த்வாரங்களுடன் குத மார்க்கத்தைத் துளைக்கும்; இதில் வலியின் வேகங்கள் கடுமையா யிருக்கும்; இதற்கு **சம்பூகாவர்த்தம்** எனப் பெயர். (8) போஜனவுடன் இறைச்சி யுண்ணும்போது, அதிற் கலந்துள்ள

எலும்புத் துண்டு வயிற்றிற் சேர்ந்து, குதத்தில் அது குறுக்கா யிறங்கி, அதன் பக்கவாட்டிற் குத்தி த்வாரத்தை யுண்டுபண்ண, அந்த விரணம் அவ்விடத்து மாம்ஸாதுவை அழுகச் செய்து, சீழுடன் கூடிய புரையோடும் புண்ணாக ஆய்விடும்; அதிற் பிறகு கிருமிகளும் உற்பத்தியாய், குதத்தின் உட்புறத்தைச் சுற்றிலும் தின்றுவிடும்; சீக்கிரத்தில் அவ்வவயவத்தை விரிவும் செய்யும்; இவ்வித பகந்தரம் உன்மார்கி என்றும், க்ஷதஜம் என்றும் கூறப் படும். இவற்றில் அந்தந்த விரணத்தின் தன்மைக் கேற்றவாறு அல்லது வாதாதி தோஷஸம்பந்தங்களுக் கேற்றவாறு வலியையும், அழற்சியையும், தினவையும் குறிகளென் றுணரலாம்.[1] 11-20½.

**பகந்தரத்தில் ஸாத்யாஸாத்யங்கள் :—**இவற்றுள் (1) ஆறு பகந்தரங்கள் கஷ்ட ஸாத்ய வியாதிகள். (2) ஸந்நிபாதஜ பகந்தரமும், க்ஷதஜம் என்பதும் அஸாத்யங்களாம்; பிரவாஹிணி யென்கிற குதவலியையும்,[2] ஸேவனி யென்கிற பாகத்தையும் பற்றி யுண்டான பகந்தரமும் அஸாத்யமாம்.—21½.

**பகந்தர சிகித்ஸை :—**(1) இந்த நோய் பிடகாரூபமா யிருக்கையிலேயே சோதநம், இரக்தமோக்ஷணம், ஸேசநம் முதலிய உபாயங்களைக் கொண்டு, அப் பிடகை பழுத்துவிடாமலிருக்கும் போதே பெரு முயற்சியுடன் இதற்குச் சிகித்ஸை செய்யவேண்டும். (2) பிடகை பழுத்துவிட்டால் ஸ்நேஹநம் செய்து, பிறகு அவகாஹஸ்வேதமுறையில்[3] ஸ்வேதநமும் செய்யவேண்டும். பிறகு மூல முளையைப்போல் பகந்தரத்தைக் கட்டிவிட்டு, குறுக்காகவும், நெடுக்காகவும் கவனித்து, அதன் வாய்ப்புறம் உட்புறமாய் அமைந்திருக்கிறதா அல்லது வெளிப்புறமாய் அமைந்திருக்கிறதா என்றும் உற்றுப் பார்க்க வேண்டும். (3) அது அந்தர்முக பகந்தரமா யிருந்தால், ஏஷணீ என்னும் கருவியால் உட்புறத்தைக் குடைந்துவிட்டுச் சஸ்திரத்தினால் கீண்டு விடவேண்டும். (4) பஹிர்முகபகந்தரமா யிருந்தால் முற்றிலும் வைத்தியன் அதைச் சஸ்திரத்தினால் அறுத்துப் போட்டு, பிறகு க்ஷாரத்தினாலாவது, அக்னியினாலாவது சுட்டுவிட வேண்டும். (5) உஷ்ட்ரக்ரீவ பகந்தரத்தை க்ஷாரத்தினாலேயே நன்றாகச் சுடவேண்டும். (6) சதபோநகம் எனனும் பகந்தரத்தில் புரைகள் பலவாறு இருக்குமாகையால், அதை இடையிடையே ஒவ்வொரு புரையை விட்டுவிட்டு, மற்ற த்வாரங்களைக் கீறிச் சுத்தம் செய்து ஆற்ற

1. வாதத்தினால் வலியும், பித்தத்தினால் அழற்சியும், கபத்தினால் தினவும் குறிகளாகத் தோன்றும். [இங்கு கூறப்படும் பரிக்ஷேபி, ருஜு, அர்சோபகந்தரம், க்ஷதஜம் என்பவை மாதவ நிதாநாதிகளில் கூறப்பட வில்லை.]

2. பிரவாஹிணி — முதற்பாகம் 430-ம் பக்கம் பார்க்க.

3. அவகாஹஸ்வேதம் — முதற்பாகம் பார்க்க.

வேண்டும்; அவை ஆறிய பிறகு மிச்சமுள்ள புரைகளையும் மீண்டுச் சுத்தம் செய்ய வேண்டும்; அப்படிக்கின்றி அனைத்தையும் ஒருமிக்க அறுத்தால் குதம் முற்றிலும் சேதமாய் பிராணாபாயம் நேரிடும். (7) பரிக்ஷேபி என்பதிலும் சதபோநக நாடிகளுக்குக் கூறியுள்ள முறைப்படியே சிகித்ஸை செய்யவேண்டும். (8) அர்சோபகந்தரத்தில் முதலில் மூலமுளைகளை அறுத்துச் சிகித்ஸிக்க வேண்டும். (9) க்ஷதஜபகந்தரம் அஸாத்யம் என்பதைக் கூறிவிட்டு, உள்ளே எலும்பு முதலிய சல்யம் அடங்கியவனுடைய பகந்தரத்திலிருந்து சல்யத்தை வெளியிலெடுத்துவிட்டு, க்ருமிஹரமான லேபநங்களையும், போஜனத்தையும் அவனுக்கு உபயோகிக்க வேண்டும்; வலியைத் தணிப்பதற்கு மிகவும் ஸ்நிக்த்தமான பிண்டஸ்வேதம், நாடீஸ்வேதம் முதலிய பிரயோகங்கள் மிகச் சிறந்தவையாம். 22—29.

**பகந்தரத்தில் நான்குவித சஸ்திரப்பிரயோகங்கள் :—** (1) அநேகம் த்வாரங்களுள்ள எல்லாப் பகந்தரங்களிலும் கோதீர்த்தம், ஸர்வதோபத்ரம், அர்த்தலாங்கலகம், லாங்கலகம் என்கிற நான்குவிதமான சேதந முறைகளில் எது எதில் பிரயோகிக்கக் கூடியதென்பதை யோசித்துச் செய்யவேண்டும். (2) சஸ்திரத்தைப் பக்கவாட்டாக வைத்துப் பசுவின் யோனியைப்போல் அறுக்கும் முறை **கோதீர்த்தகச் சேதம்** எனக் கருதப்படுகிறது. சுற்றிலும் எல்லாப் புறமும் சஸ்திரத்தினால் கீறிச் சேதிக்கப்படுவது **ஸர்வதோபத்ரச் சேதம்** எனப்படும். ஒரு பக்கத்தில் மாத்திரம் சஸ்திரத்தினால் கீறுவது **அர்த்தலாங்கலகம்** ஆகும். இரண்டு பக்கங்களிலும் சஸ்திரத்தினால் கீறுவது **லாங்கலகச் சேதம்** எனப்படும்.—30, 31¼.

**பகந்தரங்களைச் சுடுதல் முதலியன :—** (1) பகந்தரத்தில் புரையோடிக்கொண்டு தூர்நீர்க் கசிவையுள்ள எல்லா த்வாரங்களையும் அக்னியினால் சுட்டுவிட வேண்டும்; இவ்விதம் செய்வதால் மீண்டும் அப் பாகங்கள் கோளாறடைவதில்லை. (2) வைத்தியன் இப் பிணியாளியின் குடலைச் சுத்தம் செய்வதற்காகவும் இடையிடையே முயல வேண்டும். (3) பூனையின் எலும்பை த்ரிபலா க்ஷாயத்தினால் நன்றாக அரைத்து விரணத்தின்மேல் லேபநம் செய்யலாம்.—32, 33.

**ஜ்யோதிஷ்மத்யாதி தைலம் :—** வாலுழுவை, பேயத்தி, கலப்பைக் கிழங்கு, நறுவிலி, வட்டத்திருப்பி, சிவதை, சித்திரமூலம், சாம்பிராணி, அலரி, வசம்பு, கள்ளி, எருக்கு இவற்றைக் கூட்டித் தைலம் பக்குவம் செய்யவும்; இதை பகந்தரவிரணங்களின்மேல் தேய்ப்பதற்கு மிகவும் ஹிதமான தைலம் எனக் கூறுவர்.—34.

**மதுகாதி தைலம் :**—அதிமதுரம், வெள்ளிலோத்தி, திப்பிலி, சிற்றேலம், அரேணுகம், மஞ்சள், மரமஞ்சள், ஞாழல், இந்துப்பு, நன்னாரி, தாமரைப் பூந்தாது, கொட்டிச் சாந்து, காட்டாத்திப்பூ, மருக்காரை, சாம்பிராணி, கோஷ்டம், வெள்ளிலோத்தி, கொடிமாதுளையிலை இவற்றைச் சேர்த்துத் தைலம் பக்குவம் செய்யவும்; இது பகந்தரம், அபசி, குஷ்டம், மேஹவிரணம் இவற்றைப் பரிஹரிக்கும்.—35, 36.

**பகந்தர ரோபண யோகங்கள் :**—(1) வாய்விடங்கம், த்ரிபலை, திப்பிலி, யானைத்திப்பிலி இவற்றின் சூர்ணத்தைத் தேனும் எண்ணெயுங் கூட்டி யுட்கொண்டால் பகந்தரம், குடற் கிருமிகள், குஷ்டம், பிரமேஹ பிடகை, ஆகந்துவிரணம், நாடீவிரணம் இவை ஆறிவிடும். (2) சீந்தில் ஒரு பங்கு, சிற்றேலம் இரண்டு பங்கு, வாய்விடங்கம் மூன்று பங்கு, வெட்பாலை நாலு பங்கு, தான்றிக்காய் ஐந்து பங்கு, கடுக்காய் ஆறு பங்கு, நெல்லிக்கனி ஏழு பங்கு, மஹிஷாக்ஷி எட்டு பங்கு, ஆக இவற்றை இடித்துத் தேன் கலந்து உட்கொள்ள பிடகை, மேதோ ரோகம், பகந்தரம் இவை தீரும். (3) யானைத்திப்பிலி, சித்திரமூலம், வெட்பாலை, வாய்விடங்கம், பில்வம் இவை வகைக்கு ஒரு பலம், த்ரிபலை ஆறு பலம், அனைத்துக்கும் ஸம அளவு மஹிஷாக்ஷி, இவற்றை இடித்து, நெய்யும் தேனுங் கூட்டி, உட்கொள்ள எல்லா வியாதிகளும் நிவ்ருத்தியாம். (4) மஹிஷாக்ஷிகுக்குலு ஐந்து பலம், திப்பிலி-த்ரிபலை இவை ஒவ்வொரு பலம், இலவங்கப்பட்டை-சிற்றேலம், இவை வகைக்குக் கால் பலம்; இவற்றைச் சூர்ணம் செய்து, தேன் கூட்டி யுட்கொள்ள குஷ்டம், பகந்தரம், குல்மம், நாடீவிரணம் ஆகியவை குணமாய்விடும். (5) முற்கூறிய மஹிஷாக்ஷி முதலியவற்றையும், சுக்குத்தூளையும் ஒன்றுகூட்டி, தசமூல கஷாயத்தில் பாவனை செய்யவும்; இது பகந்தரத்தில் உபயோகமாவதுடன், வாதரோகங்களைப் போக்குவதிலும் விசேஷமானது. (6) த்ரிபலை, உலர்ந்த முள்ளிலவம்பிசின் இவற்றின் சூர்ணத்தை வேங்கையின் கஷாயத்தில் பாவனை செய்து, அதற்குச் சமானமாய் மஹிஷாக்ஷி குக்குலுவைக் கூட்டி யுட்கொள்ளவும்; இது பகந்தரம், குஷ்டம், பிரமேஹபிடகை ஆகியவற்றைப் போக்கவல்லது. 37—42.

**பகந்தரசிகித்ஸையின் முடிவுரை :**— இவ்வத்தியாயத்திற் கூறிய சிகித்ஸா விஷயங்கள் முக்கியமாக பகந்தர விரணத்தைப் பற்றியவையே; மற்ற விரணங்கள் யாவும் அவ்வவற்றிற்குள்ள தோஷ-தூஷ்யாதிகளின் லக்ஷணங்களை அனுஸரித்துச் சிகித்ஸிக்க வேண்டியவை; மேலும் விரணப் பிரதிஷேதாத்தியாயத்திற் கூறிய அம்சங்களையும், வேறு யுக்திகளைக்கொண் டறிய வேண்டிய விஷயங்களையும் உற்று நன்றாகப் பரிசீலனை செய்துணர்ந்து ஔஷதாதிகளைப் பிரயோகிக்கவேண்டும்.—43.